# காங்கிரஸ் மகாசபை சரித்திரம்




Dr. பட்டாபி சீதாராமய்யா
எழுதியது

பாபு ராஜேந்திர பிரசாத்
எழுதிய முகவுரையுடன் கூடியது.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் அத்தாக்ஷி பெற்றது.

---



சுதந்திரச் சங்கு காரியாலயம்,
திருவல்லிக்கேணி : : சென்னை.
1935

# அட்டவணை

# முகவுரை

ஐம்பது வருஷங்களுக்கு முன்பு இந்திய தேசிய காங்கிரஸ் முதன் முதலாகப் பம்பாயில் கூடியது ; ஒரு சில பிரதிநிதிகளே அதில் பிரசன்னமா யிருந்தனர். இவர்கள் தேச மக்களால் தெரிந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகள் அல்லராயினும், சிறந்த தேச ஊழியர்கள் ; உண்மைத் தேசாபிமானிகள். அந் நாள் தொட்டு காங்கிரஸ் மகாசபை ஆண்டு தோறும் கூடி இந்திய மக்களின் சுதந்திரத்திற்காக அரு முயற்சியும், பெரு முயற்சியும் செய்து வருகின்றது. ஆரம்பத்தில் அதன் நோக்கம் தெளிவாகவும், திட்டமாகவு மில்லை ; ஆனால் இந்திய மகா ஜனங்களுக்குப் பொறுப்பான ஜனநாயக ஆட்சியே தேவை என்பதை மட்டும் அது ஆதியிலிருந்து வற்புறுத்தி வந்திருக்கிறது. முதலில் காங்கிரஸ் மகாசபை பிரிட்டிஷ் துரைத்தனத்தினிடம் விசேஷ நம்பிக்கை வைத்திருந்தது ; இந்தியாவை ஆளும் உரிமை இந்தியருக்கு வழங்கப்படும் என எண்ணிக் கிடந்தது. முதன் முதலில் சில வருஷங்கள் நடைபெற்ற காங்கிரஸ் திருக்கூட்டங்களில் நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களே இதற்குத் தக்க சான்றாகும்.

இந்தியாவிலும் சரி, இங்கிலாந்திலும் சரி, பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் நடந்து கொண்ட பான்மை காரணமாக மேற்கூறிய நம்பிக்கைகள் யாவும் சிதறுண்டன. இந்தியாவில் தேசிய உணர்ச்சி வலுக்க வலுக்க, பிரிட்டிஷ் துரைத்தனத்தின் பிடிவாத குணமும், பிற்போக்குத் தன்மையும் அதிகரித்து வந்தது. பிரிட்டிஷ் ராஜாங்கத்தின்மீது இந்தியருக்கிருந்த சிறிதளவு நம்பிக்கையும் கர்ஸான் பிரபுவின் ஆட்சி காலத்தில் ஆடிப்போய் விட்டது. வங்காளத்தை இரு கூறுகப் பிரித்தார் கர்ஸான் பிரபு ; அதுகண்டு பாரத மக்கள் கொதித்தெழுந்து, பெருங் கிளர்ச்சி புரிந்தது இந்தியாவில் தேசிய உணர்ச்சி எவ்வளவு தூரத்திற்கு வேரூன்றி யிருந்ததென்பதை உள்ளங்கை நெல்லிக்கனி போல் விளக்குகின்றது.

எனினும் வங்காளப் பிரிவினை மசோதா ரத்தாகி விடவே இந்திய மகாஜனங்கள் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டிடம் மீண்டும் நம்பிக்கை கொள்ளலாயினர். இந்தச் சமயத்தில் தான் பிரிட்டனுக்கும் ஜெர்மனிக்கும் கோரமான யுத்தம் ஏற்பட்டது. இங்கிலாந்து மிகுந்த நெருக்கடியான நிலையிலிருப்பதாகவும், அதற்குத் தக்க வகையில் இந்தியா உதவி செய்யவேண்டுமென்றும் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டு கேட்டுக்கொண்டதற் கிணங்க இந்தியா விசேஷ முறையில் சகாயம் செய்ய முன்வந்தது. இந்திய மக்களில் பலர் போர்க்களத்திற்குச் சென்று, தங்கள் இரத்தத்தையும் சிந்தினர். இந்தியாவின் அரிய சேவையைப் பிரிட்டிஷ் ராஜதந்திரிகளில் பலரும் போற்றிப் புகழ்ந்தனர். உலகத்திலே எல்லாத் தேசங்களிலும் சுய நிர்ணயக் கொள்கையை ஏற்படுத்தவும், ஜன நாயகத் தத்துவத்தை நிலை நாட்டவுமே மகா யுத்தம் நடத்தப்பட்டதாகப் பறை சாற்றப்பட்டதால் விரைவில் இந்தியாவில் பொறுப்பாட்சி ஏற்படுத்தப்படுமென்ற நம்பிக்கை மக்களின் மனதை மறுபடியும் கவ்விக் கொண்டிருந்தது.

1917-ம் வருஷம் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டின் சார்பில் இந்தியா மந்திரி ஓர் அறிக்கை விடுத்தார். காலக்கிரமத்தில் சிறிது சிறிதாக இந்தியாவிற்குச் சுய ஆட்சி வழங்கப்படப்போவதாக அது வாக்களித்தது. இதனால் இந்தியருக்குள் அபிப்பிராய பேதம் ஏற்பட்டது. அதற்குள் 1920-ம் வருஷத்திய இந்தியா கவர்ன்மெண்டு சட்டத்தையும் இந்தியா கண்டது. இச் சமயத்தில் சண்டையும் முடிந்துவிட்டதால் கவர்ன்மெண்டினிடமிருந்து இந்திய மகா ஜனங்கள் அதிகமாக எதிர் பார்த்தனர். அது விஷயத்தில் ஏமாற்ற மடையவே அவர்களுக்குள் உணர்ச்சி வலுத்தது. கிலாபத் விஷயத்தில் முஸல்மான்கள் நம்பிக்கைத் துரோகம் இழைக்கப்பட்டனர் என்றும், தேச மகா ஜனங்களின் ஏகமுகமான எதிர்ப்பையும் மதியாது ரௌலட் மசோதாக்கள் நிறைவேற்றப்படுவது பெருத்த அநீதி என்றும் எடுத்துக் காட்டப்பட்டது. இவற்றின் காரணமாக நாட்டிலே பெருங்கிளர்ச்சி தோன்றியது. தென்னாப்பிரிக்காவிலும், இந்தியாவிலும், சம்பாரானிலும், கெய்ராவிலும் அனுஷ்டித்துப் பார்க்கப்பட்ட சத்தியாக்கிரகப் போர் முறையைக் கைக் கொண்டே இக் குறைகளை

யும், இதர அநீதிகளையும் போக்கிக்கொள்ள நாம் முயல வேண்டுமென மகாத்மா காந்தி அபிப்பிராயப்பட்டார்.

துரதரிஷ்டவசமாக பஞ்சாபிலும், ஆமதாபாத்திலும் ஜனங்களுக்குள் கலவரம் உண்டாகி, உயிருக்கும் பொருளுக்கும் சற்று சேதமும் நிகழ்ந்தது. அதற்குள் பஞ்சாப் படுகொலையையும், அந்த மாகாணத்தில் தலைவிரிகோலமாக நின்ற ராணுவச் சட்ட அமுலையும் நாம் கண்டோம். இச் சம்பவங்களைப்பற்றி விசாரித்தறிவதற்காக நியமிக்கப்பட்ட ஹண்டர் கமிட்டியாலும் எவ்வித பரிகாரமும் கிடைக்கவில்லை. பார்லிமெண்டில் நடந்த விவாதமோ மகா மோசமாக விருந்தது. இந் நிலையில் வேறு வழியில்லாமல் தேசம் ஒத்துழையா இயக்கத்தைக் கைக்கொண்டது; பட்டம் பதவிகளைத் துறத்தல்; சட்ட சபைப் பதவிகளைக் காலி செய்தல்; கவர்ன்மெண்டு பள்ளிக்கூடங்களையும், நீதி ஸ்தலங்களையும் விட்டொழித்தல்; அன்னியத் துணி பகிஷ்காரம் இவ்வளவையும் வேலை செய்ய முற்பட்டது தேசம்; எங்கு பார்த்தாலும் காங்கிரஸ் கமிட்டிகள் நிறுவப்பட்டு, காங்கிரஸ் அங்கத்தினர்கள் சேர்க்கப்பட்டனர்; திலகர் சுயராஜ்ஜிய நிதிக்கு ஏராளமாகப் பணம் வசூலிக்கப்பட்டது; நாடெங்கும் தேசியப் பள்ளிக்கூடங்களும், வியாஜ்ஜியங்களைத் தீர்ப்பதற்காகப் பஞ்சாயத்து சபைகளும் ஏற்பட்டன. நூல் நூற்றலும், நெசவுத் தொழிலை உயிர்ப்பிப்பதும் ஜிரூதமாக நடந்தது. இங்ஙனமாக தேச மக்கள் சட்டமறுப்புப் போருக்கும், வரி கொடா இயக்கத்திற்கும் தயார் செய்யப்பட்டனர். காங்கிரஸ் அமைப்பில் மாறுதல் செய்யப்பட்டு, சாந்தமும் நியாயமுமான வழிகளில் ஸ்வராஜ்யத்தை அடைவதே காங்கிரஸ் மகாசபையின் லட்சியம் என அறிவிக்கப்பட்டது. ஒத்துழையா இயக்கத்தில் தேசம் திளைத்து நின்றது. இவ் வியக்கத்தின் வேகத்தை அடக்க வேண்டி அரசாங்கம் அடக்குமுறைகளைக் கையாண்டது. இதன் காரணமாக 1921-ம் வருஷ இறுதியில் நாட்டின் பிரபல தலைவர்கள் உள்பட பல்லாயிரக் கணக்கான மக்கள் சிறை புகுந்தனர். சமரஸப் பேச்சு பயன்படாமல் போகவே, பர்தோலியில் வரி மறுப்புப் போர் தொடங்கப்பட்டது. எனினும் விரைவில் ஐக்கிய மாகாணத்திலுள்ள சௌரி சௌரா என்னுமிடத்தில் கடுமையான கலவரங்கள் நிகழ்ந்த

தால் இவ் வியக்கம் திடீரென நிறுத்தப்பட்டது. அதற்குப் பிறகு காங்கிரஸ்வாதிகள் சட்ட சபைகளில் புகுந்தனர்.

1920-ம் வருஷத்தில் தோற்றுவிக்கப்பட்ட சீர்திருத்தங்களும், அதன் காரணமாக ஏற்பட்ட ராஜீய அமைப்பும் எவ்வகையில் வேலை செய்து வருகின்றன என்பதைப் பரிசீலிப்பதற்காக பிரிட்டிஷ் பார்லிமெண்டு ஸைமன் கமிஷன் என்னும் ஏழுபேர்களடங்கிய ஒரு கமிட்டியை நியமித்தது. இக் கமிட்டியினின்றும் இந்தியர் விலக்கப்பட்டிருப்பதைக் கண்ட தேசம் மறுபடியும் கொதித்தெழுந்தது; ஸைமன் கமிஷன் சென்ற இடங்களிலெல்லாம் கறுப்புக் கொடி காட்டி தேசமக்கள் அதை பகிஷ்கரித்தனர். இந்திய மகா ஜனங்களின் லக்ஷியத்தை அறிவிக்கும் வகையில் தேசத் தலைவர்களெல்லாம் ஒன்றுகூடி எல்லா ராஜீயக் கட்சிகளும் ஒன்றுபட்டு குடியேற்ற நாட்டந்தஸ்தான சுய ஆட்சியை லட்சியமாகக் கொண்டு ஓர் ராஜ்ய அமைப்பைத் தயாரித்தனர். ஓர் குறித்த காலத்திற்குள்ளாகப் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் இக் குடியேற்ற நாட்டந்தஸ்தை வழங்க முற்படாவிடில் பூரண சுயராஜ்ஜியத்தைப் பெறுவதே காங்கிரஸ் மகாசபையின் லட்சியமாக இருக்குமென கல்கத்தா காங்கிரஸ் தீர்மானித்தது. அதே மாதிரியாக அக்காலத்திற்குள் பிரிட்டிஷ் துரைத்தனம் இணங்காமல் போகவே 1929-ம் வருஷம் டிஸம்பர் மாதத்தில் லாகூரில் நடைபெற்ற காங்கிரஸ் பூரண சுயேச்சைக் கொடியை உயரத் தூக்கியது. 1930-ம் வருஷ ஆரம்பத்தில் எல்லா அநீதச் சட்டங்களையும் எதிர்த்து சட்ட மறுப்புப் போர் செய்ய தேசம் வெளிக்கிளம்பிவிட்டது. வரிகொடா இயக்கமும் வலுத்து நின்றது.

இந்திய ராஜீய அமைப்பைப்பற்றி யோசிப்பதற்காக பிரிட்டிஷ் கவர்ன்மெண்டு லண்டனில் ஓர் மகாநாட்டைக் கூட்டி, அதில் கலந்து கொள்வதற்காக இஷ்டமான சில இந்தியர்களைத் தெரிந்தெடுத்துக் கொண்டது. இங்ஙனமாக தேசமக்களின் பிரதிநிதிகளல்லாதவர்கள் எல்லாம் அம் மகாநாட்டில் வீற்றிருந்தனர். அத்துடன் இந்தியரின் தர்மப் போரை நசுக்கிக் கொல்வதற்காக அடக்குமுறைச் சட்டங்கள் வரம்பில்லாமல் சிருஷ்டிக்கப்பட்டன. போர் வெகு மும்முரமாக நடந்துகொண்டிருக்கையில் இந்தியாவிலும் சரி இங்கிலாந்திலும் சரி சில அரிய பெரிய நண்பர்கள் சமரஸத்திற்கு வழிதேட முற்பட்டதன் காரண

மாக 1931-ம் வருஷத் தொடக்கத்தில் மகாத்மாஜியும் இதர காங்கிரஸ் தலைவர்களும் ஏனையோரும் விடுவிக்கப் பட்டனர். கவர்ன்மெண்டு சார்பில், வைஸ்ராயான இர்வின் பிரபுவுக்கும், காங்கிரஸ் மகாசபையின் பிரதிநிதி யாகிய மகாத்மா காந்திக்கும் ஒரு ராஜி உடன்படிக்கை ஏற்பட்டது. இதற்கு "காந்தி-இர்வின் ஒப்பந்தம்" எனப் பெயர். இவ்வொப்பந்தத்தை யொட்டி நாட்டில் சட்ட மறுப்புப் போர் நிறுத்திவைக்கப்பட்டது. அவ் வருஷ இறுதியில் இந்தியாவின் ஏக பிரிதிநிதியாக மகாத்மாஜி லண்டனில் நடைபெற்ற சர்வ கட்சி மகாநாட்டிற்குச் சென்றார். ஏற்கனவே எதிர்பார்த்ததுபோல் லண்டன் மகாநாடு பெருத்த பூஜ்யமாக முடிந்தது.

1932-ல் மீண்டும் சத்தியாக்கிரகப் போரைத் துவக்க வேண்டிய நிர்ப்பந்தம் காங்கிரஸுக்கு ஏற்பட்டது. 1934-ம் வருஷம் வரையில் உலகமே என்றும் காணாத வகையில் இந்தியா போரிட்டது. 1930-ம் வருஷத்தில் நடைபெற்ற போரைவிட இது மிகக் கடுமையாக விருந்தது. மீண்டும் ஆயிரக் கணக்கில், பல்லாயிரக் கணக்கில் மக்கள் சிறைப் படுத்தப்பட்டனர். அது தவிர தடியடி ராஜ்யம் தலை தூக்கி நின்றது; ஏராளமான தொண்டர்களும் ஸ்திரீ களும் தடிகளால் மிருகத்தனமாகத் தாக்கப்பட்டனர். இம்மட்டோ! இன்னும் எத்தனையோ வகையான சொல் லொணாக் கொடுமைகளையும், துன்பங்களையும் தேச மகா ஜனங்கள் அனுபவித்தனர். சொத்துக்களுக்கும் பெருத்த நஷ்டமேற்பட்டது. ஆங்காங்கு நடந்த துப்பாக்கிப் பிர யோகங்களால் மாண்டவரின் தொகையோ அனந்தம். சுருக்கமாகச் சொல்லுமிடத்து தேசம் தியாக அக்னி யில் புரண்டு எழுந்தது. எவ்வளவோ தூண்டுதல் களுக்கிடையே, எவ்வளவோ ஆத்திர மூட்டக்கூடிய சம்ப வங்களுக்கிடையே சத்தியாக்கிரகிகள் பூரண அஹிம்சா விரதத்தைக் கைக்கொண்டு, அந்தத் தர்மத்தினின்றும் ஒரு சிறிதும் பிறழாமல், எல்லாவிதமான கஷ்டங்களையும் ஏற் றது உலக சரித்திரத்திலேயே ஓர் புதுமைதான். தேசம் தியாக நெருப்பில் குளித்து, பெருமையுடன் வெளிவந்த தாயினும் அதன் லட்சியமாகிய பூரண சுயராஜ்ஜியத்தை அடைய அது கொடுத்துவைக்கவில்லை. பல காரணங்களை முன்னிட்டு 1934-ம் வருஷத்தில் மேற்கண்ட சத்தியாக் கிரகப் போர் மறுபடியும் நிறுத்தப்பட்டது.

இதற்குப் பிறகு காரச்சியில் கூடிய காங்கிரஸில் மனிதருக்கு அத்யாவசியமான சில ஜீவாதார உரிமைகள் வகுக்கப்பட்டன. பொருளாதார, ஜனசமூகத் திட்டமொன்றும் காணப்பட்டது. இதன் பூரா விவரத்தையும் இந் நூலில் பாரக்கக் காணலாம்.

காங்கிரஸ் மகாசபையின் கடைசிக் கூட்டம் 1934-ம் வருஷம் அக்டோபர் மாதத்தில் பம்பாயில் நடைபெற்றது. சட்ட சபைப் பிரவேசத்தில் நம்பிக்கையுடையவர்களுக்கு அந்தத் திட்டத்தை நிறைவேற்றி வைக்க தாராளமாக அனுமதி கொடுப்பதாக இக்காங்கிரஸ் தீர்மானித்தது. இது தவிர நிர்மாணத் திட்டத்திற்கும் வகை கோரியது. காங்கிரஸின் அமைப்பில் சில மாறுதல்கள் செய்யப்பட்டன; இதன் காரணமாக காங்கிரஸில் சமூக பிரதிநிதிகளின் தொகை குறைக்கப்பட்டது. காங்கிரஸ் கமிட்டிகளில் உத்தியோகம் வகிப்பவர்களெல்லாம் எப்பொழுதுமே கதாரணிய வேண்டுமென்றும், ஏதாவதொரு வகையில் தேக உழைப்பை அளிக்கவேண்டுமென்றும் காங்கிரஸ் வற்புறுத்தியது.

இப்படியாக காங்கிரஸ் மகாசபை இந்திய மக்களின் விடுதலைக்காகவும், இந்திய நாட்டின் க்ஷேமத்திற்காகவும் இடைவிடாமல் உழைத்து வருகின்றது. இப்பொழுது காங்கிரஸ், நிர்மாண திட்ட வேலையில் நாட்டஞ் செலுத்தியிருக்கிறது. பாமர மக்களின் வறுமைப் பிணியைப் போக்கவும், மகா ஜனங்களிடையே தன்னம்பிக்கையையுண்டு பண்ணவுமே இந்தத் திட்டம் வகுக்கப்பட்டுளது. பூரண ஸ்வராஜ்யத்தைப் பெற இந்தத் தன்னம்பிக்கை அத்தியாவசியமாகும். ஐம்பது வருஷங்களுக்கு முன்பு ஓர் சிறு சபையாகத் தோற்றுவிக்கப்பட்ட காங்கிரஸ் இன்று மகாசபையாக மாறி, மகிமையுடன் விளங்கி, மக்களின் நன்மதிப்பைப் பூரணமாகப் பெற்றுத் திகழ்கின்றது.

காங்கிரஸ் மகாசபை தியாகிகள் அடங்கிய சபை; சுத்த வீரர்கள் நிறைந்த சபை; சுயராஜ்ய வெறி கொண்டவர்களின் சபை; இந்தியாவின் விமோசனத்திற்காக இம் மகாசபை செய்துள்ள ஊழியமும், புரிந்துள்ள சேவையும் இவ்வளவு அவ்வளவு அன்று. காங்கிரஸ் மகாசபையின் சரித்திரம் ஓர் வீரவாசகமாகும்; தியாகக் களஞ்சியமுமாகும். காங்கிரஸ் மகாசபை நமது தேசத்தின் அரிய சொத்து;

பெருந் தனம் ; இதைக் கண்ணின் இமைபோல் காக்கவேண்டியது இந்திய மக்களின் கடமை. காங்கிரஸ் மகாசபையின் மாண்பை விளக்கவும், மகிமையைத் துலக்கவும், மதிப்பைப் பெருக்கவும் ஒவ்வொரு இந்தியனும் முற்படவேண்டும்.

நமது விடுதலைப் போர், ஸ்வதந்திர யுத்தம் இன்னும் முடிவடையவில்லை ; இனி, மேற்கொண்டு நாம் நடத்தப்போகும் போரில் காங்கிரஸ் மகாசபையின் தொண்டு அளவு கடந்து நிற்கிறது. ஆகவே நமது காரியம் தீர்ந்துவிட்டதாக எண்ணி நாம் ஓய்வு எடுத்துக்கொள்ளுவதற்கு இது காலமல்ல. இன்னும் எவ்வளவோ வேலை இருக்கிறது; பிரமாதமான வேலை யிருக்கிறது. அதற்கு மகாஜனங்களின் சலியா உழைப்பும் இணையிலாத் தியாகமும் வீறுகொண்ட மன வுறுதியும் அவசியம். பூரண ஸ்வராஜ்யத்தை அடைவதே நமது லட்சியம் ; அதைப் பெறவே நாம் பாடுபடவேண்டும்.

தாய் நாட்டின் விடுதலைக்காக உழைத்தவர்களில் எத்தனையோ உத்தமர்கள், எத்தனையோ தியாக புருஷர்கள், எத்தனையோ ஸ்திரீ ரத்னங்கள், எத்தனையோ சிறுவர் சிறுமிகள், தெரிந்தவர்கள், தெரியாதவர்கள் எத்தனையோ பேர்கள் தங்கள் இரத்தத்தைச் சிந்தி, பாரதப் போரின் பலிபீடத்தில் தங்கள் உயிரையும் அர்ப்பித்திருக்கிறார்கள் ; எண்ணிறந்த பேர்கள் இன்னும் எவ்வளவோ விதமான தியாகங்களையும் துன்பங்களையும் ஏற்றிருக்கிறார்கள் ; தாய் நாட்டின் பால் அன்பு காட்டுவதற்காக எவ்வளவோ பேர்கள் இன்னமும் சொல்லொணுக் கஷ்டங்களை அனுபவித்து வருகிறார்கள். அவர்களுக்கெல்லாம் நமது வணக்கம் உரித்தாகுக ! அவர்கள் ஏற்றிவந்த தியாகத் திருவிளக்கு என்றும் சுடர்விட்டெரியுமாக !

காங்கிரஸ் மகாசபை இன்று கற்பக விருக்ஷமாக தழைத்து நிற்கிறது. ஆதியில் அதற்கு விதை யூன்றி, தியாகத் தண்ணீர் பாய்ச்சி, அதைச் செடியாக்கி மரமாக்கி விருக்ஷமாக்கிய எண்ணற்ற ஒப்பற்ற வீரர்களையும் தியாகிகளையும் நாம் எவ்விதம் மறக்கமுடியும் ? அவர்களது உழைப்பை நாம் போற்றுவோம் ; சேவையைப் புகழ்வோம் ; அவர்களது உயரிய தொண்டை நாம் உச்சிமீது வைத்துக் கொண்டாடுவோம். காங்கிரஸ் கற்பக விருக்ஷம் இன்று நூற்றுக்கணக்

கான, ஆயிரக்கணக்கான, லக்ஷக்கணக்கான தியாக மலர்களுடனும், வீரபுஷ்பங்களுடனும் காட்சி யளிக்கும் மகிமை அதனை வளர்த்தவர்களையே சாரும். இவ் விருக்ஷத்தை நாம் மேலும் செவ்வனே பராமரித்துப் பாதுகாத்து, அதன் "விடுதலை" க் கனியைக் களிப்புடன் ருசிப்போமாக !

இனி வரும் பக்கங்களில் இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபையின் சரித்திரம் விரித்துரைக்கப்பட்டிருக்கிறது. இச் சரித்திரத்தை ஆங்கிலத்தில் எழுதியவர் டாக்டர் பட்டாபி ஸீதாராமையா அவர்கள்; இவர் ஆந்திர நாட்டுத் தலைவர்; காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினர்களில் ஒருவர்; ஒப்பற்ற வீரர்; சிறந்த தியாகி; சரித்திர ஆராய்ச்சியில் வல்லவர்; பல வருஷங்களாகக் காங்கிரஸ் தொண்டில் ஈடுபட்டு, உழைத்துவரும் அவரது அறிவும், அனுபவமும் அபாரமானவை; சரித்திர சம்பவங்களுடன் ஒரு சிறிதும் சம்பந்தப்படாமல், எவரோ தமக்குக் கிடைத்த தகவல்களைக் கொண்டு கிறுக்கித் தள்ளும் சரித்திராசிரியர்களைப் போன்றவரல்ல டாக்டர் பட்டாபி; அவர் பல விஷயங்களைத் தாமே கண்ணால் கண்டிருக்கிறார்; பல சம்பவங்களுடன் தாமே சம்பந்தப்பட்டுமிருந்திருக்கிறார்; எனவே உள்ளறிவுடன் மட்டுமன்றி, உள்ளுணர்வுடனும் அவர் இச்சரித்திரத்தை எழுதியுள்ளார். ஆகவே இதில் கண்டுள்ள கருத்துக்களும், அபிப்பிராயங்களும் அவருக்கே சொந்தமானவை; இந்தப் புத்தகத்தை இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபையே பிரசரித்து, உலகிற்கு வழங்குகிறதாயினும் இதில் கண்டுள்ள எல்லாக் கருத்துக்களும், எல்லா அபிப்பிராயங்களும் காங்கிரஸ் காரியக் கமிட்டியின் உத்தியோக தோரணையான கருத்துக்கள் அல்லது அபிப்பிராயங்கள் என மகா ஜனங்கள் மனதில் கொள்ளத் தேவையில்லை. எனினும் உண்மை விஷயங்கள் உள்ளவாறு எடுத்துரைக்கப் பட்டிருப்பது தான் இந் நூலின் சிறந்த அம்சமாகும். இச்சரித்திரத்தை அனைவரும் உள்ளன்புடன் வாசித்து உய்வு பெறுவாராக !

வார்தா,<br>12—12—1935. } ராஜேந்திர பிரசாத்

# முன்னுரை

இச் சரித்திரத்தை ஆங்கிலத்தில் எழுதிய டாக்டர் பட்டாபி சீதாராமய்யா தமது நூலுக்கு முன்னுரை எழுதுகையில் "காங்கிரஸ் பொன் விழாவை முன்னிட்டு பிரசுரம் செய்வதற்கென நான் இச் சரித்திரத்தை எழுதவில்லை. சில மாதங்களுக்கு முன், பொழுதுபோக்காக எழுதி வந்த குறிப்புகள் தான் இப் புத்தக ரூபமாக வெளிவந்திருக்கின்றன. இக் குறிப்புகளைப்பற்றி சிறிதும் எதிர்பாராத முறையில் அகில இந்திய காங்கிரஸ் காரியக் கமிட்டியின் காரியதரிசி அறியவந்ததின்பேரில், இதை அவர் காங்கிரஸ் தலைவரிடம் தெரிவித்தார். காங்கிரஸ் தலைவரின் முயற்சியின் பயனாக காங்கிரஸ் மகாசபையின் 50-வது ஆண்டு விழாவின்போது இப் புத்தகத்தை பிரசுரம் செய்யும் பொறுப்பை ஏற்றுக்கொண்ட காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கு நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கிறேன்" என்று குறிப்பிட்டிருக்கிறார்.

ஆங்கிலத்தில் எழுதப்பட்ட புத்தகம் தமிழில் வெளியான வரலாற்றைத் தெரிவிப்பது எனது கடமை என்று உணருகிறேன். இப் புத்தகம் மிகவும் அவசரமாக எழுதப் பட்டதென்பதை இந் நூலை வாசிக்கும் ஒவ்வொருவரும் தாங்களாகவே அறிவர்.

ஆங்கில நகல் என் கைக்கு வந்த பிறகு புத்தகம் வெளியிட அதிக காலம் இல்லை. தவிர பொருளாதார நெருக்கடி, வியாபார மந்தம் பலமாக இருந்துவரும் இந் நாளில் இவ்வளவு பெரிய ஒரு நூலை பிரசுரம் செய்வது அசாத்தியமென்று நான் எண்ணினேனாயினும், உற்சாகமும், தியாக உணர்ச்சியும், தேசாபிமானமும் கொண்ட

எனது சகாக்கள் எனக்குத் துணையாக இருந்து, இப் புத்தகத்தை வெளியிட எனக்கு ஆற்றல் அளித்ததை நான் குறிப்பிடாமலிருக்க முடியாது. முக்கியமாக இப் புத்தகம் வெளியிடுவது சம்பந்தமாக ஜனுப் ஆகமத் கலீலின் உதவியை நான் என்நாளும் மறக்கமுடியாது. ஒரு சமயம் இப்புத்தகத்தைப் பிரசுரம் செய்வதை நிறுத்திவிடலாம் என்று நான் எண்ணிய காலத்தில் அவர் இப்புத்தகத்திற்கு வேண்டிய பேபர் அனைத்தும் கொடுத்து உதவி செய்தார். ஜனுப் கலீல் இந்த உதவி புரிந்திருக்காவிடில் இப்புத்தகம் பிரசுரமாயிருக்குமென்று நான் கூற முடியாது.

உண்மை சகாக்களின் உதவியையும், தமிழ்நாட்டுமக்களின் ஒத்துழைப்பையும், ஆண்டவன் கிருபையையும் கொண்டு மேலும் மேலும் காங்கிரஸுக்கும் தேசத்திற்கும் என்னால் இயன்ற தொண்டாற்ற எல்லாம் வல்ல கடவுள் கிருபை செய்வாராக.

26—12—35 எஸ். கணேசன்



Vallabhbhai Patel.
1931 : Karachi.



Lokamanya Tilak.



W. C. Bonnerjee
1885 : Bombay
1892 ; Allahabad



Dadabai Naoroji
1886 : Calcutta
1893 : Lahore
1906 : Calcutta



Budruddin Tyabji
1887 ; Madras



George Yule
1888 : Allahabad



Sir William Wedderburn
1889 : Bombay
1910 : Allahabad



Sir P. M. Mehta
1890 : Calcutta



P. Ananda Charlu
1891 : Nagpur



Alfred Webb
1894 : Madras



Surendra Nath Banerjea
1895 : Poona
1902 : Ahmedabad



Md. Rahimatullah Sayani
1896 : Calcutta



Sir C. Sankaran Nair
1897 : Amraoti



Ananda Mohan Bose
1898 : Madras



R. C. Dutt
1899 : Lucknow



N. G. Chandavarkar
1900 : Lahore



D. E. Wacha
1901 : Calcutta



Lal Mohan Ghose
1903 : Madras



Sir Henry Cotton
1904 : Bombay



G. K. Gokhale
1905 : Benares



Rash Behari Ghose
1907 : Surat
1908 : Madras



Madan Mohan Malaviya
1909 : Lahore
1918 : Delhi



**Bishan Narayan Dhar**
**1911 : Calcutta**



**R. N. Mudholkar**
**1912 : Bankipore**



**Nawab Syed Md. Bahadur**
**1913 : Karachi**



**Bhupendra Nath Basu**
**1914 : Madras**



Sir S. P. Sinha
1915 : Bombay



Ambika Charan Mazumdar
1916 ; Lucknow



Annie Besant
1917 : Calcutta



Hasan Imam
1918 : Bombay (Special)



Pandit Motilal Nehru
1919: Amritsar
1923 Calcutta



C. Vijiaraghavachariar
1920: Nagpur



Lala Lajpat Rai
1920: Calcutta (Special)



Hakim Ajmal Khan
1921: Ahmedabad



C. R. Das
1922 : Gaya



Mohamed Ali
1923 : Cocanada



Abul Kalam Azad
1923 : Delhi (Special)



Mahatma Gandhi
1924 : Belgaum



Sarojini Naidu
1925 : Cawnpore



S. Srinivasa Iyengar
1926 : Gauhati



Dr. Ansari
1927 : Madras



Jawharlal Nehru
1929 : Lahore

# காங்கிரஸ் மகாசபை சரித்திரம்

## முதல் பாகம்

### அத்தியாயம் 1

### மகாசபை பிறந்த வரலாறு

ஏறக்குறைய முன்னூறு வருடங்களுக்கு முன்னர் இந்தியாவுடன் வியாபாரம் செய்ய வந்த மேனாட்டார், நாளடைவில் தேசம் முழுவதையும் தங்கள் வசமாக்கி, நாட்டினரைத் தங்கள் ஆதிக்கத்துக்குட் படுத்தினர். சுதந்திர உரிமைகளை யிழந்த நம் நாட்டு மக்கள், கஷ்ட நிஷ்டூரங்கள் அதிகரிக்கவே, உணர்ச்சிபெற்றுத் தங்கள் அடிமைத் தனத்தைப் போக்கிக்கொண்டு விடுதலையடைய விரும்பினர். சுதந்திர தாகத்தால் வாடும் இந்தியர் சுயாட்சி பெற ஐம்பது வருடங்களுக்கு மேலாகச் செய்துவரும் பெரு முயற்சிகளை எடுத்துக் கூறப்புகின், அஃதே இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபையின் திவ்ய சரிதமெனக் கூறலாம்.

வியாபார நோக்கத்துடன் இந்தியாவை வந்தடைந்த சீமைக் கிழக்கிந்தியக் கம்பெனியார், நாட்டில் பெருவாரியான பிரதேசங்களைக் கைப்பற்றி, அவைகளை அரசாளும் பொறுப்பை ஏற்றுக்கொண்டனர். கி. பி. 1772-ம் ஆண்டிற்குப் பிறகு பிரிட்டிஷ் சர்க்கார், கம்பெனிக்கு இந்திய வியாபார உரிமைகளைப் புதுப்பிக்கும் பொழுதெல்லாம், அதன் வியவகாரங்களைப் பரிசீலிக்கத் தொடங்கினர். கம்பெனியின் வியாபார நோக்கங்கள் சிறிது சிறிதாக மறையத் தொடங்கி, ஆட்சிப் பொறுப்பு அவர்களுக்கு அதிகமாகவே இங்கிலாந்தில் பலர் கம்பெனியின் அபிவிருத்தி விஷயத்தில் மிகவும் அக்கரை கொண்டனர். இங்

தியர் விஷயங்களில் சிரத்தைகொண்ட இரண்டொருவர், தங்கள் நாட்டாரின் தொழில் முயற்சிகள் சுதேசிகளைப் பாதிப்பதாக மட்டுமிருத்தல் கூடாதெனச் சுட்டிக்காட்டவும் முன்வந்தனர். பேராசை பிடித்த கம்பெனிச் சிப்பந்திகள் பலர் அநியாய வழிகளில் கூசாமலிறங்கி திரவியம் சேகரிக்கத் தொடங்கியதை எட்மண்டு பர்க்கு, ஷெரிடன், பாக்ஸ் முதலிய ஆங்கிலப் பிரமுகர்கள் தங்கள் நாட்டினருக் கெடுத்துரைத்தனர். வங்காள கவர்னராக வேலைபார்த்த வாரன் ஹேஸ்டிங்ஸ் பார்லிமெண்டு மகாசபை முன் இவர்களால் குற்றஞ் சாட்டப்பட்டுக் கடைசியில் விடுதலையடைந்தாரெனினும், இந்தியாவில் தங்கள் தேசத்தார் செய்யும் அதிக்கிரமங்கள் முதன்முதலாக ஆங்கிலேயர்களுக் கெடுத்துரைக்கப்பட்டன. சர்க்கார் கம்பெனிக்குப் புதிய சாஸனம் அளிக்கும் பொழுதெல்லாம் சுதேசிகளின் நன்மையைக் கோரி அவர்கள் பற்பல காரியங்கள் செய்ய வேண்டுமென விரிவாக எழுதிவைத்தார்கள். கம்பெனியார் ராஜ்ய விஸ்தரிப்பைநோக்கமாகக் கொள்ளலாகாதென அவற்றுள் குறிக்கப்பட்டது. வியாபாரப் பெருக்கின் நிமித்தம், கம்பெனியார் சிற்றரசர்களுடன் உடன்படிக்கைகள் செய்துகொண்டு அதன்படி நடக்கவேண்டுமென விதிக்கப்பட்டது. சிப்பந்திகள் சுயேச்சையாக வியாபாரம் நடத்துவதை சர்க்கார் கண்டித்திருந்தனர். இந்தியாவில் பிரிட்டிஷ் அரசாங்கம் ஆளத் துவக்கிய நாள்முதல் நாளது வரையுள்ள தேச சரித்திரம், நிறைவேற்றா வாக்குறுதிகளும், நிராகரிக்கப்பட்ட சாஸனங்களுமடங்கிய ஓர் கோர்வையே! அநுபவத்தில், கம்பெனியார் இந்த நிபந்தனைகளைச் சிறிதும் பொருட்படுத்தாமல், தேசங்களைக் கைப்பற்றியும், சுயநலத்தை நாடி அக்கிரம வியாபாரம் புரிந்தும், உடன்படிக்கைகளுக்கு மாறாகப்போர் தொடுத்தும், நாளடைவில் வியாபார நோக்கத்தைஅறவேயொழித்து ராஜ்ய விஸ்தரிப்புத் துறையிலிறங்கினர். சிறிது காலத்துள் கண்ணியம் நிறைந்த இவ்வணிகர் சேமித்த திரவியமே, பதினெட்டாவது நூற்றாண்டிறுதியில், நீராவி யந்திர சாதனங்கள் கண்டுபிடிக்கப்பட்டபொழுது இங்கிலாந்துக்கு மூலதனமாக உதவி, அந்நாட்டை உலகிலேயே முதன்மையான நாடாகத் தலையோங்கி நிற்க உதவியது.

கி. பி. 1774-ம் ஆண்டில் கிழக்கிந்தியக் கம்பெனியார் வியவகாரங்களில் தலையிடத் தொடங்கிய பிரிட்டிஷ் பார்லி

மெனும் சபை முறையே 1785, 1793, 1813, 1833, 1853 ஆண்டுகளில் அக்கம்பெனி விஷயமாகச் சட்டங்கள் வகுத்தது. 1833-ம் வருஷச் சட்டத்தின் மூலம் "பிரிட்டிஷ் இந்திய துரைத்தனத்தில் துரைத்தனப் பொறுப்பை நடத்துவதற்கென தனிப்படப்பெற்ற ஒரு சாதியார் இரார். கல்வித் தேர்ச்சியடைந்து சர்க்கார் வேலைகளுக் கருகதையானவர் ஜாதி, மத வித்தியாசங்களால் அப்பதவிகளைப் பெறுமல் தடுக்கப்பட மாட்டார்கள். அரசர் பெருமானின் பிரஜையான எவரும் தங்கள் யோக்யதையால் அடையக்கூடிய பதவியை, இவர் இந்தியர், பிரிட்டிஷ் ஜாதியினர் அல்லது கலப்புச் சாதியார் என்ற பாகுபாட்டினுல் இழக்கவே மாட்டார்கள்" என அறிவிக்கப்பட்டது. இச்சட்டம்தான் கம்பெனியாரின் வியாபார நோக்கத்தை அறவே யொழித்து அவர்களை ராஜ்யப் பொறுப்பை ஏற்கச் செய்தது. இதே தருணத்தில்தான் இந்தியாவிற் கேற்றதென ஆங்கிலக் கல்வியை இந் நாட்டினருக்குப் பயிற்றுவிக்க முடிவு செய்யப்பட்டது.

## சிப்பாய்க் கலகம்

இவை நடந்து இருபது ஆண்டுகள் கழியுமுன், பாஞ்சாலமும், சிந்துப் பிரதேசமும் ஆங்கிலேயர் வாளுக்கிரையாயின. அநேக சிறு ராஜ்யங்கள் நேர் சந்ததிகளில்லையென ராஜப்பிரதிநிதிகளின் இலக்குக்குக் குறியாயின. அயோத்தியை யாண்ட மன்னர் அரசாட்சி, ஆங்கிலேயர்களுக்குத் திருப்தி யளிக்காததால், அந்நாட்டையும் காருண்யக் கம்பெனியார் தங்கள் பராமரிப்புக் குட்படுத்தினர். வியாபார முறையில் நான்கு காசு சம்பாதிக்க வந்த ஆங்கிலேயரின் பேராசையால் நமது நாட்டினர் தங்கள் திரவியம், உரிமைகள், சுதந்திரம் எல்லாம் கண்முன் இழக்கக் கண்டு, சரித்திரத்தில் பெயர்போன சிப்பாய்க் கலகத்திலீடுபட்டனர். 1857-ம் ஆண்டில் நடந்த இக் கலகத்துக்கு மற்றும் பல காரணங்களிருந்தனவாயினும், இது சுதந்திர மிழந்த ஜனங்கள் கடைசி முறையாகத் தங்கள் விடுதலைக்காகவென செய்த ஆயுதப் போராட்டமாகும். முயற்சிகள் வீணுகவே, இந்தியர் பலங்குன்றி, தைரியமிழந்து விரோதியை வெல்லமுடியாததால் தங்கள் கதி தங்கள் விதியென நினைத்து வாளாவிருந்தனர்.

பின்னாளிலெல்லாம் இந்தியருக்கு ராஜீயத் துறையில் ஏற்பட்ட குறைகளை அவர்கள் சட்டரீதியான முறைகளால் தான் நீர்க்க முயன்று வந்திருக்கின்றனர். இம் முயற்சிகளில் ஹ்யூம் போன்ற ஆங்கிலேய உத்தியோகஸ்தர்கள் பலரும் தாமாகவே கருணையுடன் இந்தியர் துயரை ஒழிக்க முன் வந்தனர்.

சர்க்கார் வேலைகளுக்கு ஜாதி மத பேதங்கள் தடையாயிராவெனச் சட்டம் பிறப்பித்த சில ஆண்டுகளுக்குப் பின்னர் கலெக்டர் பதவிகளுக்குச் சீமையில் மட்டும்தான் பரீக்ஷை நடத்தி ஆள் பொறுக்குவதெனெ ஆங்கிலேய சர்க்கார் தீர்மானித்தனர். திரைகடல் கடந்து சென்று, அயல் நாட்டாருடன் கலந்து அந்நிய பாஷையில் பரீக்ஷை கொடுத்துத் தேற இந்தியர்களுக்குச் சாத்தியமாகாதெனவும், அந்தப் பரீக்ஷையை இந்தியாவிலும் நடத்தவேண்டுமெனவும் இந்தியர்கள் மன்றாடிக் கொண்டிருக்கும் பொழுதே, இந்தியர்களுக்கு மேலும் பாதகம் விளைவிக்கும்படியாக பரீக்ஷைக்கு ஏற்பட்ட வயதையும் விதியையும் சீமைச் சர்க்கார் மாற்றிச் சட்டமியற்றினர். இது இந்தியரிடை மிகுந்த ஏமாற்றத்தை உண்டுபண்ணிற்று. இதன் தொடர்பாக, லிட்டன் பிரபு சுதேச பாஷைகளில் பிரசுரிக்கப்படும் பத்திரிகைகளுக்கு மட்டும் வாய்ப்பூட்டுச் சட்டம் (1878) ஒன்றியற்றி வைத்தார். ஆங்கிலேயர் உரிமைகளை நன்றாய் ஸ்தாபிக்க மேலும் அவர், இந்தியர்கள் ஆயுதம் தரிக்கலாகாதெனவும் விதி விதித்தார்.

இஃதிப்படி யிருக்கையில் தேசத்திலுள்ள திரவியமெல்லாம் வெகு விரைவாகக் கப்பலேறிப் போய்க் கொண்டிருந்தது. பெருமிதமாக தானியாதிகள் விளைந்து சீரழிய, அதை வாங்கி உண்ணக் கையில் ஒரு காசுமில்லாமல் இந்தியர்களிடம் திரவியப் பஞ்சம் ஏற்பட ஆரம்பித்தது. இன்று வரையில் அது ஒழியவில்லை! பஞ்சத்தின் அடிச்சுவடுகளில் யமன் தோன்றி அநேகம் பேரை மாய்த்தான். ஆங்கிலேயர் என்றுமே போலத் தங்கள் கருமமே கண்ணாயிருந்தார்கள். ஆப்கானிஸ்தான அரசர் சீமைக்கு எங்கு கெடுதல் விளைத்து விடுகிறாரோ என்று அவரை அடக்க அவருடன் சமரிடலாயினர். எது எப்படிப்போனாலும் அவர்கள் கேளிக்கைப் பிரியர்கள் தானே! நாட்டில் பஞ்சமும் மரணமும் தாண்டவமாடிக்கொண் டிருக்கையில் ‘டில்லி தர்பார்’ விமரிசைகளை வெகு குதூகலத்துடன் நடத்திவைத்தனர். அந்

திருந்த மனப்பான்மைதான் இன்றும் சர்க்கார்ப் பிரதிநிதி களிடம் இருக்கிறது. நாட்டினர் எவ்வித இடுக்கண் வாய்ப்படினும், அவர்கள் கவர்ன்மெண்டு அரண்மனைகளில் வருடாந்திரக் கேளிக்கைகளும், நடனங்களும், விருந்து களும் சுவைப்பதில் தவறினதே யில்லை!

தங்கள் குறைகளுக்குச் சர்க்கார் சிறிதும் செவிசாய்க் காமலிருப்பது கண்டு இந்திய ஜனங்களில் அறிவாளிகள் சிலர் கடுங்கோபங் கொண்டனர். மறுபடி ஜனநாயக முறையில்லாச் சர்க்காரை வீழ்த்திவிட தேசமுழுதும் பல இடங்களில் சதி செய்யவும் ஆரம்பித்தனர். மக்களின் கேவல நிலைமையும் மனப்பான்மையும் பம்பாய், தக்ஷிண விவசாயி களின் கலக வாயிலாக வெளிப்பட்டது. இந்த நிலையில் தான் மிஸ்டர் ஹ்யூம் இந்நாட்டினரின் துயர்களை அவ்வப் பொழுது சர்க்காருக் கெடுத்துரைத்துப் பரிகாரங்களை யடைய ஒரு தேசீய ஸ்தாபனம் நிறுவவேண்டுமென நினைத் தார். இந்த எண்ணத்தின் விளைவாகவே இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபை ஸ்தாபிக்கப்பட்டது.

## பட்டதாரிகளுக்கு பகிரங்கக் கடிதம்

1883-ம் ஆண்டில் கல்கத்தா சர்வகலாசாலைப் பட்ட தாரிகளுக்கு அவர் ஹிருதயத்தை ஊடுருவிச் செல் லும் வாக்கியங்களில் ஓர் பகிரங்கக் கடிதம் விடுத்தார். அறிஞர்களான அவர்களுள் ஓர் ஐம்பது யுவர்களாவது தாய்நாட்டின் சேவைக்காகத் தங்கள் வாழ்நாளை அர்ப்பணம் செய்ய முன்வரவேண்டுமென அவர் பிரார்த்தித்தார். சுய நலத்தைப் பாராட்டாமல், தேசத்தினருக்குத் தொண் டாற்றுவதே வாழ்நாளில் லக்ஷியமாகக் கொண்டு உழைக்க வல்லவர் நாட்டில் தோன்றினுலொழிய தேசத்தில் பொறுப்பு வாய்ந்த துரைத்தனம் ஏற்பட நியாயமில்லை என அவர் எடுத்துக் காட்டினுர். அவர் விடுத்த லிகிதத்தில் சிறந்ததான பின்பகுதியில் கீழ்க்கண்ட சௌரிய வாக்கியங் கள் காணப்படுகின்றன.

“நாட்டின் அறிவாளிகள் அவரவர்கள் தங்கள் சுய காரியத்திலேயே கண்ணுயிருந்து தாய்நாட்டிற் காகச் சிறிது பாடுபடவும் தயங்கி நிற்பாராயின், அவர்கள் தங்கள் சுயநாட்டில் உரிமையிழந்து பிறநாட்டினரால் முதுகிலேறிச் சவாரி செய்யத் தகுதியானவர்தாம். அவ்வித

மாயின், அவர்களுக்குற்ற விதி சரியானதே! எந்த நாட்டினரும் அவரவர் முயற்சியாலான பதவியை மட்டும் தான் அடைவரன்றோ? படித்துத் தேர்ச்சிபெற்று உலக சரித்திரம் அறிந்த உங்களில் சிலராவது, சுயநலத்தை மதியாமல், உங்கள் தாய்நாடு நலமடையவும், நாடெங்கும் நியாயம் ஓங்கவும், பொன் விளைந்ததெனக் கூறப்படும் இந்நாட்டில் சுபிக்ஷம் ஓங்கி நிற்கவும், நியாயம் நிலவவும், உங்கள் துரைத்தன நிர்வாகத்தில் நீங்கள் பெரும்பாலான பங்கை யடையவும் முயற்சிகள் செய்து அதிகாரமேற்க முன்வர வேண்டாமா? நீங்கள் இப்படிச் செய்ய முன் வராமல் பதுங்கினால், உங்கள் நலத்தை நாடும் என்னை யொத்த சிநேகிதர்களைக் கைவிட்டவர்களாவீர்கள். நமது விரோதிகள் கையை பலப்படுத்தி அவர்கள் அநியாய நோக்கங்கள் எளிதில் கைகூடச் செய்வீர்கள். இந்தியா என்றும் மேலான சுதந்திர அந்தஸ்தை யடைய மார்க்க மில்லாமற் போகும். நீங்கள் இப்பொழுது பின்னடைந்து பிறகு "எங்களைச் சரியாக நடத்தவில்லை, நாங்கள் சிறு குழந்தைகளா?" என்று ஓலமிட்டு அழுவதில் என்ன ஆண்மைத்தன மிருக்கிறது? செய்கை யற்ற மானிடப் பிறவிகளும் மனிதர்களாவரோ? தேச பக்தியும், பொது நன்மை செய்யத் தீரா அவாவும் இல்லையேல், அந்த நாட்டின ரைப் பிறநாட்டார் அடிமைகளாக்கி ஆண்டு வருவதில் ஆச்சரியம் என்ன? பிறநாட்டார் அதிகாரம் வகிக்கவும், நீங்கள் அவர்களுக்குப் பணிசெய்வோருமாகத்தான் என்றும் இருக்கவேண்டி வரும்!........."

காங்கிரஸ் மகாசபை நிறுவுவதற்குச் சில ஆண்டுகள் முன்னர் நாட்டில் பல தலைநகரங்களிலும் தேசமக்களால் பொது நன்மைகள் புரிவதை நோக்கமாகக் கொண்ட வெவ்வேறு சங்கங்கள் ஸ்தாபிதம் செய்யப்பட்டன. இவை செய்த முயற்சிகளும், ஆற்றிய தொண்டும் பின்னர் காங்கிரஸ் மகாசபை தோன்றுவதற்கு அநுசரணையாக இருந்தன. வங்காளத்தில் முதன் முதலாக 1851-ம் ஆண்டில் தோன்றியது பிரிட்டிஷ்-இந்திய சங்கம் என்ற ஓர் ஸ்தாபனம். இதே சமயத்தில் பம்பாயில் தாதாபாய் நௌரோஜி பம்பாய் சங்கம் என்ற ஸ்தாபனத்தை யாரம் பித்தார். தென்னிந்தியாவில் ஸ்ரீமான்கள் எம். வீரராக வாச்சாரியார், ரங்கைய நாயுடு, ஜி. சுப்பிரமணிய அய்யர், என். சுப்பராவ் பந்துலு இவர்களின் முயற்சியால் "ஹிந்து"

பத்திரிகை தோன்றிய நற்காலமும் இதுவே. நாட்டிலுள்ள அக்காலத்துப் பிரமுகர்களெல்லோரும் 'ஹிந்து' பத்திரிகை வாயிலாகத்தான் தேசத்தொண்டாற்றி வந்தனர். மகாராஷ்டிரத்தில் "சர்வ ஜன ஸபா" ஏற்படுத்தப்பட்டதும் இதே சமயத்தில் தான். வங்காளத்தில் தேசீய இயக்கத்துக்குத் தந்தையாக இருந்தவர் காலஞ்சென்ற சர் சுரேந்திரநாத பானர்ஜி என்னும் பெரியார். கலெக்டர் வேலையை வகித்த ஸ்ரீமான் பானர்ஜி, நாட்டினரின் அதிருஷ்டவசமாய்ப் பதவித் தொல்லையினின்றும் சீக்கிரமே விடுபட்டு, தேசத் தொண்டில் ஈடுபட்டார். 1876-ம் ஆண்டில் இந்தியர் சங்கம் என்ற ஓர் இயக்கத்தை இவர் வங்காளத்தில் ஸ்தாபித்தார். வேலையினின்று அகன்றது முதல் அவர் தேச மெங்கும் திக்விஜயம் செய்து ராஜீய விஷயமாகப் பிரசங்கங்கள் செய்தார். தேசத்தினரிடையே ஓர் புத்துணர்ச்சியை உண்டுபண்ணி, சுதந்திர தாக மெடுக்கச் செய்த பெருமை அந்தக் காலத்திலிருந்து வெகுநாள் வரை இவருடையது ஆயிற்று.

## அநியாயப் பிரசாரம்

இத்தருணந்தான் முற்கூறியவாறு லிட்டன் பிரபு சுதேசப் பத்திரிகைகளுக்குப்பாதகமாகச் சட்டமியற்றியது. வேறு பல இடர்களும் நாட்டினரைப் பாதிக்கத் தொடங்கின. லிட்டனுக்குப் பிறகு ராஜப்பிரதிநிதியாக இருந்த ரிப்பன் பிரபு இந்த அநீதியான சட்டத்தை ஒழித்து ஆப்கானிஸ்தான யுத்தத்தை நிறுத்தி, அமீருடன் சமாதானம் செய்துகொண்டு, ஸ்தல சுய ஆட்சி அதிகாரத்தை இந்தியர்களுக்கு அதிகமாக அளித்து இன்னும் பல நன்மைகளையும் செய்தார். சுதேசிகளிடை அன்பு பூண்ட இவரைச் சில சுயநலப்பேய் பிடித்த ஆங்கிலேயர்கள் வெறுத்து இவருக்கு எதிர்ப் பிரசாரம் செய்தனர். அவர்கள் கட்டுப்பாடான முயற்சி பலனளித்தது. மேலும் இந்தியருக்கு நன்மை செய்ய முடியாமல் ரிப்பன் பிரபுவின் முயற்சிகளைப் பாழாகும்படி செய்தனர். இந்த சம்பவத்தின் படிப்பினை இந்தியர் மனத்துள் ஆழப் பதிந்தது. அப்பொழுது தான் இந்தியர்கள், பிறநாட்டார் தாங்கள் மேற்குலத் துதித்தோரென அகங்காரம் கொண்டு, சுதேசிகளை எப்பொழுதும் தங்களுக்குக் கீழ்ப்பட்டவர்களாகவே

பாவித்து நடத்திவர வேண்டுமென்ற தூர் எண்ணம் படைத்தவரெனக் கண்டுகொண்டனர். (இன்று வரையில் பெரும்பாலான ஆங்கிலேயர்களோ அந்த எண்ணம் விட்டகன்றதென்பதற்கு யாதொரு அறிகுறியும் காணோம்!) கட்டுக்கோப்பான முறையில் ஆங்கிலேயர்கள் செய்த அநியாயமான பிரசாரம் கைமேல் பலனளித்தது கண்ட இந்தியர், தாங்களும் ஒற்றுமையுடன் நடந்து கொண்டால் தாங்கள் எந்தக் காரியத்தையும் சாதிக்க முடியும் என்று நினைத்தனர். சில நாட்களில் கல்கத்தாவில் ஆல்பர்ட் ஹாலில் நடந்த ஓர் மா பெரும் கூட்டத்தில் பிரசங்கம் செய்த சுரேந்திரநாத் பானர்ஜி தேசத்தின் காஷியைச் சர்க்காருக்கு எடுத்துரைக்க இந்தியர் ஒரு மிக்கக் கூடிய ஓர் ராஜ்ய ஸ்தாபனம் தேவை என எடுத்துக் காட்டினார். நாட்டில் பல இடங்களிலும் இதே சமயத்தில் பிரமுகர்கள் கூடி ஒற்றுமைப் பிரசாரம் செய்யத் தொடங்கினர். 1881-ம் ஆண்டு சென்னை மகாஜன சபை ஸ்தாபிக்கப்பட்டது. சென்னையிலும் ஒரு மகாநாடு நடத்தப்பட்டது. பம்பாயில் மேத்தா, தியாப்ஜி, திலங்கு போன்ற பெரியார் கூட்டங்கள் கூட்டினர். இப்படிப் பல இடங்களில் வெவ்வேறு கூட்டங்கள் நடந்து வந்த காலை, ஒரு அகில இந்திய ஸ்தாபனம் நிறுவ வேண்டுமென உணர்ச்சி இருந்தும், அஃது யாரால் எப்பொழுது வெளியிடப்பட்டதென நிச்சயமாகக் கூற முடியவில்லை. 1884-ல் சென்னையிற் கூடிய பிரும்ம ஞான சங்க மகாநாட்டுக்குப்பின் நடைபெற்ற ஒரு அந்தரங்கக் கூட்டத்தில் இந்த எண்ணம் வெளியிடப்பட்டதென சிலர் கூறுவர். ஆனாலும் மிஸ்டர் ஹ்யூமே இந்த விஷயத்தில் நேர்முகமாக ஈடுபட்டு முயற்சி செய்யத் தொடங்கினர். 1885-ம் வருஷம் மார்ச்சு மாதம், அவ்வருஷம் டிஸம்பர் மாதத்தில் பூனா நகரத்தில் அகில இந்தியர்களின் கூட்டம் ஒன்று கூட்டப்படுமென எல்லோருக்கும் அறிவிக்கப்பட்டது. இந்த விதமாக இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபை பிறந்தது.

## சமூகச் சீர்திருத்தம்

காங்கிரஸ் மகாசபை இந்தியர்களின் ராஜீய உணர்ச்சி அபிவிருத்தியின் பலனாக மட்டும் தோன்றவில்லை. தேசத்தார் சமூக வாழ்க்கையில் ஓர் புத்துணர்ச்சி பெற்றதின்

விளைவாகவும் தோன்றிற்று எனக் கூறுவது பொருந்தும். மகாசபை ஜனிக்கப் பல ஆண்டுகளுக்கு முன்னிருந்தே இந்தியாவில் பொதுஜன வாழ்க்கையில் புதிய ஆசாரங்கள் நிலவ ஆரம்பித்தன. ராஜா ராம் மோகனராய் (1776—1833) என்ற பெரியாரே இந்திய சமூகச் சீர்த்திருத்தங்களுக்கெல்லாம் தந்தை எனலாம். ராம்மோகன ராய் மிகுந்த படிப்பாளி. உத்தம தேசபக்தர். இவர் பெருமுயற்சியின் காரணமாகவே இந்தியாவில் தேசிய இயக்கம் வளர்ந்ததெனக் கூறல் வேண்டும். உடன்கட்டை யேறும் கொடிய பழக்கத்தை ஒழிக்க இவர் மிகப் பாடுபட்டார். ஆங்கிலக் கல்வி முறைகளை இந்தியாவில் புகட்ட இவரும் காரணமாயிருந்தார். சீமையில் இந்தியர் கக்ஷியை இவர் திறனுடன் எடுத்துக் கூறினர். பத்திரிகை அடக்குமுறைச் சட்டங்களை இவர் தன் பலமெல்லாம் கொண்டு எதிர்த்தார்.

ராஜா ராம் மோகன ராய் காலத்திற்குப் பிறகு அவர் செய்த சமூகத் தொண்டை வங்காளத்திலேயே தோன்றிய கேசவச் சந்திர சென் வகிக்கலானர். பிரும்ம சமாஜம் என இன்றும் தழைத்தோங்கும் இயக்கத்தை ஆரம்பித்த மகான் இவரே. குடிப்பழக்கத்தை நாட்டினின்றும் ஒழிக்க இவர் பட்ட பாடு கொஞ்சமில்லை. 1872-ம் வருடத்தில் இயற்றப் பட்ட சிவில் விவாகச் சட்டத்துக்கு இவர்தான் கர்த்தாவாக இருந்தார். இந்தச் சட்டம் சின்னஞ் சிறு குழந்தைகளின் விவாகத்தைத் தடுத்து, ஆடவர் ஒருவர் பல பெண்களை வரிப்பதைக் கண்டித்து, விதவா விவாகங்களை அனுமதித்து, நாட்டினருக்கு நன்மை செய்தது. கேசவ சந்திர சென் சமீபகாலத்தில் இயற்றப்பட்ட சாரதா விவாக வயதுச் சட்டத்தை 1872-ம் ஆண்டிலேயே இயற்றிவைக்கப் பாடு பட்டுப் பார்த்தார்.

பிரும்ம சமாஜ இயக்கம் மகாராஷ்டிரத்தில் எம். ஜி. ரானடே என்ற மகானின் தலைமையின் கீழ் 'பிரார்த்தன சமாஜ்' என்ற பெயர் பூண்டு ஆரம்பிக்கப்பட்டது. இந்த ரானடே தான் சமூகச் சீர்திருத்த இயக்கத்தைப் பிறப்பித்தவர். வெகு காலம் வரை காங்கிரஸ் மகாசபைக் கூட்டங்கள் நடந்தபொழுதெல்லாம் இச்சமூகச் சீர்திருத்த இயக்கத்தின் கூட்டங்களும், மகாசபையினுதரவில் நடத்தி வரப்பட்டன.

பிரும்ம சமாஜம் போன்ற இயக்கங்கள் இந்தியாவின் புராதனப் பெருமையை உல்லங்கனம் செய்து, பழைய வழக்

கங்களைக் கைசோர விட்டு, மேனாட்டு நாகரிக மாயையில் மோகங் கொண்டவையாக இருந்தன. இதற்கு உடனே எதிர்ப்பு ஏற்படுவது சகஜந்தானே! அப்பொழுது தென் னிந்தியாவில் தோன்றிய பிரும்மஞான சங்கத்தார் பரப்பிய கொள்கைகளும், பாஞ்சாலத்தில் தயானந்த சரஸ்வதி என்னும் பெரியாரால் துவக்கப்பட்ட ஆரிய சமாஜமும் மேனாட்டு நாகரிகக் கலப்பால் நாட்டினருக்கு ஏற்பட்ட உதாசீனமான எண்ணங்களைக் கலைத்தன. நான்மறைகளின் ஆரியத் தன்மையையும், மேன்மையையும் ஆதாரமாகக் கொண்ட ஆரிய சமாஜ இயக்கத்தார் தேசபக்தியில் ஏனை யோருக்குச் சிறிதும் பின் வாங்கினவரல்லர். நாட்டிற்கு நன்மை பயக்கக்கூடிய சமூகச் சீர்திருத்தங்களை இவர்கள் வரவேற்றனர். நாளடைவில் ஆரிய சமாஜத்திலும் பிள வேற்பட்டு, ஒரு சாரார் மேனாட்டு நாகரிகத்தையும் தழுவியே நமது நாட்டார் முன்னேற வேண்டுமென நினைத்தனர். பாஞ்சால சிங்கமெனப் பெரும் புகழடைந்த லாலா லஜபதி ராய் இந்த கோஷ்டியினருக்குத் தலைவராக விளங்கினர். சுவாமி சிரத்தானந்தர் என்ற பெரியார் வேதங்களில் கூறிய படி பிரும்மசரியம், மதச் சேவை இவைதான் சமாஜத் தார் கடைப்பிடிக்க வேண்டிய மார்க்கமென உபதேசித் தார்.

பிரும்ம ஞான சங்கத்தாரோ கீழ்நாட்டாரின் புரா தனச் சிறப்பே சிறப்பு, அதை மீண்டும் உலகத்தோருக்குப் பயன்பட எடுத்துரைக்க வேண்டும் என முன் வந்தனர். அவர்கள் இத்துடன் நில்லாமல் பூவுலகில் பரவா நின்ற சகல பிற மத ஞானத்தையும் சிரத்தையுடன் கற்கவும் அவாக் கொண்டனர். இச்சங்கத்தாரின் முயற்சிகள் உலக சகோதரத்துவத்தைப் போதித்தன. நம் நாட்டு வேதங்க ளின் ஆழ்ந்த கருத்துக்களையும், அவற்றுள் பொதிந்து கிடக் கும் அரிய ஞானத்தையும் எடுத்துக் கூறவே, அவை, மேனாட்டு ஞானிகள் மனதைக் கவர்ந்து அவர்களை இந்தியா வின்பால் அன்பு பாராட்டும்படி செய்தன.

சிறிதுகாலம் சென்று, பொதுஜன சேவையே மானிட வாழ்க்கையில் பிரதான லக்ஷியமாகக் கொண்ட ஓர் இயக்கம் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர் என்ற மகானால் வங்காளத் தில் ஆரம்பிக்கப்பட்டது. ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அரிய ஞானோபதேசங்களை உலகமுழுதும் பரப்புவது அவர் மெய்ச்சீடரான ஸ்ரீ விவேகானந்தரின் பொறுப்பாயிற்று.

ஆத்மார்த்த விஷயங்களிலும் அபார நம்பிக்கை வைத்தும், உலக வியவகாரங்களிலும் ஓரளவு கவனத்தைச் செலுத்தியும், சகோதர சகோதரிகளுக்குத் தொண்டாற்றுவதே மானிட வாழ்க்கையின் இலட்சியம் என்று உபதேசித்து, லோகோத்தாரணத்திற்கு வழிகாட்டினவர் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்ஸர்.

சிறிது காலத்துக்குள்ளாகவே ஒன்றன்பின் ஒன்றாகப் பரதக் கண்டத்தில் தோன்றிய இவ்வுன்னத இயக்கங்களின் மேன்மையான கொள்கைகளை எல்லாம் தன்னுளடக்கி நாட்டினரைப் பழையகாலப் பெருமைகளைக் கைவிடாமலும், எதிர்காலப் போக்கை அனுசரித்து நிகழ்காலத்தில் என்ன செய்யவேண்டுமென வழிகாட்டியும் நின்ற மகத்தான பெருமை, இந்திய தேசீய காங்கிரஸ் மகாசபைக்கே உரித்தானது. இதன் உயர் நோக்கங்கள் யாவை? சென்ற ஐம்பது ஆண்டுகளில் இவை எவ்வளவு தூரம் சித்தித்தன? என்பதை நாம் இனி ஆராயப் புகுவோம்.

## பூர்வாங்க ஏற்பாடுகள்

முதன்முதலாக அகில இந்திய மகாநாடு ஒன்றைக் கூட்ட ஹ்யூம் துரை உத்தேசித்தபொழுது அவர் அக் கூட்டத்தில் சமூகச் சீர்திருத்த சம்பந்தமான பிரச்னைகளை மட்டும் ஆராய்வது எனத் தீர்மானித்திருந்தார். சென்னை மகாஜன சபை, பம்பாய் மாகாணச் சங்கம் போன்ற மாகாண ஸ்தாபனங்கள் அரசியல் விஷயங்களைப்பற்றி விவாதித்து முடிவு கட்டவேண்டும் என்பது அவர் கருத்து. இம் மகா நாட்டைக் கூட்டு முன் அவர் அப்பொழுது இந்தியாவில் ராஜப்பிரதிநிதியாக இருந்த டப்ரின் பிரபுவை அணுகினர். அவரிடம் தான் கூட்ட விருக்கும் மகா நாட்டைப்பற்றித் தெரியப்படுத்தி, அதிகார வர்க்கமும், பொது ஜனங்களும் கலந்து சமூக விஷயங்களைப்பற்றி ஆலோசனை செய்வது மிகுந்த பயனளிக்குமாதலால் மாகாணகவர்னரைக் கூட்டத்துக்குத் தலைமை வகிக்கச் சொல்லும்படி கேட்டுக் கொண்டார். நாட்டினருக்கு உள்ள குறைகளையும், அவர்களது உண்மையான அபிப்பிராயங்களையும் சர்க்கார் அறிய விரும்பினால், அதிகாரிகள் கூட்டத்தில் தலைமை வகிப்பது அனுசிதமென டப்ரின் பிரபு எடுத்துக் கூறி, மகாநாட்டை தேசத்தலைவர் ஒருவரைக்கொண்டே நடத்திவைப்பது மேல்

என அபிப்பிராயப்பட்டார். ஹியூம் துரைக்கு அந்தரங்கமான நண்பர்களும் இதுவே சரியெனக் கூறினதால், மகாநாட்டை அவ்விதமே நடத்த ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஆகவே உண்மையில் காங்கிரஸ் நடைமுறையை முதன் முதலாக நிர்ணயித்தவர் இந்திய ராஜப்பிரதிநிதி ஒருவர் தாம். டப்ரின் பிரபு காங்கிரஸ் மகாநாடு விஷயமாகச் சிரத்தை காட்டியது மட்டும் வெகு நாள் வரை வெளிப் படுத்தப்படவில்லை.

ஹியூம் துரை மகாநாட்டிற்கு ராஜப்பிரதிநிதியின் ஆசீர்வாதத்தைப் பெற்றதும் சீமைக்குச் சென்றார். அங்கு ரிப்பன் டல்ஹௌஸி பிரபுக்களையும், இன்னும் இந்தியாவில் அதிகாரிகளான பல பிரமுகர்களையும் கலந்துகொண்டார். இங்கிலாந்தில் பார்லிமெண்டு மகா சபைக்கு அபேக்ஷகர்களாக நிற்பவர்களிடமிருந்து, இந்தியா சம்பந்தமான விஷயத்தில் அவர்கள் சிரத்தை காட்டுவதாக மட்டுமாவது வாக்குறுதி பெறத் தகுந்த ஏற்பாடுகளைச் செய்து பிற்காலத்திய இந்தியப் பார்லிமெண்டரி கமிட்டிக்கு அஸ்திவாரம் காட்டினார். ஆங்கில தினசரிகளிலும், பொறுப்பு வாய்ந்த பத்திரிகைகளிலும் இந்திய சமாச்சாரங்களை அவ்வப்போது பிரசுரம் செய்யவும் தகுந்த இடங்களில் சொல்லி வைத்தார். இந்தியாவின் பொருட்டு இவர் பட்ட சிரமத்துக்கு இந்தியர்கள் இவரைத் தனி முறையில் கோயில்களில் வைத்து வழிபடாவிடில் தங்கள் நன்றியறிதலைப் பூரணமாக வெளிப்படுத்தல் சாத்தியமாகாது!

மகாநாட்டைப் பற்றிய அறிக்கையில், “இந்திய தேசிய மகாநாடு ஒன்று பூனா நகரத்தில் 1885-ம் வருஷம் டிஸம்பர் ௴ 25—31 தேதிகளில் நடைபெறும். இதில் பிரதம மாகாணங்களினின்றும் பல தேசத்தலைவர்களும் வந்து கலந்துகொள்வர். நாட்டின் அபிவிருத்திக்காக உழைக்கும் தேச பக்தர்களை ஒன்று சேர்க்கவும், அடுத்த ஆண்டில் எழக்கூடிய ராஜ்யப் பிரச்னைகளைப்பற்றி ஆலோசனை செய்யவும் இம் மகாநாடு கூட்டப்படுகிறது. இம் மகாநாடு நாளடைவில் விருத்தியாகி சுதேசிப் பார்லிமெண்டாக விளங்கி, இந்தியர்கள் சுய ஆட்சிக்கு அருகரல்லர் என்ற அபவாதத்தை விரட்டியடிக்கும் என்பது நமது நம்பிக்கை” என்று கூறப்பட்டிருந்தது.

## முதல் காங்கிரஸ்

கிருஸ்துமஸ் விடுமுறை நாட்கள் துவங்குமுன் பூனு நகரத்தில் காலரா நோய் கண்டதால், மகாநாட்டைப் பம்பாயில் கூட்டுவதெனத் தீர்மானிக்கப்பட்டது. எனவே அகில இந்திய தேசிய காங்கிரஸ் மகா சபையின் முதல் கூட்டம் 1885-ம் வருஷம், டிஸம்பர் மீ 28-ம் தேதியன்று பம்பாயில் கோகுல்தாஸ் தேஜ்பால் சம்ஸ்கிருதக் கல்லூரி ஹாலில் நடைபெற்றது. அம் மகோற்சவ தினத்தன்று கூட்டத்தில் கலந்துகொண்ட புண்ணியசாலிகள் தங்கள் தினசரி வாழ்க்கையிலும் நிகரற்ற அதிருஷ்டம் படைத்தவர்களாயிருந்தனர். அங்கு கூடின பிரமுகர்களுள் புரொபஸர் கே. சுந்தரராமன் ஒருவர்தாம் நம்முள் இன்றும் வசிக்க நாம் பாக்கியம் பெற்றிருக்கிறோம். நாட்டிலுள்ள எல்லாத் தலைவர்களும், பத்திரிகாசிரியர்களும் அன்று அங்கு குழுமி நின்றனர். தாதாபாய் நௌரோஜி, மகாதேவ கோவிந்த ரானடே, ரகுநாத பந்தர்கர், பிரோஸிஷா மேத்தா, காசிநாத் திரிம்பக் திலங்கு, டபிள்யூ ஸி. பானர்ஜி, நரேந்திரநாத சென், தின்ஷா எடுல்ஜி வாச்சா, என்.ஜி. சந்தவர்க்கர், பி. ரங்கய்ய நாயுடு, எஸ். சுப்பிரமணிய அய்யர், ஜி. சுப்பிரமணிய அய்யர், எம். வீரராகவாச்சாரியார். பி. கேசவ பிள்ளை, புரொபஸர் கே. சுந்தரராமன், திவான் பகதூர் ரகுநாத ராவ் ஆகிய தேசத்தலைவர்கள் எல்லோரும் விஜயம் செய்து அவ்வரும்பெரும் காட்சியை அலங்கரித்தனர். சரியாகப் பன்னிரெண்டு மணி அடிக்கவும், ஹ்யூம் துரை எழுந்து நின்று தன் பொன்மொழிகளால் இந்த மகோன்னத இயக்கத்தின் முதல் கூட்டத்தை ஆரம்பித்து வைத்தார். அன்றுகாலை அந்த மகானால் எழுப்பப்பட்ட நாதம், சங்கத்தினின்றும் எழுந்த தொனியே போல இன்றும் பெருமுழக்கமாகப் பெருகிக்கொண்டே வருகிறது! ஹ்யூம் துரை, டபிள்யூ. ஸி. பானர்ஜியைக் கூட்டத்துக்குத் தலைவராகப் பிரரேபித்தார். எஸ். சுப்பிரமண்ய அய்யர் இதை ஆமோதித்தார். திலங்கும் இதனை ஆதரித்துப் பேசினார். அந்த சுப முகூர்த்தத்தில் பாக்கியவானான பானர்ஜி எழுந்து, தனக்குப் பின்னால் வரும் உத்தம தேச பக்தர்கள் தேசத்தாரின் பேரன்புக்குப் பாத்திரமாவதற்கு இதே அடையாளமெனச் சுட்டிக் காண்பிப்பவர்போல காங்கிரஸ் மகாசபை அக்கிராசனராக ஆசனத்தில் அமர்ந்

தார். உடனே மகாசபை கூடியிருக்கும் நிமித்தங்களை அவர் சுருங்கக் கூறினார். தேசத்தலைவர்களை ஓரிடத்தில் ஒன்று கூட்டி, அவர்களை ஒருவர்க்கொருவர் அந்நியோந்நிய சிநேகம் செய்துவைக்கவும், நாட்டைப் பிளக்கும் ஜாதி மத பேதங்களை யகற்றவும், தேசத்து மக்கள் யாவரும் ஒரு தாய் வயிற்றில் உதித்தோர் என்ற உணர்ச்சி எங்கும் நிலைவும், சமூகப் பிரச்னைகளை வாதித்து முடிவு கட்டவும், அடுத்த ஆண்டில் தேச முன்னேற்றத்திற்காகச் செய்ய வேண்டியது யாது எனத் தீர்மானிக்கவும் இம் மகாநாடு கூட்டப்பட்டதென அவர் தெரிவித்தார். இம் மகாநாட்டில் ஒன்பது தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. முதல் தீர்மானத்தில் இந்திய ராஜீய நிர்வாக முறையை நன்கு பரிசீலனை செய்து பரிகாரங்கள் தேட ஒரு விசாரணைக் கமிஷன் நியமிக்கவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்பட்டது. சீமையில் இருந்தவாறே இந்திய வியவகாரங்களை மேற்பார்வை செய்துவரும் இந்தியாக் கௌன்ஸிலை ஒழிக்கவேண்டுமென அடுத்த தீர்மானம் முறையிட்டது. ஜனப் பிரதிநிதித்துவ மற்ற அப்பொழுதைய சட்ட சபைகளின் குறைபாடுகளை எடுத்துக் காட்டி, சபை யங்கத்தினர்களுக்கு கேள்வி உரிமைகள் வழங்க வேண்டுமென்றும், பெருமிதமான அங்கத்தினர்கள் கூறும் குறைகளைப்பற்றிச் சர்க்கார் விசாரணை புரிய வேண்டும் என்றும் கேட்டுக்கொள்ளப்பட்டது. நான்காவது, ஐந்தாவது தீர்மானங்களில் ராணுவச் செலவைப் பற்றிய அதிருப்தி வெளியிடப்பட்டது. வட பர்மாவை ஆங்கிலேயர்கள் சுவீகரித்து அதை இந்தியாவுடன் இணைப்பதை மகாநாடு எதிர்ப்பதாக அடுத்தபடியான தீர்மானம். எட்டாவது தீர்மானத்தில் அம் மகாநாட்டின் தீர்மானங்களை நாட்டிலுள்ள பல ராஜீய ஸ்தாபனங்களுக்கும் நகலனுப்பி, அவர்கள் அபிப்பிராயத்தை வரவேற்கவேண்டுமெனக் கண்டிருந்தது. கடைசியாக அடுத்த மகாநாட்டை, அடுத்த டிஸம்பர் 28-ம் தேதியன்று கல்கத்தாவில் கூட்டுவதாகத் தீர்மானிக்கப்பட்டது.

## காங்கிரஸ் வளர்ச்சி

மலைமீது குதிக்கும் சிற்றருவியே போல, காங்கிரஸ் மகாசபை உதித்தநாளில் அதன் பிறப்பு வெகு சிறியதாகத்

தோற்றினும், நாளடைவில் சிற்றருவியுடன் பல அருவிகள் கூடிக் கலந்து பிரம்மாண்டமான நதியாவதுபோல, மகா சபை நாளுக்குநாள் வலுத்து, இன்று முப்பத்து முக்கோடி மக்களின் பேராதரவையும் அந்தரங்க அன்பையும்கொண்டு நாட்டில் முதன்மையான தேசீய ஸ்தாபனமாக விளங்குகின்றது. நாட்டில் தோன்றிய பல்வேறு இயக்கங்களின் பொறுப்பையும் காங்கிரஸ் மகா சபை சிறிது சிறிதாக ஏற்கத் தொடங்கியதும் அவ்வியக்கங்களும் காங்கிரஸோடு இணங்கி ஐக்கிய மாயின. நாளொருமேனியாக வளர்ந்து மகாசபை வயது வந்த பருவக் காளைபோலாகி, தன் வலிமையுணர்ந்து தேசமக்களின் குறைகளைச் சர்க்காருக்கு இறைஞ்சிக் கூறி விண்ணப்பங்கள் செய்துகொள்வதோடு மட்டும் நிற்காமல், அக் குறைகளுக்கான பரிகாரங்களைத் தேடவும் மேற்கொண்ட காரியங்களைச் சாதிக்கவும் முயன்றது. இத்துடன்கூட மக்களுக்கான நற்போதனைகளை எடுத்துக் கூறி, அவர்களிடையே தீவிரப் பிரசாரம் செய்து வேலைத் திட்டங்களையும் நிர்மாணிக்கப் புகுந்தது. ராஜீய உலகில், தேச மக்களின் விருப்பத்தை காங்கிரஸ் மகா சபை அன்றுமுதல் இன்றுவரை உண்மையாகப் பிரதி பிம்பித்திருக்கிறது. கீழோர், மேலோர், முதலாளி, தொழிலாளி, ஆண், பெண் என்ற வித்தியாசங்களில்லாமல் நாட்டு மக்கள் எல்லோரையும் தன் பராமரிப்புக்குள் கொண்டது காங்கிரஸ் மகாசபை. இதைத்தான் மகாத்மா காந்தி இரண்டாவது வட்ட மேஜை மகாநாட்டில், தன் நயம் பொருந்திய நடையில் வெகு அழகாகவும், கேட்போர் மனதில் தைக்கும்படியாகவும் கீழ்வருமாறு எடுத்துக் கூறினர்:—

"நான் இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபையின் ஆணையைச் சிரமேற்கொண்ட ஒரு தாழ்மையான பிரதிநிதி என்ற ஹோதாவில் இப்பொழுது இங்கு வந்திருக்கிறேன். அந்தக் காங்கிரஸ் மகாசபை எப்படி உண்டாயிற்று, அதன் லக்ஷியங்கள் யாவை என உங்களுக்கு இப்பொழுது நான் ஞாபகப்படுத்துவேனாகில், நீங்கள் நான் வகித்திருக்கும் பொறுப்பு எத்தனை சிரமமானது என்றறிந்து என்பால் கருணை கூருவீர்கள் என்பது திண்ணம். ஆதிகாலம் தொட்டுள்ள இந்தியாவின் முதன்மையான ராஜீய ஸ்தாபனம் என்றால் அது காங்கிரஸ் மகாசபையைக் குறிக்கும். சென்ற ஐம்பது வருட காலங்களாக அதன் ஆலோசனைக் கூட்டங்கள் வருடம்தோறும் இடையூறின்றி நடைபெற்று வந்திருக்கின்

றன. காங்கிரஸ் மகாசபையின் லக்ஷணம் அதன் தேசியமே. இந்த மகாசபை ஒரு சாராரின் நன்மையை மட்டும் ஒரு போதும் கோரினதல்ல. இந்த இயக்கம் குறிப்பிட்ட ஒரு சாதி, மதம் அல்லது வகுப்பினரின் நன்மையைமட்டும் கருதினதல்ல. இந்த ஸ்தாபனம் முதன் முதலாக ஓர் ஆங்கிலேயரால்தான் ஏற்படுத்தப்பட்டதென உங்களிடம் கூறுகையில் நான் அளவிலா ஆனந்தமடைகிறேன். காங்கிரஸ் மகாசபைக்கு ஆலன் அக்டேவியன் ஹ்யூம் என்ற ஆங்கிலேயர் தகப்பனாக விளங்கினார். அதன் சிறு பருவத்தில் தாதாபாய் நௌரோஜி, பிரோஷிஷா மேத்தா என்ற பார்ஸிகள் அதைப் பராமரித்த செவிலித் தாய்களாவர். ஆரம்பகாலமுதலாக காங்கிரஸ் மகாசபையில் எல்லா மதஸ்தர்களும் ஆவலுடன் விரைந்துவந்து பங்கெடுத்துக்கொண்டனர். காலஞ்சென்ற பத்ருதீன் தியாப்ஜி தன் வாழ்நாள் முழுதும் காங்கிரஸ் சேவையிலேயே ஈடுபட்டிருந்தார். முகம்மதியர்களும், பார்ஸிகளில் அநேகரும் மகோன்னதமான காங்கிரஸ் அக்கிராசனர் பதவியை ஏற்றிருக்கின்றனர். உத்தம இந்தியர்களில் ஒருவரான காளிசரண பானர்ஜி என்பாரும் காங்கிரஸ் இயக்கத்தில் ஐக்கியமான ஒரு கிருஸ்தவ மதத்தினர். இப்பொழுது இக்கூட்டத்தில் கலந்து கொள்ள முடியாமல் போன மிஸ்டர் கெ. டி. பால் நானறிந்தமட்டில் காங்கிரஸ் இயக்கத்தில் நேர்முகமாகச் சேர்ந்து உழைக்காமற்போனாலும்,ராஜீய விஷயங்கள் அனைத்திலும் அவர் காங்கிரஸ்காரர்களுக்குள்ளதுபோன்ற உணர்ச்சி ததும்பி இருப்பவர்.

இன்று நாம் இங்குகாணக்கொடுத்துவைக்காத காலஞ்சென்ற மௌலானா முகம்மதலி, காங்கிரஸ் மகாசபையில் அக்கிராசனர் பதவியை வகித்திருந்தார். தற்சமயம் நான்கு முகம்மதியர்கள் பதினைந்துபேரடங்கிய காங்கிரஸ் காரியக் கமிட்டியில் வீற்றிருக்கின்றனர். எங்கள் மகாசபைக்கு ஸ்திரீகள் அக்கிராஸனம் வகித்ததுண்டு. டாக்டர் பெஸண்டு அம்மை முதன் முதலாக இப்பதவி வகித்தவர். பின்னர் ஸ்ரீமதி சரோஜினி நாயுடு. இன்றுகூட ஸ்ரீமதி நாயுடு காங்கிரஸ் காரியக் கமிட்டியில் ஒரு அங்கத்தினர். எனவே காங்கிரஸ் மகாச்சபையில் ஜாதி மத பேதங்களும் வேறு ஒரு விதமான வித்தியாசங்களும் தலைகாட்டாமல், அது ஒரு உண்மைத் தேசிய ஸ்தாபனமாக விளங்கி வருகிறது.

காங்கிரஸ் மகாசபை, ஆரம்பித்தகால முதலாக, தீண்டாதாரின் துயர்களை அறிந்து, அவற்றை நிவர்த்திக்க வழி தேடி வந்திருக்கிறது. வெகு காலம் வரை மகாசபை நடந்தேறியபோதெல்லாம் அத்துடன் சமூகச் சீர்திருத்த மகாநாடும் உடன் நடத்திவரப்பட்டது. இந்த விஷயத்தில் மகாதேவ கோவிந்த ரானடே தன் வாழ்நாள் முழுதையும் அர்ப்பணம் செய்துவந்தார். அவர் முன்னின்று நடத்தி வைத்த சமூகச் சீர்திருத்த மகாநாடுகளில் எல்லாம் தீண்டாதார் பிரச்னையே முக்கியமாக வாதத்துக் கெடுத்துக் கொள்ளப்பட்டது. கி. பி. 1920-ம் ஆண்டில் தீண்டாமைப் பிரச்னையை மகாசபை தீவிரமாக முன்னுக்குக் கொண்டு வந்து: இக்கொடிய பழக்கத்தை ஒழிக்க பகிரங்கமாகப் பல நடவடிக்கைகளைக் கையாண்டது. சுயராஜ்ய மடைவதற்கு முன்பாக ஹிந்து முஸ்லீம்களினிடையே இணைபிரியா ஒற்றுமையை ஏற்படுத்த வேண்டுமெனக் காங்கிரஸ் பல தடவைகளிலும் வற்புறுத்திக் கூறி வருவது போலவே, இந்தியர் உண்மையில் சுயாட்சி பெற விரும்புவதற்கு முன்னர், நாட்டினின்றும் அவர்கள் தீண்டாமைப் பேயை ஒழிக்கவேண்டு மென்றும் அது தீர்மானித்திருக்கிறது. இன்று வரை மகாசபை அதற்கான முயற்சிகளைச் செய்து வருகிறது. இதனால் காங்கிரஸ் மகாசபை ஒவ்வொரு அம்சத்திலும் உண்மையான ஓர் தேசீய ஸ்தாபனம் என்று தெளிவுறத் தெரிகிறது. இங்கு வீற்றிருக்கும் சுதேச மன்னர்களின் நன்மையையும் மகாசபை கோரி, வெகு நாளாகப் பல முயற்சிகள் செய்துவந்திருக்கிறது. காச்மீரம், மைசூர் சமஸ்தானங்களின் கக்ஷியை, பழுத்த காங்கிரஸ் வாதியான தாதாபாய் நௌரோஜி எடுத்து வாதாடியதை நான் உங்களுக்குஇப்பொழுது ஞாபகமூட்டுகிறேன். இவ்விரண்டு சமஸ்தானங்களும் தற்பொதடைந்திருக்கும் உன்னத நிலைக்கு, தாதாபாய் நௌரோஜியும், மகாசபையாரும் செய்த பெரு முயற்சிகள்தாம் முக்கிய காரணங்களாக இருந்தனவென்று நான் கூறுவேன்.

இப்பொழுது சுதேச மன்னர்களின் சமஸ்தானத்திலுள் ராஜ்ய பரிபாலன விஷயங்களிலும், மன்னர்களின் சொந்தக் கிரியைகளிலும் காங்கிரஸ் மகாசபை தலையிடாமலிருப்பது அவர்கள்பால் காங்கிரஸ் கொண்ட நல்லெண்ணத்தைக் குறிக்கும். இவ்வளவு விஸ்தாரமாக நான் கூறியதிலிருந்து இங்கிருப்போருக்கு காங்கிரஸ்

மகாசபையே நாட்டின் பொதுமக்களின் உண்மைத் தேசிய ஸ்தாபனம் என்பது புலப்பட்டிருக்கும். மகாசபை தான் ஏற்படுத்திக்கொண்ட உயர்ந்த லக்ஷியங்களை நிறைவேற்ற முடியாமல் சிற்சில சமயங்களில் பிறழ நேரிட்டிருப்பதை யானறிவேன். இருந்தாலும் மகாசபை, நாளடைவில் தன் லக்ஷியங்களை விடாமல் கைப்பிடித்து மேன்மேலும் வெற்றியே அடைந்து வந்திருக்கிறது என்பதை நான் உங்களுக்கு அறியப்படுத்துகிறேன்.

சதா பசிப்பிணியால் பீடிக்கப்பட்டு, கால்நடைகளே போலத் தங்கள் துயரை வாய்விட்டுக் கூறாமல் அனுபவித்து வரும் 700,000 இந்திய கிராமங்களில் வசிக்கும் கோடிக் கணக்கான கிராமவாசிகளின் கக்ஷியை எடுத்து வாதிப்பதே தொழிலாகக் கொண்டது காங்கிரஸ் மகாசபை. பரதக் கண்டத்தில் பிறந்த யாவர் துயரமும் மகாசபையுற்ற துயரெனக் கருதப்படுகிறது. எவ்விதமான நிலைமையிலும் காங்கிரஸ் மகாசபை இக்கோடிக்கணக்கான கிராமவாசிகளின் நன்மையைத் தேடுவதும், அவர்களுக்குற்ற இடரை நீக்குவதுமே தனது முதன்மையான லக்ஷியமாகக் கொண்டிருக்கிறது. தங்கள் பிற லக்ஷியங்களை எல்லாம் இதன் பொருட்டாகப் புறக்கணிக்க நேரிடும்படியான ஒரு நெருக்கடி ஏற்படினும், மகாசபை அதற்குச் சிறிதும் பின்வாங்காமல் முன்வரும் என்று நான் உங்களுக்கு உறுதி கூறுவேன். எனவே காங்கிரஸ் மகாசபையானது ஏழை இந்திய மக்களின் நன்மையை என்றும் கோரி நிற்கும் ஸ்தாபனம். இந்த நோக்கமே காங்கிரஸ் சபையில் நாளுக்குநாள் முன்னுக்குக் கொண்டுவரப்படுகிறது. இத்தருணத்தில், காங்கிரஸ் அசுன் கிளை ஸ்தாபனமாகிய அகில இந்திய நூல் நூற்போர் சங்கத்தின் முயற்சிகளால் இரண்டாயிரம் கிராமங்களிலுள்ள 50,000 ஸ்திரீகளுக்கு ராட்டினம், கைத்தறிகளின் மூலம் ஜீவனத்துக்கு வழி தேடி வைத்திருக்கிறது. இந்தத் தொகையில் அநேகமாய்ப் பாதிப்பேர் முகமதிய ஸ்திரீகளாவர். இவருள் ஆயிரக்கணக்கானவர்கள் தீண்டாச் சாதியிலுதித்தவர். இவ்விதமாகக் காங்கிரஸ் மகாசபை காரியத்துறையி லிறங்கி, கிராமவாசிகளுக்கு நன்மைகள் புரிந்து வருகின்றது. இந்தியாவிலுள்ள 700,000 கிராமங்களும் நாளடைவில் காங்கிரஸ் முயற்சிகளாலான பலனைப் பெறும். மனித யத்தனத்துக்கு இது அசாத்தியமென நீங்கள் நினைக்கலாம். எனினும் கூடிய சீக்கிரத்தி

லேயே மகாசபையின் ஊழியர்கள் நாடெங்கும், கிராமந் தோறுஞ் சென்று ராட்டினத்தின் மகிமையை எடுத்துரைத்து கிராமத்தார் வாழ்க்கையை மேம்படுத்த முயலுவதை நீங்கள் பார்ப்பீர்கள்.''

தேசத்தினரைத் தங்கள் வாழ்க்கை லக்ஷியத்தை உணரச் செய்த பெருமை காங்கிரஸுக்கே உரித்தானது. இவ்வியக்கம் இந்தியருக்குத் தங்கள் தாய் நாட்டின்மீது அன்பையும், தாய் பாஷைகளைக் கற்க அவாவையும் போதித்தது. சுதேசிப் பொருள்களை உபயோகித்து நாட்டின் புராதனக் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்யுமாறு கற்பித்தது. ஒன்றுபட்டால் உண்டு வாழ்வு, இல்லையேல் இல்லை என்ற அருந் தத்துவத்தை நாள்தோறும் உபதேசிக்கிறது. இந்தியர்களுக்குத் தன்னம்பிக்கையையும் சுயமரியாதை உணர்ச்சியையும் புகட்டியது இந்த தேசீய ஸ்தாபனமே. சென்ற ஐம்பது வருட காலமாக மேற்கண்ட லக்ஷியங்களையே கருத்தில் கொண்ட காங்கிரஸ் மகாசபை, அவற்றை எவ்வளவு தூரம் நிறைவேற்றி வைக்க சாத்தியமாக இருந்ததென இனி ஆராய்வோம்.

## அத்தியாயம் 2

### இந்தியா கௌன்ஸிலை ஒழிக்க வற்புறுத்து

காங்கிரஸ் மகாசபையின் முதல் கூட்டத்தில் இந்திய வியவகாரங்களை மேற்பார்வையிடச் சீமையில் அமைக்கப் பட்டிருக்கும் இந்தியா மந்திரியின் அமைச்சர் சபை (India Council) யைக் கலைக்கவேண்டுமெனத் தீர்மானம் நிறை வேற்றப்பட்டது. இந்த தீர்மானம் பின்னர் இரண்டு மகா நாடுகளிலும் ஒப்புக் கொள்ளப்பட்டது. இந்த சபைக்குப் பதிலாக காமன்ஸ் சபை அங்கத்தினர்களடங்கிய ஒரு சிறு கமிட்டியாரிடம் இந்த அலுவலை ஒப்புவிக்கலாமெனக் கருதினார்கள். இதனால் செலவு வெகுவாகக் குறைந்துவிடும்; பொறுப்பு வாய்ந்த காமன்ஸ் சபை அங்கத்தினர்கள் பழி பாவத்துக் கஞ்சி நியாயமாக நடக்கலாம் என்று இயர்ட்லி நார்ட்டன் துரை அபிப்பிராயப்பட்டார். கராச்சியில் நடந்த மகா

நாட்டில் (1913) "இந்தியா கௌன்ஸிலை ஒழித்துவிட வேண்டும். அதற்கு மாறாக வமைக்கும் சபையில் பெரும்பாலான அங்கத்தினர் தேர்ந்தெடுக்கப்பட்டவரா யிருத்தல் வேண்டும். நபர்களின் தொகை ஒன்பதுக்குக் குறையக் கூடாது. அதற்கு இந்திய சட்ட சபைகளினின்றும் தேர்ந்தெடுக்கப்படுபவர்களில் மூன்றிலொரு பங்கு இந்தியர்களாக இருத்தல் வேண்டும். அச்சபை இந்தியா மந்திரிக்கு உதவியாக வாசக சேவை புரியலாமே ஒழிய நிர்வாகப் பொறுப்பை ஏற்க விடலாகாது" என ஓர் புதுத் திட்டமும் வரையப்பட்டது. பின்னர் கூடிய மகாநாடுகளில் இத்தீர்மானத்தை மென்மேலும் வற்புறுத்தாததற்குக் காரணம், "இச்சபையைச் சர்க்கார் சீக்கிரம் ஒழிப்பது இயலாவிடினும் திருத்தியமைப்பதாவது இயலாதா?" என்ற எண்ணம்தான். 1917-ம் வருடச் சீர்திருத்த அறிக்கையில் இந்தக் கௌன்ஸிலைக் கலைத்துவிட வேண்டுமென சிபார்சு செய்யப்பட்டிருக்கிறது. எனவே அதிகார வர்க்கத்தினருக்கும் இதனாலான பயன் என்னவென்பது தெரியாமலில்லை! காங்கிரஸ் சபையின் ஆதி மகாநாட்டில் சட்ட சபைகளில் இந்தியருக்கு அதிக உரிமைகள் அளிக்கவேண்டுமெனப் பிரார்த்திக்கப்பட்டது. காங்கிரஸ் மகாசபை, சுயாட்சிக்கு இந்தியர் பயிற்சி பெறும் மாகாண, மத்திய சட்ட சபைகளில் அதிகாரிகளின் எதேச்சாதிகாரம் தாண்டவமாடாமல், பார்லிமெண்டு மகாசபையினர் தகுந்த தடைகள் ஏற்படுத்திவைக்கவேண்டுமெனவும்கோரிக்கை வெளியிட்டது. இந்த நாளிலும் இந்திய சட்ட சபையில் உப்புவரி சம்பந்தமாகவும், மற்றும் பல அரசியல் விஷயங்களைப்பற்றியும் ஜனப்பிரதிநிதிகள் ஏகோபித்து நிறைவேற்றிய தீர்மானங்கள் ராஜப்பிரதிநிதியின் எதேச்சாதிகாரத்தால் நிராகரிக்கப்படவில்லையா? இம்மாதிரி நிலைமையைத் தடுக்கவேண்டுமென ஆதிநாள் முதல் காங்கிரஸ் மகாசபை மன்றாடிக் கொண்டு வருகிறது. நிலைமையோ நாளுக்குநாள் கேவலமடைகிறது. இரண்டாவது காங்கிரஸில் சட்ட சபைகளில் பாதி அங்கத்தினர்களாவது, நேர்முகமாகவோ மறைமுகமாகவோ தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளா யிருத்தல் வேண்டுமெனத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. ஸ்தல அதிகாரிகளால் நிராகரிக்கப்பட்ட நியாயமான வேண்டுகோள்களை இந்திய சர்க்காருக்கும், இந்தியா மந்திரிக்கும் விண்ணப்பங்கள் மூலம் அனுப்பி, பரிகாரம் தேடிக்

கொள்ள அனுமதி யளிக்கவேண்டும் என்று ஒரு தீர்மானம் இம் மகாநாட்டிலும் தொடர்ந்து வந்த இரு மகாநாடுகளி லும் நிறைவேற்றி வைக்கப்பட்டது. 1890-ம் ஆண்டில் சார்லஸ்பிராட்லா சீமைப்பார்லிமெண்டில் பிரேரணை செய்த இந்தியா சட்டசபைமசோதாவை அவ்வருட மகாநாடு இந்தி யர் விரும்பும் ஒரு சீர்திருத்தமென ஆதரித்தது. அடுத்த மகாநாட்டில், தங்கள் கிளர்ச்சிகளால் யாதொரு பயனும் காணுதவர்கள், 'ஜனங்களின் உண்மைப் பிரதிநிதிகளில்லாத சட்ட சபைகளின் உதவியைக்கொண்டு தேசத்தை ஆண்டு வருவது அழகல்ல, தேசத்தாரும் துரைத்தனத்தில் பங் கெடுத்துக் கொள்ளும்படி செய்தல்தான் நீதி' எனக் குறிப் பிட்டனர். லார்டு கிராஸ் கொணர்ந்த இந்திய சட்டசபைச் சீர்திருத்த மசோதா 1892-ம் ஆண்டில் நிறைவேறியதும், காங்கிரஸ் மகாசபை தன் கவனத்தை மாகாண துரைத் தன முறைகளிலும், இந்திய சர்க்கார் விதிகளிலுள்ள குறைகளிலும் செலுத்தியது. இதனல், நாளடைவில் சிறிது நன்மையும் ஏற்பட்டது.

1904-ம் வருடத்தில் அரசியல் சீர்திருத்தப் பிரச்னை மீண்டும் மகாசபையில் எழுப்பப்பெற்று, ஜனநாயக ஆட்சி முறையை விஸ்தரிக்கவும், இந்தியர்களுக்கு காமன்ஸ் சபையில் பிரதிநிதித்துவம் வழங்கவும், தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அடுத்துவந்த இரு கூட்டங்களி லும், இந்தியாவிற்கு மற்ற குடியேற்ற நாடுகளைப் போலவே சுய ஆட்சி அந்தஸ்து அளிக்கவேண்டுமெனக் கோரப்பட்டது. 1909-ம் வருடத்தில் மிண்டோ-மார்லி சீர்திருத்தச் சட்டம் பிறப்பிக்கப்பட்டு அது பொது ஜனங்களிடையே மிகுந்த ஏமாற்றத்தை விளைவித்தது. மார்லி பிரபுவே, அந்தச் சீர்திருத்தம் நாளடைவில் இந்தியாவிற்குச் சுயாட்சிப் பொறுப்பு வாய்ந்த பார்லி மெண்டு துரைத்தன முறையை ஏற்படுத்துவதை எதிர் பார்த்து அளிக்கப்படவில்லை எனக் கூறினர். அவ்வருடத் தில் நடந்தேறிய காங்கிரஸ் மகாசபை, புதிய சீர்திருத்தத்தி லுள்ள பல பிற்போக்கான அம்சங்களைக் கண்டித்துத் தீர்மானங்கள் நிறைவேற்றியது. இந்தச் சட்டத்தில் ஓர் விபரீத முறையில் மதத்தை ஒட்டி, தொகுதிகள், வாக் காளர்களின் யோக்கியதாம்சங்கள் எல்லாம் நிர்ணயிக்கப் பட்டன. படித்தவர்களைச் சர்க்கார் நம்பவில்லை என்பது சட்டத்தின் போக்கினின்றும் வெளியாயிற்று. சட்ட

சபை அமைப்பிலிருந்து அதில் கலந்துகொள்வோருக்கு உண்மையில் யாதொரு அதிகாரமும் கிடைக்கவொட்டாமல் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தது தெளிவாகப் புலப்பட்டது. முகம்மதியர்களுக்குச் சிறுபான்மையோரென மற்ற மாகாணங்களிலெல்லாம் அனுகூலங்கள் செய்யப்பட்டிருக்கையில், பாஞ்சாலத்தில் சிறுபான்மையோரான ஹிந்துக்கள் உரிமைகளைக் காக்கச் சர்க்கார் முன்வரவில்லை. இவற்றை யெல்லாம் எடுத்துரைத்து 1909-ம் ஆண்டில் கூடிய காங்கிரஸ் மகாசபை தனக்குப் புதிய சீர்திருத்தத்தினுள்ள அதிருப்தியை வெளியிட்டது. 1912-வது ஆண்டில் கூட மேற்கூறப்பட்ட குறைகளுக்குச் சர்க்கார் பரிகாரங்கள் ஒன்றும் தேடாமலிருப்பதைக் கண்டித்து அவ்வருடத்திய காங்கிரஸ் சபை தீர்மானம் நிறைவேற்றியது. இன்னொரு தீர்மானத்தில் வாக்காளர் தொகையை நாடெங்கும் அதிகரிக்க வேண்டுமெனவும், கேள்விகளுக்குப் பின்னல் உபகேள்விகள் போட அனுமதி தரவேண்டு மெனவும் கேட்கப்பட்டது.

## ஒற்றுமையான திட்டம்

பம்பாயில் 1915-வது வருடத்திய காங்கிரஸ் கூட்டத்தில் பின்னர் இந்தியாவின் சட்ட மெம்பராக அமர்ந்த முதல் இந்தியரான எஸ். பி. ஸின்ஹா அக்கிராசனம் வகித்தார். இந்த மகாநாட்டில் அகில இந்திய முஸ்லீம் சங்கத்தாருடன் காங்கிரஸ் மகாசபை கலந்தாலோசித்து நாட்டிற்கேற்ற ஒரு ஒற்றுமையான திட்டத்தைத் தயார் செய்ய முடிவு செய்யப்பட்டது. இதன் விளைவாகத் தான் லக்ஷ்மணபுரியில் காங்கிரஸ் மகாநாடு (1916) அங்கீகரித்த அகில இந்திய ஹிந்து-முஸ்லீம் மகாஜனங்களின் கோரிக்கைகளடங்கிய திட்டம் நிர்ணயிக்கப்பட்டது. இத்திட்டத்தை ஆதரித்த காங்கிரஸ் மகாசபை, இந்தியாவிற்குக் கூடிய சீக்கிரத்தில் சுயாட்சி யளிக்கவேண்டி அதற்கான நடவடிக்கைகளை எடுத்துக் கொள்ள வேண்டுமென்றும், இந்தியாவிற்கு இறுதியில் குடியேற்ற நாட்டந்தஸ்து அளிக்கவேண்டுமென்றும் வேண்டுகோள் விடுத்தது. முஸ்லீம்களின் உரிமைகள் ஒவ்வொரு மாகாணத்திலும் பாதுகாக்கப்பட வேண்டிய முறைகள் இத் திட்டத்தில் கண்டிருந்தன. இந்த அம்சம் மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தத்தில் அப்படியே பெயர்த் தெழுதப்பட்டது.

என்பது குறிப்பிடத் தக்கது. காங்கிரஸ் மகா சபை திட்டத்தைப் பிரரேபித்ததோடு நில்லாமல் தேச மக்களுக்கு இதன் கருத்தைத் தெரியப்படுத்தவும், இதற்காகத் தீவிரப் பிரசாரம் செய்யவும் ஒரு கமிட்டி ஏற்படுத்தியது. காங்கிரஸ் பொதுக் காரியதரிசிகள், இந்திய துரைத்தனச் சட்டங்களில் என்னென்ன மாறுதல்கள் செய்ய வேண்டுமென ஆராய, தற்பொழுது சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜாக விளங்கும் எஸ். வரதாச்சாரியாரை நியமித்தனர்.

1917-ம் வருடம் ஆகஸ்டு மாதம் 20-ம் தேதியன்று பிரிட்டிஷ் சர்க்கார் இந்திய துரைத்தனத்தை நாளடைவில் முற்றிலும் தேச ஜனங்களுக்கே பொறுப்பு வாய்ந்ததாகச் செய்வதே தங்கள் நோக்கமெனக் கூற, காங்கிரஸ் மகாசபை மிகவும் களிப்படைந்தது. இவ்வளவு காலவரைக்குள் இந்தியாவிற்கு அவ்வாட்சியளிக்கப்படும் எனக் குறிப்பிட வேண்டுமென்றும், லக்ஷ்மணபுரியில் காங்கிரஸ் அங்கீகரித்த திட்டத்தை உடனே இந்தியதுரைத்தனத்தில் அமுலுக்குக்கொண்டு வரும்படியாகவும் மகாசபை கேட்டது. இதிலிருந்து மகா சபை எப்பொழுதும், முடிவில் இந்தியாவிற்கு பொறுப்பு வாய்ந்த சுயாட்சி அளிக்கப்படும் என்ற நம்பிக்கை கொடுத்தால், அது படிப்படியாகவேனும் நிறைவேற எவ்வித அரை குறைத் திட்டத்தையும் ஏற்கத் தயாராக இருந்ததென்று தெரிகிறது.

## மாண்டேகு—செம்ஸ்போர்டு அறிக்கை

1918-ம் ௵ ஜூன் மாதத்தில் வெளியிடப்பட்ட மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கையைப் பரிசீலிக்க அந்த செப்டம்பரிலேயே பம்பாயில் ஒரு பிரத்தியேகக் காங்கிரஸ் கூட்டப்பட்டது. அந்த அறிக்கை லக்ஷ்மணபுரி திட்டத்தை விட விசாலமான நோக்க முடையதாகப் பார்வை யளித்தது. மாகாண இரட்டை யாட்சியே அதன் முக்கியாம்சம். அகில இந்தியாவிற்கென அதில் இரண்டு சட்ட சபைகள் ஏற்படுததப்பட்டிருந்ததை பம்பாய் மகாநாடு கண்டித்தது. மத்திய சர்க்காரிலும் மாகாணங்களைப்போலவே துரைத்தனத்தை இரு பிரிவுகளாக்கிவிட வேண்டுமென்றும், ராஜப் பிரதிநிதி தன் எதேச்சாதிகாரத்தை, மக்களிடம் ஒப்புவிக்கப்படாத இலாக்காக்களைப் பற்றிய விஷயங்களில்

மட்டும் உபயோகிக்கவேண்டும் எனவும் சட்டம் வகுத்தால், மத்திய சர்க்காரில் இரு சட்ட சபைகள் நியமித்திருப்பதையும் ஏற்கலாமென மகாநாடு அபிப்பிராயப்பட்டது. இரட்டையாட்சிக் கொள்கை இந்த மகாநாட்டின் அங்கீகாரத்தைப் பெற்றது. எனவே மாண்டேகுவின் அறிக்கைக்கு இந்த மகாநாடு ஆதரவளித்ததெனக் கூறல் வேண்டும். இந்தக் கூட்டத்தில்தான், "நாட்டில் உள்ள எல்லாப் பிரஜைகளுக்கும் நியாயம் ஒன்றென வழங்கவேண்டும். ஒவ்வொரு பிரஜையின் சொத்து, ஸ்தேச்சை வாழ்க்கை உரிமைகளைப் பாதுகாப்பதே சர்க்கார் கடமை. எவருக்கும் வாக்குரிமை, எழுத்துரிமை, சங்க உரிமை, ஆயுதம் தரிக்கும் உரிமை இவைகள் பூர்ணமாக உண்டு. தேசப் பத்திரிகைகளுக்கு எப்பொழுதும் பூர்ண சுதந்திரம் அளிக்கப் படவேண்டும். தேக சிக்ஷை தண்டனை யளிப்பதில் நாட்டுப் பிரஜைகளுக்குள் யாதொரு வித்தியாசமும் பார்க்கக்கூடாது என்ற மூலாதார உரிமைகள் பிரஜைகள் எல்லோருக்கும் உடனே வழங்கப்படவேண்டும்" எனத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

1918-ல் டில்லியில் நடைபெற்ற காங்கிரஸ் மகாநாட்டில் பூர்ண பொறுப்பாட்சி முறையை மாகாணங்களுக்கு அளிக்கவேண்டுமென்றும், இரட்டை யாட்சி முறையை மத்திய சர்க்காரில் மட்டும் ஏற்படுத்தலாமெனவும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. வெளிநாட்டு வியவகாரங்கள், சேனை, கடற்படை விஷயங்களைச் சர்க்காரே ஏற்று நடத்த மகாசபையின் சம்மதம் அறிவிக்கப்பட்டது. இந்த மகாநாட்டிற்குச் சில நாட்களுக்குமுன் மகா யுத்தம் முடிந்து சமாதானம் ஏற்பட்டிருந்தது. உடனே மகாசபை, அமெரிக்கத் தலைவர் வில்ஸன், பிரிட்டிஷ் பிரதம மந்திரி லாயிட் ஜார்ஜ் முதலானோர் மொழிகளைக் குறிப்பிட்டு, முன்னேற்றமடைந்த நாடுகள் தங்கள் துரைத்தனத்தைத் தாங்களே நிர்வகிக்க வல்லவை என்ற கொள்கையின்படி இந்தியாவிற்கு உடனே சுயாட்சி அளிக்கவேண்டும் எனக் கோரியது. அடுத்த மகாநாடு நடைபெறுவதற்குள் இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபை பெருந்துயர்களை யனுபவிக்க நேர்ந்தது. இந்த சமயத்தில்தான் பெயர்போன ரௌலட் சட்டம் இயற்றப்பட்டது. நாட்டில் சத்தியாகிரக இயக்கம் தலையெடுத்தது. டில்லியிலும், வீரங்காமிலும், ஜாலியன் வாலா பாக்கிலும் போலீசாராலும், துருப்புக்களாலும் இந்தி

யர்களின் ரத்தம் சிந்தப்பட்டு, அநேகர் உயிரிழந்தனர். பஞ்சாப் மாகாணத்தில் நெருக்கடியான நிலைமையை உத்தேசித்து, சிவில் துரைத்தனம் போய் ராணுவச் சட்டம் அமுலுக்கு கொண்டுவரப்பட்டது. ராஜப் பிரதிநிதி சபையில் நிர்வாக அங்கத்தினராக யிருந்த சர் ஸி. சங்கரன் நாயர் துரைத்தனப் போக்கைக் கண்டு வெறுப்புற்று தம் பதவியை ராஜீநாமாக் கொடுத்தார். இவ் வருடத்தில் இந்திய அரசியல் வானம் கருமேகங்களால் மூடப்பட்டு, தேசமக்கள் மனதிலும் காரிருள் சூழ்ந்தது போலாயிற்று.

இந்திய துரைத்தனச் சேவையில், முக்கியமாகக் கலெக்டர்கள் போன்ற பதவிகளுக்கு இந்தியர்களும் நியமிக்கப்பட வேண்டுமென்பது காங்கிரஸ் மகாசபையின் நெடுநாளையக் கோரிக்கை. சட்டப் பிரகாரம் இந்தியர்களை எந்தப் பதவிகளுக்கும் நியமிக்கலாம் என்றிருந்தபோதிலும் சீமையில் போய் பரீக்ஷை கொடுத்தாலொழியக் கலெக்டர் வேலைக்கருகராகார் என்று சர்க்கார் சட்டமிழைத்த தீங்கை யகற்ற மகாசபையின் முதல் கூட்டம் ஒரு தீர்மானம் நிறை வேற்றியது. ஐந்தாவது காங்கிரஸ் கூட்டத்தில் கோபால கிருஷ்ண கோகலே மிகுந்த ஆத்திரத்துடன் “ மகாராணி யின் பிரகடனத்தில் கூறப்பட்ட உறுதிமொழிகளையும், சட்டத்தில் கண்ட பிரமாண வாக்கியங்களையும் உதாசீனப் படுத்தி நமது நாட்டினருக்கு தேசத் துரைத்தனத்தில் உயர் பதவிகளைக் கொடுக்க பிரிட்டிஷார் மறுக்கிறார்கள்! இது அவர்களுக்குக் கண்ணியமாகுமா?” என்று கேட்டார்.

1893-ம் ஆண்டில் பார்லிமெண்டு மகாசபை கலெக்டர் பரீக்ஷைகளை இந்தியாவிலும் அதே சமயத்தில் நடத்தலாமென் அனுமதி கொடுத்தது. எனினும் இந்திய சர்க்கார் புனராலோசனையை இந்தியா மந்திரி ஆதரித்து இந்த அனுமதியை உபயோகப்படுத்தாமலிருக்க உத்திரவிட்டு கலெக்டர் முதலிய முக்கியமான பதவிகளில் குறிப்பிட்ட பெரும்பான்மைத் தொகைக்கு ஆங்கிலேயர்கள்தான் நியமிக்கப்படவேண்டுமெனக் குறித்தார். இந்தியர்கள் தங்கள் பிறப்பினுல் பதவியேற்க அனுமதிக்கப்படார் என்று இப்பொழுது சட்ட பூர்வமாகக் கூறப்பட்டது. நாட்டினருக்கு இவ்விஷயமாக அளித்த வாக்குறுதிகள் நிராகரிக்கப்பட்டன. இதைக் குறித்து இந்தியர்கள் சினம் பொங்கிக் கொண்டிருக்கையிலேயே 1895-ம் ஆண்டில்

கல்வி இலாக்காவில் இந்தியர்கள் உயர்பதவிகளை அடையா வண்ணம் ஓர் அநீதிச் சட்டம் இயற்றப்பட்டது. சுதேசிகள் கல்வி இலாக்காவில் கீழ்த்தர உத்தியோகங்களுக்கு மட்டும் தான் நியமிக்கப்படுவரென்றும், உயர்தர உத்தியோகங்களுக்குச் சீமையில் ஆள் பொறுக்கியனுப்பப்படுவரென்றும் சட்டம் பிறந்தது. ஒரு இந்தியர் எவ்வளவு காலம் உழைத்தாலும் இந்த வேலைகளில் அவர் 700 ரூபாய் சம்பளத்துக்குமேல் அடைய முடியாது. ஆங்கிலேயர் ஆரம்பத்திலேயே 600 ரூபாய் சம்பளத்தில் நியமிக்கப்பட்டு, பத்து வருஷங்களிலேயே 1000 ரூபாய்க்கு மேலாக ஊதியம் பெற வழி இருந்தது. இந்த பக்ஷபாதமான சட்டம் 1897-ம் வருடம் காங்கிரஸ் மகாநாட்டில் கண்டிக்கப்பட்டு இந்திய மக்களுக்கு நியாயம் வழங்கவேண்டுமெனப் பிரார்த்திக்கப்பட்டது. இப்படியாகக் காங்கிரஸ் மகாசபை தேசத்தினருக்கு உரித்தான நியாயமான உரிமைகள் வழங்கப்படாததை எதிர்த்துப் போர்புரியத் தொடங்கியதும், சர்க்கார், மனம் கூசாமல் மேன்மேலும் அநீதியான சட்டங்களைப் பெருக்கி வந்தனர்.

## ராணுவப் பிரச்னை

ஐம்பது வருடகாலமாக எவ்வளவு மன்றாடியும் சர்க்கார் சிறிதும் செவி சாய்க்காமலிருப்பது இந்திய ராணுவச் செலவு விஷயம் ஒன்றுதான். ராணுவச் செலவை மேன்மேலும் அதிகரித்துக்கொண்டு போகக்கூடாதென முதல் காங்கிரஸ் மகாநாட்டில் குறிப்பிடப்பட்டது. அதுமுதல் ஒவ்வொரு மகாநாட்டிலும் இந்திய ராணுவப் பிரச்னை ஏதாகிலும் ஒரு விதத்தில் எழுந்துவந்தது. ராணுவத்தில் இந்தியர்களும் பதவியளிக்கப்படல் வேண்டுமென்றும், இந்தியர்களுக்கு ராணுவப்பயிற்சி யளித்து அவர்களைத் தங்கள் பொருளையும், இல்லத்தையும் காக்க வல்லமை உள்ளவர்களாக ஆக்கவேண்டுமென்றும், இதன்பொருட்டு ராணுவக் கல்லூரிகள் ஸ்தாபிக்க வேண்டுமென்றும் பல தீர்மானங்கள் பற்பல மகாநாடுகளில் நிறைவேற்றப்பட்டன. இந்திய ராணுவச் செலவை, முழுவதும் இந்தியாமீது சுமத்தலாகாது, நியாயமாகப் பார்க்கப்புகின் இங்கிலாந்து இதில் ஒரு பகுதியை ஏற்கவேண்டுமென எட்டாவது காங்கிரஸ் மகாநாடு கேட்டுக்கொண்டது. ராணுவ ஸ்தலங்களில் 'சோல்ஜர்'களின் மூலம் தொத்துநோய்கள் பரவாமல் தடுக்க

சர்க்கார் தகுந்த நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமென அடுத்த கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது. பிரிட்டிஷ் சர்க்கார் வடமேற்கு எல்லையில் வலுவில் யுத்தம் தொடுத்தபொழுது செலவை இந்தியாவின்மீது சுமத்தக் கூடாதென பதின்மூன்றாவது மகாநாட்டில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அடிக்கடி இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் துருப்புக்களை சர்க்கார் வெளிநாடுகளுக்கு அழைத்துச் செல்வது வழக்கமாக யிருப்பதால், அத்துருப்புக்கள் பொருட்டு இந்தியா செலவிடும் பணத்தில் ஒரு சிறு பகுதியையாவது பிரிட்டிஷ் சர்க்கார் ஏற்கவேண்டுமென காங்கிரஸ் கூட்டம் (1890) வற்புறுத்தியது. 1894-ல் ஏற்படுத்தப்பட்ட வெல்பி கமிஷன் இந்திய ராணுவச் செலவில் சிறிது பாகத்தை பிரிட்டிஷ் சர்க்கார் ஏற்கத்தான் வேண்டுமென சிபார்சு செய்தது. இது ஒரு புறமிருக்க, வழக்கம்போலவே, பிரிட்டிஷ் சர்க்கார் இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் துருப்புக்களின் சம்பளத்தை உயர்த்தி ஏழை இந்தியர்களின் தலையில் இந்த அம்சம் வாயிலாக வருடத்தில் 128 லக்ஷம் ரூபாய்கள் அதிகப்படிச் செலவைச் சுமத்தினர். அந்த வருஷம் காங்கிரஸ் மகாநாட்டில் ஈரமற்ற இந்தச் செய்கை பலமாகக் கண்டிக்கப்பட்டது.

19-வது காங்கிரஸ் மகாநாட்டில் இந்தியர் செலவில் இந்தியாவின் பாதுகாப்புக்கு அளவிற்கு மிஞ்சிய துருப்புக்கள் (பிரிட்டிஷ் சாம்ராஜ்ய விஸ்தரிப்பை நோக்கமாகக்கொண்டு) வைத்துக் கொள்ளப்பட்டிருப்பதைக் கண்டித்து, பிரிட்டன் இந்திய ராணுவச் செலவில் தன் நியாயமான பங்கை ஏற்க வேண்டுமெனவும் கூறப்பட்டது. இந்த வருஷத்தில் திபத்து நாட்டை வசப்படுத்தவென பார்லிமெண்டின் அனுமதி யில்லாமல் கர்ஸன் பிரபு ஏகச் செலவில் திபத்துக்குத் துருப்புக்கள் அனுப்பினர். அடுத்த காங்கிரஸில், கிச்சனர் பிரபுவின் இந்திய ராணுவத்தைத் திருத்தி யமைக்கும் திட்டம் இந்தியா தலையில் மேலும் 15 கோடி ரூபாய் வீண் செலவைச் சுமத்துவதாகுமெனக் குறிப்பிடப்பட்டது. 1906-ம் வருஷத்திய மகாநாட்டில் சென்ற இருபது ஆண்டுகளுக்குள் ராணுவச் செலவு 17 கோடியிலிருந்து 32 கோடி யாகிவிட்டதை பலமாகக் கண்டிக்கப்பட்டது. இதே காலத்தில்தான் நாட்டில் பஞ்சம் தோன்றி கோடிக் கணக்கான ஜனங்கள் உண்ண ஆகாரமின்றி உயிர் நீத்தனர். அவர்கட்கு உதவிபுரிய

15 கோடி ரூபாய் உதவலாகாதா? பின்னர் ஒவ்வொரு மகாநாட்டிலும் தினே தினம் விருத்தியாகிக் கொண்டிருக்கும் இந்த கோரச் செலவைக் கண்டிக்காமலிருந்தது கிடையாது. தவிர தேச திரவியத்தில் முக்கால் வாசியை விழுங்கும் இந்த இலாக்காவில் இந்தியர்கள் உயர் பதவிகள் அளிக்கப்படாததும் அனேக தடவைகளில் குறிக்கப்பட்டது. 1914-ம் ஆண்டில் கருணை வாய்ந்த சர்க்கார் ராணுவப் பதவிகளுக்கு இந்திய பிரபுஸ்தவர்கள் மட்டும்தான் அனுமதிக்கப்படுவர் எனக் கூறினர். 1917-ம் ஆண்டில்தான் சிற்சில உயர் பதவிகளுக்கு எல்லா இந்தியர்களும் நியமிக்கப்படலாம் என்று நியாயம் வழங்கினர். இதில் மகாசபை சற்றுத் திருப்தி யடைந்தது.

ஆதிகால முதல் காங்கிரஸ் மகாசபை மகாஜனங்களின் பிரஜா உரிமைகளைப் பாதுகாக்கப் பெரு முயற்சிகள் செய்து வந்திருக்கிறது. இந்திய அரசாட்சியில் நிர்வாக அதிகாரமும், நியாயம் வழங்கும் உரிமையும் ஒரு அதிகாரி கையிலேயே ஒப்படைக்கப்பட்டிருக்கும் விபரீதத்தை இரண்டாவது மகாநாடு, பிரிட்டிஷ் இந்திய அரசாட்சியிலுள்ள பெருந்தீமை எனச் சுட்டிக் காட்டியது. இதை நீக்க இந்தியா மந்திரி உடனே தகுந்த நடவடிக்கைகள் எடுக்கவேண்டுமென்றும் கேட்டுக்கொண்டது. பத்துப் பதினைந்து வருடங்கள் சென்றும் இவ்விதத் தீர்மானங்களும், கிளர்ச்சிகளும் யாதும் பயனளிக்கவில்லை. இது இப்படி இருக்க யாதொரு குற்றச்சாட்டு மில்லாமல் ஒருவரைச் சிறையில் சேர்க்கக் கூடிய 1818-ம் வருடத்திய ஆள் தூக்கிச் சட்டத்தை, சர்க்கார் 1897-ம் ஆண்டில் திடீரெனப் பிரயோகம் செய்து தேசிய வாதிகளைச் சிறையிலிட்டது கண்டு மகாசபை கலக்கமுற்றது. இவ்வருடத்தில் சர்க்கார் மனப்பான்மை தேசிய அபிவிருத்திக்கு முற்றிலும் எதிர்ப்பட்டதாகவே இருந்தது. லோகமான்ய திலகர் ஏதோ ஒரு விஷயத்தைப் பிரசுரித்ததை ராஜத்துவேஷமெனக் கருதி சர்க்கார் அவரைச் சிறையிலடைத்தனர். பூனா நகரத்தில் தண்டப்போலீஸ் படை ஒன்று நிறுவப்பட்டது. ராஜத்துவேஷச் சட்டத்தின் பிரிவுகளைத் திருத்தி யமைத்து அவைகளைக் கொடூரமாகஆக்கப்பட்டன. சுரேந்திரநாத பானர்ஜி சர்க்கார் செய்கைகளைப் பலமாகக் கண்டித்து 1897-ம் ஆண்டு மகாநாட்டில் பேசினார்.

"பூனாவில் தண்டப் போலீஸ் நிறுவப்பட்டது ஒரு பிசகு. திலகரைச் சிறையிட்டது பெரும் பிழை.

பூனாவில் சில பத்திரிகாசிரியர்களைச் ஜெயிலிலிட்டதும் தவறு. திலகர் சிறைக் கனுப்பப்பட்டதைக் குறித்து நான் மிக்க வருத்த முறுகிறேன். நானல்ல, நாட்டில் எல்லா மக்களும் கண்ணீர் உதிர்க்கின்றனர். ஆங்கிலேயர்கள் எவ்வளவு சண்டையிட்டுத் தங்கள் பிரஜா உரிமைப் பத்திரங்களான மாக்னு கார்டா (Magna Carta), ஹேபியஸ் கார்பஸ் (Habeas Corpus) சட்டம் இவற்றைப் பெற்றார்கள். இதே உரிமைகள் எங்களுக்கும் பிறப்புரிமைகளல்லவா? அவைகளை ஏன் அவர்கள் எங்களுக்கு வழங்க மறுக்க வேண்டும்? சட்டரீதியான எல்லா உபாயங்களினாலும், உயிர்வாழ்க்கையில் இன்றியமையாச் சாதனமான சுதந்திர உரிமைகளை நாம் பெற எல்லா முயற்சிகளும் செய்ய இன்று தீர்மானித்து விட்டோம்" என்று அவர் கர்ஜனை செய்தார்.

## விவசாயிகள் குறை

விவசாயமே இந்தியர்களின் முக்கிய ஜீவனம் என மகா சபை உணர்ந்து, நமது நாட்டு விவசாயிகளின் துயர் நீக்குவதே தன் முதல் கடமையாகக் கொண்டிருக்கிறது. அடிக்கடி நிலவரி விகிதங்கள் மாற்றி யமைக்கப்பட்டு, வரிகள் உயர்த்தப்படுவதை மகாசபை கண்டித்துக் கொண்டே வந்திருக்கிறது. சில சமயங்களில் சர்க்கார் விதித்த நிலவரி, கிராமத்தில் விளைந்த மாசூலை விட அதிகமாகக்கூட இருந்திருக்கிறது. டாக்டர் பெஸெண்ட் அம்மையின் ஒரு புத்தகத்தில் இந்த நிலைமை பின்வருமாறு வர்ணிக்கப் பட்டிருக்கிறது.

" பானையிலுள்ள ஜலம் வெளியே ஓட ஒரு துவார மிருந்ததுண்டு. அந்தப் பாத்திரத்துக் கடியில் இன்று ஆறு துவாரங்களிருக்கின்றன. முன்னாளில் தேசத்தோரிடம் எண்ணிக்கையற்ற கால்நடைப் பிராணிகள் இருந்தன. அவைகள் மேயப் பசும்புல் தரைகளும், அவற்றின் உணவுக்கான உப்பும் இலவசமாகக் கிடைத்தன. இப்பொழுது நிலமெல்லாம் காட்டிலாகா கட்டிக்கொண்டது. காசில்லாமல் ஒரு பிடி உப்புக்கூட கிடைப்பதில்லை. ஒரு சுள்ளி விறகு பொறுக்கினால் நம்மைக் காட்டிலாகா அதிகாரிகள் தண்டித்து விடுவார்கள். பயிர் பச்சைகளை யழிக்கும் துஷ்ட மிருகங்களைச் சுடக்கூட

நம்மிடம் ஒரு ஆயுதம் கிடையாது. நமது ஊரில் உள்ள வெளி நாட்டார் யாவரும் ஒரு கூடை நிறையத் துப்பாக்கி வைத்திருக்கலாம். நாம் நிராயுத பாணிகளாகத்தானிருக்க வேண்டுமாம்......''

1892-ம் வருட மகா நாட்டில், சாசுவத நிலவரி நிர்ணய மிருந்தால்தான் முதலாளிகள் தங்கள் மூலதனமெல்லாம் நிலத்தில் போட்டு தேசம் அபிவிருத்தியடைய ஏதுவாகு மெனக் கூறப்பட்டது. நாடெங்கும் விவசாயிகளின் நன் மைக்கான பாங்குகள் ஸ்தாபிக்க வேண்டுமென்றும் கூறப் பட்டது. அடுத்து வந்த இரு மகாநாடுகளில் இந்தியா மந்திரி சாசுவதத் திட்டத்தை யளிப்பதாகக் கூறிய வாக் குறுதியை உடனே நிறைவேற்ற வேண்டுமெனக் கேட்கப் பட்டது. மகாசபையின் அடுத்த கூட்டத்தில் எப்பொழு தும் போலவே விட்டுக்கொடுக்கும் மனப்பான்மையுடன், ''அறுபது வருஷங்களுக் கொருதரம் வரி நிர்ணயம் செய் யப்படவேண்டு'' மெனக் கூறியது. 1902-ம் வருடத்திய தீர்மானத்தில் நிலவரி, பயிரிடுவோர் சர்க்காருக்கு கொடுக்கும் வாடகையே யன்றி வரி யல்ல என்று சர்க்கார் வெளியிட்ட அபிப்பிராயம் மறுதளிக்கப்பட்டது. சர்க்கார் விடாப் பிடியாக நிலத்தில் உரிமை கொண்டாடி விவசாயிகளிடம் தாங்கள் வாடகை பெறுவதாகக் கூறவே, 1908-ம் ஆண்டில் காங்கிரஸ் மகாசபை இவ்விஷயத்தில் தன் னாலானது ஒன்றுமில்லை என அதைரியமுற்றது. நீர்ப்பாசன வரி விகிதங்களிலும் மகாசபை எப்பொழுதும் தன் நாட்டத்தைச் செலுத்தி வந்திருக்கிறது. 1894-ம் ஆண்டில் சென்னையில் இவ் வரி ஏக்கராவுக்கு ரூ. 4 ஆக இருந்ததை திடீரென ரூ. 5 ஆக உயர்த்தப்பட்டது. எப்பொழுது பொக்கிஷ நிலைமை சரிப்படுத்த வேண்டுமென் றாலும் சர்க்கார் நிலவரி, நீர்ப்பாசன வரிகளை உயர்த்த விரைந்தனர். நாட்டுக் கைத்தொழில்களுக்கு ஆதரவளிக் காத சர்க்காரின் மனப்பான்மை எங்கும் வறுமையை அதிகரித்தது. எல்லாவற்றிலும், சர்க்கார் இராணுவச் செலவை எல்லையில்லாமல் பெருக்கிக் கொண்டேபோனது, ஜனங்களின் அல்லலை அதிகரித்தது. காங்கிரஸ் மகா சபை இவ் விஷயங்களை அவ்வப்பொழுது சர்க்கார் கவனத்துக்குக் கொண்டுவந்து பஞ்ச நிவர்த்திக்காக தனி நிதிகள், சாசுவத நில வரி திட்டம், விவசாய பாங்குகள், கைத் தொழில்களைப் போதிக்கும் கல்லூரிகள், இவைகள் ஏற்

பட்டால்தான் ஜனங்கள் தொல்லையினின்றும் விடுபட வழி ஏற்படும் எனக் கூறினர். இதற்குப் பிறகு சர்க்காரால் பஞ்சங்களைப்பற்றி விசாரிக்க ஏற்படுத்தப்பட்ட கமிஷனால் ஆனது ஒன்றுமில்லை. ஆயினும், பின்னர் அனேகம் தடவை களிலும் காங்கிரஸ் மகா சபை தன் அபிப்பிராயங்களைச் சர்க்காருக்கு வற்புறுத்திக் கூறிக்கொண்டே இருந்தது.

## காட்டு இலாகா சட்டங்கள்

இச் சட்டங்களால் நாட்டுக்கு விளைந்த தீமை கொஞ்ச மில்லை. உப்பு வரி, நில வரிச் சுமைகளால் ஏறகனவே நசுக்கப் பட்ட குடிகளை மேலும் ஹிம்சிக்க காட்டிலாகாச் சட்டங் கள் அனியாயப் போட்டி யிட்டன. குடிகள் தலைமுறை, தலை முறையாகத் தங்கள் கால்நடைகளுக்கு உணவு வசதிகள் தேடி, அடுப்புக்கு விறகு, சுள்ளி சம்பாதிக்க இருந்த காடு களைச்சர்க்கார் ஒரே வினாடியில் அவர்களிடமிருந்து பிடுங்கிக் கொண்டார்கள். இந்தக் கொடூரச் செய்கையால்தான் குடி களின் விரோதத்தை பிரிட்டிஷ் சர்க்கார் சம்பாதித்தது. 1891-ம் ஆண்டில் வட ஆற்காடு ஜில்லாவில் 300,000 கால் நடைகள் பஞ்ச காலத்தில் உணவின்றி மாண்டன. பூமிதேவி அவைகளுக்களித்த இலவச வசதிகளைச் சர்க்கார் பிடுங்கிக் கொண்டதால்தான் இவ்வாறு நேர்ந்தது என்பதில் சந்தேக மென்ன? 1892-ல் இந்த அநீதங்களுக்குப் பரிகாரம் தேடிக் கொடுக்குமாறு சர்க்காரை மகா சபை வணங்கிற்று. காட்டுச் சட்டங்களால், குளிர் மிகுந்த பாஞ்சாலத்தில்தான் ஏழைக் குடிகளுக்கு அதிக பாதகம் விளைந்தது. காங்கிரஸ் செய்த கிளர்ச்சியின் பயனாகச் சர்க்கார், இனி காட்டிலாகாச் சட் டங்களியற்றப்படும்பொழுது அவை விவசாயிகளின் நன்மை யைப் பாதிக்காமலிருக்குமென அறிவித்தனர். காடுகளின் நிர் வாகத்தில் ஏழைக் குடிகள் சிற்சில நிபந்தனைகளின் பேரில் காட்டில் எப்பொழுதும் கால்நடைகளை மேய விடவும், விறகு பொறுக்கவும், குடிசை கட்ட மரம் வெட்டவும், கனிவர்க்கங்களை உணவுக்காகப் பொறுக்கிக் கொள்ளவும் அனுமதி வழங்க வேண்டுமென்பது காங்கிரஸ் மகா சபை யின் வேண்டுகோள். காடுகள் பொக்கிஷ நிலையைச் சரிக் கட்ட மட்டுமல்ல வென்றும், அதிலுள்ள சொல்ப வரு மானத்தைக் கொண்டு காடுகளைப் பராமரித்து வரவேண்டு வதுதான் சர்க்கார் கடமை என்றும் காங்கிரஸ் 14-வது

மகாநாட்டில் கூறியது. பிறகு மகா சபை மேன் மேலும் ராஜ்ய விடுதலையையே தன் முக்கிய லக்ஷியமாகக் கொண்டு, இது போன்ற சிறு விஷயங்களில் அதிக சிரத்தை காட்டவில்லை.

## வியாபாரமும், கைத்தொழிலும்

எப்பொழுதும் நமது சர்க்காரின் அரசியல் நோக்கம் இந்தியர் நன்மையைப் பலியிட்டேனும் லங்காஷயர் வியாபார நன்மையைக் கோரவேண்டும் என்றிருப்பது காங்கிரஸ் மகாசபை அறிந்த விஷயம். இந்திய கிராமக் கைத்தொழில்களையும் கலைகளையும், இது காரணமாக ஒழிக்கவோ, அசிரத்தையால் மாய்க்கவோ சர்க்கார் சிரத்தை கொண்டனர். இந்தவிதமாக நாளடைவில் இந்தியர்களுக்கு நிலத்தைப் பயிரிட்டு ஜீவிப்பதல்லாமல் வேறு தொழிலே இல்லாமற் போயிற்று. முகலாய அரசாட்சியின் கீழ் இந்தியாவின் ஏராளமான செல்வத்துக்கு யாதொரு கேடும் இல்லை. அது நாட்டிலேயே தங்கி இருந்தது. ஆங்கிலேயர் ஆட்சியில் இந்தியாவில் இருப்புப்பாதைகளும், கல்வி வசதிகளும், பொது ஜனப் பாதுகாப்பு முறைகளும் ஏற்பட்டன. ஆனால் ஒவ்வொரு விநாடியும் நாட்டின் செல்வம் சிதைந்து சிரழிந்து கப்பல் கப்பலாக வெளியேறத் தொடங்கியது.

1894-ம் ஆண்டு மகாநாட்டில் உள்நாட்டு ஜவுளிகளின் மீது போடவிருந்த சுங்க வரியைக் கண்டித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அப்படி வரி விதித்தாலும் குறிப்பிட்ட சில ரகங்களை மட்டுமாவது வரியினின்று விலக்கவேண்டுமென்று காங்கிரஸ் சபை ஒரு வேண்டுகோள் விடுத்தது. 1906-ம் ஆண்டு மகாநாட்டில் நமது நாட்டிலுள்ள சீர்கேடான நிலைமையை பண்டித மதன் மோகன் மாளவியா தெளிவாக எடுத்துரைத்தார்.

“நமது தேசத்திலுள்ள மூலப்பொருள்களெல்லாம் பிறநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டு அவை “பாக்டரி” சாமான்களாக (Factory-made goods) மாறி நம் நாட்டிலேயே இறக்குமதி செய்யப்படுகின்றன. சுதந்திரமுள்ள நாடாயிருப்பின் நாம் இந்த மோசத்தைத் தடுக்க பாதுகாப்பு வரிகள் போட்டு நிலைமையை அபிவிருத்தி செய்யலாம்” என்று அவர் கூறினார். லோகமான்ய திலகர் நமது நாட்டில் மத்தியதர வகுப்பினர்தாம் பெரும்பாலும்

இந்த அன்னியநாட்டு சாமான்களை உபயோகிப்பவர்களென்றும், "நம்மிடை இத்தருணத்தில் தியாக உணர்ச்சியும், உறுதியான தேசாபிமானமும் தனக்குத்தானே உதவவேண்டும் என்ற கொள்கையும் பரவவேண்டும்" என்றும் கூறினார். இப்படியாகத்தான் சுதேசியத்தை ஆதரிக்கவேண்டும் என்ற கொள்கை பிறந்தது. 1906-ம் ஆண்டில் அன்னிய சாமான்களை பகிஷ்காரம் செய்யவேண்டும் என்ற இயக்கம் ஆரம்பிக்கப்பட்டு தேசக் கைத்தொழில்களை அபிவிருத்தி செய்யவேண்டுமென இந்தியர்களுக்கு ஒரு அவா எழுந்தது.

இந்த இயக்கத்துக்கு மூலகாரணமாக இருந்தவர் பம்பாயில் ஜட்ஜு பதவி வகித்தவரும், பெரிய பொருளாதார நிபுணருமான ரானடே என்பவர். காங்கிரஸ் மகாசபைக்கு அவர் வெகுகாலம் வரை இந்த விஷயங்களில் அமைச்சராக இருந்தார்.

மகாசபை கிராமவாசிகளின் உப கைத்தொழில்களை மறுபடி உயிர்ப்பிக்க அதிக சிரத்தை எடுத்துக்கொண்டது.

"முன்னாளில் இந்தியாவினின்றும் பல ஐரோப்பிய நாடுகளுக்கும், துணிமணிகளும் விலையுயர்ந்த பல பொருள்களும் ஏற்றுமதி செய்யப்பட்டன. இப்பொழுது அவை எல்லாம் கனவுபோலாயிற்று! இந்தக் கூட்டத்தில் ஒவ்வொருவரும் இன்று பிரிட்டிஷ் துணிமணிகளைத் தரித்திருக்கின்றனர். எந்த சாமானை எடுத்தாலும் பிரிட்டிஷார் செய்த பண்டம்! இப்படியாக நமது நாட்டுக் கைத்தொழில்களை நாசம் செய்து, ஏழைகள் கட்டாந்தரையையாவது நாடி உழுதே ஒரு வேளைக் கஞ்சி தேடிக்கொள்ளும்படி செய்துவிட்டோம். உத்தியோகங்களிலோ, வியாபாரத் துறையிலோ, நமது நாட்டவர் ஐம்பது வருஷங்களுக்கு முன்னால் அடைந்த நன்மைகளில் இன்று நூற்றிலொரு பங்கு கூடப் பெற்றிருக்கவில்லை! தேசம் பாழாய் விட்டதன்றோ!" என்றார் மதன் மோகன் மாளவியா.

1901-ம் ஆண்டு கைத்தொழில் பொருட்காட்சி ஒன்று மகாசபையின் ஆசிபெற்று நடைபெற்றது. அதுமுதல் இதுவரை காங்கிரஸ் மகாசபையுடன்கூட சுதேசிப் பொருட்காட்சி சாலைகளும், கதர் கண்காட்சிகளும் நடத்தப்பெறுகின்றன.

தேசியத் தலைவர்கள் என்னதான் பாடுபட்டும் அன்றிருந்தபடியே இந்தியாவில் இன்றும் கோடானுகோடி கிராமவாசிகள் ஒரு நாளாவது இன்று வயிறு நிறையக் கூழ் அகப்பட்டது என்று கூறிய தினமே கிடையாது. எப்படிக் கூக்குரலிட்டும் நிலவரி பலமடங்கு அதிகரிக்கப்பட்டுக் கொண்டே வருகிறது. ராணுவச் செலவுக்கு எப்பொழுது தான் ஒரு வரையறை காணமுடியும் என்பது இன்னும் புலப்படவில்லை. ஜெர்மனியில் ஒரு சிப்பாய்க்கு 145 ரூபாய் வருடாந்திரச் செலவு. பிரான்ஸில் ரூ. 185, இங்கிலாந்தில் உள்ளவரையில் இங்கிலீஷ் சிப்பாய்க்கு ரூ. 285 செலவு. அவன் பொருட்டு இந்தியாவில் 775 ரூபாய் செலவாம்! இத்துடன் கூட இந்த தேசங்களில் ஒவ்வொருவருக்கும் சராசரி வருட வருமானத்தைப் பாருங்கள்! இங்கிலாந்து தலா வருட வருமானம் 42 பவுன்; பிரான்ஸ் 23; ஜெர்மனி 18; இந்தியாவில் 1 பவுன்! இந்தக் கணக்கு 1891-ம் ஆண்டில் வகுத்தது.

## "சுதேசி", "பகிஷ்காரம்", "சுயராஜ்யம்"

இருபதாவது நூற்றாண்டின் முதல் சகாப்தத்தின் முடிவில் நாடெங்கும் பரவிய தேசிய உணர்ச்சி வங்காளப் பிரிவினையின் பயனாக உற்பத்தியாயிற்று. 1905-ம் ஆண்டில் காசி க்ஷேத்திரத்தில் கூடிய 21-வது காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் வங்காளப் பிரிவினையைக் கண்டித்து அதை ரத்து செய்யவேண்டும், அல்லது வங்காளிகள் அனைவரும் ஒரே நிர்வாகத்தின்கீழ் வரும்படி திருத்தியமைக்கவேண்டும் எனத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இம் மகாநாட்டில்தான் முதன் முதல் அன்னிய நாட்டுச் சரக்கு பகிஷ்காரத்தைப் பற்றிப் பிரஸ்தாபமெழுந்தது. ஜனங்கள் ஏகோபித்துச் சமர்ப்பித்த வேண்டுகோள்களனைத்தையும் சிறிதும் சட்டை செய்யாது வங்காளப் பிரிவினை விஷயத்தில் நடந்து கொண்ட இந்திய அரசாங்கத்தாரின் பிடிவாத நடத்தையை இந்தியர் வெறுப்பது பிரிட்டிஷ் பொது மக்களுக்குத் தெரியும்படி செய்ய சட்ட பூர்வமானதும், பயன்படக் கூடியதுமான முறை பகிஷ்கார முறையே எனக் கருதப்பட்டது. இந்த மகாநாட்டில் காங்கிரஸ் மகாசபை அந்த முறையை ஆதரித்த

தாக ஸ்பஷ்டமாகக் கூறப்படவில்லை. அப்படிக் கூற வேண்டும் என்ற நோக்கமும் இல்லைபோலும்! இது விஷயமாக லாலா லஜபதிராய் மிகவும் கம்பீரத்துடன் எழுந்து, "இனி நாம் பிச்சைக்காரர்கள் அல்ல. தங்கள் உரிமையைத் தரும் பதவியை அடையப் பாடுபட்டுக் கொண்டிருக்கும் பிரஜைகளடங்கிய ஒரு சாம்ராஜ்யத்தின் குடிகள்" என்று கர்ஜித்தார்.

1905-ம் ஆண்டில் ஏற்படாத தைரியம் 1906-ம் வருஷத்தில் கிட்டிற்று. இந்த மகாநாட்டில் "இத்தேசத்திய மக்களுக்கு அரசியல் நிர்வாகத்தில் சிறிதளவுகூட உரிமை கிடையாததாலும், அம்மக்கள் சர்க்காரிடம் சமர்ப்பிக்கும் விண்ணப்பங்கள் எல்லாம் நிராகரிக்கப்படுவதாலும், வங்காளத்தில், பிரிவினையைக் கண்டிக்கும் முறையில் ஆரம்பித்துள்ள பகிஷ்கார இயக்கம் சரியானதுதானென்று இக்காங்கிரஸ் சபை கருதுகிறது" என்று கூறப்பட்டது. ஜனங்கள் தியாக உணர்ச்சியுடன் உள்நாட்டுச் சாமான்களையே ஆதரிக்கும்படி காங்கிரஸ் வற்புறுத்தியது. "இந்தியாவிலும் இங்கிலாந்திலும் ஏக காலத்தில் ஐ. ஸி. எஸ். பரீக்ஷைகள், சட்ட சபையைப் பெருக்கி, ஜனப்பிரதிநிதிகளுக்கு அதிக ஸ்தானங்கள் அளித்தல், இந்தியா மந்திரி சபையிலும், இந்திய நிர்வாக சபைகளிலும் இந்தியர்களை நியமித்தல்" என்பதுபோன்ற சில சிறிய சீர்திருத்தங்களை உருப்படுத்திக் கொள்ளுவதற் கதிகமாக சுயாட்சி என்பது பற்றிய யோசனை எட்டவேயில்லை. 1906-ம் ஆண்டில் இது தான் தேசிய மகாசபையின் லட்சியமாக நின்றது.

அடுத்த வருஷம் சூரத்தில் நடைபெற்ற கூட்டத்தில்தான் பிரிவு ஏற்பட்டது. அதற்குப் பின்னர் வந்த மிதவாத மயமான காங்கிரஸ் "பகிஷ்காரம்" என்ற பதத்தை எடுத்துவிட்டு, "சுதேசியம்" என்ற வார்த்தையை உபயோகிக்கத் தொடங்கியது. 1910-ம் வருடத்தில் புதிய ராஜப்பிரதிநிதி வந்தார். அவரிடம் ராஜீயக் கைதிகளை மன்னித்துச் சிறையினின்றும் விடுதலை செய்யவேண்டுமென்று காங்கிரஸ் மகாசபை கேட்டுக்கொண்டது. இது பலிக்கவில்லை.

1914-ம் வருடத்தில் சென்னையில் கூடிய காங்கிரஸ் சபை 1911-ம் வருடத்தில் மாகாண சுதந்திரம் அளிப்பதாகக் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றி, "பிரிட்டிஷ் சாம்

ராஜ்யத்தில் சேர்ந்ததோர் அங்கமாக இந்தியாவை மதித்து, அந்த அந்தஸ்துக்குரிய உரிமைகளை முழுதும் நிர்பந்தங்கள் யாதுமின்றி அநுபவிக்க இடம் தரவேண்டுமென்றும் கேட்க தைரியம் கொண்டது."

## வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம்

வகுப்புக்கள் வாரியாகப் பிரதிநிதித்துவம் வேண்டுமென்பது இன்று, நேற்று ஏற்பட்ட யோசனையோ எனப் பலர் நினைக்கக்கூடும். வடமேற்கு மாகாணத்தின் (இப்பொழுது ஐக்கிய மாகாணம்) உப-கவர்னராக இருந்த சர் ஆக்லண்டு கால்வின் நாளிலேயே முஸ்லீம்கள் காங்கிரஸ் மகாசபையை எதிர்ப்பதாக ஒரு பழியைக் கட்ட ஒரு சூழ்ச்சி நடந்தது. இதனால் ஏற்பட்ட நிலைமையைப் பிரமாதமாக எண்ணி, ஹியூம் துரை ஆக்லண்டு துரைக்கு நீண்டதொரு பதிலை விடுத்தார். காங்கிரஸ் மகாசபையின் முதல் இரண்டு மூன்று கூட்டங்களின் வெற்றி அதிகாரவர்க்கத்தினர் மனதைக் கலக்கிவிட்டது என்பதில் சந்தேகமில்லை. அதிகாரவர்க்கத்தினரின் மனப்பான்மைதான் இந்தப் பிரசித்தி பெற்ற உப-கவர்னரின் பேச்சில் வெளிப்பட்டது. இத்தகைய அபிப்பிராயத்தின் பிரதிபலன் முஸ்லீம் வகுப்பினரிடத்திலேயே பிரயாசையின்றி உடனே கிடைத்தது. அதிகாரவர்க்கத்தினர் தங்கள் விஷயத்தில் காண்பிக்கும் சிரத்தை அவர்களுக்கு எவ்வளவு அருவருப்பைக் கொடுத்தது என்பதற்கு அத்தாட்சி கீழே தரப்பட்டிருக்கிறது. அலகாபாத்தில் நடந்த நாலாவது காங்கிரஸ் மகாசபையில் ஐரோப்பிய கனங்கள் எதிர்த்தபோதிலும் அவ்வருஷத்திய மகாசபை அக்கிராசனராக யூல் துரையை ஆதரித்த ஷேக் ரஜா ஹுஸேன்கான் லக்ஷ்மணபுரியில் ஒரு முகம்மதிய மத குருவிடமிருந்து காங்கிரஸை ஆதரித்த 'பத்வா'வை எடுத்துக் காண்பித்து "காங்கிரஸ் மகாசபையை முஸ்லீம்கள் ஒருவரும் எதிர்க்கவில்லை. ஆனால் அவர்கள்மேல் ஆதிக்கம் வகிக்கும் அதிகாரிகள் மட்டும்தான் காங்கிரஸை எதிர்க்கிறார்கள்" என்று விளம்பினர்.

மிண்டோ பிரபுவின் காலத்தில்தான் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவ திட்டம் உருப்பெற்றது. இதற்கு முன் வங்காளத்தைப் பிரித்து, கீழ் வங்காளம், அஸ்ஸாம் இவ்விரண்டையும், முஸ்லீம் ஆதிக்கம் பெற்ற

மாகாணங்களாக அமைத்து, இந்தத் தீய வகுப்பு உணர்ச்சியைக் கிளப்பிவிட்ட புண்ணியம் கர்ஸன் பிரபுவைச் சாரும். இதைவிட அனர்த்தமாக ஒரு சட்டம் பிற்காலத்தில் இயற்றப்பட்டது. இதன்படி வெவ்வேறு வகுப்புகளுக்கு, வெவ்வேறுவிதமாக வாக்குக்குரிய யோக்கிய தாம்சங்கள் குறிக்கப்பட்டன. இன்றும் இதுபற்றிய எதிரொலிகள் நமது காதில் விழுவதைக் கேட்கிறோம்!

1910-ம் ஆண்டில் ராஜீய உலகில் ஒரு மிகவும் நெருக்கடியான நிலைமை ஏற்பட்டது. இந்த வருடம் காங்கிரஸ் மகாசபையில் சர். வில்லியம் வெட்டர்பர்ன் தலைமை வகித்தார். வகுப்பு ஒற்றுமையை நிலை நாட்ட ஹிந்துக்களும் முஸ்லீம்களும் சேர்ந்து ஆலோசனைபுரிய ஒரு கூட்டம் கூட்ட வேண்டுமென்று தலைவர் நினைத்தார்.

ஸ்தல ஸ்தாபனங்களில் தனித்தொகுதிகள் ஏற்படுத்தப் படுவதை மகமதலி ஜின்னு இகழ்ந்ததுண்டு. இந்த நாளில் பிறந்த பர்ன் சுற்றறிக்கை (Burn Circular) ஸ்தல ஸ்தாபனங்களில் முஸ்லீம்களுக்கு வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் கொடுப்பதை ஆதரித்து கலப்புத் தொகுதிகளிலும் அவர்கள் கலந்து கொள்ளலாம் என்று கூறியது. அப்படிச் செய்வதால் இவ்விரு சமூகங்களும் அன்னியோன்னிய பாவத்துடன் வாழ்வதற்குச் சாதகமாயிருக்கும் என்பது அதன் கூற்று.

கல்கத்தாவில் நடைபெற்ற 26-வது காங்கிரஸ் மகாசபையில் (1911) தலைமை வகித்த பிஷன் நாராயணதார் என்பவர் "நம்முடைய ஒற்றுமையில் இவர்களுக்கு (பிரிட்டிஷாருக்கு) இருக்கும் அக்கறை நமது நம்பிக்கை குணத்துக்கு ஒரு கடினப் பரீக்ஷையாக இருக்கிறது" என்று சொன்னார். "சர். வில்லியம் வெட்டர்பர்ன், ஆகா கான் இவர்கள் முயற்சியின்பேரில் சென்ற வருடத்தில் பிரயாகையில் இரு வகுப்புப் பிரதிநிதிகளும் சமரஸ மார்க்கத்தைக் காணக்கூடிய தருவாயில், சிவில் சர்விஸ் அதிகாரிகளின் மனப்பான்மையை வெளியிடுவது என்று கூறப்பட்ட ஓர் ஆங்கிலோ-இந்தியப் பத்திரிகை, "இவர்கள் எதற்காக ஒன்று சேரப் பார்க்கிறார்கள்—சர்க்காருக்கு எதிரிடையாகத்தானே!" என்று குறிப்பிட்டது" என்றும் அவர் கூறினார். இந்த ஒரு வாக்கியமே, வெகு நாட்களாக இந்திய அரசியல் நிலை

மையிலுள்ள ஒரு பிணக்கு எதனல் வளர்த்தப்படுகிறது என்ற கோரமான உண்மையை விளக்குவதாகும்!

1913-ல் நடந்த கராச்சி மகா நாட்டில் "ஹிந்துக்களும் முஸ்லீம்களும் ஒற்றுமை லட்சியம் ஒன்றிலேயே கவனத்தைச் செலுத்தவேண்டும். இன்று நமது தாய்நாடு ஹிந்துக்கள் நாடல்ல; முகமதியர்கள் தேசம் மட்டுமல்ல; ஆங்கிலோ-இந்தியர்களுடையதல்ல. ஐரோப்பியர் நாடாகி விடவில்லை. இந்தியா இவர்கள் எல்லோருடைய நாடுமாகும். கடந்த காலத்தில் ஏதாயினும் மனக்கசப்புகள் ஏற்பட்டிருந்தால் அவற்றை மறந்து விடுவோம். வருங்காலத்தில் இந்திய நாடு, அசோகன் தன் முழு பராக்கிரமத்தாலும் தேடிவைத்திருந்ததிலும் அதி விமரிசையாகவும், அக்பர் கனவிலும் நினைத்திராத வண்ணம் பெருமை கொண்டதாகவும் சிறப்புற்று விளங்கவேண்டும். அந்த லட்சியத்தை நாம் நிறைவேற்றி வைப்போமாக" என்று பூபேந்திரநாத பாசு வீரமொழிகளைப் புகன்றார். எனினும் வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் அளிப்பது என்பது இந்திய அரசியல் வாழ்க்கையில் வேரூன்றி விட்டது. இந்தப் பெருத்த இடர் தேசமக்களின் வாழ்க்கையில் ஒரு புண்ணாக அன்றுமுதல் இன்றுவரை உபத்திரவித்துக்கொண்டுதானிருக்கிறது.

மின்டோ-மார்லி திட்டப்படி வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் தேசத்தின்மேல் பலவந்தமாகச் சுமத்தப்பட்டது. ஜனங்கள் விருப்பத்தைச் சர்க்கார் எக்காலத்திலும் போல அனுசரித்து நடக்கவில்லை. ஆகவே 1916-ல் புதிதாக சில துண்டுச் சீர்திருத்தங்கள் வழங்க யோசனை பிறந்ததும், இந்திய மக்களை ஒற்றுமைப் படுத்திவைக்க வேண்டுமெனக் காங்கிரஸ் மகாசபை நினைத்தது. இதற்காக மகாசபைப் பிரதிநிதிகளும், முஸ்லீம் பிரமுகர்களும் கல்கத்தாவில் அந்த நவம்பரில் சந்தித்தனர். எல்லா வகுப்பினரின் சம்மதத்தையும் பெற்ற ஒரு தேசீயத் திட்டத்தை அலசி எடுக்கத்தான் இக்கூட்டம் கூடிற்று. அகில இந்திய முஸ்லீம் சங்கமும் காங்கிரஸ் மகாசபையின் லட்சியத்தை மேற்கொண்டு இந்தியாவிற்கு சுயராஜ்யம் தேடுவதே தன் கோரிக்கை எனக் கூறியது. நல்ல தருணத்தில் தான் கல்கத்தா மகாநாடு துவக்கப்பட்டது. உலகெங்கும் சுதந்திரப் பேச்சு நிலவிக்கொண்டிருந்த காலம் அது. சிறிய நாடுகளுக்கும் பின்னடைந்த தேச மக்களுக்கும் சுதந்திர வாழ்க்கையைத் தேடிக்கொடுத்து, அவர்கள் வாழ்

நாளைப் புனிதப்படுத்துவதற்காகவே மகா யுத்தத்தில் தாங்கள் ஈடுபட்டிருப்பதாக வல்லரசுகள் கூறினார்கள். இதை இந்தியர்கள் அப்பொழுது ஞாபகப்படுத்திக் கொண்டார்கள். இத்தருணத்தில் தேசத்தின் ஒற்றுமைக்காகப்பாடுபட முன் வந்து நாட்டு மக்களுக்கு வழி காண்பிக்கும் பொறுப்பினை மகாசபையிலுள்ள இளைஞர்கள் சந்தோஷமாக ஏற்றனர். இந்தக் கூட்டத்தில் சர் சையது அகமத், "ஹிந்துக்களும் முஸ்லீம்களும் பாரதத் தாயின் இரு நேத்திரங்கள். ஒரு நேத்திரம் பீடிக்கப்பட்டாலும் நமது தாய் குரூபியாவாள்" என்று சபையோருக்குச் சுட்டிக் காட்டினர். சபையில் உள்ளவர் மனங் கரைந்து, எங்கும் விட்டுக்கொடுக்கும் மனப்பான்மை நிலவியது. இதன் பலனாக ஓர் ஒப்பந்தம் ஏற்பட்டது. மிகக் கடினமான பிரச்னைகளை மேற்கொண்ட பஞ்சாப், வங்காள மாகாணங்களுக்கும் லக்ஷ்மணபுரி மகாநாட்டில் ஒரு வழி கண்டுபிடிக்கப்பட்டது. ஹிந்து—முஸ்லீம் பிணக்கைத் தீர்த்து, இரு வகுப்பினருக்கும் சம்மதமான ஒரு திட்டத்தை இம் மகாநாடு நிறுவ, அதை மாண்டேகு துரை அப்படியே பெயர்த்து எடுத்துப் பின் வந்த மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தத் திட்டத்தில் இணைத்தார். இது நாள் முதல் தனித்தொகுதிகள் தேச வாழ்க்கையில் நிர்ணயமாக்கப்பட்டன. வகுப்புத் தொகுதியும், கலப்புத் தொகுதியும் தனித்தனியே ஏற்படுத்தப்பட்டன.

## அயல்நாடுகளில் இந்தியர்

தாய் நாட்டில் இந்தியர் படும்பாடு இவ்வாறிருக்க, தென்னாப்பிரிக்கா போன்ற இந்தியர்கள் குடியேறிய அயல் நாடுகளில் அவர்கள் படும்பாடு நாளுக்கு நாள் கேவலமாகிக் கொண்டே வந்தது. 1896-ம் வருஷத்தில் தென்னாப்பிரிக்காவில் நேட்டால் பிரதேசத்தில் இருந்த இந்திய ஒப்பந்தக் கூலிகள், தங்கள் ஒப்பந்த காலம் முடிவடைந்ததும், அந்த அடிமைத்தனத்தை மீண்டும் வகிக்க ஒப்புக்கொள்ளாவிட்டால், தங்கள் வருமானத்தில் பாதிக்குச் சமமான 'ஆள் வரி' கொடுக்கவேண்டும் என்று ஒரு கொடுஞ் சட்டம் இயற்றப்பட்டது. இது சம்பந்தமாக போயர் யுத்தத்தில், வைத்திய சிகிச்சா கோஷ்டியுடன் சென்றிருந்த டாக்டர் மூஞ்சே நேரில் கண்டதை கூறுகையில்

"நம்மை ஆளுபவர்கள் நம்மை மனிதர்களாகப் பாவித்து நடக்கவில்லை" என்று குறிப்பிட்டார். இது விஷயமாக, சர். பி. என். சர்மா, "பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குள் ஓர் இனத்தார் மற்றோர் இனத்தாருக்கு மேலதிகாரிகளாகவே நிரந்தரமாக இருக்கவேண்டுமென உரிமை கொண்டாடுவது ஒருக்காலும் முடியாது" என்று இங்கிலாந்தை எச்சரித்தார்.

தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியா படும் பாட்டை காங்கிரஸுக்கு வெகு காளாக எடுத்துக் கூறிவந்தவர் மதன்ஜித் என்ற பெரியார். அடிக்கடி அங்கு போய்த் திரும்பி வந்த அநேக இந்தியர்கள் அங்குள்ள நிலைமையைப் பற்றி விவரம் கொண்டு வந்தார்கள். ஆனால் வருடந்தோறும் மகா சபை முன் இவ் விஷயத்தை விடாமல் பிரஸ்தாபித்தவர் இவர்தாம். காஷாய அங்கி பூண்டு, நீண்டதோர் தடியைக் கையிலேந்தி நிற்கும் இவர் உருவத்தை மகா சபைக் கூட்டங்களில் அந்நாளில் தவறாமல் காணலாம்.

தென்னாப்பிரிக்காவில் இந்தியர்கள் அனுபவித்த கஷ்ட நிஷ்டூரங்களை அறிந்து காங்கிரஸ் மகாசபை 1894-ம் வருஷத்தில் சர்க்காரைக் கண்டித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றியது. அப்போது ஆப்பிரிக்காவில் குடியேற்ற நாட்டு சர்க்கார் இந்தியர் வாக்குரிமைகளைப் பிடுங்குவதற்காகக் கொணர்ந்த ஓர் மசோதாவை ரத்து செய்யவேண்டும் என்று காங்கிரஸ் தலைவர் ஒரு தீர்மானம் கொண்டுவந்து நிறைவேற்றி வைத்தார். அது நாளிருந்து, ஒவ்வொரு காங்கிரஸிலும் தென்னாப்பிரிக்காவைப்பற்றிய விஷயம் முக்கிய ஸ்தானம் வகித்து வந்திருக்கிறது. ஆப்பிரிக்கா நாட்டில் அனுமதிச் சீட்டில்லாமல் இந்தியர்கள் பிரயாணம் செய்யக்கூடாது. இரவு ஒன்பது மணிக்குமேல் தெருவில் நடக்கக்கூடாது. டிரான்ஸ்வால் பிரதேசத்தில இந்தியர் சதுப்பு நிலங்களிலும் குப்பை மேடுகளிலும்தான் வசிக்க வேண்டும். டிராம் வண்டிகளையும், நடை பாதைகளையும் மற்ற எல்லா ஜனங்களையும் போல உபயோகிக்க இந்தியர்களுக்கு உரிமை கிடையாது. ஹோட்டல்கள், பொது நந்தவனங்கள் இவற்றுள் இந்தியர்கள் பிரவேசிக்கலாகாது, இதுபோன்ற பற்பல அவமானங்களை இந்தியர்கள் அந்த நாட்டில் அனுபவிக்க வேண்டியிருந்ததைப்பற்றி மகாசபை

யில் வருடம் தவறாமல் எடுத்துக் கூறி அவற்றை நீக்க சர்க்காருக்கு வேண்டுகோள்கள் அனுப்பப்பட்டன. தென்னாப்பிரிக்கா துரைத்தனத்தார் 1898-ம் ஆண்டில் இந்தியரை மேலும் நான்புறத்தும் எண்ணத்துடன் ஒரேயடியாக மூன்று சட்டங்களை நிறைவேற்றி வைத்தனர். இதை எதிர்த்துப் போராட மகான் காந்தி தம் பிரசித்தி பெற்ற கிளர்ச்சியை ஆரம்பித்தார். அப்போது இந்தியாவில் ராஜப்பிரதிநிதியாக இருந்த இரக்கமற்ற எல்ஜின் பிரபு நேட்டால் சட்டங்களுக்குச் சம்மதப்பட்டு வாளா யிருந்துவிட்டார். இதைவிடக் கொடுமை என்னவென்றால் அச்சமயம் இந்தியா மந்திரியாக விருந்த ஜார்ஜ் ஹாமில்டன் பிரபு "இந்தியர்கள் எல்லோரும் காட்டுமிராண்டிகளல்லவா" என்று இழிவாகப் பேசியதுதான். 1900-ம் ஆண்டில் நடந்த காங்கிரஸ் மகாசபை நேட்டால் குடியேற்ற தடைகளையும், இந்திய வியாபாரிகளுக்கு லைசென்ஸ் அளிக்கத் தடைகள் ஏற்படுத்திய சட்டத்தையும் எடுத்து விடவேண்டுமென்று சர்க்காரிடம் மன்றாடிக் கேட்டுக் கொண்டது. கல்கத்தாவில் நடந்த (1901) பதினேழாவது மகாசபையில் தென்னாப்பிரிக்கா நிலைமையை அங்குள்ள நூறாயிரம் இந்தியர்களின் மனுதாரராக வந்து காந்திஜி எடுத்துரைத்தார். 1902-ல் இந்தியா மந்திரியை பேட்டி காணவேண்டுமெனத் தீர்மானித்தார்கள். இஃது நடைபெறவில்லை. 1903, 1904 வருடங்களில் இதே தீர்மானங்கள்தாம் மீண்டும் நிறைவேற்றி வைக்கப்பட்டன.

"சமீபத்தில் நடந்த போயர் யுத்தத்துக்கு, அந்த நாட்டிலிருந்த இந்தியக் குடிகளை அக் குடியரசு கொடூரமாக நடத்தியதும் காரணமாகும்" என பிரிட்டிஷார் கூறியதை ஞாபகப்படுத்தி, இனியாவது அங்குள்ள இந்தியக் குடிகளுக்கு சம உரிமை, அந்தஸ்து அளிக்கவேண்டுமெனக் காங்கிரஸ் மகாசபை சர்க்காரை வேண்டிக்கொண்டது. சர்க்கார் எத்தகைய பரிகாரமும் செய்ய முன்வரவில்லை. 1905-ம் ஆண்டில் நிலைமை இன்னும் கேவலமாயிற்று. போயர் ஆட்சியில் கூட இப்பொழுது ஏற்பட்ட தடை முறைகளும் நிர்ப்பந்தங்களும் இந்தியக் குடிகள் அனுபவித்ததில்லை. இதைச் சர்க்காருக்கு மகாசபை எடுத்துக்காட்டி நிர்ப்பந்தக் கூலி முறையை சட்டத்தால் அழித்து, இன்னும் இந்திய சர்க்கார் ஆப்பிரிக்கா சர்க்கார்மீது பதிலுக்குப் பதிலான

நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமெனக் கேட்டுக்கொண்டது. அந்த சமயத்தில் பிரிட்டிஷ் சர்க்கார் டிரான்ஸ்வாலில் இயற்ற இருந்த இந்தியர்க்கு விரோதமான சட்டத்தை அனுமதிக்க 'தற்போதைக்கு' மறுத்தனர் என்பது மகாசபைக்குச் சற்றுத் திருப்தியளித்தது. ஆனால் 1906-ம் வருடத்தில் தென்னாப்பிரிக்காவுக்குப் புதிய அரசியல் அளிக்கப்பட்டதிலிருந்து, இச் சட்டம் மீண்டும் புத்துயிர் பெற்றுக் கிளம்புமே என்ற பயத்தைக் காங்கிரஸ் மகாசபை வெளியிட்டது. இதற்கான சின்னங்களும் அரசியல் வானத்தில் தோன்றின. 1908-ம் ஆண்டில் கூட இந்தியர் நிலைமைக்கு யாதொரு பரிகாரமும் அளிக்கப் படாமலிருந்தது. 1908-ல் தென்னாப்பிரிக்காவில் புதிய அரசியல் முறை அமுலுக்கு வந்துகொண்டிருக்கையில் இந்தியர்க்கான சம அந்தஸ்து உரிமைகளை அரசியல் திட்டத்தில் சேர்த்து அமைக்கவேண்டுமென அவ்வருடத்திய காங்கிரஸ் மகாசபை வற்புறுத்தியது. தென்னாப்பிரிக்காவில் உள்ள பிரிட்டிஷ் சாம்ராஜ்யக் குடியேற்ற நாடுகளில் அந்தஸ்து வாய்ந்த இந்தியர்களைக்கூட கொடுமையான கஷ்ட நிஷ்டூரங்களை அனுபவிக்கச் செய்ய சட்டம் அனுமதிப்பதைக் காங்கிரஸ் மகாசபை வெறுத்து, இது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கே தீங்கிழைப்பது என மூஹீர் ஹாஸன் கித்வாய் சென்னை (1908) காங்கிரஸ் மகாசபையில் ஒரு தீர்மானம் கொண்டு வந்து நிறைவேற்றி வைத்தார்.

1909-ம் ஆண்டு மகாநாட்டில் கோகலே தாம் கொணர்ந்த தீர்மானத்தில் அதிகாரிகள் செய்யும் நம்பிக்கை மோசத்தைக் கண்டித்தும், மிக்கப் பொறுமையுடன் நீண்ட காலமாக காந்திஜி சர்க்காருடன் போராடிக்கொண்டு வருவதைப் பாராட்டியும் பேசினார். தென்னாப்பிரிக்காவில் நமது சகோதரர்கள் நேரடியான முறைகளைக் கையாள வேண்டிய அவசியம் உணரப்பட்டு சாத்வீக எதிர்ப்பு இயக்கம் துவக்கப்பட்டது. "சாத்விகப் போராவது என்ன? இந்தப் போர் வலுச் சண்டையை சாத்வீக ஆயுதங்களால் எதிர்க்கும் முறையாகும். சாத்விகப் போர்வீரன், தன் ஆயுதங்களை மனத்தில் தரித்தவன். பிறர் கொடுமையை ஒழிக்க இந்த வீரன் தன்னைத்தானே, துன்பத்திற்குள்ளாக்கிக் கொள்ளுகிறான். எதிரியை இம்சிப்பதில்லை. மனிதனின் மிருகத் தனத்தை இவன் தன் ஆத்ம சக்தியால் வெல்ல எத்தனிக்

கிறான். இதில் நம்பிக்கை வைத்தவன் தன்னுள் உள்ள தெய்வாம்சத்தை உபயோகத்துக்கு கொணர்ந்து, கஷ்டங்களைச் சகித்து நிஷ்டூரங்களைப் பயனறச் செய்கிறான். தெய்வ நம்பிக்கையை ஆயுதமாக ஏந்தி அனியாயத்தை வெல்ல சாத்வீகப் போர்வீரன் களிப்புடன் சமரில் ஈடுபடுகிறான்'' என்று கோகலே அப்பொழுது விளக்கினார். தென்னாப்பிரிக்காவில் நடந்த சாத்வீகப் போரை மனமார ஆதரித்த அந்த மகாநாடு, அதற்காக வேண்டி சுமார் 40,000 ரூ. பொருளுதவியும் செய்தது. 1911-வது ஆண்டில் நடந்த மகாசபை டிரான்ஸ்வாலில் ஆசியாக்காரர்களுக்கு விரோதமாகப் பிறப்பிக்கப்பட்ட பல சட்டங்கள் ரத்தானதைக் குறித்துகாந்திஜியின்முயற்சிகளைவெகுவாகப்பாராட்டியது. 1913-வது வருட கராச்சி மகாநாட்டில் ஒப்பந்தக் கூலி முறையை ஒழிக்கும்படி சர்க்காருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளப்பட்டது. இந்த வேண்டுகோள் கூடிய சீக்கிரமே நிறைவேறியதற்கு அப்பொழுது ராஜப்பிரதிநிதியாக இருந்த ஹார்டிஞ்சு பிரபு காரணமாக இருந்தார். கராச்சி மகாநாட்டில், காந்தியும் அவர் சகாக்களாகத் தென்னாப்பிரிக்காவிலுள்ள இந்தியர்களும், நமது நாட்டினர்க்கு அங்கு இழைக்க விருந்த தீங்கை யகற்ற மிகுந்த ஒற்றுமையுடனும் ஒப்பில்லா தியாக உணர்ச்சியுடனும் போராடி வெற்றிபெறறதைப் பாராட்டி ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

காந்திஜி இந்தியாவுடன் நெருங்கிப் பழக ஆரம்பித்த காலம் இதுவே. 1915-ம் ஆண்டில் இந்தியாவிற்குத் திரும்பிய காந்திஜி அதுமுதல் இங்கேயே வசித்து சத்திய சோதனையிலீடுபட்டு, தன் சத்தியாக்கிரக இயக்கத்தை நாட்டி, சம்பரான், கெய்ரா, போர்ஸாத், பர்டோலி முதலிய இடங்களில் நடத்திக் கொண்டு, நம்மிடையே வசித்து நம் தேச மக்களின் வாழ்க்கையைப் புனிதமாக்கி வருகிறார்.

## உப்பு வரி

உப்புவரி முதன் முதலில் பிரிட்டிஷ் கப்பல் கம்பெனிகளின் உதவிக்காகவும், பிரிட்டிஷாரின் ஓர் உப வர்த்தகம் செழிக்கவும்தான் விதிக்கப்பட்டது. உப்பு இந்தியர்களின் உணவுப் பதார்த்தங்களில் முக்கிய ஸ்தானம் வகிப்பது.

ஏழைகளின் உணவாகும். உப்பின்மேல் அதிகமான வரியை விதிக்கக் கூடாதென காங்கிரஸ் மகாசபை ஆரம்பகால முதல் போராடிக்கொண்டு வந்தது.

## குடி, விபசாரத் தீமைகள்

நாட்டினரைத் தீய வழக்கங்களினின்றும் தப்புவிக்கவும் காங்கிரஸ் மகாசபை முயற்சிகள் செய்துகொண்டு வந்திருக்கிறது. இந்தியாவில் குடிப்பழக்கம் நாளடைவில் அதிகரித்து வருவதைச் சட்டமூலம் தடுக்கவேண்டுமென காமன்ஸ்சபை (1889) நிறைவேற்றிய தீர்மானத்தை, உடனே அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென காங்கிரஸ் வேண்டியது. மறு வருடமே சர்க்கார் இதுவிஷயமாகத் தீவிர முயற்சிகள் செய்தது மகாசபைக்குத் திருப்தி யளித்தது. மறுபடி இந்த பிரச்னை 1900-ம் வருடக் காங்கிரஸில் எழுப்பப்பட்டு, சர்க்கார் மருந்துக்கன்றி வரவழைக்கப்படும் சாராயத்தின்மேல் அதிக இறக்குமதி வரி விதிக்கவேண்டுமெனக் கேட்டுக்கொண்டது.

ராணுவ ஸ்தலங்களில் விபசாரத் தொழிலை நடத்த சர்க்காரின் மறைமுகமான ஆதர விருப்பதைக் கண்டித்து 1888-வது வருட மகாநாட்டில் பேச்செழுந்து இத் தீமையை ராணுவஸ்தலங்களினின்று அறவே ஒழிக்க உடனே தகுந்த முயற்சிகள் எடுத்துக்கொள்ள வேண்டுமெனத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## ஸ்திரீகள், தாழ்த்தப்பட்டோர் குறைகள்

இந்திய ஸ்திரீகள் எவ்வளவு சீக்கிரத்தில் ஆடவர்களுக்குச் சமமான உரிமைகள் பெற்றனர் என்ற விஷயம் ஆச்சரியமாகவே இருக்கிறது. பொதுத் தேர்தல்களில் ஸ்திரீகளுக்கும், ஆடவர்களுக்கு ஏற்படுத்தப்பட்டுள்ள யோக்கியதாம்சங்கள் இருப்பின் அவர்களும் தேர்தல்களில் கலந்து கொள்ளலாம் என்று பல வருடங்களுக்கு முன்னே காங்கிரஸ் (1917) கூட்டத்தில் கூறப்பட்டது. தாழ்த்தப்பட்டோர் குறைகளைப்பற்றி இதே மகாநாட்டில் "தாழ்த்தப்பட்ட ஜாதியார்களுக்கு வெகு நாளைய வழக்கத்தால் ஏற்படுத்தியிருக்கும் தடைகளை நீக்கி அவர்களைக் கஷ்டங்களினின்றும் விடுவிக்கவேண்டும் என்ற நியாயம் இந்தியர்

ஒவ்வொருவர் மனதிலும் உதிக்கவேண்டும்" என வற்புறுத்தப்பட்டது.

இவை தவிர காங்கிரஸ் மகாசபை நாட்டினரைப் பொறுத்த பல்வேறு விஷயங்களிலும் தன் கவனத்தைச் செலுத்தி இருக்கிறது. நாட்டினருக்களிக்கும் பல கல்வி முறைகளனைத்தும் காங்கிரஸ் மகாசபையால் ஆராயப்பட்டு அவைகளிலுள்ள குற்றம் குறைகளை நீக்க சர்க்கார் கேட்டுக் கொள்ளப்பட்டிருக்கின்றனர். வருமான வரி, உலோகவரிகள், மாகாணச் செல்வ நிலை ஒவ்வொன்றும் சமயம் நேரிட்ட பொழுதெல்லாம் மகாசபைக் கூட்டங்களில் ஆலோசனைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டன. ஒவ்வொரு கூட்டத்திலும் ராஜ விசுவாசப் பிரமாணம் நிறைவேற்றப்பட்டது.

## காங்கிரஸ் மகாசபையின் அமைப்பு

சமீபத்தில் அதன் ஐம்பதாவது பிராயத்தில் காங்கிரஸ் மகாசபை முற்றிலும் திருத்தி யமைக்கப்பட்டது. முதல் மகாசபைக் கூட்டமானது யாதொரு விதிகளையும் பின் பற்றாமல் நாட்டிலுள்ள பிரமுகர்களின் சாதாரணக் கூட்டமென முந்தியே கூறப்பட்டிருக்கிறது. 1886-வது வருஷத்தில் மகாசபைக்கு ஒரு உருவளித்து சட்டதிட்டங்கள் வரையவேண்டுமெனப் பேச்செழுந்தது. 1889-ம் வருஷ மகாநாட்டில் வரவரப் பிரதிநிதிகள் அமிதமாகப் பெருகுவதைக் கண்டு, லக்ஷம் ஜனத்தொகைக்கு ஐந்து பிரதிநிதிகளாகத்தான் அனுமதிக்க வேண்டுமெனத் தீர்மானிக்கப்பட்டது. மகாசபைக்கு ஒரு உதவிக்காரியதரிசி நியமிக்கப்பட்டு, இங்கிலாந்திலுள்ள காங்கிரஸ் கமிட்டிக்கும் ஒரு காரியதரிசி சம்பளத்தில் அனுமதிக்கப் பெற்றார். இந்த உத்தியோகத்தை முதன் முதலாக வகித்தவர் டபிள்யு. டிக்பி என்பவராவார்.

மகாசபையின் விஷய ஆலோசனைக் கமிட்டியாரால் அனுமதிக்சப்பட்டு விவாதத்துக்கு எடுத்துக்கொள்ள வேண்டிய பிரச்னை பெரும்பான்மை ஹிந்துக்களாலாவது முகமதியர்களாலாவது வெறுக்கப்பட்டதாக. இருத்தல் கூடாதென நான்காவது மகாநாட்டில் தீர்மானிக்கப்பட்டது. பிரதிநிதிகளின் தொகை ஆயிரமென்பது 1900-வது ஆண்டு மகாநாட்டிலிருந்து கையாளப்பட்ட விதி. காங்கிரஸ் சார்பாக வெளிநாட்டுப் பிரசாரம் அவசியம் எனக்

கருதி மகாசபை 1892-ல் இதற்கெனவும், சீமையில் "இந்தியா" பத்திரிகை நடத்தவும் 60,000 ரூபாய் செலவிட அனுமதியளித்தது. 1896-ம் மகாநாட்டிலும் மறுபடி இதே தொகை மான்யமளிக்கப்பட்டது. 1899-வது வருடக் கூட்டத்தில் உருவான ஒரு காங்கிரஸ் சபை அமைப்புத் திட்டம் மகாசபையால் அங்கீகரிக்கப்பட்டது. "எல்லா சட்ட ரீதியான முறைகளாலும் இந்திய சாம்ராஜ்யத்திலுள்ள பிரஜைகளின் நன்மையை நாடி உழைப்பதே" காங்கிரஸ் மகாசபையின் லக்ஷியமாகக் குறிக்கப்பட்டது. இதே லக்ஷியம் 1908-ல், "குடியேற்ற நாடுகளில் நிலவும் சுயாட்சி பெற" என்றும், 1920-ல் "எல்லா சட்ட பூர்வமான சாத்வீக முறைகளினாலும் சுயராஜ்யம் பெற" என்றும், லாகூரில் 1929-ல் "பூரண சுதந்திரம் பெற" என்றும் மாற்றி யமைக்கப்பட்டது.

சூரத்தில் 1907 டிஸம்பர் 28உயன்று கூடிய கூட்டத்தில் "இந்திய மகாஜனங்கள், பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திலுள்ள சுயாட்சி பெற்ற மற்ற குடியேற்ற நாடுகளின் அந்தஸ்தைப் பெற முயற்சி செய்வதும், சாம்ராஜ்யப் பிரஜைகளுக்குரித்தான உரிமைகளையும் பொறுப்புகளையும் அவர்களும் அனுபவிக்கச் செய்வதுமே காங்கிரஸ் மகாசபையின் லக்ஷியமாகும்" என்று கூறப்பட்டது. சர்க்காருடன் ஒத்துழையா இயக்கத்தை 1920-வது ஆண்டில் நடந்த காங்கிரஸ் மகாசபையின் விசேஷ கூட்டம் ஏற்றுக்கொண்டது.

லக்ஷ்மணபுரியில் (1899) வகுத்த திட்டத்தின்படி மகாசபை விவகாரங்களை, சபையால் தேர்ந்தெடுக்கப்பட்ட 45 நபர்களை கொண்ட ஒரு கமிட்டியிடம் ஒப்படைக்கப்பட்டது. காசியில் 1905-ல் நடந்த கூட்டத்தில் மற்றும் பதினைந்து பேரடங்கிய ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டு அவர்கள் காங்கிரஸ் மகாசபைத் தீர்மானங்களை நிறைவேற்றி வைப்பதற்கான காரியங்களைச் செய்யவேண்டுமெனத் தீர்மானிக்கப்பட்டது. கல்கத்தாவில் (1906) நடந்த கூட்டத்தில் மாகாணங்களுக்குப் பிரத்தியேகக் காங்கிரஸ் கமிட்டிகள் ஏற்படுத்தப்பட்டன. 1908-வது ஆண்டில் சூரத்தில் நடந்த மகாநாட்டில் காங்கிரஸ் மகாசபை நிர்வாகம் பெரிய மாறுதல்களை அடைந்தது. அதில் இந்தியக்காங்கிரஸ்கமிட்டியின் நபர்களின் தொகையை 107-ஆகப்பெருக்கப்பட்டது.

இதில் ஐந்திலொருபங்காவது முகம்மதியர்களாக இருத்தல் வேண்டும். காங்கிரஸ் அக்கிராசனரும் இரண்டு பொதுக் காரியதரிசிகளும் கூட இதில் அங்கத்தினர்களாவர். விஷயா லோசனைக் கமிட்டியில் இவர்களும் இன்னும் மாகாணங்களி லிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட சிலரும் வீற்றிருந்தனர். இந்த நிர்வாகத் திட்டம் 1915-வது ஆண்டு வரையில் அமுலிலிருந்தது.

## சர்க்கார் ஏற்காத கோரிக்கைகள்

### 1918-வது ஆண்டு வரை

காங்கிரஸ் மகாசபை அடிக்கடி வற்புறுத்திக் கூறிய பல நியாயமான கோரிக்கைகள் 1918-வது ஆண்டு வரையில் சர்க்காரால் ஏற்கப்படவில்லை. அவையாவையென இங்கு கூறப்பட்டிருக்கின்றன. 32 வருஷம் கதறி முறையிட்டும் இவைகளுக்கு சர்க்கார் செவி சாய்க்காததினின்றும் அவர் கள் மனப்பான்மை என்னவென எளிதில் விளங்கும்.

1. இந்தியா கௌன்ஸிலை ஒழிக்க (1885).

2. ஐ. ஸி எஸ். பரீக்ஷைகளை இந்தியாவிலும் நடத்திவைக்க (1885).

3. இந்திய ராணுவச் செலவில் நியாயமான பகுதியை பிரிட்டிஷ் சர்க்கார் ஏற்க (1885).

4. எதிரிகளை ஜூரி வைத்து விசாரிக்க கிரிமினல் வழக்குகளில் அனுமதி கொடுக்க (1886).

5. வழக்குகளில் ஜூரர்கள் அளிக்கும் தீர்ப்பை நீதி பதியும் ஊர்ஜிதம் செய்ய (1886).

6. வாரண்டு பிறப்பித்த வழக்குகளில் எதிரிகள் விரும்பினால் அவர்களை விசாரிக்க வழக்கை மாஜிஸ்திரேட்டு கோர்ட்டிலிருந்து செஷன்ஸ் கோர்ட்டுக்கு மாற்ற வசதி யளிக்க (1886).

7. நிர்வாகப் பொறுப்பை ஏற்றவர்களிடம், வழக்கு விசாரணை செய்து தண்டிக்கும் பொறுப்பு அளித்திருப்ப தைப் பிடுங்கி விட (1886).

8. இந்தியர்களுக்கு ராணுவப் பயிற்சி யளிக்க (1887).

9. இந்தியர்களை சேனையில் உயர்பதவிகளுக்குப் பயிற்றுவிக்க இந்தியாவில் ராணுவக் கல்லூரிகள் ஏற்படுத்த (1887).

10. இந்தியர்களை நிராயுதபாணிகளாக்கிய சட்டங்களை ரத்து செய்ய (1887).

11. கைத்தொழில் கல்வி முறைகளைப் போதிக்கவும், பெரிய தொழில்களின் அபிவிருத்திக்காக தீவிர முயற்சிகள் எடுக்கவும் (1888).

12. சர்க்காரின் நிலவரிக் கொள்கையை மாற்ற (1889).

13. சர்க்கார் நாணய மாற்று முறையை தோன்றிய வாறு மாற்றாமலிருக்க (1892).

14. இந்தியாவில் சுயேச்சையான சிவில் வைத்திய இலாக்காவை அமைக்க (1893).

15. ஐரோப்பிய உத்தியோகஸ்தர்களுக்கு நாணய மாற்று முறையினால் ஏற்படக்கூடிய நஷ்டத்தை சர்க்கார் ஈடு செய்யும் (Exchange Compensation Allowance) பழக்கத்தை நிறுத்த (1893).

16. பலவந்தக் கூலி முறை, கட்டாயப்படுத்தி உணவு பொருள்கள் சேகரிக்கும் முறை, இன்னும் இதுபோன்ற முறைகளை உடனே சட்டத்தின் மூலம் தடுக்க (1893).

17. இங்கிலாந்தில் இந்தியா நிர்வாகம் பொருட்டாக செய்யும் பிரமாதச் செலவைக் குறைக்க (1893).

18. பருத்தி சுங்க வரியை ஒழிக்க (1893).

19. நியாயஸ்தலங்களில் உயர்பதவிகளுக்கு வக்கீல்களை நியமிக்க (1894).

20. குடியேற்ற நாடுகளில் இந்தியர்களின் கேவல நிலைமையைச் சீர்படுத்த (1894).

21. சமஸ்தானங்களில் பிரசுரிக்கப்படும் பத்திரிகைகளுக்கு இட்ட 1891-ம் வருடத்திய வாய்ப்பூட்டுச் சட்டத்தை ரத்து செய்ய (1894).

22. விவசாயிகளின் கடன் பளுவை நீக்க உபாயங்கள் தேட (1895).

23. ரயில் வண்டிகளில் மூன்றாவது வகுப்புப் பிரயாணிகளுக்கு அநுகூலங்கள் செய்ய (1895).

24. மாகாணங்களுக்கு நிதிவரி நிர்வாகத்தில் சுதந்திர மளிக்க (1896).

25. கல்வி இலாக்காப் பதவிகளில் இந்தியர்களுக்கும் நியாயமான உரிமைகள் கிட்டும்படி இலாக்காவைத் திருத்தி அமைக்க (1896).

26. மாகாண ஆள் தூக்கிச் சட்டங்களை ரத்து செய்ய (1897).

27. ராஜத்துரோகச் சட்டம் திருத்தியமைக்கப்படுவது ஜனங்களுக்கு மிகுந்த பாதகம் விளைவிக்கக்கூடியதால் அதை நிறைவேற்றாமலிருக்க (1897).

28. கிரிமினல் சட்டத்துக்குள் நுழைக்க இருந்த பிற்போக்கான திருத்தங்களை நிறைவேற்றாமலிருக்க (1897).

29. அதிருப்தியான அம்சங்கள் நிறைந்த கல்கத்தா முனிசிபல் சட்டத்தை ரத்து செய்ய (1898).

30. பஞ்சாபில் நில உரிமைகளைப் பராதீனப்படுத்தும் சட்டத்தை ரத்து செய்ய (1898).

31. இந்தியர்களின் பொருளாதார நிலைமையை ஆராய ஒரு விசாரணை நடத்த (1900).

32. சாதாரண இலாக்காக்களில் உயர்தர வேலைகளுக்கு இந்தியர்கள் அதிகமாக நியமிக்கப்பட (1900).

33. பொது மராமத்து இலாக்காவில் தலைமை உத்தியோகங்களுக்கு இந்தியர்கள் நியமிக்கப்படுவதிலுள்ள கட்டுப்பாடுகளை நீக்க.

34. போலீஸ் இலாக்காவில் உயர் பதவிகளுக்கு இந்தியரை நியமிக்க. சீமையில் இப்பதவிப் போட்டிப் பரீக்ஷைகளில் இந்தியரும் கலந்து கொள்ள அனுமதிக்க (1901).

35. இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் துருப்புக்களின் சம்பளத்தை அதிகரித்து இந்தியா தலையில் 15 கோடி ரூபாய் அதிகச் செலவைச் சுமத்துவதை ரத்து செய்ய (1902).

36. இந்திய சர்வகலாசாலை விசாரணை கமிஷனின் பிற்போக்கான அம்சங்களைக் கண்டித்து அவைகளை சர்க்கார் ஏற்காமலிருக்க (1903).

37. இந்திய சர்வகலாசாலை சட்டத்தில் சீர்திருத்தங்கள் செய்ய (1903).

38. உத்தியோக இரகசியங்கள் சம்பந்தமாக இயற்றவிருக்கும் சட்டத்தின் பிற்போக்கான அம்சங்களை நீக்க (1903).

39. சீமையிலுள்ள இந்தியக் காரியாலயம், இந்தியா மந்திரிபற்றிய செலவுகளை பிரிட்டிஷ் சர்க்கார் ஏற்க (1904).

40. அடிக்கடி பார்லிமெண்டு சபை நபர்களடங்கிய கமிஷன் இந்திய நிலைமையை விசாரிக்க வென்று ஏற்படுத்த (1905).

41. பூர்ண ஸ்தல சுயாட்சி உரிமைகள் அளிக்க (1905).

42. கிரிமினல் சட்டத் திருத்த மசோதாவின் விபரீதப்போக்கை அகற்ற (1908).

43. பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டிட்ட 1908-வது வருடச் சட்டத்தை ரத்து செய்ய (1908).

44. கட்டாய இலவச ஆரம்பக் கல்வியை எங்கும் பரப்ப (1908).

45. தனித்தொகுதிகள் ஏற்படுத்திய சட்டங்களின் பிற்போக்கான அம்சங்களை வெறுத்து அவைகளை ரத்து செய்ய (1909).

46. எல்லைப்புற மாகாண நிர்வாகத்திலிருக்கும் ஊழல்களைப்பற்றி விசாரணை செய்ய (1909).

47. சட்ட மெம்பர் பதவிகளுக்கு வக்கீல்களையும் அட்டார்னிகளையும் நியமனம் செய்ய (1910).

48. சட்ட விரோதமான கூட்டங்கள் சம்பந்தமாக இயற்றப்பட்ட சட்டத்தை ரத்து செய்ய (1910).

49. இந்தியப் பத்திரிகைகள்பற்றிய சட்டத்தை ரத்து செய்ய (1910).

50. தினேதினே அதிகரித்துக் கொண்டுவரும் துரைத்தனச் செலவுகளைப்பற்றி விசாரிக்க ஒரு கமிஷன் நியமனம் செய்ய (1910).

51. ராஜீயக் கைதிகள் விஷயத்தில் தாராளமான மனப்பான்மை காண்பித்து, சிறையினின்றும் விடுவிக்க (1910).

52. கோகலேயின் ஆரம்பக் கல்வி மசோதாவை முழு மனதுடன் சர்க்கார் ஆதரிக்க (1912).

53. ஐக்கிய மாகாணத்துக்கு மந்திரிகளுடன் கூடிய கவர்னர் நியமிக்க (1912).

54. பஞ்சாப் மாகாணத்துக்கு ஓர் நிர்வாகச் சபை நிறுவ (1912).

55. சீமையிலுள்ள இந்தியாக் கௌன்ஸிலைச் சீர் திருத்தி யமைக்க (1913).

56. இங்கிலாந்திலுள்ள இந்திய மாணவர்களின் நன்மைக்காக பிரத்தியேக வசதிகள் அளித்து, அவர் களைப் பாதுகாக்க (1915).

---

## அத்தியாயம் 3

---

## மகாசபை ஆரம்பகால வேலை

காங்கிரஸ் மகாசபை ஆரம்பித்து இன்று ஐம்பதாண்டு கள் பூர்த்தியாகின்றன. தேசீய அபிவிருத்தியில் பல அம் சங்களையும் தழுவி, அதற்கான முயற்சி ஒவ்வொன்றை யும் செய்து வந்திருக்கிறது இம் மகாசபை. மகாசபை யின் இளம்பருவத்தில் அதன் தீர்மானங்கள் எல்லாம் நாட் டில் பல பிரிவைச் சார்ந்த ராஜீயவாதிகள் மனத்திற்கு முற்றிலும் இசைந்தவையாக இருந்தன. நாளாகவாக அபிப்பிராய பேதங்கள் உண்டாகி அதன் திட்டங்களுக்கு மாறான திட்டங்களை ஆதரிக்கும் வேறு கக்ஷிகளும் நாட் டில் தோன்ற ஆரம்பித்தன.

போர்க்களத்தில் நிற்கும் தளகர்த்தர்கள், ஒரு விநாடியில் நிலைமையைச் சமாளிக்க தாங்கள் செய்யவேண்டியது என்ன என்று தீர்மானித்து உடனே பிரயத்தனத் துறையி லிறங்குவர். ராஜீய உலகில் அப்போகொத்த தீவிர முடிவுகளைச் செய்ய முடிவதில்லை. தலைவர்கள் ஒரு தீர்மானத்துக்கு வர பல மாதங்கள் அல்லது வருடங்கள்கூட ஆகின்றன. அதற்குள் துவக்கத்திலிருந்த நிலைமையில் அநேகம் மாறுதல்கள் ஏற்படுகின்றன. ஆதிநாளில் காங்கிரஸ் இயக்கத்தைத் தொடங்கியவர்களிடம், தீவிர ஒத்துழையாமை இயக்கத்தினால் சர்க்காரை வழிக்குக் கொண்டுவரமுடியும் என்று சொன்னால் அவர்கள் திடுக்கிட்டு நிற்பார்கள். வங்காள பிரிவினை, கர்ஸன், மிண்டோ பிரபுக்களின் பிற்போக்கான ஆட்சி, தென்னாப்பிரிக்காவில் காந்தியும் மற்ற இந்தியர்களும் நடத்தப்பட்ட கொடூரம், ஜாலியன்வாலா பாக் படுகொலை இவைகளின் விளைவாகத்தான் இன்று நாட்டில் தீவிர முறைகளை மகாசபை கையாளச் சம்மதித்தது. ஆரம்பித்துப் பதினைந்து ஆண்டுகள் செல்லும் வரை காங்கிரஸ் மகாசபையில் பெரும்பான்மையாக வக்கீல்கள்தாம் அதிகாரத்தை வகித்தவர்கள். அவர்களுக்கு மனுப்போட்டு வாதாடியே பிரிட்டிஷார் மனதைத்திருப்பி விடக்கூடும் என்று இளவயதில் காங்கிரஸ் மகாசபை நினைத்ததில் வியப்பு ஒன்றுமில்லை. இந்த நாள் காங்கிரஸ் நடவடிக்கைகளில் எந்த பிரச்னையும் தெளிவாக எடுத்துக் கூறப்பட்டு, ஜனங்கள் கக்ஷியில் சொல்லப்படுவது நியாயமென நிரூபிக்க, நியாயஸ்தல வாதமே ஓங்கி நின்றதை நாம் காண்கிறோம். இந்த வாதங்களில் பல்லவி ஒன்றுதான். பிரிட்டிஷ்காரர்கள் எல்லோரும் உண்மை விளம்பிகள், நியாயப் பிரியர்கள். இந்தியாவிலிருந்த ஆங்கிலோ இந்தியர்களால் அவர்கள் கலைக்கப்படுகிறார்கள். காங்கிரஸ் மகாசபை ராஜவிசுவாசத்தில் பிறரெவருக்கும் எள்ளளவும் குறையாமலிருக்கையில் இந்திய அதிகார வர்க்கத்தினரிடம் போராடித் தங்கள் உரிமைகளைப் பெற முயல்கிறது. காங்கிரஸ் பிரதிநிதிகள் தேசத்தினருக்கும், சர்க்காருக்குமிடையே நிற்கும் தேச ஊழியர்கள். இந்தியர் பிரிட்டிஷ் பிரஜைகளாயிருப்பதின் நன்மைகள் எல்லாவற்றையும் பெற்று அனுபவிக்கயாதொரு விதமான நிர்ப்பந்தங்களும் இருக்கலாகாது என்பதும் அதன் கருத்து. தீர்க்க தரிசியான மதன் மோகன் மாளவியா அந்த ஆரம்ப காலத்திலேயே இந்தியாவின் நன்மைக்கான கிராமத்

தொழில்களை புனருத்தாரணம் செய்துவைக்க வேண்டியது மகாசபையின் கடமை என விளக்கினர்.

இவற்றிலிருந்து ஆதி காங்கிரஸின் மனப்பான்மையில் கோழைத்தனம் இருந்ததென நாம் தீர்மானிக்கலாகாது. கட்டிடங்கள் எழுவதற்கு முன், கல்லும், சுண்ணாம்பும் ஆறடி ஆழத்தின் கீழ் வீணாய்ப் புதைபட்டதே என இகழ் வாருமுண்டோ ! அவர்கள் நாட்டிய அஸ்திவாரத்தின்மேல் தான் நாம் முதலில் குடியேற்ற நாடுகளைப்போல் சுயாட்சி உரிமை என்றும், பிறகு சாம்ராஜ்யத்துள் சுயராஜ்யம், கடைசியில் பூரண சுயராஜ்யம் என்று, தளம் மேல் தளம் எழுப்ப முடிந்தது. நமது முன்னோர்கள் அரும் பிரயா சைப்பட்டு நமக்குக் காட்டிய நல்வழியாலேயே நாம் இந் நிலையை அடைந்தோம்.

மேற்கூறியபடி 1885 முதல் 1905 வரையில் மகா சபை சட்ட பூர்வமான முறைகளில் அபார நம்பிக்கை வைத்திருந்தது. வங்காளப் பிரிவினைச் சட்டத்திற்கு எதிராகக் கிளர்ச்சி ஏற்பட்ட உடனே மகாசபை தீவிர முறைகளை ஆதரிக்கத் தொடங்கியது. இதை அடக்கச் சர்க்கார் கையாண்ட அடக்கு முறைகள் எல்லோராலும் அநாகரீகமானதென இகழப்பட்டது. சர்க்காரின் கடுமை யானமுறைகள் வாலிபர்களிடையே ரோஷமுண்டாக்கி ஆங் காங்கு ராஜீயக் கொலைகளும் சில நடந்தன. இதன் பயனு கக் கடைசியில் 1911-ல் வங்காளப் பிரிவினையை சர்க்கார் ரத்து செய்துவிட்டதாக ராஜசாசன மூலம் அறிவிக்கப் பட்டபொழுது மகாசபை தன் லக்ஷியத்தில் வெற்றியடைந் ததாக ஜனங்கள் பெருமகிழ்ச்சி கொண்டனர். மக்க ளிடையே உள்ள ராஜ விசுவாசமும், ஆங்கிலேயர்களிடை வைத்த நம்பிக்கையும் பன்மடங்கு அதிகமாயிற்று. 'பிரிட் டிஷ் தர்மம் இதுதான்' எனப் பலரும் ஆரவாரம் செய் தனர்.

காங்கிரஸ் மகாசபை ஆங்காங்கு சில சீர்திருத்தங்கள் ஏற்பட்டபோதிலும் இந்தியா சுயாட்சி பெறவேண்டுமென, தான் கொண்ட லக்ஷியத்திலேயே கண்ணுங்கருத்துமாக இருந்தது. இருபதாவது காங்கிரஸ் மகாசபையில் முதன் முதலாக சர் ஹென்ரி காட்டன் நாளடைவில் இந்தியாவும் சமஸ்தானமும் ஒன்றுகூடி சமஷ்டி அரசியல் ஏற்படும் எனத் தன் தீர்க்கதரிசனத்தால் கண்டார்.

காங்கிரஸ் இயக்கத்தில் சேர்ந்து உழைத்தவர்கள் சர்க்கார் விரோதிகள் அல்லவென்பது, சர்க்காரின் வாக்காலே யன்றி சர்க்கார் அவர்களை உயர்தரப் பதவிகளுக்கும் உத்தியோகங்களுக்கும் தேர்ந்தெடுத்துக் கொண்டதினின்றும் அறியலாம். காங்கிரஸ் வாதிகளில் அநேகர் நீதிமன்றப் பதவிகள் அளிக்கப்பட்டனர். சென்னை ஹைகோர்ட் ஜட்ஜாக வேலைபார்த்த சர் எஸ். சுப்பிரமண்ய அய்யரை முதல் காங்கிரஸ் கூட்டத்திலேயே கண்டோம் அல்லவா! 1908-ல் சென்னையில் காங்கிரஸ் கூட்டத்தை நடத்த முழுப் பொறுப்பும் ஏற்ற வி. கிருஷ்ணஸ்வாமி அய்யரும் வெகுகாலம் சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜாக இருந்தார். இன்னொரு சென்னை ஜட்ஜு சர் சங்கரன் நாயர் 1897-ம் ஆண்டில் காங்கிரஸ் அக்கிராசனர் பதவியை வகித்தவர். நீதிபதி சர் வேப ராமேசம் 1898 முதல் சிறிது காலம் தீவிர காங்கிரஸ் வாதியாக இருந்தார். சர். சேஷகிரி அய்யர், பி. ஆர். சுந்தர அய்யர் ஆகிய சென்னை நீதிபதிகளும் காங்கிரஸ் மகாசபை ஊழியர்களாக இருந்தவர்கள். நீதிபதி வேலையினின்று விலகிய பின்னரும், சர் எஸ். சுப்பிரமணிய அய்யர் தீவிரமாகக் காங்கிரஸ் சேவையிலீடுபட்டு பெஸண்டு அம்மையார் சிறைப்படுத்தப்பட்டபொழுது தன் 'சர்' பட்டத்தை உதறி எறிந்து மாண்டேகு செம்ஸ்போர்டு பிரபுக்களின் ஆத்திரத்துக்குள்ளானார். பழுத்த மிதவாதியாக இப்பொழுது விளங்கும் சர் பி. எஸ். சிவஸ்வாமி அய்யர் சிறிதுகாலம் காங்கிரஸ் இயக்கத்தில் கலந்துகொண்டார். இந்தியச் சட்ட நிர்வாக மெம்பாராகவும், சென்னை நிர்வாக சபை அங்கத்தினராகவும் விளங்கிய சர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் 1917—1919 ஆண்டுகளில் காங்கிரஸ் வானத்தில் இளஞ் சூரியன்போல் பிரகாசித்தார். ராமஸ்வாமி அய்யர் 1918-ல் சர்க்காரை எதிர்த்துச் சாத்விகப் போரில் ஈடுபடவும் தயாராக இருந்தவர். இப்பொழுது திருவனந்தபுரம் திவானும், முன் ராஜப்பிரதிநிதி நிர்வாக சபை அங்கத்தினராகவு மிருந்த சர் முகமது ஹபிபுல்லா 1898-ல் காங்கிரஸ் மேடையில் தோன்றி தனது சொல்வன்மையைக் காட்டியவர். சர் எம். கிருஷ்ண நாயர், சர். கே. வி. ரெட்டி இவ்விரு சென்னைச் சட்ட நிர்வாக மெம்பர்களும் காங்கிரஸில் ஈடுபட்டவர்களே. சர் எம். ராமச்சந்திர ராவ் வெகு நாளாகக் காங்கிரஸ் மகாசபைப் பிரமுகர்களில் ஒருவர்.

ஜி. ஏ. நடேசன் வெகுநாள் வரை தீவிரக் காங்கிரஸ் வாதியாக இருந்தார். இவ்விதம் சென்னை ஆறு நியாயாதிபதிகளையும் ஆறு நிர்வாக சபை அங்கத்தினர்களையும் காங்கிரஸுக்கு ஈன்றது. சர் ஆர். கே. ஷண்முகம் செட்டியாரை இந்திய சர்க்கார் காங்கிரஸ் மகாசபையினின்றும் பொறுக்கி எடுத்து ஆட்டாவாவுக்கு அனுப்பினார்கள். காங்கிரஸ் சபையிலிருந்து முதன் முதல் சர்க்கார் தயவை ஏற்றவர் வி. ஜம்புலிங்க முதலியாரெனக் கூறலாம். இவர் 1893-ல் சென்னை சட்ட சபை மெம்பராக இருந்தார். சர்க்கார் இவரை சென்னை சிவில் கோர்ட்டு ஜட்ஜு பதவிக்கு நியமித்தார்கள். பம்பாயில் தியாப்ஜி, திலங்கு, சந்தவர்க்கர் என்ற தீவிரக் காங்கிரஸ் வாதிகளில் மூவர் ஹைகோர்ட்டு ஜட்ஜுகளாக நியமிக்கப்பட்டனர். சர். சிமன்லால் ஸெதல்வாட் என்ற காங்கிரஸ்வாதி பம்பாய் நிர்வாக சபை அங்கத்தினராக நியமிக்கப்பட்டார். கல்கத்தாவில் வங்காளப் பிரிவினையை முழு பலத்துடன் எதிர்த்த காங்கிரஸ் வாதியான ஏ. சட்டர்ஜி கைமேற் பலனாக ஜட்ஜாக நியமிக்கப்பட்டார். எஸ். பி. சின்ஹா என்ற காங்கிரஸ் வாதியை 1908-ல் இந்திய சட்டமெம்பர் பதவிக்குப் பொறுக்கினார்கள். சர். பி. என். சர்மாவும் இதே மாதிரி 1920-ல் சட்ட மெம்பராக ஆனார். இன்னும் எஸ். ஆர். தாஸ், பி. வி. மிட்டர், சர். தாஜ் பகதூர் சாப்ரூ, சையுது ஹஸன் இமாம், சச்சிதானந்த சின்ஹா, இவர்கள் எல்லோரும் காங்கிரஸ் மகாசபையில் பங்கெடுத்துக் கொண்டவர்களாயினும், சர்க்காரின் கீழ் பெரிய உத்தியோகங்களில் அமரவும் கொடுத்து வைத்தவர்கள். காங்கிரஸ் வாதிகளைச் சர்க்கார் பட்டங்கள் வழங்கியும் கௌரவித்ததுண்டு. கோபால கிருஷ்ண கோகலே சர்க்காரிடமிருந்து சர். பட்டம் ஏற்க நிரந்தரமாக மறுத்த மகான். அவருக்கு நிர்வாக சபை அங்கத்தினர் பதவியும் சர்க்கார் அளிக்க முன் வந்தார்கள். ஆனால் அதையும் வகிக்க மறுத்து, ஒரு சாதாரண இந்திய ஊழியனாகவே என்றும் வாழ விரும்பினார். சக்கரவர்த்தியின் அந்தரங்க சபைக்கு நியமிக்கப்பட்ட வி. எஸ். ஸ்ரீனிவாச சாஸ்திரி சர்க்கார் கீழ், பல பதவிகளை ஏற்றுக்கொண்டிருக்கிறார். அவர் 1927-ல் முதல் இந்திய ஏஜெண்டாக தென்னாப்பிரிக்காவுக்கு அனுப்பப்பட்டார்.

இப்படியாக காங்கிரஸ் வாதிகள் சர்க்கார் கீழ் சேவகத்திற்கு அமர்ந்த விமரிஸை விளக்கப்பட்டதினின்றும் நாம் அவர்கள் அந்தப் பதவிகளுக்கு லாயக்கற்றவர்கள் என்று கூறவில்லை. அவர்கள் எல்லோரும் மிகுந்த கல்வியாளர். குணத்திலும் நேர்மையிலும் மேம்பட்டவர்கள். பெரும் பதவிகளை வகித்து நடத்த எவ்விதத்திலும் யோக்கியதை வாய்ந்தவர்கள். ஆகவே சர்க்காரும் பொறுப்பு வாய்ந்த பதவிகளுக்கு ஏற்றவர்களை பொறுக்க காங்கிரஸ் மண்டலத்தைத்தான் ஆராய வேண்டி நேரிட்டது.

---

## அத்தியாயம் 4

---

### காங்கிரஸும், பிரிட்டனும்

இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி பிற்போக்கும், சீர்திருத்தமும் தொடர்ந்து வரும் கதையாகவே இருக்கிறது. எப்பொழுதும் சீர்திருத்தத்திற்கு முன் பிற்போக்கு தோன்றிக்கொண்டிருந்தது. ஜனங்களை நன்றாய் அடக்கும் வரை அவர்களுக்கு சிறிதும் தாக்ஷண்யம் காண்பிக்கக் கூடாதென்ற காரணத்தின்பேரில் பொதுஜனக் கிளர்ச்சி துவங்கியதும் அடக்குமுறை தலையெடுத்து வந்தது. 1870-ல் லிட்டன் பிரபுவால் கொண்டுவரப்பட்டு உடனே வாபஸ் வாங்கப்பட்ட அச்சுச் சட்டம்தான் இந்த முறைக்கு வழி காட்டியாயிருந்தது. மக்களிடை வளர்ந்து வந்த சுயமதிப் புணர்ச்சிக்கு ஆயுதச் சட்டம் மற்றொரு பதிலாக இருந்ததோடு வரவர அதிகமாக வருத்தும் புண்ணாகவும் இருந்து வந்தது. அதன்பின் 1886-ல் வருமான வரிச் சட்டம் அமுலுக்கு வந்தது. இதற்கு அச்சமயத்தில் பலமான எதிர்ப்பு ஏற்பட்டது.

வருஷா வருஷம் காங்கிரஸ் வளர, வளர அதிகாரிகளுக்கு அதன்மீது சந்தேகம் வளர்ந்தது. காங்கிரஸ் சமூக சீர்திருத்தம் மாத்திரம் செய்வதன்றி அரசியல் சம்பந்தமாகவும் விசேஷ கவனம் செலுத்தவேண்டுமென்று ஹ்யூமுக்கு உபதேசித்த டப்ரின் பிரபு பிறகு காங்கிரஸுக்கு பகிரங்க விரோதியானார். அவர் காங்கிரஸ் ராஜத்துரோக

மானதென்றும் கூறினர். 1886-ல் கல்கத்தாவில் வைசிராய் டப்ரின் பிரபுவாலும், 1887-ல் சென்னையில் கவர்னர் கன்னிமாரா பிரபுவாலும் காங்கிரஸ் வரவேற்கப்பட்டது. ஹ்யூமுக்கு மகிழ்ச்சி அளித்தது. ஆயினும் பிற்காலத்தில் அதன்பால் மாகாண அதிபதிகள் வெறுப்பு கொண்டனர். இவர்களில் ஒருவரான சர். ஆக்லண்ட் கால்வன் (வடமேற்கு மாகாணம்) காங்கிரஸ் சமூக சீர்திருத்தத்தை மேற்கொள்ள வேண்டுமென்று உபதேசித்தார். அதுதான் காங்கிரஸின் முதல் வேலை யென்பதும், டப்ரின் பிரபுவின் யோசனையின் பேரில் அரசியல் சபையாக மாற்றப்பட்ட தென்பதும் அவருக்குத் தெரியாது. இந்த இயக்கம் பிஞ்சிலே பழுத்ததென்றும் 3-வது காங்கிரஸிலிருந்து (சென்னை 1887) அது தீவிரமாய் மாறியது அபாயகரமான தென்றும சர் ஆக்லண்ட் கால்வின் நினைத்தார். இந்த கண்டன முறை விரோதத்தைத் தோற்றுவிப்பதோடு ராஜ விஸ்வாசிகளுக்கும் தேசிய வாதிகளுக்கு மிடையில் பிளவு உண்டாக்கும் என்றார். காங்கிரஸ் இந்திய சமூகத்தின் பிரதிநிதி யென்று சொல்லிக்கொள்வது நியாயமல்ல வென்றும் கூறினர். விரோதம் முந்தியே உள்ளதென்றும், எதிராக ஏதாவது இயக்கம் தோற்றினால் அதை ஆங்கிலோ-இந்தியர்களும், தற்குறிகளும், சுயநலப் புலிகளுமே பின்பற்றுவார்களென்றும் மிஸ்டர் ஹ்யூம் பதிலளித்தார். "முஸ்லீம்களும் மற்றவர்களைப்போல் பொதுநலம் வேண்டுகிறவர்கள்தான். அவர்களுடைய அசிரத்தையை நிர்மூலமான பிரித்தாளும் கொள்கைக்காரர்களான சில அதிகாரிகளே உபயோகித்துக் கொள்கிறார்கள். அவர்கள் ஹிந்துக்களைவிட தாழ்ந்தவர்கள் என்று சொல்வது அபாண்டமான பழி" என்று சொல்லி சர் சாலர் ஜங்க், ஜட்ஜ் பத்ருதீன் தியாப்ஜி, ஜட்ஜ் சையது முகம்மது முதலியவர்களை திருஷ்டாந்தமாகக் காண்பித்தார். பிரிட்டனில் பார்லிமெண்டு தேர்தலில் நூற்றுக்கு 10 பேரே ஓட்டு செய்வதை எடுத்துக் காண்பித்து வேமத் தொகுதியில் பணத்திற்கு இரண்டு ஸ்தானங்கள் விற்கப்பட்டதையும், தம்முடைய தந்தை ஒன்றை வாங்கியதையும் குறிப்பிட்டு, இந்த பார்லிமெண்டைவிட காங்கிரஸ் அதிகப் பிரதிநிதித்துவமுள்ளதுதானென மிஸ்டர் ஹ்யூம் வற்புறுத்தினர்.

காங்கிரஸ் இந்தியாவின் புத்துயிர்ப்பை மத, ஆசார, சமூக, ராஜீயத் துறைகளெல்லாவற்றிலும் நிலைநாட்டு மென்றார். காங்கிரஸ் இயக்கம் அபாயகரமானதென்ற குற்றச் சாட்டுக்குப் பதிலாக அதிகாரத்வமும் சுயநலவாதி களாலும், ஆஷாட பூதிகளாலும் சூழப்பட்டிருப்பதோடு உண்மையான பொது ஜன அபிப்பிராயத்தை அறியாம லிருப்பதைப்பற்றி எச்சரித்தார். "கௌரவம் வாய்ந்த இந்தியர் தங்களை சந்தேகிக்கும்படியான அதிகாரிகள் உள்ள ஸ்தலங்களுக்கு மன மொப்பிச் செல்வதில்லை" யென அவர் எடுத்துக் காட்டினார்.

இவ் விஷயத்தில் சர் வில்லியம் வெட்டர்பர்ன், அதிகார வர்க்கத்தின் போக்குக்கு "அவர்களுக்குக் கண்களும் கிடையாது, காதும் கிடையாது. விவசாயிகளின் மந்தத்தை விரட்டி ஓட்டி அவர்களை புத்துயிர் பெறச் செய்த சாமர்த் திய வாதிகளின் பகைமையால் அவர்கள் அழிந்தார்கள்" என்று பிரெஞ்சு பூர்பன் குலத்தின் கதியை உபமானமாகக் காண்பித்தார்.

## பல இடையூறுகள்

அலகாபாத்தில் நடந்த நான்காவது காங்கிரஸுக்கு அநேக இடையூறுகள் ஏற்பட்டன. 'பந்தலமைப்பதற்கு இடம்கூடக் கிடைக்கவில்லை. 1887-ல் தமது அதிகாரி யின் உத்தரவை மீறி சென்னை காங்கிரஸிற்குச் சென்ற ஒருவர் ரூ. 20,000 ஜாமீனாகக் கட்டவேண்டி நேரிட்ட தென ஸ்ரீமதி பெஸண்ட் தமது புத்தகத்தில் குறிப்பிட் டிருக்கிறார். 1890-ல் வங்காள சர்க்கார் எல்லா இலாகா அதிகாரிகளுக்கும் ஒரு சுற்றறிக்கை விடுத்தனர். அதன் மூலம் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் அத்தகைய கூட்டங் களுக்குப் போவது உசிதமல்லவென்றும், போகக் கூடா தென்றும் குறிப்பிடப்பட்டது. கவர்னரின் அந்தரங்க காரியத் தரிசிக்கு காங்கிரஸ் அனுப்பிய ஏழு பிரவேச அனுமதிச் சீட்டுகளும் திருப்பி யனுப்பப்பட்டன. 1891ம் ஆண்டு ஜூன் மாதம் 25உ சுதேச சமஸ்தான பத்திரிகைகளின் உரிமைகளைக் கட்டுப்படுத்தி ஒரு இந்திய சர்க்கார் அறிக்கை வெளியிடப்பட்டது. இதை காங்கிரஸ் 1891-ல் தீவிரமாக ஆக்ஷேபித்தது. அந்த அறிக்கை வருமாறு:

"கவர்னர்-ஜெனரல் ஆதீனத்திற் குட்பட்டு, பிரிட்டிஷ் இந்தியா எல்லைக்கு வெளிப்பட்ட இடங்களில் பிரசுரமாகும்

பத்திரிகைகள் சம்பந்தமாக அமுலிலுள்ள விதிகளைப்பற்றி இது வரை சில தப்பபிப்பிராயங்கள் இருந்து வந்திருப்பதால் சபை யோடுகூடிய கவர்னர்-ஜெனரல் தயவு கூர்ந்து கீழ்வரும் உத்திர வைப் பிறப்பித்திருக்கிறார் :—

"1. 1-8-1891-க்கு பின், ராஜீய ஏஜெண்டிடமிருந்துஎழுத்து மூலமாக அனுமதி பெறாமல், பொதுச்செய்தியும், அதைப்பற்றிய கருத்தும் அடங்கிய பத்திரிகைகளோ, மற்றஅச்சிடப்பட்ட காகிதங் களோ, பிரிட்டிஷ் இந்தியாவில் சேராமல் சபையோடு கூடிய கவர்னர்-ஜெனரல் ஆதீனத்துக்குட்பட்ட எந்த ஸ்தலத்திலும் பதிப் பிக்கவோ, அச்சிடவோ கூடாது.

"2. இந்த உத்திரவு மீறப்பட்டால் ராஜீய ஏஜெண்டு கீழ் வரும் நடவடிக்கைகளை அவருடைய கையெழுத்துள்ள உத்திரவு மூலம் எடுத்துக்கொள்ளலாம் :—

(அ) உத்தரவை மீறியவரை குறிப்பிட்ட ஸ்தலத்தை விட்டு உத்தரவு பிறப்பிக்கப்பட்ட தினத்திலிருந்து ஏழு நாட்களுக் குள் வெளியேறும்படி செய்யலாம்.

(ஆ) அதோடு சர்க்கார்ஏஜெண்டின் கையெழுத்தோடுகூடிய அனுமதியின்றி குறிப்பிட்ட ஸ்தலத்திற்குள் வரக்கூடாதென்று தடுக்கலாம்.

" 3. மேலே கடைசி பாராவில் சொல்லப்பட்ட உத்திரவை மறுப்பவர்கள் பலாத்காரமாக வெளியேற்றப்படுவார்கள்."

காங்கிரஸை முஸ்லீம்கள் எதிர்க்கும் பூச்சாண்டி முதலிலேயே கிளப்பப்பட்டது. ஆனால் 1888-ல் அலகா பாத் காங்கிரஸில் ஷம்ஸுல் உல்உலேமாவின் பகிரங்கமான ஆதரவு கிடைத்தது. ஷேக்ரஜா கான் முஸ்லீம்களில், அதிகாரவர்க்கத்தினர்தான் காங்கிரஸை எதிர்க்கிறார்களே ஒழிய முஸ்லீம் மக்கள் எதிர்க்கவில்லை என அறிவித்தார். 1893-ல் சட்ட சபைகளில் ஜனங்களின் பிரதிநிதிகள்— (சென்னையில் ஏழு பேர்தான் ; மற்ற மாகாணங்களிலும் குறைவே)—தங்களுடைய கருத்தை வெளியிட வாரம்பித் தனர். உடனே உத்தியோகங்களில் இந்தியர்களுக்கிருந்த உரிமைகளில் சிலவற்றை குறைத்துவிட வேண்டுமென்று சர்க்காருக்குத் தோன்றிற்று. கல்வி இலாகாவில் எல்லா ஸ்தானங்களுக்கும் இந்தியர்களுக்கும் ஐரோப்பியர்களுக் கும் சம உரிமை யிருந்தது. ஆனால் சம்பளங்கள் சமமா யில்லை. சில உத்தியோகங்கள் இந்தியர்களுக்கு மறுக் கப்பட்டதோடு அவர்களுடைய அந்தஸ்து குறைக்கப்

பட்டு சம்பளமும் இன்னும் குறைக்கப்பட்டது. ஐரோப்பிய அதிகாரிகள் "நாணயமாற்று சரிக்கட்டுபடி" என்ற பெயரால் அதிகச் சம்பளம் வாங்கலாயினர். இதைத்தான் லோகமான்ய திலகர் "1893ளு ஜனவரி 26உ ஆரம்பமான அட்டூழியம்" என்றார். இந்தியாவிற்கென பிரிட்டிஷ் சர்க்கார் செய்யும் செலவு 30 வருஷத்திற்குள் 70 லக்ஷத்திலிருந்து 160 லக்ஷம் பவுனாகிவிட்டது.

124(A), 153(A) பிரிவுகள் 1897-ம் ஆண்டில் சிருஷ்டி செய்யப்பட்டன. இவைதான் உண்மையாக சர்க்கார் மீது துவேஷத்தைப் பிறப்பித்தன. சென்ற நூற்றாண்டிலும் கூட 108-வது, 144-வது பிரிவுகள் அரசியல் வாதிகள் மீது பிரயோகிக்கப்பட்டன. 1893-ம் ஆண்டு ரகசிய பத்திரிகை கமிட்டிகள் அமைக்கப்பட்டன. 1848-ம் வருஷம் சென்னையில் நடந்த பதினான்காவது காங்கிரஸில் இதை டபிள்யூ. ஏ. சேம்பர்ஸ் தீவிரமாக எதிர்த்தார். தீர்மானத்தை ஸ்ரீ என். சி. கெல்கார் ஆதரித்தார். "பத்திரிகை கமிட்டிகள் நியமனம் மிகவும் அநியாயம். இது வெறும் மேல்பூச்சுள்ள பத்திரிகைத் தணிக்கைதான். பிரிட்டிஷ் இந்தியாவுக்கே இவைகள் அவமானத்தைக் கொடுப்பதாகும்", என்று கண்டித்தார். 1897-ல் சர் ஜேம்ஸ் ஸ்டீபன், "ஆங்கில பத்திரிகைகள் சொல்வதையெல்லாம் நீங்களும் சொல்லலாம். அவைகளைவிட தீவிரமாக இருக்கவேண்டுமென்பது நினைக்கக்கூடாத காரியம்" எனக் கூறியதை ஸ்ரீமான் மூதோக்கார் எடுத்துக் காட்டினார். 1897 முதல் பூனா பிளேக் கிளர்ச்சி சம்பந்தமாக கைதி செய்யப்பட்டு விசாரணையின்றி சிறையிலடைபட்டிருந்த "நாட்டு" சகோதரர்கள் 1897-ல் விடுதலை செய்யப்பட்டனர். இருபதாவது நூற்றாண்டின் முதல் ஐந்து வருஷங்கள் கர்ஸன் பிரபுவின் தீவிர அமுல் நடந்தது. அவர் கல்கத்தா நகரசபையின் அதிகாரங்களைக் குறைத்ததும், அவருடைய "சர்க்கார் ரகசியங்கள் சட்ட"மும், அவர் சர்வகலாசாலைகளை சர்க்காரில் சேர்த்துக்கொண்டதும், அதனால் கல்வியின் விலை உயர்ந்ததும், இந்தியர் அசத்தியர்களெனத் தூற்றி வந்ததும், அவரது "பன்னிரண்டு சீர்திருத்தங்கள்" அடங்கிய திட்டமும், திபேத் மிஷன் என்று பெருமையாகச் சொல்லப்பட்ட அவருடைய திபேத் படையெடுப்பும், கடைசியில் அவருடைய வங்காளப் பிரிவினையும் இந்தியரின் ராஜவிஸ்வாஸத்தை நிலைகுலையும்படி

செய்து தேசத்தில் ஒரு புது உணர்ச்சியைக் கிளப்பிவிட்டன. நாம் அசத்தியர்களென அவர் கல்கத்தாவில் பேசியதைக் காட்டிலும் நமது சுயமதிப்புக்குக் கேவலமானது, "இந்தியர்கள் தங்களுடைய வாழ்க்கையினாலும் பரம்பரைப் பழக்கத்தினாலுமே பிரிட்டிஷ் ஆட்சியில் உயர்ந்த பதவிகளுக்கு தகுதியற்றவர்களா யிருக்கிறார்கள்" என்று அவர் கூறியதுதான். 24—4—1904-ல் அவர் அமுலுக்குக் கொண்டுவந்த தீர்மானத்தினால் பதவி யேற்பதற்கு பிறப்புதான் முக்கியமேயன்றி அறிவு அல்ல என்று காண்பித்துவிட்டார். இந்த வேலை முறையைக் கண்டே இந்தியா மந்திரி மார்லி பிரபு "இந்தியர்கள் நிறபேத சம்பந்தமான ஆதிக்கத்தைத்தான் ராஜீய ஆதிக்கத்தைவிட அதிகமாக வெறுக்கிறார்கள்" என்று சொன்னார். கர்ஸன் பிரபுவின் ஆட்சியில் பல கமிட்டிகள் நியமிக்கப்பட்டன. புராதன சிலாசாசனங்களின் பாதுகாப்புச் சட்டத்தினால் அவர் இந்தியாவுக்கு விசேஷ நன்மை செய்துள்ளார்.

1889-ல் ரங்கூனில் பிரிட்டிஷ் படையைச்சேர்ந்த சில சோல்ஜர்கள் ஒரு இந்தியப் பெண்ணைக் கற்பழித்துக் கொன்றுவிட்டார்கள். குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கவில்லை. கர்ஸன் பிரபு தைரியமாய் படை முழுவதையுமே தண்டித்தார். 1900-ல் ஸையால் கோட்டையில் 9 வது ஈட்டிப் படையைச் சேர்ந்த இரண்டு சோல்ஜர்கள் ஒரு இந்திய சமையல்காரனை அவன் அவர்களுக்காக ஒரு இந்தியப் பெண்ணைக் கொண்டுவாராததற்காக அடித்துக் கொன்றுவிட்டதாகக் குற்றம் சாட்டப்பட்டனர். இவர்களையும் கண்டுபிடிக்க முடியவில்லை. இந்த சந்தர்ப்பத்திலும் கர்ஸன் பிரபு படை முழுவதையும் தண்டித்தார்.

1900-க்கும் 1906-க்கும் இடையிலுள்ள காலமே இந்திய சரித்திரத்திலேயே மிகவும்நெருக்கடியானகாலம்.மக்களுக்கு சுயமதிப்பு வளர வளர, சர்க்காரின் பிற்போக்குக் கொள்கை வெட்டவெளிச்சமாய் தெரியவாரம்பித்தது. 1893-ல் ஐ. ஸி. எஸ். பதவியில் இருபது இந்தியர்கள்தான் இருந்தார்கள். ஐரோப்பியர்களோ ஆயிரம் பேர். எப்பொழுது? ஐ. ஸி. எஸ். ஆரம்பித்து 35 வருஷங்களுக்குப் பின் இந்த நிலைமை. 1893-ல் பார்லிமெண்டு, இந்தியாவிலும் ஒரே சமயத்தில் பரீக்ஷை வைக்கவேண்டுமெனத் தீர்மானித்தது. "சிவில் சர்விஸ் சரித்திரம் முறிந்த வாக்குதத்தங்களின் கோர்வைதான்" என்று ஸ்ரீசுரேந்தரநாத பானர்ஜி சொன்ன

தில் விந்தை யுண்டா? இந் நிலையில் ஏற்பட்ட சோர்வு காரணமாக 1905-ல் குறிப்பிட்ட காலத்துக்கொருமுறை பார்லிமெண்டு விசாரணை வேண்டுமென்று காசி காங்கிரஸில் அம்பாலால் தேசாய் கொண்டுவந்த தீர்மானத்தின் மூலம் கேட்கப்பட்டது. கர்ஸன் பிரபுவின் சர்வகலாசாலை கமிஷனும், சர்வகலாசாலை சட்டமும் கல்விக் கதவை பொன் பூட்டுகளால் பூட்டிவிட்டன. பொற்சாவி கொண்டுதான் அவைகளைத் திறக்க முடியும். கல்வி பெற அவ்வளவு பணச் செலவு. அவருடைய போலீஸ் கமிஷன் இந்தியர்களை விசேஷ போலீஸ் உத்தியோகங்களுக்கு வரவொட்டாமல் தடுத்தது. போதாக் குறைக்கு வர்த்தகர்களிடையே பேசும்போது, "நிர்வாகமும், கொள்ளையும், ஒன்றுக்கொன்று சேர்ந்தவை தான்" என்றார் கர்ஸன் பிரபு. இவை யெல்லாம் பிரிவினையை எதிர்க்கும் இயக்கத்தால் பலமடைந்த தேசிய இயக்கத்திற்கு இடம் கொடுத்தன.

## வங்கப் பிரிவினை

வங்காளப் பிரிவினை, வங்காளிகளை அவர்களுடைய இஷ்டத்திற்கு மாறாக இரண்டு பிரிவாகப் பிரித்துவிட்டது. இதனால் மிகவும் தீவிரமான எதிர்ப்பு ஏற்பட்டது. சர்க்காரும் தீவிரமான அடக்குமுறையைக் கைக்கொண்டார்கள்.

ஊர்வலங்கள், கூட்டங்கள், ஆர்ப்பாட்டங்கள் எல்லாம் தடுக்கப்பட்டன. ஹர்த்தால்கள் கிளம்பின. மாணவரும், மக்களும் தண்டிக்கப்பட்டனர்.

வங்காள லெப்டினண்ட் கவர்னர் சர். பி. புல்லர் "ரத்தம் சிந்துவது அவசியமாயிருக்கும்" என்று மரியாதையுள்ள ஜனங்களை பயமுறுத்தினர். கிழக்கு வங்காளத்தில் கூர்க்கப் படைகளும் வந்து சேர்ந்தன. இவ்வளவும், ஜனங்கள் ஒரு சிறிதும் பலாத்காரத்தில் ஈடுபடாதபோது. இதை அந்தச் சமயத்திலேயே பண்டித மதன் மோகன மாளவியா குறிப்பிட்டார்.

கீழே அடிக்கப்பட்ட பந்து மேன்மேலும் உயரக் கிளம்புவதைப் போலவும், அடிக்க, அடிக்க அதிகமாக சப்திக்கும் முரசைப்போலவும் 1905—1906-ல் புதிதாகத் தோன்றிய தேசிய உணர்ச்சி, சர்க்கார் நாளுக்குநாள் அதிகமாக,

வெளிப்படையாகக் கையாண்ட அடக்குமுறை அடிகளின் கீழ் வளர்ந்தது. வங்காளக் குறைகள் இந்திய தேசக் குறைகள் ஆயின.

பாஞ்சால கால்வாய் குடியேற்றச் சட்டத்தினால் அந்த க்ஷத்திரிய நாட்டில் பெரிய கிளர்ச்சி உண்டாய் விட்டது. இதன் பயனாக லாலா லஜபதிராயும், சர்தார் அஜித் சிங்கும் நாடு கடத்தப்பட்டனர். கல்கத்தா காங்கிரஸ் இந்தியாவின் பெரிய கிழத்தாவையே தலைவராகத் தேர்ந்தெடுத்தது. தாதாபாய் புகுத்திய 'ஸ்வராஜ்' என்னும் சொல் ஆங்கிலேயரின் எரியும் உணர்ச்சிக்கு எண்ணெயாயிற்று.

மாணவர்கள் ராஜீய கூட்டங்களில் கலந்துகொள்ளக் கூடாதென்று தடுத்த உத்தரவினால் கலாசாலைகள் பகிஷ்காரம் தோன்றிற்று. கிழக்கு வங்காளத்தில் மாத்திரம் 24 தேசிய கலாசாலைகள் ஸ்தாபிக்கப்பட்டன. மாஜி ஜட்ஜ் சர் குருதாஸ் பானர்ஜியின் தலைமையில் வங்காள தேசீயக் கல்வி அபிவிருத்தி சங்கமும் அமைக்கப்பட்டது. 1903-1904 முதல் தமது பத்திரிகையான நியூ இந்தியா மூலம் தேசிய மறுமலர்ச்சிக்குத் தொண்டாற்றி வந்த பாபு விபின சந்திர பால் தேசீயம், தேசீயக் கல்வி, புத்துணர்ச்சி எல்லாவற்றையும் தேசத்திற்கு எடுத்துச் சொல்ல முன்வந்தார். 1907-ல் அவர் ஆந்திர தேசத்தில் மிக வெற்றிகரமாக சுற்றுப் பிரயாணம் செய்தார். ராஜமகேந்திரவரத்தில் ஒரு தேசிய பாடசாலை திறக்கப்பட்டது. அளவிலாத அடக்குமுறை தேசபக்தர்களையும், வீரர்களையும் சிருஷ்டி செய்தது. 1907-ல் மசூலிப்பட்டணத்தில் பாபுவால் விதைத்த தேசிய விதை உடனே முளைத்து 1917, 1921-ல் தேசிய இயக்கங்களால் பயிரிடப்பட்டு பெரிய மரமாக வளர்ந்து இன்றும் மலர், காய், பழம் கொடுத்து சர்க்காரின் புயலையும் எரிச்சலையும் சட்டை செய்யாது நிற்கிறது.

1907-ல் புதிய கருவிகளாகிய சுதேசியம், பகிஷ்காரம், தேசீயக் கல்வி, வேலைத் திட்டங்கள் முதலியவை சிருஷ்டிக்கப்பட்டன. வங்காளத்திலும், மகாராஷ்டிரத்திலும், மத்திய மாகாணத்திலும், பாஞ்சாலத்திலும், ஆந்திர தேசத்திலும் தேசீயக் கலாசாலைகள் பிறந்துகொண்டிருக்கும் போது சுதேசி இயக்கம் நாடெங்கும் பரவிற்று. கைத்தறி நெசவு தொழில் மீண்டும் ஆரம்பிக்கப்பட்டது. இதற்

காக 1905-ம் வருஷம் ஆகஸ்டு 7உ முதன்முதலில் பகிஷ்காரம் ஆரம்பிக்கப்பட்டது. நாடெங்கும் ஒரு புது உணர்ச்சி பரவிற்று. அடக்குமுறையும் தேசிய இயக்கத்திற்குப் பின் வாங்கி விடவில்லை. 1907 மிகவும் நெருக்கடியான சமயம். மிண்டோ பிரபு ஏமாற்றமடைந்தார். கோகலேயைப்பற்றி அவர் "அவர் அந்தரங்கமாக நல்லவர் என்று நம்புகிறேன். ஆனால் அவர் சமீபத்தில் நடந்து கொண்டது எனக்குச் சிறிதும் பிடிக்கவில்லை" என்றார். நமது தேசிய வாதிகளில் சிலர் எப்படி இருவித கொள்கைகளில் கஷ்டப்பட்டார்கள் என்பது இதனால் ஒருவாறு விளங்கும்.

இச் சமயத்தில் வங்காளத்தில் இரண்டு பெரியோர் தோன்றினர். இவர்களிருவரும் இந்தியாவின் சரித்திரத்தில் மிகவும் சிறந்த பகுதியை சிருஷ்டித்தனர். விபின பாபுவைப்பற்றி முந்தியே குறிப்பிடப்பட்டிருக்கிறது. சில வருஷங்களாக அரவிந்தர்தான் இந்தியாவின் உன்னத ஜோதியாய் விளங்கினார். தேசியக் கல்வி இயக்கத்தில் அவர் கலந்து கொண்டது அந்த இயக்கத்திற்கே ஒரு பெருமையை அளித்தது. அவர் முதலில் இங்கிலாந்திலேயே கல்வி கற்று வந்ததால் மற்ற ஐரோப்பியர்களைப் போலவேதான் பரோடா கல்வி இலாகாவைச் சேர இந்தியாவுக்கு வந்தார். ஐ. ஸி. எஸ். பரீக்ஷையில் குதிரை சவாரி செய்ய முடியாததால் தேறவில்லை. அரவிந்தரின் மேதை மின்னல்போல சோபித்தது. சிறிது காலமே அவர் பிரகாசித்தார். குமரி முனை முதல் மேருவரை அவருடைய உணர்ச்சி பரவி நாட்டை உரசாகப் படுத்திற்று.

வங்காளத்தில் ஒன்பது பேர் நாடு கடத்தப்பட்டனர். இந்த தலைவர்கள் வங்காள வாலிபர்களை ஊக்கப்படுத்திக் கொண்டிருந்தார்கள். 1908-ல் விஷயங்கள் உச்சிநிலையடைந்தன. எங்கு பார்த்தாலும் பத்திரிகை பறிமுதல். புது உணர்ச்சியின் கருவிகளாயிருந்த "யுகந்தர்", "சந்தியா", "வந்தேமாதரம்" முதலிய பத்திரிகைகள் அடக்கப்பட்டன. "சந்தியா" வின் ஆசிரியரான ஸ்ரீமான் பிரும்ம பாந்தவ உபாத்யாயா ஆஸ்பத்திரியில் உயிர் துறக்க நேர்ந்தது. அரவிந்தர் மூன்று முறை குற்றம் சாட்டப்பட்டு, பல கஷ்டங்களுக்கு ஆளாகி, கடைசியில் பிரிட்டிஷ் எல்லையை விட்டு புதுச்சேரியில் ஒரு ஆசிரமம் ஸ்தாபித்தார்.

## வெடிகுண்டு வீச்சு

1908-ம் ஆண்டு ஏப்ரல்மீ 30உ இரண்டு வெடிகுண்டுகள் முஜபர்பூரில் கென்னடி மாதர்கள் இருவரின்மேல் விழுந்தன. அப்போது ஜில்லா ஜட்ஜாக இருந்த மிஸ்டர் கிங்ஸ்போர்டு என்ற ஆங்கிலேயரைக் கொல்லவே இவ்வெடிகுண்டுகள் கொண்டு வரப்பட்டன. இந்தக் குற்றத்திற்காக 18 வயதுள்ள குதிராம்போஸ் தூக்கு தண்டனை விதிக்கப்பட்டார். அவருடைய படம் நாடெங்கும் விற்கப்பட்டது. "யுகந்தர்" பத்திரிகையில் பகிஷ்காரம், பலாத்காரம், பிரசாரம் செய்யப்பட்டன. அதன் ஆசிரியரும் சுவாமி விவேகானந்தரின் சகோதரருமான பூபேந்திர நாத தத்தருக்கு நீண்டகாலம் சிறைவாசம் கிடைத்தது. அவருடைய தாயார், தமது புதல்வரின் தியாகத்திற்காக சந்தோஷப்பட்டு 500 வங்க மாதர்களின் வாழ்த்துக்களைப் பெற்றார். தத்தர், தமக்குப் பின் தமது ஸ்தானத்தை வகிக்க 30 கோடி ஆசிரியர்கள் தயார் என்று கூறினார். இந்த நம்பிக்கையே இயக்கத்தின் ஆதாரமாயிருந்தது. இந்த இயக்கத்தினால்தான் அரவிந்தர் "வந்தே மாதரத்தில்" ராஜத்துவேஷப் பிரசாரம் செய்ததாக குற்றம் சாட்டப்பட்டார். 1908-ம் ஆண்டு ஜுலை மாதம் 13உ பால கங்காதர திலகர் கைது செய்யப்பட்டார். அதே தினம் ஆந்திரதேசத்தில் ஸ்ரீ ஹரிசர்வோத்தமராவ் கைதியானார். ஐந்து நாள் விசாரணைக்குப் பிறகு திலகருக்கு ஆறு வருஷ தேசப்பிரஷ்ட தண்டனை விதிக்கப்பட்டது. இதற்கு இன்னும் ஆறு மாதம் சேர்க்கப்பட்டு 1897-ல் குறைக்கப்பட்டது. ஸ்ரீ ஹரிசர்வோத்தமராவுக்கு விதிக்கப்பட்ட ஒன்பது மாத சிறைவாச தண்டனை ஹைகோர்ட்டு மூலம் 3 வருஷத்திற்கு உயர்த்தப்பட்டது. ராஜத்துவேஷத்திற்கு ஐந்து வருஷம் சர்வ சாதாரணமான தண்டனையாய் விட்டது. சீக்கிரத்தில் ராஜத்துவேஷம் மறைந்தது. ஆனால் வெடிகுண்டும், ரிவால்வரும் அந்த ஸ்தானத்தை அடைந்தன. 1908-ல் ராஜத்துவேஷக் கூட்டங்கள் சட்டமும், பத்திரிகைகள் சட்டமும், இரண்டு வருஷங்களுக்குப் பின் கிரிமினல் லா திருத்தச் சட்டமும், பொதுஜன எதிர்ப்புக்கு மாறாக நிறைவேற்றப்பட்டன. ராஜத்துவேஷக் கூட்டங்கள் சட்ட சம்பந்தமாக நடந்த விவாதத்தில், வாலிபர்களிடை கொதிப்பு அதிகரித்து விட்டதென்றால், அவர்களை அடக்க முடியாது போய்விடின், தங்களைப்போன்ற

முதியோர் மீது புகார் சொல்லக்கூடாதென்று ஸ்ரீ கோகலே எச்சரித்தார்.

பல விடங்களில் அரசியல் சம்பந்தமான கொலைகள் நடந்தன. இவைகளில் மிகவும் பேர்போனது லண்டனில் சர் கர்ஸான் வைலியின் கொலைதான். 1907-ல் ஒரு பொதுக்கூட்டத்தில் அவரைக் கொலை செய்த மதன்லால் திங்ரா என்னும் வாலிபர் தூக்கிலிடப்பட்டார். கொலையுண்டவரைத் தப்புவிக்க முயன்ற டாக்டர் லால் காக்காவுக்கும் அக்கதியே நேர்ந்தது. 1909-ல் லாகூர் காங்கிரஸ் தலைவரான பண்டித மதன் மோகன் மாளவியா, இந்தசம்பவங்களையும் நாஸிக் கலெக்டர் ஸ்ரீ ஜாக்சன் கொலையையும் கண்டித்தார். பலாத்கார இயக்கம் பரவிற்று. லண்டனில் சில இந்திய மாணவர்களும் இதைக் கைக்கொண்டனர். மிண்டோ-மார்லி சீர்திருத்தத்தின் பயனாக பம்பாய், சென்னை முதலிய சர்க்கார் நிர்வாக சபைகளில் இந்தியர்களுக்கு உத்தியோகம் கொடுக்கப்பட்டும் இந்த இயக்கம் தணிய வில்லை. "தாமதித்த சீர்திருத்தத்தின் பாதி பலன் அழிந்து விடும்" என்று கோகலே அடிக்கடி குறிப்பிட்டிருந்தார். லார்டு கர்ஸான் நிர்வாகத்தால் ஏற்பட்ட தீங்கை உணர்ந்த லார்டு மார்லி, விக்டோரியா ராணியின் 1858-ம் ௵ அறிக்கையின் வியாக்யானம் லார்டு கர்ஸான் செய்த பிரகாரம் அல்லவென்று மறுத்து "கூடிய வரையில்" என்னும் வார்த்தைகள் நிறபேத வழக்கத்தை அகற்றும் விஷயத்தில் சிறிதும் பொருத்தமானவை யல்லவென்று வற்புறுத்தினார். ஆனால் வங்காளப் பிரிவினை விஷயம் ஒரு முடிவுக்கு வரும் வரையில் நாட்டில் அமைதிக்கு இடமில்லை. சர்க்காரின் மதிப்பு போய்விடும்போல் இருந்தது. கிளர்ச்சிக்குக் காது கொடுத்தால் சர்க்கார் மதிப்பு போய்விடும். சர்க்கார் நிர்வாகம் கிளர்ச்சியை சட்டை செய்யாது, மேலதிகாரிகளுக்கும் கீழ்ப்படியாது; தன்னிச்சையாகவே நடவடிக்கை எடுத்துக்கொள்ளும் என்று லார்டு மிண்டோ சர்க்கார் நிர்வாகத்தின் சாரத்தை கச்சிதமாய் தெரிவித்தார். கடைசியில் வங்காளப் பிரிவினையை ஒழித்துத்தான் வழி தேடவேண்டியதாயிற்று. பிரிவினைக்குக் காரண கர்த்தர்களா யிருந்தவர்கள் தாங்கள் பொறுப்பாளிகள் அல்லவென்று சொல்லிவிட்டனர். லார்டு ஹார்டிஞ்ச வைசிரா

யானபோது சக்கரவர்த்தியின் பட்டாபிஷேக கொண்டாட்ட சமயத்தில் வங்காளப் பிரிவினையை ஒழித்து இந்தியாவின் தலைநகர ஸ்தானத்தை கல்கத்தாவிலிருந்து டில்லிக்கு மாற்ற நடவடிக்கை யெடுத்துக் கொள்ளப் பட்டது. சக்கரவர்த்தி பட்டாபிஷேக வைபவத்தின் முடிவில் 1911-ம் ஆண்டு டிசம்பர் மீ 12வ யன்று சக்கிரவர்த்தி தலைநகர் கல்கத்தாவிலிருந்து டில்லிக்கு மாற்றப் பட்டதாக அறிவித்து, வங்காளத்திற்கு ஒரு கவர்னரும் பீஹார், ஒரிஸாவுக்கு ஒரு லெப்டினண்ட் கவர்னரும் நியமிக்கப்படுவார்கள் என்று தெரிவித்தார். " இந்த மாறுதல்கள் நம்முடைய அன்பார்ந்த பிரஜைகளின் நலத்தையும் சந்தோஷத்தையும் அதிகரிக்கு மென்பது நமது மனப் பூர்வமான விருப்பம் " என்றார்.

வங்காளப் பிரிவினை ஒழிக்கப்பட்டதேயன்றி முன்னிருந்த நிலைமை மீண்டும் ஏற்பட்டு விடவில்லை. கிழக்கு வங்காளம், மேற்கு வங்காளம் என்ற பிரிவினை உருவத்தில்தான் மாறிற்று. மேற்கு வங்காளத்தில் ஒரு பகுதியான பீஹாரை ஒரிஸாவோடு சேர்த்து வேறு மாகாணமாகப் பிரிக்கப்பட்டது. வங்காளம் ஒரு மாகாணமாயிற்று. கிழக்கு வங்காளத்தைச் சேர்ந்த அஸ்ஸாம் வேறு மாகாணமாயிற்று.

வங்கப் பிரிவினை ஒழிந்ததும், தென்னாப்பிரிக்காவில் கங்காணித் தொழில் முறையை நிறுத்தியதும் லார்டு ஹார்டிஞ்சு நிர்வாகத்தில் குறிப்பிடத்தக்கவை என்று சொல்லப்படுகின்றன. ஆனால் தேசீய சீர்திருத்தத்தில் மாகாண சுயாட்சி உரிமைதான் முக்கியம் என்று குறிப்பிட்டு அவர் 25-8-1911-ல் பிரிட்டிஷ் சர்க்காருக்கு அனுப்பிய குறிப்புதான் மிகவும் விசேஷமானது.

1911-ல் கல்கத்தாவில் கூடிய காங்கிரஸில் மேற்குறிப்பிட்ட சம்பவங்களின் பலனாக சந்தோஷ மதிகமாயிருந்தது. வங்காளத்திற்காக தேசம் முழுவதும் செய்த சேவையையும் கொடுத்த ஆதரவையும் ஸ்ரீ சுரேந்திரநாத் பாராட்டினார். ஆனால் இவ்வளவுக்கும் நடுவில் 1908-ம் வருடு ராஜத்துவேஷ கூட்ட சட்டத்தையும், அச்சுச் சட்டத்தையும், கிரிமினல் லா திருத்த சட்டத்தையும் ஜனங்கள் மறந்து விடவில்லை.

தவிர 1906—1908-ல் தலைவர்கள் நாடு கடத்தப்பட்டதற்கு ஆதாரமாயிருந்த 1818-ம் வருஷ மூன்ருவது ரெகுலேஷனும், இன்னும் மற்ற மாகாணங்களில் பல அடக்குமுறைச் சட்டங்களும் அமுலில் இருந்தன. இந்தியாவில் நெய்த துணிகளின்மீது சுங்கவரியும் இருந்தது. இச்சட்டங்கள் ஒவ்வொருவருடைய உரிமையையும் குறைத்ததுமன்றி தேசியக் கைத்தொழிலையும் பாதித்தன. மாண்டலே கோட்டைச் சிறையில் பால கங்காதர திலகர் நோயால் வருந்திக் கொண்டிருந்தார். தனிமையாக இருந்தாரே யொழிய தைரியத்தைக் கைவிட்டுவிடவில்லை இச்சமயத்தில்தான் கோகலேயின் ஆரம்பக் கல்வி மசோதா ஆலோசனையிலிருந்தது. தென் ஆப்பிரிக்கா நிலைமையைப் பற்றியும் தேசிய கிளர்ச்சி அவசியமா யிருந்தது.

## லார்டு ஹார்டிஞ்ச் மீது வெடிகுண்டு

1911-ல் இருந்த நிலைமை 1912-ல் கொஞ்சம் தளர்ந்தது. ஆனால் ஜனங்களின் நல்லபிப்பிராயத்தைப் பெற்ற வைஸிராய் ஹார்டிஞ்சைக் கொல்ல அப்பொழுதுதான் முயற்சி செய்யப்பட்டது. அவரது டில்லி பிரவேசத்திற்கு நடந்த ஊர்வலத்தில், யானை மீதிருந்த அவர்மேல் ஒரு வெடிகுண்டு எறியப்பட்டது. அவர் ஆச்சரியமாய் உயிர்தப்பினர். 1912-ல் பாட்னுவில் கூடிய காங்கிரஸ் இந்த செய்கையைக் கண்டித்து தேசத்தின் வருத்தத்தைத் தெரிவித்து ஹார்டிஞ்சுக்கு ஒரு அனுதாபத் தந்தி அனுப்பத் தீர்மானித்தது. பத்திரிகைகள்மீது நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்பட்டன. பத்திரிகைகளின் சுதந்திரம் பலவிதங்களில் குறைக்கப்பட்டது. 1918-ல் அச்சுச் சட்டம் ஒழியவேண்டுமென்று தீவிர கிளர்ச்சி ஏற்பட்டது. ஸ்ரீ பூபேந்திரநாத மித்ரா பத்திரிகைகளின் கஷ்டம் நிறைந்த சரித்திரத்தைக் குறிப்பிட்டார். 1891-ல் சுதேச சமஸ்தானத்து பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டு போடப்பட்டது. 1905-ல் நிரந்திரமாக செய்யப்பட்ட அச்சுச் சட்ட மூலம் பத்திரிகைகளிடமிருந்து ஆயிரக்கணக்கான ரூபாய் ஜாமீன் வாங்கும் அதிகாரம் சர்க்காருக்குக் கிடைத்தது. சட்ட மெம்பர் எஸ். பி. ஸின் ஹாவே இச்சட்டத்திற்குப் பொறுப்பாளி. 1914-ல் மகா யுத்தம் ஆரம்பித்ததும் மௌலான மகமது அலி "மாலி

டோனியாவுக்கு வந்து எங்களை ஆதரியுங்கள்'' என்ற தலைப்பிட்டு வெளியிட்ட பிரசுரம் ராஜத்துவேஷமென்று தீர்மானிக்கப்பட்டது. இது சட்டத்தை மிகவும் மோசமாக துஷ்பிரயோகம் செய்ததாகும். இது சம்பந்தமாக கல்கத்தா பிரதம ஜட்ஜ், சட்டம் எத்தகைய பிரசுரத்தையும் பாதிக்குமென்றும், சட்டத்திற்கு உட்படாத பிரசுரம் இருப்பது அபூர்வமென்றும் கூறி ஒரு பிரசுரத்தினால் நேர்முகமாகவோ, உத்தேசமாகவோ ராஜத்துவேஷ உணர்ச்சி தோன்றினாலும் அது சட்ட விரோதமானதுதான் என்றும் குறிப்பிட்டார். "மகமது அலி தமது புத்தகத்தை இழந்தார். ஆனால் அவருடைய குணம் இதனால் சிறிதும் பாதிக்கப்படவில்லை" என்றும் கூறினார். இன்னொரு நீதிபதியும் அச்சுச் சட்டத்தைக் கண்டித்தார். "கொலை, களவு செய்பவர்களை வெறுக்கும்படியான விஷயங்களடங்கிய பத்திரிகையைக்கூட பறிமுதல் செய்வதற்கு இந்த சட்டத்தினால் சர்க்காருக்கு அதிகாரம் கிடைத்திருக்கிறது" என்று ஜட்ஜ் ஸ்டீபன் கூறினார்.

ஸ்ரீமதி பெஸண்டின் பத்திரிகையான "நியூ இந்தியா" வழக்கில் சென்னை பிரதம ஜட்ஜ் "3 (1) வது பிரிவினால் அச்சுக்கூடம் வைக்க விரும்புகிறவர்களுக்கு பெரிய கஷ்டம் நேரிடுகின்றது" என்றார். 1917-ல் அச்சுச் சட்டப்படி ஸ்ரீமதி பெஸண்ட் ரூ. 20,000 பறிகொடுத்தார். மிஸ்டர் பி. ஜி. ஹார்னிமன் தலைமையில் ஸ்ரீமான்கள் சிந்தாமணி, மாளவியா, சச்சிதானந்த சின்ஹா முதலியவர்களடங்கிய ஒரு தூது கோஷ்டி 1917-ம் ஆண்டு மார்ச் மாதம் 5-ம் தேதி லார்டு செம்ஸ்போர்டை சந்தித்தது. வைசிராய் தூது கோஷ்டியின் மீது வெகுக் கடுமையாகச் சீறி விழுந்தார். தவிர முன் குறிப்பிடப்பட்ட ஜட்ஜுகளையும் வைசிராய் கண்டித்தார். "சட்டம் என்னவென்பதை சொல்லவேண்டுமேயன்றி சட்டம் எப்படி யிருக்கவேண்டுமென்பதைச் சொல்வது அல்ல ஜட்ஜின் வேலை" என்றார்.

மாண்ட்போர்டு சீர்திருத்தம் அமுலுக்கு வந்த பிறகுதான் கிரிமினல் லா திருத்தச் சட்டத்தைத் தவிர மற்ற அடக்குமுறைச் சட்டங்கள் வாபஸ் வாங்கப்பட்டன. அரசியல் துறையில் கொஞ்சம் ஏற்பட்டிருந்த அமைதி 1914—1918-ன் மகா யுத்தத்தினால் கலைந்து விட்டது. இந்த உலகப் புரட்சியின் ஆரம்பத்தில் ஒரு நல்ல சம்பவம் நேர்ந்

தது. பிரிவினை காலத்திலிருந்து சர்க்காரை நம்பியிருந்த முஸ்லிம்கள் 1913-ல் திருந்திவிட்டார்கள். பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குள் சுயேச்சையையே லட்சியமாகக் கொண்டு, அதற்காக இந்துக்களும் முஸ்லிம்களும் சேர்ந்து உழைக்க வேண்டுமென்று அகில இந்திய முஸ்லிம் லீக் தீர்மானித்ததை காங்கிரஸ் விசேஷமாகப் பாராட்டிற்று.

யுத்தம் ஆரம்பித்து விட்டது. இங்கிலாந்துக்கு ஆபத்து! இங்கிலாந்துக்காக இந்தியாவைக் காப்பாற்ற ஒரு படை இருக்கிறதல்லவா. இந்த சமயத்தில் அது இங்கிலாந்துக்கு உதவவேண்டாமா? படை வேகமாக முன்னணிக்கு அனுப்பப்பட்டது. இந்த இந்தியப் படைதான் இங்கிலாந்தையும் அதோடு சேர்ந்த மற்ற நாடுகளையும் காப்பாற்றியது. ஆகவே 1914-ம் வருஷத்திய காங்கிரஸில் சுயராஜ்யம் வேண்டுமென்று வற்புறுத்தப்பட்டது.

"இந்த நெருக்கடியில் இந்தியர்கள் காண்பித்த ராஜ விஸ்வாஸத்தை உத்தேசித்து, இந்தியர்களுக்கும மற்றவர்களுக்கும் உள்ள வித்தியாசத்தை ஒழித்து 25-8-1911-ல் கொடுக்கப்பட்ட மாகாண சுயாட்சி வாக்குத்தத்தத்தை நிறைவேற்றியும், சாம்ராஜ்யத்தின் ஒரு அங்கத்திற்குரிய உரிமைகளை இந்தியாவுக்கு அளித்தும், இந்தியர்களின் ராஜவிஸ்வாஸத்தை நிரந்தரமாக்கவேண்டும் என்று இந்த காங்கிரஸ் சர்க்காரைக் கேட்டுக் கொள்கிறது" என ஒரு தீர்மானம் நிறைவேறியது.

1914-ம் வருட சென்னை காங்கிரஸில் ஸ்ரீமதி பெஸண்ட் உதவிக்குப் பிரதி யுதவி செய்யவேண்டுமென்று தைரியமாய் கேட்டார். இந்தியர்களை அனுமதிக்காத நாடுகளிலிருந்து இந்தியா ஒன்றையும் இறக்குமதி செய்யக்கூடாதென்று வற்புறுத்தினர். லார்டு பெண்ட்லண்டு காலத்தில் ஸ்ரீமதி பெஸண்ட் தம்முடைய மகத்தான சுயராஜ்ய (ஹோம் ரூல்) இயக்கத்தை ஆரம்பித்தார். சுதேசி, பகிஷ்காரம், தேசியக் கல்வி, சுயாட்சி இவைகளைக் கொண்ட பழைய திட்டமே கைக்கொள்ளப்பட்டது. மதனப் பள்ளியிலிருந்தபிரம்மஞான சபைக்கல்வி ஸ்தாபனங்களைசென்னை சர்வ கலாசாலை ஆதிக்கத்தினின்றும் பிரித்துக்கொண்டார். அடையாற்றில் ஒரு தேசிய பாடசாலை ஸ்தாபித்தார். டாக்டர் அருண்டேல் தலைமையில் தேசியக் கல்வி அபிவிருத்தி சங்கத்தை ஸ்தாபித்தார். ஏற்கனவே காங்கிர

வில் கலந்துகொண்ட சர். சி. பி. ராமஸ்வாமி அய்யர் ஹோம் ரூல் இயக்கத்தில் தீவிரமாகக் கலந்துகொண்டார். "நியூ இந்தியா" பத்திரிகையின் மூலம் இந்த இயக்கம் வளர்ச்சி யடைந்தது. மாணவர்கள்இந்தஇயக்கத்தில் அதிக மாகக் கலந்துகொண்டார்கள். லார்டு பெண்ட்லண்டு 659 நெ. உத்தரவு மூலம் மாணவர்கள் அரசியல் விஷயங் களில் கலந்துகொள்ளக் கூடாதென்று தடுத்தார். கிளர்ச் சிக்கு எதிராக அடக்குமுறை தோன்றிற்று. 16-6-1917-ல் ஸ்ரீமதி பெஸண்ட், ஸ்ரீ அருண்டேல், ஸ்ரீ வாடியா ஆகிய மூவரும் உதகமண்டலத்தில் சிறையிடப்பட்டனர்.

---

## அத்தியாயம் 5

---

## நமது பிரிட்டிஷ் அன்பர்கள்

காங்கிரஸ் ஸ்தாபனம் நிறுவுவதற்கு வெகுகாலம் முன்னமேயே இந்திய ராஜீய வளர்ச்சிக்கு அநேகம் பார்லி மெண்டு அங்கத்தினர்கள் உதவிபுரிந்து வந்தார்கள். அவர் களுள் ஜான் பிரைட்டின் முயற்சிகள் சென்ற நூற் றூண்டின் இடையில் தென்படும். அவர் 1847-ல் பார்லி மெண்டு சபையினுள் புகுந்தது முதல் 1880-ம் ஆண்டு வரை இந்தியாவின் க்ஷேமத்துக்கு இடையறு உதவிபுரிந்து வந்தார்.

அவருக்குப் பின் பாஸட்டு இந்தியா விஷயங்களில் சிக்கனவேலை முறையை வற்புறுத்தி வந்தார். இவர் ஏக காலத்தில் இந்தியாவிலும் இங்கிலாந்திலும் ஐ. ஸி. எஸ். பரீக்ஷைகள் நடத்தப்படவேண்டும் என்ற தீர்மானத்தைப் பிரேரேபித்தார். இந்தியர் செலவில் ஸாலிஸ்பரி பிரபு சீமை யில் துருக்கி சுல்தானுக்கு விருந்தளித்ததைக் கண்டித்தார். இதுமுதல் இந்தியாவின் கக்ஷியை எடுத்துரைப்பதில் இவர் மிகுந்த ஆர்வம் கொண்டார். மன்னர் கோமகன் இந்தியப் பிரயாணச் செலவு 30,000 பவுனை இந்தியா மீதில் சுமத்த லாகாதெனக் கண்டித்து, இதில் வெற்றி பெற்றார்.

காங்கிரஸ் சபைக்குத் தந்தை என நாம் முன்பு கூறிய ஹ்யூம் துரை இந்தியாவிற்குச் செய்திருக்கும் நன்

மைகள் சொல்லத் தரமில்லை. அவர் கலெக்டர் பதவி வகித்தவர்தாம். வேலையிலிருந்தபொழுதே அவர் சமூகக் கல்வி, போலீஸ் இலாகாச் சீர்திருத்தம், மதுவிலக்குப் பிரசாரம் இவைகளிலெல்லாம் உத்தியோக முறையில் ஈடுபட்டார். கிராமவாசியின் நலத்தையே அவர் பெரிதும் பொருட்படுத்தினர். ஜனங்களின் நன்மையையே அவர் கருத்தினுள் பதித்தவர். ஏழைகளுக்கு நன்மை செய்ய அவர் சர்க்காரை எவ்வளவோ தரம் எதிர்த்துப் போராடியிருக்கிறார். போலீஸ் இலாக்காவில் அவர் பொதுஜனப் பாதுகாப்புக்கான அதிகாரத்தை மட்டும் போலீசார் வகிக்க வேண்டுமென்றும் அவர்களுக்கு நியாய விசாரணை செய்யும் உரிமை இருக்கப்படாதெனவும் வாதித்தார். 'மது வரி அநியாயமாகச் சர்க்கார் பெறும் இலாபம். அதனால் ஈட்டிய பொருள் விருத்தியடைவதில்லை' என்பது அவர் அபிப்பிராயம். கலால் வரியால் வருமானம் பெறுவதென்பது பிரிட்டிஷ் இந்திய துரைத்தனத்திற்கு ஓர் பெரும் அவமானம் என்று அவர் குறிப்பிட்டார்.

1859-ல் அவர் சர்க்காராலும் பொதுஜனங்களாலும் நன்கு மதிக்கப்பெற்ற "பிரஜாமித்திரன்" என்ற சுதேச பாஷைப் பத்திரிகை ஒன்றை ஆரம்பித்தார். ஏழைகளுக்கு இன்றியமையா உணவுப் பொருளான உப்பு ராஜபுதன நாடுகளிலிருந்து மலிவாக இந்தியாவிற்குக் கொண்டு வர முடியாமல் ஏற்படுத்தப்பட்டிருந்த 2,500 மைல் நீளமுள்ள சுங்க எல்லையை இவர் காளடைவில் ஒழித்தார். 1879-ல் இவர் விவசாயச் சீர்திருத்தத் திட்டம் ஒன்று தயார் செய்யவும், அது சர்க்கார் ஆதரவின்றி, பலனளிக்கவில்லை. இந்தத் திட்டம் தக்கானக் குடிகளின் அல்லலை நிவர்த்திக்க உபயோகப்படலாம் என்று சிலர் கூறியும், பம்பாய் சர்க்கார் அதை அனுமதிக்க மறுத்தனர். இவருடைய பரமயோக்கியதையும் சுயேச்சை தன்மையும் பார்த்து சகிக்காத சர்க்கார் இவர் வகித்த இந்திய கவர்ன்மெண்டு காரியதரிசி பதவியினின்றும் இவரை நீக்கினர். இவருக்கு ஓர் சிறு மாகாண கவர்னர் பதவியளிக்கப்பட்டதை இவரே ஏற்க மறுத்தார். 1882-ல் இவர் பதவியினின்றும் விலகிக்கொண்டார்.

சர் வில்லியம் வெட்டர்பர்ன் இந்தியாவுக்குப் பெருந்தொண்டாற்றிய ஆங்கிலேயர்களுள் ஒருவர். இவர் 1889, 1910 இந்த ஆண்டுகளில் காங்கிரஸ் அக்கிராசனர் பதவி வகித்தார். சீமையில் இந்திய காங்கிரஸ் மகாசபையின்

ஆதரவின் கீழிருந்த பிரிட்டிஷ் காங்கிரஸ் கமிட்டியில் வெகுநாள் வரை முக்கியஸ்தராக இருந்துவந்தார்.

டேவிட்யூல் என்ற ஆங்கிலேயர் நான்காவது காங்கிரஸ் மகாநாட்டில் (1888) தலைமை வகித்தார். இவர் இந்தியர்கள் நன்மையில் அதிக சிரத்தை காட்டினார்.

பிற்காலத்தில் காங்கிரஸ்மகாநாட்டிற்கு அநேகம் பார்லி மெண்டு சபை அங்கத்தினர்கள் வரத் தலைப்பட்டனர். மது விலக்குப் பிரசாரத்தில் பெரிதும் ஈடுபட்டிருந்த டபிள்யூ. எஸ். கெயின், தோற்ற கக்ஷியை எடுத்து வாதிப்பவர் என இகழப்பட்ட, சார்லஸ் பிராட்லா ஸாமுவேல், ஸ்மித், எச். வி. ரதர்போர்டு, டாக்டர் கிளார்க்கு, ஜேம்ஸ் மாக்ஸ்டன், கர்னல் வெட்ஜ்வுட், பெத்விக் லாரன்ஸ், ஹால்போர்டுநைட் இவர்களும் இன்னும் அனேக காமன்ஸ் சபை அங்கத்தினர் களும்மகாசபைக் கூட்டத்துக்குவிஜயம்செய்திருக்கிறார்கள். ராம்ஸே மாக்டோனல்ட் ஒரு வருடம் அக்கிராசனர் பதவிக் குத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். அவர் மனைவியின் மர ணத்தால் அவர் அச்சமயம் அப்பதவியை வகிக்க முடிய வில்லை.

வெகுகாலம் இங்கிலாந்தின் பிரதம மந்திரியாக இருந்த வில்லியம் ஈவார்ட்டு கிளாட்ஸ்டன் இந்தியர்பால் மிகுந்த அன்பு பூண்டவர். அவர் நன்முயற்சிகளால்தான் சுதேச பாஷைப் பத்திரிகைகளுக் கிடப்பட்ட வாய்ப்பூட்டுச் சட்டம் ரத்து செய்யப்பட்டதெனக் கூறப்படுகிறது. "இந்தியர்களுக்கு அது இலாபகரமாக இருக்கும் என்றால்தான் ஆங்கிலேயர்களாகிய நாம் அங்கிருக்க வேண்டும். அல்லது நாம் அங்கிருந்து, அது அவர்களுக்கு இலாபகரமானது என்று அவர்கள் மனதில் தோன்றும் படியான நன்மைகளைச் செய்யவேண்டும். இவை யிரண்டும் இல்லையேல் நாம் இந்தியாவை விட்டு வெளியேற வேண்டும்" என்று இவர் ஒரு காலத்தில் கூறி இருக்கிறார். காங்கிரஸ் இயக்கம் அவர் ஆசியைப் பெற்றது. அவர் பிறந்த நாட்களிலெல்லாம் காங்கிரஸ் சபை அவருக்கு மன மார்ந்த வாழ்த்துச் செய்திகளை அனுப்பி வைத்தது. அவர் மரணத்தை காங்கிரஸ் மகாசபை, நாட்டிற்கு விளைந்த ஓர் பெருந்துயராக மதித்துத் துக்கித்தது.

நார்த்புரூக் பிரபு இந்தியர்பால் பரம அன்பு பூண்டவர். அவர் பார்லிமெண்டு மகாசபையில் சீமையில் இந்திய விர்

வாகத்துக்கெனச் செலவிடும் தொகையைக் குறைக்க வேண்டுமென ஓர் தீர்மானம் கொணர்ந்தார். " இந்தியாவில் நிலவும் தரித்திரத்துக்கும், சோற்றுத் திண்டாட்டத்துக்கும், துன்பத்திற்கும் ஒப்பிடக்கூடிய நாடே ஐரோப்பாவில் கிடையாது " என்று அவர் பகிரங்கமாகக் கூறினர்.

இயர்ட்லி நார்டன் துரையும் இந்தியரால் நன்கு மதிக்கப்பட்ட மேனாட்டார்களில் ஒருவர். இவர் தகப்பனாரைப் போலவே இவரும் தன் சுவீகார நாடான இந்தியாவிற்கு வெகுவாக உழைத்தார். இந்தியா கௌன்ஸிலை ஒழிக்க வேண்டும் என்று இவர் பல மகாநாடுகளில் தீர்மானம் கொண்டுவந்திருக்கிறார். இவர் சர்க்காரின் விபரீதப் போக்கை எல்லாம் வெகுத் திறமையுடன் அலசி எடுத்துக் கூறினர்.

ஜான் ஆதம், பச்சையப்பன் கல்லூரி தலைமைபோதனாசாரியராக இருந்தார். காங்கிரஸ் மகாசபையின் ஆரம்ப காலத்தில் அதில் கலந்து கொண்டார்.

நாகபுரியில் நடந்த ஓர் காங்கிரஸ் மகாநாட்டிற்கு (1891) ரக்ஷண்ய சேனை தளகர்த்தரான ஜெனரல் பூத், நாட்டில் உள்ள நிர்க்கதியான ஏழைகளைத் தரிசு நிலங்களில் குடியேறச் செய்து அவர்களுக்கு விமோசனம் தேடலாம் என்று ஆலோசனை கூறினர்.

நான்காவது காங்கிரஸ் கூட்டத்தில் " இந்தியராணுவ ஸ்தலங்களில் துருப்புகளுக்காக விபசார விடுதி வசதிகள் சர்க்கார் அனுமதி பெற்று அமைக்கப்பட்டு, இதனால் தேச ஸ்திரீகளும் வாலிபர்களும் கெட்டு, தொத்துநோய்கள் பரவ ஏதுவாகிறது. இதை உடனே தடுக்கவேண்டு"மென காப்டன் பானன், காப்டன் ஹியர்ஸே என்ற ஐரோப்பிய நண்பர்களால் ஒரு தீர்மானம் கொண்டுவரப்பட்டு நிறைவேறியது.

சர். ஹென்ரி காட்டன் என்ற ஐரோப்பியர் ஐ. ஸி. எஸ். வர்க்கத்தைச் சேர்ந்தவர். இந்தியாவின் ஆப்த நண்பர்களுள் ஒருவர். இவர் பதவியினின்று விலகியவுடன் காங்கிரஸ் மகாசபை (1904) அக்கிராசனராகப் பொறுக்கி எடுக்கப்பட்டார். முதன் முதலாக இந்திய சமஷ்டி அரசியலைத் தன் தீர்க்கதரிசனத்தால் கண்ட பெருமை இவரையே சாரும்.

# அத்தியாயம் 6

## இந்தியத் தலைவர்கள்

மகாசபையின் இளம்பருவத்திய நிகழ்ச்சிகளைக் கூறப் புகு முன்னர் குழந்தைப் பருவத்தில் அதனை ஆதரித்து வளர்த்த செவிலித்தாய் போன்றவர்களான நமது பல இந்திய சகோதரர்களைப்பற்றி ஈண்டு சற்று குறிக்கப் புகுவோம். அவர்கள் செய்த நன்முயற்சிகளின் பலனைத்தான் நாம் இன்று அநுபவிக்கிறோம். அவர்கள் தியாகமும், இடையூறுகளைப் பொருட்படுத்தாத ஊக்கமும் காங்கிரஸ் இயக்கத்தை வளர்த்து விளங்கச் செய்திருக்கின்றன.

## தாதாபாய் நௌரோஜி

காங்கிரஸ் இயக்கத்தில் சம்பந்தப்பட்ட நமது மூதாதையர்களுள் தாதாபாய் நௌரோஜி சிறப்புற்றோங்கி விளங்குகிறார். காங்கிரஸ் சபை மனு சமர்ப்பணத்தைத் தன் லக்ஷியமாகக் கொண்டிருந்த ஆரம்ப நாள் முதல் அவர் அந்த இயக்கத்தை ஆதரிக்கத் தொடங்கி, கடைசியில் சபை சுயாட்சியைத் தன் லக்ஷியமாகக் கொண்டதென அறிவிக்கப்பட்ட நாள் வரையில் (1906) அவர் காங்கிரஸ் சபையில் அருந்தொண்டு புரிந்திருக்கிறார். 1886, 1893, 1906 இந்த வருடங்களில் அவருக்கு தேசத்தில் மகோன்னத பதவியான மகாசபை அக்கிராசனர் பதவி கிட்டியிருக்கிறது. இந்தியாவிலும், இங்கிலாந்திலும் அவர் காங்கிரஸ் பேரிகையைக் கொட்டி முழக்கம் செய்தார். பார்லிமெண்டு சபையிலும் அவர் அங்கத்தினராக விளங்கி (1893) இந்தியாவின் நலத்துக்காகப் போராடி வந்தார். கடைசிக் காலம்வரை அவர் பிரிட்டிஷார் இந்தியாவுக்கு நியாயம் அளிக்காமல் இருக்கமாட்டார்கள் என்ற நம்பிக்கையைக் கைவிடவே இல்லை. 1906-ல் வங்காளப் பிரிவினையை ஒட்டி நாடெங்கும் கலவரமாக இருந்தது. எங்கும் அமைதியின்மை பரவிற்று. துருப்புக்கள் அமைதி நிலவ பல நகரங்களிலும் நிறுத்தப்பட்டனர். சுதேசியம், பகிஷ்காரம், தேசீயக் கல்வி என்று நாடெங்கும் எதிரொலித்துக் கொண்டிருக்கையில், தாதாபாய் சுயராஜ்யமே நாட்டில் நிலவும் தீமைகளை ஒழிக்க

வழி எனக் கூறினார். சுயராஜ்யம் என்றால் என்ன, அதன் லக்ஷணங்கள் யாவை என்பது இந்த மகாநாட்டில்தான் முதன் முதலாக விளக்கப்பட்டது. இவர் தனது வாழ் நாளில் ஒவ்வொரு கணமும் இந்தியாவின் அபிவிருத்திக் காகவே உழைத்து வந்தவர். இவர் நீண்ட காலம் உயிரோ டிருந்து "இந்தியாவின் கண்ணியம் வாய்ந்த தொண்டு கிழவன்" என்ற அருமைப் பெயரைப் பெற்றார். இவரது இரண்டு பேரப் பெண்களான ஸ்ரீமதிகள் பெரின்பாய் காப்டனும், குர்ஷீத் பென்னும் இன்று தங்கள் தாத்தா வைப்போலவே தேச சேவையிலீடுபட்டிருக்கிறார்கள்.

## அனந்தாசார்லு

காங்கிரஸ் சபை ஆரம்பித்த நாள் முதலாகவே தீவிர தேசியவாதியாக விளங்கியவர் அனந்தாசார்லு. முதல் காங்கிரஸ் மகா சபையில் விஜயம் செய்திருந்தவர் களில் இவர் ஒருவர். 1891-வது ஆண்டில் நாகபுரியில் நடந்த மகாநாட்டிற்கு இவர் அக்கிராசனம் வகிக்கும் பாக்கியம் பெற்றார். "சட்ட பூர்வமான கிளர்ச்சிகளால் இந்திய சர்க்கார் இழைத்த அநீதிகளை எல்லாம் ஒரு நொடி யில் பறக்க அடிப்போம், வாருங்கள்" என இவர் அப் பொழுது கூவி யழைத்தார். தென்னிந்திய ராஜீய வாதி களுக்குள் இவர் தலைமை ஸ்தானம் வகித்து தன் தேசத் தினர்க்கு ஓர் வழிகாட்டியாகத் தலை சிறந்து விளங்கினார்.

## தின்ஷா எடுல்ஜி வாச்சா

முதல் காங்கிரஸ் மகாசபையில் இவர் இந்திய ராணுவ நிலைமையை விஸ்தரித்துக் கூறி தன் திறமையால் எல்லோ ரையும் வியக்கச் செய்தார். இரண்டாவது மகாநாட்டில் இவர் இந்தியாவின் க்ஷீணதசைக்கான காரணங்களை ஆராய்ந்து அலசி, இங்கிலாந்துக்கு இந்தியாவினின்று எடுத் துக் கொண்டு போகப்படும் வருடாந்திரக் கப்பமே நாடு வறுமை வாய்ப்படுவதின் காரணமெனக் கூறினார். இதற்கு மேற்பட்ட திறனுடன் பம்பாயில் 1889-ல் நடந்த ஐந்தா வது காங்கிரஸ் மகாசபையில் சர்க்கார் கலால் வரிக் கொள் கைகளைக் கண்டனம் செய்து ஒரு தீர்மானத்தை நிறை வேற்றி வைத்தார். ஆறாவது மகாநாட்டில் இவர் கையி லெடுத்துத் தவித்தது சர்க்கார் உப்பு வரி விதிக்கும் நேர்மை. இந்தியாவில் வெள்ளி நாணய உற்பத்தியை

நிறுத்தலாகாதென ஒன்பதாவது மகாநாட்டில் தீர்மானம் நிறைவேற்றினார். "சர்க்கார் ஊழியர்களில் சிலர், நெற்றி வேர்வை நிலத்தில் விழ உழைக்கும் விவசாயிகளின் பணத்தை வாயில் போட்டுக்கொண்டு கவலை யற்று வாழ்ந்து வருகின்றனர். இவர்கள் பெறும் அநியாயத் தொகையான ஊதியம், உலகில் வேறு எந்த நாகரீகச் சர்க்கார் சேவகத் திலும் கொடுபடவில்லை" என்று அப்பொழுது இவர் குறிப்பிட்டார். "இராணுவச் செலவைக் குறைக்க முடியாதென்றால், சர்க்கார் உடனே பருத்தி சாமான்களின் மீது இறக்குமதி வரிகளைப் போட்டு நாட்டின் பொக்கிஷ நிலைமையைச் சீர்படுத்த முடியும். இந்த வரிகளைப் போடாமல் சர்க்கார் இந்தியரை நிர்மூலமாக்கவும், லங்காஷையர் வியாபாரியைச் செழிக்கச்செய்யவும் முயல்கிறார்கள்" என்று ஒருகால் (1885) இவர் கூறினார். இவர் தொட்டுத் துலங்க வைக்காத பிரச்னைகளே மகாசபையில் எழவில்லை எனக் கூறலாம். இவர் வெல்பி கமிஷன் முன்னர் கொடுத்த சாக்ஷியத்தை நாட்டிலுள்ளோர் அனைவரும் புகழ்ந்தனர். இவர் 1901-ல் கல்கத்தாவில் நடந்த மகாசபைக் கூட்டத் தில் அக்கிராசனம் வகித்துக் கூறிய பொன்மொழிகளை இந்தியர் எல்லோரும் முழுதும் படித்துணரக் கடமைப் பட்டவர்கள். 1896 முதல் 1913-ம் ஆண்டு வரை இவர் காங்கிரஸ் சபைக் கூட்டுக் காரியதரிசியாக இருந்தார். 1915-க்குப் பிறகு இவர் மகாசபையில் எடுத்துக்கொண்ட பங்கு வரவரக் குறைய ஆரம்பித்தது.

காங்கிரஸ் சபையைச் சார்ந்த பெரியார் பலரில், வாச்சாவைப்போல் எவ்விதப் பிரச்னையிலும் அபார ஞான மும், பொருளாதார விஷயங்களில் பாண்டித்தியமும் பெற்றுச் சிறப்புற்று விளங்கியவர் வெகு சிலரே! ஆயினும் காலச்சக்கிரம் சுழன்று நமக்குப் பல விநோதங்களைக் கண்முன் கொணர்வது சகஜம்தானே. அந்த 'பம்பாய் தீவிரவாதி'யே, பின்னர் இந்திய சர்க்காரின் நன்மதிப் பைப் பெற்று அவர்கள் அந்தரங்கப் பிரியத்தைச் சம்பா தித்து மத்திய சட்ட சபையில் சர். தின்ஷா எடல்ஜி வாச் சாவாக விளங்கினார்!

## கோபால கிருஷ்ண கோகலே

கோகலே, திலகர் இவர்கள் இருவரும் 1889-ல் காங் கிரஸில் ஈடுபடலாயினர். ஸ்ரீ கோகலேயின் பேச்சுகள்

எல்லாம் மிகவும் சாரம் பொருந்தியவை. ஞானப் பெருக்கினால் எல்லோராலும் நன்கு மதிக்கப்பட்டவை. உண்மை ஆதாரங்களைப் பெற்றதால் மறுக்கத்தகாதவை. இவர் இந்தியசட்டசபை மெம்பராகப் பதவிவகித்த நாளெல்லாம் சர்க்கார் எப்பொழுதும் கலக்கமுற்றே யிருந்தனராம். எனினும் இவரது அழுத்தமான கண்டனப் பிரசங்கங்கள் எல்லாம் வார்த்தை நயம் பெற்று, பிறர் மனதைப் புண்படுத்தாமல் அவர்களை வசியம் செய்யத்தக்கவையாக இருந்தன. இவர் பதவி, பட்டம் இவற்றை லட்சியம் செய்தவரல்ல பதவியைக்கண்டு பயந்தவருமாகார். பொழுது புலர்ந்தது முதல் சூர்யாஸ்தமனம் வரை மண்ணில் உழைத்துப் பாடுபட்டு, அங்கம் தேய்ந்து மேனி வாடியிருக்கும் இந்திய விவசாயிகளிடம் அவர் பேரன்புகொண்டவர். இந்த ஏழை பொருட்டாகத்தான் அவர் சர்க்கார் வரிக் கொள்கைகளையும் செலவு மார்க்கங்களையும் சதா கண்டித்து வந்தார். 1905-ல் காசி மகாக்ஷேத்திரத்தில் நடந்த காங்கிரஸ் கூட்டத்தில் இவர் தலைமை வகித்த பொழுது, "ஜனங்கள் ஏகோபித்து விரும்பினால், அரசியல் நிலைமை கைவிட்டுவிடப்பட்ட தருணத்தில் பகிஷ்கார முறைகளைக் கைப்பற்றிச் சர்க்காரை வழிக்குக் கொண்டு வர முயல்வது நியாயமே" எனக் கூறினார். "ஐந்தில் நான்கு கிராமங்களில் பள்ளிக்கூடங்கள் கிடையாது. எட்டில் ஏழு குழந்தைகள் அறிவிலிகளாக இருக்கின்றனவே" என்று ஒரு சமயம் கதறினார். லிட்டன் பிரபு இந்தியாவுக்கு பிரிட்டன் அளித்த வாக்குறுதிகளை நிறைவேற்றும் எண்ணம் அவர்களுக்கு ஒருபோதும் கிடையாது என இரகசியமாக எழுதிவைத்திருந்ததை கோகலே தன் தலைமை யுரையில் பகிரங்கப்படுத்தினார். 1905, 1906 ஆண்டுகளில் சீமைக்கு இந்தியாவின் பிரதிநிதியாகச் சென்றார். இவர் ஜனங்களின் கக்ஷியைச் சர்க்காருக்கெடுத் துரைத்து, சர்க்கார் படும் அல்லல்களையும் தன் நாட்டினருக்கு எடுத்துக் கூறிக்கொண்டு வந்தார். இதனால் இவர்மாட்டு சிறிது ஜனங்களுக்கு நம்பிக்கை குறைய ஆரம்பித்தது. முதிர்ந்த நாளில் இவர் சர்க்கார் மனப்பான்மை பொதுஜன நன்மைக்கு முற்றிலும் விரோதமாக இருப்பதைக் கண்டு கொண்டார். இவரின் முயற்சிகள்தாம இந்தியாவிற்கு "இந்திய ஊழியர் சங்கத்தை" அளித்தது. இவர்தான் இச் சங்க ஸ்தாபகர். இவரைப் பின்பற்றிய சங்கத்தலைவர்

கனம் ஸ்ரீனிவாச சாஸ்திரி. சூரத்து பிரிவுக்கப்புறமாக கோகலே காங்கிரஸ் சேவையில் பெரும் பங்கெடுத்துக் கொண்டார். தென்னப்பிரிக்காவிற்குச் சென்று அங்கு காந்தி நடத்திய சாத்வீக மறுப்பு இயக்கத்துக்குப் பேராதரவு அளித்தார் கோகலே. இவ் வியக்கம் அவர் மனதைக் கொள்ளை கொண்டது. பின்னாளில் இவர் தேச சேவை எல்லாம் மத்திய சட்ட சபையில் காணமுடியும். 1914-ல் காங்கிரஸ் மகாசபையின் இரு பிரிவுகளையும் சேர்க்கப் பிரஸ்தாப மெழுந்தபோது இவரும் முதலில் சம்மதித்துப் பிறகு தன் மனத்தை மாற்றினார். 1915-ல் இவர் தேச சேவை முடிவடைந்தது. இவர் மரணத்தால் நாடெங்கும் ஜனங்கள் துயரக்கடலிலாழ்ந்தனர்.

## ஜி. சுப்பிரமண்ய அய்யர்

"ஹிந்து" வின் பத்திரிகாசிரியராகப் பேரும் புகழுமடைந்த ஜி. சுப்பிரமண்ய அய்யர் முதல் காங்கிரஸ் மகாசபையில் முதல் தீர்மானத்தைப் பிரேரணை செய்யும் பாக்கியம் பெற்றார். பிறகு நடந்த ஒன்பது மகாநாடுகளில் இவர் விஜயம் செய்ததாகத் தெரியவில்லை. பத்தாவது காங்கிரஸில் இவர் மீண்டும் தோன்றி இந்தியப் பொக்கிஷ விசாரணை ஒன்று அவசியமென எடுத்துரைத்தார். சுதேசப் பத்திரிகைகளின் நலத்தை இவர் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்து வந்தார். நிலவரி, நாணயச் செலாவணி விஷயங்கள்பற்றியும் இவர் அநேகம் தடவைகளில் பேசி இருக்கிறார். துரைத்தனச் சேவகம், கிராம வாசியின் பரிதாப நிலைமை, இந்திய சர்க்காரின் வடமேற்கு எல்லை விஸ்தரிப்பு நோக்கம் ஆகிய பிரச்னைகளைக் குறித்தும் இவர் கவலை எடுத்துக்கொண்டார். "இந்திய விவசாயி ஒரு மிருகம் மாதிரி உழைத்து மரிக்கவா பிறந்தவன்? அவன் மனிதப் பிறப்பல்லவா? அவனுக்கு மற்ற மானிடர்களைப் போல அறிவும், சிந்தனையும், வல்லமையும் இல்லையா?" என்று ஒரு சமயத்தில் அவர் கதறியதுண்டு. "பஞ்சங்களை நாட்டைவிட்டு விரட்ட நமக்கு உள்நாட்டில் சுயேச்சைப் பொறுப்பு இருக்கவேண்டும்" என அவர் கூறி வந்தார். கிழக்கிந்தியக் கம்பெனியார் ஆங்கில வியாபார தேவதைக்கு இந்தியர்களை பலி யிட்டனர் என்பது அவர் கூற்று. கடைசி நாட்களில் இவர் ஆர்வம் இவரைச் சிறை

யில் சேர்த்தது. இவர் அஞ்சா நெஞ்சம் படைத்த நாட்டு தீரர்களுள் ஒருவர், தீர்க்கதரிசி, உத்தம தேசாபிமானி.

## பத்ருதின் தியாப்ஜி

ஆதிநாள் முதல் தீவிரக் காங்கிரஸ் வாதியான இவர் 1887-ல் மூன்றாவது காங்கிரஸ் மகாசபை அக்கிராசனராகப் பதவி வகித்தார். காங்கிரஸை நிறுவுவதற்கான ஒரு கமிட்டி அமைக்க இவர் காரணமாக இருந்தார். இவர் பிறகு பல ஆண்டுகள் ஜட்ஜு வேலையில் அமர்த்தப்பட்டு காங்கிரஸ் சபையில் பங்கெடுத்துக்கொள்ள முடியாமல் போயிற்று. மீண்டும் 1904-ல் இவர் காங்கிரஸில் கலந்துகொண்டார். எனினும் இவர் பிறகு வெகுநாள் மகாசபைக்குத் தொண்டாற்ற முடியாமல போயிற்று. 1906-ல் இவர் மண்ணுலகை நீத்தார்.

## காசிநாத திரிம்பக் திலங்கு

காங்கிரஸ் மகாசபை ஸ்தாபகர்களுள் இவர் ஒருவர். இவரே காங்கிரஸ் சபையின் முதல் காரியதரிசியாகவும் நியமிக்கப்பட்டார். முதல் மகாநாட்டில் இவர் சட்ட சபைகளை ஒட்டிய தீர்மானத்தை நிறைவேற்றி வைத்தார். "சர்க்கார் தங்கள் காரியங்களைச் சாதித்துக்கொள்ள கோடிக் கணக்கான நிதியைச் செலவு செய்கிறார்கள். அவர்கள் இந்தியாவில் கல்வி அபிவிருத்தியின் பொருட்டு வருமானத்தில் நூற்றில் ஒரு பங்கு செலவழித்தால் போதுமா ?" என்று ஒரு சமயம் குறிப்பிட்டார். 1893-ல் இவர் அகால மரணமடைந்து நாட்டினரை துயர்க்கடலில் ஆழ்த்தினர்.

## டபிள்யூ. ஸி. பானர்ஜி

காங்கிரஸ் மகாசபை ஆரம்பித்தபொழுது அதன் கக்ஷியங்கள் யாவை என அறிய விரும்புவோர், முதல் காங்கிரஸ் அக்கிராசனர் பதவி வகித்த டபிள்யூ. ஸி. பானர்ஜியின் தலைமையுரையைக் கவனிக்கவேண்டும். மீண்டும் இவர் 1892-ல் நடந்த எட்டாவது காங்கிரஸ் மகா சபைக் கூட்டத்தில் தலைமை ஏற்றார். இதனிடையே நடந்த மகா நாடுகளிலும், பல வருடங்கள் பின்னரும் இவர் காங்கிரஸ் சேவையில் ஈடுபட்டிருந்தார். சமூகச் சீர்திருத்த

விஷயங்களில் மகா சபை ஏன் தலையிட வில்லை என்பதை இவர் 1892-ல் தன் அக்கிராசனர் உரையில் விளக்கினார். அப்பொழுது பெண்களின் சம்மத வயது மசோதா தேசத் தலைவர்களின் மனதைக் குழப்பி வந்த சமயம். 1890-ல் இங்கிலாந்துக்குச் சென்ற தூது கோஷ்டியில் இவர் ஒருவர். ஜூரர்களைக் கொண்டே வழக்கு விசாரணைகள் நடத்தப்பட வேண்டும் எனச் சட்டமியற்றுமாறு இவர் ஒரு தீர்மானம் நிறைவேற்றி வைத்தார். 1906 வரை அவர் தேசத்திற்கு அருந் தொண்டாற்றி வர நாம் பாக்கியம் பெற்றிருந்தோம்.

## லோகமான்ய திலகர்

பால கங்காதர திலகரும், கோபால கிருஷ்ண கோகலே யும் இந்திய மகாசபைச் சரித்திரத்தில் ஒரு தனிப் பெருமை வாய்ந்தவர்கள். இவர்களுள் பல விஷயங்களில் வித்தியாச அபிப்பிராயங்கள் இருந்த போதிலும், இருவ ரிடையே நெருங்கிய நட்பு இருந்து வந்தது. "உங்கள் அரசனுக்குரித்தானதை அரசனிடம் சமர்ப்பியுங்கள். ஆனால் கடவுள் காணிக்கையை அவரிடமே நீங்கள் சேர்க்க வேண்டும்" என திலகர் ஒருகால் கூறின துண்டு. சட்டத்தை வகித்து நடக்க வேண்டியது நமக்குரித்தான கடமை தான், எனினும் தேசத்துக்கு நம்மிடம் உரித்தான காணிக் கையை நாம் சேர்ப்பிக்கவேண்டியதும் முற்றிலும் அவசிய மாகும் என்பதே அவ்வுரையின் கருத்தாகும்.

"மகாராஷ்டிர நாட்டின் முடிசூடா மன்னர்" என இவரைப் பலர் அழைத்தனர். தியாகம், சேவை இவை களைத் தன் வாழ்க்கை லக்ஷியங்களாகக் கொண்ட இவரை இவ்வண்ணம் கூறல் தகும். சிவாஜியின் வீரச் செயல்களைத் தன் நாட்டினருக்கு ஞாபக மூட்டியவர் திலகர்தாம். இவர் செய்த முயற்சிகளால் இன்றும் வருடந்தோறும் நாடெங்கும் சிவாஜி தினக் கொண்டாட்டங்கள் நடை பெற்று வருகின்றன. இந்தக் கொண்டாட்டம் ஒன்றில் கலந்து, இவர் சிவாஜியைப்பற்றி செய்த ஒரு சிறு பிரசங் கத்தின் விளைவாக இவர் பதினெட்டு மாதச் சிறைவாசத் தண்டனை விதிக்கப்பட்டார். ஆயினும் ஒரு வருஷ காலத் திக்குள்ளாகவே, புரொபஸர் மாக்ஸ் முல்லர், சர் வில்லியம் ஹண்டர், சர் ரிச்சர்டு கார்த்து, தாதாபாய் நௌரோஜி, ராமேஷ் சந்திர தத்தர் ஆகிய பல பிரமுகர்கள் வேண்டு

கோளின்பேரில் இவர் விடுவிக்கப்பட்டார். திலகர் சிறையிலடைபட்டிருக்கும்பொழுது இ. பி. கோ. சட்டத்தினுள் சர்க்கார் நன்மையை நாடி 124-A, 153-A பிரிவுகள் நுழைக்கப்பட்டன.

1896-ம் ஆண்டிலிருந்து திலகர், காங்கிரஸ் சபை சற்று உறுதியுடன் தீவிரமாக இருக்கவேண்டுமெனக் கோரிவந்தார். 1899-ல் ஸாண்டுஹாஸ்ட் பிரபுவின் ஆட்சியைப் பற்றி அவர் கொணர்ந்த கண்டனத் தீர்மானத்தை, அக்கிராசனர் உள்பட எல்லோரும் பலமாக எதிர்த்தனர்.

சூரத்து மகாநாட்டில் 1907-ல் ஏற்பட்ட பிளவுக்குத் திலகர்தான் காரணம் எனப் பலர் அவரை நிந்தித்தனர். உண்மையில் அந்த சமயம் சச்சரவு எழுந்ததற்கு தேசத் தலைவர்களுக்குள் ஏற்பட்ட சிறு வித்தியாசங்களே காரணம். ஆத்திரத்தில் நிலைதவறிநடந்த சம்பவங்களுக்கு லோகமான்ய திலகரையும் கோகலேயையும் போன்ற மகான்கள்மீது பழி சுமத்துவது மதியீனம். எல்லோருக்கும் வருத்தத்தைக் கொடுத்த இச் சிறு நிகழ்ச்சி நாம் இவர்கள் மாட்டு வைத்த அன்பையும் கௌரவத்தையும் அணுவளவும் குறைக்காது.

தீவிரத் தேசிய வாதியாக இருந்தாலும் திலகர் காலத்தை அனுசரித்து நடப்பவர். இங்கிலாந்தில் இந்திய நிலைமையைப் பொதுமக்களுக்கு எடுத்துரைக்க, காங்கிரஸ் சபை சார்பாக அங்கு நிரந்தரமாக ஒரு தூது கோஷ்டியிருக்கவேண்டுமென அவர் நினைத்தார். 1918-ல் சர் வாலன்டைன் சிரால் என்பவர் தன்னைச் "சட்ட விரோதமாகக் கிளர்ச்சி செய்பவன்" என அவமதித்ததாக அவர்மேல் வழக்குத் தொடுத்தார். இதில் அவர் நிஷ்பலனடைந்ததிலிருந்தும், அவர் பிரிட்டிஷ்-இந்திய அரசாட்சியின் உண்மைத் தத்துவத்தை உணராமல், 1919-ல் வந்த புதிய சீர்திருத்தத்தை ஏற்று உழைக்கவேண்டுமெனக் கூறினார். இவர் புதிய அரசியலில் பங்கெடுத்துக்கொள்ள முடியவில்லை. 1920 ஆகஸ்டு முதலில் விண்ணுலகேகினார். அதிகாரவர்க்கத்தினால் சதா துன்புறுத்தப்பட்ட உத்தம தேசபக்தர்களுக்குள் திலகரும் ஒருவர். இவரைச் சிறையிலடைத்ததின்பயனாக "கீதா ரஹஸ்யம்", "வேதங்களின் வீடு வட துருவம்" என்ற இரு உயர்தர நூல்களை நாம் பெற்றோம். "சுயராஜ்யம் எனது பிறப்புரிமையாகும்.

யான் அதைப் பெறுவேன்" என்ற பொன் மொழிகள் திலகரின் வாய் மொழிகளாம். கோகலே, திலகர் இவ் விருவரையும் பற்றி மகான் காந்தியின் அபிப்பிராயம் குறிப் பிடத்தக்க தாகும். திலகர் அருகே நெருங்கமுடியாத கம்பீரத் தோற்றமுள்ள பனியால் மூடப்பட்ட ஹிமாலயம் போலவும், கோகலே எல்லோரையும் தன்னுள் முழுகி இருக்கலாம், வா வெனக் கூவி யழைப்பது போலிருக்கும் கங்கையைப்போலவும் காந்தியால் விவரிக்கப்பட்டனர். திலகரும், கோகலேயும் மகாராஷ்டிரத்தில் பிராமண வம்சத் தில் உதித்தவர்கள். ஒரே சாதியினர். உத்தம தேச பக்தர்கள். கோகலே அன்பும், சேவையும் வாழ்க்கை லக்ஷி யங்களாகக் கொண்டவர். திலகர் சேவையும், அதன் பொருட்டாகத் துன்பம் அனுபவிப்பதையுமே தன் லக்ஷியங் களாகக் கொண்டார். கோகலே ஆங்கிலத்திலேயே பேசு வார். திலகர் மராத்தி பாஷையில் பேச ஆசைகொண்டவர். இவ்வளவு பேதங்களிருப்பினும் பாரதத்தாயினிடம் பூண்ட அன்பில் ஒருவருக்கொருவர் சளைக்காமல், தாய்நாட்டுச் சேவையில் இருவரும் வெகுகாலம் ஈடுபட்டிருந்தனர்.

## பண்டித அயோத்திய நாத்

நான்காவது காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் இவர் முதன்முதலாகக் கலந்துகொண்டார். இவருக்கு அந்த நாளில் எல்லோராலும் மகத்தான மரியாதை காட்டப் பட்டது. இவர் தன்னுயுட்காலத்தில் நாட்டிற்குச் செய்த சேவையைத் தவிர, பிற்காலத்தில், தேச சேவைக்கு தமது மகனை பண்டித ஹிருதய நாத குன்ஸ்ருவையும் அளித் தார்.

## சுரேந்திரநாத் பானர்ஜி

சுதந்திர தாகம் நாடெங்கும் பரவுவதற்கு முன், மக் களுக்குத் தன் சங்கநாதம் போன்ற குரலால் அதற்கான உணர்ச்சியை எழுப்பிய பெருமை சுரேந்திரநாத் பானர்ஜி யைச் சாரும். தன் ஆயுளில் ஏறக்குறைய நாற்பது வருட காலத்தை இவர் காங்கிரஸ் சேவையில் கழித்தார். இவர் பிரசங்கங்கள் கேட்கக் கேட்கத் தெவிட்டாதவை. இவர் இரண்டுதரம் அக்கிராசனர் பதவி வகித்திருக்கிறார். வெகு நாள் வரை, காங்கிரஸ் சபையில் எந்தத் தீர்மானம் நிறை

வேறு விருந்தாலும் அதைப்பற்றிப் பேசுவதற்கு அருகரானவர் பானர்ஜி ஒருவர்தான். பிரிட்டிஷ் சர்க்காரின் ஆதரவின் கீழ் இந்தியா சுயாட்சி பெற்று உன்னத நிலையடையவேண்டுமென்பது இவர் கோரிக்கை. இவர் வங்காள மந்திரியாகவும் சிலகாலம் பதவி வகித்தார்.

## பண்டித மதன் மோகன் மாளவியா

இம் மகானை நமது தேசத்தவர் என்று கூறுவதில் நாம் மகத்தான பெருமை யடைகிறோம். 1886-வது ஆண்டு மகாசபையிலிருந்த ஊக்கம், இன்று பதினுயிரம் பங்கு அதிகமாகி தேச சேவையைத் தன் வாழ் நாளின் லக்ஷியமாகக் கொண்டு தொண்டாற்றி வருகிறார். இவர் ஒத்துழையாமை இயக்கம் ஆரம்பித்தபொழுது இவர் அதில் சேராமலிருந்தும், காங்கிரஸ் சபை சம்பந்தத்தை விடவே இல்லை. அநேகர் காங்கிரஸ் இயக்கத்தில் சில நாள் தோன்றி மறைந்ததுண்டு. இரண்டாவது மகா நாட்டில் இந்த இயக்கத்தில் ஈடுபட்ட மாளவியா, தன் பெருமையிலும் வறுமையிலும் காங்கிரஸ் தொண்டராகவே இருந்து வருகிறார். இவர் சட்ட சபையில் சென்று தேச மக்களின் குறைகளை எடுத்துரைப்பதிலேயே தன் கவனம் முழுதும் செலுத்தினார். இவர் தேசத்துக்குச் செய்த பெரு நன்மை காசியில் அகில இந்திய சர்வ கலாசாலையாக விளங்குகின்றது. 1909, 1918 இவ்வாண்டுகளில் இவர் காங்கிரஸில் தலைமை வகிக்கும் பெருமை யுற்றார். மகாத்மா காந்தியின் நன்மதிப்பைப் பெற்ற பாக்கியசாலிகளுள் ஒருவராக இன்று நம்மிடை வசித்து வருகிறார்.

## லாலா லஜபதிராய்

காங்கிரஸ் மகாசபையை முன்னணியில் கொண்டு வந்தவர்களில் இவர் ஒரு முக்கிய ஸ்தானம் வகிக்கிறார். இவர் தரும சீலர், உதார குணமும், விசால நோக்கமும் பொருந்தியவர். சமூகச் சீர்திருத்தத்துக்கும் தேச விடுதலைக்கும் போராடியவர். நாட்டின் நன்மைக்காகத் தன் உடல் நன்மையைப் பொருட்படுத்தாமல் தேசப் பிரஷ்டம், சிறைவாசம் எல்லாம் அனுபவித்தார். வெகுகாலம் பாஞ்சால ஜனங்களின் தலைவராக விளங்கி வந்தார். 1906-ல் இங்கிலாந்துக்குச் சென்ற காங்கிரஸ் தூது கோஷ்டியில்

இவரும் ஒருவர். துப்பறியும் போலீசார் இந்தியாவில் இவர் வாழ்க்கையில் மரணாவஸ்தைக்கிடான துன்பங்களைக் கொடுக்கவே, இவர் தாய்நாட்டை விட்டு அமெரிக்காவுக்குப் புறப்பட்டார். 1920-ல் காங்கிரஸ் அக்கிராசனர் பதவியை வகித்தார். சட்ட மறுப்பு இயக்கத்தில் இவர் சேர விரும்பவில்லை. அது பலன் அளிக்காது என்று இவர் கூறினர். சட்ட சபைப் பிரவேசப் பிரச்னை எழும்பிய பொழுது இவர் ராஜீய உலகில் திரும்பி வந்தார். ஆயினும் பிறகு வெகுநாள் இவர் பூமியிலிருக்கும்படி நேரவில்லை. ஒரு போலீஸ் அதிகாரி இவர் மார்பில் தடிகொண்டு புடைக்க அதன் விளைவாக இவர் 1929-ம் வருடம் உயிர் நீத்தார்.

## சர் பிரோஸிஷா மேத்தா

காங்கிரஸ் ஜனன காலமுதல் அவ்வியக்கத்திலீடுபட்ட மகா புருஷர்களில் இவர் ஒருவர். ஆறுவது காங்கிரஸ் மகாசபை (1890)க்கு இவர் அக்கிராசனம் வகித்தார். வெகுகாலம் வரை காங்கிரஸ் சபை நிர்வாகத்தில் இவர் பெரும் பங்கு எடுத்துக்கொண்டு உழைத்தார். காங்கிரஸ் கமிட்டிகளிலும், தூது கோஷ்டிகளிலும் இவர் இல்லாமலிருந்தது கிடையாது. 1907-ம் ஆண்டு சூரத்து மகாநாட்டில் இவர் மிதவாதக் கக்ஷியில் சேர்ந்தார். 1909-ம் ஆண்டில் லாகூரில் நடக்க விருந்த மகாசபைக்கு இவர் அக்கிராசனராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். எனினும் மகாசபை கூடவிருந்த ஆறு நாட்களுக்கு முந்தியே இவர் காங்கிரஸ் சபையிலிருந்து விலகிக் கொண்டார். இவருக்குப் பதிலாக மாளவியா அக்கிராசனம் வகித்தார்.

## ஆனந்த மோகன் போஸ்

பிர்ம்ம சமாஜத்தைச் சார்ந்த இவர் 1896-ல் காங்கிரஸ் மகாசபைக் கூட்டத்தில் கலந்துகொண்டார். 1898-ல் மதராஸில் நடந்த கூட்டத்தில் அக்கிராசனர் பதவி ஏற்றார். இவர் அப்பொழுது செய்த பிரசங்கத்தில் 'தேச அன்பு பூண்டு சேவை செய்ய வாருங்கள், வாருங்கள்' எனக் கூவி யழைத்து முடித்தார். பார்லிமெண்டு மகாசபையில் இந்தியர்கள் ஸ்தானமளிக்கப்படவேண்டும் என இவர் அபிப்பிராயப்பட்டார்.

## மனமோகன கோஷ்.

ஐந்தாவது காங்கிரஸ் மகாநாட்டில் (1888) இவர் முதன் முதலாகப் பங்கெடுத்துக் கொண்டார். இவர் மீண்டும் 1890, 1895-வது வருஷக் கூட்டங்களில் கலந்து கொண்டு பல தீர்மானங்களை நிறைவேற்றி வைத்தார்.

## லால் மோகன் கோஷ்

1903-வது ஆண்டில் நடந்த மகாசபையில் அக்கிராசனர் பதவி வகித்தவர். முதன் முதலாக 1890-ல் ஆருவது மகாநாட்டில் தோன்றினர். இவர் அக்கிராசனப் பிரசங்கம் அப்பதவி வாய்த்தவர்கள் செய்திருக்கும் வெகு அருமையான பிரசங்கங்களில் ஒன்ருகக் கருதப்படுகிறது. சர்க்காரின் பொறுப்பற்ற செய்கைகளை இவர் பலமாகக் கண்டித்தவர். "இந்த டில்லி தர்பாரில் லக்ஷக்கணக்கான பணம் செலவழிக்கப்பட்டது. இந்த லக்ஷங்களைக்கொண்டு பஞ்சத்தால் வாடி மரித்த பல்லாயிரக் கணக்கான ஆண், பெண் சிறு குழந்தைகளுக்கு உயிர்ப்பிச்சை யளித்திருக்கக் கூடுமே" என்று அவர் பிரசங்கத்தில் பிரலாபித்தார்.

## ஸி. விஜயராகவாச்சாரியார்

1887-ம் ஆண்டு முதல் ஏறக்குறைய ஐம்பது வருட காலமாகக் காங்கிரஸ் இயக்கத்தில் கலந்துகொண்டு தேச நன்மைக்காகப் பாடுபட்டுக்கொண்டு வரும் மகான். 1887-ல் காங்கிரஸ் வேலைத்திட்டத்தை யமைக்க ஏற்படுத்தப்பட்ட கமிட்டியில் இவர் ஒரு ஸ்தானம் வகித்தார். இவர் வாழ்நாளைக் கூறப்புகின், அதுவே காங்கிரஸ் சரிதமாக இருக்கக்கூடும். நில வரியைச் சர்க்கார் தாங்கள் பெரும் குத்தகைப் பணமாகக் கொண்டதின் அநியாயத்தை இவர் 1906-ம் வருஷத்திய மகாநாட்டில் வெகு சாதுர்யமாக எடுத்துக் காட்டினர். சூரத்துப் பிளவு ஏற்பட்ட காலம் முதல் இவர் சிலகாலம் காங்கிரஸை விட்டு விலகி நின்ருர். மிதவாதக் கொள்கைகள் இவர் மனதுக்கு உகந்தவையாக இல்லை. மீண்டும் இவர் 1916-ல் லக்ஷ்மணபுரியில் நடந்த காங்கிரஸ் கூட்டத்துக்கு வரவே, காங்கிரஸ் வாதிகள் இவரைப் பரிவுடன் வரவேற்றனர். 1918-வது ஆண்டில் பம்பாய் மகாநாட்டில் பிரஜைகளின் பூர்வாங்க உரிமைகளைப்பற்றிய தீர்மானம் இவரால் நிறைவேற்றி வைக்கப்

பட்டது. நாகபுரியில் 1921-ல் நடந்த மகாநாட்டில் இவர் அக்கிராசனர் பதவி வகிக்கும் பாக்கியமுற்றார்.

## ராஜா ராம்பால் சிங்

வெகுநாள் வரையில் காங்கிரஸ் இயக்கத் தலைவர்களுள்ளே ராஜா ராம்பால் சிங் ஓர் உன்னத ஸ்தானம் வகித்து வந்தார். இரண்டாவது மகாசபையில் இவர், 'இந்தியர்கள் விரும்பினால் ராணுவத்தில் சேர அனுமதி தரவேண்டும், அவர்கள் தங்கள் இல்லத்தைப் பாதுகாக்க ராணுவப் பயிற்சி யளிக்கப்படவேண்டும்' என ஒரு தீர்மானத்தை நிறைவேற்றி வைத்தார். அச்சமயம், இந்தியர் நிராயுதபாணியாக, ராணுவப் பயிற்சி இல்லாம லிருப்பது தேசத்திற்குப் பெருங்கேடு விளைக்கும் எனவும் அவர் ஒரு எச்சரிக்கை விடுத்தார். இவர் பேரப்பிள்ளையான காளாகங்கா ராஜாவும் காங்கிரஸ்பால் அன்பு பூண்ட ஓர் உத்தம தேசபக்தராக இருந்தார்.

## முன்ஷிகங்கப் பிரசாதவர்மா

லக்ஷ்மணபுரியிலிருந்து முதல் காங்கிரஸ் கூட்டத்திற்கு விஜயம் செய்திருந்த தேசத்தலைவர்களுள் ஒருவர். காங்கிரஸ் மகாசபை நிர்வாகத்தில் இவர் பலநாள் வரையில் பங்கெடுத்துக்கொண்டார். காங்கிரஸ் சபையில் அநேகம் கமிட்டிகளில் இவர் அங்கத்தினராக இருந்து தேசத்தொண்டாற்றி யிருக்கிறார்.

## காளிசரண பானர்ஜி

காங்கிரஸ் சபையின் ஆரம்பகாலத்தில் பல வருஷங்கள் வரை முக்கியமான பல தீர்மானங்களை ஒருங்கு சேர்த்து, அதை வல்லமையுள்ள ஒருவரைக்கொண்டு ஓரே கூட்டுத் தீர்மானமாக பிரரேபணை செய்யச் சொல்லுவது வழக்கம். 1889-ல் இந்தப் பொறுப்பு காளி சரண பானர்ஜியிடம் ஒப்படைக்கப்பட்டது. அவர் இந்திய கிறிஸ்தவ மதத்தினர். காங்கிரஸ் சபையில் வெகுகாலம் ஈடுபட்டுத் தொண்டாற்றி வந்தார். 1890-ல் சீமைக்கு காங்கிரஸ் பிரசாரத்துக்குச் சென்ற தூது கோஷ்டியில் ஒருவர். சுமார் இருபது வருடகாலம் இவர் மகாசபை வியவகாரங்களில் பெரும்பான்மையில் ஈடுபட்டவர். கல்வி நியாயஸ்தல சீர்திருத்தங்களுக்காகப் பாடுபட்டார்.

1908-ல் இவர் அகால மரணமடையாதிருப்பின் அக்கிராசனப் பதவியையும் வகிக்கும் பெருமை இவருக்கு ஏற்பட்டிருக்கக்கூடும்.

## நவாப் ஸையது மஹமத் பஹதூர்

1898 முதல் காங்கிரஸ் சேவையிலீடுபட்ட இவர் 1913-ல் அக்கிராசனர் பதவியை வகித்தார். இவர் காங்கிரஸ் நிர்வாகத்தைச் சீர்படுத்த 1904-ல் ஏற்படுத்தப்பட்ட கமிட்டியின் அங்கத்தினர் ஜாதி வேற்றுமை உணர்ச்சி என்பது சிறிதும் இவரிடம் கிடையாது. ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமைக்காக இவர் கராச்சியில் (1913) விதை விதைத்தது தான் பின்னர் லக்ஷ்மணபுரியில் வகுத்த திட்டமாக விளைந்ததெனக் கூறலாம்.

## தாஜி அபாஜி கேர்

1909 முதல் 1913 வரையில் காங்கிரஸ் மகாசபைக் காரியதரிசியாக இருந்தார். ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமைக்காக அரும்பாடுபட்டவர். பருத்தி சுங்கவரிகள், நிலவரிச் சுமைகள் இவற்றைப்பற்றி அநேகந் தடவைகளில் மகாசபைக் கூட்டங்களில் பேசியிருக்கிறார். 1890-ல் சீமைக்குச் சென்ற தூது கோஷ்டியில் ஒருவர்.

## ஆர். என். முதோல்கார்

மகாசபையின் ஆரம்பப் பருவத்தில் அதற்காகப் பெரும் பாடுபட்டவர்களில் இணையற்றவர். விவசாயிகளின் குறை, நாட்டின் வறுமை இவைகளை அகற்றவும் பொருளாதார அபிவிருத்தியிலும் இவர் வெகுவாக ஈடுபட்டார். 1912-ல் பங்கிப்பூர் மகாநாட்டில் தலைமை வகித்தார்.

## சர். ஸி. சங்கரன் நாயர்

கம்பீரத் தோற்றமே போலச் செய்கைகளிலும் சூரர். 1897-ல் நடந்த மகாநாட்டுக்குத் தலைமை வகிக்கும் பாக்கியம் பெற்றார். 1919-ல் ராணுவச் சட்டம் பஞ்சாபில் நிறுவப் பெற்றது கண்டு அதிருப்தி யுற்று ராஜப்பிரதிநிதி நிர்வாக சபை அங்கத்தினர் பதவியை ராஜீனுமா செய்தார். இவர் எழுதிய "காந்தியும், அராஜகமும்" என்ற புத்தகத்தில் சர். மைக்கேல் ஓட்வியரைப்பற்றி அவதூறாக எழுதினாரென மூன்று லக்ஷ ரூபாய் மான நஷ்டமாகக் கொடுக்கும்படி உத்திரவிடப்பட்டார்.

## பி. கேசவ பிள்ளை

முதல் காங்கிரஸின் கூட்டம் முதல் 1917 வரையில் மகாசபையுடன் சம்பந்தப்பட்டவர். கடைசிக்காலத்தில் பெஸண்ட் அம்மையாருடன்கூடத் தொண்டு புரிந்து கொண்டிருந்தவர். காங்கிரஸ் சபைக் காரியதரிசியாகவு மிருந்தார்.

## விபின சந்திர பால்

இவர் வாக்கு நயத்தை தேச ஜனங்கள் ஒருக்காலும் மறக்க முடியாது. பகிஷ்காரம், சுதேசியம், தேசீயக் கல்வி இக்கொள்கைகளை ஹிமாலயம் முதல் குமரிவரை பரப்பிய வர். அரவிந்த கோஷ் வழக்கில், வேண்டுமென்றே சாக்ஷியம் கொடுக்க மறுத்து ஆறு மாதச் சிறை தண்டனை யனுபவித் தார். கடைசி நாட்களில் இவர் ஊக்கம் குன்றி முன்னணி யிலிருந்து பின்வாங்கத் தலைப்பட்டார். இவர் எழுதிய சாரமுள்ள கட்டுரைகளும், வாக்குவன்மையும் தேசமக்கள் மனதை வசீகரித்து அவர்களைத் தேசத் தொண்டிலீடுபடச் செய்தன.

## அம்பிகா சரண மஜூம்தார்

1916-ல் காங்கிரஸ் அக்கிராசனாதிபதியாக இருந்தார். வாக்கு வன்மை பெற்றவர். "இந்திய தேசீய வளர்ச்சி" என்னும் பிரசித்தமான புத்தகத்தை எழுதியவர்.

## பூபேந்திரநாத பாஸூ

1914-ல் காங்கிரஸ் தலைவராக இருந்தவர். வாக்கு வன்மை படைத்தவர். கல்கத்தாவில் ஏராளமான வருமா னத்தை சம்பாதிக்க ஏதுவாக இருந்த தன் வக்கீல் தொழிலை விட்டுவிட்டு அரசியல்வாழ்க்கையில் ஈடுபட்டார். இவர் பிரசங்கங்களில் எல்லாம் உணர்ச்சி ததும்பி நிற்கும்.

## மௌல்வி மஸார்-உல்-ஹக்

பீஹாரில் பிறந்த ஓர் உத்தம தேசாபிமானி. வகுப்பு வாதத்தை முற்றிலும் வெறுத்தவர். ஹிந்து முஸ்லீம் கூட்டுறவுக்காக அரும்பாடு பட்டார். வகுப்பு வாதப் பிரதிநிதித்துவம் தேச சட்டத்தில் நிறுவப்பட்டதால், இனி, ஹிந்து முஸ்லீம் சமூகங்கள் தனித்தனியாகப் பிரிந்தே நிற்க ஏதுவாகிவிட்டதே என வருத்தமுற்றார்.

இவர் 1914-ல் சீமைக்குச் சென்ற தூது கோஷ்டியில் ஒருவர்.

## மகாதேவ கோவிந்த ரானடே

காங்கிரஸ் மண்டலத்தில் ஒரு ஜோதியாகத் துலங்கியவர். ஹைகோர்ட்டு ஜட்ஜு பதவியை வகித்து நின்றும் தேச நன்மையையே நாடி பல காரியங்களில் தலையிட்டு காங்கிரஸ் தீபத்துக்கு ஒரு தூண்டுகோலா யிருந்தார். உயர்ந்த படிப்பாளி. பொருளாதார விஷயங்களில் நிபுணர். சரித்திராசிரியருமாவர். சமூகச் சீர்திருத்தத்தை இவர் வாழ்நாளில் முக்கிய லக்ஷியமாகக் கொண்டவர். பிளேக்கு நோய் நிவாரணத்துக்கு இவர் பட்டபாடு கொஞ்ச மல்ல.

## பண்டித பிஷன் நாராயண தார்

மகாசபை ஆரம்பநாள் முதல் காங்கிரஸ் சபையையே தன் கோயிலாகக் கொண்டு தொழுது நின்றவர். 1911-ல் காங்கிரஸ் மகாநாட்டில் தலைமை வகித்தார். அதிகாரவர்க்கத்தினர் அட்டூழியங்களை இவர் சபித்துக்கொண்டே இருந்தார்.

## ராமேஷ் சந்திர தத்தர்

இந்திய சிவில் சர்விஸில் வெகுநாள் உத்தியோகம் வகித்து விலகிய பின் காங்கிரஸ் இயக்கத்தில் ஈடுபட்டு அரிய கைங்கரியங்கள் செய்தார். நிலவரி சம்பந்தமான விஷயங்கள், பஞ்சங்கள், பொருளாதாரப் பிரச்னைகள் இவைகளைப்பற்றி நன்கறிந்த பண்டிதர். 1890-ம் வருஷ காங்கிரஸில் அக்கிராசனர் பதவி வகித்தார்.

## என். சுப்பராவ் பந்துலு

பழுத்த தேசிய வாதியாக இன்னும் நம் தேசத்துக்கு தொண்டாற்றி வருகிறார். சிறந்த தேசாபிமானி. 1888-ம் வருட காங்கிரஸ் சபையில் இவர் முதன் முதலாகத் தோன்றினார். அன்றுமுதல் சபை நடவடிக்கைகளில் எல்லாம் இவர் கலந்து பேசி யிருக்கிறார். சர்க்கார் பரிசுகளை இவர் மதித்தவரல்லர். காங்கிரஸ் பொதுக் காரியதரிசியாக நான்கு வருஷம் தொண்டாற்றினார். (1914—1917) தன் செலவிலேயே நாடெங்கும் காங்கிரஸ் சார்பாகச் சுற்றுப் பிரயாணம் செய்து பிரசாரம் நடத்தினார்.

## லாலா முரளீதரர்

லாலா முரளீதரர் பாஞ்சால மாகாணத்தில் பிறந்தவர். அதிகாரவர்க்கத்தின் கோபம் இவர்மீது பாய்ந்து, சாக்ஷிய மில்லாமல் தண்டனை யடைந்தார். ஜெயிலிலிருந்து விடு பட்டதும் நேராகக் கல்கத்தா காங்கிரஸ் போய்ச் சேர்ந்து தன் அனுபவங்களை மகாநாட்டினருக்கு எடுத்துக்கூறினார்.

## சச்சிதானந்த சின்ஹா

1899-ல் முதன் முதல் காங்கிரஸ் மகாசபைக் கூட்டத் தில் தோன்றினார். சர்க்கார் ஆட்சி முறைச் சீர்திருத்தங் களை இவர் தேர்ந்த முறையில் எடுத்து உரைத்து அதனில் உள்ள குற்றங்குறைகளை நீக்கவேண்டுமென அடிக்கடி வற்புறுத்தி வந்திருக்கிறார். போலீஸ் இலாக்கா ஊழல் களைப்பற்றி இவர் மகாநாடுகளில் திறனுடன் எடுத்துக் கூறி இருக்கிறார். நாட்டிற்கு பீஹார்நிர்வாகசபை அங்கத்தினராக இருந்து பல நன்மைகளைச் செய்திருக்கிறார். இங்கிலாந்துக் குச் சென்ற காங்கிரஸ் தூது கோஷ்டியில் இவர் ஒருவர்.

இந்தியப் பிரமுகர்களில் அநேகமாக எல்லோரும் காங்கிரஸ் இயக்கத்தில் சேர்ந்து தேசத்துக்கு வீரத்துட னும், தியாகத்துடனும், உண்மை மனதுடனும் சேவை புரிந்திருக்கின்றனர். அவர்கள் எல்லோருடைய சரிதமும் விரிவாகக் கூற இயலாதாகையால், ஒரு சிலரின் காங்கிரஸ் சபை சம்பந்தமான சரிதம் மேலே சுருக்கமாகக் கூறப் பட்டிருக்கிறது. காங்கிரஸ் மகாசபையின் பிறப்பு வளர்ச் சிக்குக் காரணமாக இருந்த அநேக தேசபக்தர்கள் மாட்டும், இன்றும் காங்கிரஸ் மகாசபை மூலம் பாரதத் தாய்க்குத் தொண்டு புரிந்து வரும் உண்மை வீரர்கள் பலருக்கும் நாம் என்னுளும் நன்றி பாராட்டக் கடமைப்பட்டுளோம். நமது மனதில் அவர்களுக்கென ஓர் ஆலயம் அமைத்து, அவர்களை என்றும் தொழுவோமாக!

---

# இரண்டாம் பாகம்

## அத்தியாயம் 1

### சமரச முயற்சி

1915-வது வருஷம் இந்திய அரசியல் சரித்திரத்தில் மிகவும் விசேஷமானது. "இந்தியா சுதந்திரத்திற்கு உழைத்த விதம்" என்ற தலைப்பிட்ட ஸ்ரீமதி பெஸண்டின் புத்தகத்தில் காங்கிரஸ் உதித்த 1885-ம் வருஷத்திலிருந்து யுத்தம் ஆரம்பித்த 1914-வரை வரையில் சரித்திரம் எழுதப் பட்டிருக்கிறது. ருஷிய-ஜப்பானிய யுத்தத்தில் ஜப்பானியர் அடைந்த வெற்றியால் ஆசியாவின் நாடுகளுக்கு தங்களுடைய பலத்தில் நம்பிக்கை யேற்பட்டுவிட்டதுபோலும். இதேமாதிரி மகா யுத்தத்தில் இந்தியப் படைகள் காண்பித்த வீரமும் தைரியமும், அவர்கள் ஜெர்மனியர்களை வெற்றிகரமாக எதிர்த்ததும், இந்தியர்களைப்பற்றிய உலக அபிப்பிராயத்தை அதிகமாக உயர்த்திவிட்டது. இந்த உதவிக்காக கைம்மாறு கிடைக்குமென்று சுரேந்திரநாத் பானர்ஜியும் அவரைச் சேர்ந்தவர்களும் எதிர்பார்த்தனர். ஸ்ரீமதி பெஸண்ட் கோஷ்டியார் உரிமை கொண்டாடினர்கள். ஸ்ரீமதி பெஸண்ட் ஏழைகளுக்காகவும், இந்தியாவுக்காகவும் அநேக காலம் தொண்டாற்றி வந்தார். 1914-ல் தான் காங்கிரஸில் சேர்ந்தார். பிரதியுபகார முறையைப் பற்றிப் பேசும்போது இந்தியா சம அந்தஸ்து உரிமைக்கு பாத்தியமுள்ளது என்று வற்புறுத்தினர். "யுத்தத்திற்கு முந்தியே இந்தியா இதை வேண்டிற்று. யுத்தத்திற்கு பின்பும் கேட்கும். கைம்மாறாகவல்ல. உரிமையாகவே" என அவர் கூறினர்.

ஸ்ரீமதி பெஸண்ட் காங்கிரஸ் பொதுக் கூட்டங்களில் கலந்து கொண்டபோது புதிய எண்ணங்களையும், புதிய சக்தியையும், புதிய அமைப்பு முறையையும் சிருஷ்டித்தார். ஏற்கனவே அவர் ஒரு உலகப் பெரியார். ஆகவே

அவர் இந்திய அரசியல் வாழ்க்கைக்குப் புத்துயிரளித்தது ஆச்சரியமல்ல.

19-2-1915-ல் ஸ்ரீமான் கோகலே உயிர் நீத்தார். நவம்பரில் பிரோஸிஷா மேத்தாவும் மறைந்தார். ஸ்ரீ வாச்சா முதுமையின் பயனால் கண்ணிழந்ததாக 1915-ம் வருஷ காங்கிரஸிலேயே தெரிவித்தார். தவிர அவர் பண்டிதர்; சிறந்த அமைப்பாளர்; படைகளை வெற்றி நோக்கி நடத்திச் செல்லும் தளகர்த்தரல்லர். மாஜி நீதிபதி ஸர் நாராயண் சந்தவர்க்கர் ராஜீயத்தில் அவ்வளவாகக் கலந்து கொள்ள வில்லை. ஹேரம்ப சந்திர மைத்ரா, சுப்பா ராவ் பந்துலு முதலியோர் காங்கிரஸ் படையில் சிறு அதிகாரிகளே. பெயர்பெற்ற சுரேந்தரநாத் கூட புதிய உணர்ச்சியைச் சரியாக உணரவில்லை. இதுவே 1915-ம் வருஷத்திலிருந்த நிலை.

படையைச் செலுத்த சேனாதிபதி இல்லை. 1914-ம் ஆண்டு ஜூன் மாதத்தில் லோகமான்ய திலகர், மாண்டலே சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டார். இந்திய ஊழிய சங்கத்திற்குத் தலைவராக கோகலேயைப் பின்பற்றிய ஸ்ரீமான் சீனிவாச சாஸ்திரி சுபாவத்தில் தீவிர முறைக்கும், மிதவாத கொள்கைக்கும் நடுவி லகப்பட்டு, கொள்கை, உசிதமுறை இரண்டில் எதைப் பின்பற்றுவதென்று நிச்சய மில்லாமல், எப்பொழுதும் பின்னணியிலேயே இருந்து வந்தார். பண்டித மாளவியாவால் காங்கிரஸை மிதவாத வழியில் செலுத்த முடியவில்லை. தம்முடைய நம்பிக்கைப் படி முன்னேக்கி நடக்க ஊக்கமுமில்லை.

காந்திஜி அப்பொழுதுதான் இந்தியாவுக்கு வந்தார். அவருடைய பொது வாழ்வு இன்னும் திட்டமான முறையில் துவங்க வில்லை. தம்முடைய தாய் நாட்டை விட்டு அதிக காலம் வெளியே சென்றிருந்தார். தம்மு முடைய ராஜீய குரு கோகலேயின் சொற்படி நாட்டின் நிலைமையை ஆராய்ந்து கொண்டிருந்தார். தேசத்திலும், முக்கியமாக பாஞ்சாலத்திலும் இருந்த நிலைமை லாலா லஜபதிராய்க்கு வெறுப்பையே அளித்தது. யுத்தகாலத்தில் அவர் தேச பிரஷ்டராக அமெரிக்காவில் வாழ்ந்து வந்தார். 1915-ல் பம்பாய் காங்கிரஸ் தலைவரான ஸத்யேந்திர பிரஸன்ன ஸின்ஹா, அதன் பிறகு காங்கிரஸில் அதிகமாக ஈடுபடவில்லை. தேசத் தலைமை சர்க்காரிடம் போய்விடும் போலிருந்தது. மிதவாதிகளின் சக்தி மறைந்துவிட்டது.

தேசிய வாதிகள் இன்னும் ஒன்று சேரவில்லை. காங்கிரஸின் இரு கட்சிகளையும ஒன்று சேர்க்க 1914, 1915-ல் ஸ்ரீமதி பெஸண்ட் செய்த முயற்சிகள் வீணாயின.

1915-ல் லோகமான்ய திலகரே முடிசூடா மன்னராயிருந்திருக்க வேண்டும்.

ஆனால் துரதிருஷ்ட வசமாக அப்படி ஏற்படவில்லை. திலகர் பெரிய சுதந்திர இயக்கத்தை ஸ்தாபிக்க முயன்றார். மிதவாதிகளைப் புண்படுத்தாமலிருக்க வேண்டுமெனவும் பார்த்தார். அவருடைய திட்டம் (1) காங்கிரஸ் சமரசம், (2) தேசியக் கக்ஷியின் சீர்திருத்தம், (3) தீவிர சுயாக்ஷி இயக்க ஸ்தாபனம். முதல் பிரிவு சம்பந்தமாக காங்கிரஸ் பிரதிநிதிகளின் தேர்தலுக்கு இன்னும் அதிக சௌகரியங்கள் வேண்டுமென்று திலகரும், தேசிய வாதிகளும் விரும்பினர். அப்பொழுதிருந்த தேர்தல் முறையில் மிதவாதக் கொள்கை முக்கியமாக இருந்ததால், தேசிய வாதிகள் காங்கிரஸ் பிரவேசத்திற்குத் தங்களுடைய எதிரிகளான மிதவாதிகளின் தயவை எதிர்பார்க்க மறுத்தனர். காங்கிரஸ் அமைப்பில் முக்கியமான விதியொன்றைத் திருத்தி அமைக்க, ஸ்ரீமதி பெஸண்டும் காங்கிரஸ் காரியதரிசி சுப்பா ராவ் பந்துலுவும், 1914-ம் ஆண்டு டிஸம்பரில் பூனா சென்று திலகர், கோகலே முதலியவர்களுடன் கலந்து பேசினார்கள். ஒரு திருத்தம் அங்கீகரிக்கப்பட்டது.

திலகர் காங்கிரஸில் பிரவேசிப்பதனால் மீண்டும் பழைய பிளவு நேரிடுமென்று கோகலே நினைத்தார். ஆகவே அவர் திருத்தத்திற்குச் சம்மதிக்க முடியாதென்று ஸ்ரீமதி பெஸண்டிடம் சொல்லிவிட்டார். 1914-ம் வருஷத்திய காங்கிரஸ் தலைவரின் கடிதத்திற்குப் பதில் எழுதும் பொழுது, தம்முடைய கருத்தை மாற்றிக்கொண்டதற்கு, கோகலே காரணம் தெரிவித்தார். திலகர், சர்க்கார் பகிஷ்காரத்தையும், முட்டுக்கட்டை முறைகளையும், பகிரங்கமாகக் கைக்கொண்டதாக அதில் சொல்லி யிருந்தார். ஸ்ரீமதி பெஸண்டின் விசாரணையின்மேல் திலகர் இதை மறுத்தார். கோகலே மன்னிப்புக் கேட்டுக்கொண்டார். என்றாலும் ராஜி ஏற்படவில்லை. 8—2—1915-ல் "நியூ இந்தியா" பத்திரிகையில் சுப்பராவ் பந்துலு பம்பாய் சம்பிரதாய கக்ஷி தலைவர்கள் ஸ்ரீமதி பெஸண்டின் திருத்தத்தை ஒப்புக்கொள்ளவில்லையென்று தெரிவித்திருந்தார்.

கோகலேயின்மீது திலகருக்கு அதிக மரியாதை. தம்முடைய அரசியல் எதிரி இறந்ததும் திலகர் மிகவும் உருக்கமாக ஒரு சொற்பொழிவாற்றினார். "இது கொண்டாட்டத்திற்குச் சமயமில்லை, கண்ணீர் பெருக்க வேண்டிய சந்தர்ப்பம். இந்தியாவின் ரத்னம், மகாராஷ்டிர தேசத்தின் மணி, ஒப்பற்ற தொண்டர், இறந்துவிட்டார். அவரை நினைத்து, அவர்போல் நடக்க முயலுங்கள். உங்களில் ஒவ்வொருவரும் அவருடைய வாழ்க்கையை முன்மாதிரியாகக் கொண்டு அவரது மறைவினால் நேர்ந்த பிளவை மூடவேண்டும். நீங்கள் அம்மாதிரி செய்தால் அவருக்கு மறுமையில் சந்தோஷமுண்டாகும்" என அவர் அதில் குறிப்பிட்டார்.

1915-லும், 1916-லும்கூட தம்முடைய கட்சியைச் சேர்த்தமைக்கத் திலகர் பாடுபட்டார். ஒரு கட்சிக்கு வசீகர சக்தியுள்ள தலைவரும், ஒரு சிறந்த லக்ஷியமும், ஒரு யுத்த கோஷமும் அவசியமென்றார். அவருடன் சேர்ந்துழைத்த ஜோஸப் பாப்டிஸ்டாவின் தலைமையில் பூனாவில் 1000 தேசியவாதிகள் கூடி ஒரு மகாநாடு நடத்தினர். இதற்கும், பிறகு வெல்லிங்டன் பிரபுவின் சமூகத்தோடு கூடிய மிதவாதிகளின் மகாநாட்டிற்கும் அந்தோ! என்ன வேற்றுமை? பூனா மகாநாடு சுதந்திரமாகிய யுத்த கோஷத்தை அளித்தது. இந்த லக்ஷியத்திற்காக இந்தியா எப்படி முன்னேறுவது என்பதே திலகரின் கவலையாயிருந்தது. தொழிற்கட்சித் தலைவர்கள் மூலம் பார்லிமெண்டில் ஒரு சட்டத்தைக் கொண்டுவந்து பிறகு மகத்தான பிரசாரம் செய்யவேண்டுமென்று அவர் நினைத்திருந்தார்.

சமரச முயற்சிகள் பயன்படாமல் போனதினால் 1915-ல் பம்பாயில் கூடிய காங்கிரஸ் மிதவாதக்கொள்கையை தழுவும் போலிருந்தது. அந்த காங்கிரஸ் தலைவர் சத்யேந்திர பிரஸன்ன ஸின்ஹாவின் பேருரை தேசிய வாதிகளுக்கு பிற்போக்கானதாகவே பட்டது. அவர் இந்தியாவின் வளரும் சமூகத்திற்குத் தேவையான லட்சியத்துடனும், அதிகாரிகளின் அங்கீகாரத்திற்கு ஏற்றதாகவும் காங்கிரஸ் கொள்கை நிர்ணயிக்கப்பட வேண்டுமென்றார்.

சூரத் காங்கிரஸுக்குப் பிறகு ஏற்பட்ட கிளர்ச்சியின் சின்னங்கள் 1915-ல் பம்பாய் காங்கிரஸிலேயே தோன்றின. பம்பாய் காங்கிரஸுக்கு 2,259 பிரதிநிதிகள்

வந்திருந்தார்கள். பல விஷயங்களைப்பற்றி தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. தலைவர்கள் மறைவைப்பற்றிய அனுதாபம், ஜனங்களின் ராஜவிஸ்வாஸம், மகாயுத்தத்தில் பிரிட்டனும் அதன் நேச நாடுகளும் கொண்ட கொள்கைக்குப் பாராட்டு, லார்டு ஹார்டிஞ்சு வைசிராய் பதவி நீடிப்புக்கு வேண்டுகோள், ராணுவம் முதலிய இலாக்காக்களில் இந்தியர்களுக்கு சம அந்தஸ்து உரிமை, 1878-ல் ஆயுதச் சட்டத்தினால் ஏற்பட்ட அவமதிப்பு கண்டனம், தென்னாப்பிரிக்கா இந்தியர்களின் சட்ட பூர்வமான கஷ்டங்கள், சுதேசி இயக்கத்துக்கு ஆதரவு முதலிய பல விஷயங்கள் சம்பந்தமாக தீர்மானங்கள் நிறைவேறின. மாகாண சுயாட்சி மூலம் ஜனங்களுக்கு சர்க்கார் நிர்வாகத்தில் போதிய அதிகாரம் கொடுப்பதற்கு அவசியமான சீர்திருத்தம் வேண்டுமென்று ஒரு தீர்மானம் வற்புறுத்திற்று. மேலும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி, பிரசார திட்டமும், சீர்திருத்தத் திட்டமும் நிர்ணயித்து அதற்காகவும், இன்னும் அவசியமான மற்ற விஷயங்களுக்காகவும் அகில இந்திய முஸ்லீம் லீக்குடன் கலந்தாலோசிக்க வேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

நிலவரி சம்பந்தமாக நிரந்தர செட்டில்மெண்டாவது, 60 வருஷகாலத்திற்குக் குறையாத செட்டில்மெண்டாவது ஏற்பட வேண்டுமென்பது மற்றொரு தீர்மானம். பொருளாதார சுயாட்சியோடு, அயல்நாட்டு வியாபாரிகளுக்குக் காட்டப்படும் சலுகையை ஒழித்து தேசத்தில் கைத்தொழில் கல்வியபிவிருத்திக்கு வேண்டிய நடவடிக்கைகள் மூலம் கைத்தொழிலை விருத்தி செய்யவேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது.

ஆகவே, 1885-ல் காங்கிரஸ் பிறந்ததிலிருந்து நிறைவேற்றப்பட்ட தீர்மானங்களின் சாராம்சம்தான் 1915-ம் வருஷம் காங்கிரஸில் நடந்தேறிய வேலை என்று விளங்கும்.

அகில இந்திய முஸ்லீம் லீக்குடன் காங்கிரஸ் கமிட்டி ஒத்துழைக்க வேண்டுமெனத் தீர்மானிக்கப்பட்டது 1913-ல் கராச்சி காங்கிரஸில் தோன்றிய நட்பின் பலன் தான்.

1915-ம் வருஷத்திய காங்கிரஸில் விஷயாலோசனைக் கமிட்டிக்கு காந்திஜி தேர்ந்தெடுக்கப்படாமற் போனது

குறிப்பிடத்தக்கது. ஆகையால் அவர் தலைவரால் கமிட்டியில் நியமிக்கப்பட்டார்.

பம்பாய் காங்கிரஸின் ஒரு விசேஷ வெற்றி, காங்கிரஸின் அமைப்பு தக்கபடி மாற்றப்பட்டதுதான். இதனால், இரண்டு வருஷ காலமாக இருந்துவரும் எந்த சபையின் ஆதரவிலும் கூட்டப்பட்ட பொதுக்கூட்டத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட தேசிய வாதிகள் காங்கிரஸில் பிரவேசிக்க முடிந்தது. இந்த சபைகள் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்திற்குள் சுதந்திரம் பெறுவதை ஒரு லட்சியமாகக் கொண்டிருக்க வேண்டும். இந்த மாறுதலினால் திலகர் தாம் மீண்டும் காங்கிரஸில் சேருவதற்கு தயாராயிருப்பதாய்த் தெரிவித்தார்.

---

## அத்தியாயம் 2

---

## ஐக்கிய காங்கிரஸ் (1916)

முந்திய வருஷத்தைவிட இந்த வருஷத்தில் ஆரம்பத்தில் காங்கிரஸ் அபிவிருத்திக்கு வேண்டிய சாதனங்கள் இருந்தன. ஆனால் கோகலே, மேதா போன்ற இரண்டு தலைவர்களை நாடு இழந்துவிட்டது. திலகருக்கு காங்கிரஸில் இன்னும் இடமேற்படவில்லை. பம்பாய் சமரஸத்தின் பிரகாரம் ஒரு வருஷத்திற்குப் பிறகு தான் அவர் எண்ணத்தின்படி காங்கிரஸ் நடவடிக்கைகள் நடக்கும். ஆகவே, அவர் தம்முடைய ஹோம் ரூல் இயக்கத்திலேயே ஈடுபட்டிருந்தார். அவருடைய பாண்டித்யம், அறிவு, ஊழியம், தியாகம் எல்லாம் அவரே இந்த இயக்கத்திற்குத் தகுந்த தலைவர் என்பதைக் காண்பித்தன. இங்கிலாந்துக்கு ஒரு தூது கோஷ்டி அனுப்பும்படி காங்கிரஸை தூண்ட அவர் எவ்வளவோ முயன்றார். ஆனால் முடியவில்லை. பிறகுதான் 23—4—1916-ல் ஸ்ரீமதி பெஸண்டுக்கு 6 மாதத்திற்கு முன்னமேயே தமது இயக்கத்தை ஆரம்பித்தார்.

சர்க்கார்தான் திலகரின் ஜன்ம விரோதி. மாணவர்கள் தற்காப்புப் படையில் சேரவேண்டுமென்று அவர் சொல்லியபோது அவர் டில்லியிலும் பாஞ்சாலத்திலும்

பிரவேசிக்கக் கூடாது என்று பாஞ்சால சர்க்கார் தடை யுத்தரவு பிறப்பித்தனர்.

தம்முடைய ஹோம் ரூல் இயக்கத்திற்கு காங்கிரஸ் கொள்கையை அங்கீகரித்தார். இது ஸ்ரீ சீனிவாச சாஸ் திரிக்கு மிகவும் திருப்தியளித்தது. திலகரின் சஷ்டிபூர்த்தி 1916-ல் நடந்தது. அவருக்கு ஒரு லக்ஷம் ரூபாய் பரிசாக அளிக்கப்பட்டது. அந்தத் தொகை முழுவதையும் தேசத் திற்கு அர்ப்பணம் செய்துவிட்டார். சர்க்கார் அடக்கு முறை அதிகமாகவாக திலகர் மென்மேலும் தீவிர வாதியானார். கடைசியில் அவரை அடக்குவதற்காக சர்க்கார் அவரி டம் ஒரு வருஷகாலம் நன்னடத்தைக்காக 30,000 ரூபாய் ஜாமீன் கேட்டனர். ஆனால் ஹைகோர்ட்டு இந்த உத்தி ரவை 9-11-1916-ல் ரத்து செய்துவிட்டது. இதனால் திலக ரின் புகழ் மேலும் ஓங்கிற்று. ஆனால் ஜனங்களின் உணர்ச் சியை வளர்க்க தேசமுழுவதும் சுற்றுப் பிரயாணம் செய்ய அவரால் முடியவில்லை. முதுமையின் ஆதிக்கத்திற்குட் பட்டிருந்தார் இந்த வேலையை உலக முழுவதும் பிரசித்தி பெற்ற, ஓய்விலா உழைக்கும் சக்தி வாய்ந்த ஸ்ரீமதி பெஸண்டு ஏற்றுக்கொண்டார்.

1916-ல் இதுவே இந்தியாவின் நிலை. தேசத்தின் குறைகளைக் கேட்பாரில்லை. செலுத்தத் தலைவரில்லை.

இந்த சமயத்தில்தான் ஸ்ரீமதி பெஸண்டு முன்னணி யில் வந்தார். அவர் மத பிரசாரத்திலிருந்து ராஜீயத்தில் பாய்ந்தார். பிரும்ம ஞானத்தைவிட்டு சுதந்திரப் போரை மேற்கொண்டார். நியூ இந்தியா என்னும் தினசரியையும், காமன் வீல் என்னும் வாரப் பத்திரிகையையும் ஆரம்பித் தார். ஹோம் ரூல் இயக்கத்தை வெகு மும்மரமாக பிரசாரம் செய்தார். 1915-ல் ஒரு இந்திய ஹோம் ரூல் கோஷ்டி ஸ்தாபிக்க முயற்சி செய்யப்பட்டது. ஆனால் அந்த வருஷத்திய காங்கிரஸ் நேர்முகமாக சுதந்திரத் திற்கான வேலையை எடுத்துக்கொள்ளுமா என்று பார்ப் பதற்காக இந்த முயற்சி நிறுத்திவைக்கப்பட்டது.

பம்பாய் காங்கிரஸ் ஆக்ஞைப்படி காங்கிரஸ் பிரதி நிதிகளும், முஸ்லீம் பிரதிநிதிகளும் கலந்தாலோசித்த தால் ஒரு ஒப்பந்தம் ஏற்பட்டது. குடியேற்ற நாட் டந்தஸ்துள்ள சுயாட்சிக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செயயவும், ஒரு திட்டத்தைத் தயாரிக்கவும் ஒரு கூட்டுக்

கமிட்டி யமைக்கப்பட்டது. கூட்டுக் கமிட்டியால் தயாரிக்கப்பட்ட அறிக்கை 1916-ல் லக்ஷ்மணபுரி காங்கிரஸாலும் முஸ்லீம் லீக்கினாலும் அங்கீகரிக்கப்பட வேண்டியிருந்தது. பண்டித மோதிலால் நேரு சூரத் காங்கிரஸில் டாக்டர் ராஷ் பிகாரி கோஷ் தலைமை வகிப்பதை ஆதரித்துப் பேசிய பிறகு 1915-ம் ஆண்டு வரை காங்கிரஸ் விஷயங்களில் கலந்துகொள்ளவில்லை. 1916-ம் வருஷம் ஏப்ரல் மீ 22, 23, 24-ந் தேதிகளில் அவருடைய வீட்டில்தான் அ. இ. கா. கமிட்டி கூடி ஆலோசித்தது. இந்த கமிட்டியின் தற்காலிகமான தீர்மானங்கள் அ. இ. கா. கமிட்டி, முஸ்லீம் லீக் சபை இரண்டும் சேர்ந்த கூட்டுக் கமிட்டியில் அக்டோபர் மாதத்தில் ஆலோசிக்கப்பட்டன. இந்து முஸ்லீம் ஒற்றுமை அநேகமாக ஏற்பட்டுவிட்டது. பாஞ்சால, வங்க மாகாணங்களில் முஸ்லீம் பிரதிநிதித்துவம் மாத்திரம் லக்ஷ்மணபுரி காங்கிரஸ் ஆலோசனைக்கு நிறுத்திவைக்கப்பட்டது. கூட்டுக் கமிட்டி ஒப்புக்கொண்ட திட்டத்தை கல்கத்தா காங்கிரஸ் அங்கீகரித்தது.

டில்லி சட்ட சபையின் அங்கத்தினர்களான பத்தொன்பது பேர் 1916 நவம்பரில் வைசிராய்க்கு ஒரு சுயாட்சி திட்டத்தை அனுப்பியது உள் ரகசியங்கள் தெரிந்த அரசியல் வாதிகளுக்குத் தெரியும். இந்திய சர்க்கார் இந்த விஷயமாக பிரிட்டிஷ் சர்க்காருக்கு சில பிற்போக்கான யோசனைகளை அனுப்பியது தான் இந்தத் திட்டம் அனுப்பப்பட்டதற்குக் காரணம் என்று நம்பப்படுகிறது.

காங்கிரஸின் தாமதமுறை ஸ்ரீமதி பெஸண்டுக்குப் பிடிக்கவில்லை. ஸ்ரீமதி பெஸண்டு இங்கிலாந்தில் இன்னும் தீவிரமான சங்கம் வேண்டுமென்று விரும்பினார். 12-6-1914 சென்னை காங்கிரஸ் தீர்மானத்தின் பிரகாரம் லண்டனில் ஒரு உதவி ஹோம் ரூல் லீக் ஸ்தாபித்தார். இந்தியாவில் ஹோம் ரூல் லீக் ஸ்ரீமதி பெஸண்டின் தலைமையில் 1-8-1916-ல் சென்னை கோகலே மண்டபத்தில் ஆரம்பிக்கப்பட்டது. முதல் ஹோம் ரூல் லீக் 23-4-1916-ல் பூனாவில் திலகரால் ஆரம்பிக்கப்பட்டிருந்தது. இரண்டிற்குமுள்ள வித்தியாசம் தெரிவதற்காக ஸ்ரீமதி பெஸண்டு தம்முடையதை 1917-ல் அகில இந்திய ஹோம் ரூல் லீக் என்று நாமகரணம் செய்தார்.

1916-ம் ஆண்டு லக்ஷ்மணபுரி காங்கிரஸில் திலகர் கலந்து கொண்டார். பம்பாயிலிருந்து பெருவாரியான தேசீயப் போக்குள்ள பிரதிநிதிகளை தமது கக்ஷியில் சேர்த்துக்கொண்டார். சூரத் பிளவுக்குப் பிறகு அப்பொழுது தான் திலகர் மீண்டும் காங்கிரஸில் கலந்து கொண்டார். விஷயாலோசனைக் கமிட்டி அங்கத்தினர் சம்பந்தமாக மிதவாதிகளுக்குத் திலகர் சொல்லிய யோசனை பயன்படாமல் போனதினால் பம்பாய் தேசீயவாதிகளைக் கொண்டு விஷயாலோசனைக் கமிட்டிக்கு பம்பாய் பிரதிநிதிகளாக தேசீய வாதிகளையே தேர்ந்தெடுக்குமாறு செய்து விட்டார். தேர்தலில் ஒரு தேசீய வாதியின் பெயரும் ஒரு மிதவாதியின் பெயரும் ஜோடி ஜோடியாக ஒன்றன்பின் ஒன்றாக பிரரேபிக்கப்பட்டன. ஆகவே காந்திஜியின் பெயரோடு ஒரு தேசீயவாதியின் பெயர் பிரரேபிக்கப்பட்டதால் காந்திஜிக்கு ஓட்டுக் கிடைக்கவில்லை. ஆனால் காந்திஜி தேர்ந்தெடுக்கப்பட்டாரென்று திலகர் அறிவித்து விட்டார்.

லக்ஷ்மணபுரி காங்கிரஸுக்கு பாபு அம்பிகா சரண் மஜும்தார் தலைமை வகித்தார். அவருடைய பேருரை வழக்கம்போல் காங்கிரஸ் வாதிகளின் சொற்பொழிவுத் திறனை வெளிப்படுத்திற்று. லக்ஷ்மணபுரி காங்கிரஸில் நடந்தேறிய விசேஷம் காங்கிரஸ்-லீக் சீர்திருத்தத் திட்ட முடிவும், இந்து-முஸ்லீம் ஒற்றுமை வேலையுமாகும்.

இதைப்பற்றிய பூர்வாங்க வேலை 1916-ம் ஆண்டு ஏப்ரலில் அலகாபாத்திலும், நவம்பரில் கல்கத்தாவிலும் நடந்தன. பாஞ்சால, வங்க முஸ்லீம் பிரதிநிதித்துவம் லக்ஷ்மணபுரியில் நிர்ணயிக்கப்பட்டது. நிர்வாகம் சட்ட சபைக்கு அடங்கியே இருக்கவேண்டு மென்பதுதான் காங்கிரஸ்-லீக் திட்டத்தின் முக்கியாம்சம். ஆனால் சட்ட சபையிலேயே ஐந்தில் ஒரு பகுதி சர்க்கார் நியமனமா யிருந்தது. இந்தியா மந்திரியின் சபை ஒழியவேண்டுமென்றும் அத்திட்டம் வற்புறுத்தியது. மொத்தத்தில் பார்க்கப்போனால் காங்கிரஸ் சரித்திரத்தில் இத் திட்டம் பயனற்றதாகவே இருந்தது. அப்படி யிருந்தும், சர்க்கார் இதற்கு எதிராக தங்கள் திட்டமொன்றைக் கொண்டுவந்தனர்.

இந்து-முஸ்லீம் ஒற்றுமையும், காங்கிரஸில் ஏற்பட்ட சமரசமும் லக்ஷ்மணபுரியின் விசேஷங்கள். திலகரும் கபார்தேயும், சர் ராஷ் பிகாரி கோஷ், சுரேந்திரநாத்

பானர்ஜி இவர்களோடு சேர்ந்தமர்ந்திருந்தது ஒரு அரிய காட்சியா யிருந்தது. ஸ்ரீமதி பெஸண்டும் தோழர்களான அருண்டேல், வாடியாவும் பிரஸன்னமா யிருந்தனர். முஸ்லீம்களில் முகமதாபாத் ராஜாவும், மஜர்-உல்-அக், ரஸூல், ஜின்னு முதலியவர்களும் இருந்தனர். காந்திஜியும், போலக்கும் ஒருபுறம் வீற்றிருந்தனர். காங்கிரஸ் ஆதரித்த காங்கிரஸ்-லீக்திட்டத்தை முஸ்லீம் லீக்கும் ஆதரித்து விட்டது.

காங்கிரஸுக்கு 2,301 பிரதிநிதிகள் வந்திருந்தனர். நூற்றுக் கணக்கான அபிமானிகளும் வந்து பந்தலில் இட மில்லாமல் நிறைந்துவிட்டனர். வழக்கம்போல் பல விஷயங் கள் பற்றிய தீர்மானங்கள் ஆலோசிக்கப்பட்டன. காலஞ் சென்ற பண்டித பிஷன் நாராயணதார், ஜி. சுப்பிரமணிய அய்யர், டி. எ. கேர் மரணத்திற்காக அனுதாபம் காட்டப் பட்டது. வடக்கு பீஹாரில் ஐரோப்பிய தோட்டக்காரர் களுக்கும், விவசாயிகளுக்கும் உள்ள சம்பந்தத்தையொட்டி விவசாய சச்சரவை உத்தியோகஸ்தர்களும் உத்தியோகஸ் தர் அல்லாதாரும் அடங்கிய கமிட்டியொன்று விசாரிக்க வேண்டுமென்று ஒரு தீர்மானம் வற்புறுத்திற்று.

இந்திய சுய ஆட்சியைப்பற்றிய தீர்மானம் வருமாறு:—

"(a) இந்தியாவின் புராதன நாகரீகத்தை யுத்தே சித்தும், கல்வி, பொது வாழ்விலேற்பட்ட அபிவிருத் தியை உத்தேசித்தும், மாகூஷிமை தங்கிய சக்கரவர்த்தி, சீக்கிரத்தில் இந்தியாவுக்கு சுயாட்சி யளிப்பது பிரிட்டிஷ் சர்க்காரின் நோக்கமென்று தயவு கூர்ந்து அறிவிக்க வேண் டும். (b) இந்த விஷயத்தில் முதல்படியாக காங்கிரஸ்-லீக் திட்டம் அநுமதிக்கப்பட வேண்டும். (c) சாம்ராஜ்யத் தின் திருத்திய அமைப்பில் இந்தியா சம அந்தஸ்துடைய சுயாட்சி பெறவேண்டும்."

பிரிட்டிஷ் சர்க்காரின் தேச பாதுகாப்புச் சட்டத்தின் படி குற்றம் சாட்டப்பட்டவர்களுக்குக் குற்றத்தைக் குறிப் பிட்ட அறிக்கையொன்று கொடுக்கவேண்டும். பிரதிவாதி யின் சமாதானம் ஒரு ஐகோர்ட் ஜட்ஜு, ஒரு உத்தியோ கஸ்தரல்லாத வக்கீல், சிவில் சர்விஸைச் சேர்ந்த ஜட்ஜு ஒருவர், இந்த மூவர் முன்னிலையிலும் சமர்ப்பிக்கப்பட வேண்டும். இந்தியா பாதுகாப்புச் சட்ட நடவடிக்கை

களிலும் இப்படியே செய்யவேண்டுமென்று ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

1818-ம் வருஷத்திய வங்காள ரெகுலேஷன் III நடவடிக்கைகளிலும் இதே முறை வேண்டுமென்று வற்புறுத்திற்று. இந்த ரெகுலேஷன் பிரகாரம் வங்காளத்தில் 60 பேர்கள் சிறைப்பட்டனர். ரெகுலேஷன் பாதுகாப்புச் சட்டம் இவைகளின் அமுலை ஜனங்கள் எதிர்த்தனர்.

காங்கிரஸ் மகாசபையும், முஸ்லீம லீக் கூட்டமும் ஒரே இடத்தில் நடக்க வேண்டுமென்று சென்ற வருஷம் பம்பாயில் ஆரம்பிக்கப்பட்ட சம்பிரதாயம் லக்ஷ்மணபுரியில் பின்பற்றப்பட்டது. சுயாட்சி திட்டம் அங்கீகரிக்கப்பட்டதும், நாடெங்கும் காங்கிரஸ் கமிட்டிகள் பொது ஜன போதனைக்காகப் பிரசாரம் நடத்தவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. மாகாணங்களில் அற்புதமான உற்சாகம் ஏற்பட்டது. ஸ்ரீமதி பெஸண்டின் தலைமையில் சென்னை அதிக வெற்றிபெற்றது. 1899-ல் 15-வது காங்கிரஸ் லக்ஷ்மணபுரியில் கூடியபோது அநேக இடையூறுகள் நேரிட்டன. 1916-லும் அதேமாதிரி நேர்ந்தது. ஐக்கிய மாகாண சர்க்கார் காங்கிரஸ் பிரசங்கங்களில் ராஜத்துவேஷ உணர்ச்சி இருக்கக்கூடாதென்று வரவேற்புக் கமிட்டியை எச்சரித்தனர். வங்க சர்க்கார் மூலம் தலைவருக்கும் நோட்டீஸ் கொடுக்கப்பட்டது. இதற்கு வரவேற்புக் கமிட்டி ஆணித்தரமான பதிலளித்தது. தலைவர் நோட்டீஸை உதாசீனம் செய்துவிட்டார். ஸ்ரீமதி பெஸண்ட், பீரார், பம்பாய் மாகாணங்களில் பிரவேசிக்கக் கூடாதென்று உத்தரவிடப்பட்டிருந்தார். ஆகவே ஏதாவது விசேஷ சம்பவங்கள் நேரிடுமென்று எதிர்பார்க்கப்பட்டது. லெப்டினன்ட்-கவர்னர் சர் ஜேம்ஸ் மெஸ்டன் மனைவியோடும், பரிவாரத்தோடும் காங்கிரஸுக்கு விஜயம் செய்து தமக்களிக்கப்பட்ட வரவேற்புக்குத் தகுந்த பதிலளித்துப் புத்திசாலித்தனமாக நெருக்கடி நேராவண்ணம் தடுத்துவிட்டார்.

---

# அத்தியாயம் 3

---

## பொறுப்பாட்சி மார்க்கம்

இந்திய அரசியல் வளர்ச்சிக்கு பெரிய முட்டுக்கட்டை யாயிருந்தது வகுப்பு வேற்றுமைதான். 1917-ல் சுயாட்சி திட்டம் ஆரம்பிக்கப்பட்டபோது இந்தியாவின் இரண்டு பெரிய வகுப்புகளுக்குள் ஏற்பட்ட ஒற்றுமை, சர்க்கார் அதிகாரத்தினாலல்லாமல் இந்துக்களும் முஸ்லீம்களும் தாமாகவே தேடிக்கொண்டது அதிருஷ்டவசம்தான். 1917-ல் ஊக்கத்துடன் ஆரம்பிக்கப்பட்ட கிளர்ச்சிக்கு இது நல்ல ஆதரவாயிருந்தது. இந்த கிளர்ச்சிக்கு எதிராக போலீஸ் அடக்குமுறையும் அதிகமாயிற்று.

ஹோம் ரூல் கோஷம் தேசத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் பரவிற்று. எங்கு கண்டாலும் ஹோம் ரூல் சங்கங்கள். ஸ்ரீமதி பெஸண்ட் பத்திரிகையின் செல்வாக்கு அதிகமாயிற்று.

லார்டு பெண்ட்லண்டு, மாணவர்கள் அரசியலில் ஈடுபடக் கூடாதென்று உத்தரவு பிறப்பித்தார். "ஹிந்து" பத்திரிகையின் ஆசிரியர் கஸ்தூரிரங்க அய்யங்காரை வரவழைத்து அரசியல் நிலைமையைப்பற்றி அவரிடம் தமது கருத்தைத் தெரிவித்தார்.

ஹோம் ரூல் கொள்கை காட்டுத் தீ போல் பரவிக் கொண்டிருந்தது. இந்த இயக்கத்தில் பெண்கள் செய்த இன்றியமையாத சேவையை கல்கத்தா காங்கிரஸில் (1917) தலைமை வகித்த ஸ்ரீமதி பெஸண்ட் பாராட்டினார். ஹோம் ரூல் இயக்கம், தேசத்தை பாஷைகளுக்குத் தகுந்தவாறு பிரித்து பிரசாரம் செய்ததால், சீக்கிரத்தில் வளர்ச்சி யடைந்து காங்கிரஸுக்கு ஒரு வழி காட்டியாயிற்று.

15—6—1917-ல் ஸ்ரீமதி பெஸண்ட், ஸ்ரீ அருண்டேல், ஸ்ரீ வாடியா மூவருக்கும் சிறைவாச நோட்டீஸ் கொடுக்கப்பட்டது. ஆறு ஊர்களில் ஏதாவதொன்றை தெரிந்தெடுத்துக்கொள்ள அவர்களுக்கு சுதந்திர மளிக்கப்பட்டது. இவர்களுடைய சிறைவாசத்துடன் இயக்கம் அதிக வளர்ச்சி யடைந்தது. ஸ்ரீ ஜின்னா உடனே இவ்வியக்கத்

தில் சேர்ந்துகொண்டார். ஸ்ரீ பி. கே. திலாங் "நியூ இந்தியா" ஆசிரியர் பதவியை ஏற்றுக்கொள்ள சென்னை வந்தார். ஸ்ரீ ஏ. ரங்கசாமி அய்யங்காரும் பத்திரிகைக்கு உதவி செய்துவந்தார். ஸ்ரீ சி. பி. ராமசாமி அய்யரும் இந்த இயக்கத்திலும், பத்திரிகைத் தொழிலிலும் ஈடுபட்டிருந்தார். இயக்க வளர்ச்சியைப்பற்றி ஸ்ரீ மாண்டேகு தமது டைரியில் பின்வருமாறு குறிப்பிட்டிருந்தார்:— "தன்னுடைய மனைவியை 52 பாகங்களாக வெட்டிய பின் தனக்கு 52 மனைவிகள் ஏற்பட்டுவிட்டதை உணர்ந்த சிவன்மீது எனக்கு விசேஷ பிரியம். ஸ்ரீமதி பெஸண்டை இந்திய சர்க்கார் சிறைப்படுத்தியபோது இந்த பலன்தான் ஏற்பட்டது."

இச் சமயத்தில் லண்டனில் நடந்த ஏகாதிபத்திய யுத்த மகாநாட்டுக்கு பிகானீர் மகாராஜாவும், சர் எஸ். பி. சின்ஹாவும் பிரதிநிதிகளாகச் சென்று அதிக மதிப்புப் பெற்றனர். இதனால் பிரிட்டிஷ் கமிட்டியார் சீர்திருத்த விஷயமாய் இந்தியாவிலிருந்து ஒரு தூது கோஷ்டி அனுப்புவதை நிறுத்திவிட்டார்கள். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி இங்கிலாந்துக்கு ஒரு தூது கோஷ்டி அனுப்பி அங்கு ஒரு காங்கிரஸ் சபையும் கூட்டுவதென்று 7—4—1917-ல் தீர்மானித்தது. ஸ்ரீ சுரேந்திரநாத் பானர்ஜி, டாக்டர் ராஷ் பிகாரி கோஷ், சர். கே. ஜி. குப்தா, முகமதாபாத் ராஜா, டெஜ் பகதூர் சாப்ரூ, வி. எஸ். சீனிவாச சாஸ்திரி, சி. பி. ராமசாமி அய்யர் முதலியோர் தூதுகோஷ்டிக்கு நியமிக்கப்பட்டார்கள். 8—5—1917-ல் லண்டனில் ஒரு சிறு மகாநாடு கூடிற்று. இதில் சர். எஸ். பி. சின்ஹா பிரசன்னமாயிருந்தார். இந்த மகாநாட்டின் நடவடிக்கைகள்தான் இந்திய தூது கோஷ்டியை நிறுத்துவதற்குக் காரணமா யிருந்தன.

சிறைப்பட்ட தலைவர்களை மீட்பதற்காக இந்தியா ஒரு சத்யாக்கிரக இயக்கம் ஆரம்பிக்க ஏற்பாடுகள் செய்து கொண்டிருந்தது. செப்டெம்பர் மாதத்தில் இங்கிலாந்து சென்று அரசியல் நிலைமையை விவரிப்பதற்காக ஜின்னா, சாஸ்திரி, சாப்ரூ, வாஜிர் ஹாசன் முதலியோர் அடங்கிய சிறு தூது கோஷ்டி யொன்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி, முஸ்லீம் லீக் இரண்டும் சேர்நது கூடிய கூட்டத்தில் அமைக்கப்பட்டது. அரசியல் வேலைக்கு உதவியாக

சத்யாக்கிரகத்தைக் கைக் கொள்ளும் விஷயத்தில் மாகாண காங்கிரஸ் கமிட்டிகள் தங்களுடைய அபிப்பிராயங்களை ஆறு வாரங்களுக்குள் தெரிவிக்கவேண்டுமென்று தீர்மானிக்கப் பட்டது. அரசியல் நிலைமையைப்பற்றிய ஒரு கோர்வையான அறிக்கை தயார் செய்யப்பட்டது. "பத்தொன்பதுபேர் அறிக்கையை" லார்டு செம்ஸ்போர்டு இந்தியாவில்கண்டிக்க, இங்கிலாந்தில் லார்டு சைடன்ஹாம் அது புரட்சி எண் ணங்களைக் கொண்டதென்று கூறி, ஜெர்மானியர் சதியினால் தான் இப்படி ஏற்பட்டதென்னும் காரணத்தின்மீது அடக்குமுறையை சிபார்சு செய்தது அதில் குறிப்பிடப் பட்டிருந்தது.

சுயாட்சி இயக்கத்தை அடக்கும் விஷயத்தைப்பற்றி இந்திய சர்க்கார் ஒரு சுற்றறிக்கை விடுத்தனர். இதை ஆதரித்து பாஞ்சால கவர்னர் சர் மைக்கேல் ஓட்வியரும், சென்னை கவர்னர் லார்டு பெண்ட்லண்டும் பேசியதி லிருந்தே அடக்குமுறை வருமென்று ஜனங்களுக்குத் தெரியும்.

மேற்சொன்ன அறிக்கையின் முக்கியமான பாகங்கள் இந்தியா மந்திரிக்கும், பிரதம மந்திரிக்கும், சர் வில்லியம் வெட்டர்பர்னுக்கும் தந்தி மூலம் தெரிவிக்கப்பட்டது. சர். வில்லியம் இந்தியா மந்திரியை பேட்டி கண்டார். பொறுமையா யிருக்கும்படி பதில் தந்தி கொடுத்தார்.

சத்யாக்கிரக இயக்கத்தைப்பற்றிய விஷயத்தில் பீரார் இந்த யோசனையை ஆதரித்தது. ஸ்ரீ மாண்டேகு இந்தியா வுக்கு வரப்போவதை உத்தேசித்து பம்பாய், பர்மா, பாஞ்சா லக்கமிட்டிகள் இயக்கத்தை ஒத்திவைக்க வேண்டுமென்றன. ஐக்கிய மாகாணக் கமிட்டி அப்போதைய நிலையில் அது பொருத்தமற்றதென்றது. பீஹார் கமிட்டி, சிறைப்பட்டவர் களான ஹோம்ரூல் தலைவர்கள், அலி சகோதரர்கள், அபுல் கலாம் ஆஸாத் முதலியவர்கள் ஒரு குறிப்பிட்ட தேதிக்குள் விடுதலை செய்யப்பட வேண்டுமென்று கேட்க வேண்டு மென்றும், அப்படி விடுதலை செய்யப்படாவிட்டால் அந்த மாகாணம் சத்யாக்கிரக இயக்கத்தை மேற்கொண்டு பிரசாரம் செய்து அதனால் ஏற்படும் கஷ்டங்களை அனு பவிக்கவும், தியாகங்களைச் செய்யவும் தயாராயிருக்கு மென்றும் அறிவித்தது. 14—8—1917-ல் சென்னை

கமிட்டி இவ்வியக்கத்தை ஆதரித்துக் கீழ்வரும் தீர்மானத்தை நிறைவேற்றிற்று :—

" சட்ட பூர்வமாக கிளர்ச்சி செய்தலையும், அநியாயமாகச் சிறைப்படுத்தியது, அடக்குமுறை நடத்துவது இவைகளை எதிர்க்க பொதுக்கூட்டங்கள் கூட்டுவதையும் தடுத்து அநீதமான உத்திரவுகள் பிறப்பிப்பதை எதிர்க்க வேண்டிய விஷயத்தில் சத்யாக்கிரக இயக்கத்தை மேற்கொள்வது உசிதமென்று சென்னை மாகாண காங்கிரஸ் கமிட்டி தீர்மானிக்கிறது."

இந்த தீர்மானத்தை நிறைவேற்றுவதற்கான நடவடிக்கைகளை யோசித்து இரண்டு வாரங்களுக்குள் அறிவிப்பதற்காக ஒரு சப்-கமிட்டி அமைக்கவும் ,ர்மானிக்கப்பட்டது.

சென்னை நகரத்தில் ஒரு வாக்குறுதி நகல் தயார் செய்யப்பட்டது. ஹோம் ரூல் சங்கத்தின் கௌரவ தலைவரும், மாஜி ஹைகோர்ட்டு நீதிபதியுமான சர். எஸ். சுப்பிரமணிய அய்யர் முதன் முதலில் கையெழுத்திட்டார். ஸ்ரீமதி பெஸண்டை சிறைப்படுத்தியதற்காக இவர் தம்முடைய சர். பட்டத்தை நிராகரித்துவிட்டார். ஹாச்னர் தம்பதிகள் மூலம் அமெரிக்க பிரஸிடெண்டு வில்சனுக்கு ஒரு கடிதமும் எழுதியிருந்தார். சிறந்த தேசீயவாதியும், 'ஹிந்து' வின் ஆசிரியருமான ஸ்ரீ கஸ்தூரிரங்க அய்யங்கார் அடுத்தபடியாகக் கையொப்பமிட்டார். ஸ்ரீ சி. பி. ராமசாமி அய்யர் பம்பாயில் கையெழுத்திட்டார். இச்சமயத்தில் ஸ்ரீ மாண்டேகுவின் அறிக்கையால் இந்திய நிலைமை மாறிற்று. 28—9—1917-ல் சென்னை மாகாண காங்கிரஸ் கமிட்டி கீழ் வரும் தீர்மானத்தை நிறைவேற்றிற்று.

"அரசியல் நிலைமையிலேற்பட்ட மாறுதலை உத்தேசித்து, சத்யாக்கிரக இயக்கம் ஆரம்பிப்பதை நிறுத்திவைக்கவேண்டும். இந்த விஷயம் அ. இ. கா. கமிட்டிக்கு தெரிவிக்கப்படவேண்டும். சப் கமிட்டியின் அறிக்கை பதிவு செய்யப்படவேண்டும்."

மகா யுத்தத்திற்காக மெஸொபொடோமியாவுக்கு படைகளனுப்பிய விதத்தைப்பற்றி பார்லிமெண்டில் நடந்த பெரும் விவாதத்தில் ஸ்ரீமாண்டேகு இந்தியா மந்திரி ஆஸ்டின் சேம்பர்லேனைக் கண்டித்தார். தவிர இந்திய சர்க்கார், கட்டையைப்போலவும், இரும்பைப்போலவும், இணக்கமற்றதெனவும், தற்காலத்திற்கு உதவாமல் துருப்பிடித்துப்போன

தென்றும் வர்ணித்தார். இதனால் சேம்பர்லேன் ராஜிநாமா செய்தார். மாண்டேகு இந்தியா மந்திரியாக நியமிக்கப்பட்டார். ஸ்ரீ மாண்டேகு கேம்பிரிட்ஜில் ஒரு முறை சிறந்த சொற்பொழிவாற்றினார். அதில் ஒரு பகுதியாவது :—

"ஆ, இந்தியா! கௌரவம் மதிப்பு என்னும் வார்த்தை மாத்திரம் ஆங்கில அகராதியில் இல்லாமலிருந்திருந்தால் உன்னுடைய சரித்திரம் எவ்வளவோ சந்தோஷகரமானதாயிருந்திருக்குமே. அதுதான் முன்னேற்றமில்லாத ஏகாதிபத்திய கொள்கையின் உபயோகமற்ற தன்மையைக் காண்பிக்கிறது. நாங்கள் பொதுஜன அபிப்பிராயத்தை அவமதித்துதான் தீரவேண்டும். கொள்கை, கௌரவம் என்னும் வார்த்தையினால் மாத்திரம் நாம் இந்தியாவை ஆளவில்லை. நியாயமான நிர்வாகத்தினாலும், ஆளப்படும் குடிகளின் சம்மதத்தினாலுமே நாம் இந்தியாவைப் பரிபாலிக்க வேண்டும்."

தலைநகரம் கல்கத்தாவிலிருந்து டில்லிக்குக் கொண்டு போகப்பட்டதாலும், வங்கப் பிரிவினை ஒழிக்கப்பட்டதாலும் பணச் செலவோடு கௌரவத்தையும் இழக்கும்படி நேரிட்டதென்று போனர் லா கூறியதற்கு மறுப்பாகத்தான் மாண்டேகு மேற்சொன்னவாறு பேசினார்.

## மாண்டேகு அறிக்கை

பொதுஜனங்கள் எதிர்பார்த்தபடியே, ஸ்ரீ மாண்டேகு இந்தியா மந்திரி பதவியை ஏற்றுக்கொண்டதும் ஆகஸ்டு 20வ யன்று மந்திரி சபையின் சார்பாக 'பிரிட்டிஷ் சர்க்காரின் லட்சியம் பொறுப்பாட்சிதான்' என்பதைக் குறித்துக் கீழ்வரும் அறிக்கையை வெளியிட்டார் :—

"நிர்வாகத்தின் ஒவ்வொரு கிளையிலும் அதிக இந்தியர்கள் சேர்க்கப்படவேண்டும்; இந்தியா பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் முக்கிய அங்கங்களில் ஒன்றாக பொறுப்பாட்சி யடைவதற்கு வேண்டிய சுயாட்சி ஸ்தாபனங்கள் நாளுக்கு நாள் வளரவேண்டும்; இதுதான் இந்தியா சர்க்காரால் மனப்பூர்வமாய் ஒப்புக்கொள்ளப்படும் பிரிட்டிஷ் சர்க்காரின் நிர்வாக முறை."

இந்த முறை மெதுவாகத்தான் வளர்ச்சியடைய வேண்டுமென்றும், இதைப்பற்றி முடிவு செய்யும் பொறுப்பு பிரிட்டிஷ் சர்க்கார், இந்தியா சர்க்கார் இரண்டையும் சார்ந்ததென்றும், கூடிய சீக்கிரத்தில் பார்லிமெண்டு முன் சமர்ப்பிக்கப்படப்போகும் சீர்திருத்தங்களைப்பற்றி ஆலோசிக்க பொது ஜனங்களுக்குப் போதிய சந்தர்ப்பம்

கொடுக்கப்படுமென்றும் மேலும் தெரிவித்தார். ராணுவத்தில் மன்னர் கமிஷன் உத்தியோகங்களுக்கு இந்தியர்கள் பேரிலிருந்த தடையை நீக்கினார். தவிர, தாம் இந்தியாவுக்குச் சென்று வைசிராயோடு கலந்தாலோசித்து இந்திய அரசியல் முன்னேற்றத்தில் சம்பந்தப்பட்டவர்களின் அபிப்பிராயங்களையும் கேட்கப்போவதாயும் தெரிவித்தார்.

ஆகஸ்டு 20உ அறிக்கைக்குப்பின் ஸ்ரீமதி பெஸண்டும் அவருடைய தோழர்களும் விடுதலை செய்யப்பட்டனர். காங்கிரஸ், முஸ்லீம் லீக் இரண்டும் சேர்ந்து கூடிய ஒரு கூட்டத்தில் சத்யாக்கிரக இயக்கத்தை கைக்கொள்ளக் கூடாதென்று தீர்மானிக்கப்பட்டது. இதற்கு பதிலாக காங்கிரஸ்-லீக் திட்டத்தை ஆதரிக்க வேண்டுமென்று முடிவாகி, ஒரு தூது கோஷ்டி நியமிக்கப்பட்டது. ஸ்ரீ சிந்தாமணி இந்தக் கோஷ்டிக்கு காரியதரிசியாக நியமிக்கப்பட்டார். தூது கோஷ்டி 1917 நவம்பரில் செம்ஸ்போர்டு, மாண்டேகு இருவரையும் பேட்டி கண்டது. ஏகாதிபத்திய மகாநாட்டுக்கு சட்ட சபை அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளாவது அனுப்பப்படவேண்டும் என்று தூது கோஷ்டி வேண்டிற்று.

இதற்கிடையில் காங்கிரஸ் ஊழியர்கள் காங்கிரஸ்-லீக் திட்டத்திற்கு ஆதரவளிப்பவர்களின் கையொப்பங்களை சேகரித்துக்கொண்டிருந்தனர். ஸ்ரீமதி பெஸண்ட் வைசிராயை பேட்டி காணவேண்டுமென்று அநேக தடவை முயன்றார். ஆனால் அவருடைய வேண்டுகோள் மறுக்கப்பட்டது. செம்ஸ்போர்டு, ஸ்ரீமதி பெஸண்டை மீண்டும் சிறைப்படுத்த வேண்டுமென்றிருந்ததாக மாண்டேகுவின் டைரியிலிருந்து தெரிந்தது.

"ஸ்ரீமதி பெஸண்டின் விடுதலைக்காக கோபமும், என்னுடைய சுற்றுப் பிரயாணம் அமைதியை நிலைநாட்டாததற்காக பரிகாசமும்தான் ஏற்படும். ஸ்ரீமதி பெஸண்ட் தமது வாக்குதத்தங்களை முறித்துவிட்டாரென்றும் கூறுவார்கள்" என்று எழுதியிருந்தார்.

இவை என்ன வாக்குத்தத்தங்களோ, எப்பொழுது கொடுக்கப்பட்டனவோ, ஒருவருக்கும் தெரியாது. 1917ஹு கடைசியில் ஸ்ரீமதி பெஸண்ட் "நாம் ஸ்ரீ மாண்டேகுவை ஆதரிக்கவேண்டும்" என்றார். மிதவாதிகளும்

இதற்கு பல்லவி பாடினார்கள். மாண்டேகு இந்திய தீவிர வாதிகளாலும், தவிர, ஆங்கில பிற்போக்காளர்களாலும் எதிர்க்கப்பட்டால் அவரால் ஒன்றுமே செய்ய முடியாமல் போய்விடும் என்றும் இவர்கள் கூறினர். இந்தியாவில் பல கக்ஷிகளின் அபிப்பிராயங்களையும் கேட்டறியவேண்டும் என்றுதான் மாண்டேகு இந்தியாவுக்கு வந்தார்.

ஆனால் உண்மையில், வரப்போகும் அரசியலுக்கு அவர் மந்திரிகளையும், அட்வகேட் ஜெனரல்களையுமே பொறுக்கி யெடுத்துக்கொண்டிருந்தார். தமது அரசியலை நடத்தப்போகிறவர்களைப்பற்றி அவர் அறிய ஆவல் கொண்டிருந்தார். மாண்டேகுவின் இந்திய விஜயத்தின்போது ஸ்ரீமதி பெஸண்ட் ஒத்துழைக்கத் தயாராயிருந்தும் அவரை அலக்ஷியம் செய்தது வருந்தத்தக்க விஷயமாகும்.

இந்த சமயத்தில் காந்திஜி, ராஜேந்திர பாபு, பிரிஜ் கிஷோர் பாபு, கோரக் பாபு, அனுக்ரஹ பாபு, ஆசாரிய கிருபாலினி, டாக்டர் தேவ் முதலியோருடன் சேர்ந்து சம்பரான் குடியானவர்களின் கஷ்டங்களை விசாரணை செய்துகொண்டிருந்தார். ஆறு மாத காலம் இவ்விஷயத்தில் வேலை செய்து காந்திஜி இந்தியாவுக்கே ஒரு புது யுகத்தை ஆரம்பிக்கவிருந்த சத்யாக்கிரக ஆயுதத்தின் சக்தியை நிரூபித்தார்.

சம்பரான் சத்யாக்கிரக இயக்கத்தைப் போலவே மகத்தான இயக்கம் 1918-ல் கெய்ராவில் நடந்தது. குடியானவர்களுக்கு ஒரு புதிய கோட்பாடு கற்றுக் கொடுக்கப்பட்டது. சர்க்கார் வரி விதிக்கும் உரிமையை சோதிக்க குடியானவர்களுக்கு தைரியம் வந்தது. காந்திஜியும், சர்தார் வல்லபாய் படேலும் கிராமம் கிராமமாய்ச் சென்று, அஹிம்சா தர்மத்தையும், சத்யாக்கிரக முறையையும் போதித்து வந்தார்கள். நிலம், பொருள் முதலியவை ஜப்தி செய்யப்பட்டபோதிலும், தைரியமாய் இருக்கும்படி குடியானவர்களை உற்சாகப்படுத்தினார்கள்.

## சட்ட மறுப்பு

சத்யாக்கிரகத்தினால் குஜராத்தில் முதன் முதலில் சட்ட மறுப்பு ஏற்பட்டது. அநியாயமாக ஜப்தி செய்யப்

பட்ட ஒரு நிலத்தில் விளைந்த பயிரை அறுவடை செய்யும்படி காந்திஜி விவசாயிகளுக்கு உபதேசித்தார். அப்படிச் செய்தவர்கள் கைது செய்யப்பட்டார்கள். இது ஜனங்களுக்கு ஒரு புது அனுபவமா யிருந்தது.

இந்தப் போராட்டம் எதிர்பாராத விதமாய் முடிந்தது சர்க்கார் ஜனங்களின் குறைகளை நிவர்த்தி செய்ய முன் வந்து ஏழை விவசாயிகளுக்கு பண உதவி செய்தார்கள். "ஜனங்களின் விமோசனம் ஜனங்களின் கையில் தான் இருக்கிறது" என்னும் படிப்பினை எல்லோருக்கும் தெளிவாய்த் தெரிந்தது. கெய்ரா பிரசாரத்தினால் குஜராத்தில் சத்யாக்கிரகம் நன்றாய் வேரூன்றிவிட்டது.

1918-ல் ஆமதாபாத்தில் ஆலை சொந்தக்காரர்களுக்கும், தொழிலாளர்களுக்கும் தகராறு நேர்ந்தது. தொழிலாளர்கள் கேட்ட 35% அதிக சம்பளத்தை ஆலைக்காரர்கள் கொடுக்க மறுத்துவிட்டார்கள். காந்திஜி எவ்வளவு கூறியும் அவர்கள் கேட்கவில்லை. பிப்ரவரி மாதத்தில் தொழிலாளர்களை யெல்லாம் வெளியில் தள்ளிவிட்டார்கள். காந்திஜி உடனே தொழிலாளர்கள் தங்களுக்குத் தேவையான 35% அதிகப்படி சம்பளம் கொடுக்கப்படும் வரை மீண்டும் வேலைக்குப் போகக்கூடாதென்று ஒரு பிரதிக்ஞை செய்து கொள்ளவேண்டு மென்றார். இரண்டு வாரம் தொழிலாளர்கள் கஷ்டத்தைப் பொறுத்துக்கொண்டிருந்தார்கள். பிறகு முடியவில்லை. உடனே காந்திஜி ஒரு மகத்தான தீர்மானத்தை கைக்கொண்டார். தொழிலாளர்கள் தங்களுடைய பிரதிக்ஞைப்படி நடப்பதற்கு ஏதுவாக ஆலை சொந்தக்காரர்கள் நடக்காதவரை உண்ணு விரத மிருப்பதென்று உறுதி செய்தார்.

இது தொழிலாளர்களின் தீர்மானத்திற்கு பலமளித்தது. பல தலைவர்கள், ஆலை சொந்தக்காரர்களை காந்திஜியின் உயிரைக் காப்பாற்றும்படி வேண்டினார்கள். உபவாஸ விரதத்தின் நான்காவது நாள் ஒரு சமரச முடிவு செய்யப்பட்டது. இருதிறத்தாரும் ஒரு மத்தியஸ்தத்திற்கு ஒப்புக் கொண்டார்கள். தொழிலாளர்கள் கேட்ட 35% அதிகச் சம்பளம் கொடுக்கப்பட்டது.

இந்த முடிவு காங்கிரஸ்காரர்களையும் தொழிலாளர்களையும ஒன்றாக இணைத்துவிட்டது. நெசவுத் தொழிலாளர் சங்கம் ஒன்றும் ஏற்பட்டது. இது ஸ்ரீமதி அனுசூயா பாய்,

சங்கர்லால் பாங்கர் முதலியவர்களின் உழைப்பால் நன்றாய் வளர்ந்து வந்திருக்கிறது. 1927-ல் ஏற்பட்ட வெள்ளக் கஷ்டத்தை நிவாரணம் செய்யும் வேலையில் இந்த சங்கம் உழைத்தது. 1930-ல் சட்ட மறுப்பு இயக்கத்திலும் இந்த சங்கத்தைச் சேர்ந்த 200 தொண்டர்கள் மதுவிலக்குப் பிரசாரம் செய்து சிறை தண்டனை அடைந்தார்கள்.

இந்த சங்கம் ஒன்றுதான் சத்தியத்தையும், அஹிம்சையையும் கைக் கொண்டு உழைத்து வருகிறது. நெசவுத் தொழிலை தேசீய பொதுத் தொழிலாக்க வேண்டுமென்பது தான் இதன் லட்சியம். இது ஏற்பாடு செய்த 39 வேலை நிறுத்தங்களில் 23-ல் வெற்றியடைந்திருக்கிறது. சங்கத்தில் 30,000 அங்கத்தினர்கள் இருக்கிறார்கள். தவிர, வைத்திய வசதி, கல்வி, தேகாப்பியாசம், விளையாட்டு, மதுவிலக்கு, சமூக சீர்திருத்தம் முதலிய துறைகளிலும் இது உழைத்து வந்திருக்கிறது.

காங்கிரஸ்-லீக் திட்டம் பல பாஷைகளில் மொழி பெயர்க்கப்பட்டு ஜனங்களுக்கு விளக்கப்பட வேண்டும் என்று காந்திஜி பிரரேபித்தார். இதனால் பத்து லக்ஷத்திற்கு மேலானவர்கள் திட்டத்திற்கு ஆதரவாக கையொப்ப மிட்டனர்.

1917-ல் காங்கிரஸ் கல்கத்தாவில் கூடிற்று. அங்கே அபிப்பிராய பேதம் அதிகமாக இருந்து வந்தது. மிதவாதிகளுக்கும், தீவிர தேசீயவாதிகளுக்கும் தலைவர் தேர்தல் விஷயமாக கொஞ்சம் மனக்கசப்புத்தான். கடைசியில் ஸ்ரீமதி பெஸண்ட் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

காங்கிரஸ், அலி சகோதரர்கள் விடுதலை செய்யப்பட வேண்டுமென்று வற்புறுத்திற்று. ரௌலட் கமிட்டி நியமனத்தைக் கண்டித்து அது சர்க்காருக்கு அதிக அதிகாரம் கொடுப்பதற்காகவே ஏற்படுத்தப்பட்டதென்று எடுத்துக் காட்டியது. இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தையும், 1818-ம் வருட III-வது ரெகுலேஷனையும் அவைகளால் ஏற்படும் நடவடிக்கைகளையும் கூட கண்டித்தது.

இந்தியா மந்திரியின் அறிக்கையை வரவேற்று இந்திய சுயாட்சியின் முதல்படியாக காங்கிரஸ்-லீக் திட்டம் உடனே அங்கீகரிக்கப்பட வேண்டுமென்றும் தீர்மானிக்கப் பட்டது.

ஆந்திர தேசம் ஒரு வேறு மாகாணமாக பிரிக்கப்பட்டது. இதனால் காங்கிரஸ் சம்பந்தமாக மாகாணங்கள் பாஷைக்குத் தகுந்தபடி பிரிக்கப்பட்டன. சிந்து, கர்நாடகம் மாகாணங்களும் அப்படியே பிரிக்கப்பட்டன. மாகாண சுயாட்சிக்கு இந்தப் பிரிவுமுறை அவசியம் என்பதை திலகர் அறிந்தே இதை நிறைவேற்றவேண்டும் என்றார். இப்பொழுது இந்த முறையில் 21 காங்கிரஸ் மாகாணங்கள் இருக்கின்றன.

காங்கிரஸ் கொடியின் ரூபத்தை அமைப்பதற்கு ஒரு கமிட்டி அமைக்கப்பட்டது. கடைசியில் ஏற்கெனவே ஹோம் ரூல் லீக் கைக்கொண்டிருந்த மூவர்ணக் கொடியே காங்கிரஸ் கொடியாயிற்று. 1931-ல் சிவப்புக்கு பதிலாக ஆரஞ்சு வர்ணம் அங்கீகரிக்கப்பட்டது.

---

## அத்தியாயம் 4

---

## மாண்டேகு-செம்ஸ்போர்டு சிபார்சுகள் (1918)

காங்கிரஸ் மகாசபையில் யார் தலைமை வகிக்கிறாரோ அவரேதான் அந்த வருஷம் பூராவுக்கும் காங்கிரஸின் அக்கிராசனர் என்று பெஸண்ட் அம்மையார் அபிப்பிராயப்பட்டார்; இது புதிய கருத்தல்ல; எனினும் இதை முதன் முதல் அமுலுக்குக் கொண்டு வந்தவர் பெஸண்டம்மையார்தான்.

1917-ம் வருஷம், டிஸம்பர் மாதம், 30-ந் தேதி நடைபெற்ற காங்கிரஸைத் தொடர்ந்தாற்போல் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டமொன்று நடந்தது. இக்கூட்டத்தில் காங்கிரஸுக்கு என்று சாசுவத நிதியொன்றைத்திரட்டும் விஷயம் ஆலோசிக்கப்பட்டது; தவிர இந்தியாவிலும், இங்கிலாந்திலும் பிரசார வேலையை நடத்துவதற்காகக் காரியக் கமிட்டி யொன்றை நியமிக்கும்படி மாகாண காங்கிரஸ் கமிட்டிகளுக்கு உத்தரவிடப்பட்டது.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டத்திற்குப் பிறகு நாட்டில் காங்கிரஸ் வேலை மும்முரமாக நடந்தது;

முக்கியமாக சென்னையில் இவ்வேலை தீவிரமாக நடைபெற்றது. இங்கு காங்கிரஸ்-லீக் திட்டத்தை விளக்கி லக்ஷக் கணக்கான துண்டுப்பிரசுரங்கள் வழங்கப்பட்டன; இதற்கு ஆதரவாக ஒன்பது லக்ஷம் கையெழுத்துக்கள் பெறப்பட்டன. மாண்டேகு சென்னைக்கு விஜயஞ் செய்தகாலத்தில் இவை அவருக்கு சமர்ப்பிக்கப்பட்டன.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி 1918-ம் வருஷம், பிப்ரவரி மாதம், 23-ந் தேதியன்று மறுபடியும் டில்லியில் கூடியது. வங்காளம், டில்லி மாகாணங்களுக்குள் லோக மான்ய திலகரும், விபின சந்திர பாலரும் பிரவேசிக்கக் கூடாதென தடைசெய்யப்பட்ட உத்தரவை ரத்து செய்து விடவேண்டுமென்று இராஜப்பிரதிநிதியைக் கேட்டுக் கொள்ளுவதற்காகத் தூது கோஷ்டி ஒன்றை நியமித்தது. இத் தூது கோஷ்டியினர் இராஜப்பிரதிநிதியைப் பேட்டி கண்டனரயினும், பலன் பூஜ்யம்தான்.

1918-ம் வருஷம், மே மாதம், 3-ந் தேதியன்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் மூன்றாவதுகூட்டம்கூடியது; இந்தியாவிலிருந்து இங்கிலாந்திற்குச் சென்றுகொண்டிருந்த சுயாட்சி லீக்கைச்சேர்ந்த இரண்டு தூது கோஷ்டிகளை ஜிப்ரால்டரிலிருந்தும், இலங்கையிலிருந்தும் திருப்பி அனுப்பிவிட்டதற்காகக் கவர்ன்மெண்டின் செய்கையைக் கண்டித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. யுத்தத்தின் பயனாக இந்தியா என்றும் மாட்சிமை பெறவேண்டுமென்று அதிகார தோரணையில் ஓர் அறிக்கை வெளியிடப்பட்டால்தான் இந்திய யுவர்கள் ஏராளமாக யுத்தத்தில் பங்கெடுத்துக் கொள்ள முடியுமென வற்புறுத்தியது இன்னொரு தீர்மானம்.

1918-ம் வருஷத்திய முதல் ஐந்து மாதங்களில் பெஸண்டம்மையார் ஓய்ச்சல் ஒழிவில்லாமல் வேலைசெய்தார். அவரது இடைவிடாத சுற்றுப்பிரயாணங்களைப் பற்றிய விவரங்களை "சுயாட்சிச் சங்கங்கள்" என்ற பிரசுரத்தில் காணலாம். எனினும் விரைவில் மிஸஸ் பெஸண்டின் செல்வாக்கு வர வர வீழத் தலைப்பட்டது. கவர்ன்மெண்டு வைத்திருந்த மரியாதையும் சரி, ஜனங்கள் காட்டி வந்த அபிமானமும் சரி, குறைய வாரம்பித்துவிட்டது. சர்க்காருக்கு அவரது தீவிரப்போக்கு பிடிக்கவில்லை; ஜனங்களோ அவர் இன்னும் தீவிர உணர்ச்சி

காட்டவில்லையே என வருந்தினர். 1918-ம் வருஷம், செப்டம்பர் மாதம், பம்பாயில் நடைபெற்ற விசேஷ காங்கிரஸில் அவருக்குப் பெருவாரியான செல்வாக்கிருந்தது. டிஸம்பர் மாதம் டில்லியில் கூடிய காங்கிரஸில் அடியோடு கவிழ்ந்து விட்டது.

ஆனால் அரசாங்கத்தின் அடக்குமுறைகளுக்கு ஜனங்கள் பயந்துவிடவில்லை. பம்பாய் கவர்னர் யுத்த விஷயமாகத் தலைவர்களைக் கூட்டிப் பேசுகையில் திலகர் சுய ஆட்சியைப்பற்றிப் பேச வாயெடுத்தார்; ஆனால் இரண்டு நிமிஷங்களுக்குக்கூட அவர் பேசவிடப் படவில்லை.

## ரகஸிய ஒப்பந்தங்களா ?

இராஜப்பிரதிநிதி இதேமாதிரியான கூட்ட மொன்றை டில்லியில் கூட்டினார். இதற்கு காந்திஜி விஜயஞ் செய்திருந்தார். ஆனால் முதலில் அவர் இதற்கான அழைப்பை ஏற்றுக்கொள்ளவில்லை. இதற்குக் காரணம் திலகரும், மிஸஸ் பெஸண்டும் அழைக்கப்படாதது மட்டுமல்ல; கிரேட் பிரிட்டன் ஏதோ ரகஸிய ஒப்பந்தங்களில் இறங்கியிருந்தது என்பதற்காக. இது விஷயமாக மகாத்மா காந்திஜி செம்ஸ்போர்டு பிரபுவைப் பேட்டி கண்டார்; காந்திஜி கேள்விப்பட்ட விஷயம் உண்மையல்ல வென்றும், யாரோ சில விஷமிகள் அவ்வாறு கயிறு திரித்து விட்டுவிட்டார்களென்றும் செம்ஸ்போர்டு பிரபு அறிவித்தார். இவ் வுறுதியின் பேரிலேயே காந்திஜி யுத்த மகாநாட்டில் ஈடுபட்டார். தாம் கலந்து கொண்டது மாத்திரமல்லாமல் திலகரையும் டில்லிக்குச் செல்லும்படி அவர் தந்தி கொடுத்தார். ஆனால் டில்லிக்குள் பிரவேசிக்கக் கூடாதென தம் மீது தடையுத்தரவு பிறப்பிக்கப்பட்டிருந்ததால் அது ரத்து செய்யப்பட்டாலொழிய தாம் டில்லிக்கு செல்ல முடியாதென லோகமான்யர் தெரிவித்தார். ஆனால் கவர்ன்மெண்டார் தங்கள் கௌரவத்தையே விசேஷமாக மதித்தனர்.

1918-ம் வருஷம், ஆகஸ்டு மாதத்தில் திலகர் பெருமான்மீது ஓர் உத்தரவு சாதரா செய்யப்பட்டது. ஜில்லா மாஜிஸ்திரேட்டிடமிருந்து முன்னதாக அனுமதி பெறுமல் அவர் எந்த இடத்திலும் பிரசங்கம செயயக்கூடாது என்று அவ்வுத்திரவு கூறியது. இதற்கு ஒரு வாரத்திற்கு

முன்புதான் அவர் ஆள் திரட்டும் வேலையில் தீவிரமாக ஈடு பட்டிருந்தார்; நன்னம்பிக்கைக்கு உத்தரவாதமாக அவர் 50,000 ரூபாய்க்கு மகாத்மா காந்திக்கு ஒரு செக் அனுப்பி வைத்திருந்தார். தாம் சில நிபந்தனைகளை நிறைவேற்றி வைக்கத் தவறிவிட்டால் இந்தத் தொகையைப் பறிமுதல் செய்யலாம் என்பது ஏற்பாடு. ஆனால் இதில் ஒரு பேரம் சம்பந்தப்பட்டிருந்தது. அதாவது ராணுவத்தில் இந்தியர் களுக்கு உயர் பதவிகள் கிடைக்குமென கவர்ன்மெண்டா ரிடமிருந்து காந்திஜி ஓர் வாக்குறுதியை முன்னதாகவே வாங்கி விடுவாரானால் தாம் மகாராஷ்டிர மாகாணத்தி லிருந்து 5,000 நபர்களைத் திரட்டித் தரத் தயார் என திலகர் ஒப்புக்கொண்டார். ஆனால் இத்தகைய பேரம் காந்திஜிக்குப் பிடிக்கவில்லை; பிரதிபலனை எதிர்பாராமல் உதவி செய்யவேண்டுமென்பது அவரது கருத்து. எனவே அவர் திலகரிடமிருந்து கிடைத்த செக்கை அவருக்கே திருப்பி அனுப்பிவிட்டார். 1917-18-ம் வருஷத்தில் காங் கிரஸ் திலகர்மீது சந்தேகம் கொண்டது. அதிகார வர்க் கமோ அவர்மீது நடவடிக்கைகள் எடுத்துக்கொண்டிருந் தது. மிஸஸ் பெஸண்டு ஒருவர் தான் அவருடன் சேர்ந் திருந்தார்.

மாண்டேகு-செம்ஸ்போர்டு யாதாஸ்து 1918-ம் வரு ஷம், ஜூன் மாதத்தில் பிரசுரிக்கப்பட்டது. அதில் அழகான வார்த்தைகளும், அலங்காரமான சொற்றொடர்களும் நிறைந் திருந்தனவென்னமோ வாஸ்தவம்தான். பிரிட்டிஷ் ராஜதந் திரிகளின் இதர ராஜீய தஸ்தாவேஜுகளைப் போலவே, இதில் இந்தியாவின் சுயாட்சியைப்பற்றி மிகுந்த சாமர்த் தியமாகவும், சாதுர்யமாகவும் பிரஸ்தாபிக்கப்பட்டிருந் தது. சீர்திருத்தத்திற்கான தடைகள் அதிகத் தெளிவாக விளக்கப்பட்டிருந்தன. இந்தியாவின் பிரதிநிதி சபை களாக விளங்கிய இரண்டு சபைகளாலும் தயாரிக்கப் பட்ட காங்கிரஸ்-லீக் திட்டத்தில், சட்ட சபைக்குட்பட்ட நிர்வாக சபைகளுக்கு ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. மாற்றி அமைக்கக்கூடிய மந்திரி சபைகளைக் கொண்ட பொறுப்பாட்சியைத் தாங்கியதாக விருந்தது இந்தத் திட்டம். இம் மந்திரி சபைகள் சட்ட சபையின் ஓட் டுக்குட்பட்டவை. இது பிரிட்டிஷ் சுயாட்சியின் போக்காகும். இந்திய மகா ஜனங்களுக்கு இதைத் தவிர வேறு என்ன வேண்டும்? இந்திய மக்களின் சட்ட

சபைகள் எவ்வளவு காலத்திற்கு இந்திய ராஜீய வாதிகளைத் தயாரித்துப் பயிற்சியளிக்கும் ஸ்தாபனங்களாக விருப்பது? அவை மந்திரிகள் தங்கள் நடத்தைக்குச் சமாதானமோ, நியாயமோ கூறும் இடங்களாக இருக்கவேண்டும். இந்தியப் பிரபலஸ்தர்களில் பலர் இந்தத் திட்டத்தைப் புகழ்ந்து பாராட்டினர்.

வெகு சீக்கிரத்தில் காங்கிரஸ்-லீக் திட்டத்தின் மீதிருந்த ஜனங்களின் கவனம் மாண்ட்போர்டு திட்டத்தின்பால் பாய்ந்தது. ஸர் சங்கரன் நாயர் எதை ஒப்புக்கொள்ளுகிருரோ அதைத் தாமும் ஒப்புக்கொள்ளத் தயாரென மிஸஸ் பெஸண்ட் உறுதி கூறினுர். இவ்விஷயம் மிஸ்டர் மாண்டேகுவின் குறிப்புப் புத்தகத்தில் அடங்கியிருக்கிறது. சரி அப்படியாயின் ஸர் சங்கரன் நாயர் என்ன செய்தார் என்று கேட்கிறீர்களா? அவர் அந்தத் திட்டத்தை அப்படியே ஏற்றுக்கொண்டார் என்று சொன்னுல் அதுகேட்டு எவரும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

ஸ்ரீமான் வி. பி. ராமஸ்வாமி ஐயரைப்பற்றி மாண்டேகு துரை கூறுவதாவது: "அவர் எதை ஏற்றுக்கொள்வார் என்று நான் வெட்ட வெளிச்சமாகக் கேட்டேன். சாஸ்திரியாரின் நான்கு நிபந்தனைகளையும் அவர் வற்புறுத்தினுர். அவ்வப்பொழுது விசாரணைகள் நடத்தப்படுவதில் அவருக்கு நம்பிக்கையில்லை. அவர் ஒரு கால வரையறை நிர்ணயிக்கப்படவேண்டுமென்கிருர். அவரும், அவரைச் சேர்ந்தவர்களும் என்னையே பரிபூரணமாக நம்பியிருப்பதாகவும், ஆதலால் நான் அவர்களைக் கைவிட்டுவிடக்கூடாதென்றும் அவர் மிகப் பரிதாபகரமாகக் கூறினுர்."

"அடுத்தபடியாக விசாரிக்கப்பட்டவர் ஸ்ரீமான் எஸ். ஸ்ரீனிவாஸய்யங்கார். பெண்ட்லண்ட் பிரபுவுடன் நான் பேசி முடிந்ததும், அட்வகேட் ஜெனரலாகிய ஸ்ரீமான் ஸ்ரீனிவாஸய்யங்கார் என்னைக் காண வந்தார். "காங்கிரஸ்-லீக் திட்டம் பூராவையும் யாரும் உண்மையில் எதிர்பார்க்கவில்லை யென்றும், கர்ட்டிஸ் திட்டம்தான் சிறந்ததென தாம் அபிப்பிராயப்படுவதாகவும், கவர்ன்மெண்டார் மீது ஜனங்களுக்கு விசேஷ மனக்கசப்பு இருந்து வருகிறதாவும், ஆனுல் அதைப்பற்றித் தாம் அதிகமாகச் சொல்

வதற்கில்லை என்றும் அவர் தெரிவித்தார்" என்கிறார் மிஸ்டர் மாண்டேகு. ஆனால் ஒரு விஷயத்தை நாம் கவனத்தில் வைக்கவேண்டும்; அது என்னவென்றால் அக் காலத்தில் ஸ்ரீமான் ஸ்ரீனிவாஸய்யங்கார் காங்கிரஸ் வாதியல்ல. ஸெதல்வாட், சந்தவர்க்கர், ரஹீமத்துல்லா இம் மூவரும் ரிஸர்வேஷன் திட்டத்தை அங்கீகரித்ததாக மாண்டேகு கூறுகிறார். மாண்டேகுவின் யுக்தியைப்பற்றி நாம் ஏற்கனவே அறிந்துகொண்டிருக்கிறோம். மிதவாதிகள் ஒன்று திரளுவதற்காக அவர்களுக்கு உதவி செய்யும் முறையில் கவர்ன்மெண்டார் ஒரு இலாகாவை அமைப்பதென உத்தேசிக்கப்பட்டிருந்தது.

ஆனால் தேசீயவாதிகள் மாண்டேகு பிரபுவுக்குத் தங்கள் மனக்கருத்தைப் பட்டவர்த்தனமாக வெளியிட்டு விட்டனர். "20 வருஷங்களில் பொறுப்பாட்சி ஏற்பட்டால் மோதிலால் நேரு திருப்தியடைவார்." "ஸி. ஆர். தாஸ் இரட்டை யாக்ஷி தோல்வியுறுமென்று அறிவித்து, 5 வருஷங்களில் உண்மையான பொறுப்பாட்சி ஏற்பட வேண்டுமென அபிப்பிராயப் பட்டார். அதுபற்றி இப்பொழுதே வாக்குறுதி தந்து விடவேண்டுமென்றும் அவர் வற்புறுத்தினார்." சுரேந்திரநாத் பானர்ஜியின் ஆதரவும் மாண்டேகுவிற்குக் கிடைத்திருந்தது.

மாண்டேகு-செம்ஸ்போர்டு அறிக்கையைப்பற்றி ஜனங்கள் பொதுவாக என்ன அபிப்பிராயம் கொண்டிருந்தனர் அதில் பெருவாரியான பகுதியை ஸர் ஜேம்ஸ் (பிறகு பிரபு) மெஸ்டனும், மிஸ்டர் (பிறகு ஸர் வில்லியம்) மளிஸும்தான் எழுதினரென்றும், மிஸ்டர் லயனெல் கர்ட்டிஸ் என்பவர் இவ்வகையில் இவர்களுக்கு விசேஷ உதவிபுரிந்தாரென்றும் ஜனங்கள் கருதலாயினர். இச் சந்தர்ப்பத்தில் மிஸ்டர் கர்ட்டிஸைப்பற்றி அறிந்துகொள்ள வேண்டியது நியாயமே. "ஏகாதிபத்தியத்திற்குத் தொண்டாற்றுவதற்காக" பற்பல தேசங்களிலும் சுற்றுப் பிரயாணம் செய்து வந்த கோஷ்டியினரில் இவர் ஒருவர். இந்திய சீர்திருத்தங்களைக் குறித்து இவர் வரைந்த ஓர் கடிதம் எப்படியோ தவறிப்போய் இந்தியப் பிரசாரகர்கள் கையில் கிடைத்துவிட்டது. பம்பாயைச் சேர்ந்த "பம்பாய் கிரானிகிள்" பத்திரிகையும், அலாகாபாத்தினின்று பிரசுர

மாகும் "லீடர்" பத்திரிகையும் இக்கடிதத்தைப் பிரசுரித்து விட்டன. இதனால் அதிகார வர்க்கத்தின் சூழ்ச்சிகள் வெட்ட வெளிச்சமாக்கப்பட்டதால் தேசீயவாதிகள்மீது அவர்களுக்குக் கோபமும், ஆத்திரமும் பொங்கி எழுந்தன. இந்தியாவைக் கேவலமான நிலையில் வைக்க பிரிட்டிஷ் ஏகாதிபத்தியக் கோஷ்டி சூழ்ச்சி செய்ததை மேற்படி கடிதம் கண்ணாடிபோல் எடுத்துக் காட்டியது.

## விசேஷ காங்கிரஸ்

மாண்டேகு அறிக்கை வெளிவந்ததும் கூட்டுவதாக முன்னரே யோசிக்கப்பட்டிருந்த காங்கிரஸின் விசேஷ கூட்டத்தை கூட்ட இதுவே தக்க சமயமென தலைவர்கள் அபிப்பிராயப்பட்டனர். அவர்களது கருத்துகளை வெளியிட வேண்டிய அவசிய மேற்பட்டதே இதற்குக் காரணம். காங்கிரஸ் கூட்டத்தை பம்பாய் நகரில் நடத்துவதென முடிவு செய்யப்பட்டது. சொற்ப காலத்திறகுள் விசேஷ ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

இச்சமயத்தில் காங்கிரஸ் வாதிகளுக்குள் அபிப்பிராய பேதங்கள் முற்றிப்போயிருந்தன. எந்தக் கக்ஷியினரும் மாண்டேகு திட்டத்தைக் கண்டு திருப்தி கொள்ளவில்லையாயினும் அதைப்பற்றிய தங்கள் கண்டனத்தை அறிவிக்க வேண்டிய முறையில் அவர்களுக்குள் அபிப்பிராயபேதமிருந்தது. தீவிர நோக்கம் கொண்டிருந்த ஒரு கக்ஷி மேற்படி திட்டத்தைப் பூராவும் நிராகரித்துவிட வேண்டுமென விசேஷ காங்கிரஸில் ஒரு தீர்மானத்தைக் கொண்டு வர உத்தேசித்திருந்தது. மற்றொரு கக்ஷியோ சில திருத்தங்களைப் பிரேரித்து, திட்டத்தின் நோக்கங்களில் அபிவிருத்தியைக் காட்ட முயன்றது. நிலைமை இவ்வாறிருக்கையில் பம்பாய் காங்கிரஸ் கூடுவதற்குச் சில தினங்களுக்கு முன்பு இவ்வித்தியாசங்களை யெல்லாம் ஒழித்துப்போட்டு, ஒரு சமரஸத்தை ஏற்படுத்த விசேஷ முயற்சிகள் செய்யப்பட்டன. ஆனால் இவை பலிதமடையவில்லை.

எனினும் 1918-ம் வருஷம், ஆகஸ்டு மாதம், 29-ந் தேதியன்று காங்கிரஸ் கூடியது. ஹஸன் இமாம் அக்கிராசனம் வகித்தார். ஏராளமான ஜனங்கள் கூடியிருந்தனர். பிரதிநிதிகளின் தொகையோ 3,845. ஸ்ரீ வித்தல் பாய் படேல்தான் உபசரணைக் கமிட்டித் தலைவராக விருந்

தார். ஸர். டின்ஷா வாச்சா, சுரேந்திரநாத் பானர்ஜி, பூபேந்திர நாத்பாஸு, அம்பிகா சரண் மஸூம்தார் முதலிய வர்களைப் போன்ற அரும்பெரும் தலைவர்கள் இக்காங்கிர ஸில் பங்கெடுத்துக்கொள்ளவில்லை. நான்கு நாட்கள் உக்கிரமான விவாதம் நடந்ததற்குப் பின் காங்கிரஸ்-லீக் திட்டத்தில் அடங்கியுள்ள சீர்திருத்தக் கொள்கைகளையே காங்கிரஸ் மகாசபை ஊர்ஜிதம் செய்தது.

ஏகாதிபத்தியத்திற் குட்பட்ட சுய ஆக்ஷிக்குக் குறைந்த எதையும் இந்திய மக்கள் ஒத்துக்கொள்ளத் தயா ராகவில்லை என்றும் காங்கிரஸ் அறைகூவியது. மாண் டேகு அறிக்கையைப்பற்றிக் காங்கிரஸ் தீர்க்கமாக ஆலோ சனை செய்து, இந்தியர்கள் எந்த நிமிஷமும் பொறுப் பாக்ஷியை ஏற்று நடத்தத் தகுதியுடையவர்கள் என்றும் அறிக்கையில் இதற்கு மாறான கருத்து வெளியாகி யிருப் பதைக் காங்கிரஸ் மகாசபை நிராகரிப்பதாகவும் தெரி வித்தது. மத்திய அரசாங்கத்திலும், மாகாண துரைத் தனங்களிலும் ஒரேரீதியான முற்போக்கை ஏற்படுத்த வேண்டுமென்றும், மாகாணங்களிலிருந்து படிப்படியாக முற்போக்கு அடையவேண்டுமென்பதை ஏற்க முடியா தென்றும் காங்கிரஸ் பட்டவர்த்தனமாக வெளியிட்டது. மொத்தமாக மாண்டேகு-செம்ஸ்போர்டு சிபார்சுகள் மிகுந்த ஏமாற்றத்தையும், அதிருப்தியையும் தருவனவா யிருப்பதாகக் காங்கிரஸ் அபிப்பிராயப்பட்டது. 15 வருஷ காலத்திற்குள் பிரிட்டிஷ் இந்தியா முழுவதிலும் பூரா பொறுப்பாட்சியை ஏற்படுத்த சட்டபூர்வமாக உத்தரவாத மளிக்கப்பட வேண்டுமென்றும் காங்கிரஸ் மகாசபை கோரியது.

பொறுப்பாட்சியுடன் கூடிய இந்தியாவில் சட்டசபை களின் அமைப்பு எவ்வாறு இருக்கவேண்டு மென்பதை யும், மாகாண சட்டசபைகளுக்கும், மத்திய சட்டசபைக்கும் உள்ளசம்பந்தா சம்பந்தங்களைப்பற்றியும், நீதிநிர்வாகத்தைப் பற்றியும், ஜனங்களுக்குத் தாராளமாக பேசவும், எழுத வும் சுதந்திர மளிக்கப்பட வேண்டியதைப்பற்றியும், குற்றம் சாட்டப்படுவோர்பகிரங்கமாகவிசாரிக்கப்படவேண்டுமென் பதைப்பற்றியும், லைசென்ஸ் பெற்று ஆயுதங்களை உபயோ கிக்க இந்தியருக்கு உரிமை யிருக்கவேண்டுமென்பது குறித் தும், பத்திரிகைகளுக்கு சுதந்திர மளிக்கப்பட வேண்டு

மென்றும், சட்டத்தின் முன்பு இந்தியர், இந்தியரல்லாதார் என்ற வித்தியாசம் காட்டப்படக் கூடாதென்றும், மத்திய சட்டசபையில் கொண்டுவரப்படும் மசோதாக்கள் மூலமாக சட்டங்கள் இயற்றப்பட வேண்டுமென்றும், இராஜாங்க சபையே வேண்டாமென்றும், அப்படியாக ஒன்று அமைக் கப்பட்டாலும் அதில் குறைந்த பக்ஷம் பாதி அங்கத்தினர் கள் தெரிந்தெடுக்கப்பட்டவர்களாக இருக்கவேண்டுமென் றும், இந்தியா சட்டசபையில் மொத்தம் 150 அங்கத்தினர் கள் இருக்கவேண்டுமென்றும், இவர்களில் 5-ல் 4 பங்கு தெரிந்தெடுக்கப்பட்டவர்களாக இருத்தல் வேண்டுமென் றும், தலைவரையும், உப-தலைவரையும் தானே தெரிந்தெடுத் துக்கொள்ளவும், நடைமுறைகள் சம்பந்தமான விதிகளைக் காணவும் இச்சபைக்கு உரிமையிருக்க வேண்டுமென்றும் காங்கிரஸ் வலியுறுத்தியது. இவை தவிர இந்தியா கவுன் சிலை யொழித்துவிட வேண்டுமென்றும், இந்தியா மந்திரிக்கு உதவிபுரிவதற்காக இரண்டு உப-மந்திரிகளிருக்க வேண்டு மென்றும், இவர்களில் ஒருவர் இந்தியராக விருக்கவேண்டு மென்றும் காங்கிரஸ் கோரியது.

வகுப்புவாரிப் பிரதிநிதித்துவம் சம்பந்தப்பட்ட மட்டில் இந்தியா சட்ட சபையிலும் சரி, மாகாண சட்ட சபைகளி லும் சரி, முஸ்லீம்களின் தொகை விகிதம் காங்கிரஸ்-லீக் திட்டத்தில் கண்டுள்ளபடியே இருக்கவேண்டுமென்றும், ஸ்திரீகளுக்கும் தேர்தலில் அபேக்ஷகர்களாக நிற்க உரிமை யிருக்கவேண்டுமென்றும், பண விஷயங்களில் இந்தியா கவர்ன்மெண்டுக்கு சுதந்திர மிருக்கவேண்டுமென்றும் காங்கிரஸ் தீர்மானித்தது.

இந்திய மகாஜனங்களின் நியாயமான கோரிக்கைகளை வற்புறுத்துவதற்காக இங்கிலாந்திற்கு ஒரு தூது கோஷ்டி யினரை அனுப்புவதென தீர்மானித்தது. இக்கோஷ்டியின் அங்கத்தினர்களைத் தெரிந்தெடுப்பதற்காக ஒரு கமிட்டியும் நியமிக்கப்பட்டது.

இதே காலத்தில் முஸ்லீம் லீக் மகாநாடும் முகமதா பாத் ராஜா தலைமையின்கீழ் கூடி, காங்கிரஸ் மகாசபையின் முடிவுகளை யொட்டியே தீர்மானங்களை நிறைவேற்றி வைத்தது.

சீர்திருத்த உத்தேசங்களைப் பூர்த்தி செய்துவைக்க இன்னும் ஒன்றுதான் பாக்கியாக விருந்தது. அதாவது

மாகாண கவர்ன்மெண்டுகளுக்கு இன்னின்ன காரியங்கள், மத்திய கவர்ன்மெண்டுக்கு இன்னின்ன காரியங்கள் என்று பிரித்து, தொகுதிகளையும், ஓட்டு வகைகளையும் நிர்ணயித்தல்தான். இதனை நிறைவேற்றி வைப்பதற்காக சீமையிலிருந்து இரண்டு கமிஷன்கள் வந்து சேர்ந்தன. ஒன்று ஸௌத்பரோ கமிஷன்; இன்னொன்று பீத்தாம் கமிஷன். ஸௌத்பரோ கமிஷன் என்பது ஓட்டு விவரங்களைக் கவனிப்பது; பீத்தாம் கமிஷன் காரிய நிர்வாகங்களைக் கவனிப்பது.

இத் தூதுகோஷ்டியினருக்கு எங்கும் நல்ல வரவேற்பு கிடைத்தது. ஆனால் தென்னிந்தியாவில் மட்டும் விஷயம் வேறாக விருந்தது. இங்கு 1917-ம் வருஷம், பிப்ரவரி மாதத்தில் தோற்றுவிக்கப்பட்ட பிராம்மணரல்லாதார் இயக்கம் 1918-ம் வருஷம், நவம்பர் மாதத்திற்குள் விசேஷ வலிமை பெற்று விளங்கியது. ஸ்ரீமான் சாஸ்திரியார் ஸௌத்பரோ கமிட்டியில் ஓர் அங்கத்தினராக விருந்தார். பிராம்மணரல்லாத வகுப்பினருக்குத் தனிப்பிரதிநிதித்துவம் அளிக்கப்படவேண்டாமெனக்கூறி இவர் ஸௌத்பரோவின் ஆதரவைப் பெற்று வருகிறாரென்பதில் சந்தேகங்கொண்ட அவ்வகுப்பினர் மேற்படி கமிஷனில் ஸ்ரீமான் சாஸ்திரியார் சேர்க்கப்பட்டிருந்ததைக் கண்டிக்கும் முறையில் அக்கமிட்டியைப் பகிஷ்கரித்தனர். தங்கள் எதிர்ப்பைத் தக்க முறையில் இங்கிலாந்திற்கும் அறிவிக்கப் போவதாக அவர்கள் பயமுறுத்தினர். இவ்விஷயத்தில் அவர்கள் வெற்றியும் பெற்றனர். ஆனால் இதனால் இந்தியாவின் துயரங்கள் ஒரு சிறிதும் நீங்கவில்லை.

இந்தியப் பாதுகாப்புச் சட்டம் வெகு உக்கிரமாகச் சீறிக்கொண்டிருந்தது. இந்தச் சட்டத்தின்படி இந்தத் தேசத்திலுள்ள எவரையும், எதையும் செய்யும்படி சொல்லலாம். எதையோ ஒரு காரியத்தைச் செய்யக்கூடாதென்று தடுக்கவும் செய்யலாம். அலி சகோதரர்களும், மௌலானா அபுல்கலாம் அஸாதும் காவலில் வைக்கப்பட்டிருந்ததைக் குறித்து நாம் ஏற்கனவே பிரஸ்தாபித்திருக்கிறோம். அலி சகோதரர்கள் காங்கிரஸ் வாதிகளல்ல. அமிருதசரஸ் காங்கிரஸில்தான் அவர்கள் காங்கிரஸ் மகாசபையில் சேர்ந்தனர். முகம்மதலி "காம்ரேட்" என்ற வாரப் பத்திரிகையின் ஆசிரியராகவிருந்து வெகு தீவிரமாக எழுதிவந்தார். ஷௌகத்தலியோ "ஹம்தஸ்ட்" என்ற தினசரிப் பத்தி

ரிகை ஆசிரியராக விருந்தார். மகாயுத்தம் ஆரம்பித்தது. பலவீனப்பட்டுக் கிடக்கும் தேசத்தினருக்குப் பாதுகாப் பளிப்பதற்காகவே யுத்தம் நடப்பதாக பிரமாதப் படுத்தப் பட்டது. இந்தச் சமயத்தில்தான் முகம்மதலி "எகிப்தைக் காலி செய்க" என்ற தலைப்புடன் தமது பத்திரிகையில் ஒரு கட்டுரையைப் பிரசுரித்தார். இதற்குப் பிறகு தான் அலி சகோதரர்கள் இருவரும் காவலில் வைக்கப்பட்டனர். 1919-ம் வருஷம், டிஸம்பர் மாதம், 25-ந் தேதி யன்று தான் இவர்கள் விடுதலை பெற்றனர்.

ராணுவத்திற்கு ஆள் சேகரித்தல், யுத்தக் கடன்களுக் காகப் பணம் வசூலித்தல் இவ்விஷயங்களில் விசேஷ ஆக்ஷேபனைகளுக்கிடமான முறைகளெல்லாம் கையாளப் பட்டன. அக்கிரமும், அநீதியும் நிறைந்த இம் முறைகளை "நிர்ப்பந்தித்தும், தூண்டியும்" என வில்லிங்டன் பிரபு மிகவும் சாமானியமாக வர்ணித்தார். இம் முறைகளால் பின்னர் பஞ்சாபிலும், பிற விடங்களிலும் கடுமையான நிலைமைகள் உண்டாயின. கிராமாந்திரங்களில் கூட இத் தகாத முறைகள் அனுஷ்டிக்கப்பட்டன. இத்தகைய கொடுமைகளைச் சகிக்க முடியாத ஓர் ஊர் ஜனங்கள் பெரிதும் கோபமும், ஆத்திரமு மடைந்து கிராமாதிகாரி ஒருவரின் பங்களாவைச் சுற்றி வளைத்துக் கொண்டு அவரது குடும்பத்தினரைமட்டும் தப்பியோட அனுமதித்து விட்டு, பங்களாவை எரித்துத் தள்ளி, தரைமட்டமாக் கினர்.

## அடக்குமுறையின் கோரத் தாண்டவம்

செம்ஸ்போர்டு பிரபுவின் காலத்தில் அடக்குமுறை கோரமாகத் தாண்டவமாடியது. பத்திரிகைச் சட்டம் அடிக்கடி, மிக மிகக் கடுமையாகப் பிரயோகிக்கப்பட்டது. இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்படி பம்பாய் மாகாணத் திற்குள் நுழையக் கூடாதென மிஸஸ் பெஸண்ட்மீது தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. வங்காளத்திலோ சுமார் மூவாயிரம் யுவர்கள் காவலில் வைக்கப்பட்டனர். இதற்குப் பிறகு பெஸண்டம்மையாரும் காவலில் கிடந் தார்.

அடுத்த வருஷம் ரௌலட் சிபார்சுகள் பிறந்தன. இவற்றை எதிர்த்துத் தேச மக்கள் பெருங்கிளர்ச்சி செய்

தனர். ரௌலட் கமிட்டியின் சிபார்சுகள் மிகவும் பிற்போக்கு வாய்ந்தனவாகவிருந்ததால் அவற்றைக் கண்டிப்பதாக விசேஷ காங்கிரஸ் தீர்மானித்தது. மேற்படி சிபார்சுகள் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டால் இந்திய மக்களின் சாதாரண உரிமைகளும் பறிக்கப்பட்டுவிடுமென காங்கிரஸ் அபிப்பிராயப்பட்டது.

## டில்லி காங்கிரஸ்

காங்கிரஸ் மகாசபையின் 33-வது கூட்டம் டிஸம்பர் மாதம், 26-ந் தேதியன்று டில்லியில் நடைபெற்றது; ஹக்கீம் அஜ்மல்கான் வரவேற்புக் கழகத் தலைவராக விருந்தார். பண்டித மாளவியா அக்கிராசனம் வகித்தார். இச் சமயத்தில் ஐரோப்பிய யுத்தம் முடிந்து, நவம்பர் மாதம் 11-ந் தேதியன்று (1918) சமாதானமும் ஏற்பட்டுவிட்டது. இதனை யொட்டிச் செய்த பிரசங்கங்களில் பிரஸிடெண்ட் வில்ஸனும், மிஸ்டர் லாயிட் ஜார்ஜ் முதலியவர்களும் சுய நிர்ணயக் கொள்கையைப்பற்றிப் பிரமாதமாகப் பேசினர். எனவே இப் பிரசங்கங்களைப் பொருத்து காங்கிரஸ் மகாசபை சீர்திருத்த திட்டத்தை ஆராய்ந்து அபிப்பிராயம் தெரிவிக்கவேண்டி யிருந்தது.

உலக மக்களின் விடுதலைக்காகவும், சுதந்திரத்திற்காகவும் செய்யப்பட்ட யுத்தம் வெற்றிகரமாக முடிந்ததைப் பாராட்டியும், மன்னர்பிரான்பால் தனக்குள்ள விசேஷ பக்தியை வெளியிட்டும் காங்கிரஸ் ஓர் தீர்மானத்தை நிறைவேற்றியது. யுத்தத்தில் கலந்துகொண்ட இந்தியத் துருப்புக்களின் வீரப் பிரதாபத்தை மெச்சுவதாக இன்னொரு தீர்மானம் நிறைவேறியது. சுய நிர்ணயக் கொள்கையை அனுஷ்டிக்கக்கூடிய ஒரு தேசமாக இந்தியாவை ஏற்றுக்கொள்ள வேண்டுமென மூன்றுவது தீர்மானம் கோரியது. இதற்கு முதல் படியாக எல்லா அவசரச் சட்டங்களும் ரத்து செய்யப்பட வேண்டுமென்றும் அதே தீர்மானம் கேட்டுக்கொண்டது. வெகு சீக்கிரத்தில் இந்தியாவில் பூரா பொறுப்பாட்சியை ஏற்படுத்துவதாக உறுதி கூறி, பார்லிமெண்டில் சட்டமொன்று நிறைவேற்றப்பட வேண்டுமென மேலும் காங்கிரஸ் கோரியது. சமாதான மகாநாட்டில் கலந்துகொள்ளுவதற்காக லோகமான்ய திலகர், மகாத்மா காந்தி, ஹாஸன் இமாம் இம் மூவ

ரையும் காங்கிரஸ், இந்தியாவின் பிரதிநிதிகளாக நியமித்தது.

சீர்திருத்தத்தைப் பொறுத்தமட்டில், காங்கிரஸ்-லீக் திட்டத்தைப்பற்றிப் பம்பாயில் நடந்த விசேஷ காங்கிரஸில் என்ன தீர்மானிக்கப்பட்டதோ அதையே இந்தக் காங்கிரஸ் உறுதி செய்தது. எல்லா அடக்குமுறைச் சட்டங்களையும் ரத்து செய்து, ராஜீயக் கைதிகளையும், விசாரணையில்லாமல் காவலில் வைக்கப்பட்டிருப்பவர்களையும் விடுவிக்கும்படி காங்கிரஸ் வற்புறுத்தியது.

மாளவியாஜியைத் தலைவராகக்கொண்ட கைத்தொழில் கமிஷன் வெளியிட்ட யாதாஸ்தைக் காங்கிரஸ் ஆராய்ந்து பார்த்து, அதன் சிபார்சுகளை அங்கீகரிப்பதாகவும், கைத்தொழில்களை அபிவிருத்தி செய்யும் துறையில் கவர்ன்மெண்டார் விசேஷ சிரத்தை காட்டவேண்டுமென்றும், நாட்டில் கைத்தொழில் பாங்கிகள் அதிகமாக ஏற்படுத்தப்பட வேண்டுமென்றும் தீர்மானித்தது.

அலி சகோதரர்களின் விடுதலையைக் கோரியும், ஆயுர்வேத, யுனானி வைத்திய முறைகளுக்குச் சர்க்கார் அதிக ஆதரவளிக்க வேண்டுமென்றும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## அஹிம்ஸா தர்மம்

டில்லி காங்கிரஸ் செய்த அருமுயற்சிகளுக்குப் பின்னரும் நாட்டில் சமாதானமெய்தும் என்பதற்கு யாதொரு அறிகுறியையும் காணோம். 1919-ம் ஆண்டு ஆரம்பத்தில் இரு ரௌலட்டு மசோதாக்கள் தலையைத் தூக்கின. நாட்டில் ராஜீயக் கலகங்களும், கொலைகளும் பரவியிருக்கும் பிரதேசங்களில் குற்றவாளிகளைத் துரிதமாக விசாரித்து வழக்கை பைஸல் செய்ய மூன்று நீதிபதிகளடங்கிய நியாயமன்றம் ஒன்று ஸ்தாபிக்க ஒரு மசோதா முயன்றது. இந்தக்கோர்ட்டார் தீர்ப்புக்குமேல் அப்பீலே கிடையாது. இது தவிர பொதுஜனப் பாதுகாப்பின் நிமித்தம் சர்க்கார் குறிப்பிட்டவர்களை ஜாமீன் கட்டச் சொல்லவும், இந்த இடங்களில் தான் வசிக்கவேண்டும் என்ற நிபந்தனை விதிக்கவும், இன்ன காரியங்களைச் செய்யக்கூடாதெனத் தடுக்கவும் அதிகாரம் அளித்தது. சந்தேகமிருந்தால் யாரையும் உடனே சிறையி

லடைக்கும்படியான அதிகாரத்தையும் மசோதா சர்க்காருக்குக் கொடுத்தது. எவ்வளவு காலம் வேண்டுமென்ருலும் ஒருவரைக் காவலில் வைக்க உரிமையும் இச்சட்டம் ஒன்றின் மூலம் சர்க்கார் பெற விருந்தனர். இன்னொரு மசோதாவின் மூலம், ராஜத்துவேஷமான பிரசுரங்களை அதைப் பிரசுரிக்கவேண்டியோ, பரப்பவேண்டியோ ஒருவர் கைவசம் வைத்திருந்தால் அவர்களைச் சிறையிலடைக்கலாம் என்ற திருத்தத்தை நாட்டின் கிரிமினல் சட்டத்தில் நுழைக்க முயன்றது. ஜில்லா மாஜிஸ்டிரேட்டுகளுக்குச் சில பொறுப்புகளை அளித்து, சர்க்கார் விரும்புகிறபடி இந்த விஷயங்களில் துரிதமாக நியாயம் வழங்க ஏதுவேற்பட இந்த மசோதாவில் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன.

1919 பிப்ரவரி 6-ம் தேதியன்று இந்த மசோதாக்களை சர். வில்லியம் வின்ஸண்டு மத்திய சட்டசபையில் பிரேரணை செய்தார். இரண்டாவது மசோதா நிறைவேற்றப்படவில்லை. முதல் கூறப்பட்ட மசோதா 1919 மார்ச்சில் சட்டமாயிற்று ரௌலட்டு மசோதாக்கள் சட்டமாக இயற்றப்படின், அதனுல் ஏற்படும் சகிக்கவொண்ணு நிலைமையை எதிர்க்க காந்தி தான், சத்தியாக்கிரகப் போரைத் துவக்கப்போவதாக அறிவித்தார். இதன்பொருட்டாக அவர் நாடெங்கும் திக்விஜயம் செய்து கிளர்ச்சி நடத்தினுர். அவர் எங்கு சென்ருலும் ஜனங்கள் அவரைக் குதூகலத்துடன் வரவேற்றனர். தேசமக்களுடன் அவர் வந்து வசித்து நான்கு வருடங்களாகவில்லை. ஜனங்கள் அவரிடம் வைத்த மதிப்புக்குக் காரணம் தானென்ன? சர்க்கார் இதற்கு அளிக்கும் விடையைக் கேளுங்கள்.

"ருஷிய ஞானியான டால்ஸ்டாய் போலும், காந்தி உயரிய கொள்கைகளைக் கைப்பிடித்து, தன்னலமற்ற வாழ்க்கை நடத்துகிருர்" என்று கருதப்படுகிறது. தென் ஆப்பிரிக்காவில் அவர் தியாகப்போரில் ஈடுபட்டதிலிருந்து கீழ்நாட்டார் அவரை ஒரு தீர்க்கதரிசி, மகாரிஷி என்றெல்லாம் புகழ்ந்து வருகிருர்கள். காந்தி தன் மதத்தினர்களால் மட்டுமல்லாமல், இந்தியர்கள் எல்லோராலும் நன்கு மதிக்கப்படுகிருர். அவர் ஆமதாபாத்துக்கு வந்தது முதல் சமூகச் சீர்திருத்தத்திற்காகப் பலவிதங்களிலும் பாடுபட்டு வருகிருர். துன்புற்றவர் யாராயிருந்தாலும் அவர் பொருட்டுத் தன்னுலான எவ்வித உதவியையும் செய்யத் தயாராக இருக்கும் காந்தி தன் தேசத்தோரின் மனதைக்

கொள்ளை கொண்டுவிட்டார். பம்பாய் மாகாண நகர வாசிகளும், கிராமவாசிகளும் முழுவதும் அவர் வய மானவர்கள்தாம். அவரைக் கோயிலில் வைத்து வழி படவும் ஜனங்கள் விருப்பமுடையவர்களாக இருக்கிறார்கள். மிருகத்தன்மையுடன் போராட ஆத்ம வலிவே தகுந்த ஆயுதம் என்பது அவர் கொள்கை யாதலின், தென்னுப் பிரிக்காவில் தான் உபயோகித்து வெற்றியடைந்த சாத்வீகப் போர்முறையை ரௌலட்டு சட்டத்தை ஒழிக்க கைக் கொள்ளலாம் என்று அவர் நம்பினார். மசோதா பிரரேபிக்கப் படும்பொழுதே அவர் தம் எண்ணத்தை அறிவித்து விட் டார். இந்த அறிக்கை சர்க்காருக்கும் இந்திய ராஜீயவாதி களுக்கும் மிகுந்த கவலையை உண்டாக்கியது. சட்ட சபை யிலுள்ள சில மிதவாதிகள் இதன் விளைவாய் என்ன ஏற்படுமோ என்று பயந்தனர். இந்தியர் மனோபாவத்தை நன்கறிந்த பெஸண்டு அம்மையார் அவர் சாத்வீகப் போரினால் மிகுந்த தீமை விளையக்கூடும் என்று காந்திஜியை எச்சரித்தார். இயக்கம் ஆரம்பிக்கப்படுவதற்கு முன் அவர் வெளியிட்டதைக் கொண்டு அவர்மேல் யாதொரு நடவடிக்கைகளும் எடுத்துக்கொள்ள இடமிருப்பதாகச் சர்க்கார் நினைக்கவில்லை. காந்தி தன்னைப் பின்பற்றி நடப் பவர் யாவரும் அஹிம்ஸா தர்மத்தினின்றும் சிறிதும் பிறழலாகாதென எச்சரித்துக்கொண்டே யிருந்தார். தன் இயக்கம் மூலம் சர்க்காரை வெல்லலாம் என்ற அபார நம்பிக்கை அவருக்கிருந்தது. அவர் இந்தச் சட்டத்தை எதிர்ப்பவர்கள் பின்வருமாறு பிரதிக்ஞை செய்யவேண்டு மென அறிக்கை விடுத்தார்.

"ரௌலட்டு மசோதாக்கள் சுதந்திர உரிமைகளைப் பிடுங்கி, நியாயத்தை மறுத்து, பிரஜைகளின் அடிப்படை யான உரிமைகளை நாசம் செய்வதாக இருப்பதால், இந்த மசோதாக்கள் சட்டமானால், நாங்கள் இந்த மசோதாவின் விதிகளை அனுசரிக்க மறுப்போம். இதற் கென நியமிக்கப்படவிருக்கும் கமிட்டியார் இன்னும் என்ன முறைகளைக் கையாளச் சொன்னாலும், அவைகளையும் பின் பற்றுவோம். இந்தப் போரிலீடுபட்டபின் நாங்கள் சத்திய மாக உண்மையையே கடைப்பிடித்து, அஹிம்ஸா தர்மத் தினின்று சிறிதும் பிறழாமல் நடப்போமாக என்று அந்தப் பிரதிக்ஞையில் கூறப்பட்டிருந்தது."

இந்தியர்களில் பலருக்கு காந்திஜி ஏன் இந்த சிறு மசோதாக்களைக் காரணமாகக் கொண்டு சாத்வீகப் போரில் ஈடுபடவேண்டும் என்று தோன்றிற்று. மீண்டும் 1920-ம் ஆண்டில் பாஞ்சாலப் படுகொலை, கிலாபத்து கிளர்ச்சி இவைகளைக் காரணமாகக் கொண்டு காந்திஜி ஒத்துழையாமை இயக்கத்தைத் துவக்க யோசித்தபொழுதுகூட ஜனங்கள் இப்படியே நினைத்தனர். சுயராஜ்யம் அளிக்கப் படாததற்கு ஒரு போர் ஆரம்பிக்காதவர் ஏன் சிறு பிரச்னைகளில் முழுபலத்தையும் காண்பிக்கவேண்டும் என்று அவர்கள் நினைத்தனர். இந்த இயக்கத்துக்கு (1919) காந்திஜி மக்களிடமிருந்து எதிர்பாரா ஆதரவைப் பெற்றார் எனக் கூறவேண்டும். ஓர் உபவாசம் இருந்த பின்னர் காந்திஜி தன் சாத்வீக மறுப்பு இயக்கத்தை ஆரம்பித்தார். 1919 மார்ச்சு 30உ யன்று நாடெங்கும் உபவாசமும் பிரார்த்தனைகளும் நடத்தப்பெற்றன. ஆரம்ப தேதி கடைசி விநாடியில் ஏப்ரல் 6-ம் தேதியாக மாற்றப்பட்டது. இதை டெல்லி ஜனங்கள் அறியாமல் மாலை ஊர்வலங்கள் நடத்தினர். விதிவசமாக அன்று போலீஸ்காரர்கள் துப்பாக்கி பிரயோகம் செய்ய நேர்ந்தது. இதன் விளைவாக ஐவர் மரணமடையவும், பலருக்குக் காயங்களும் ஏற்பட்டன. நாட்டில் எங்கும் ஓர் புதிய உணர்ச்சி உலவத் தொடங்கியது. ஹிந்துக்களும், முகமதியர்களும் தாங்கள் ஓர் பொது இயக்கத்தில் ஈடுபட்டிருந்தமையால், ஒருவருக்கொருவர் அந்தரங்கப்பிரியம் வைக்கலாயினர். அந்த நாளில் ஹிந்துக்களும் முகமதியர்களும் தங்கள் நெடுநாளையக் குரோதங்களை அறவே மறந்து, ஒருவர் கையினின்றும் ஒருவர் நீருண்டனர். ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமை என்ற கோஷம் எங்கும் வானைப் பிளந்தது. ஹிந்து தலைவர்கள் மசூதியினுள் அனுமதிக்கப்பட்டு பிரசங்கங்களும் செய்தனர்! அந்த சமயத்தில் முகமதியர்கள் துருக்கி விஷயமாக பிரிட்டிஷாரின் மனப்பான்மையை வெறுத்திருந்தனர். ஹிந்துக்கள் முகமதியர்களுடன் கூடி நின்று அவர்கள் கிளர்ச்சியில் ஈடுபட்டனர். இதன் விளைவாகத்தான் நாட்டில் புதிய ஒற்றுமை உணர்ச்சி ஒன்று அப்பொழுது இரு சாதியினரிடமும் ஏற்பட்டது. 1919 ஏப்ரல் மாதத்தில், இந்திய தேச சரித்திரத்தில் ஓர் புதிய அத்தியாயம் ஆரம்பிக்கின்றது.

## பாஞ்சாலப் படுகொலை

நிற்க இந்த சமயம் பாஞ்சால கவர்னராக இருந்த சர். மைக்கேல் ஓட்வியர், காங்கிரஸ் இயக்கம் பாஞ்சாலத்தில் பரவாமலிருக்கவேண்டிய முயற்சிகளில் புகுந்தார். பாஞ் சால மக்கள் தீரர்கள். போர்க்குணம் மிகுந்தவர்கள். சமீபத் தில் முடிந்த மகாயுத்தத்திற்கு அவர்களில் அநேகர்சென்று, பேரும் புகழும் பெற்றுத் தாய்நாடு திரும்பி யிருந்தனர். இவர்களிடையே சுதந்திரதாகம் ஏற்படின் இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி முடிந்துவிடும் என்று அவர் நினைத்தார். 1919-ல் காங்கிரஸ் மகாநாடு பாஞ்சாலத்திலுள்ள அமிருத சரஸில் நடைபெற விருந்ததைத் தடுக்க அவர் எண்ணங் கொண்டார். பஞ்சாப் காங்கிரஸ் தலைவர்களான டாக்டர் கிச்சுலு, டாக்டர் சத்தியபால் என்ற இருவரும், ஒரு நாள் ஜில்லா மாஜிஸ்டிரேட்டால் வரவழைக்கப்பட்டு, பிறகு, போன இடம் தெரியாமல் கொண்டுபோகப்பட்டனர். இவர்கள் மறைந்த மாயம் நடெங்கும் பரவிற்று. ஜனங்கள் ஜில்லா மாஜிஸ்டிரேட்டிடம் சென்று அவர்கள் எங்கு கொண்டுபோகப்பட்டனர் என்று கேட்க விரும்பினர். வழியில் அவர்கள் துருப்புக்களால் மறிக்கப்பட்டனர். கலவர மேற்பட்டதில் துருப்புக்கள் சுட ஆரம்பித்தன. கூட்டத்தில் ஒன்றிரண்டுபேர் இறந்தனர். கூட்டம் திரும்பி நகருள் புகுந்து நாஷனல் பாங்கி கட்டிடத்தைக் கொளுத்தி அதன் ஐரோப்பிய மானேஜரைக் கொன்றது. மதியிழந்த கூட்டத்தினர் கையில் மொத்தம் ஐந்து ஐரோப் பியர்கள் உயிரிழந்தனர். அதிகாரிகள் நிலைமையைச் சமா ளிக்க நகரை ராணுவ அதிகாரிகளிடம் ஒப்புவித்தனர். இன்னும் குஜரான்வாலா, காஸுர் என்ற யிடங்களிலும் ஜனங்கள் கலகம் செய்து பெருஞ் சேதம் விளைத்தனர். குஜரான்வாலாவில் தபாலாபீஸ், முசாபரி பங்களா, தந்தி ஆபீஸ், ரெயில்வே ஸ்டேஷன் இவைகள் தீக்கிரையாயின.

இதன் தொடர்ச்சியாக நாடெங்குமே அமைதி யின்மை நிலவ ஆரம்பித்தது. லாகூரில் கலகம் ஏற்பட்டது. போலீஸார் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய நேர்ந்தது. கல் கத்தாவில் கலகத் தீ தலை காட்டியது. பாஞ்சால நிலைமையைச் சரிப்படுத்த காந்தி டெல்லிக்குப் புறப்பட்டுப்போன மார்க் கத்தில் அவர் அதிகாரிகளால் வழிமறித்து, ஒரு ஸ்பெஷல் ரெயிலில் பம்பாய்க்குக் கொணர்ந்து சேர்க்கப்பட்டார்.

காந்தி கைது செய்யப்பட்டார் என்ற செய்தியின் விளைவாக ஆமதாபாத்தில் கலவரம் ஏற்பட்டு சில ஆங்கில உத்தியோகஸ்தர்களும் இந்தியர்களும் கொல்லப்பட்டனர். வீராம்காம், நாதியாத் என்ற ஊர்களிலும் சிறு கலகங்கள் விளைந்தன. கல்கத்தாவில் நடந்த கலவரத்தில் ஐந்து ஆறு மரணங்களும், பலருக்குப் படுகாயமும் ஏற்பட்டன. காந்தி பம்பாயில் ஜனங்களைத் தேற்றி அமைதியாக இருக்கச் செய்து, பிறகு ஆமதாபாத்துக்குச் சென்றார். அங்கும் இவர் முயற்சியால் அமைதி பரவியது. இந்த விபரீதவிளைவுகளின் நிமித்தமாகத் தன் சத்தியாக்கிரகப்போர் நிகழ்ச்சியை ஒத்திவைத்திருப்பதாக காந்தி அறிக்கை வெளியிட்டார். எனினும் அமிருதசரஸிலும், லாகூரிலும் நிலைமை வரவரக் கேவலமாகிக்கொண்டே வந்தது. ஹிந்து வருஷப்பிறப்பு தினத்தன்று ஜாலியன்வாலா பாக் மைதானத்தில் ஓர் மாபெருங்கூட்டம் நடத்த மகாஜனங்கள் உத்தேசித்தனர். அம்மைதானம் நாற்புறங்களும் உயர்ந்த மதில்களால் சூழப்பட்டது. அதற்குள் செல்ல ஓர் குறுகிய பாதைதான் இருந்தது. அன்று மாலை அங்கு இருபதினாயிரம் ஆடவர்களும் ஸ்திரீகளும் குழந்தைகளும் குழுமியிருந்தனர். இவர்களுக்கு நகரில் ராணுவச் சட்டமியற்றியிருப்பதாகத் தெரியாது. இந்தத் தருணத்தில் ஜெனரல் டயர் என்ற இராணுவ அதிகாரி 100 சிப்பாய்களையும் 50 சோல்ஜர்களையும் உள்ளே இட்டுச் சென்று, யாதொரு எச்சரிக்கையுமில்லாமல், கூட்டத்தைச் சுட உத்திரவிட்டார். அவர் இதுபற்றி நடந்த விசாரணையில் தான் தகுந்தபடி கூட்டத்தை எச்சரித்ததாகக் கூறினார். என்ன இருந்தாலும் இருபதினாயிரம் ஜனங்கள் குறுகிய வாயிலின் வழியாக இரண்டு நிமிடங்களில் வெளியேற முடியும் என்று அவர் எண்ணியிருக்க முடியாது. இந்தப் படுமோசத்தால் கூட்டத்தில் 400 பேர் மரணமடைந்தனர். சுமார் இரண்டாயிரம் ஜனங்கள் படுகாய முற்றனர். கூட்டத்தில் படுகாயமடைந்து கீழே விழுந்து துடிப்பவர்கள் அன்றிரவு முழுதும் யாதொரு உதவியும் அளிக்கப்படாமல் அங்கு கிடந்தனர். பின் விசாரிக்கப்பட்டபொழுது ஜெனரல் டயர் “ ரவைகள் மட்டும் தீர்ந்திராவிடில் இன்னும் ஜனங்களைச் சுட்டு வீழ்த்தியிருப்பேன் ” என்று கூறினார்.

ஜெனரல் டயர் நிர்வாகத்தில் அமிருதசரஸ் வாசிகள் தீயிலிட்ட புழுப்போல் துடித்தனர். ஜல் வசதியும் மின்

சார வசதியும் மறுக்கப்பட்டன. பொது ஸ்தலங்களில் குற்றவாளி எனக் கூறப்பட்டவர்கள் சவுக்கடி அடிக்கப்பட்டார்கள். ஜனங்கள் வீதிகளில் மார்பின்மேல் ஊர்ந்து செல்ல வேண்டும் என்ற விநோத உத்திரவு பிறப்பிக்கப்பட்டது. இதைப்பற்றி சட்ட சபையில் பிரஸ்தாபம் எழுந்த போது இன்னொரு ராணுவ அதிகாரியான ஹட்ஸன் துரை வெகு தமாஷாகச் சிரித்துக் கொண்டே இருந்தார்! பாக்கி நிஷ்டூரங்களைச் சொல்லவேண்டாம்!

ராணுவ அதிகாரிகள் நியமித்த விசாரணைக் கமிஷனில் 298 பேர்வழிகள் கலக சம்பந்தமாகக் குற்றம் சாட்டப் பட்டனர். இதில் 218 பேர் தண்டிக்கப்பட்டனர். 51 பேருக்கு மரண தண்டனையும், 46 பேருக்குத் தீவாந்திர சிக்ஷையும் அளிக்கப்பட்டது. இன்னும் பலர் பலவித மான சிக்ஷைகளை அடைந்தனர்.

ஜெனரல் டயர் ஜனங்களை சுட்டு அமைதி தேடிய விம ரிசையை அப்பொழுது கவர்னராக இருந்த சர். மைக்கேல் ஓட்வியர் பாராட்டி "நீர் செய்தது சரி. உப-கவர்னருக்கு உம்மோடு ஒத்த அபிப்பிராயமே" என்ற தந்திச் செய்தி அனுப்புவித்தார்!

இந்தச் செய்திகள் எல்லாம் காங்கிரஸ் சபை, ஜுலை மாதம் வரையில் அறியவில்லை. அப்பொழுது அதை வெகு அந்தரங்கமாக வைத்துக் கொள்ளவேண்டும் என்ற நிபந் தனைகளின் மேல்தான் அவர்களறிந்தது. பாஞ்சால வீரர் கள் இவ்விதம் துயருற்றது அமிருதசரஸில் மட்டுமல்ல. மாகாணத்தில் பல இடங்களில் நிறுவப்பட்டிருந்த சில்லரை ராணுவ அதிகாரிகளான கர்னல் ஜான்ஸன், கர்னல் ஓப்ரயன், பாஸ்வொர்த் ஸ்மித் இவர்கள் செய்த அக்கிரமங் களின் கொடுமைகள் காதில் நாராசம்போல் விழக்கூடியவை யாம். எட்டு மணிக்குமேல் வீதிகளில் நடப்போர் சுடப் படுவர், சவுக்கடி பெறுவர், சிறையிலடைபடுவர் என உத்தி ரவுகள் பிறந்தன. மூடியிருந்த கடைகளைத் திறக்காவிட் டால் கடைக்காரர்கள் சுடப்படுவர், அல்லது அவர்கள் கடை பலவந்தமாகத் திறக்கப்பட்டு பண்டங்கள் தாராள விநியோகம் செய்யப்படும் என்று ஒரு உத்திரவு. தெருச் சுவர்களில் ஒட்டப்பட்டிருந்த ராணுவ விளம்பரங்கள் கிழி பட்டிருந்தால் பொது ஜனங்கள் தண்டிக்கப்படுவராம்! தெருக்களில் இரண்டு பேருக்கு மேலாகச் சேர்ந்து நட

மாடக்கூடாது ! மாணவர்கள் ஒரு நாளில் நான்கு தடவை போலீஸ் ஸ்டேஷனுக்கு வந்து 'ரிபோர்ட்டு' செய்து கொள்ள வேண்டும் ! இந்தியர்களுக்குச் சொந்தமான மோட்டார் வண்டிகள், சைகிள்கள் போலீஸாரிடம் ஒப்பு விக்கப்படவேண்டும். தன் வீட்டு வாசலில் பசுவிடம் நின்றுகொண்டிருந்த ஒரு கிழவன் இரவில் எட்டு மணிக்கு மேல் வீதியில் காணப்பட்ட குற்றத்திற்காகச் சவுக்கடி யடிக்கப்பட்டான். கல்லூரியில் ஒட்டப்பட்டிருந்த ராணுவச் சட்ட விளம்பரம் ஒன்று கிழிக்கப்பட்டிருந்ததால், காலேஜ் தலைமை போதகாசிரியரும், அவர் சகாக்களும் துருப்பு களால் கைது செய்யப்பட்டு ராணுவ ஸ்தலத்திற்கு இட்டுச் செல்லப்பட்டு மூன்று நாட்கள் காவலில் வைக்கப்பட்டிருந் தனர். பொதுச் சத்திரங்கள் ராஜத்துரோக பிரசாரத் துக்கு உபயோகப்படுகின்றன என்று அவை மூடப்பட்டன. கிராமாதிகாரி ஒருவர், கிராமப் பொது ஸ்தலத்தில் மரத் தில் கட்டி உரிக்கப்பட்டார். இதன் மூலம் அவர் மனதிலும் பொது ஜனங்கள் மனதிலும் நல்லுணர்ச்சி ஏற்படுமென ராணுவ வர்க்கத்தினர் எதிர்பார்த்தனராம் ! இவ்வளவு அரும்பெரும் காரியங்களைச் சாதித்த கர்னல் ஜான்ஸன் லாகூரை விட்டுப் போகும்பொழுது அங்குள்ள ஐரோப்பியர்களால் கொண்டாடப்பட்டார். "ஏழைகள் அன்பர்" என்று அவர் பெயரிடப்பட்டார் !

இந்த அதிக்கிரமங்களில் அமைதி நிலவும்படி செய்ய ஆகாய விமானங்களும் உபயோகப்பட்டன. எங்கு "கூட் டம்" தென்பட்டாலும் அவர்களைச் சுட்டார் ஒரு ராணுவ விமானி ! இருபது விவசாயிக ளடங்கிய ஓர் "பயங்கரமான கூட்டம்" ஒரு வயலில் நிற்கக்கண்ட இந்த விமானி துப் பாக்கிகளை மூச்சுவிடாமல் பிரயோகித்து அவர்களைச் சிதற அடித்தார் ! ஒரு விமானி ஒரு கிராமத்தையே சுட்டு அழித்தார். இதனால் ஜனங்களுக்கு நல்ல படிப்பினை ஏற் படும் என்று அவர் நினைத்ததாக விசாரணையில் கூறினார்.

இந்தியர்கள் பிரிட்டிஷ் அதிகாரிகளைக் கண்டவுடன் சலாமிடவேண்டும். சவாரி செய்துகொண்டிருக்கும் வாக னங்களிலிருந்து கீழே இறங்கவேண்டும். விரித்த குடையை மடக்கவேண்டும் என்று சட்டம் பிறப்பித்த பெருமை கர்னல் ஓபிரயனைச் சாரும். இதை அனுசரிக்காத பிரஜை கள் பற்பல தண்டனைக்குள்ளானார்கள். வீதியில் போகும்

பொழுதே ஜனங்கள் பலர் கைதிசெய்யப்பட்டு, சங்கிலிகளால் பிணைத்து இழுத்துச் செல்லப்பட்டார்கள். இந்த மாதிரி அவமானம் அடைந்தவர்களில் நகரில் பெரிய பணக்காரரும் தர்மவானுமான ஒரு வயோதிகரும் கூட இருந்தார். இந்தக் "கைதி" $1\frac{1}{2}$ லக்ஷ ரூபாய் செலவில் "ஜார்ஜு மன்னர் பாடசாலை" ஒன்று ஸ்தாபித்தவர். யுத்த காலத்தில் இவர் பெருத்த தொகைகளுக்குச் சர்க்கார் கடன் பத்திரங்கள் வாங்கித் தன் ராஜபக்தியைக் காண்பித்தவர்! இந்த கர்னல் ஒபிரயன் அக்கிரமங்களை இனி வளர்ப்பதில் பிரயோசனமில்லை. அவர் பாஞ்சாலப் படுகொலையைப்பற்றி விசாரிக்க நியமிக்கப்பட்ட ஹண்டர் கமிஷன் முன்பாகக் கொடுத்த சாக்ஷியத்திலுள்ளவைகளே அவரை மீளா நரகத்தினுள் புகுத்தும்!

காப்டன் டவுடன் என்ற ஓர் சில்லரைத் தேவதையும் தனக்கு வாய்த்த சமயத்தை வீணாக்காமல் ஜனங்களைத் துன்பப்படுத்த பல்லாயிரம் உபாயங்கள் கண்டுபிடித்தார். ஜனங்கள் நெற்றி பூமியில் பட பணியவேண்டும் என அவர் ஒரு சட்டமியற்றினார்.

பாஸ்வொர்த் ஸ்மித் என்ற ஆபீஸர் தன்னு திக்கத்துக்குட்பட்ட பிரதேசத்தில் பதினைந்து நாட்களில் 477 பேர்களைக் குற்ற வழக்கில் விசாரணை செய்து தீர்ப்பளித்தார்.

## காந்திஜி அறிக்கை

காந்திஜியின் மனம் இந்த எதிர்பாராத விளைவுகளால் மிகவும் திடுக்கிட்டுவிட்டது. அவர் தமது ஹிமாலயத் தவறினால், சாத்வீகப் போர்புரிய அருகரல்லாதவரெனவும், நாட்டில் கொடிய கலவரச் செய்கைகளிலிறங்கத் தாம் உதவியதாகவும் ஒப்புக்கொண்டார் எனவே தான் சாத்வீகப் போர் தொடுக்கவிருந்ததை நிறுத்திக் கொண்டார். நாட்டில் அமைதி நிலவத் தன்னாலான உதவிபுரியத் தயாராக இருந்தார். சர்க்கார் இப்பொழுது தங்களுக்கு உள்ள முழு பலத்தையும் உபயோகித்து நாட்டில் பெருத்த கல்வரம் ஏற்படாமல் தடுக்கப் போவதாக உரைத்தனர். இந்த சமயத்தில் ஆப்கானிஸ்தானத்துடன் (மூன்றாவது) யுத்தம் தொடுக்கவேண்டிவரவே, நிலைமை நெருக்கடியாக இருந்தது. ராணுவச் சட்ட அமுலை வெகுநாளைக்கு நீடித்து வைத்திருப்பதில் தன்

வெறுப்பைக் காட்ட விரும்பிய சர். ஸி. சங்கரன் நாயர் நிர்வாக சபை அங்கத்தினர் பதவியை ராஜீநாமா செய்தது இந்த சமயத்தில்தான். பாஞ்சால நாட்டைப்பற்றிய தகவல் யாதும் வெளிவராமல் சர்க்கார் முன் ஜாக்கிரதையாக ஏற்பாடுகள் செய்தனர். பூஜ்யர் ஆண்டரூஸ் பஞ்சாப் மாகாணத்துக்குள் பிரவேசிக்க எத்தனிக்கையில் கைது செய்யப்பட்டார். பாரிஸ்டர் இயர்டிலி நார்டன் பாஞ்சாலக் கைதிகள் சார்பாக வாதிக்கச் சென்றவரை மாகாணத்துக்குள் அனுமதிக்கவில்லை. தேசமெங்கும் ஜனங்கள் ராணுவச் சட்ட அமுலினின்றும் பஞ்சாபிகளை விடுதலை செய்ய வேண்டுமெனக் கூக்குரலிட்டனர். கோடீச்வரரும், காங்கிரஸ் வாதியுமான லாலா ஹரிகிஷன் லால் ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டார். அவர் 40 லக்ஷ ரூபாய் சொத்தும் பறிமுதல் செய்ய உத்திரவாயிற்று. 1919 செப்டம்பரில் ராஜப்பிரதிநிதி பாஞ்சால விபரீதங்களைப் பற்றி விசாரணை செய்ய ஹண்டர் கமிஷனை நியமித்தார். இது பிறப்பித்தவுடன் பாஞ்சாலத்தில் சமீப காலத்தில் அதிகாரிகள் 'பொதுஜன நன்மை கருதிச்' செய்த காரியங்களுக்காக அவர்களைக் குறைகூறி தண்டிக்க வொட்டாமல் செய்யும் ஓர் ரக்ஷக சட்டத்தையும் பிறப்பித்தார். பண்டித மதன் மோகன் மாளவியா இந்த மசோதா பிறப்பிப்பதைச் சற்று நிறுத்திவைக்க வேண்டும் என்று நான்கு மணி சாவகாசத்துக்கு மேலாக வாதித்தும் சர்க்கார் செவிசாய்க்கவில்லை.

இந்த சமயத்தில் சர்க்கார் அவசரச் சட்டத்தை ஆதரித்தவர்கள் நமது தேசத்தில் இல்லாமல் போய்விடவில்லை. சர். தின்ஷா வாச்சா சர்க்கார் செய்தது சரி என்று அழுத்தம் திருத்தமாகக் கூறினர். காந்திஜியிடம் ரௌலெட் மசோதாவில் ஒரு குறையும் இல்லை என்று வாதித்த பெஸண்டு அம்மை "மூர்க்கமான ஒரு கூட்டம் துருப்புக்களை கற்களைக்கொண்டு தாக்கினால் அவர்கள் நாலு சுழல் துப்பாக்கிப் பிரயோகம் செய்வதில் என்னதப்பு?" என்று கேட்டார். இதிலிருந்துதான் 'கல்மாரிக்கு பதில் குண்டுமாரி' என்ற பதம் எழுந்தது. பெஸண்ட் அம்மை இங்கிலீஷ் பழமொழிகளுள் ஓர் புது பழமொழி இயற்றி வைத்தார். இது காலேதான் டில்லியில் தோன்றிய கக்ஷி வித்தியாசங்கள் பெரிதாகி, காங்கிரஸ் சபையில் பிளவு ஏற்பட்டது.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி ஏப்ரல் மாத இறுதியில் கூடி, காந்திஜியை பாஞ்சாலத்துக்குள் பிரவேசிக்கக்கூடாதென தடைபோட்டதைக் கண்டித்து உடனே பாஞ்சாலப் படுகொலையைப்பற்றி விசாரிக்க ஓர் கமிட்டி ஏற்படுத்தவேண்டுமெனக் கேட்டுக்கொண்டது. வித்தல்பாய் படேல், என். ஸி. கெல்கர் இவர்கள் நாட்டின் பரிதாப நிலைமையை ஆங்கிலேயர்களுக்கு எடுத்துரைக்க சீமைக்குப் பிரயாணமாயினர். ஏப்ரல் மாதம் 21-ம் தேதியிட்டு பாஞ்சால சர்க்காருக்குத் தமது அதிகாரங்களை மாற்றியும் அவசரச் சட்ட மொன்று கவர்னர் ஜனரலால் பிறப்பிக்கப் பட்டது.

இந்தியத் தலைவர்களெல்லோரும் வேண்ட, பஞ்சாபுக்குச் சென்ற பூஜ்யர் ஆண்ட்ரூஸ் வழி மறித்துக் கைதி செய்யப்பட்டார். "பம்பாய் கிரானிகல்" பத்திரிகாசிரியான பி. ஜி. ஹார்னிமன் பாஞ்சால நிர்வாகத்தைக் கண்டித்து எழுதிய குற்றத்துக்காக தேசப் பிரஷ்டம் செய்யப்பட்டார். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில் இவர்மீது விதித்த தண்டனை ரத்து செய்யப்படவேண்டுமெனக் கேட்டுக்கொள்ளப்பட்டது.

ஹார்னிமன் தேசப் பிரஷ்டம் செய்யப்பட்டதும் நாட்டினர் நன்கு நடந்த அவர் பத்திரிகையை இழந்தனர். ஆயினும் அப்பொழுது "யௌவன இந்தியா" பத்திரிகை "பம்பாய் கிரானிகல்" பத்திரிகைக்குச் சமமான உயர்ந்த சேவை யளிக்க முன் வந்தது. "யௌவன இந்தியா" பத்திரிகை ஜம்னதாஸ் துவாரகாதாஸ் என்பவரால் சுயாட்சி இயக்க காலத்தில் தோற்றுவிக்கப்பட்டது. பின்னரில் சங்கர் லால் பாங்கர் ஆகிய சிலர் அதை வாங்கி நடத்தினர். "பம்பாய் கிரானிகல்" மறைந்தகாலத்தில் காந்தி "யௌவன இந்தியா" பத்திரிகை நடத்தும் பொறுப்பைத் தான் ஏற்றுக்கொண்டார்.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியார் பஞ்சாப் படு கொலைகளைப்பற்றி விசாரிக்க ஒரு கமிட்டி நியமித்தனர். அதை ஒட்டி நியாயஸ்தலங்களில் வழக்குகள் நடத்த, தகுந்த நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமெனவும், அதற்காக ஒரு நிதி சேர்க்கவேண்டுமெனவும் தீர்மானித்தனர். இந்தக் கமிட்டியில் பின்னர் காந்தி, ஆண்ட்ரூஸ், சிரத்தானந்த சுவாமி இவர்களும் நியமிக்கப்பட்டனர். விசாரணை மத்தி

யில் மாளவியா, "இங்கிலாந்து பிரதம மந்திரி, இந்தியா மந்திரி இவர்களுக்கு ராணுவச் சட்ட அமுலின் கீழ் மரண தண்டனை பெற்றவர்களைக் காங்கிரஸ் விசாரணைகள் முடிவதற்கு முன் சிரச்சேதம் செய்யலாகாது" என்று விண்ணப்பம் அனுப்பினார். தன் பதவியை ராஜீநாமா செய்த சர். ஸி. சங்கரன் நாயரை பஞ்சாப் நிலைமையை அதிகாரிகளுக் கெடுத்துரைத்து பரிகாரம் தேட சீமைக்கு அனுப்ப யோசனை செய்யப்பட்டது. சில நாட்களில் காந்திஜி தன் சட்டமறுப்பு இயக் கத்தை தாற்காலீகமாக நிறுத்தி வைத்திருப்பதாக ஓர் அறிக்கை வெளியிட்டார். "இந்திய சர்க்கார் பம்பாய் கவர்னர் மூலமாக எனக்கு விடுத்த செய்தியில் இப்பொழுது சட்டமறுப்பு இயக்கத்தைத் துவக்கினால் தேசத்துக்குப் பெருந்தீங்கு விளையுமென எச்சரிக்கை செய்திருக்கின்றனர். என் நண்பர்கள் பலரும் அவ்விதமே அபிப்பிராயப்படுவதால் நான் சட்டமறுப்பு இயக்கத்தை இப்பொழுது ஆரம்பிக்கப்போவதில்லை. நாட்டிலுள்ள அனேக அமிதவாதிகளும் எங்கே என் இயக்கம், அதன் தத்துவத்தை உணராதவர்களை, அரசியல் கொலை முதலிய பாதகங்களுள் புகுத்திவிடுகிறதோ என்று பயந்தார்கள். அவர்களும் நான் இப்பொழுது வந்த முடிவுக்குக் காரண மாக இருந்தனர். நான் முன்னர் சத்தியாக்கிரகப் போர் துவங்க இருக்கையில், மேன்மை தங்கிய ராஜப்பிரதிநிதிக்கு ரௌலட் மசோதாக்களை ரத்துசெய்து, பாஞ்சால அநீதி களைப்பற்றி ஓர் விசாரணை நடத்துவதாக இருந்தால் என் இயக்கத்தை ஆரம்பிப்பதில்லை எனக் கூறினேன். பாபு காளிநாத ராய் என்ற பத்திரிகாசிரியர் அநியாயமாகச் சிறையிலிடப்பட்டவர்மட்டும் என்வேண்டுகோளின் பயனாக புனர்விசாரணை செய்யப்பட்டு குறைந்த தண்டனை யடைந் தார். இதற்காக நான் சர்க்காரைப் பாராட்டுகிறேன். மேலும் சர்க்கார் பாஞ்சால விசாரணைக்காக ஒரு கமிஷன் நியமனமாகிக் கொண்டிருக்கிறது என அறிவிக்கிறார்கள். சர்க்கார் இவ்வளவு நல்ல மனப்பான்மையுடனிருக்கும் பொழுது நான் அவர்கள் எச்சரிக்கையைப் பொருட்படுத் தாமல் காரியத்திலிறங்குவது தகாது. உண்மையில் என் சாத்வீகப் போரின் தன்மை எத்தகையது என்பது நான் சர்க்கார் யோசனைக்கு இணங்குவதினின்றும் விளக்கப் படுகின்றது. சாத்வீகப் போரில் ஈடுபட்டவன் சர்க்காரைச்

சங்கடத்துக்கு உள்ளாக்க முயல்வதில்லை. இப்பொழுது என் இயக்கத்தை நிறுத்திவைப்பதால் சர்க்காருக்கும், என் தேசத்தாருக்கும், நான் நன்மை செய்யவேண்டு மென்று நினைத்திருக்கும் பாஞ்சால மக்களுக்கும்,தலைவர்களுக்கும்நான் நன்மை புரிந்தவனுவேன். நான் எங்கும் தீப்பற்றும்படி செய்வதாகக் குற்றம் சாட்டப் படுகிறேன். நான் ஏதாவது ஒரு சமயம் சட்ட மறுப்பில் ஈடுபட்டால் அதைத் தீக்குச்சி விளையாட்டெனக் கூறின், ரௌலட்டு சட்டத்தை நாடெங்கும் அமுலுக்குக் கொண்டுவருவதை நாடெங்கும் தீப்பற்றவைப்பதாகத்தான் கூறவேண்டும். சட்டமறுப்பு இயக்கம் கூடாதென்றால், அந்தக் கொடிய சட்டமும் கூடாதுதான். இந்தியாவில் பொதுஜன அபிப்பிராயத்துக்கு இந்த சட்டம் முற்றிலும் எதிர்ப்பட்டதாக இருக்கிறது. சர்க்கார் எவ்வளவுதான் முழுப்பினும் பொது ஜனங்கள் மனத்தை மாற்ற முடியாது" என்று காந்தி தன் அறிக்கையில் கூறினர். கடைசியாக உண்மை சத்தியாக்கிரகிகள் சுதேசியத்தை நாடெங்கும் பரப்பவும், ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமையை நிலைநாட்டவும் பாடுபட்டு வரவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டார்.

## இங்கிலாந்திற்கு தூதுகோஷ்டி

இந்தியர்களின் நிலைமையை சீமை சர்க்காருக்கும், பொது ஜனங்களுக்கும் எடுத்துரைக்க காங்கிரஸ் தூது கோஷ்டி ஒன்று இந்த சமயம் சீமைக்குப் புறப்பட்டது. இந்த கோஷ்டியில் வித்தல்பாய் படேல், வி. பி. மாதவ ராவ் (மைஸூர் திவானக இருந்தவர்), லோகமான்ய திலகர், விபின சந்திர பாலர், ஜி. எஸ். காபார்தே, டாக்டர் பி. ஜெ. மேத்தா, ஏ. ரங்கஸாமி அய்யங்கார், என். ஸி. கெல்கர், சையது ஹாஸன் இமாம், டாக்டர் சாதாயா, பி. ஜி. ஹார்னிமன் ஆகிய பல தேசத்தலைவர்கள் அடங்கி இருந்தனர். வி பி மாதவராவின் அரிய தொண்டுகளினல் இந்தியர்கள் பரிதாப நிலைமையைக் குறித்துப் பல ஆங்கிலேயர்கள் வருத்தமுற்று, அவற்றைத் தீர்க்க வழி தேடுவதாகப் புகன்றனர். இதேசமயத்தில் நாட்டினின்றும் பற்பல தூதுகோஷ்டிகள் இங்கிலாந்துக்குச் சென்றிருந்தன. மிதவாதிகள், ஜஸ்டிஸ் கக்ஷிக்காரர்கள், அகில

இந்திய சுயாட்சி சங்கத்தின் பெரும்பான்மை அங்கத்தினர் கோஷ்டி ஒன்று, சிறுபான்மை அங்கத்தினர் கோஷ்டி ஒன்று, இப்படியாகப் பல கோஷ்டிகள் அங்கு போயடைந்தன. மகாராஷ்டிர சுயயாட்சி சங்கத்தார் மட்டும் சீமைக்குச் செல்ல அனுமதி யளிக்கப்பட வில்லை. காங்கிரஸ் கக்ஷியை சீமையில் எடுத்துப் பேசியவர்கள் வித்தல்பாய் படேலும், வி. பி. மாதவராவும் தான். இங்கிலாந்திலுள்ள தொழிற் கட்சியினர் நமது பிரதிநிதிகளை அன்புடன் வரவேற்றனர். அவர்களுக்கு வேண்டிய சௌகரியங்கள் செய்து வைத்தனர். சுயேச்சைத் தொழிற் கட்சிக்காரர்களும் இந்தியர்பால் மிகுந்த அன்பு பாராட்டினர். தொழிற்கட்சி அந்த வருட மகா நாட்டில் இந்தியா சுயாட்சி பெற உரித்தான தேசம் என்று தீர்மானித்தது. எல்லாக் கக்ஷிகளும் பாஞ்சாலப் படுகொலையைக் கண்டனம் செய்தன.

காங்கிரஸ் தூது கோஷ்டியார் இங்கிலாந்தில் ஒரு பக்கத்தில் பெஸண்டு அம்மையுடன் போராடி, இன்னொரு பக்கத்தில் பிரிட்டிஷ் காங்கிரஸுடன் சண்டையிட்டு, தங்களுக்கிட்ட ஆணையை நிறைவேற்ற வேண்டி யிருந்தது. பெஸண்டு அம்மையார் சீமை சென்று தன் கால மெல்லாம் காங்கிரஸை எதிர்ப்பதிலேயே கழித்தார். மாண்டேகு சீர்திருத்தத்தை ஏற்கவேண்டுமென்று பெஸண்டு கூறினார். காங்கிரஸ் சபையோ அதை நிராகரிக்க வேண்டுமெனக் கூறியது. தம் அரசியல் நிர்வாகத்தை இந்தியர்களே வகித்து நடத்தப் பொறுப்பு வாய்ந்தவர்களென காங்கிரஸ் பிரதிநிதிகள் கூறினர். அநேகம் தடவைகளில் பெஸண்டு அம்மையார் காங்கிரஸ் பிரதிநிதிகளோடு சச்சரவிட்டார்.

## படுகொலை விசாரணை

அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டியின் ஆணையைச் சிரமேல் ஏற்று சுவாமி சிரத்தானந்தர், பண்டித மோதிலால் நேரு, பண்டித மாளவியா ஆகிய மூவரும் பாஞ்சாலத்தில் நடந்த சம்பவங்களைப்பற்றி விசாரிக்கச் சென்றனர். பின்னர் ஆண்ட்ரூஸ், ஜவஹர்லால், புருஷோத்தம தாஸ் தாண்டன், காந்திஜி ஆகியவர்களும் விசாரணைக் கமிட்டியில் கலந்து கொண்டனர். காந்திஜி வந்ததும் மக்களுக்கு தைரியம்

பிறந்தது. இந்த சமயத்தில் அதிகார தோரணையில் ஒரு கமிட்டி இதற்காக நியமிக்கப்பட்டது. அதன் விசாரணை நோக்கங்கள் காங்கிரஸ் சபை கோரியவற்றிற்கு வெகுவாக குறைந்திருந்தாலும், காங்கிரஸ் வாதிகள் அதனுடன் ஒத்துழைக்கத் தீர்மானித்தனர். கல்கத்தாவிலிருந்து சித்தரஞ்சன தாஸர் இந்த கமிஷன் முன்னர் காங்கிரஸ் சபை சார்பாகச் சாக்ஷியம் கொடுக்க வந்தார். பின்னர் சில எதிர்பாராத விளைவுகளின் நிமித்தமாகக் காங்கிரஸ் சபையினர் அதிகாரிகளால் ஏற்படுத்தப்பட்ட ஹண்டர் கமிஷனுடன் ஒத்துழைப்பதினின்றும் விலகிக்கொண்டனர். இதன் காரணமும் உடனே ஒரு தனி அறிக்கையில் வெளியிடப்பட்டது. ராணுவச் சட்டக் கைதிகள் சிலரை காங்கிரஸ் கமிட்டியார் விசாரிக்க அதிகாரிகள் அனுமதி மறுத்தனர். இந்த விஷயத்தில் இந்தியா மந்திரியும் இந்தியா கவர்ன்மெண்டும் தலையிட மறுத்தனர். எனவே, காங்கிரஸ் தலைவர்கள் விசாரணையினின்றும் விலகிக்கொண்டு தாங்கள் தனி முறையில் ஓர் விசாரணை நடத்தினர். இந்தக் கமிட்டியில் காந்திஜி, மோதிலால், சித்தரஞ்சன் தாஸ், பஸ்லு-உல்ஹக், அப்பாஸ் தியாப்ஜீ ஆகியோர் அங்கத்தினர்கள். இந்த கமிட்டியார் அமிருதசரஸில் மகாசபை கூடுவதற்குமுன் தங்கள் யாதாஸ்தைத் தயார் செய்ய முடியவில்லை. எனினும் 'தளகர்த்தரான டயர் ஏப்ரல் 13-ம் தேதியன்று ஸ்திரீகளும், குழந்தைகளும் நிராயுதபாணிகளான ஆடவர்களும் நிறைந்த கூட்டத்தின்மீது ஈவு இரக்கமில்லாமல் துப்பாக்கிப் பிரயோகம் செய்து அநேகரைப் படுகொலை செய்ததற்கு ஈடான பாதகம் உலகில் எந்த தேசத்திலும் நடைபெற்றதாக நாம் அறியோம்' என்று ஓர் முடிவை அவர்கள் தெரியப்படுத்தினார்கள். ஜனரல் டயர் ஹண்டர் கமிஷன் முன்னர் கொடுத்த சாக்ஷியத்தைக் கொண்டே அவர்கள் இந்த முடிவிற்கு வந்தனர்.

1919-ம் ஆண்டின் பிற்பகுதியில் பல துர்ச்சகுனங்கள் ராஜீய வானத்தில் தோன்றின. காங்கிரஸ் பிரதிநிதித்துவ மற்றதும், காங்கிரஸ் ஒத்துழைப்பை நிராகரித்ததுமான ஹண்டர் கமிஷன் நியமிக்கப்பட்டது ஒன்று. உறுதிமொழிகள் நிறைவேற்றப்படாத சீர்திருத்த மசோதா மற்றொன்று. இவை வருங்காலம் மிக்க கடினமாக இருக்கும் என்று காண்பிப்பன

போலிருந்தன. ஹண்டர் கமிஷன் நியமனத்துக்குப் பின்னர், சீர்திருத்த மசோதாவைப் பார்லிமெண்டு சபையினர் பரிசீலனை செய்துகொண்டிருக்கும்பொழுது, இந்தியாவிலுள்ள ராஜீய நிலைமைப்பற்றி, இங்கிலாந்திலிருந்த காங்கிரஸ் சபை பிரதிநிதிகள் ஒரு அறிக்கை வெளியிட்டனர். அதில் கீழ்க்கண்டவாறு நிலைமை தெளிவாக எடுத்துரைக்கப்பட்டிருந்தது.

"இந்திய சர்க்கார் இந்தியாவிலுள்ள நிலைமையை வர வர மிகவும் கேவலமாக்கிக்கொண்டு வருகிறார்கள். இதனால் என்ன விபரீதங்கள் விளையுமென எதிர்பார்க்க முடியாது. பிரிட்டிஷ் பொது ஜனங்களுக்கு இந்த தருணத்தில் இந்தியாவிலுள்ள நிலைமையை எடுத்துரைக்க வேண்டியிருக்கிறது."

பிரதம மந்திரி லாயிட் ஜார்ஜு, மகாயுத்தத்திலீடுபட்டிருந்த சகல தேசத்துருப்புக்களுக்கும் வந்தன மளிக்கையில் "இந்தியா செய்த பெரும் உதவியைக் கொண்டுதான் நாம் யுத்தத்தில் வெல்ல முடிந்தது. இந்தியாவை இவ்வளவு நாட்களாக விசேஷ அரசியல் அபிவிருத்தியடையத் தகாதெனநாம் நினைத்திருந்த போதிலும் இப்பொழுது நமக்குச் செய்திருக்கும் பேருதவிக்காக அந்த தேசத்தின் விருப்பத்திற்கேற்ற உரிமைகள் அளிக்கப்பட வேண்டும்" எனக் கூறினர். இந்தியாவின் விருப்பத்தைஎப்படி இந்திய சர்க்கார் நிறைவேற்றிருக்கிறார்கள் என்றால் அடக்குமுறைச் சட்டங்கள் இயற்றல், பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டு இடுதல், பிரஜா உரிமைகளை மறுத்தல், பொதுக் கலகங்களையும், பல வகுப்பினரிடையே வித்தியாசங்களையும் உண்டு பண்ணுதல், இராணுவச் சட்ட அமுல், தேசத்தலைவர்களை நாட்டைவிட்டு விரட்டுதல், சொத்துகளைப் பறிமுதல் செய்தல், தூக்கு தண்டனை விதித்தல், பொது ஸ்தலங்களில் கட்டிவைத்து பிரம்பாலடித்தல், ஸ்திரீகள் குழந்தைகள் அடங்கிய கூட்டங்களைத் துப்பாக்கி கொண்டு சுட்டு வீழ்த்தல், என்றிவ்வித நாகரீக முறைகளால் தாம்! இந்தக் கொடிய பாதகங்களை ஜெர்மானியர்கள் கையாண்டாரெனில் இங்கிலீஷ்காரர்கள் எவ்வளவு ஆத்திரம் அடைந்தவர்களாக இருப்பார்கள்?

இதற்கெல்லாம் மேலாக, இந்த பாஞ்சாலப்படுகொலையை விசாரணை செய்து மழுப்பவென்று, காங்கிரஸ் பிரதிநிதி,

முஸ்லீம் சங்கப் பிரதிநிதி ஒருவர் கூட இல்லாத ஒரு கமிஷன் நியமனமான மறு நிமிடமே இராணுவச் சட்டத்தின் கீழ் குற்றம் செய்திருக்கக்கூடிய அதிகாரிகளை தண்டனையிலிருந்து காக்கும் ஓர் ரக்ஷக சட்டமும் நிறைவேற்றப் பட்டிருக்கிறது.

இந்திய தேசீய காங்கிரஸ்மகாசபையின் சீமைக் கிளை ஸ்தாபனத்தார் இந்தியாவின் கேவல நிலைமையை உணர்ந்து மேற்கண்ட அறிக்கையை வெளியிடத் துணிந்தனரென்றால், இதினின்றும் தேச ஜனங்களின் அப்போதைய மனப்பான்மை எத்தன்மையதாக விருந்ததென்பது தெளிவாகும். இத்தருணத்தில் புதிதாக வழங்கப்பட்ட சீர்திருத்தத்திலுள்ள குறைபாடுகள் நாட்டுமக்களின் விசனத்தை மேலும் அதிகரித்தது. இச் சீர்திருத்தம் வாயிலாகத் தோன்றிய விபரீதங்கள், இரட்டை யாட்சி சட்டசபைகளுக்குச் சர்க்கார் தாஸர்கள் நியமிக்கப்படுதல், ராஜப்பிரதிநிதி மாகாண கவர்னர்களின் எதேச்சாதிகாரம் ஜனங்களின் விருப்பத்தை நிராகரிக்க உரிமைகள், அவசரச் சட்டங்கள் பிறப்பிக்க அதிகாரம், ஆகிய பல இவ்விஷேதப் பிறவிகள். இவற்றை முளையிலேயே அழிப்பது அமிருதசரஸில் கூடிய மகாநாட்டின் பொறுப்பாயிற்று.

## அமிருதசரஸ் காங்கிரஸ்

அமிருதசரஸ் மகா சபைக் கூட்டத்திற்குப் புறப்பட்டு வரும் வழியில் லோகமான்ய திலகர் புதிய சீர்திருத்தம் போதிய உரிமைகளை வழங்காமற் போனாலும் அதை ஏற்று உழைப்பதெனத் தீர்மானித்து விட்டார். வரும் வழியிலேயே அவர் அரசர் பெருமானுக்குப் புதிய சட்டம் நிறைவேற்றப்பட்டதற்காகத் தன் நன்றியறிதலைத் தந்தி மூலம் தெரிவித்தார். இச்சம்பவம் அமிருதசரஸில் கூடியிருந்த மகாசபையினருக்குப் பெரும் வியப்பை அளித்தது. மகா சபையில் இவ்வண்ணம் அபிப்பிராய பேதம் ஏற்பட, இரு கக்ஷிகள் தோன்றி யுத்தம் நிகழ ஆரம்பித்தது.

அமிருதசரஸ் மகாநாட்டில் எல்லோர் கண் முன்னும் சித்தரஞ்சன தாஸரே தேசத்தாருக்கு ஓர் நல்வழி காட்டக் கூடிய தலைவராகத் தோன்றினர். கல்கத்தாவில் (1917)

நடந்த மகாசபைக் கூட்டத்துக்கு டாக்டர் பெஸண்டு அம்மையாரைத் தலைவராக நியமிக்க வேண்டி அவர் போரா டியபொழுதே அவர் பிரக்யாதி யடைந்ததுண்டு. டில்லி (1918) மகா நாட்டில் சில மாதங்களுக்கு முன்பாக பம் பாயில் கூடிய தனிக்கூட்டத்தில் சில உறுதியற்ற தீர்மானங் களை அவர் ஒழிக்கச் செய்த அருமுயற்சிகள் அவர் பெரு மையைப் பன்மடங்கு அதிகரித்தன. அமிருதசரஸில் இவர் போன்ற தீவிர வாதிகளுக்கும், பழையகாலத்திய மித வாதிப் பேச்சாளர்களுக்கும் ஓர் கடும்போர் நிகழ்ந்தது. பெஸண்டு அம்மைகூட இப்பொழுது மூதாதையர் கக்ஷியில் சேர்ந்து கொண்டுவிட்டார். தாஸர் தன் தீர் மானங்களைத் தயாராகக் கொணர்ந்து நிர்வாகிகள் தீர்மானங் களைப் பிரேரேபிக்கு முன்னரேயே அவைகளைச் சபைமுன் சாமர்த்தியமாகச் சமர்ப்பித்து விட்டார். சீர்திருத்தத் தைப்பற்றி அமிருதசரஸ் மகாநாட்டில் கொணரப்பட்ட தீர்மானம் சித்தரஞ்சன தாஸரின் சிருஷ்டி. இதனை விஷயா லோசனைக் கமிட்டியாரும் ஆதரித்துவிட்டனர் எனினும் பொதுக்கூட்டத்தில், இத்தீர்மானம் "இந்தியாவில் பொறுப் பாட்சி ஏற்படுத்தப்படுவதை எதிர்பார்த்து, ஜனங்கள் இப் புதிய சீர்திருத்தத்தை, அத்தகைய பொறுப்பாட்சி எளிதில் கிட்டும் வகையில் ஏற்று உழைப்பார்கள்" என ஓர் மாறு தல் அடைந்தது. சர்க்கார் எவ்வளவு தூரம் ஜனங்களை நம்பி அவர்களுடன் ஒத்துழைக்க முன் வருகிறார்களோ, அவ்வள வுக்கு ஜனங்களும் சர்க்காருடன் ஒத்துழைக்கத் தயாராக இருப்பர் என்பதே இதன் உட்கருத்து. 1917ஹ ஆகஸ்டு 20-ந்தேதி மாண்டேகு விடுத்த அறிக்கையில இத்தகைய ஒத்துழைப்பை அவர் எதிர்பார்த்தா ரென்பதை இப் பொழுது ஞாபகத்திற்குக் கொணரல் வேண்டும். தாஸர் அதைப்பற்றி ஒன்றும் கூறுமலிருப்பது நலம் எனக் கூறினர். காந்திஜீயோ அதைத் தனிப்பட்ட வகையில் எடுத்துக் கூறல் வேண்டுமெனப் புகன்றார்.

அமிருதசரஸ் (1919) மகாநாட்டில் தேசமக்கள் தங்கள் கண்ணியத்தைக் காப்பாற்றப் போர் புரிந்து வெற்றி யுற்றனர் அன்று காலை மகாநாட்டினரிடைமிருந்த அபிப் பிராய பேதம் நிலவியிருந்தது. பண்டித மாளவியாவும், காந்திஜீயும் புதிய சீர்திருத்தத்தை ஏற்று மேற்கூறியவாறு பயன்படுத்திக்கொள்ள வேண்டுமென நினைத்தனர். சித்த

ரஞ்சன தாஸர் அதை ஏற்கக்கூடாதெனப் போராடினார். அவர் கொணர்ந்த தீர்மானம் பின்வருமாறு:—

(1) இந்த மகாசபை, இந்தியா, உடனே பூர்ண சுயாட்சி அந்தஸ்தைப் பெறத் தகுந்தது என மீண்டும் உறுதியாகக் கூறி, இதற்கெதிரான அபிப்பிராயங்களைப் பொருட்படுத்தலாகாதெனத் தீர்மானிக்கின்றது.

(2) டில்லி மகாநாட்டில் தீர்மானிக்கப்பட்டபடி, புதிய சீர்திருத்தம் இந்தியாவிற்குப் போதாதது, மக்களுக்குத் திருப்தி யளிக்காதது, ஏமாற்றத்தை விளைப்பதெனத் தீர்மானிக்கின்றது.

(3) பார்லிமெண்டு சபையார் சீக்கிரத்தில் இந்தியாவிற்குப் பூர்ண சுயாட்சி அளிக்க வேண்டியவாறு நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமென இம் மகாசபை கோருகிறது.

காந்திஜி 'ஏமாற்றத்தை விளைவிப்பது' என்பதை எடுத்துவிட்டு, அதற்கு பதிலாக கீழ்க்கண்ட ஓர் கிளைத் தீர்மானத்தைப் பிரேரணை செய்தார்:

"(4) அவ்வண்ணம் பார்லிமெண்டு சபையார் இந்தியாவுக்குப் பூர்ண சுயாட்சி யளிக்கும் வரையில், மன்னர் பிரான் பிரகடனத்தில்

" இந்திய சரித்திரத்தில் இப்பொழுது ஏற்பட்டிருக்கும் புதிய சகாப்தத்தில், எனது குடிகளும் சேவகர்களும் ஒன்றுபட்ட மனதுடன், "விரைவில் பூர்ண சுயாட்சி அந்தஸ்தை அடைவோம், அதற்கான முயற்சிகளைச் செய்வோம்" என்று கூடி உழைக்கத் தொடங்குவாராக"

என்று கூறியிருப்பதற் கிணங்கி காங்கிரஸ் மகாசபை சீர்திருத்தத்தை ஏற்று உழைப்பதெனத் தீர்மானிக்கிறது."

புதிய சீர்திருத்த சம்பந்தமாக மாண்டேகு பட்ட அரும்பாடுகளுக்காக இந்த மகாசபை அவருக்குத் தன் மனமார்ந்த வந்தனங்களை அளிக்கிறது.

கடைசியாக சித்தரஞ்சனர் கூறிய முதன் மூன்று தீர்மானங்களும், காந்தி கொணர்ந்த தீர்மானத்தின் கருத்தையொட்டிய நான்காவது தீர்மானமும் சபையில் எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டு நிறைவேறின. இதற்கு மாறாக டாக்டர் பெஸண்டு அம்மை கொணர்ந்த தீர்மானம் சபையில் முறியடிக்கப்பட்டது.

மத்தியஸ்தமாக நிறைவேற்றப்பட்ட இத் தீர்மானம் நிலைமையைத் தெளிவாக்கிவிடவில்லை. ஏனென்றால் தாஸர் தீர்மானத்தைப் பிரரேபிக்கையில் ஜனங்கள் சீர்திருத் தத்தை ஏற்றாலும், சமயோசிதப் பிரகாரம் சர்க்காருடன் ஒத்துழைக்க மறுக்கவும் கூடும் எனக் கூறினார். எனவே காந்திஜி, தாஸ் ஆகிய இருவரில் ஒருவருக்கும் இத்தீர்மானம் பூர்ண வெற்றி யளிக்கவில்லை. சபையைச் சார்ந்த மூதாதை யர்களிடையே பலமான அபிப்பிராய பேதங்கள் நிலவுவது தான் இதனின்றும் வெளிப்பட்டது. சித்தரஞ்சன தாஸ் சீர்திருத்தத்தை ஏற்க மறுக்கவேண்டுமென்றும், அது நடவாமல் முட்டுக்கட்டை போடவேண்டுமெனவும் அச் சமயம் கூற, காந்திஜி சர்க்காருடன் ஒத்துழைக்க வேண்டு மெனச் சாதித்தார். அமிருதசரஸில் காந்திஜி சொல் தான் நிறைவேறியது. தன் முக வசீகரத்தினாலும், தூய கொள்கைகளாலும், அதற்கேற்றவாறு கையாண்ட அநுஷ் டானங்களாலும், காந்திஜி அம் மகாசபையினர் மனதை வசீகரித்துவிட்டார். அம் மகாநாட்டிற்கு வந்திருந்தோர் தொகை 36,000. இதில் காங்கிரஸ் பிரதிநிதிகள் ஆறாயிரம். உள்ளூர்ப் பிரதிநிதிகள் 1200. மகா சபையினர், பாஞ் சாலப் படுகொலை சம்பவங்களினால் உணர்ச்சி ததும்பி நின்றனர். அச்சமயம் காந்திஜி பாஞ்சால ஜனங்களின் வரம்பு மீறிய அதிக்கிரமங்களைக் கண்டிக்க ஓர் தீர்மானம் கொணர்ந்தார். விஷயாலோசனைக் கமிட்டியார் இதனை ஏற்கவில்லை யாதலின் காந்திஜி மிக்க ஏமாற்றமடைந்து, மகா ஜனங்கள் பாஞ்சால நாட்டில் கோபாவேசத்தில் செய்யப் புகுந்த அதிக்கிரமங்களைக் கண்டிக்கக் காங்கிரஸ் மகாசபை இணங்காவிடில் தான் மகாசபையை விட்டு வெளியேறி விடப்போவதாக அறிவித்தார் இதைக்கேட்ட மகாசபையார் முணுமுணுத்துக்கொண்டு, காலைக்கூட்டத்தில் காந்திஜியின் விருப்பத்துக்கிணங்கி "கோபமூட்டப்பட்ட பாஞ்சால ஜனங்கள் செய்த அக்கிரமங்களுக்காக மகாசபை மிகுந்த வருத்தமுறுவதாக" ஓர் தீர்மானத்தை நிறைவேற்றி வைத் தனர். அச்சமயம் காந்திஜியின் மொழிப்புரை அவர் இயக் கத்தின் நோக்கத்தைத் தெள்ளென எடுத்துரைத்தது.

"இந்த மகாசபை முன் கொணரப்பட்ட தீர்மானங் களனைத்திலும் இதுவே தலை சிறந்தது. இதனுள்ளடங்கி யிருக்கும் தத்துவத்தை நீங்கள் உணர்ந்து, அதன்படி நடக்க முயன்றீர்களேயானால், அதுவே நம்மை எளிதில்

வெற்றி மார்க்கத்தில் சேர்ப்பிக்கும். இந்த அழியா உண்மையை நாம் எப்பொழுதும் கவனத்தில் வைக்காவிடின் நாம் தோல்வியுறுவது திண்ணம். பாஞ்சாலத்தில் நம்மவர் அதிக்கிரமச் செயல்களில் இறங்கவில்லை என்று சொல்வீர்களேயானால், என்னிடம் அதை மறுத்துக் கூற தேவைக்கு மீறிய சாக்ஷியங்கள் இருக்கின்றன. வீரம்காம், பம்பாய், ஆமதாபாத், எல்லா இடங்களிலும் மகாஜனங்கள் வேண்டுமென்றே அஹிம்ஸா மார்க்கத்தினின்றும் தவறினர். கொடுஞ் செயல்கள் புரிந்தனர். டாக்டர் கிச்சுலு, டாக்டர் சத்தியபால் இவர்களைச் சர்க்கார் கைதுசெய்து ஜனங்களைக் கோபமூட்டியிருக்கலாம். சமாதானத்தையே நாடிச் சென்ற என்னை வழிமறித்துச் சிறை செய்தது மக்களுக்கு ஆத்திரமூட்டக்கூடியதுதான். சர்க்கார் இவ்விதம் நிலை தவறினரென்றால், நமது நாட்டினரும் அச்சமயம் நிலைதவறினரே! நிலை தவறினவரிடம் நாமும் அவ்விதமே நடந்து கொள்ளாமல் சாத்வீக மார்க்கத்தில் புகுந்தோமேயானால், வெற்றி நமதுடையதாகும்,'' என்று காந்தி கூறினார். இதன் சாரத்தை அங்கு கூடியிருந்த ஜனங்கள் நன்குணர்ந்திருப்பரோ? இத் தீர்மானமே பின்னர் அக் காங்கிரஸ் சபையின் நடவடிக்கைகளைச் சீர்படுத்தியது. சர்க்காருடன் போரிட அப்பொழுது காந்திஜி எண்ணவில்லை. மகாநாட்டில் உடனே இந்தியாவுக்கு அப்பொழுது விஜயம் செய்திருந்த வேல்ஸ் இளவரசரை உபசரித்து வரவேற்பதாக ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. திருப்தியளிக்காத சீர்திருத்தத்தை ஏற்றுழைப்பதற்குக் காரணம் கூறப்பட்டது. சுதேசியத்தை ஆதரிக்க வேண்டுமெனக் கூறிய தீர்மானத்தில் இந்தியாவின் புராதனக் கைத்தொழில்களான கைத்தறி நெசவுத் தொழிலையும் ராட்டினத் தொழிலையும் மீண்டும் உயிர்ப்பிக்க வேண்டுமெனக் கூறப்பட்டது. கறவைப் பசுக்களையும், காளைமாடுகளையும் அந்நிய நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுவதைத் தடுக்கவேண்டுமெனக் கோரப்பட்டது. மாகாணங்களின் கலால் சம்பந்தமான கொள்கைகள் பரிசீலனைக்கு எடுத்துக் கொள்ளப்பட்டன. ரெயில்வேக்களில் மூன்றாவது வகுப்புப் பிரயாணிகளின் தொல்லைகள் நிவர்த்திக்கப்பட வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளப்பட்டது. முகமதியர்கள் 'பக்ரீத்' உற்சவ காலங்களில் கோஹத்தி புரியும் வாடிக்கையைக் கைவிட்டதற்காக அவர்களிடை மகாசபை நன்றி பாராட்டியது. துருக்கி தேச

விஷயமாகப் பிரிட்டிஷ் மந்திரிகளின் பிற்போக்கான எண்ணங்கள் கண்டனம் செய்யப்பட்டன. விவசாயிகளின் அல்லல்களை நிவர்த்திக்கவும் இம் மகாநாடு வழிதேடியது. தொழிலாளிகளின் நன்மையைக் கோரிய தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. சர்க்கார், யூனனி, ஆயுர்வேத சிகிச்சா முறைகளை ஆதரிக்க வேண்டுமெனக் கேட்டுக் கொள்ளப்பட்டது. சீமையின் தொழிற் கட்சிக்காரர்களும், பிரிட்டிஷ் கமிட்டியாரும், முக்கியமாக ஸ்ரீ பெஸன்ட் ஸ்ரீ பென்ஸ் பூரும் இந்தியாவின் சார்பாகச் செய்த ஊழியங்கள் பாராட்டப்பட்டன. அமெரிக்காவில் இந்தியாவுக்குச் சாதகமாக ஸ்ரீ லஜபதிராய் செய்த அருந் தொண்டை மகாசபையினர் பாராட்டினர். சீமையில் காங்கிரஸ் தூது கோஷ்டி சாதித்ததையும் காங்கிரஸ் சபை பாராட்டி அவர்களுக்கெல்லாம் தன் நன்றியறிதலைத் தெரிவித்தது. பூஜ்யர் ஆண்ட்ரூஸ், அயல்நாட்டு இந்தியர் விஷயமாகவும், பாஞ்சால மக்கள் விஷயமாகவும் செய்துவரும் சேவைக்கு நன்றி தெரிவிக்கப்பட்டது. பாஞ்சாலத்தில் விசாரணைக்காகச் சர்க்காரால் நியமிக்கப்பட்ட ஹண்டர் கமிஷனை மகாசபை ஏன் பகிஷ்கரிக்க நேர்ந்தது என்பது மகாநாட்டில் முதன் முதலாக வெளியிடப்பட்டது. பாஞ்சால கவர்னர், கைதியான சில பாஞ்சாலத் தலைவர்கள் கை விலங்குகளுடனே யாவது வந்து விசாரணையில் கலந்துகொள்ள அனுமதிக்கப் பட மாட்டார்கள் என்று கூறிவிட்டதால்தான், மகா சபை அவ் விசாரணையில் கலக்க மறுத்து, தனி விசாரணைக் கமிட்டியொன்றை நியமித்து தனிப்பட்ட அறிக்கை வெளியிடத் தீர்மானித்தது என்று அச்சமயம் பகிரங்கப்படுத்தப் பட்டது. இந்த மகா நாட்டில், சர். சங்கரன் நாயர் ராணுவ அமுல் நீடித்திருப்பதில் அதிருப்திகொண்டு தன் நிர்வாக அங்கத்தினர் பதவியை ராஜீநாமா செய்த செய்கை பாராட்டப்பட்டது. செம்ஸ்போர்டு பிரபுவை ராஜப்பிரதிநிதி வேலையினின்றும், ஜெனரல் டயரை ராணுவ அதிகாரிப் பதவியினின்றும் விலக்கவேண்டுமென மகா நாட்டில் கோரப்பட்டது. சர். மைக்கேல் ஒட்வியர், ராணுவக் கமிட்டி அங்கத்தினராக நியமிக்கப்பட்டதினின்றும் நீக்கப்படல் வேண்டுமெனவும் மகா நாட்டினர் வேண்டினர்.

## வைசிராயைப நீக்கத் தீர்மானம்

செம்ஸ்போர்டு பிரபுவைப்பற்றிய தீர்மான விஷயமாக ஓர் வதந்தி அச்சமயம் நிலவியதை இங்கு கூறல் வேண்டும். காங்கிரஸ் சபையில் செம்ஸ்போர்டு பிரபுவை பதவியி னின்றும் நீக்கவேண்டும் எனத் தீர்மானம் எழுவதை, சாஸ்திரிபோன்ற யாராவது ஒரு மிதவாதி எதிர்ப்பார் என்று செம்ஸ்போர்டு எதிர்பார்த்திருந்தாராம். ஆனால் ஸ்ரீனிவாச சாஸ்திரி, சி. பி. ராமஸ்வாமி அய்யர் ஆகிய இருவரும் காங்கிரஸ் கூட்டத்தினின்றும் விலகி, கல்கத்தா வில் மறுநாள் நடக்கவிருந்த மிதவாதிகள் மகா நாட்டுக்கு விரைந்து சென்றனர். பி. என். சர்மாவுக்கு இத் தீர் மானத்தை எதிர்க்க சமயம் வாய்த்ததை அவர் நன்கு பயன் படுத்திக்கொண்டார். அவருக்கு 'மிதவாதம்' பிடிக்கவில்லை. தீவிர தேசியவாதிகளுடன் சேரவும் மனமில்லை எனவே தைரியமாக எழுந்து நின்று கூட்டத்தினர் ஆரவாரத்தைச் சிறிதும் பொருட்படுத்தாமல், ராஜப்பிரதிநிதியிடம் அதிருப்தி காண்பித்த தீர்மானத்தை எதிர்த்தார். அவர் தன் கடமையை நிறைவேற்றிவிட்டார். சில நாட்களுக்கு முந்திதான் அவர் இந்திய சட்டசபை அங்கத்தினர் பதவியை, ரௌலட்டு சட்டத்தின் மீது தன் அதிருப்தியைக் காண்பிக்கவென ராஜீநாமா செய்தார். அன்று மாலை ராஜப் பிரதிநிதியால் அளிக்கப்பட்ட ஓர் விருந்துக்குப் போய் வந்தவர் மனதை மாற்றி ராஜீநாமாவை வாபஸ் வாங்கிக் கொண்டார். அமிருதசரவில் ராஜப்பிரதிநிதியைக் காக்க விரைந்தார். இவர் சேவையை மறக்கவொண்ணாத செம்ஸ் போர்டு பிரபு, ஆறுமாத காலத்துக்குள்ளாகவே, (June 1920) இவரைத் தன் நிர்வாக சபை அங்கத்தினராக நியமித் துத் தன் நன்றியறிதலை வெளியிட்டார்.

இந்த மகாசபைத் தீர்மானம் ஒன்றில், பாஞ்சாலத் தில் ராணுவ அமுலால் ஜனங்களுக்கு ஏற்பட்ட பொருள் நஷ்டம், உயிர்ச் சேதம் இவற்றிற்குச் சர்க்கார் தகுந்த முறையில் ஈடு செய்யவேண்டும் எனவும் கோரப்பட்டது. இந்தியப் பிரஜைகளுக்குப் பூர்வாங்கமான உரிமைகள் எல்லாம் வழங்கப்படவேண்டுமென பழுத்த கிழவரான ஸ்ரீ ஸி. விஜயராகவாச்சாரியார் இரவு பத்து மணிக்கு ஓர் தீர்மானம் நிறைவேற்றி வைத்தார். பத்திரிகைகளுக் கிடப்பட்ட வாய்ப்பூட்டுச் சட்டமும், ரௌலட்டுச் சட்ட

மும் ரத்து செய்யப்படவேண்டுமென மகாசபை சர்க்காரைக் கேட்டுக்கொண்டது. அந்தமான் சிறைகளில் வாடிக்கொண்டிருக்கும் பற்பல ராஜீயக் கைதிகள் விடுதலை செய்யப்பட வேண்டுமெனவும் மகாசபை கோரியது.

பம்பாய் பத்திரிகாசிரியரான பி. ஜி. ஹார்னிமன்மீது விதித்த தேசப் பிரஷ்டத் தடை நீக்கப்படல் வேண்டுமென ஓர் தீர்மானம் இந்த மகாசபையில் நிறைவேற்றப்பட்டது. இந்த மகாநாட்டில் தலைமை வகித்த பண்டித மோதிலால் மிகுந்த தேக சிரமத்துக்காளாயினர். விஷயாலோசனைக் கமிட்டியாரின் கூட்டங்கள் இரவு முழுதும், விடியும் வரை நடந்தன. பாஞ்சால நாட்டிற்குப் புதிதான பல பிரதிநிதிகள் குளிர் தாங்கமாட்டாமல் தவித்தனர். இவை சில்லரைக் கஷ்டங்கள்.

மகாசபை கூடுவதற்கு முதல் நாளன்றுதான் அரசர் பெருமான் ராஜீயக் கைதிகள் சிலரை விடுவிக்கப்போவதாகப் பிரகடனம் வெளியிடப்பட்டது. உடனே அலி சகோதரர்கள் சிறையினின்றும் வெளியேற்றப்பட்டு அமிருதசரஸை அடைந்தனர். இவ்விரு சம்பவங்களும் மகா நாட்டில் கூடியிருந்த ஜனங்களிடை சொல்லொணுக் குதூகலத்தை உண்டாக்கியது. அலி சகோதரர்கள் பிரும்மாண்டமான ஜனங்களால் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்பட்டனர்.

இந்தக் கூட்டம் நடந்த காலை இன்னெரு சம்பவம் குறிப்பிடத்தக்கது. பாஞ்சால விசாரணைகள் சம்பந்தமாக ரெஜினல்டு நெவில்லி என்ற ஓர் சீமை வக்கீல் அப்பொழுது அமிருதசரஸில் வந்து தங்கி இருந்தார். அவர் தங்கியிருந்த அறைகளில் ஒரு நள்ளிரவில் சுமார் இருபது காலி சோல்ஜர்கள் புகுந்து "வெள்ளையனை நீ எப்படிக் கறுப்பர்களுக்குப் பரிந்து, ஜெனரல் டயருக்கு எதிரே வேலைசெய்யத் தொடங்கினுய்" என்று கேட்டார்களாம். ஒரு திமிர்பிடித்த சோல்ஜர் "இந்தக் கறுப்பர் கூட்டத்தை விழுந்து விழுந்து சுட்டவர்களில் நானொருவன்" என்றுனும். இந்தக் காலிகள் பின்னர் ரெஜினல்டு நெவில்லிடம் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும்படி உத்திரவிடப்பட்டனர் என்று அறிகிறோம்.

---

# மூன்றாம் பாகம்

## ஒத்துழையாமை உதயம் (1920)

### அத்தியாயம் 1

1920-ம் வருஷம்: இந்தியாவின் சரித்திரத்தில் இது மிகவும் முக்கியமான காலம்—மக்களின் மனத்திலே அலை வீசி நின்ற ராஜீய அபிலாஷைகள் ஒரு முகமாகப் பொங்கி எழுந்து நாட்டை உலகமே என்றும் காணாத ஓர் பெரிய இயக்கத்தில் ஆழ்த்தியது இந்த வருஷத்தில்தான். இந்திய ராஜீய வானில் 'காந்தி' என்னும் சூரியன் தனது பூரண ஜோதியுடன் தோன்றி ஒத்துழையாமைக் கிரணங்களை எங்கும் வீசி நின்றது இந்த ஆண்டில்தான். இம்மகா புருஷனின் சத்தியாவதாரத்தின் ஆத்ம சக்தியையும், அற்புத ஆற்றல்களையும் உலகோர் கண்டு, பிரமித்து நின்றது இக் காலத்தில்தான். எனவே இவ்வருஷம் இந்திய சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படுமென்பது நிச்சயம்.

1920-ம் வருஷம் இந்திய ராஜீயக் கக்ஷிகளுள் பிரிவினையையும், வேறுபாட்டையும் கண்டது. லிபரல் கக்ஷியினர் ஏற்கனவே காங்கிரஸினின்றும் அறுத்துக்கொண்டு வெளியேறி விட்டனர். 1919-ம் வருஷம் டிஸம்பர் மாதத்தில் இவர்கள் கல்கத்தாவில் ஒன்று கூடினர். காங்கிரஸுக்குள்ளேயே அடுத்தடுத்து நிகழ்ந்த நிகழ்ச்சிகளால் பாக்கியிருந்த காங்கிரஸ் வாதிகளுக்குள் மேலும் பிளவேற்பட்டது. இத்தகைய சந்தர்ப்பத்தில் அமிருதசரஸ் நகரிலே காங்கிரஸ் மகாசபை கூடிய காலையில் சர்க்காருடன் ஒத்துழைப்பதா அல்லது அவர்களை எதிர்த்துப் போராடுவதா என்பதே முக்கிய பிரச்னையாக விருந்தது. புதிய ஆண்டு பிறந்து, சில மாதங்கள் கழிந்ததும் அமிருதசரஸில் காணப்பட்ட கட்சிகளின் நிலைமையே தலைகீழாக மாறிவிட்டது. தாம் ஒத்துழையாமைக் கொடியின்கீழ்தான் நிற்கமுடியுமென காந்திஜி திண்

ணமாகவும், திட்டமாகவும் அறிவித்தார். அமிருதசரஸில் அவருடைய ஒத்துழைப்புக் கொள்கையை எதிர்த்தவர்கள், மீண்டும் அவருக்கு எதிராகவே நின்றார்கள். திடீரென இத்தகைய மாறுதல்கள் உண்டாவதற்குக் காரணம் யாது? உண்மை என்னவெனில் பஞ்சாபில் நடந்த அட்டூழியங்களும், கிலாபத் விஷயத்தில் இழைக்கப்பட்ட அநீதியும் மக்களின் மனத்திலே கொதிப்பை யுண்டுபண்ணி யிருந்தது தான். இவை காரணமாக மகாஜனங்களுக் கேற்பட்டிருந்த மனவெரிச்சல் கொழுந்துவிட்டெரிய ஆரம்பித்தது.

## கிலாபத் இயக்கத் தோற்றம்

1920-ம் வருஷத்தில் நடந்த சம்பவங்களுக்கு நடு நாயகமாக விளங்கியது கிலாபத் இயக்கம்தான். இம் மகத்தான இயக்கம் தோன்றிய வகையை அறிந்துகொள்ள வேண்டியது அத்யாவசியமாகும். அதன் சுருக்கம் இது தான் :

உலகத்தையே எல்லையில்லாப் பேராபத்தில் ஆழ்த்திய மகா யுத்தத்தின்பொழுது போர்முனையில் நின்று யுத்தம் புரிய பிரிட்டிஷ் துரைத்தனத்துக்கு இந்தியாவிலிருந்து ஆட்கள் வேண்டி யிருந்தது. அந் நிலையில் அச் சமயத்தில் இங்கிலாந்தின் பிரதம மந்திரியாக இருந்தவர் மிஸ்டர் லாயிட் ஜார்ஜ் என்பவர். இவர் இந்திய முஸ்லீம்களின் ஆதரவையும், உதவியையும் பெற வேண்டி அவர்களுக்குச் சில வாக்குத்தத்தங்கள் கொடுத்தார் ; இவ் வாக்குறுதிகளைப் பூரணமாக நம்பி இந்திய முஸ்லீம்களில் பெருந் தொகையினர் ஐரோப்பாவிற்குச் சென்று, யுத்தத்திலிறங்கி, தங்களது இஸ்லாமிய சகோதரர்களையே எதிர்த்துப் போராடினர்.

"காரியம் ஆகும் வரையில் காலைப்பிடித்தல் ; காரியம் ஆன பின்பு கழுத்தைப் பிடித்தல்" என்பதாகத் தமிழிலே சொல்வதுண்டு ; இதைப் பரிபூரணமாக நிறைவேற்றி வைப்பதில் பிரிட்டிஷாரை மிஞ்சுபவர் யாருமில்லை. சண்டை முடிந்தது ; சமாதானமும் ஏற்பட்டது. ஆனால் துரைத்தனத்தின் வாக்குறுதிகள் மட்டும் காற்றில் பறக்க விடப்பட்டன. அவற்றை நிறைவேற்றி வைக்க முடியாது எனப் பகிரங்கமாகச் சொல்லிவிடுவது ஒரு தினுசாகும். ஆனால்

துரைத்தனம் இதற்குத் தயாராக வில்லை ; எனவே தான் கொடுத்த வாக்குறுதிகளுக்கு அது புதிய வியாக்கியானம் செய்ய வாரம்பித்தது. பிரிட்டிஷ் பிரதம மந்திரியின் இந்த நம்பிக்கைத் துரோகமே இந்திய முஸ்லீம்களின் மனதிலே ஏற்பட்ட ஆத்திரத்திற்கும், கொதிப்பிற்கும் காரணம்.

"ஆசியா மைனரிலும், திரேஸ் என்னும் பிரதேசத்திலும் வசிப்பவர்களில் பெரும்பான்மையோர் துருக்கியர் ; துருக்கி தேசத்தாரிடமிருந்து செழிப்பு மிருந்த இவ் விரு பிரதேசங்களையும் பிடுங்கிக் கொள்வதற்காக நாங்கள் போரிடவில்லை" என்பதுதான் லாயிட் ஜார்ஜ் வெளியிட்ட வாக்குறுதிகள். இவ்வாக்குறுதிகள்தான் பின்னர் காலின் கீழ் போட்டு மிதித்துத் துவைக்கப்பட்டன. இதனினும் கொடுமை வேறுண்டோ ?

முஸ்லீம் சமூகத்தினர் கோரியதென்ன ? மெஸபடோமியா, அரேபியா, ஸிரியா, பாலஸ்தீனம் இந்த தேசங்களும், இவற்றின்கண் அமைந்துள்ள புண்ணிய ஸ்தலங்களும் உள்பட் ஜஸரத்-உல்-ஆரப் என்ற பெயருடன் விளங்கும் பிரதேசம் பூராவும், முகமதிய மத குருவான காலிபாவின் அதிகாரத்தின் கீழேயே எப்பொழுதும் இருக்கவேண்டுமென்பது. ஆனால் உடன்படிக்கையின் நிபந்தனைகளின்படி இந்தத் தேசங்கள் துருக்கியின் வசமிருந்து பறிக்கப்பட்டன. திரேஸ் தேசம் கிரேக்கருக்கு வழங்கப்பட்டது. துருக்கி ராஜ்யத்திற்கு சொந்தமான ஆசியாவின் பாகங்களைக் கிரேட் பிரிட்டனும், பிரான்ஸும் தமக்குள் பங்கிட்டுக்கொண்டன. நேச தேசங்களெல்லாம் சேர்ந்து ஒரு அதிகார கமிஷனை நியமித்தன ; உண்மையில் இவர்களே துருக்கி ராஜ்ஜியத்தை ஆளுபவர்களாக விருந்தனர் ; சுல்தான் ஒரு கைதியின் நிலைமையையே அனுபவிக்கலானார்.

இவ்வாறாக பிரிட்டிஷ் பிரதம மந்திரியின் பெருந்துரோகம் இந்தியாவிலுள்ள ஒவ்வொரு முஸ்லீமின் ஆத்திரத்தையும் கிளப்பிவிட்டது ; முஸ்லீம்களுக்கு இழைக்கப்பட்ட அநீதியைத் தங்களுக்கும் இழைக்கப் பட்டதாகவே மற்ற சமூகத்தினரும் உணர்ந்து, கிளர்ந்தெழுந்தனர். அமிருதசரஸில் காங்கிரஸ் மகாசபை கூடிய காலையில் காங்கிரஸ் தலைவர்களில் பிரமுகர்களும்,

முஸ்லீம் தலைவர்களில் பிரபலஸ்தகர்களும் ஒன்று சேர்ந்து கிலாபத் அநீதியால் ஏற்பட்டுள்ள நிலைமையை விவாதித்தனர்; கடைசியாக மகாத்மா காந்தியின் தலைமையின் கீழ் கிலாபத் இயக்கத்தை தீவிரமாக நடத்துவதென முடிவு செய்யப்பட்டது. கிலாபத் இயக்கம் பிறந்த வகை இதுவே.

## அதிருப்திகரமான பதில்

இதற்குமேல் முஸ்லீம் தலைவர்கள் மேற்படி தீர்மானத்தை நிறைவேற்றி வைக்கும் வேலையில் ஈடுபடலாயினர். 1920-ம் வருஷம் ஜனவரி மாத மத்தியில் அலி சகோதரர்களான மௌலானா முகம்மதலியும், மௌலானா ஷௌகத் அலியும் ஒன்று சேர்ந்து தேச மக்களுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்தனர். அதே மாதம் 19-ந் தேதியன்று டாக்டர் அன்ஸாரியின் தலைமையின்கீழ் கிலாபத் தூது கோஷ்டி ஒன்று இராஜப்பிரதிநிதியைப் பேட்டி கண்டு துருக்கி ராஜ்ஜியத்தைப் பாதுகாக்கவேண்டிய அவசியத்தைப்பற்றியும், சுல்தானே காலிபாவாக இருக்க வேண்டுமென்பதைப்பற்றியும் வலியுறுத்தித் திரும்பியது. தூது கோஷ்டியினர் இராஜப்பிரதிநிதிக்கு கிலாபத் பிரச்னையை நன்கு விளக்கிக் காட்டினர். கிலாபத் என்பது தங்கள் ஆத்மார்த்த ஸ்தாபனம் என்பதையும் அறிவுறுத்தினர். இஸ்லாமியா மதத்தின் அடிப்படையே 'கிலாபத்'தான் என்பதையும் எடுத்துக் காட்டினர். ஆனால் இராஜப்பிரதிநிதியோ எல்லா விஷயங்களையும் ஒரு காதால் வாங்கிக்கொண்டு மற்றொரு காதால் விட்டுவிட்டார். தூது கோஷ்டியினருக்கு அவரிடமிருந்து மிகவும் அதிருப்திகரமான பதிலே கிடைத்தது.

அதன்பேரில் முஸ்லீம் தலைவர்கள் அனைவரும் ஒன்று சேர்ந்து ஒரு அறிக்கையை வெளியிட்டனர்: "சமாதான உடன்படிக்கைகள் முஸ்லீம் மதத்தையும், முஸ்லீம்களின் மத உணர்ச்சியையும் பாதிப்பவையாக விருந்தால் முஸ்லீம் ராஜ பக்திக்குக் கட்டாயம் பங்கம் நேரிடுமென்றும், அரேபியாவும், இதர இஸ்லாமிய புண்ணிய ஸ்தலங்களும் காலிபாவின் அதிகாரத்துக்கே உட்பட்டிருக்க வேண்டுமென்றும், மிஸ்டர் லாயிட் ஜார்ஜ் கொடுத்த வாக்குறுதிகள் நிறைவேற்றி வைக்கப்பட வேண்டுமென்றும் கோரப்பட்டது."

நிற்க, 1920-ம் வருஷம், பிப்ரவரி மாதத்தில், பம்பாய் நகரில் மூன்ருவது கிலாபத் மகாநாடு கூடியது. இங்கிலாந்திற்குச் செல்லவிருந்த தூதுகோஷ்டியில் தங்களுக்குப் பூரண நம்பிக்கை யுண்டென்பதை எடுத்துக் காட்டி, முஸ்லீம்கள் ஒரு முக்கியமான அறிக்கையையும் தயாரித்தனர்: "எங்கள் கோரிக்கைகளுக்கு நீங்கள் இணங்க மறுத்தால் எங்களது ஆழ்ந்த மதவுணர்ச்சியையே நீங்கள் அவமதிப்பதாக ஏற்படும்; தவிர அவ்வப்பொழுது பொறுப்பு வாய்ந்த அதிகாரிகள் கொடுத்து வந்த வாக்குறுதிகளையும் நீங்கள் மீறுவதாகும்; தவருன வழியில் நீங்கள் முடிவு செய்தால் அதனுல் கடுமையான விளைவுகள் ஏற்படுமென்பதை நாங்கள் உங்களுக்கு எச்சரிக்கிருேம்; இதில் நீங்கள் உணரவேண்டிய முக்கியமான விஷயம் ஒன்றிருக்கிறது; அதாவது எமது கோரிக்கைகள் விஷயத்தில் நாங்கள் மட்டும் தனியே நிற்கவில்லை; ஹிந்து சமூகம் பூராவுமே எங்களுக்குப் பக்கபலமாக இருக்கிறதென்பதை நீங்கள் அறியவேண்டும்" என்று அவ்வறிக்கை பேசிற்று.

என்ன செய்தும் நிலைமையில் திருப்திகரமான மாறுதல் ஏற்படவேயில்லை. பிரிட்டிஷாரின் மனப்பான்மை ஒரே குரங்குப்பிடியாகவே இருந்தது. எனவே பிப்ரவரி, மார்ச்சு மாதங்களில் கிலாபத் பிரச்னையே இந்திய ராஜீய வானில் பிரகாசித்துக்கொண்டிருந்தது.

இங்கிலாந்திற்குச் செல்ல விருந்த முஸ்லீம் தூதுகோஷ்டியும் புறப்பட்டது; மௌலான முகமதலியே இக்கோஷ்டியின் தலைவராக விருந்தார். இங்கிலாந்தில் இந்தியா மந்திரியின் சார்பாக மிஸ்டர் பிஷர் என்பார் தூதுகோஷ்டியினரை வரவேற்ருர்; முஸ்லீம் பிரமுகர்கள் பிரதம மந்திரியையும் கண்டு பேசினர். சமாதான மகாநாட்டின் பிரதம சபை முன்பு தங்களது மனக்கருத்தை வெளியிட அவர்கள் அனுமதி கோரினர்; ஆனுல் அனுமதி மறுக்கப்பட்டுவிட்டது.

முஸ்லீம்களின் துணை வேண்டியிருந்த சமயத்தில் அவர்களுக்கு வாக்குறுதிகள் கொடுத்து, பின்னர் அவற்றைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்தெறிந்தாரே அந்த 'மகா புருஷர்' மிஸ்டர் லாயிட் ஜார்ஜ் மேற்படி தூதுகோஷ்டியினருக்கு என்ன பதில் சொன்ஞர் தெரியுமா? மார்ச்சு மாதம் 17-ந் தேதியன்று அவர் இது விஷயமாக வாய்திறந்து

கிறிஸ்தவ தேசங்கள் விஷயத்தில் அனுஷ்டிக்கப்படும் கொள்கைகள்தான் இஸ்லாமிய தேசங்கள் விஷயத்திலும் கையாளப்படுமென்றும், இத் துறையில் இரண்டிற்கும் வித்தியாசம் காட்டுவதற்கில்லையென்றும், துருக்கி தேசங்களின்மீது துருக்கி ஆதிக்கம் செலுத்த தற்காலிகமாக அனுமதிக்கப்படுமேயொழிய துருக்கிக்குச் சொந்தமில்லாத அவற்றைத் தன் வசம் வைத்துக் கொள்ள அது அனுமதிக்கப்படாதென்றும் சித்தாந்தப் படுத்தினர். இது இந்திய முஸ்லீம்களின் கிலாபத் உணர்ச்சியையே வேருடன் பிடுங்கி எறிவதாக விருந்தது.

அதன்பேரில் மார்ச்சு மாதம் 19-ந் தேதி நாடெங்கும் தேசிய துக்க தினமாகக் கொண்டாடப்பட வேண்டுமென முடிவு செய்யப்பட்டது. அன்று தேச மக்கள் உபவாசமிருந்து, பிரார்த்தனை செய்யவேண்டுமென்றும், எல்லா அலுவல்களையும் நிறுத்தி ஹர்த்தால் அனுஷ்டிக்க வேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளப்பட்டது. மகாத்மா காந்தி மீண்டும் வெளித் தோற்றினர்; துருக்கியுடன் செய்து கொள்ளப்படும் சமாதானம் இந்திய முஸ்லீம்களைத் திருப்தி செய்யாவிடில் தாம் ஒத்துழையா இயக்கத்தைத் தொடங்க நேரிடுமென அவர் பகிரங்கப்படுத்தினர். சமாதான உடன்படிக்கையின் நிபந்தனைகள் முஸ்லீம் சமூகத்தினரால் ஏற்கத் தகாதவையாக விருந்தால் பிரிட்டிஷ் சிம்மாசனத்திடம் தாங்கள் காட்டிவரும் ராஜபக்தியை அறுத்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்த மேற்படுமென்பதாக மௌலானா ஷௌகத் அலி மார்ச்சு 19-ந் தேதிய வைபவங்களில் தீர்மானிக்க வேண்டுமென்றார். இத் தீர்மானம் காரணமாக, 19-ந் தேதியன்று நடைபெறும் கொண்டாட்டங்களில் கவர்ன்மெண்டு ஊழியர்கள் கலந்து கொள்வது சாத்தியமில்லை என இந்தியா கவர்ன்மெண்டு தீர்மானித்தது. 10-ந் தேதியன்று வெளியான ஒரு அறிக்கையில் மகாத்மா காந்தி தமது கருத்துகளையும், திட்டங்களையும் விஸ்தரித்தார். அவர் முதன்முதலாக ஒத்துழையாமையைப்பற்றிப் பிரஸ்தாபித்தது இந்த அறிக்கையில் தான். அதன் விவரம் பின்வருமாறு :—

"முஸ்லீம்களின் கோரிக்கைகளுக்குச் சர்க்கார் இணங்காவிட்டால் நாம் என்ன செய்ய வேண்டுமென்பதைப்பற்றி ஒரு வார்த்தை. பகிரங்கமாகவோ அல்லது ரகசியமாகவோ பலாத்கார முறைகளை அனுஷ்டித்து யுத்தம் புரிவது காட்டுமிராண்டிகள்

கையாளும் வழியாகும். நமது தேசம் தற்போதுள்ள நிலைமையில் அது சாத்தியமில்லை ; எனவே இந்த முறையைக் கைவிட்டுவிட வேண்டும். ஹிம்ஸை முறையை யொழித்துவிட்டு, அஹிம்ஸை நெறியில் நின்று போராட தேசம் தீர்மானிப்பதால் பிறக்கும் அற்புத சக்தி இணையற்றதாகும். சாத்தியமில்லை என்ற காரணத்தினுலேயே நான் இன்று ஹிம்சை முறையை கைவிட்டு விடும்படி சொல்கிறேன். எனவே நமக்குள்ள ஒரே வழி ஒத்துழையாமைதான். இது மிகவும் பரிசுத்தமானது ; விசேஷ பலனும் தரவல்லது. ஆனுல் இதன் பூராபலனையும் நாம் காணவேண்டுமானுல் துளிகூட ஹிம்ஸை கலக்காமல் பார்த்துக் கொள்ளவேண்டும். ஒருவருடைய மதவுணர்ச்சி தாக்கப்படுகையில் ஒத்துழையா தர்மத்தை மேற்கொள்வது அவரது கடமையாகும். நம்முடைய உரிமைகளில் தலையிட்டு, அவற்றை நியாயத்திற்கு விரோதமாக பறித்துக் கொள்கையில் அதற்கு நாம் சிறிதும் அசைந்து கொடுக்காமல், உட்பட்டு விடுவோமென இங்கிலாந்து எதிர்பார்ப்பதற்கில்லை. முஸல்மான்களுக்கோ இத்தகைய தலையீடு அவர்களது வாழ்வையே தாக்குவதாகும். ஆகவே நமது போரை நாம் மேலும் கிழுமாக ஆரம்பிக்க வேண்டும் ; அதாவது கௌரவத்தை உத்தேசித்தோ அல்லது ஊதியம் பெற்றோ உயர்ந்த பதவிகளை வகித்து வருபவர்கள் அவைகளை விட்டொழிக்க வேண்டும், சர்க்காரிடம் கீழ்த்தரவகையில் வேலைகளை பார்ப்பவர்களும் தங்கள் தங்கள் வேலைகளை ராஜிநாமா செய்துவிடவேண்டும். தனி நபர்களிடம் உத்தியோகம் பார்ப்பவர்கள் தங்கள் வேலைகளை விடவேண்டியதில்லை. ஏனெனில் இது ஒத்துழையாமயின் ஓர் அம்சமல்ல. ஒத்துழையாமையை மேற்கொள்ள மறுப்பவர்களிடையே நாம் சமூக பகிஷ்காரத்தை அனுஷ்டிக்க வேண்டுமென்பதை நான் அங்கீகரிக்க முடியாது. ஜனங்கள் எவ்வித நிர்பந்தமுமில்லாமல் தாமே ஒத்துழையா தர்மத்திலிறங்குவதுதான் அவர்களது உணர்ச்சியையும், அதிருப்தியையும் எடுத்துக் காட்டும் அறிகுறியாக விளங்கும். ரர்ணுவ வீரர்களைத் தங்கள் ஊழியத்தை மறுத்துவிடும்படி சொல்வதற்கு இது காலமல்ல. இது நமது யுத்த முறையில் கடைசி ஆயுதமேயொழிய முதல் ஆயுதமல்ல. இராஜப்பிரதிநிதியும் இந்தியா மந்திரியும், பிரதம மந்திரியும் அத்தகைய நிர்பந்தத்திற்கு நம்மை வெருட்டினுல் அப்பொழுது நாம அந்த முறையைக் கையாளவேண்டியதுதான். தவிர வெகு ஜாக்கிரதையுடன், அவ்வப்பொழுது யோசித்து யோசித்தே நாம் ஒத்துழையாமையை அனுஷ்டிக்கவேண்டும். எவ்வளவு உக்கிரமான ஆத்திரமூட்டக்கூடிய நிலைமை ஏற்படினும் நாம் நமது சாந்தத்தையும், பொறுமையையும், அடக்கத்தையும் இழக்காமல் முன்னணியில் செல்லவேண்டும்.”

மகாத்மாவின் மதப்பற்றிலும், சர்வத்தையும் பரித்தியாகம் செய்துவிடவேண்டுமென்ற அவரது கொள்கைகளிலும் நம்பிக்கை கொண்டு, அவரது பரிசுத்த வாழ்க்கை

யையும், அற்புதமான துறவையும் போற்றிப் புகழ்ந்த ஜனங்கள், ஆத்ம சக்தியை அடிப்படையாகக் கொண்டு அவரது ஒத்துழையா தர்மத்தை அங்கீகரிக்கச் சற்றும் தயங்கவில்லை. தேசீயப் பெருமை குன்றி, கௌரவத்திற்கு அவமதிப்பு ஏற்பட்டு மனம் புண்படக் கிடந்த தேசமக்களுக்கு அவரே "சமய சஞ்சீவி" யாக விளங்கினார். அவரது வார்த்தைகளை மகாஜனங்கள் தேவ வாக்காகக் கொண்டாடினர்.

ஆனால் லோகமான்ய திலகர் முதன் முதலில் காந்திஜியின் அபிப்பிராயங்களை ஏற்கவில்லை. திலகர் அபார அறிவு படைத்தவர்; அவரது மனோவலிமையோ உலகத்தையும் எதிர்த்து நிற்கவல்லது; காந்தியோ ஆத்ம நெறியில் தோய்ந்தவர்; ஆத்ம சக்தியை வளர்த்து, அதை ஒரு தர்மமாக அநுஷ்டிப்பவர். இத்தகைய இரு மகான்களின் நோக்கங்களும் மாறுபட்டிருந்தன.

இச் சமயத்தில், பஞ்சாப் அட்டூழியங்களைப்பற்றிய விசாரணை நடத்திய தேசத் தலைவர்களின் யாதாஸ்து வெளிவந்தது (25—3—20). பஞ்சாபில் நடந்த அதிக்கிரமங்களைப்பற்றி உத்தியோக தோரணையில் விசாரணையை நடத்திய ஹண்டர் கமிஷன், காங்கிரஸ் சப் கமிட்டியின் சாக்ஷியத்தைப் பரிசீலனை செய்ய மறுத்ததே மேற்படி உத்தியோகப் பற்றற்ற யாதாஸ்து தயாரிக்கப்பட்டதற்கான காரணமாகும். காங்கிரஸ் யாதாஸ்து பூராவும் சர். மைக்கேல் ஓட்வியரின் அட்டூழியங்களை அலசிக் காட்டும் படமாக விருந்தது. அவரிடம் வெறுப்புக் காட்டாத இந்தியரில்லை. படித்த வகுப்பினரை அவர் துச்சமாக எண்ணியதும், அதிக்கிரமமான முறைகளை அவர் கையாண்டதும், வெகு ஜன வாக்கை அவர் காலின்கீழ்ப் போட்டு மிதித்துத் துவைத்ததும் பொதுமக்களிடையே அவர்பால் அளவற்ற துவேஷத்தை உண்டுபண்ணின. 1919-ம் ஆண்டில் பஞ்சாபில் நடந்த சம்பவங்கள் ஏப்ரல் மாதம் 6-ந் தேதி ஆரம்பமாகி, 13-ந் தேதி ஜலியன்வாலா படுகொலையில் முடிந்ததை அனைவரும் அறிவர். ஆகவே 1920-ம் வருஷத்தில், அதே காலம்—அதாவது ஏப்ரல் 6-ந் தேதி முதல் 13-ந் தேதி வரையில்—பாரத தேசம் முழுவதும் தேசீய வாரமாகக் கொண்டாடப்பட்டது. அதுமுதல் வருஷா வருஷம்

இந்தத் தேசிய வாரம் கொண்டாடப்பட்டு வருகிறது. துருக்கியுடன் செய்துகொண்ட சமாதான உடன்படிக்கைகளின் விவரம் மே மாதத்தில் பிரசுரமாகியது. ஏற்கனவே நாட்டில் எரிந்துகொண்டிருந்த "கிலாபத் கிளர்ச்சி" என்னும் தீ இதனால் இன்னும் அதிகமாகக் கொழுந்துவிட்டெரிய ஆரம்பித்தது. மேற்படி உடன்படிக்கையின் நிபந்தனைகளை மாற்றும்பொருட்டுத் தாம் ஒத்துழையா இயக்கத்தை ஆரம்பிக்க முடிவு செய்துவிட்டதாக மகாத்மாஜி பறை சாற்றினார். லோகமான்யர் இவ்வியக்கத்தை முழு மனதுடன் ஆதரிக்கவில்லை; எனினும் அவர் அதை எதிர்த்து நிற்கவுமில்லை.

இச்சமயத்தில்தான் மகாத்மா காந்தி அகில இந்திய சுய ஆட்சிச் சங்கத்தின் (All-India Home Rule League) தலைமைப் பதவியை ஏற்றுக்கொண்டார். இது சம்பந்தமாகத் தமது நிலையை விளக்கி அவர் ஒரு அறிக்கையை வெளியிட்டார்; இதே தருணத்தில், புதிய சீர்திருத்தங்களைப்பற்றிய தமது கொள்கையை விளக்கி திலக மகான் ஒரு அறிக்கையை வெளியிட்டார். ஏககாலத்தில் தோன்றிய இவ்விரண்டு அறிக்கைகளும், அவற்றின் கர்த்தாக்களான இரண்டு தலைவர்களின் கருத்துக்களையும் நிதர்சனமாக்கின.

## மகாத்மாவின் விளக்கம்

தமது அறிக்கையில் மகாத்மாஜி குறிப்பிட்டதாவது:—

"அகில இந்திய சுயாட்சிச் சங்கம் என்பது பூராவும் ராஜீய நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டதோர் ஸ்தாபனமாகும். இதை அது பட்டவர்த்தனமாகத் தெரிவித்திருக்கிறது. இதில் நான் பங்கெடுத்துக்கொள்வது எனது வாழ்க்கை முறைக்கு முற்றிலும் மாறுபட்டதுதான். ஆனால் உள்ள நிலைமையைப்பற்றி நான் நண்பர்களுடன் தீவிரமாகவும், தீர்க்கமாகவும் கலந்து ஆலோசித்தேன்; அதன் பிறகுதான் நான் மேற்படி சங்கத்தில் சேர்ந்து, அதன் தலைமைப் பதவியை ஏற்றுக்கொண்டேன். எனது நண்பர்களில் சிலர் நான் எந்த ராஜீய ஸ்தாபனத்திலும் சேரக்கூடாது என்று சொன்னார்கள்; அப்படிச் செய்தால் எனக்குத் தற்போது ஏற்பட்டுள்ள கௌரவமே போய்விடுமென அவர்கள் அபிப்பிராயப்பட்டனர். இந்த எச்சரிக்கையையும் நான் மனதில் கொண்டேன். ஆனால் அதேசமயத்தில் நான் எனது நிலைமையைப்பற்றி ஆர, அமர யோசித்தேன்; மேற்படி சங்கம்

என்னுடைய தற்போதைய அபிப்பிராயங்களுடன் என்னை ஏற்றுக் கொள்ளுமாயின் பிறகு என்னுடைய நோக்கங்களை நிறைவேற்று வதற்கு அந்த ஸ்தாபனத்தை உபயோகித்துக்கொள்ளக்கூடிய ஒரு அரிய சந்தர்ப்பத்தை இழக்காமல் அதைப் பயன்படுத்திக்கொள் வது என்னுடைய கடமை யாகின்றது. இச்சங்கத்தில் சேருமுன் நான் வெளிமாகாணங்களிலுள்ள பல பெரியார்களின் அபிப்பிராயத் தையும் கேட்டு அறிந்துகொள்ள முயன்றேன். சுதேசி அபி விருத்தி, ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை—முக்கியமாக கிலாபத் பிரச்னை—ஹிந்துஸ்தானிபாஷையைத்தேசபாஷையாகச் செய்தல், பாஷாவாரியாக மாகாணங்களைப் பிரித்து அமைத்தல், ஆகிய இவ் வேலைகளைச் செய்யவேண்டுமென்ற அவாவே என் மனதில் பெரிதும் குடிகொண்டிருந்தது. இவ்வேலைகளில் சங்க அங்கத் தினரின் ஆதரவை நான் பெற்றுவிட்டால் பிறகு சங்கத்தை எனது காரிய சித்திக்காக உபயோகித்துக்கொள்ள முடியும் அல்லவா ?

தேசியப் புனருத்தாரண வேலையில் சர்க்கார் வழங்கும் சீர் திருத்தங்கள் அவ்வளவு முக்கியமானவையல்ல என்பதே எனது பகிரங்கமான கருத்து. ஏனெனில் நான் மேற்கூறிய வேலைகளைத் தேசமக்கள் ஊக்கத்துடன் நிறைவேற்றி வைக்கச் செய்யின் தீவிர வாதிகளைக்கூடத் திருப்தி செய்விக்க வல்ல சீர்திருத்தங்கள் அவற்றின் பலனாகக் கிடைக்குமென்பது எனது உறுதி. மேற் கண்ட தேச நிர்மாண வேலைகளை நாம் எவ்வளவு துரிதமாக நிறை வேற்றி வைக்கிறோமோ அவ்வளவு விரைவில் நாம் சுயாட்சி யைப் பெறமுடியுமாதலால்தான் நான் இந்த வேலைகளை தேசியத் திட்டத்தின் முன்னணியில் வைத்திருக்கிறேன். அகில இந்திய சுயாட்சிச் சங்கத்தை நான் ஒரு கக்ஷி ஸ்தாபனமாகக் கொள்ள முடியாது. நான் எந்தக் கக்ஷியையும் சேர்ந்தவனல்ல; எந்தக் கக்ஷியிலும் சேரவும் எனக்கு உத்தேசமில்லை. சங்கத்தின் அமைப்புப்படி பார்த்தால் அது காங்கிரஸுக்கு உதவிபுரிய வேண்டும்; ஆனால் காங்கிரஸை நான் ஓர் கக்ஷி ஸ்தாபனமாகக் கருதவில்லை. ஏனெனில் பிரிட்டிஷ் பார்லிமெண்டில் எத்தனையோ கக்ஷிகளிருந்தாலும் அது ஒரு கக்ஷி ஸ்தாபனமாகாது; சில சமயங் களில் ஏதாவதொரு கக்ஷி பார்லிமெண்டில் அதிகாரம் வகித் திருக்கிறது; எனினும் அதை ஒருகக்ஷியின் ஸ்தாபனமாகக் கொள்ள முடியாது. அதே மாதிரிதான் காங்கிரஸும். எல்லாக் கக்ஷிகளும் காங்கிரஸை ஒரு மகத்தான தேசிய ஸ்தாபனமாகக் கொண்டாடும் என்ற திடமான நம்பிக்கை எனக்குண்டு; காங்கிரஸ் மேடையி லிருந்துகொண்டு எல்லாக் கக்ஷிகளும், அதன் கொள்கையை பரப்புவதற்காக தேசமக்களின் ஆதரவைத் தேட முற்படலாம் ஆகவே காங்கிரஸ் அதன் தேசியத் தன்மையை இழக்காத முறை யில் அதற்கு உதவிபுரிய நான் மேற்படி சங்கத்தின் கொள்கையை விரிவுபடுத்த முயல்வேன்.

இவ்வளவும் சொல்லியான பிறகு நான் அனுஷ்டிக்கப் போகும் முறைகளை எடுத்துக் கூறவேண்டாமா? எனவே அவற்றை

இப்பொழுது ஆராய்வோம். சத்திய நெறியையும் யோக்கியப் பொறுப்பையும் கடைப்பிடித்து தேசத்தின் ராஜீய வாழ்வை நடத்துவது சாத்தியமென நான் நம்புகிறேன். என்னுடைய சட்ட மறுப்பு வழிகளைச் சங்கம் பின்பற்ற வேண்டுமென நான் துளிகூட எதிர்பார்க்கவில்லை; ஆனால் தேச விமோசனத்திற்காக நாம் செய்யும் எந்தத் தொண்டிலும் சத்தியத்தையும், அஹிம்ஸையையும் அனுஷ்டிக்க வேண்டுமென நான் வற்புறுத்துவேன். அப்பொழுதுதான் சர்க்காரைப்பற்றியும், அவர்கள் எடுத்துக் கொள்ளும் நடைமுறைகளைப்பற்றியுமான அச்சம் நம்மை விட்டு ஒழியும். இதைப்பற்றி இப்பொழுது இதற்கு மேல் விரிவுபடுத்த நான் விரும்பவில்லை. ஆனால் கால ரீதியில் எல்லாப் பிரச்னைகளும் தீர்க்கப்பட்டுவிடும்."

நாம் ஏற்கனவே கூறியபடி திலகர் வெளியிட்ட அறிக்கையில் அவர் காங்கிரஸ் ஜன நாயகக் கட்சியின் கொள்கைகளையும், நோக்கங்களையும் எடுத்துக் காட்டினார். மகாத்மாவின் ஒத்துழையா இயக்கத்தைப்பற்றிய அவரது அபிப்பிராயம் குறிப்பிடத்தக்கது. அது என்னவெனில், "ஒத்துழையாத் திட்டம் என் மனதிற்குப் பிடித்துத்தானிருக்கிறது; ஆனால் ஜனங்களிட மிருந்து அந்த இயக்கத்திற்கான தியாகத்தை நாம் எதிர்பார்க்க முடியுமா என்பதில் தான் எனக்குச் சந்தேக மேற்படுகிறது. நான் அந்த இயக்கத்திற்கு எந்த விதத்திலும் தடை கல்லாக இருக்க மாட்டேன். தங்களுக்கு வெற்றி யேற்படவேண்டுமென நான் ஈசனைப் பிரார்த்திக்கிறேன். தாங்கள் வெகு ஜன ஆதரவைத் திரட்டிவிட்டால் நானும் தங்களை ஆதரித்து நிற்பேன்" என்பதுதான்.

நிற்க, இங்கிலாந்து சென்ற தூது கோஷ்டியினர் அங்கிருக்கையிலேயே, துருக்கியுடன் செய்துகொள்ளவிருந்த சமாதான உடன்படிக்கையின் நிபந்தனைகள் மே மாதம், 20-ந் தேதியன்று பகிரங்கப் படுததப்பட்டன. இந்தியாவில் இவ்வறிக்கையுடன், இராஜப்பிரதிநிதி மேற்படி நிபந்தனைகளின் விவரத்தை விளக்கி இந்திய முஸ்லீம்களுக்கு ஓர் செய்தி விடுத்தார். நிபந்தனைகள் இந்தியாவிலுள்ள முகமதியர்களின் மனதைப் புண்படுத்துமென்பதை இராஜப்பிரதிநிதியே ஒப்புக்கொண்டார். ஆயினும் துருக்கி சகோதரர்களுக்கு ஏற்பட்ட துரதிர்ஷ்டத்தை மிகுந்த சகிப்புத் தன்மையுடன் ஏற்றுக்கொள்ளுமாறு அவர் முஸ்லீம்களைக் கேட்டுக்கொண்டார். உத்தேச சமாதான நிபந்தனைகளைக் கண்டு முஸ்லீம்கள் பெரிதும் ஆத்திர

மடைந்தனர். அவர்களது மனக்கொதிப்பும் அதிகரித்தது. இதே சமயத்தில் ஹண்டர் கமிட்டி யாதாஸ்தும் பிரகாச மாகவே இந்திய மக்களின் மனக்கொதிப்பு எல்லையில்லாது அளவிற்கு மீறிவிட்டது. மகாத்மா காந்தியின் ஒத்து ழையாத் திட்டத்தைப்பற்றி ஆலோசிப்பதற்காக கிலாபத் கமிட்டி பம்பாயில் கூடியது. 1920-ம் வருஷம், மேமீ 28-ந் தேதி மேற்படி கமிட்டி மேற்படி திட்டத்தை ஏற்றுக் கொண்டது. முஸ்லீம்களுக்கு ஒத்துழையா தர்மத்தை அநுஷ்டிப்பதைவிட வேறு வழியில்லை என்றும் கமிட்டி தீர்மானித்தது. அதே மாதம் 30-ந் தேதியன்று, ஹண்டர் யாதாஸ்தைப்பற்றியும், துருக்கிச் சமாதான உடன்படிக்கை யின் நிபந்தனைகளைப்பற்றியும் விவாதிப்பதற்காக அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் கூட்டம் காசியில் நடை பெற்றது. நீண்ட நேர விவாதத்திற்குப் பின், ஒத்துழை யாமையைப்பற்றி ஆலோசிப்பதற்காக விசேஷ காங்கிர ஸைக் கூட்டுவதென முடிவு செய்யப்பட்டது.

இது ஒருபுற மிருக்க காந்திஜியின் சத்தியாக்கிரக இயக்கம் ஏற்கனவே சில இடங்களில் வெற்றியைக் கண்டிருந்தது. சத்தியத்தை அடிப்படையாகக் கொண்ட அஹிம்ஸா தர்மப் போர்முறைக்கே "சத்தியாக்கிரகம்" எனப் பெயர். முதன் முதலில் மகாத்மாஜி இப் போர் முறையைச் சம்பரானில் அநுஷ்டித்தார்.

1916-ம் வருஷத்தில் லக்ஷ்மணபுரியில் நடந்த காங் கிரஸ் மகாசபையில் சம்பரான் விவசாயிகளிடம் அநுதாபம் காட்டி ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அதன் பேரில் மகாத்மா காந்தி உண்மை விஷயங்களை நேரில் கண் டறிவதற்காக 1917-ம் வருஷம், ஏப்ரல் மாதத்தில் சம்ப ரானுக்குச் சென்றார். ஆனால் அவர் மோதிஹாரி என்ற இடத்தை அடைந்த மறுதினமே சம்பரான் ஜில்லா மாஜிஸ் திரேட்டிடமிருந்து அவருக்கு ஓர் உத்தரவு சாதரா செய் யப்பட்டது. அவர் அங்கிருந்தால் பொதுஜன அமைதிக் குக் குந்தகம் நேரிட்டு, கடுமையான கலவரங்கள் நிகழு மென்றும், இவை காரணமாக உயிர்ச்சேதமும் ஏற்படலா மென்றும், ஆதலால் அவர் அடுத்த ரெயிலிலேயே வெளி யேறிவிட வேண்டுமென்றும் அந்த நோட்டீஸில் கண்டிருந் தது. ஆனால் காந்திஜி அவ்விடத்தை விட்டுப்போக மறுத் தார். எனவே 18-ந் தேதியன்று அவர் மாஜிஸ்திரேட்

முன்பு நிறுத்தப்பட்டார்; தாம் குற்றவாளிதான் என்றும், சிறை செல்லத் தயாராக இருப்பதாகவும் மகாத்மா அறிவித்தார்.

ஆனால், உண்மை நிலையை அறிந்த பீஹார் கவர்ன்மெண்டார் காந்திஜியின்மீது மேல் நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளவில்லை. அதுமட்டுமல்லாமல் விவசாயிகளின் குறைகளைப்பற்றி விசாரித்தறிய அவர்கள் ஒரு கமிட்டியையும் நியமித்தனர். இக் கமிட்டியில் காந்திஜியும் ஒருவர். பிறகு டிஸம்பர் மாதத்தில் விவசாயிகளின் குறைகள் நீங்க ஒரு சட்டமும் நிறைவேறியது. இக் காலத்தில்தான் மகாத்மாஜிக்கும் ராஜேந்திர பாபுவுக்கும் நட்பு ஏற்பட்டது. இது சத்தியாக்கிரகத்தின் முதல் வெற்றியாகும்.

இரண்டாவதாக, குஜராத் அல்லது கூர்ஜர மாகாணத்தில் "கெய்ரா" என்பது ஒரு ஜில்லா. 1918-ம் வருஷத்தில் இந்தப் பிரதேசத்தில் அபார மழை பெய்ததால், பயிர்களெல்லாம் வெள்ளத்தால் நாசமாயின. எனவே இங்குள்ள விவசாயிகள் நிலவரியைச் செலுத்த முடியாமல் மிகவும் கஷ்டப்பட்டனர். பஞ்சத்தில் அகப்பட்டுப் பரிதவிக்கும் மக்கள் நிலவரியைச் செலுத்துவது எங்ஙனம்? ஏழை பங்காளனான மகாத்மா கெய்ரா மக்களின் நியாயமான குறைகளையும், அவர்களது திக்கற்ற நிலைமையையும் கண்டு அவர்களுக்காகப் போராடத் தீர்மானித்தார். மகா ஜனங்களின் சபையாகிய குஜராத் சபை அதிகாரிகளை நேரில் கண்டு பேசுவதற்காக ஒரு தூது கோஷ்டியை ஏற்பாடு செய்தது. ஆனால் அந்த டிவிஷனின் கமிஷனருக்கு அது பிடிக்கவில்லை; அவர் தூது கோஷ்டியினர்மீது பொங்கி விழுந்து, அவர்களிடம் மரியாதைக் குறைவாகப் பேசினார். அதன்பேரில் நிலத் தீர்வையைச் செலுத்தாதிருக்குமாறு குஜராத் சபை குடியானவர்களுக்கு அறிவித்தது. இது சம்பந்தமான பூரா பொறுப்பையும் காந்திஜியே ஏற்றுக்கொண்டார். இவ்விதமாகச் சத்தியாக்கிரகப் போர் துவங்கியது. கெய்ரா சத்தியாக்கிரக இயக்கத்தில் முதன் முதல் சிறை சென்றவர் ஸ்ரீயுத மோஹன் லால் பாண்டியா என்பவர். (இவர் 1935-ம் வருஷம், மே மாதம் 18-ந் தேதியன்று பூத உடம்பை நீத்து, புகழுடம்பெய்தினார்). இந்தச் சத்தியாக்கிரகத்தின் பலனாக விவசாயிகளுக்கு விசேஷ சௌகரியங்கள் ஏற்பட்டன. சத்தியாக்கிரகத்தின் இரண்டாவது வெற்றி இது.

மூன்ருவது சத்தியாக்கிரகம் 1918-ம் வருஷம், மார்ச்சு மாதத்தில், ஆமதாபாத்தில் நடந்தது; அதாவது ஆமதாபாத் ஆலைத் தொழிலாளர் வேலை நிறுத்தம் சம்பந்தமாக இதிலும் சத்தியாக்கிரகத்துக்கு வெற்றியே. தொழிலாளருக்கும், முதலாளிகளுக்கும் திருப்திகரமான முறையில் ஒரு சமாஸம் ஏற்படுத்தப்பட்டது. ஆனல் இந்தச் சமாஸத்திற்கான ஏற்பாடுகள் நடந்துகொண்டிருக்கையில் தொழிலாளிகளில் சிலர் தங்கள் பலவீனத்தையும், சோர்வையும் வெளிப்படுத்தினர். வேலை நிறுத்தத்தில் எங்கு தளர்ச்சி ஏற்பட்டுவிடுமோ எனப் பயப்படவேண்டியிருந்தது. நெருக்கடியானதொரு சமயத்தில் மகாத்மாஜியும், அனுசூயா பென்னும் உபவாச விரதத்தை மேற்கொண்டனர். காந்திஜியின் முதல் உபவாசம் இது தான்; அவர்களது இந்தப் பிரதிக்ஞை மிகவும் பயங்கரமானதாக விருந்தது. ஆனல் அவ் விரதத்திலிறங்குவதைவிட அவருக்கு வேறு வழியில்லாதிருந்தது. அவர் அந்தச் சமயத்தில் வெளியிட்ட உருக்கமான மொழிகள் இவைதான்: "சென்ற 20 தினங்களுக்கும் மேலாக, அனுதினமும் ஆண்டவனின் திருநாமத்தை உச்சரித்துக்கொண்டு எடுத்துக்கொள்ளப்பட்ட ஒரு பிரதிக்ஞையை நிறைவேற்றி வைக்க 10,000 பேர்கள் தவறிவிட்டார்கள் என்று பிற்கால சந்ததியார் ஏளனஞ் செய்வதை விட என்னுடைய உபவாச விரதம் காரணமாக பரிபூரண திருப்தியுடனில்லாவிடினும் ஏதோ ஒருவிதமான முடிவு ஏற்பட்டது என்று கூறக்கூடிய அவமானமே மேலானது". இவை அவரது ஹிருதயத் துடிப்பையே உணர்த்துகின்றன.

## ஒப்பந்தக் கூலி முறை ரத்து

இப்பொழுது ராஜீய விஷயங்களிலிருந்து வேறு துறையில் நமது கவனத்தைச் செலுத்துவோம். 1920-ம் வருஷம் ஜனவரி மாதம், முதல் தேதியன்று குடியேற்ற நாடுகளில் அனுஷ்டானத்தி லிருந்துவந்த ஒப்பந்தக் கூலி முறை ஒழிக்கப்பட்டது. இது ஒரு முக்கிய சம்பவமாகும். இந்த முறையானது ஒரு நூற்றுண்டிற்கும் அதிகமாக அனுஷ்டானத்திலிருந்து வந்தது. இதனல் இந்தியா தேசத்திற்குத்தான் கோடியான பாதக மேற்பட்டது. மேலும் கூலிகளைத் திரட்டுவதை அனுமதிக்க முடியாதென

இந்தியா கவர்ன்மெண்டார் மறுத்துவிட்டதன் பேரில் தென்னாப்பிரிக்காவிலுள்ள நேட்டால் பிரதேசத்தில் இவ்வொப்பந்தக் கூலி முறை ஒழிந்தது; மேலும் கூலிகள் தேவையில்லாததன் காரணத்தால் 1911-ம் வருஷத்திலேயே இம் முறை ஒழிந்தது. ஆனால் உலகின் ஏனைய பாகங்களிலுள்ள இதர குடியேற்ற நாடுகளில் இந்த ஒப்பந்தக் கூலி முறை ஒழிந்தபாடில்லை. எங்கெந்த மாகாணங்களிலிருந்து ஒப்பந்தக் கூலிகள் திரட்டப்பட்டனரோ அந்தந்த மாகாணங்களின் கவர்னர்களிடையே, 1914, 15-ம் வருஷங்களில் இந்தியா கவர்ன்மெண்டு ஒரு விசாரணையை நடத்தியது. ஆங்காங்குள்ள கிராம மக்கள் ஏற்கனவே இம் முறையை எதிர்த்து நின்றனர் என்ற சங்கதி மேற்படி விசாரணை மூலம் தெரியவந்தது. பலர் இந்த முறையைத் தூற்றிக்கொண்டிருந்தார்கள். 1915-ம் வருஷத்தில் பூஜ்யர் ஸி. எப். ஆண்டிரூஸும், மிஸ்டர் டபிள்யூ. டபிள்யூ. பியர்ஸனும் பிஜித் தீவிற்குச் சென்று, மிகவும் கேவலமான தகவல்களைக் கொணர்ந்தனர். இந்த தகவல்கள் யாவும் ஒரு யாதாஸ்து மூலமாக வெளியாயின. இதே சமயத்தில் இம் முறையை ஒழித்துப் போடுவதற்காக இந்தியா சட்ட சபையில் பண்டித மதன் மோஹன் மாளவியா கொணர்ந்த பிரேரணையை ஹார்டிஞ்சு பிரபு ஏற்றுக்கொள்வதற்கு காரணமாகவிருந்தது மேற்படி யாதாஸ்துதான். ஆனால் இது விஷயத்தில் உடனே எதுவும் செய்யமுடியாதென்றும், சிறிது தாமதம் ஏற்படத்தான் செய்யுமென்றும் அப் பிரபு கூறினார். தவிர, மேலும் ஐந்து வருஷங்களுக்கு இந்தியாவில் ஒப்பந்தக்கூலிகள் திரட்டப்படுவதற்கு அவர் ரகஸியமாக குடியேற்ற நாடுகள் சம்பந்தமான ஆபீசுடன் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டிருந்ததாக விஷயம் எட்டியது. இந்த மாதிரியான ரகஸிய ஒப்பந்தம் நடைமுறையிலிருப்பது வாஸ்தவமா அல்லவா என்பதை வெளியிடும்படியாக பூஜ்யர் ஸி. எப். ஆண்டிரூஸ் இந்தியா கவர்ன்மெண்டாரை அறை கூவிக் கேட்டார். இதன் உண்மை வெளிப்பட்டதும் இந்திய மக்கள் கொதித்தெழுந்தனர். இது சம்பந்தமான கிளர்ச்சியில் காந்திஜி பெரும் பங்கெடுத்துக் கொள்ளலானார். இவ்வொப்பந்தக் கூலிமுறையை ஒழித்துப் போடுவதற்காக அவர் வட இந்தியாவிலும் மேறகுப் பாகங்களிலும் அதி தீவிரமான பிரசாரம் செய்தார். இப் பிரசாரத்தில் சென்னைமா நகரம் சற்றும் பின் வாங்கவில்லை.

இங்கு பிரசாரத்தை தீவிரமாக நடத்திவைத்தவர் பெஸண்ட் அம்மையார். 1917-ம் வருஷம், மார்ச்சு, ஏப்ரல் மாதங்களில் இப்பிரசாரம் மிகவும் உக்கிரமாக நடந்தது. 1917-ம் வருஷம், ஜூன் மாதம், 15-ந் தேதி பெஸண்ட் அம்மையாரைக் காவலில் வைத்ததற்கு அவர் இப்பிரசாரத்தில் விசேஷ பங்கெடுத்துக் கொண்டதும் காரணமாகவிருக்கலாம். செம்ஸ்போர்ட் பிரபு காந்திஜியை அழைத்துப் பேசினார்; நிலைமை முற்றி வருவதை அவர் நன்கு உணர்ந்தார். இவ்வொப்பந்தமுறைக் கூலிகளில் ஸ்திரீகளு மிருந்ததால், அந்த அநியாயத்தை எடுத்துக் காட்டுவதற்காக இந்திய ஸ்திரீகளின் தூது கோஷ்டி யொன்று செம்ஸ்போர்ட் பிரபுவைப் பேட்டி கண்டது. காந்திஜி ஒரு தேதியைக் குறிப்பிட்டார்; அதாவது "1917-ம் வருஷம், மே மாதம் 31-ந் தேதிக்குள்ளாக ஒப்பந்தக் கூலி முறை ஒழிக்கப்பட்டு விடவேண்டும்; இல்லாவிடில் மேலும் கூலிகள் திரட்டப்படுவதைத் தடுப்பதற்காகச் சத்தியாக்கிரக இயக்கத்தைத் தொடங்குவேன்" என அறைகூவினார். 1917-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 12-ந் தேதி செம்ஸ்போர்ட் பிரபு ஒரு அறிக்கையை வெளியிட்டார்; இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்படி பிரத்யேக யுத்தமுறையாக ஒப்பந்தக் கூலிகள் திரட்டப்படுவது நிறுத்தப்படும் என்று அவ்வறிக்கை கூறியது. எனவே யுத்தம் முடிந்ததும் குடியேற்ற நாடுகள் மீண்டும் இதே தொழிலில் இறங்கி விடுவது திண்ணம் என ஏற்பட்டது. ஏனெனில் இதன் மூலமாக ஏராளமான பணம் சம்பாதிக்கலாம். ஆகவே காந்திஜியின் யோசனையின் பேரிலும், கவி ரவீந்தரரின் சம்மதத்தைப் பெற்றும் மிஸ்டர் ஆண்டிரூஸ் மறுபடியும் பிஜித் தீவிற்குச் சென்றார். யுத்தத்திற்குப் பிறகு மீண்டும் இப்பிரச்னை தலை காட்டினால் அப்பொழுது அதனை எதிர்த்துப் போராடுவதற்கு அவசியமான தகவல்களைச் சேகரிப்பதர்காகவே இம்முறை ஆண்டிரூஸ் அங்கு போனார். பிஜியில் அவர் ஒரு வருஷம தங்கியிருந்து, முன்னைவிட அதிகமான தகவல்களைத் திரட்டினார். 1918-ம் வருஷம், மார்ச்சு மாதத்தில் அவர், டெல்லிமா நகரில் மாண்டேகு பிரபுவைச் சந்தித்து, தம்மிட மிருந்த தகவல்களை யெல்லாம் அவர் முன்பு கொட்டினார். இனிமேல் ஒப்பந்த முறையில் கூலிகள் திரட்டப்படுவது அனுமதிக்கப்பட மாட்டாதென 1919-ம் வருஷத்

தில் இந்தியா கவர்ன்மெண்டாரால் அறிவிக்க இயன்றது. தவிரவும் ஒப்பந்த கூலிகளில் எவரெவர்களது ஐந்து வருஷ காலம் முடிவடையவில்லையோ அவர்களை விடுதலை செய்து விடவேண்டுமென்றும் அதே அறிக்கையில்காணப்பட்டது. ஆதலால் 1920-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தேதி பிஜி, பிரிட்டிஷ் கையானா, டிரினிடாட், சுரினம், ஜமைக்கா முதலிய குடியேற்ற நாடுகளில் ஒப்பந்த முறை ஒழிந்த வைபவம் விமரிசையாக கொண்டாடப்பட்டது.

## ஹண்டர் கமிஷன் அறிக்கை

இப்பொழுது மீண்டும் ராஜீய விஷயங்களை ஆராய்வோம். 1920-ம் வருஷம் மே மாதம் 28ந் தேதி ஹண்டர் யாதாஸ்து வெளியிடப்பட்டதையும் அதன் காரணமாக தேசத்தில் ஏமாற்றமும் அருவருப்பும் ஏற்பட்டதையும் முன்னரே கண்டோம். மேற்படி யாதாஸ்தில் கையொப்பமிட்டவர்களில் அனைவரும் ஏகமுகமான அபிப்பிராயம் கொண்டிருக்கவில்லை. ஆங்கில அங்கத்தினர்களின் கருத்து இந்திய அங்கத்தினர்களின் கருத்துகளினின்றும் மாறுபட்டது. பஞ்சாபில் நடந்த சம்பவங்கள் முன்னதாகவே ஏற்பாடு செய்துகொள்ளப்பட்ட கலவரமா? அல்லது திடீரென நிகழ்ந்த கலகமா என்பதிலேயே வித்தியாசம் ஏற்பட்டது. ஆங்கில அங்கத்தினர்கள் முன்னைய கருத்தை தாங்கிப் பேசினர்; இந்திய அங்கத்தினரோ பின்னர் கூறியதை உண்மை என வற்புறுத்தினர். ஆகவே ராணுவச் சட்டத்திற்கு எவ்வித அவசியமுமில்லை என்பது இந்தியரின் துணிபு. பஞ்சாப் சம்பவங்களுக்கு ஓட்வியரே காரணம் என்றும் அவர்கள் அபிப்பிராயப்பட்டனர். உண்மையான செய்திகளை மறைத்து விட்டதற்காக இந்திய அங்கத்தினர் சர்க்காரைக் குறை கூறினர். சில இடங்களில் அதிகாரிகள் இராணுவச் சட்டத்தை பிரயோகிக்கையில் தங்கள் அதிகாரத்தை துஷ்பிரயோகம் செய்தனர் என்பதையும், சாதாரணமாக எந்த மனிதனும் அந்த நிலைமையில் நடந்துக்கொள்ளக்கூடிய தோரணையிலேயே ஜெனரல் டயர் நடந்து கொண்டனரென்றும் கவர்ன்மெண்டார் ஒப்புக்கொண்டனர். சில குறிப்பிட்ட இடங்களில் அதிகாரிகள் கொடூரமாக நடந்துகொண்டதற்கு பிரிட்டிஷ் அரசாங்கத்தார் வருத்தமும் தெரிவித்தனர். எதிர்காலத்

தில் ராணுவச் சட்டத்தை ஒழுங்காக பிரயோகிப்பதற்கான முறைகளை தயாரிக்குமாறு இந்தியா கவர்ன்மெண்டுக்கு உத்திரவு இடப்பட்டதைக் கண்டு இந்தியா எங்ஙனம் திருப்தி அடைய முடியும்! தவிர ஒழுங்கீனமாக நடந்துகொண்ட அதிகாரிகள்மீது தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ளும்படி ஹண்டர் கமிட்டி யாதாஸ்தில் குறிப்பிடப்பட்டிருந்ததாயினும் அத்தகைய அதிகாரிகளில் பலர் ஏற்கனவே இந்தியாவை விட்டோ அல்லது கவர்ன்மெண்ட் வேலையை விட்டோ விலகிப்போய் விட்டபடியால் அந்தத் துறையிலும் பஞ்சாப் வாசிகளோ, அல்லது இந்திய மக்களோ, எவ்வித திருப்தியும் அடைவதற்கு வழியில்லாமல் போய்விட்டது.

ஹண்டர் கமிஷன் யாதாஸ்து வெளியான உடனே அதாவது மே மாதம் 30-ந் தேதியன்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி காசியில் கூடி எல்லா விஷயங்களிலும் தேச மக்களுக்கு ஏற்பட்டுள்ள பரம அதிருப்தியையும் அருவருப்பையும் வெளியிட்டதுடன் விஷயங்களை பூராவாக ஆராயவேண்டி விசேஷ காங்கிரஸை கூட்டுவதென்றும் தீர்மானிக்கப்பட்டதென்பதை முன்பே அறிவித்தோம். இந்தக் கூட்டம் காசியில் நடக்கையில் லோகமான்ய திலகர் காசி வழியாகத்தான் சென்றார்! எனினும் அவருடைய மனமானது கிலாபத் கிளர்ச்சிக்கு பூராவாக இல்லையாதலால் அவர் கூட்டத்திற்கு விஜயம் செய்யவில்லை. ஆனால் மிகுந்த பெருந்தன்மையுடனும் விசேஷ தேச பக்தியுடனும் அவர் நடந்துகொண்டதை இந்திய மக்கள் என்றும் மறக்க முடியாது. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் என்னவிதமான தீர்மானங்கள் நிறைவேற்றப் படுகின்றனவோ அவற்றை அப்படியே தாம் ஏற்றுக்கொள்வதாக திலகர் அறிவித்தார். ஒத்துழையா இயக்கம், முக்கியமாக கிலாபத் கிளர்ச்சியுடன் சேர்ந்திருந்த தென்பதை நாம் ஏற்கனவே பார்த்தோம். 1920-ம் வருஷம் ஜூன் மாதம் 2-ந் தேதி யன்று அலகாபாத்தில் நடைபெற இருந்த சர்வ கக்ஷி தலைவர்கள் மகாநாட்டில் தமது ஒத்துழையா இயக்கப் பிரச்னையை கலந்து ஆலோசிப்பதென காந்திஜி தீர்மானித்தார். அதேமாதிரி மகாநாடு கூடியதும் அதில் ஒத்துழையா கொள்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது; அது சம்பந்தமான திட்டம் ஒன்றை வகுப்பதற்காக, மகாத்மா காந்தியும் சில முஸ்லீம் தலைவர்

களும் அடங்கிய கமிட்டி ஒன்றும் நியமிக்கப்பட்டது. இக் கமிட்டியார் தங்களுடைய வேலைமுறையைச் செய்தனர். பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், நீதிஸ்தலங்கள் இவற்றை பகிஷ்கரிக்க வேண்டுமென்பது அவ்வேலைமுறையின் முக்கிய அம்சமாக இருந்தது. முஸ்லீம்களும் தங்கள் மகாநாடுகளில் இவ்வேலைமுறையை ஆதரித்து தீர்மானங்கள் நிறைவேற்றினர். காந்திஜியின் யோசனைப்படி கவர்ன்மெண்டாருடன் ஒத்துழைப்பதில்லை என்று 1919-ம் வருஷம் நவம்பர் மாதத்தில் டில்லியில் நடைபெற்ற அகில இந்திய கிலாபத் மகாநாடு தீர்ப்பளித்தது.

கல்கத்தாவிலும், ஏனைய நகரங்களிலும் நடந்த முஸ்லீம் கூட்டங்களில் இந்த முடிவு ஊர்ஜிதப்படுத்தப்பட்டது (17-4-1920). சென்னையில் நடந்த கிலாபத் மகாநாடும், டில்லி மகாநாட்டை பின்பற்றியே தீர்ப்பளித்தது. இந்த மகாநாட்டில் ஒத்துழையா இயக்கத்திற்கு கீழ்க்கண்டவாறு மேலும் வியாக்கியானம் செய்யப்பட்டது; அதாவது, சர்க்கார் உத்தியோகங்களையும், பட்டங்களையும் துறத்தல், கௌரவ பதவிகளையும், சட்டசபை அங்கத்தினர் பதவிகளையும், போலீஸ், ராணுவ உத்தியோகங்களையும் விட்டொழித்தல், வரிகொடுக்க மறுத்தல் இவையே 1920-ம் வருஷம், மார்ச்சு, ஏப்ரல், மே மாதங்களில் இந்தியாவின் ராஜீய நிலைமையில் மிகக் கடுமையானதாகிவிட்டது. கிலாபத் அநீதி, பஞ்சாப் அட்டூழியம், இவ்விரண்டும் போதாவென்று அதிருப்திகரமான சீர்திருத்தங்கள் ஆகிய இம்மூன்றின் காரணமாகவும் மக்களிடையே தோன்றிய தேசிய உணர்ச்சியானது பெருக்கெடுத்து நாடெங்கும் வெள்ளமாக ஓடத்தலைப்பட்டது. ஒத்துழையா இயக்கத்தை ஆரம்பிக்க எல்லாம் பக்குவமாக விருந்தது. லோகமான்ய திலகர் கூட அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் தீர்மானங்களுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதாக அறிவித்தார். ஆனால் மகாத்மாவின் ஒத்துழையாக் கொடியின் கீழ் லோகமான்யர் திரண்டு வருவதைப் பார்க்க இந்தியா கொடுத்துவைக்கவில்லை. அவர் ஜூலை மாதம் 31-ந் தேதி, நள்ளிரவு நம்மை விட்டுப் பிரிந்தார். தேசம் முழுவதும் துக்கத்தில் ஆழ்ந்தது. "ஆ! திலகர் இருந்திருந்தால் எனக்கு எவ்வளவு வலுவாக இருந்திருக்கும். எனக்குக் கை உடைந்தாற்போல் ஆய்விட்டதே" எனக் காந்திஜியும் ஏங்கினர்.

இதற்குள்ளாக முஸல்மான்கள் தங்கள் கிளர்ச்சியில் வெகுதூரம் போய்விட்டனர். பிரிட்டிஷார் துருக்கியுடன் செய்துகொண்ட உடன்படிக்கைக்குப் பிறகு தாங்கள் இந்தியாவில்—அதாவது பிரிட்டிஷாரின் கீழ்—இருக்க முடியாதென்றும், ஆகவே ஆப்கானிஸ்தானத்திற்கு ஓடிவிடுவது (ஹிஜ்ராத்) என்றும் அவர்கள் திட்டம் போட்டனர். இந்த இயக்கம் சிந்து மாகாணத்தில் ஆரம்பித்து, வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திற்குப் பரவியது. காச்சா கஸ்ஹறி என்னுமிடத்தில் இத்தகைய யாத்ரீகர்களுக்கும், ராணுவத்தைச் சேர்ந்தவர்களுக்கும் பலமான சண்டை நடந்தது. இந்தச் சம்பவம் மக்களின் ஆத்திரத்தை இன்னும் அதிகப்படுத்தியது. ஆகஸ்டு மாதத்தில் 18,000 பேர்கள் ஆப்கானிஸ்தானத்திற்குப் பிரயாணம் செய்துகொண்டிருந்ததாகக் கணக்கிடப்பட்டது. ஆனால் இந்தத் திட்டம் நெடுநாள் தொடர்ந்து நடக்கவில்லை. ஏனெனில் இத்தகைய யாத்ரீகர்கள் தங்கள் தேசத்தினுள் பிரவேசிப்பதை ஆப்கன் அதிகாரிகள் விரைவில் தடுத்துவிட்டனர். ஆகவே ஏராளமான உயிர்ச் சேதம், பெருத்த கஷ்டங்கள், இவற்றிற்குப் பிறகு இந்த திட்டம் கைவிடப்பட்டது. ஆகஸ்டு மாதத்தில் இந்தியா சட்ட சபை கூடினபொழுது ஒத்துழையா இயக்கம் ஏற்கனவே ஆரம்பமாகி நடந்துகொண்டிருந்தது. சபை அங்கத்தினரில் சிலர் தங்கள் பதவிகளை ராஜீநாமாச் செய்திருந்தனர். ஒத்துழையா இயக்கத்தால் நாட்டில் குழப்பமும், கஷ்டமுமே அதிகமாகுமென்றும், இதைவிடப் பைத்தியக்காரத் தனமான யோசனையும் உண்டா என்றும் இராஜப்பிரதிநிதி ஓர் பிரசங்கம் செய்தார். "இந்த இயக்கம் எல்லா மடத்தனமான திட்டங்களையும்விட அதிக மடத்தனமானது" என்று அவர் கூறினார். ஆனால் புதிய சீர்திருத்த சட்ட சபையைத் திறந்து வைப்பதற்காக வேல்ஸ் இளவரசர் இந்தியாவிற்கு விஜயம் செய்வதாக உத்தேசிக்கப்பட்டிருந்தது யாது காரணம் பற்றியோ கைவிடப்பட்டு, அவருக்குப் பதிலாக காஞட்டுக் கோமகனர் வருவதென முடிவு செய்யப்பட்டது.

## ஒத்துழையாப் போர்

ஒத்துழையாத் திட்டம் ஆகஸ்டு மாதம் முதல் தேதி வகையாகத் தோற்றுவிக்கப்பட்டது. மகாத்மா காந்தியும், அலி சகோதரர்களும் தேசம் முழுவதும் சுற்றுப் பிரயாணஞ் செய்தனர். ஜனங்களை ஒழுங்கான முறையில் அடக்கிக்கொண்டு போவதையும், அவர்களது உற்சாகத்தைச் சரியான வழியில் உபயோகிப்பதிலுமே காந்திஜி விசேஷ கவனஞ் செலுத்தினர். ஏற்கனவே உத்தேசிக்கப் பட்டிருந்த விசேஷ காங்கிரஸ், 1920-ம் வருஷம் செப்டம்பர் மாதத்தில் கல்கத்தாவில் நடைபெற்றது. இச் சமயத்தில் ஒத்துழையாக் கொள்கையைப்பற்றி பற்பல மாகாண காங்கிரஸ் கமிட்டிகளும் அபிப்பிராயத்தை அறிவித்தன. விசேஷ காங்கிரஸ் ஒத்துழையா லக்ஷியத்தை ஏற்க வேண்டுமென ஆந்திர மாகாண காங்கிரஸ் கமிட்டியும், பஞ்சாப் கமிட்டியும் சிபார்சு செய்தன. அப்பொழுதிருந்த நிலையில் ஒத்துழையாமையைத் தவிர நமக்கு வேறு வழியில்லை என வங்காளம் அபிப்பிராயப்பட்டது. ஆனால் வங்கக் கமிட்டியும், மத்திய மாகாணக் கமிட்டியும், புதிய சட்ட சபைப் பகிஷ்காரத்தை ஆதரிக்கவில்லை. ஆனால் சட்ட சபைகளுக்குள் ஏராளமான காங்கிரஸ் வாதிகள் புகுந்து, அங்கு ஒத்துழையாமையை அனுஷ்டிக்க வேண்டுமென அவை கூறின. பீஹாரும், ஒரிஸாவும் ஒத்துழையா லக்ஷியத்தை அங்கீகரித்தன. பீராரும், பம்பாயும் முழு மனதுடன் ஆதரவு காட்டின. பர்மா, திட்டத்தை அங்கீகரித்ததாயினும், அது அந்த மாகாணத்தில் சாத்தியமில்லை யென்று நம்புவதாகக் கூறியது. சென்னை மாகாண காங்கிரஸ் கமிட்டி ஒத்துழையா லக்ஷியத்தை வரவேற்று, ஆதரவளித்ததாயினும், மகாத்மா காந்தியின் திட்டத்திற்கு எதிராக ஓட்டு செய்தது. சிந்து மாகாணம் முழு மனதுடன் ஆதரவு காட்டி, நான்கு வகைகளில் ஒரு திட்டமும் போட்டது; ஆனால் ராணுவ இலாக்காவில் ஒத்துழையாமை அனுஷ்டிக்கப்படுவதை இது ஆட்சேபித்தது; ஐக்கிய மாகாணம் ஒத்துழையாமையை ஆதரித்ததுடன், திட்டமும் வகுத்தது. கானட்டுக் கோமகனின் வரவேற்பைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்ற கருத்தையும் வெளியிட்டது.

இங்ஙனமாக பெருவாரியான மாகாணங்களின் விசேஷ ஆதரவுக் கிடையே கல்கத்தா காங்கிரஸ் கூடியது. இக்

கூட்டம் உண்மையிலேயே மிக முக்கியமானதாகும். வங்கத் தலைவர்கள் காந்திஜியின் பூராத் திட்டத்தையும் அப்படியே ஆதரிக்கவில்லை. தேசபந்து சித்தரஞ்சன தாஸர் மகாத்மாவின் ஒத்துழையாத் திட்டத்தை எல்லாத் துறைகளிலும் எதிர்த்தார். சட்ட சபைகளையும், கோர்ட்டுகளையும் பகிஷ்கரிப்பதென்பது அவருக்குத் துளிகூடப் பிடிக்கவில்லை; வங்கப் பிரதிநிதிகள் பலரும் இதே அபிப்பிராயம் தான் கொண்டிருந்தனர். எனினும் ஏழு அதிக ஓட்டுகளால் காந்திஜியின் தீர்மானம் விஷயாலோசனைக் கமிட்டியில் நிறைவேறியது. மற்றப்படியாக பகிஷ்காரத்தை அநுஷ்டிக்க வேண்டுமென்பது தீர்மானம். அந்தச் சமயத்தில் ஒத்துழையாமையைத் தவிர வேறு வழியில்லாமலிருந்தது. பஞ்சாப் அட்டூழியங்கள், ஓட்வியரின் அதிக்கிரமம், டயரின் ஈவு, இரக்கமற்ற செயல், ஹண்டர் கமிட்டி யாதாஸ்து, கிலாபத் அநீதிகள், ராணுவச் சட்ட அமுல், அதிகாரிகளின் அதிகார துஷ்பிரயோகம், காமன்ஸ் சபையின் பயனற்ற விவாதம், இந்திய மக்களின் உரிமைகளை அலக்ஷியமாகக் கருதுதல், ஆட்சிமுறையின் அலங்கோலம், மக்களின் மனக் கொதிப்பு, புதிய சீர்திருத்த வேஷம், இவற்றைப்பற்றியே கல்கத்தா காங்கிரஸ் விவாதித்து, தீர்மானங்களை நிறைவேற்றியது. ஆனால் யாவற்றிலும் முக்கியமான தீர்மானம் ஒத்துழையாமையைப் பற்றியதுதான். இரண்டு அதிகப்படியான ஓட்டுகளால் ஒத்துழையாத் தீர்மானம் வெற்றி பெற்றது. ஒத்துழையாத் திட்டத்தின் வேலை முறையைக் காண ஒரு சப்-கமிட்டியும் நியமிக்கப்பட்டது. இக் கமிட்டியார் வெளியிட்ட ஏழு வகையான யோசனைகள் பின் வருமாறு :—

(1) சர்க்காரிடமிருந்து பெற்றுள்ள பட்டங்களைத் துறத்தல்; சர்க்காரிடம் வகித்துவரும் கௌரவமான பதவிகளினின்றும் விலகிக்கொள்ளுதல்; ஸ்தல ஸ்தாபனங்களிலுள்ள நியமன ஸ்தானங்களில் அங்கம் வகிப்பதை ராஜீநாமா செய்துவிடுதல்;

(2) சர்க்காரால் நடத்தப்படும் தேக் கச்சேரிகள், விருந்துகள், தர்பார்கள், சர்க்கார் உத்தியோகஸ்தர்களால் பூரா உத்தியோக முறையிலோ அல்லது பாதி உத்தியோக முறையிலோ நடத்தப்படும் வைபவங்கள், இவற்றில் எவ்விதத்திலும் பங்கெடுத்துக்கொள்ள மறுத்துவிடுதல் ;

(3) சர்க்காருக்குச் சொந்தமானவையும், அல்லது சர்க்காரின் திரவிய சகாயத்தைப் பெறுவனவும், அல்லது சர்க்காரின் அதிகாரத்திற் குட்பட்டவையுமான பள்ளிக் கூடங்களுக்கும், கல்லூரிகளுக்கும் குழந்தைகளை அனுப்புவதைச் சிறிது சிறிதாக நிறுத்திக்கொண்டு, அந்தந்த மாகாணங்களில் அவரவர்களின் கல்வி போதனைக்காக தேசிய முறையான பள்ளிக்கூடங்களையும் கல்லூரிகளையும் ஏற்படுத்திக்கொள்ளுதல் ;

(4) வக்கீல்களும், வழக்காளிகளும் நாளாவட்டத்தில் பிரிட்டிஷ் கோர்ட்டுகளைப் பகிஷ்கரித்து, வழக்குகளை விசாரிப்பதற்காக ஆங்காங்கு பஞ்சாயத்து கோர்ட்டுகளை ஏற்படுத்திக்கொள்ளுதல் ;

(5) ராணுவத்திலுள்ளவர்களும், குமாஸ்தாக்களாக வேலை பார்ப்பவர்களும், தொழிலாளி வகுப்பினரும், மெஸொபடோமியாவில் கவர்ன்மெண்டாருக்கு ஊழியம் புரிவதற்காக ஆட்கள் திரட்டப்படுகையில் அதில் சேர மறுத்துவிடுதல் ;

(6) சீர்திருத்தப்பட்ட சட்டசபைக்கு அபேட்சகர்களாக நிற்பதினின்றும் விலகிக் கொள்ளுதல் ;

(7) காங்கிரஸின் கட்டளையையும் மதிக்காமல் எவராவது தேர்தலில் அபேட்சகராக நின்றால் அவருக்கு வாக்காளர்கள் தங்கள் ஓட்டுகளைக் கொடுக்க மறுத்து விடுதல்.

முதலில் மகாத்மா காந்தி ஸ்தல சுய ஆக்ஷி ஸ்தாபனங்களையும் பகிஷ்கரிக்க வேண்டுமெனக் குறிப்பிட்டார் ; எனினும் நண்பர்கள் பலரது விருப்பத்தின்படி அவர் பிறகு இதை வற்புறுத்தாமல் விட்டுவிட்டார்.

இந்தத் திட்டத்தின் சில பகுதிகள் தங்களுக்குப் பிடிக்கவில்லை யாயினும் தேசீயக் கக்ஷியினர் மறுபடியும் காங்கிரஸினிடம் விசேஷ பக்தி விசுவாசம் காட்டி, அதன் கட்டளைகளைப் பின்பற்றத் தயாராக விருந்தனர். அமிருதசரஸில் நடந்த காங்கிரஸ் மகாசபைத் தீர்மானப்படி தேசீயக் கக்ஷியினரில் பலர் ஏற்கனவே தாங்கள் அபேட்சகர்களாக நிற்பதை அறிவித்து, அந்தத் துறையில் பிரசாரம் செய்வதற்காக விசேஷ காலத்தையும், பணத்தையும் செலவிட்டு விட்டனர். இருந்தாலும் அவர்கள் காங்கிரஸின்

தற்போதைய கட்டளையைச் சிரமேற்கொண்டு தேர்தலி னின்றும் விலகிக்கொண்டது குறிப்பிடத்தக்கதாகும். வாக் காளர்களும், குறைந்தது 100-க்கு 80 பேர்கள், காங்கிரஸ் தீர்மானத்துக்குக் கீழ்ப்படிந்து நடந்து, தங்கள் வாக்கு களைச் செலுத்தவே யில்லை. ஒரு இடமல்ல, இரண்டு இடமல்ல; பல இடங்களிலிருந்தும் ஓட்டுப் பெட்டிகள் ஒரு ஓட்டுகூட இல்லாமல் காலியாகத் திரும்பின. தேச மக்களிடையே ஏற்பட்டிருந்த புதிய விழிப்பையும், மகாத்மா காந்திக்கு நாட்டில் ஏற்பட்டிருந்த விசேஷ செல் வாக்கின் உண்மையையும் சர்க்காரே ஒப்புக்கொண்டுவிட் டார்கள். "பொது மக்களின் அன்பிற்கும், அபிமானத்திற் கும் பாத்திரமான பல அரிய, பெரிய மேதாவிகளைப் புதிய சட்டசபைகளில் வீற்றிருக்க முடியாமல் செய்துவிட்டது காந்திஜியின் இயக்கம்; இதன் காரணமாக ஏராளமான மித வாதிகள் போட்டி எதுவு மில்லாமல் சட்ட சபைகளில் புகுந்துவிட இடமேற்பட்டது" என்று கவர்ன்மெண்டு அபிப்பிராயப்பட்டது.

## சர்க்கார் கருத்து

இவ்வளவு தூரம் சொல்லிய கவர்ன்மெண்டு அத் துடன் நின்றுவிட முடியுமா? எனவே நவம்பர் மாத ஆரம் பத்தில், ஒத்துழையா இயக்கத்தைப்பற்றிய தனது கொள் கையைச் சர்க்கார் தெளிவுபடுத்தலாயினர். "ஒத்துழையா இயக்கத்தைப் பரப்பும் உத்தேசத்துடன் வேலை செய்பவர் கள், ஆதியில் உத்தேசிக்கப்பட்ட எல்லைகளையும், வரை யறைகளையும் கடந்து, பிரசங்கங்கள் மூலமாகவோ அல்லது எழுத்து மூலமாகவோ பொதுமக்களைப் பலாத்காரத்தி லிறங்கும்படி தூண்டினாலும் அல்லது ராணுவம், போலீஸ் இவைகளில் வேலை பார்ப்பவர்கள் கவர்ன் மெண்டாரிடம் காட்டிவரும் ராஜபக்தியை எந்தவிதத்தி லாவது கலைக்கவோ அல்லது குலைக்கவோ முயற்சித்தாலும் அத்தகையவர்கள்மீது மாத்திரம் நடவடிக்கைகள் எடுக்கும் படி மாகாண கவர்ன்மெண்டுகளுக்கு உத்திரவிடுவதாக" இந்தியா கவர்ன்மெண்டு அறிக்கை யொன்று கூறியது. இத்துடன் கவர்ன்மெண்டார் திருப்தியடைய வில்லை. ஒத் துழையாமைத் திட்டம் சுத்த பைத்தியக்காரத்தனமாகு மென்றும், அது வெற்றி பெறுமானால் தேசத்தில் எங்கு

பார்த்தாலும் ராஜீயக் கொந்தளிப்பும், பெருங் குழப்பங்களும், பெருத்த கலவரங்களும், பொது ஜனங்களுக்குள்ளே அமைதியின்மையும் ஏற்பட்டு, தேசம் அநியாயமாக நாசமாகிவிடுமென்றும், ஆதலால் படித்தவர்களிலும், பாமர மக்களிலும் அறிவுமிகுந்தவர்கள் இந்த இயக்கத்திற்கு ஆதரவளிக்க மறுத்துவிடுவார்களென தாங்கள் நிச்சயமாக நம்புவதாகவும் கவர்ன்மெண்டார் மேலும் அபிப்பிராயம் வெளியிட்டனர். "ஒத்துழையாத் திட்டத்தில் தேசம் க்ஷேமப்படுவதற்கான மார்க்கம் எதையுமே காணோம்; நாசக்காற்றே அதில் வீசுகின்றது" என்றும் அவர்கள் சொன்னார்கள்.

தேசமெங்கும் புதியதோர் உணர்ச்சி பரவிநின்றது. பண்டைச் சாம்பிரதாய முறைகளில் ராஜீயக் கிளர்ச்சிகளை நடத்துவதில் ஜனங்களுக்கிருந்த நம்பிக்கை அடியோடு மாறிவிட்டது. பஞ்சாப் படுகொலை விஷயமாக பார்லிமெண்டு சபைக்கு ஓர் மனுவை அனுப்பிவைப்பதென முடிவாகியும் அகில இந்தியா காங்கிரஸ் கமிட்டியால் இதற்காக நியமிக்கப்பட்ட உப-கமிட்டி இந்தத் துறையில் எதுவுமே செய்யவில்லை. ஏனெனில் மனுக்கள் அனுப்பிக் குறைகளை நிவர்த்தித்துக் கொள்வதில் இந்த நம்பிக்கை ஆடிப்போனது தான் காரணம். சீர்திருத்தங்கள் விஷயமாக காங்கிரஸுக்கும், பிரிட்டிஷ் கமிட்டிக்கும் அபிப்பிராய பேதங்களிருந்து வருவதன் காரணமாக 1918-ம் வருஷம் முதல் பிரிட்டிஷ் கமிட்டிக்குச் செலுத்த வேண்டிய தொகையைக் காங்கிரஸ் செலுத்தவேயில்லை. இந்த வித்தியாசம் காரணமாகவே 1919-ம் வருஷத்தில் இங்கிலாந்தில் காங்கிரஸ் தூது கோஷ்டியினருக்கும், பெஸண்டம்மையாருக்கும் உக்கிரமான வாதம் நடந்தது. தொழில் கட்சியினரும், ஆங்கில "நண்பர்களும்" இவ்வபிப்பிராயபேதங்களைக் கண்டு என்ன செய்வதெனத் தெரியாமல் திகைத்து நின்றனர். கடைசியாகப் பிரிட்டிஷ் கமிட்டிக்கும், காங்கிரஸ் தூது கோஷ்டியினருக்கும் எழுத்து மூலமான ஓர் ஒப்பந்த மேற்பட்டது. இதன் காரணமாகக் காங்கிரஸின் கை சற்று ஓங்கி நின்றது. ஒப்பந்தம் ஏற்பட்டதே யொழிய பிரிட்டிஷ் கமிட்டியார் என்னமோ அதைச் சிறிதுகூட மதிக்கவில்லை. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியாரால் தெரிந்தெடுக்கப்படும் இந்தியர் ஒருவர் பிரிட்டிஷ் கமிட்டியில் அங்கம் வகிக்கவேண்டுமென்பது ஒப்பந்தத்தின் ஓர் அம்

சமாகும். ஆனால் பிரிட்டிஷ் கமிட்டியோ இதைச் சற்றும் மதிக்காமல், காங்கிரஸின் எதிர்ப்பையும் லக்ஷியம் செய்யாமல் தானே நேரடியாக இந்தியரொருவரைத் தெரிந்தெடுத்துக் கொண்டது. "இந்தியா" என்னும் பத்திரிகையையும் நிறுத்திவிட சிபார்சு செய்யப்பட்டது.

இதற்கிடையில் இந்தியாவில் என்ன நடந்ததென்பதைக் கவனிப்போம். 1929-ம் வருஷம், அக்டோபர் மாதம் 2-ந் தேதியன்று கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி இரண்டு வித நிதிகளை வசூலிப்பதெனத் தீர்மானித்தது—அதாவது (1) அகில இந்திய திலகர் ஞாபகார்த்த நிதி; (2) சுயாஜ்ய நிதி. ஆனால் 1920-ம் வருஷம், டிஸம்பர் மாதம் வரையில் இந்தத் தீர்மானத்தை நிறைவேற்றி வைக்க எவ்வித முயற்சியும் நடைபெறவில்லை. இதற்குள்ளாக வங்காளமும், மகாராஷ்டிரமும் ஒத்துழையாமை சம்பந்தமான புதிய தீர்மானங்களுக்கு உட்படவில்லை. லோகமான்ய பால கங்காதர திலகரின் சகாவான ஸ்ரீயுத கபார்தே மகாராஷ்டிரத்தில் எதிர்ப் பிரசாரக் கொடியை உயர்த்த வாரம்பித்தார். ஒத்துழையாமையின் பயனற்ற தன்மையை விளக்கி அவர் ஓர் அறிக்கையை வெளியிட்டார். மூவித பகிஷ்காரங்களையும் அவர் எதிர்த்தார். இந்த அறிக்கை 1920-ம் வருஷம், டிசம்பர் மாதம் 10-ந் தேதியன்று அதாவது நாகபுரி காங்கிரஸ் நடைபெற விருந்த சமயத்தில் வெளி வந்தது. சுய ஆட்சிச் சங்கத்தின் கொள்கையில் ஏற்பட்டுள்ள மாறுதலையும், காந்திஜியால் ஏற்படுத்தப்பட்ட சுயராஜ்ய சபை அமைப்பையும் கவனிக்கும்படி மேற்படி அறிக்கை கோரியது. கல்கத்தாவில் ஒத்துழையா இயக்கம் ஆதரிப்பாரின்றி தவித்துக்கொண்டிருக்கையில், பழைய சுய ஆட்சி சங்கக்காரர்களை யெல்லாம் காந்திஜி ஒன்றுகூட்டி, ஓரே கொடியின் கீழ் நிறுத்தி, சங்கத்தின் கொள்கையை மாற்றியதுடன் நிற்காமல், அதன் பெயரையும் "சுயராஜ்ய சபை" எனத் திருத்தி அமைத்தார். அப்பால் மேற்படி சங்கக் கொள்கைமய நாகபுரி காங்கிரஸிலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஆனால் வெகு சீக்கிரத்தில் வங்க மாகாணம் ஒத்துழையா ஜோதியில் கலந்துவிடவே, மேற்படி சுயராஜ்ய சபை கல்கத்தாவில் வேலை செய்யவே சந்தர்ப்ப மேற்படாமல் போய் விட்டது. வங்கம் மாத்திரமல்ல; மத்திய மாகாணமும் ஒத்துழையாக் கொடியின் கீழ் வந்து சேர்ந்தது. இந்த

இடத்தில் ஒரு விசேஷம் கவனிக்கத்தக்கது. ஒத்துழையா இயக்கத்தை எந்த இரண்டு மாகாணங்கள் பலமாக எதிர்த்து வந்தனவோ அந்த மாகாணங்களின் தலைநகர் களிலேயே அடுத்த இரண்டு காங்கிரஸ் மகா சபைகள் கூடியதும், அவ்விரண்டும் ஒத்துழையாமையை ஏற்றுத் தீர்மானங்கள் நிறைவேற்றியதும் விசேஷ சம்பவங்க ளாகும்.

## நாகபுரி காங்கிரஸ்

ஒத்துழையா இயக்கத்தில் சிறிதும் நம்பிக்கை யில்லாதவரும், ஒத்துழையா இயக்கத்தை பலமாக எதிர்த்த வருமாகிய லாலா லஜபதிராய் கல்கத்தாவில் நடைபெற்ற விசேஷ காங்கிரசுக்குத் தலைமை வகித்தார். ஆயுட்காலம் முழுதும் சர்க்கார் சந்தேகித்து, அவரை பொதுஜனங்க ளிடையிலிருந்து பிரித்து, நாடுகடத்தி சிறையில் வைத்து, பலவிதத்திலும் ஹிம்சை செய்தபோதிலும், சர்க்காரை முற்றும் பகிஷ்கரிப்பதில் அவர் நம்பிக்கை கொள்ளவில்லை.

ஸ்வாமி சிரத்தாநந்தர் தலைமையில் ஆரிய சமாஜத் தவர் இப்புதிய இயக்கத்தில் சிரத்தையுடன் கலந்து கொள்ள லானார்கள். அஸ்ஸாமிலிருந்தும், கிழக்கு வங்காளத்தி லிருந்தும் ஸ்ரீ சி. ஆர். தாஸ் தமது சொந்தச் செலவில் 250 பிரதிநிதிகளை அழைத்து வந்தார். கல்கத்தாவில் நிறை வேற்றிய தீர்மானங்களை மாற்றுவதே அவருடைய முக்கிய விருப்பமா யிருந்தது.

விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டத்தில் கர்னல் வெட்ஜ் வுட், மிஸ்டர் பென் ஸ்பூர், ஹோல்போர்டு நைட் ஆகியவர் பிரசன்னமாயிருந்தனர். யார் வந்தும் பயன்படவில்லை. கதர் விதி முன்னைவிட கடுமையாக்கப்பட்டது. ஒத்துழை யாமைத் தீர்மானம் மீண்டும் ஊர்ஜிதம் செய்யப்பட்டது. பிரிட்டனுடைய சம்பந்தம் வேண்டுமென்று வெளியிடப் பட்ட கொள்கையும், சட்ட வரம்புக்குட்பட்டுக் கிளர்ச்சி செய்வது என்ற கொள்கையும் மாற்றப்பட்டன. நாகபுரி காங்கிரஸ் காந்திஜிக்கு ஓர் சொந்த வெற்றியாக முடிந்தது. பழைய காங்கிரஸ்காரர்களும், காங்கிரஸ் தலை வர்களும், அரசியல் துறையில் சம்பந்தப்பட்ட பிரமுகர் களும் காந்திஜியைக் கண்டு பிரமிக்கலாயினர். " இந்த

ஆசாமி யார்? இவர் எங்கிருந்து வந்தவர்? அனுபவ பலம் பெற்றவர்போல ஓங்கிப் பேசுகிறாரே" என்று ஒருவருக்கொருவர் பேசிக்கொள்ளலானார்கள். பண்டித மாளவியா, விபின சந்திர பால், ஜின்னா, கபார்தே போன்ற அனுபவஸ்தர்களும், சி. ஆர். தாஸ், லஜபதிராய் போன்ற வீர சிங்கங்களும் கண்டு ஆச்சரியமடைந்து விட்டனர். அப்பொழுதிருந்த நமது அரசியல் தலைவர்கள் புருஷ சிரேஷ்டர்களாகையால் அவர்கள் காந்திஜி பெருமை பெறுவதில் கொஞ்சம் கூட பொறாமை கொள்ளவில்லை.

நாகபுரி காங்கிரஸ் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சிகளையும், அதனால் ஏற்பட்ட மாறுதல்களையும் கவனிப்போம். ஒத்துழையாமைத் தீர்மானம் நிறைவேறியது ஓர் முக்கிய அம்சமாகும். இதில் முக்கியமாக கவனிக்க வேண்டியமதென்னவெனில் இத்தீர்மானத்தை சி. ஆர். தாஸ் பிரேரித்தார். அதை லாலா லஜபதிராய் ஆமோதித்தார். கல்கத்தாவில் கிடைத்த ஆதரவைக் காட்டிலும், நாகபுரியில் காந்திஜிக்குக் கிடைத்த ஆதரவு பல மடங்கு அதிகம் என்பது மிகையாகாது. கல்கத்தா காங்கிரஸில் கடைசிகாலத்தில் காந்திஜிக்கு ஆதரவு காட்டிய தலைவர்களில் பண்டித மோதிலாலைத் தவிர மற்றவர்கள் அவ்வளவு முக்கியமல்ல. கோர்ட்டுகளையும், சர்க்கார் கல்லூரிகளையும் நாளடைவில் கொஞ்சம் கொஞ்சமாக பகிஷ்கரிக்கலாம் என்று பண்டித மோதிலால் பிரேரித்த திருத்தத்தை காந்திஜி ஒப்புக்கொண்டார். இது வரை நிலையற்று தத்தளித்துக்கொண்டிருந்த ஒத்துழையா இயக்கத்திற்கு நாகபுரியில்தான் பூரண ஆதரவு கிடைத்தது. காந்திஜி, பண்டித நேரு, தாஸ், லாலாஜி எல்லாரும் ஒத்துழையாமைத் தீர்மானத்தை ஒப்புக்கொண்டனர். பாஞ்சால அட்டூழியத்திற்காகவும், கிலாபத்துக்காகவும் ஒத்துழையாமை ஆரம்பிக்கப்படவில்லை. ஆனால் இந்தியா சுயராஜ்யம் பெறுவதற்காகத்தான் ஒத்துழையா இயக்கம் ஆரம்பிக்கப்படப்போகிற தென்பதைத் தெளிவுபடுத்த வேண்டுமென்று காங்கிரசுக்குத் தலைமை வகித்த சேலம் வி. விஜயராகவாசாரியார் வற்புறுத்தினர். காந்திஜி சிறிதும் தயங்காமல் அதை ஒப்புக்கொண்டார். சத்தியாக்கிரகத்தினாலும், அஹிம்ஸா முறை எதிர்ப்பாலும், ஒத்துழையா இயக்கத்தினாலும், ஓர் நியாயமான பிரச்னையில் வெற்றி பெற்றால் அவ்வெற்றி மக்களிடையே ஓர் நம்பிக்கையையும் தைரியத்தையும் உண்டுபண்ணும் என்பதே காந்திஜியின் கட்சி

யாகும். டிரான்ஸ்வாலிலும், சம்பரானிலும் நடைபெற்ற போராட்டத்தின் இறுதியில் இதே திருப்திதான் ஜனங்க ளிடை ஏற்பட்டது.

காங்கிரஸ் தலைவர் ஸி. விஜயராகவாசாரியார் ஒத் துழையாமைத் தீர்மானத்தைப்பற்றி அவ்வளவு நம்பிக்கை கொள்ளவில்லை. இருந்தபோதிலும் தமக்குச் சம்மதமில் லாத ஓர் தீர்மானம் விவாதத்திற்கு வந்தபோதெல்லாம் ஸ்ரீ ஆச்சாரியார் தலைமை ஸ்தானத்திலிருந்து வெளியே எழுந்து சென்றுவிட்டார். ஒத்துழையாமைத் தீர்மானம் ஓர் பெரிய தீர்மானமாகும். சாதாரணமாக காந்திஜி தயார் செய்யும் தீர்மானங்களின் விசேஷ அம்சங்கள் இத் தீர்மானத்திலும் காணப்பட்டன. காந்திஜியின் தீர்மானத் தின் வசனத்தையும், நடையையும் திருத்துவது எவருக்கும் அசாத்தியமாகவே இருந்தது. இருந்தாலும் மிகவும் யோசனையுடன் கொண்டுவரப்பட்ட புத்தி சாதுரியமான திருத்தங்களை காந்திஜி சந்தோஷமாகவே வரவேற்றார். கல்கத்தாவில் நிறைவேற்றப்பட்ட ஒத்துழையாமைத் தீர் மானம் அப்படியே நாகபுரியில் ஊர்ஜிதம் செய்யப்பட்டது. சர்க்காரால் அளிக்கப்பட்ட எல்லா கௌரவப் பட்டங்களை யும் உதறித் தள்ளுவதுடன், வரி செலுத்த மறுப்பது ஈறாக எல்லா அம்சங்களும் நிறைவேற்றப்பட்டன. அன் னிய நாடுகளுடன் வியாபாரச் சம்பந்தங்களை ஒழிக்கும்படி வியாபாரிகள் கேட்டுக்கொள்ளப்பட்டார்கள். கைராட்டை மூலம் நூல் நூற்க வேண்டுமென்றும், கதரையே ஆதரிக்க வேண்டுமென்றும் வற்புறுத்தப்பட்டது. அவரவர்களால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு தூரம் தேசத்திற்காக தியாகம் செய்யும்படி வேண்டிக்கொள்ளப்பட்டது. திலகர் சுயராஜ்ய நிதி திரட்ட வேண்டுமென்று தீர்மானிக்கப் பட்டது. சட்ட சபையிலிருப்பவர்களை ராஜீநாமாச் செய்து வெளியேறும்படியும், மீறி சட்ட சபைகளில் இருப்பவர்க ளுடைய உதவியை பொது ஜனங்கள் நாடவேண்டாமென் றும், ஜனங்களிடம் அதிக அன்புகாட்டி உத்தியோகத்தில் அதிக ஒழுக்கத்துடன் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் நடந்துகொள்ள வேண்டுமென்றும், ஒத்துழையா இயக்கத் தில் அவரிடம் அஹிம்சா முறை அனுஷ்டிக்கப்பட வேண்டியதவசியமென்பதும் அத் தீர்மானத்தின் சில முக்கிய அம்சங்களாகும்.

அயர்லாந்தில் பலாத்கார நம்பிக்கையுடன் நடைபெற்ற கடுமையான அரசியல் போராட்டமும், எகிப்து தேசத்தில் மில்னர் கமிஷன் அடியோடு பகிஷ்கரிக்கப்பட்டதும், இந்தியர்கள் மனத்தில் ஓர் தைரியத்தையும், உணர்ச்சியையும் ஊட்டின. அந்த நாடுகளைப்போலவே ஓர் கடுமையான அரசியல் போராட்டத்திற்கு இந்தியாவும் தயாராகிவிட்டது. ஆனால் அவர்கள் பலாத்காரத்தில் நம்பிக்கை வைத்திருந்தனர். இந்தியர்கள் சாத்வீக முறையிலும், அஹிம்சா தத்துவத்திலுமே முழு நம்பிக்கை கொள்ளலானார்கள். நாகபுரி காங்கிரஸ் விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டத்தில் கர்னல் வெட்ஜ்வுட் பேச அனுமதி பெற்றார். ஒத்துழையா இயக்கத்தை எதிர்த்து, இந்தியர்களுக்கு ஓர் எச்சரிக்கைவிடும் முறையில் அவர் பின்வருமாறு பேசினார் :—

"உங்கள் சார்பாகப் பரிந்து பேச இங்கிலாந்தில் இருந்து வரும் நண்பர்களுடைய வேலை இனி கஷ்டமாகிவிடும். உங்கள் அரசியல் வேலையில் உங்களுக்கு இனி இடையூறுகள் ஏற்படும். போலீசார் உங்களைச் சும்மாவிடமாட்டார்கள். சர்க்காருக்கு வக்கீல்கள் ராஜவிசுவாசப் பிரமாணம் செய்து கொடுக்கிறார்களாதலால், அவர்கள் ஒத்துழையாமையில் கலந்து கொள்ளமாட்டார்கள். நீங்கள் மார்க்கம் தவறி தப்பான முறைகளைக் கைக்கொள்ளப் போகிறீர்கள். வேண்டாம். அபிவிருத்தி பயக்கக்கூடிய ஓர் நிர்மாண திட்டத்தைக் கையாளுங்கள்." இதே தோரணையில் கர்னல் வெட்ஜ்வுட் சுமார் 15 நிமிஷ நேரம் பேசினார். அவர் பேசி முடிந்தவுடன் கூட்டத்திலிருந்து ஒருவர் எழுந்து கர்னல் வெட்ஜ்வுட்டுக்குப் பதிலளிக்கையில் பின்வருமாறு கூறினார் :—

"இந்தியாவுக்கு வெளியே அன்னியர் எவரும் இந்தியருடைய நேயர்களல்ல என்பதுதான் உண்மை. வீணாக மனப்பால் குடிக்கவேண்டாம். நமக்கு கதிமோட்சம் வேண்டுமானால் அதற்கு பரிகாரம் நம் கையில்தான் இருக்கிறது. நமது நாட்டின் நிலைமையை அபிவிருத்தி செய்யவும், அல்லது தாழ்மைப் படுத்தவும் நம்மால்தான் முடியும். இதை உணர்ந்துதான் இந்த திட்டத்தை நாங்கள் கையாள முன் வந்திருக்கிறோம். இந்திய அரசியல் போராட்டத்தில் போலீசார் புதிதாகத் தலையிடுகிறவர்களல்ல. வக்கீல்கள்

ராஜவிசுவாசப் பிரமாணம் செய்வது உண்மைதான். அதற்காகத்தான் சன்னதுகளைக் கிழித்தெறியும்படி அவர்களை நாம் கேட்டுக்கொள்ளுகிறோம். நாங்கள் போகும் மார்க்கத்தை நாங்கள் நன்கு அறிவோம். பாலைவனப் பிரதேசத்தின் வழியே சென்றபின் தான் தேனும், பாலும், ஓடும் செழிப்பான பிரதேசத்தை அடைந்து சுகமடையமுடியும். விடுதலை பெற்று சுதந்திர மக்களாக வாழவேண்டுமானால் ஒத்துழையா இயக்கம் என்ற பாலைவனப் பிரதேசத்தைக் கடந்து தான் ஆகவேண்டும். உண்மையும், சத்தியமும், தியாகமும் உள்ள ஓர் வீரத் தலைவரிடத்தில் எங்களுக்கு நம்பிக்கை இருக்கிறது."

நாணயமாற்ற முறையில் ஏற்படுத்தப்பட்ட புதிய முறை கண்டிக்கப்பட்டது. இப் புதிய முறையால் இந்தியாவுக்கு ஏராளமான நஷ்டம் ஏற்படுமென்று விளக்கப்பட்டது. இந்தியாவுக்கு வரப்போகும் கானாட்டுக் கோமகனுக்கு அளிக்கப்படும்மரியாதைஆர்ப்பாட்டங்களில்கலந்துகொள்ள வேண்டாமென்று பொது ஜனங்கள் வேண்டிக்கொள்ளப்பட்டனர். தொழிலாளர்களுக்கு ஆதரவு காட்டப்பட்டது. வெளி நாடுகளுக்கு உணவுப் பொருள்கள் ஏற்றுமதி செய்யப்படுவது கண்டிக்கப்பட்டது. மற்றும் அரசியல் விதிகள் சம்பந்தமாகவும், பாஞ்சாலம், டில்லி முதலிய இடங்களில் அடக்குமுறை தாண்டவம் சம்பந்தமாகவும், சர்க்கார் முறை கண்டிக்கப்பட்டது.

கடைசியாக காங்கிரஸ் அமைப்பு முறையில் மாறுதல் ஏற்படுத்தப்பட்டது. காங்கிரஸின் லட்சியம் மாற்றப்பட்டது. நியாயமாகவும், சாத்வீகமாகவும் சுயராஜ்யம் பெறுவதுதான் காங்கிரஸின் லட்சியம் என்பது ஊர்ஜிதமாயிற்று. பாஷாவாரியாக காங்கிரஸ் மாகாணங்கள் பிரிக்கப்பட்டன. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு ஓர் நிர்வாகக் கமிட்டி நியமிக்கப்பட்டது. இக் கமிட்டியில் தலைவர், காரியதரிசிகள், பொக்கிஷத்தார் உட்பட 15 அங்கத்தினர் இருக்கலாமென்று முடிவு செய்யப்பட்டது ஓர் புதிய மாறுதலாகும். வெளிநாடுகளில் சத்தியாகிரஹப் போராட்டத்தை நடத்திவரும் இந்தியர்களுக்கு ஆதரவளிப்பதாகவும், அவர்களுக்குத் தொண்டு செய்யும் பூஜ்யர் ஸி. எப். ஆண்டிரூஸுக்கு வந்தனமளிப்பதாகவும் தீர்மானங்கள் நிறைவேறறப்பட்டன.

## அத்தியாயம் 2

---

### புதிய சகாப்தம்

இந்து தேச சரித்திரத்தில் நாகபுரி காங்கிரஸ் ஓர் புதிய சகாப்தத்தின் ஆரம்பமாகும். ஓர் புதிய நம்பிக்கையும், பொறுப்பும், உணர்ச்சியும் அரசியல்வாதிகளிடைத் தோன்றலாயிற்று. பயனளியா முறையில் சர்க்காரிடம் கோபங்கொள்வதும், பலங்குன்றி எக்காரியத்திற்கும் சர்க்காரிடம் பல்லைக்காட்டி கெஞ்சி வந்த காலமும் மலையேறி விட்டது. சுதந்திரம் பெறவேண்டுமானால் தாங்களே பாடு பட்டுப் போராடினால்தான் முடியுமென்பதை ஜனங்கள் உணரலாயினர்.

ஜனங்களின் தலைமீது நாகபுரி காங்கிரஸ் ஓர் பளுவான சுமையை வைத்துவிட்டது. அவரவர் தங்கள் தங்கள் கடமையைச் செய்தாகவேண்டும். காரியக் கமிட்டியின் யோசனைப்படி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி இந்த வேலையை வெகு மும்முரமாக ஆரம்பிக்கத் தலைப்பட்டு விட்டது. இதற்கிடையில் இந்தியாவின் நிலைமை எப்படியிருந்ததென்பதைக் கவனிப்போம்.

ஒருவழியாக 1920-ம் ஆண்டின் முடிவில் மிதவாதிகள் காங்கிரசிலிருந்து வெளியேறினார்கள். 1921-ம் ஆண்டில் புதிய மந்திரிப் பதவிகளைப் பலர் பெறலாயினர். சுரேந்திரநாத் பனர்ஜி சர் பட்டம் வகிக்கலானார். லார்டு லின்லிதா முதல் இந்திய கவர்னர் பதவியை ஏற்றார். இந்தியாவிலுள்ள கோப உணர்ச்சியைச் சாந்தப்படுத்தி புதிய சகாப்தத்தை ஆரம்பித்துவைக்க ஜார்ஜ் மன்னரின் சிற்றப்பன் கானாட்டுக்கோமகன் இந்தியாவுக்கு அனுப்பப் பட்டார்.

வெகு அழகான முறையில் கானாட்டுக் கோமகன் பின்வருமாறு பேசினார் :—

"புண்களை ஆற்றி பிரிந்திருப்பவர்களை ஒன்றுபடுத்தும் விருப்பம் மேலிடும் உணர்ச்சியை நான் இப்பொழுது அடைந்துளேன். வெகு காலந்தொட்டு இந்தியாவின் ஆப்த நண்பன் என்கிற முறையில், பழய தகராறுகளையும், கோபச் செயல்களையும், சம்பவங்களையும் மன்னித்து

மறந்துவிடும்படி இந்தியர்களையும், ஆங்கிலேயர்களையும் நான் வேண்டிக்கொள்ளுகிறேன். இந்தியர்களும், ஆங்கிலேயர்களும் இனி ஒவ்வொரு நாளும் அதிகமாக ஒத்துழைக்கவேண்டுமென விரும்புகிறேன்.''

சுப்ரீம் கௌன்ஸிலில் பாஞ்சால அட்டூழியத்தைப் பற்றி ஓர் தீர்மானம் பிரேரித்தபோது, சர்க்கார் தரப்பில் விவாதத்தை நடத்திய சர். வில்லியம் வின்சண்ட் வெளிப்படையாகப் பின்வருமாறு பேசினர் :—

"பாஞ்சாலத்தில் நடைபெற்ற அக்கிரமச் செயல்களைக் கண்டு சர்க்கார் அதிகமான வருத்தமடைந்து விட்டனர். இனி ஒரு நாளும் இந்தமாதிரி அக்கிரமங்கள் நடைபெறுதென்று சர்க்கார் உறுதி கூறுகின்றனர்." இம்மாதிரி பதிலளித்து, ஜெனரல் டயர்மீது கடுமையான நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டுமென்ற பகுதியைத் தீர்மானத்திலிருந்து வாபஸ் வாங்கிக்கொள்ளும்படி செய்துவிட்டார். ஜெனரல் டயர் உத்தியோகத்திலிருந்து விலக்கப்பட்டு, ஒரு சமயம் பென்ஷனை இழக்க நேருமெனக் கருதி, இந்தியாவிலுள்ள வெள்ளை மாதர்கள் டயரை ஓர் வீரனாகப் பூஜித்து அவருக்கு 20,000 பவுன் பரிசாக அளித்தனர். இத்துடன் நில்லாது, ஜெனரல் டயருக்கு ஏதாவது கொஞ்சம் நஷ்டம் ஏற்பட்டிருக்குமென்று எண்ணினாலும் அதற்கெல்லாம் ஈடு செய்ய பிரிட்டனில் அவருக்கு மரியாதையாக ஓர் கத்தி பரிசளிக்கப்பட்டது. ஜெனரல் டயருக்கு துணையாக இருந்த மற்றொரு பெரிய குற்றவாளியாகிய கர்னல் ஜான்ஸனுக்கு இந்தியாவில் ஓர் வியாபார நிலையத்தில் பெரிய உத்தியோகம் அளிக்கப்பட்டது. ஆகவே காஞட்டுக் கோமகனுடைய வேண்டுகோள்களும், சர்க்கார் ஹோம் மெம்பருடைய இனிய சமாதான வசனங்களும் இந்தியருக்குத் திருப்தியை அளிக்கவில்லை. ஒத்துழையா இயக்கம் அனுஷ்டானத்திற்கு வரலாயிற்று. ஓர் முக்கிய விஷயம் மட்டும் கவனிக்கப்படவேண்டும். 1921-ம் வருஷ ஆரம்பத்தில், அடக்குமுறைச் சட்டங்களை ஆராய்ச்சி செய்ய மத்திய சட்ட சபையால் ஓர் கமிட்டி நியமிக்கப்பட்டது. 1922-ம் வருஷ ஆரம்பத்தில் கிரிமினல் லா திருத்தச் சட்டத்தைத் தவிர ஏனைய அடக்குமுறைச் சட்டங்கள் அனைத்தும் வாபஸ் செய்யப்பட்டன. இந்த உபசாந்திகளால் இந்தியருடைய உண்மையான மனோ

வியாதியைத் தீர்க்க முடியவில்லை. இந்தியருடைய கோபம் கொதித்துக்கொண்டே யிருந்தது. இதற்குப் பரிகாரம் தேடவேண்டிய பொறுப்பு காங்கிரசுடையதாயிற்று.

## ஒத்துழையாப் போர் ஆரம்பம்

நாகபுரி காங்கிரஸ் கோரிக்கைகளின்படி நடக்க மக்கள் சிறிதும் தயங்காமல் பெருவாரியாக முன் வந்தார்கள். ஓட்டு செய்யக்கூடாதென்று ஜனங்களிடை நடைபெற்ற பிரசாரம் விசேஷ வெற்றியுடன் முடிந்தது. கோர்ட்டுகள் பகிஷ்காரமும், கல்லூரிகள் பகிஷ்காரமும் அவ்வளவு திருப்தியை யளிக்கவில்லையாயினும், அவைகளின் மதிப்பு மிகவும் குறையலாயிற்று நாட்டில் ஏராளமான வக்கீல் கள் தங்கள் வேலையினின்று வெளியேறி ஒத்துழையா இயக்கத்திற் கலந்துகொண்டனர். தேசியக் கல்வித் துறையில் எதிர்ப்பாராத அபிவிருத்தி ஏற்படலா யிற்று. கலாசாலைகளிலிருந்து வெளியேறிய மாணவர் தொகை அதிகமாக இல்லையாயினும் தேசியக் கல்வியில் அநேகர் கவனம் செலுத்தலானார்கள். ஜனங்களிடத் துள்ள தைரியத்தையும், பலத்தையும் நசுக்கவேண்டி ஆரம்பிக்கப்பட்டு நடைபெறும் கலாசாலையை விட்டு வெளி யேறி, தேச சேவையில் அதிகமாக ஈடுபடும்படி மாணவர் களுக்கும் வாலிபர்களுக்கும் காந்திஜி விடுத்த வேண்டு கோள் வெகு உற்சாகத்துடன் வரவேற்கப்பட்டது. இதே சமயத்தில் இந்தியாவில் பல இடங்களில் தேசியக் கல்வி போதிக்கும் கல்லூரிகள் ஏற்படுத்தப்பட்டன. ஐக்கிய மாகாணம், பாஞ்சாலம், பம்பாய் இம் மாகாணங் களில் மாணவர் இயக்கம் தலைதூக்கி நிற்கலாயிற்று. வங்காளம் மற்ற மாகாணங்களுக்குச் சிறிதும் பின் வாங்க வில்லை. ஜனவரி மாதத்தில் ஸ்ரீ தேசபந்துவின் வேண்டு கோளுக்கிணங்கி ஆயிரக் கணக்கான மாணவர்கள் கல்லூரி களை விட்டு வெளியேறினர். பிப்ரவரி மாதம் 4-ம் தேதி கல்கத்தாவில் தேசிய கலாசாலையை காந்திஜி திறந்துவைத் தார். நான்கு மாத காலத்திற்குள்ளாக, அலிகார் தேசிய முஸ்லீம் சர்வகலாசாலை, குஜராத் வித்யா பீடம், பீஹார் வித்தியா பீடம், காசி வித்யா பீடம், வங்காள தேசிய சர்வகலாசாலை, திலகர் மகாராஷ்டிர வித்தியா பீடம், மற்றும் பல தேசியக் கலாசாலைகள் தோன்றலாயின.

நாகபுரி தீர்மானத்தை யொட்டி அகில இந்திய காங்கிரஸ் காரியக்கமிட்டி 1921-ம் ஆண்டில் அநேகமாக மாதா மாதம் வெவ்வேறு இடங்களில் கூடிற்று. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் முதல் கூட்டம் நாகபுரியில் நடைபெற்றது. இக்கூட்டத்தில்தான் காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். ஏற்கனவே ஹோம் ரூல் கோஷ்டியினரிடமிருந்து 'யங் இந்தியா' வாரப் பத்திரிகையை காந்திஜி வாங்கிக்கொண்டு விட்டார். இந்த ஆங்கில பத்திரிகை வாயிலாக ஒத்துழையா இயக்கத்தைப் பிரசாரம் செய்வது மிகவும் சாதகமாக இருந்தது. நாகபுரி காங்கிரஸின் வரவேற்புக் கமிட்டித் தலைவரான சேத் ஜமன் லால் பஜாஜ் தமது 'ராவ் பகதூர்' பட்டத்தை உதறியெறிந்துவிட்டு திலகர் சுயராஜ்யநிதிக்கு ஒரு லக்ஷ ரூபாய் நன்கொடை யளித்தார். பிறகு 1921-ம் வருஷம் ஜனவரி மாதம் 31-ம் தேதியன்று கல்கத்தாவில் காரியக் கமிட்டி கூடியது. திலகர் சுயராஜ்ய நிதியை எப்படி பகிர்ந்து உபயோகிப்பதென்பது நிச்சயிக்கப்பட்டது. தேசீயக் கலாசாலைகளில் ஹிந்தியும், நூல் நூற்பதும் கற்பிக்கப்பட வேண்டுமென்றும், கிராமத்தில் வேலைசெய்ய தொண்டர்களுக்குப் பயிற்சி அளிக்கப்பட வேண்டுமென்றும் முடிவு செய்யப்பட்டது. தொழிலாளர் சங்கங்களின் மேற்பார்வையை சி. ஆர். தாஸ் ஏற்றுக் கொண்டார். பொருளாதாரத் துறையில் பஹிஷ்காரத்தை நடத்தும் கமிட்டியைக் கூட்டிவைத்து நடவடிக்கைகளைக் கவனிக்க சி. எல். ஆர். டையர்ஸி நியமிக்கப்பட்டார். அடுத்தபடி மார்ச்சு 31-ம் தேதி, ஏப்ரல் முதல் தேதிகளில் பெஜவாடாவில் காரியக் கமிட்டிக் கூட்டம் நடைபெற்றது. அதே சமயத்தில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியும் பெஜவாடாவில் கூடியது. வரிகொடா இயக்கத்தை நடத்த பக்குவமான காலம் இன்னும் வரவில்லையென்று காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் ஏகமனதாக அபிப்பிராயப்பட்டனர்.

பெஜவாடா கூட்டத்தில்தான், சுயராஜ்ய நிதிக்கு ஒருகோடி ரூபாய் சேகரிப்பதாகவும், ஒரு கோடி காங்கிரஸ் அங்கத்தினர்கள் பதிவு செய்வதாகவும், 20 லட்சம் ராட்டினங்கள் செய்து கதரை அபிவிருத்தி செய்வதென்றும் நிச்சயிக்கப்பட்டு, இதைப் பூர்த்தி செய்யும் பொறுப்பு பொது ஜனங்கள்மீது சுமத்தப்பட்டது. அந்தந்த மாகாணத்

தின் ஜனத்தொகைக்குச் சரியான விகிதப்படி இந்த வேலையைப் பங்குபோட்டு நடத்தவேண்டுமென்று ஒப்புக்கொள்ளப்பட்டது. கிராமப் பஞ்சாயத்து நிர்மாண வேலையும், மதுவிலக்குப் பிரசாரத்தையும் கைக்கொள்ளவேண்டுமென்று காங்கிரஸ் தொண்டர்களுக்குக் கட்டளை யிடப்பட்டது. இப்படிப்பட்ட தீங்கற்ற சீர்திருத்தங்களைப்பற்றிப் பிரசாரம் செய்தபோதே சர்க்கார் கடுமையான முறைகளைக் கையாளத் தலைப்பட்டு விட்டனர். பலவிடங்களில் காங்கிரஸ் தலைவர்கள்மீது 144-வது பிரிவுப்படியும், 108-வது பிரிவுப்படியும் நோட்டீஸ்கள் சாதரா செய்ய ஆரம்பித்துவிட்டனர். உடனே சட்டமறுப்பியக்கம் ஆரம்பிக்க தேசம் தயாராக இல்லையென்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அபிப்பிராயப்பட்டது. சர்க்கார் உத்திரவுகளை மீற வேண்டாமென்றும் காங்கிரஸ் தொண்டர்களுக்கு ஆக்ஞை பிறப்பிக்கப்பட்டது. நான்கானு படுகொலை சம்பந்தமாக அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி தனது மனவருத்தத்தைத் தெரிவித்தது. சீக்கியர்களுக்கு ஏற்பட்ட உயிர்ச்சேதத்திற்கு அனுதாபம் தெரிவிக்கப்பட்டது. மார்ச்சு மாதம் இரண்டாவது வாரத்திலேயே நாடு முழுதும் பலத்த பரபரப்பு நிலவலாயிற்று. மைமன்சிங்குக்குள் செல்லக்கூடாதென்று ஸ்ரீ சி. ஆர். தாஸ் மீது தடை யுத்திரவு பிறப்பிக்கப்பட்டது. பாபு ராஜேந்திர பிரசாதும், மௌலானு மஸ்மல் ஹக்கும் அர்ராவுக்குள் செல்ல அனுமதிக்கப்படவில்லை. கல்கத்தாவிற்குள் செல்ல யாகூப் ஹஸேனுக்குத் தடை விதிக்கப்பட்டது. பெஷாவார் செல்ல லாலா லஜபதிராய்க்கு அனுமதிக்கப்பட்டது. மற்றும் அநேகர் மீது தடையுத்திரவுகள் பிறப்பிக்கப்பட்டன. லாகூரில் கூட்டங்கள் நடத்தினல் ராஜத்துவேஷக் குற்றம் சாட்டப்படுமென அறிவிக்கப்பட்டது. இந்த அக்கிரமங்கள் எல்லாம் நான்கானு படுகொலைக்கு ஈடாகா. மார்ச்சு மாதம் முதல் வாரத்தில் குருத்துவாரத்தில் குழுமியிருந்த சீக்கியர்கள் திடீரெனத் தாக்கப்பட்டு, சுட்டு வீழ்த்தப்பட்டார்கள். இப்படுகொலையில் 195 பேர் மாண்டதாகக் கணக்கிடப்படுகிறது. இரண்டு போட்டி சிக்கிய கோஷ்டியினருக்குள் இருந்த விரோதம்தான் இப்படுகொலை சம்பவத்திற்குக் காரணம் என்று சர்க்கார் ராஜாங்க சபையில் மழுப்பிவிட்டனர். நான்கானு படுகொலைமாதிரி இந்திய சரித்திரத்தில் இதுவரை நடந்ததே கிடையாது. சீக்கிய யாத்ரிகர்கள் சிறிதும்

இரக்கமின்றிச் சுட்டு வீழ்த்தப்பட்டனர். காயமடைந்து உயிருடன் தத்தளித்துக் கொண்டிருப்பவர்கள் நீக்குழியில் எறியப்பட்டனர்.

## காந்திஜி-ரீடிங் சந்திப்பு

பெஜவாடா கூட்டத்தில் காங்கிரஸின் வரவு செலவு திட்டம் கவனிக்கப்பட்டது. அடுத்த காரிய கமிட்டிக் கூட்டம் மே மாதம் 10-ம் தேதி அலகபாத்தில் நடை பெற்றது. இக்கூட்டத்தில் முக்கியமான தொன்றும் நடை பெறவில்லை. பிறகு ஜூன் மாதம் 15-ம் தேதி பம்பாயில் காரியக் கமிட்டி கூடிற்று. வைசிராயைப் பேட்டி கண்ட சம்பந்தமாக காந்திஜி அப்பொழுது ஓர் அறிக்கை வெளியிட்டார். பண்டித மதன் மோகன் மாளவியாதான் வைசிராய்க்கும், காந்திஜிக்கும் இந்த பேட்டியை ஏற்பாடு செய்தார். காந்திஜியின் உண்மை தேசாபிமானத்தையும், சத்தியத்தையும் அரிய லார்டு ரீடிங்குக்கு ஓர் சந்தர்ப்பம் அளிக்கப்பட்டது. ஒத்துழையா இயக்கத்தின் மீது நடவடிக்கை எடுத்துக்கொள்வது தவறு என்பதை அப் பொழுதுதான் வைசிராய் உணர்ந்தார். அலி சகோதரர் களின் பேச்சு ஒத்துழையா இயக்கத்தின் லட்சியத்தையே தகர்ப்பதாக இருப்பதாக இந்தப் பேட்டியில் வைசிராய் குறிப்பிட்டார். ஜனங்களை பலாத்கார முறைக்குத் தூண்டும் முறையில் அவர்களுடைய சொற்பொழிவுகள் இருந்து வருவதாகவும், காந்திஜியின் அஹிம்சா தத்துவத் தை அடிப்படையாகக் கொள்ளவில்லையென்றும் வைசிராய் காந்திஜியிடம் தெரிவித்தார். மேற்படி பேச்சுகளுக்குத் தவறான அர்த்தம் செய்யக்கூடும் என்பதை காந்திஜியும் ஒப்புக்கொண்டார். பிறகு காந்திஜி அலி சகோதரர்களுக்கு இதைப்பற்றி எழுதி, பலாத்காரத்தில் தாங்கள் நம்பிக்கை கொள்ளவில்லையென்பதை விளக்கி, அறிக்கை விடுக்கும் படி செய்தார்.

கீழ்க்கண்ட அறிக்கையை அலி சகோதரர்கள் பம் பாயிலிருந்து மே மாதம் 29-ம் தேதி வெளியிட்டனர்:—

"எங்களுடைய சொற்பொழிவுகளில் சிலவற்றில், நாங்கள் ஜனங்களை பலாத்காரத்திற்குத் தூண்டுவதாக பொருள் கொள்ளக் கூடுமென்று தாங்கள் அபிப்ராயப்

படுவதாக எங்கள் நண்பர்கள் எங்களுக்குத் தெரியப்படுத்தினார்கள். இப்படிபட்ட வியாக்கியானத்திற்கு எங்கள் பேச்சில் ஒன்றும் இருப்பதாக நாங்கள் கனவிலும் கருதவில்லை என்பதை வெளிப்படுத்த விரும்புகிறோம். எங்களுடைய பேச்சுகளில் அனுவசியமான சில ஆத்திர மூட்டக்கூடிய பகுதிகள் இருப்பதற்கு எங்கள் மன்மார்ந்த வருத்தத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம். நாங்கள் அஹிம்சா முறையில் நடத்தப்படும் ஒத்துழையா இயக்கத்தில் ஈடுபட்டிருக்கும் வரையில் பகிரங்கமாகவோ அல்லது திரை மறைவிலிருந்துகொண்டோ இப்பொழுதும் சரி, வருங்காலத்திலும் சரி பலாத்காரத்தை ஆதரிக்கமாட்டோம் என்று யாருக்கு வேண்டுமானாலும் உறுதியாக சத்தியம் செய்து கொடுக்கிறோம். பலாத்காரத்திற்கு ஜனங்களை ஆயத்தப் படுத்துவது அஹிம்சா தத்துவத்திற்கும், ஒத்துழையா இயக்கத்திற்கும் எதிரிடையானதென்று நாங்கள் நம்புகிறோம்.''

ஒத்துழையா இயக்கத்தின் சரித்திரத்தில் அலி சகோதரர்களுடையஅறிக்கை முக்கியமாகக் கருதப்பட்டது. லார்டு ரீடிங் திருப்தியடைந்து அலி சகோதரர்கள்மீது நடவடிக்கை எடுப்பதை விட்டுவிட்டார்.

அரசியல் வழக்குகளில் எதிர்வாதம் செய்வதுபற்றி பம்பாய் கூட்டத்தில் நன்கு விளக்கப்பட்டது கோர்ட்டில் ஓர் அறிக்கை வெளியிடுவதைத் தவிர வழக்கு விசாரணையிற் ஒத்துழையா இயக்கத்தவர்கள் கலந்துகொள்ளவே கூடாதென்று விதிக்கப்பட்டது. ஜாமீன் தொகை கேட்கப்பட்டால், அதைக் கட்டாமல் சிறை செல்லவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. ஒத்துழையா இயக்கத்தில் சேர்ந்த வக்கீல்கள் இனமாகவோ அல்லது பீஸ் வாங்கிக்கொண்டோ கோர்ட்டுகளில் பேசக்கூடாதென்று விதி ஏற்படுத்தப்பட்டது. அச் சமயம் மீண்டும் துருக்கி சர்க்காருடன் அங்கோராவில் யுத்தம் ஆரம்பமாகக் கூடுமென்று எதிர் பார்க்கப்பட்டது. அப்படி ஒரு சமயம யுத்தம் ஏற்பட்டால், பிரிட்டிஷ் சர்க்காருக்கு உதவி செய்யக்கூடாதென்பதை ஒவ்வொரு இந்தியனும் தனது கடமையாகக் கருதவேண்டுமென்று காரியக் கமிட்டி அபிப்பிராயம் வெளியிட்டது. இந்த யுத்தம் முஸ்லீம்களுக்கு விரோதமாக நடைபெறுவதால், முஸ்லீம்களுடைய அபிப்பிராயத்திற்கு எதிரிடை

யாக யுத்தத்தில் கலந்துகொள்ள மறுப்பது இந்திய சிப்பாய்களுடைய கடமையென்று கருதப்பட்டது.

1921-ம் வருஷம் ஜூலை மாதம் 28, 29, 30 தேதிகளில் பம்பாயில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூடியது. பெஜவாடா திட்டம் வெற்றிகரமாக நடைபெற்றதைக் குறித்து நாடெங்கும் உற்சாகம் அதிகமாக இருந்தது. திலகர் சுயராஜ்ய நிதிக்கு எதிர்பார்த்ததைவிட 15 லட்சம் ரூபாய் அதிகமாகக் கிடைத்துவிட்டது. காங்கிரஸ் அங்கத்தினர்கள்மட்டும் 50 லட்சம் தான் பதிவுசெய்ய முடிந்தது. சர்க்கார் திட்டம் ஏறக்குறைய பூர்த்தியாகிவிட்டது. ஆகவே அடுத்தபடியாக நூல் நூற்பதை வளர்த்து, கதர் உற்பத்தியைப் பெருக்க அன்னியத் துணி பகிஷ்காரமும் சேர்ந்தார் போல ஆரம்பிக்கப்பட்டது. ஆகஸ்டு மாதம் முதல் தேதியிலிருந்து காங்கிரஸைச் சேர்ந்த ஒவ்வொருவரும் அன்னியத் துணி அணியக்கூடாதென அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி உத்திரவு பிறப்பித்தது. இந்திய மில் துணிகளின் விலையைக்கட்டுப்படுத்தி, எவ்வளவு தூரம் குறைக்கக் கூடுமோ அவ்வளவு தூரம் குறைத்து விற்கும்படி ஆலைச் சொந்தக்காரர்கள் கேட்டுக்கொள்ளப்பட்டார்கள். அன்னியத் துணி வியாபாரிகளை இனி அன்னியத் துணி வரவழைக்க வேண்டாமென்றும், கையிலிருக்கும் சரக்கை இந்தியாவுக்கு வெளியே விற்பனை செய்யும்படியும் கேட்டுக்கொள்ளப்பட்டது. சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் தங்கள் உத்தியோகங்களை ராஜீநாமாச் செய்துவிடும்படி யோசனை கூறுவதும் அதன் யுக்தா யுக்தத்தைப்பற்றி அபிப்பிராயம் விடுவிப்பதும் அவரவருடைய பிறப்புரிமை யென்றும், நாட்டில் பெருவாரியான மக்களின் நம்பிக்கையை இழந்துவிட்ட ஓர் அரசாங்கத்துடன் தங்கள் சம்பந்தத்தை கத்தரித்துக் கொண்டுவிடும்படி பகிரங்கமாக ஒவ்வொரு சோல்ஜரையும், சிவில் உத்தியோகஸ்தரையும் வேண்டிக்கொள்ள ஒவ்வொருவருக்கும் உரிமை யுண்டென்றும் அகில இநதிய காங்கிரஸ் கமிட்டி தன் அபிப்பிராயத்தை வெளியிட்டது.

## அடக்குமுறைத் தாண்டவம்

மதுவிலக்குப் பிரசாரம் சம்பந்தமாக தார்வார், மாதியாரி முதலிய இடங்களில், அனாவசியமாக அதிகாரிகள் தலையிட்டதினால், கலவரங்கள் ஏற்படலாயின. அதிகாரி

கள் தலையிடுவார்களானால் மறியல் வேலையை மேலும் இடைவிடாது நீடிப்பதாக காரியக் கமிட்டி சர்க்காருக்கு எச்சரிக்கை விடுத்தது. லாகிரி வஸ்துக்களை விற்பனை செய்ய வேண்டாமென்று வியாபாரிகளுக்கு வேண்டுகோள் விடுவிக்கப்பட்டது. காங்கிரஸ் திட்டத்தை பிரசாரம் செய்கையில் அஹிம்சா தர்மத்தை அனுஷ்டிக்க வேண்டுமென்று காங்கிரஸ் வற்புறுத்தி வந்தது. சிற்சில இடங்களில் அதிகாரிகள் வரம்பு மீறி பலாத்காரத்தை உபயோகித்து மிருகத் தன்மையைக் காட்டியபோதிலும், காங்கிரஸ் வாதிகள் அஹிம்சா முறையை அனுஷ்டித்து சாத்வீகப் போராட்டத்தைப் பொறுமையுடன் நடத்தியதற்காக அவர்களை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி போற்றியது. ஐக்கிய மாகாணத்தில் அடக்குமுறைக் கொடுமை அதிக கடுமையாக இருந்தது. பல இடங்களில் கூட்டத்தில் போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்து ஜனங்களைக் காயப்படுத்தினார்கள். பலர் எதிர்வாதம் செய்யாமல் சிறை சென்றார்கள். நிரபராதிகள் சிறை செல்வதன் மூலம்தான் நாடு விடுதலை பெறும் என்று இத் தியாகிகளை ஜனங்கள் போற்றலாயினர். சர்க்காரின் கொடிய அடக்குமுறைகளுக்கு பதிலளிப்பதற்காகச் சட்டமறுப்பு இயக்கத்தை உடனே ஆரம்பிக்க வேண்டுமென்று பல மாகாணங்களிலிருந்து வேண்டிக்கொள்ளப்பட்டது. பஞ்சாபில் நடைபெற்ற அக்கிரமச் செயல்களை விசாரிக்க வேண்டி நியமிக்கப்பட்ட கமிட்டியை எல்லைப்புற மாகாணத்திற்குள் அனுமதிக்க சர்க்கார் மறுத்துவிட்டனர். நாட்டில் அஹிம்சா தத்துவம் வேரூன்ற வேண்டியும், ஜனங்களிடை காங்கிரசுக்கு எவ்வளவு செல்வாக்கு இருக்கிறதென்பதை சோதிக்கவும், சுதேசியை முன்னிலும் ஊக்கமாகப் பிரசாரம் செய்யவும், சட்டமறுப்பு ஆரம்பிப்பதை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி ஒத்திவைத்து விட்டது. தவிர, இந்தியாவுக்கு வேல்ஸ் இளவரசர் விஜயம் செய்கையில் ஓர் பெரிய ஆர்ப்பாட்டம் நடத்த வேண்டியிருந்தது. வேல்ஸ் இளவரசர் விஜயம் சம்பந்தமாக, உத்தியோகஸ்தர்களாலோ அல்லது தனிப்பட்டவர்களாலோ நடத்தப்படும் வைபவங்களிலும், விருந்துகளிலும் கலந்து கொள்ளாமலிருப்பதும், அவ்விஷயங்களுக்கு உதவிபுரியாமலிருப்பதும் உண்மை இந்தியர் கடமை என்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி ஓர் தீர்மானத்தை நிறைவேற்றி வெளிப்படுத்தியது. இந்த சமயத்

தில் சட்டமறுப்பியக்கத்தை ஆரம்பிக்காமல் ஒத்திவைத்த கமிட்டியின் முடிவு மெச்சத்தக்கதுதான்.

1921-ம் வருஷம் ஜூலை மாதம் 21-ம் தேதி யன்று தார்வாரில் பொது ஜனங்கள் மீது அதிகாரிகள் துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். இத் துப்பாக்கிப் பிரயோகத்தைப் பற்றி விசாரணை செய்ய ஸ்ரீ பவானி ஷங்கர் நியோகி (தற்சமயம் மத்திய மாகாண ஹைகோர்ட் ஜட்ஜ்), அபாஸ் டயாப்ஜி, ஸ்ரீ ஸ்டோலர் மூவரையும் காங்கிரஸ் காரியக் கமிட்டி நியமித்தது.

மறுபடியும் காங்கிரஸ் காரியக் கமிட்டி ஆகஸ்டு மாதம் 16-ம் தேதி பாட்னாவில் கூடியது. ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்த ஹமீர்தார் ஜில்லா வாசிகள் 144-வது பிரிவுப்படி விதிக்கப்பட்ட தடை உத்திரவை மீற அனுமதியளிக்கும்படி காரியக் கமிட்டிக்கு விண்ணப்பம் செய்துகொண்டிருந் தனர். அவர்களுக்கு காரியக் கமிட்டி அனுமதி யளிக்காமல் அடுத்த கூட்டத்தில் கவனிப்பதாகச் சொல்லிவிட்டது. அன்னியத் துணி பகிஷ்காரத்தை மும்முரமாக நடத்த காரியக் கமிட்டி விரும்பியது. செப்டம்பர் மாதம் 30-ந் தேதிக்குள்ளாக இந்தியாவிலுள்ள ஒவ்வொரு வீட்டிலு முள்ள அந்நியத் துணிகளை சேகரித்துவிட வேண்டு மென்றும் அதற்காக தக்க தலைவர்கள் மேற் பார்வை யில் தொண்டர்கள் நியமிக்கப்பட வேண்டுமென்றும் காரியக் கமிட்டி வற்புறுத்தியது. கைராட்டினத்தால் நூல் நூற்பதைப் பரவச் செய்யவும், கைத்தறி நெசவை அபிவிருத்தி செய்யவும், கதர் உற்பத்தியை அதிகப்படுத்தவும், திலகர் சுயராஜ்ய நிதியில் நாலில் ஒரு பங்கு ஒதுக்கிவைக்கப்பட வேண்டுமென்றும் வற்புறுத்தப்பட்டது. செப்டம்பர் மாதம் 6, 7, 8, 11 தேதிகளில் கல்கத்தாவில் காங்கிரஸ் காரியக் கமிட்டி கூடிற்று. இந்தக் கூட்டம் ஓர் முக்கிய கூட்டமாகும். தார்வார் துப்பாக்கிப் பிரயோக அறிக்கையும், மாப்பிள்ளை கலக ஆரம்பமும் காரியக் கமிட்டிமுன் கவனிக்கப்பட்டன. மலையாளத்தில் சில இடங்களில் மாப்பிள்ளைகள் பலாத் காரச் செயல்கள் புரிந்ததற்கு வருந்துவதாகவும், அவர் களுடைய செயல்களிலிருந்து காங்கிரஸின் தத்துவத் தையும், மத்திய கிலாபத் கமிட்டியின் தத்துவங்களையும் அறியாத ஜனங்கள் நாட்டிலிருந்து வருவதாகத் தெரிகிற

தென்றும், நெருக்கடியான நிலைமையிலும் அஹிம்சா தர்மத்தைக் கடைபிடிக்கும்படி ஜனங்களிடை பிரசாரம் செய்யும்படி ஒவ்வொரு காங்கிரஸ் தொண்டரையும் கிலாபத் தொண்டரையும் வேண்டிக்கொள்ளுவதாகவும் காரியக் கமிட்டி ஓர் தீர்மானம் நிறைவேற்றிற்று.

மாப்பிள்ளைகளுடைய பலாத்காரச் செயல்களை காரியக் கமிட்டி கண்டித்தபோதிலும், அவர்களுக்குச் சகிக்க முடியாத கோப மூட்டப்பட்டிருப்பதாக காரியக் கமிட்டி தெரிவித்தது. மாப்பிள்ளை கலவரம் சம்பந்தமாகச் சர்க்கார் விடுத்த அறிக்கை ஒரு பக்ஷமாக இருப்பதாகவும், மாப்பிள்ளைகள் செய்த குற்றங்கள் மிகைபடுத்தப்பட்டிருப்பதாகவும், சட்டம், ஒழுங்கு இவற்றின்பேரால் சர்க்கார் ஜனங்களைக் கொலை செய்த விவரத்தை மறைத்து வெளியிட்டதாகவும் காரியக் கமிட்டி தன் அபிப்பிராயத்தை வெளியிட்டது.

பலவந்தப்படுத்தி மதமாற்றம் செய்ய மாப்பிள்ளைகள் முற்பட்டதைக் கண்டு காரியக் கமிட்டி தன் வருத்தத்தைத் தெரிவிக்கையில், சர்க்கார் வெளியிடும் பக்ஷபாதமான விவரங்களை நம்பவேண்டாமென்று பொது ஜனங்களுக்கு எச்சரிக்கை விடுத்தது.

காங்கிரஸ் கமிட்டிகளும், கிலாபத் கமிட்டிகளும் தடைசெய்யப்பட்ட பிரதேசங்களில்தான் கலகம் நடைபெற்றதாகவும், பலாத்காரச் செயல்களைத் தடுக்க காங்கிரஸ் தொண்டர்களும், கிலாபத் தொண்டர்களும், தங்கள் உயிருக்கு ஏற்பட்ட ஆபத்துகளையும் பொருட்படுத்தாமல் தங்களால் ஆனவரை முயன்றார்கள் என்றும் காரியக் கமிட்டிக்குத் தகவல் கிடைத்தது.

## கிலாபத் மகாநாட்டின் விளைவு

இதற்குள்ளாக நிலைமை நெருக்கடியாகத் தலைப்பட்டு விட்டது. 1921-ம் வருஷ கிலாபத்து மகாநாடு கராச்சியில் ஜூலை மாதம் 8-ம் தேதியன்று நடைபெற்றது. மௌலானா முகமதலி இம் மகா நாட்டிற்குத் தலைமை வகித்தார். மௌலானா முகமதலி தைரியமாக ஓர் சொற்பொழிவு நிகழ்த்தினார். இச் சொற்பொழிவு மிகவும் பிரசித்தி பெற்றது. அக்டோபர் மாதம் 16-ம் தேதியன்று இதன் சாரத்தை இந்தியா முழுதும் பற்பல மேடைகளிலிருந்து பலர் பகிங்

கரமாக வெளியிட்டனர். கல்கத்தாவிலும், நாகபுரியிலும் காங்கிரஸ் தீர்மானித்த முடிவுகளைத்தான் மௌலானு முகமதலி காராச்சியிலும் வெளியிட்டார். இந்த மகா நாட்டின் நடவடிக்கைகளை ஆதாரமாகக்கொண்டு பின்னர் அலி சகோதரர்கள், டாக்டர் கிச்சுலு, சாரதா மடத்தைச் சேர்ந்த ஜகத்குரு ஸ்ரீ சங்கராசாரியார், மௌலானு நிஸ்ஸார் ஆமத், மற்றும் பலர்மீது சர்க்கார் வழக்கு தொடர்ந்தனர். முஸ்லீம்களுடைய கோரிக்கைகளை வற்புறுத்தியதோடு, அன்று முதல் ராணுவத்தில் சேவை செய்வதோ அல்லது ராணுவத்திற்கு ஆள் சேர்த்துக் கொடுப்பதில் உடந்தையாக இருப்பதோ உண்மை முஸ்லிம்களுக்கு அடுக்காதென ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. தவிர ஒருசமயம் பிரிட்டிஷ் சர்க்கார் அங்கோரா சர்க்காருடன் யுத்தம் ஆரம்பித்தால், இந்தியாவிலுள்ள முஸ்லீம்கள் சட்டமறுப்பு ஆரம்பித்து, பூரண சுதந்தரத்தை நாட்டி, இந்தியக் குடியரசின் கொடியை அகமதாபாத் காங்கிரசில் நாட்டி விடுவார்கள் என்று அறிவிக்கப்பட்டது.

அக்டோபர் மாதம் 5-ம் தேதி பம்பாயில் கூடிய காங்கிரஸ்காரியக்கமிட்டி கராச்சி அறிக்கையை மறுபடி ஆதரித்து ஓர் அறிக்கை வெளியிடுகையில், அலிசகோதரர்களையும், அவர்களது சகாக்களையும் கைது செய்து அவர்கள் மீது வழக்குத்தொடரப்பட்டதற்காக அலி சகோதரர்களைப் பாராட்டுவதாகவும், ஆனால் பிராசிகியூஷன் தரப்பில் விடுக்கப்பட்ட காரணங்கள் மத உரிமைகளில் அனுவசியமாகத் தலையிடுகிற தென்றும் குறிப்பிட்டது. காங்கிரஸின் பெயரால், ராணுவத்தில் வேலை செய்யும் சிப்பாய்களையும் மற்ற சிவில் உத்தியோகஸ்தர்களையும் வெளியேறும்படி அழைக்கத் தங்களால் முடியவில்லை யென்றும், சர்க்கார் உத்தியோகங்களை நிராகரித்து வருகிறவர்களுக்கு உதவியளிக்க காங்கிரசுக்கு போதிய சக்தி இல்லை யென்பதே இதற்குக் காரணம் என்றும், சர்க்கார் உத்தியோகத்தை விட்டுத் தங்களையும் தங்கள் குடும்பத்தையும் ரக்ஷிக்கச் சக்தியுடையவர்களை ராஜிணமாச் செய்யும்படி ஒத்துழையா இயக்கம் சம்பந்தமாக நிறைவேற்றப்பட்ட காங்கிரஸ் தீர்மானம் வற்புறுத்துகிறதென்றும் ஓர் அறிக்கையைக் காரியக் கமிட்டி வெளியிட்டது.

அன்னியத் துணி பகிஷ்காரம் பூரண வெற்றி பெறவில்லை. பூரண வெற்றி பெறும் வரை ஒரு மாகாணத்திலோ அல்லது ஜில்லாவிலோ பொதுச் சட்டமறுப்பு ஆரம்பிப்பது அசாத்தியமென்று காரியக் கமிட்டி சொல்லிவிட்டது. தவிர அந்தந்த மாகாணத்திலோ ஜில்லாவிலோ போதிய கதர் உற்பத்தி செய்யப்படவேண்டுமென்று மற்றோர் நிபந்தனையும் விதிக்கப்பட்டது. இருந்தபோதிலும் அந்தந்த மாகாண காங்கிரஸ் கமிட்டியின் அனுமதியின் பேரில், தனிப்பட்டவர்கள் சாத்வீகமாக சட்டமறுப்பு செய்யலாம் என்று அனுமதி கொடுக்கப்பட்டது.

வேல்ஸ் இளவரசர் விஜயத்தைப் பகிஷ்கரிக்க ஓர் திட்டம் தயார் செய்யப்பட்டது. பம்பாயில் வேல்ஸ் இளவரசர் கப்பலிலிருந்து இறங்கும்போது, இந்தியா முழுதும் ஹார்த்தால் நடைபெற வேண்டுமென்று விதிக்கப்பட்டது. அந்த ஊர்களில் பகிஷ்கார வேலையைச் செவ்வனே நடத்தும் பொறுப்பை அந்தந்த மாகாண காங்கிரஸ் கமிட்டிகளிடம் காரியக் கமிட்டி ஒப்படைத்து விட்டது.

இந்த நிலைமையில் அலி சகோதரர்கள் கைது செய்யப்பட்டார்கள். அஸ்ஸாமிலிருந்து சென்னைக்குச் செல்லும் வழியில்வால்டேர் ரயில்வே ஸ்டேஷனில் செப்டம்பர் மாதம் 14-ம் தேதி மௌலானா முகமதலியைப் போலீசார் கைது செய்தனர். அவரை சில நாள் ஓர் சப் ஜெயிலில் வைத்து பிறகு அவரை விடுதலை செய்ததாக ஓர் உத்திரவைச் சர்க்கார் படித்தார்கள். உடனே மறுபடியும் கைது செய்து அவரைப் போலீசார் கராச்சிக்கு அழைத்துச் சென்றனர். மௌலானா முகமதலியைக் கைது செய்த உடனேயே மௌலானா ஷவுக்கதலியையும் சர்க்கார் பம்பாயில் கைது செய்தனர். கராச்சிப்பேச்சுதான் அலி சகோதரர்களைக் கைது செய்யக் காரணம் என்பதை அறிவிக்கப்பட்டபோது காந்திஜி திருச்சினாப்பள்ளியில் இருந்தார். அன்றிரவு திருச்சியில் நடைபெற்ற ஓர் மாபெரும் பொதுக்கூட்டத்தில் அதே சொற்பொழிவை காந்திஜி அப்படியே திருப்பிச் சொன்னார். அந்த தீர்மானத்தை மீண்டும் மீண்டும் நிறைவேற்றி வைக்கும்படி பொது ஜனங்களை வற்புறுத்தி வேண்டிக் கொண்டார். சுயராஜ்யம் ஸ்தாபிப்பதாகச் சொல்லப்பட்ட காலமும் நெருங்கிவிட்டது. குறிப்பிட்ட தேதிக்கு இன்னும் ஒருமாத காலம் தான் இருந்தது. அலி சகோ

தரர்கள் கைதி செய்யப்பட்டதால் ஏற்பட்ட கோபத்தை ஜனங்கள் அதிக சாந்தமாக அடக்கிக் கொண்டிருந்தார்கள். இதை யெல்லாம் கவனித்து, அந்தந்த மாகாணம் தனது சொந்தப் பொறுப்பில், சட்டமறுப்பியக்கத்தை ஆரம்பிக் கலாம் என டில்லியில் நவம்பர் மாதம் 5-ம் தேதி கூடிய காரியக் கமிட்டி அனுமதி யளித்தது. அந்தந்த மாகாணத் திற்கு எது யுக்தமோ அந்த முறைப்படி வரிகொடா இயக் கத்தையும் ஆரம்பிக்கலாம் என்று அறிவிக்கப்பட்டது. சட்ட மறுப்பு செய்கிறவர் ஒவ்வொருவரும் ஒத்துழையா இயக்கத் தில் பயிற்சி பெற்றிருக்க வேண்டுமென்றும், அவர்களுக்கு நூல் நூற்கத் தெரியவேண்டு மென்றும், கதர்கட்டவேண்டு மென்றும், அஹிம்சா தத்துவத்திலும், ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையிலும் நம்பிக்கை கொண்டிருக்க வேண்டுமென் றும் வற்புறுத்தப்பட்டது.

## சீராளா பேராளா

இந்த சமயத்தில் அஹிம்சா முறைப்படி நடத்தப் பட்ட ஒத்துழையா இயக்கத்தில் இரண்டு முக்கியமான சம்பவங்கள் நிகழ்ந்தன. 1921-ம் வருஷத்தில் தேச முழுதுமே அதிகாரவர்க்கத்தினரை எதிர்க்கவேண்டு மென்ற உணர்ச்சி பலமாக இருந்துவந்தது. சிற்சில இடங்களில் ஜனங்கள் இந்த உணர்ச்சியை சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு வெளிக்காட்டலானார்கள். ஆந்திர நாட்டில் சீராளா கிராமத்தில் ஜனங்கள் சட்டமறுப்பு செய்யத் தீர்மானித்தார்கள். சீராளா கிராமத்தை முனிசிபாலிடி யாக்கப்போவதாகச் சர்க்கார் அறிவித்தார்கள். காங் கிரஸின் விரோதியாகிய பனகால் ராஜா சென்னை சர்க்கார் முதல் மந்திரியாக இருந்தார். சீராளா மக்கள் முனிசிபாலிடியை வெறுத்தனர். காந்திஜியின் யோசனை இச்சந்தர்ப்பத்தில் நாடப்பட்டது. முனிசிபாலிடியை விரும்பாவிட்டால் முனிசிபல் எல்லைக்கு வெளியே வசிக் கும்படி காந்திஜி சொல்லிவிட்டார். இந்தப் போராட் டத்தைக் காங்கிரஸ் பெயரால் நடத்தக்கூடாது என்று எச்சரிக்கை விடுத்துவிட்டார். இந்த யோசனை ஜனங் களுடைய மனதைக் கவரலாயிற்று. தவிர ஆந்தர ரத்ன ஸ்ரீ கோபால கிருஷ்ணையா இப்போராட்டத்தை முன் னின்று நடத்த ஒப்புக்கொண்டார். ஜனங்கள் முனிசிபல்

எல்லையை விட்டு வெளியேறிவிட்டனர். பத்துமாத காலம் ஏராளமான ஜனங்கள் குடிசைகளில் வசித்து சொல்லமுடியாத கஷ்டங்களை யனுபவித்தனர். இதற்கிடையில் தலைவர்கள் ஒருவர் ஒருவராகக் கைது செய்யப்பட்டார்கள். ஒரு வருஷப் போராட்டத்திற்குப் பிறகு ஜனங்கள் கீழ்ப்படிந்து முனிசிபாலிடியை ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று.

கிழக்கு வங்காளத்தில் சிட்டகாங்கில் ஜெ. எம். சென் குப்தா ஓர் பலத்த போராட்டத்தை நடத்தினர். துறைமுகத் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் வெகு மும்மரமாக நடைபெற்றது. இப்போராட்டத்தில் காங்கிரசுக்குச் சுமார் ஒரு லட்ச ரூபாய் செலவாயிற்று. காங்கிரஸில் ஆத்ம சக்தி அதிகமாக இருந்தபோதிலும் ஏதாவது ஓர் காரணத்தை நிமித்தமாகக் கொண்டு இம்மாதிரி சாத்வீகப் போராட்டங்களை நடத்தும் பிரபல தலைவர்களைச் சர்க்கார் சிறை வைப்பதன் மூலம், இவ்வியக்கங்களை நசுக்கி விடுகின்றனர்.

## மாப்பிள்ளை கலகம்

மலையாளத்தில் மாப்பிள்ளை கலகம் ஏற்பட்ட வரலாற்றைக் குறிப்பிடவேண்டிய தவசியமாகும். மாப்பிள்ளைமார்கள் ஆதியில் அராபியர்கள் பரம்பரையைச் சேர்ந்த முஸ்லீம்களாவர். அவர்கள் விவசாயம், வியாபாரம் செய்து ஜீவனம் செய்கிறார்கள். மதவெறி ஏற்பட்டால் உயிரையும் தியாகம் செய்ய அவர்கள் தயாராக இருப்பார்கள். அடிக்கடி மாப்பிள்ளைகள் கலகம் செய்துவந்ததால் சென்னை சட்டசபையில் மாப்பிள்ளைகலகச்சட்டம் என்று ஓர் விசேஷ மசோதா கொண்டுவரப்பட்டது ஆரம்பத்திலிருந்தே மாப்பிள்ளைகள் ஒத்துழையா இயக்கத்தில் சேர்ந்து விட்டால் என்ன செய்வது, அனர்த்தம் வந்து விடுமே என்று சர்க்கார் கவலை கொண்டிருந்தனர். எல்லா இடங்களிலும் பரவியது போல ஒத்துழையா இயக்கம் கேரள நாட்டிலும் தலையெடுக்க ஆரம்பித்தது. ஜனங்கள் இந்த இயக்கத்தை அதிக உற்சாகத்துடன் வரவேற்றார்கள். அஹிம்சா தத்துவத்தைப் பிரசாரம் செய்ய பிப்ரவரி மாதத்தில் ஸ்ரீ சி. ராஜகோபாலாசாரியார், ஜனாப் யாகுப் ஹாஸன் முதலிய தலைவர்கள் கேரள நாட்டிற்குச் சென்றனர். இத்தலைவர்கள் மீது தடையுத்திரவுகள் பிறப்பிக்கப்பட்டன. மகமது யாகுப்

ஹாஸன், மாதவன் நாயர், கோபால மேனன், மொய்தீன் கோயா ஆகிய நால்வரும் பிப்ரவரி மாதம் 16-ம் தேதி கைதி செய்யப்பட்டார்கள். இதனால் மலையாள நாட்டில் ஒத்துழையா இயக்கம் காட்டுத் தீ போல் பரவலாயிற்று. ஒட்டப்பாலத்தில் நடைபெற்ற ஓர் மகாநாட்டில், ரிசர்வ் போலீசார் உள்ளேபுகுந்து, பல காங்கிரஸ் தலைவர்களையும், கிலாபத்துக்காரர்களையும், வியாபாரிகளையும் முரட்டுத்தனமாய்த் தாக்கினார்கள். அப்பொழுதும் ஜனங்கள் சாத்விகமாகவே இருந்து வந்தனர். பிறகு மலையாளம் முழுதும் ஒத்துழையா இயக்கம் ஆரம்பித்துவிட்டது.

மாப்பிள்ளை ஜாதியார் முக்கியமாக வளவநாடு, ஏரநாடு இந்த இரண்டு தாலூகாக்களில்தான் அதிகம். இவ்விரண்டு தாலூக்காக்களுக்குள் ஒருவரும் செல்லக்கூடாதென்று சர்க்கார் 144-வது பிரிவுப்படி தடையுத்திரவு போட்டார்கள்.

ஆகஸ்டு மாதத்தில் ஒத்துழையா இயக்கத்திலிருந்து இப் போராட்டத்தின் லட்சியம் மாறுதல் அடைந்து விட்டது. மாப்பிள்ளைகள் தங்களுடைய குருக்கள்மார்கள் மசூதிகளில் அவமானம் செய்யப்பட்டதைப்பொறுக்க முடியாமல், பலாத்காரத்தில் இறங்கி விட்டார்கள். யுத்த தோரணையில் போராட்டம் ஆரம்பமாய் விட்டது. மாப்பிள்ளைகளிடம் துப்பாக்கிகள் இல்லையேனும் கத்திகளையும், ஈட்டிகளையும் தாராளமாக அவர்கள் உபயோகிக்கலானார்கள். மலையாளப் பிரதேசத்திற்கும், அங்குள்ள காடுகளுக்கும் ஏற்றாற்போல மாப்பிள்ளைகள் கொரில்லா யுத்த முறையைக் கையாள ஆரம்பித்தனர். சர்க்கார் காரியாலயங்களைக் கொள்ளையடித்ததல்லாமல், ஹிந்துக்கள் வீடுகளையும் கொள்ளையடித்து, கட்டாயப்படுத்தி மதமாற்றம் செய்தனர். பல வெள்ளையருடைய உயிருக்கு ஆபத்து ஏற்பட்டுவிட்டது. மலையாளத்தில் பிரக்கியாதி பெற்ற எம். பி. நாராயண மேனன் என்னும் ஓர் காங்கிரஸ்காரர் தமது செல்வாக்கை உபயோகித்து, மாப்பிள்ளைகளிட மிருந்து வெள்ளையர்களைக் காப்பாற்றினார். இவ்வளவு உதவி செய்தவரையே பின்னர் நவம்பர் மாதத்தில் சர்க்கார் கைது செய்து ராஜாங்கக் கைதியாக வைத்திருந்தார்கள். 1922-ம் வருஷத்தில் அவர்மீது ராஜத்துவேஷக் குற்றம் சாட்டி அவருக்கு தீவாந்தர சிக்ஷை விதிக்கப்பட்டது. தண்டனைக் காலம் பூராவையும் அனுபவித்த பிறகு ஸ்ரீ. எம். பி. நாராயண

மேனன் 1934-ம் வருஷம் செப்டம்பர் மாதத்தில்தான் விடுதலை பெற்றார். மூன்று வருஷ காலத்திற்கு வளவநாடு தாலூக்காவுக்குள் காலெடுத்து வைப்பதில்லை யென்று அவர் முன்னதாக வாக்குக் கொடுத்திருப்பாரேல், அவரைச் சர்க்கார் விடுதலை செய்திருக்கக்கூடும். ஆனால் வீரமும், தைரியமும், தேசாபிமானமும் கொண்ட ஸ்ரீ. நாராயண மேனன் அதை ஒப்புக்கொள்ள மறுத்து தைரியமாக சிறை வாசத்தை அனுபவித்து வெற்றியுடன் வெளி வந்தார்.

## இளவரசர் பகிஷ்காரம்

1921-ம் வருஷம் நவம்பர் மாதம் 17 ம் தேதி வேல்ஸ் இளவரசர் பம்பாயில் வந்திறங்கினார். புதிய-இந்தியா சட்ட சபையை வேல்ஸ் இளவரசர்தான் திறந்து வைக்க ஏற்பாடா யிருந்தது. ஆனால் 1920-ம் ௵ ஆகஸ்டு மாதத்தில் இந்தியாவின் நிலைமையை உத்தேசித்து, சர்க்கார் கானுட்டுக் கோமகனை வரவழைத்தனர். பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கௌரவத்தை நிலைநாட்டுவதற்காக வேல்ஸ் இளவரசர் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டார். ஏற்கனவே காங்கிரஸ் தீர்மானித்தபடி பகிஷ்கார ஆர்ப்பாட்டங்கள் நாடெங்கும் நடைபெற்றன. நூற்றுக் கணக்கான நகரங்களில் பகிரங்கமாக அன்னியத் துணிகள் தீக்கிரையாக்கப் பட்டன. வேல்ஸ் இளவரசர் பம்பாயில் கால் வைத்த பொழுதே கலகமும் கலவரமும் நடைபெற்றதல்லாமல் ரத்த வெள்ளம் பம்பாய் வீதிகளில் ஓட ஆரம்பித்தது. மூன்று, நான்கு தினங்கள் ஓயாமல் கலகம் நடைபெற்றது. 53 பேர் இக் கலகத்தில் மாண்டனர். 400 பேருக்கு அதிக மாகப் பலத்த காயமடைந்தனர். சரோஜினி தேவி, மகாத்மாகாந்தி, மற்றும் பல தலைவர்கள் முயன்றும கலகம் நிற்க வில்லை. தலைவர்கள் கூட்டங்களின் மத்தியில் தங்கள உயிரையும் பொருட் படுத்தாமல் தைரியமாய் நின்று வேண்டிக்கொண்டார்கள். ஜனங்கள் வரம்பு மீறி நடந்து கொண்டதற்காக காந்திஜி ஐந்து நாள் பட்டினி கிடந்து தவம் செய்தார்.

## தொண்டர் படைக்கு புத்துயிர்

இளவரசர் இந்தியாவுக்குவந்தபோதுதான் தொண்டர் படை இயக்கத்திற்கு ஓர் புத்துயிர் அளிக்கப்பட்டது. அதுவரையில், சாதாரணமாக சமூகத் தொண்டு செய்வது

தான் தொண்டர்படையின் அலுவலாக இருந்தது. பொருட்காட்சிகளிலும், உத்சவங்களிலும் யாத்ரிகர்களுக்கு உதவி புரியவும், பெரிய கொள்ளை நோய்கள் வந்த காலத்தில் ஜனங்களுக்கு உதவி புரியவும் தொண்டர்கள் கூட்டப்பட்டனர். தவிர அவ்வப்போது மகாநாடுகள் கூடும்போது முன்னால் செல்லவும் பின்னால் செல்லவும் தொண்டர்கள் சேர்க்கப்படுவது வழக்கமாக இருந்தது. இவர்களில் கிலாபத்துத் தொண்டர்கள் அதிக தீவிரமுள்ளவர்கள் என்று சர்க்காரே ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். கிலாபத் தொண்டர்களும், காங்கிரஸ் தொண்டர்களும் ஹர்த்தால்களையும், அன்னியத் துணிக்கடை மறியல்களையும் நடத்தி வந்தனர். இப்பொழுது இந்த இரு பிரிவினரும் ஒன்று சேர்க்கப்பட்டனர். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி விதிகளுக்குட்பட்டு இத்தொண்டர்கள் சாத்வீகமாகச் சட்ட மறுப்பு செய்யத் தலைப்பட்டனர். நாடுமுழுதும் தொண்டர் படை இயக்கம் வலுத்துவிட்டது. ஆயிரக் கணக்கில் ஜனங்கள் கைது செய்யப்பட்டனர். டிசம்பர் மாதம் 25-ந் தேதி கல்கத்தாவுக்கு இளவரசர் விஜயம் செய்வதாக ஏற்பாடாயிருந்தது. கிரிமினல் திருத்தச் சட்டத்தைப் பிரயோகித்து, தொண்டர்கள் சேர்க்கப்படுவது சட்டவிரோதமென்று கல்கத்தா சர்க்கார் அறிவித்தனர். ஸ்ரீ சி. ஆர். தாஸ், ஸ்ரீமதி தாஸ், அவர்களுடைய புதல்வன் உள்பட நூற்றுக் கணக்கானவர் கல்கத்தாவில் கைது செய்யப்பட்டனர். அடுத்தாற்போல ஐக்கிய மாகாணத்திலும், பாஞ்சாலத்திலும் இதே சம்பவங்கள் நிகழலாயின. கடைசியாக அலகாபாத் காங்கிரஸ் நடைபெறுவதற்குள்ளாக, லாலா லஜபதிராய், பண்டித மோதிலால் நேரு, ஜவாஹர்லால் நேரு, சி. ஆர். தாஸ், அவர் குடும்பத்தினர்கள், ஆக அநேகமாக எல்லா தலைவர்களும் சிறைபுகுத்தப்பட்டனர். இந்த சமயத்தில் வைசிராய் நிர்வாக சபையில் சட்டமெம்பராக நியமிக்கப்பட்ட சர். தேஜ் பகதூர் சாப்ரூ அரசியல் தலைவர்களைக் கைது செய்ய இந்தியன் பினல் கோடிலிருந்து 144, 188, 108 முதலிய பிரிவுகளை உபயோகிக்கலாம் என்று கண்டுபிடித்துச் சொன்னார். பம்பாய் சர்க்கார் ஒத்துழையா இயக்கத்தினர்மீது சாதாரணச் சட்டங்களை பிரயோகித்திருக்கையில், வங்காளம், மத்திய மாகாணம், பாஞ்சாலம் முதலிய இடங்களில் பயங்கர அடக்குமுறைச் சட்டங்கள் கையாளப்பட்டன.

## காங்கிரஸ் சர்க்கார் சமரசப் பேச்சு

வேல்ஸ் இளவரசர் விஜயம் சம்பந்தமாக நாடெங்கும் பஹிஷ்கார இயக்கம் வலுத்து நின்ற இக்காலததில்தான் காங்கிரசுடன் சமரசம் பேச சர்க்கார் ஏற்பாடுகள் செய்தனர். இந்தியாவின் தலைநகரம் கல்கத்தாவிலிருந்து டில்லிக்கு மாற்றப்பட்ட பிறகும் கூட கிறிஸ்துமஸ் பண்டிகை சமயத்தில் வருஷத்தில் மூன்று அல்லது நான்கு வாரம் வைசிராய் கல்கத்தாவில் தங்குவது வழக்கமாக இருந்து வருகிறது. வேல்ஸ் இளவரசரும் கிறிஸ்துமஸ் பண்டிகையை கல்கத்தாவில் கொண்டாட ஏற்பாடு செய்யப் பட்டிருந்தது. ஜனங்களுக்கும், சர்க்காருக்கும் ஓர் சமரசம் ஏற்படுவதற்கு இச் சந்தர்ப்பத்தை பண்டித மாளவியா போன்ற மத்தியஸ்தர்கள் உபயோகப்படுத்த விரும்பினர். டிசம்பர் மாதம் 25-ம்தேதியன்று கல்கத்தாவில் பஹிஷ்கார ஆர்ப்பாட்டம் நடைபெறுதென்று உறுதி கூறினுலொழிய சமரசப் பேச்சுக்கு லார்டு ரீடிங் இணங்கவில்லை. பண்டித மதன் மோஹன் மாளவியா தலைமையில் ஓர் தூதுகோஷ்டி டிசம்பர் மாதம் 21-ம் தேதி வைசிராயைப் பேட்டி கண்டது. அச்சமயம் ஸ்ரீ சி.ஆர். தாஸ் கல்கத்தாவிலேயே அலிப்பூர் சிறையில் இருந்தார். ஸ்ரீ தாஸுடன் மத்தியஸ்தர்கள் டெலிபோனில் கலந்து பேசினார்கள். காந்திஜியை உடனே கலந்து யோசிக்கவேண்டியதாயிற்று. காந்திஜி ஆமதாபாத்தில் இருந்தார். சட்டமறுப்புச் செய்த அரசியல் கைதிகளை விடுதலை செய்துவிடுவதாகவும், 22 காங்கிரஸ் பிரதிநிதிகளுடன் அடுத்த மார்ச்சு மாதத்தில் அரசியல் சீர்திருத்தத்தைப்பற்றி கவனிக்க ஓர் வட்ட மேஜை மகாநாடு கூட்டுவதாகவும் தந்தி மூலம் சர்க்கார் ஒப்புக்கொண்டார்கள். கிரிமினல் லா திருத்தச் சட்டப்படிக் கைது செய்யப்பட்ட எல்லா அரசியல் கைதிகளையும் நிபந்தனையின்றி விடுதலை செய்யவேண்டுமென்று ஸ்ரீ சி. ஆர். தாஸ் கோரினர். இக் கோரிக்கைப் பிரகாரம் லாலாஜி, அலி சகோதரர்கள், டாக்டர் கிச்சிலு முதலியவர்களுக்கு விடுதலை கிடையாது, கராச்சிக் கைதிகள் உள்பட எல்லா அரசியல் கைதிகளையும் நிபந்தனையின்றி விடுதலை செய்ய வேண்டுமென்று காந்திஜி பிடிவாதம் செய்ததோடு, ஒத்துழையா இயக்கத்தையும்,மறியல்வேலையும்நிறுத்திவிட காந்திஜி சம்மதிக்கவில்லை. பண்டித மாளவியா, ஸ்ரீ ஷியாம் சுந்தர் சக்கர

வர்த்தி, ஸ்ரீ யமுனுதாஸ் துவாரகாதாஸ், பண்டித குன்ஸ்ரூ முதலானவர்கள் காந்திஜியை சமரசத்திற்கு ஒப்புக் கொள்ளும்படி மன்றுடிக் கேட்டுக்கொண்டனர். சமரசப் பேச்சு சப்பந்தமாக காந்திஜி கடைசியாகக் கீழ்க்கண்ட தந்தியை அனுப்பி யிருந்தார் :—

"எவ்வித நிபந்தனையுமின்றி எந்த மகாநாட்டிற்கும் நான் வரத் தயார். அடக்குமுறைச் சட்டங்களும், உத்திரவு களும் வாபஸ் செய்யப்பட வேண்டுமென்பதை நீங்கள் உணரவில்லையா? அரசியல் கைதிகள் விடுதலை செய்யப் படாமல் சிறையில் இருந்து வருகையில் ஒத்துழையா இயக் கத்தை நிறுத்துவதற்கு என்ன காரணம் இருக்கிறது? ஏதாவது ஒன்றை உங்களால் குறிப்பிட முடியுமா? ஒத்து ழையாமைக்காரர்கள் தற்பாதுகாப்புக்காக மட்டும் ஒத்து ழையாமையை அனுஷ்டித்துக் கொண்டிருக்க, அடக்கு முறை உத்திரவுகள் வாபஸ் செய்யப்படாமல் போனுலும் கூட சமரசக் கூட்டத்திற்கு வர நான் தயார். தூது கோஷ்டி தவறுன வழியில் செலுத்தப்பட்டிருப்பதை நீங் கள் அறிய வேண்டுமென விரும்புகிறேன்."

(ஒப்பம் காந்தி)

காந்திஜியின் கடைசி பதில் லார்டு ரீடிங்குக்குக் கிடைப்பதற்கு முன்னுல், அவருடைய சகாக்கள் கல்கத் தாவைவிட்டுப் புறப்பட்டுவிட்டார்கள். ஆகவே, சமரசப் பேச்சு முறிந்துபோயிற்று. வேல்ஸ் இளவரசர் பகிஷ்கார திட்டத்தை இந்தியாவில் மற்ற பாகங்களிலும் ஒத்துழையா இயக்கத்தினர் மும்முரமாக நடத்தினர். கல்கத்தாவில் ஹர்த்தால் வெகு அமைதியாகவும், வெற்றிகரமாகவும் நடை பெற்றது. கசாப்புக் கடைக்காரர்கள்கூட தங்கள் கடை களை மூடிவிட்டனர். ஐரோப்பியர்கள் திணறலானுர்கள். சட்டமறுப்பு செய்த காங்கிரஸ்காரர்கள் தங்கள் தண்ட னைக் காலம் முழுவதையும் சிறையில் கழித்தனர். 1921-ம் வருஷம் டிசம்பர் மாதக் கடைசியில் அலகாபாத் காங்கிரஸ் நடைபெறுவதற்குமுன் நாட்டில் ஒத்துழையா இயக்கம் உன்னத நிலையை அடைந்துவிட்டது. நாகபுரி காங்கிரஸ் நடைபெற்றபோது இருந்த அரசியல் நிலைமை சிறிதளவு கூட மாறுதல் அடையவில்லை. மாண்ட்போர்டு சீர்திருத் தத்தைக் கானுட்டுக் கோமகன் ஆரம்பித்து வைக்கையில்

இந்தியாவுக்குக் கீழ்கண்ட செய்தியை மன்னர் விடுத்திருந்தார் :—

"பல வருடங்களாக, பல தலைமுறைகளாகவே, தேசாபிமானமும், ராஜவிஸ்வாசமும் கொண்ட இந்தியர்கள் தங்கள் தாய்நாட்டிற்கு சுயராஜ்யம் வேண்டுமென்று கனவு கண்டுகொண்டிருந்தனர். இன்று என்னுடைய ஏகாதிபத்தியத்திற்குள் உங்களுக்கு சுயராஜ்யத்தின் ஆரம்பம் கிடைத்திருக்கிறது. என்னுடைய ஏகாத்திபத்தியத்திலுள்ள ஏனைய குடியேற்ற நாடுகள் அனுபவிக்கும் சுதந்திரத்தை ஆண்டு அனுபவிக்க உங்களுக்கு சிறந்த மார்க்கங்களும், சந்தர்ப்பங்களும் அளிக்கப்பட்டிருக்கின்றன."

இந்தப் பசப்பு வார்த்தையும், கானாட்டுக் கோமகன் விடுத்த சமாதானப் பேச்சுகளும், பாஞ்சாலப் படுகொலை சம்பந்தமாக இந்தியா சட்டசபையில் ஹோம் மெம்பர் சர். வில்லியம் வின்செண்டு கொடுத்த உறுதிமொழிகளும் இந்தியர்களுக்கு திருப்தியை அளிக்க முடியவில்லை. ஆமதாபாத் காங்கிரசில் ஒத்துழையா திட்டம் நன்கு தொகுக்கப்பட்டு பூர்த்தியாக்கப்பட்டது. இத்திட்டத்தை தேசம் ஒப்புக்கொண்டு விட்டது. இந்த காங்கிரஸுக்குத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட தேசபந்து தாஸ் சிறையிலிருந்து வந்தார். அவருக்கு பதிலாக ஜனுப் ஹக்கிம் அஜ்மல் கான் அந்த ஸ்தானத்தை வகிக்கும்படி கேட்டுக் கொள்ளப்பட்டார்.

இந்தியாவின் அரசியல் நிலைமை நெருக்கடியாகவே இருந்தது. ஒரு வருஷத்திற்குள்ளாக சுயராஜ்யம் என்பதே எல்லாருடைய மனத்திலும் குடிகொண்டிருந்தது. தம்முடைய திட்டப்படி தேசம் நடக்குமானல் ஒரே வருஷத்தில் சுயராஜ்யம் சம்பாதித்து விடுவதாக காந்திஜி வாக்குக் கொடுத்திருந்தார். ஒரு வருஷகாலம் முடியுங் காலம் நெருங்கிவிட்டது. எப்படியாவது ஆச்சரியமான முறையில் சுயராஜ்யம் வந்துவிடுமென்று எல்லாரும் ஆவலுடன் காத்துக்கொண்டிருந்தார்கள். சுயராஜ்யம் பெறுவதற்குத் தங்களால் ஆன தியாகத்தைச் செய்ய எல்லாரும் தயாராக இருந்தார்கள். எல்லாரும் சட்ட மறுப்புச் செய்ய சித்தமாக இருந்தனர். ஏற்கனவே 20,000 சட்டமறுப்புக்காரர்கள் சிறைகளுக்கனுப்பப்பட்டார்கள். இவர்களுடைய தொகை விரைவில் 30,000 ஆயிற்று. இருந்தாலும் எல்

லாரும் சேர்ந்தாற்போல் சட்ட மறுப்புச் செய்யவேண்டு மென்று மக்கள் அவாக்கொண்டனர். திட்டமாக ஓர் முறை என்ன என்று காந்திஜி சொல்லவேயில்லை. தக்க இடங்களில் தக்க தலைவர்களைக் கொண்டுதான் சட்ட மறுப்பு செய்யக்கூடும். அவசரப்பட்டால் காரியம் பலிக் காது. இதை யெல்லாம் உத்தேசித்து குஜராத்தில் வரி கொடா இயக்கத்தை ஆரம்பிக்க காந்திஜி விரும்பினர். குண்டூரிலும் வரிகொடா இயக்கம் ஆரம்பிக்க ஏற்கனவே ஏற்பாடுகள் நடைபெற்று வந்தன. பயமென்னும் பேயை ஜனங்கள் விரட்டிவிட்டனர். தாங்கள் இந்தியர் என்பதை யும், தங்களுடைய சுயமரியாதையை எந்த முறையிலும் காப்பாற்றுவதசியம் என்ற வீர உணர்ச்சியும் ஜனங்களிடை அதிகரித்துவிட்டது. பொதுஜனங்களுடைய நம்பிக்கையைப் பெற சேவையும், தியாகமும் சிறந்த மார்க்கங்கள் என்பதை காங்கிரஸ்காரர்கள் உணர்ந்து விட்டனர். சர்க்காருடைய செல்வாக்கும், கௌரவமும் பாதிக்கப்பட்டு விட்டது. சுய ராஜ்யத்தின் லக்ஷியங்கள் என்ன என்பதை ஜனங்கள் வெள் ளிடை மலைபோல் அறிந்துகொண்டார்கள்.

## ஆமதாபாத் காங்கிரஸ்

ஆமதாபாத் காங்கிரசில் பல குறிப்பிடத்தக்க சீர் திருத்தங்கள் கையாளப்பட்டன. பிரதிநிதிகளுக்கு உட் கார நாற்காலிகள் கொடுக்கும் வழக்கம் கைவிடப்பட்டது. தவிர வரவேற்புக் கமிட்டித் தலைவர் ஸ்ரீ வல்லபாய் படேல் தமது வரவேற்புப் பிரசங்கத்தை மிகவும் சுருக்கமாக முடித்துவிட்டார். மேலும் இந்த காங்கிரசில் கவனிக்கப் பட்ட தீர்மானங்களும் சொற்பமாகும். காங்கிரஸ் நட வடிக்கைகள் அநேகமாக ஹிந்தியில் நடைபெற்றன. காங் கிரஸ் கூடாரங்கள் அமைக்க 2 லட்ச ரூபாய்க்குக் கதர் துணி வாங்கப்பட்டது.

இந்த காங்கிரசுக்கு விஜயம் செய்யும்படி ரெவரண்டு ஆண்டிரூஸை காந்திஜி கேட்டுக் கொண்டிருந்தார். மத சம்பந்தமான ஓர் செய்தியை விடுக்கையில், அன்னியத் துணிக்கு தீ வைப்பதை ஸ்ரீ ஆண்டிரூஸ் கண்டித்தார். இதனால் பலாத்காரச் செயல்கள் நடைபெறுமென்று ஸ்ரீ ஆண்டிரூஸ் சொன்னர்.

தேசபந்து தலைமை வகிக்க முடியாததால் அவருக்கு பதிலாக ஹக்கீம் அஜ்மல் கான் காங்கிரசுக்குத் தலைமை வகித்தார். ஹக்கீம் அஜ்மல் கான் ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமைக்காகத் தமது வாழ்நாளையே அர்ப்பணம் செய்தவர். தேசபந்துவின் தலைமை உரையை ஸ்ரீமதி சரோஜினி தேவி படித்தார். இந்தியக் கலைகளையும், நாகரிகத்தையும் வளர்க்க வேண்டியது அவசியம் என்பதை ஸ்ரீ தாஸ் பலமாக வற்புறுத்தி யிருந்தார். அவருடைய உரையின் சாரம் வருமாறு:—

"இந்திய அரசியல் சீர்திருத்தச் சட்டத்தின் பூர்வ பீடிகையில், இந்தியாவுக்கு எந்தக் காலத்திலாவது பிரிட்டனுக்குச் சமத்துவமான அந்தஸ்து அளிப்பதாகச் சொல்லப் படவில்லை. இந்தியர் சுதந்திரம் பெற உரிமையுண்டு என்பதை பிரிட்டன் உணர்ந்தால் அல்லது பிரிட்டனுடன் நான் ஒத்துழைக்க முடியாது. இந்தப் புதிய அரசியல் சட்டத்தை ஆதாரமாகக்கொண்டு சர்க்காருடன் ஒத்துழைக்கும்படி நான் ஒருபொழுதும் சொல்லமாட்டேன். அவமானத்துடன் கூடிய சமாதானத்தை நான் வரவேற்கமாட்டேன். இந்தப் பூர்வ பீடிகை இருக்கும் வரையில் சமாதான உடன்படிக்கைகள் எதையும் நான் ஏற்றுக்கொள்ள முடியாது."

தேசபந்துவின் வீரம் செறிந்த பேச்சின் விளைவே ஆமதாபாத் காங்கிரஸில் நிறைவேறிய முக்கிய தீர்மானத்திற்குக் காரணமாகும். இத் தீர்மானத்தின் நகலை ஆங்கிலத்திலும், ஹிந்துஸ்தானியிலும் படிப்பதற்கு 35 நிமிஷங்களுக்கு மேலாயிற்று. இத்தீர்மானத்தைக் காந்திஜி பிரேரேபிக்கையில் பின்வருமாறு பேசினர்:—"சென்ற 15 மாதங்களில் நடைபெற்ற தேசீய இயக்கத்தின் விளைவே இத் தீர்மானத்திற்குக் காரணமாகும். சமரசப் பேச்சு நடத்துவதற்கு இத் தீர்மானம் தடைவிதிக்கவில்லை. வைசிராய்க்கு நல்ல எண்ணம் இருக்கும் வரையில் சமரசப் பேச்சுக்கு நாம் தயாராக இருக்கிறோம். இல்லையேல், எத்தனை பேர் உயிர் தியாகம் செய்தபோதிலும் சரி, எவ்வளவு கடுமையான அடக்குமுறையைச் சர்க்கார் கையாண்டபோதிலும் சரி, சமரசத்திற்கு இணங்கமுடியாது. காங்கிரஸ்காரர்களை ஓர் வட்ட மேஜை மகாநாட்டுக்கு அழைக்க வைசிராய்க்குச் சந்தர்ப்பம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆனல் இரு தரப்பி

னரும் சமத்துவ அந்தஸ்துடன்தான் இந்த மகாநாட்டில் கலந்துகொள்ளவேண்டும். இந்த தீர்மானத்தைக் கண்டு, அடக்கமும் பொறுமையுமுள்ள எவரும் வருத்தப்பட அவசியமே கிடையாது. விடுதலை என்னும் பிராணவாயுவைச் சுவாசிக்க அவசியமாக இருக்கும், பேச்சு சுதந்திரத்தையும், சேர்ந்து வாழும் சுதந்தரத்தையும் நசுக்க விரும்பும் சர்க்காருடைய அடக்குமுறை அதிக்கிரமத்திற்கு இத் தீர்மானம் ஓர் பதிலாகும்."

ஆமதாபாத் காங்கிரசில், மௌலானா ஹஸரத் மோஹினி 'சுயராஜ்யம்' என்றால், 'அன்னியர் அதிகாரத்திற்கு மீறிய சுதந்தரம்' என்பது பொருள் என்று காங்கிரஸ் லட்சியத்தை விளக்கும்படி ஓர் பிரேரணை கொண்டு வந்தார். இப்பிரேரணை சம்பந்தமாக நீண்டநேர விவாதம் நடைபெற்றது இத்தீர்மானத்தை இன்று இருந்துவரும் நிலைமையில் கவனித்தால், இது சாமானியமான தீர்மானம் என்று ஜனங்கள் எண்ணுவதுடன், நியாயமானதென்றும், இதை காந்தியடிகளோ அல்லது காங்கிரசோ ஏன் எதிர்க்க வேண்டுமென்றும் கருதக்கூடும். இப்பிரேரணையை காந்திஜி எதிர்க்கையில் உள்ளொன்று வைத்துப் புறமொன்று சொல்லாமை என்பதற் கேற்ப, தம் மனத்தில் உதித்த எண்ணத்தை அப்படியே எடுத்துரைத்தார். காந்திஜி பேசியதின் சாரம் பின்வருமாறு:—

"இந்தத் தீர்மானத்தைச் சிலர் சிறிதும் ஆலோசனையின்றி ஏற்றுக்கொள்ளத் தயாராக இருப்பதைக் காண வருந்துகிறேன். பொறுப்பென்பதை உணராமல் பேசுவதைக் காண என் மனம் நோகிறது. நமக்குப் பொறுப்பு இருக்குமானால், கல்கத்தாவிலும், நாகபுரியிலும் நடைபெற்றதைக் கவனிக்க வேண்டும்."

சர்க்காருடன் எதிர்த்துப் போராட ஓர் முறையைத் தொகுத்து அதற்கு காந்திஜி உரு அளித்துவரும் சமயத்தில், போர்முனையில் நின்று போராடும் யுத்த வீரர்கள் போராட ஆயத்தமாக இருக்கும் சமயத்தில், லக்ஷ்யத்தை மாற்றுவதென்றால் அதை எப்படி ஏற்றுக்கொள்ள முடியும், என்பதே காந்திஜியின் ஆட்சேபனை. இதை யுத்தேசித்துத்தான் காந்திஜி கோபமடைந்தாரே யல்லாது தீர்மானத்தின் கருத்தை அவர் ஆட்சேபிக்கவே யில்லை. இத்தீர்மானத்தை எதிர்த்து மேலும் பேசுகையில், " நமது

சக்தி என்ன என்பதையும், நாம் என்ன செய்கிறோம் என்பதையும் நாம் அறியவில்லையென்று உலகத்தார் ஏளனம் செய்வார்கள். நம்மிடை இருந்துவரும் ஊழல்களை நாம் மறந்துவிடக்கூடாது. ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை நிச்சயமாக ஏற்பட்டாக வேண்டும். மற்ற வகுப்பினர் எல்லாரும் ஒருமனப்பட்டு காங்கிரசில் சேரவேண்டும். நாம் முதல் முதலாக நம்முடைய பலத்தை ஒன்று கூட்டுவோம். ஆழம் தெரியாத பாதாளத்தில் நான் மக்களை இறக்க விரும்பமாட்டேன்" என்று காந்திஜி கூறினார் அவர் விடுத்த சமாதானங்கள் பிரதிநிதிகள் மனத்தில் திருப்தியை ஊட்டிற்று. ஹஸரத் மோஹினியின் தீர்மானம் ஆமதாபாத்தில் தோல்வி யுற்றதெனினும் முடிவில் 1927-ம் ஆண்டில் சென்னையில் அதே பிரேரணை நிறைவேறி 1929-ம் ஆண்டில் காங்கிரஸ் லட்சியத்துடன் சேர்க்கப்பட்டது. இந்த காங்கிரசில் காந்திஜி முக்கிய நிர்வாக அதிகாரியாக நியமிக்கப்பட்டார். அவசியம் ஏற்பட்டபோது தமக்கு பதிலாக ஒருவரை அந்த ஸ்தானத்திற்கு நியமிக்க காந்திஜிக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. ஆனால் காங்கிரசின் சம்மதம் பெறாமல் சர்க்காருடன் சமாதானமோ அல்லது உடன்படிக்கையோ செய்துகொள்ளக்கூடா தென்றும், காங்கிரசின் லட்சியங்களை மாற்றக்கூடாதென்றும் நிபந்தனைகள் விதிக்கப்பட்டன. காங்கிரஸ் முடிந்த பிறகும் பிரதிநிதிகள் தங்கள் தங்கள் ஊருக்குச் செல்ல விரும்பவில்லை. காந்திஜி பிரதிநிதிகள் கோஷ்டிகளை அவரவர்கள் விடுதியில் சந்தித்து, சட்டமறுப்பியக்கம் எந்த முறையில் ஆரம்பிக்கப்படவேண்டுமென்பதை விளக்கிய பிறகுதான் பிரதிநிதிகள் தங்கள் தங்கள் ஊருக்குச் சென்றார்கள்.

---

## அத்தியாயம் 3

---

### சர்வகட்சி மகாநாடு

1922-ம் வருஷ ஆரம்பமானதும், காங்கிரஸ் திட்டத்தை ஒப்புக்கொள்ளாத சில நண்பர்கள் சர்க்காருக்கும், காங்கிரசுக்கும் சமரச மேற்படுத்த வேண்டுமென்று கவலை கொண்டார்கள். ஆமதாபாத் காங்கிரஸ் நடைபெற்ற

இரண்டே வாரங்களுக்குப்பிறகு ஜனவரி மாதம் 14, 15, 16 தேதிகளில் பம்பாயில் ஓர் சர்வகட்சி மகாநாடு கூட்டப் பட்டது. இம் மகாநாட்டிற்கு 350 பிரதிநிதிகள் அழைக் கப்பட்டிருந்தனர்.

காங்கிரஸ்காரர்கள், மிதவாதிகள் பலரும் சுமார் 200 பேருக்கு அதிகமாக விஜயம் செய்திருந்தார்கள். ஆரம் பத்தில் சர். சங்கரன் நாயர் இம் மகாநாட்டிற்குத் தலைமை வகித்தார். விஷயாலோசனைக் கூட்டத்தில் காங்கிரசின் பிரதிநிதியாக காந்திஜி ஒருவர்தான் பிரசன்னமா யிருந்தார். காங்கிரஸ் போக்கை விளக்கிவைக்கையில், மேற்படி மகா நாட்டில் கலந்துகொள்ள காங்கிரஸ்காரர்கள் விரும்ப வில்லையாயினும், வட்டமேஜை மகாநாட்டின் முடிவுகளில் தங்களுக்கு சிரத்தை உண்டென்றும், தங்கள் அபிப்பிரா யத்தை ஏற்காத இந்தியர்களுடைய உதவியை காங்கிரஸ் காரர்கள் நிராகரிக்கவில்லை யென்றும் தெரிவித்தார். சமரச மகாநாடு நடைபெறுவதற்கு முன் நாட்டில் நம்பிக்கையும் திருப்தியும் ஏற்படக்கூடிய அரசியல் நிலைமை ஏற்பட வேண்டிய தவசியம் என்பதை காந்திஜி எடுத்துக் காட்டி னர். சம்பரான் ஜில்லாவில் ஜனங்கள் மீது ரூ. 25000-த் துக்கு தண்டப் போலீஸ் வரி விதித்திருப்பதை எடுத் துக்காட்டி, பஞ்சாப் படுகொலைக் காலத்தில் கூட இவ்வளவு அடக்கு முறைகள் கையாளப்படவில்லை யென் பதை எடுத்துக் காட்டினர். மேலும் பல தீர்மானங்களைப் பற்றி காந்திஜி பின்வருமாறு பேசினர்:—

“மகா நாடு கூட்டுவது எங்கள் லட்சிய மல்ல; சர்க்கார் தாங்கள் கையாண்ட கொடிய முறைக்கு வருத்தத்தைத் தெரிவிக்க வேண்டும் என்று நாங்கள் வற்புறுத்துகிறோம். இதனல் சர்க்காரைசிறுமைப்படுத்த நாங்கள் விரும்பவில்லை. சர்க்கார் உண்மையில் வருத்தத்தைத் தெரிவித்தால் சமரச மகாநாடு வெற்றி பெறும்.” முடிவில் காந்திஜி பின் கண்ட எச்சரிக்கையை மகா நாட்டில் வெளியிட்டார்:—

“நாங்கள் போதிய அளவு கஷ்டத்தை அனுபவித்துச் சகிக்க வில்லை யென்று நான் நம்புகிறேன். இன்னும் கடுமையான கஷ்டங்களை நாம் எதிர்த்து நின்று தைரியமாக சகித்துக் கொள்ளத் தயாராக இருக்கவேண்டும். நம் முடைய கோபத்தை அடக்க நாம் பயிற்சி பெறவேண்டும்.” இப்பேச்சிற் கிடையே ஸ்ரீ கே. நடராஜன் என்பவருடைய

கேள்விக்குப் பதிலளிக்கையில், " நான் சொல்லும் நிபந்தனை களை ஏற்றுக்கொண்டால் இந்த மகா நாட்டின் தீர்ப்பை நான் ஒப்புக்கொள்ளத் தயார். எல்லா பகிஷ்கார ஆர்ப் பாட்டங்களையும் நிறுத்திவிட நாங்கள் தயார். வேண்டுமா ளுல் மறியல் இயக்கத்தையும் நிறுத்திவிடுகிறோம். எங்கள் நிபந்தனைகளைச் சர்க்கார் ஒப்புக்கொள்ளத் தயார் என்று கூறுவார்களாகில், அன்னியத் துணிக்கடை மறியல், சாராயக்கடை மறியல், ஹர்த்தால் எல்லாவற்றையும் நாங்கள் நிறுத்திவிடத் தயார்" என்று கூறினர்.

## சர். சங்கரன் நாயர் வெளியேற்றம்

இந்த சமயத்தில் சர்வகட்சி மகாநாட்டுக்குத் தலைமை வகித்த சர். சங்கரன் நாயர் வெளியேறிய விவரம் குறிப்பிடத் தக்கது. உண்மையில் சர். சங்கரன் நாயர் மகாநாட்டின் நடவடிக்கைகளை மேற்பார்வையிட்டுக் கவனிக்க நியமிக்கப் பட்டாரே 'யல்லாது தலைமை வகிக்கும்படி நியமிக்கப்பட வில்லை. மகாநாடு நடைபெற்றுக் கொண்டிருக்கையில் இரண்டு முறை மகாநாட்டை முடித்துவிடுவதாகவும், அல்லது தலைமைப் பதவியைக் காலி செய்துவிடுவதாகவும் சர். சங்கரன் நாயர் பூச்சாண்டி காட்டினர். ஒத்துழையா இயக்கத்தைச் சேர்ந்தவர்கள் இந்த மகாநாட்டில் கலந்து கொள்ளவில்லையென்பது சர்.சங்கரன் நாயரின் கோபத்திற்கு முதல் காரணமாகும். அடுத்தபடியாக அரசியல் கைதி களை விடுதலை செய்யவேண்டுமென்பதில் அவருக்குக் கொஞ்சம்கூட விருப்பம் கிடையாது. பின்னர் சாத்வீக மறியல் இருக்கவேண்டுமென்றபோது சர். நாயருக்குக் கோபத்தை அடக்கிக்கொள்ள முடியவில்லை. சர். சங்கரன் நாயர் பூச்சாண்டியைக் கண்டு ஸ்ரீ ஜின்னுவும், ஸ்ரீ எம். ஆர். ஜெயகரும் சஞ்சலம் அடைந்தனர். கடைசியாக, சர். நாயர் காலி செய்தால், அந்த ஸ்தானத்திற்கு மற்றொருவர் நியமிக்கப்படுவார் என்றும் மகாநாட்டைக் கலைக்க அவருக்கு அதிகாரம் இல்லையென்றும் ஸ்ரீ ஜெயகர் சொல்லவேண்டிய அவசியம் ஏற்பட்டது. கடைசியாக சர். சங்கரன் நாயரால் கோபத்தை அடக்கிக்கொள்ள முடியவில்லை. " எல்லாம் ஒழுங்கல்ல, நான்சன்ஸ்" என்று சொல்லிக்கொண்டே சர். நாயர் வெளியேறிவிட்டார்.

ஒத்துழையா வாதிகளால் அனுஷ்டிக்கக்கூடிய தீர் மானங்களை மட்டும் காங்கிரஸ் காரியக் கமிட்டி ஏற்றுக். கொண்டு, அதன்படி நடப்பதாக ஜனவரி மாதம் 17-ம் தேதி அறிவித்தது. இச் சர்வகட்சி மகாநாட்டின் நடவடிக் கைகள் லார்டு ரீடிங்குக்குத் திருப்தியளிக்கவில்லை ஆகவே இம்மகாநாட்டினால் ஒன்றும் ஏற்படவில்லை. வேல்ஸ் இள வரசர் சுற்றுப் பிரயாணம் எப்படியாவது அசம்பாவிதங்கள் இல்லாமல் நடைபெற வேண்டுமென்பது தான் சர்க்கா ருடைய கவலையாக இருந்தது. ஒத்துழையா இயக்கத் தாருடைய பகிஷ்கார ஆர்ப்பாட்டம் சர்க்காருக்கு பீதியை யும், மனக் கலக்கத்தையும் உண்டுபண்ணிற்று. நல்ல எண்ணத்துடன் சர்க்காருக்கும் காங்கிரஸுக்கும் சமரசம் ஏற்படுத்த வேண்டி பாடுபட்டவர்களுடைய முயற்சி வீணு யிற்று. இந்த சமரசப் பேச்சு முறிந்துபோனதைக் குறித்து காங்கிரஸ்காரர்கள் சிறிதும் வருத்தப்படவேயில்லை. காந்திஜி சொல்லியபடி, சர்க்கார் தங்களுடைய முழு சுவரூபத்தை யும் காட்டவில்லை யென்றும், ஜனங்களும் தங்கள் தியாகத் தின் முழு அம்சத்தையும் வெளிக்காட்ட முன் வரவில்லை யென்றும் காங்கிரஸ்காரர்கள் நம்பினார்கள்.

அரசியல் வாதிகள் ஓர் புறம் சமரசப் பேச்சுகள் நடத் திக்கொண்டிருக்கையில், ஜனங்கள் வரிகொடா இயக்கத்தை ஆரம்பிப்பதில் அதிக தீவிரமாக ஈடுபட்டிருந்தனர். கூர்ஜரத் தில் ஆனந்தா, பர்டோலி ஆகிய இரு தாலூக்காக்களிலும் வரிகொடா இயக்கத்தை நடத்த காந்திஜி முடிவு செய் திருந்தார். இந்த தாலூக்காவிலுள்ள ஜனங்களில் பெரும் பாலர் தென்னாப்பிரிக்காவிலிருந்து திரும்பியவர்களா கையால், காந்திஜியின் திட்டத்தில் அதிக நம்பிக்கை கொண்டிருந்தனர். பர்டோலி வரிகொடா இயக்கத்தைத் தலைமை வகித்து நடத்த காங்கிரஸ் காரியக் கமிட்டி காந்தி ஜிக்கு அனுமதி யளித்துவிட்டது.

இதே சமயத்தில் வரிகொடா இயக்கம் ஆரம்பிக்க எங்கு எங்கு வசதி யிருக்கிறதென்பதை ஆராய்ச்சி செய்ய ஜில்லா காங்கிரஸ் கமிட்டிகளுக்கு ஆந்திர மாகாண காங் கிரஸ் கமிட்டி அதிகாரம் அளித்தது. 1922-ம் வருஷம் ஜனவரி மாதம் 12-ம் தேதி குண்டூர் ஜில்லாமட்டும் வரி கொடா இயக்கத்தை ஆரம்பிப்பதாய் பட்டவர்த் தனமாக வெளியிடப் பட்டது. ஏற்கனவே ஆமதா

பாத் காங்கிரஸ் நடைபெற இரண்டு வாரங்களுக்கு முன்னதாக சர்க்காருக்குக் கொடுக்கவேண்டிய வரித்தொகைகளை கொடாமல் நிறுத்தி வைக்கும்படி ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருந்தது. இந்த விஷயத்தைப்பற்றி காந்திஜி தெரிந்துகொண்டவுடன் எல்லா வரிகளையும் ஜனவரி 25-ம் தேதிக்குள் சர்க்காருக்குக் கொடுத்து விடவேண்டுமென்று உத்திரவு போட்டார். ஆனால் இந்த உத்திரவு பத்திரிகைகளில் பிரசுரமாகவில்லை. இச் செய்தி தெரிந்ததும் குண்டூர் ஜில்லாவைத் தவிர ஏனைய ஜில்லாக்களில் ஜனங்கள் சர்க்காருக்கு வரியைக் கட்டிவிட்டார்கள். குண்டூர் ஜில்லாவில் வரிகொடா இயக்கத்தை ஆரம்பிக்க காந்திஜியைப் பிடிவாதமாக வேண்டிக்கொண்டபோது அவர் பின்வருமாறு பதிலளித்தார்.

"ஜனங்கள் எல்லாரும் ஒன்றுசேர்ந்து சட்ட மறுப்புச் செய்ய விரும்பினால், டில்லியில் விதிக்கப்பட்ட நிபந்தனைகள் எல்லாம் பூர்த்தியாக வேண்டும். உங்களுக்கு வெற்றி கிடைக்குமென்ற நம்பிக்கை யிருக்குமானால் நான் குறுக்கே நிற்க விரும்பவில்லை."

இந்த பதிலைப் பெற்றதும் தவறாக காந்திஜி சம்மதம் கொடுத்து விட்டதாக வியாக்கியானம் செய்யப்பட்டது. ஒரு கிராமத்தில் சில ஆடுமாடுகளை ஜப்தி செய்ய ஓர் போலீஸ் சப்-இன்ஸ்பெக்டர் போனபோது கன்றையும் மாட்டையும் தனியாகப் பிறிப்பதை கிராமவாசி ஆட்சேபித்தார். இந்தத் தகராறில் ஓர் பிரபல கிராமவாசியை சப்-இன்ஸ்பெக்டர் சுட்டு வீழ்த்திவிட்டார். குண்டூர் டவுனில் ராணுவம் வந்துவிட்டது. கவர்னருடைய குதிரைப்படை கிராமங்களில் சுற்றுப் பிரயாணம் செய்தது. அப்படியும் ஜனங்கள் வரி செலுத்த மறுத்தனர். குண்டூர் நிலைமையை விவரிக்க முடியாது.

நிலைமை இவ்வாறிருக்கையில் ஜனவரி மாதம் 31-ந் தேதி காங்கிரஸ் காரியக் கமிட்டி கூட்டம் நடைபெற்றது. சேர்ந்தாற்போல சட்டமறுப்பியக்கம் ஆரம்பிப்பதாகத் தீர்மானித்த பர்டோலி வாசிகளுக்கு பாராட்டு அளிக்கப்பட்டது. இந்தியாவில் மற்ற பிரதேசங்களில் சட்டமறுப்பு ஆரம்பிக்க வேண்டாமென்றும், பர்டோலி ஜனங்களுக்கு உதவியளிக்கும்படியும் காரியக் கமிட்டி யோசனைவிடுத்தது. முன்னதாக காந்திஜியின் அனுமதிபெற்ற பின்னர்தான் மொத்த

மாகச் சட்டமறுப்பு ஆரம்பிக்கலாம் என்று உத்திரவு பிறப்பிக்கப்பட்டது.

கூர்ஜரத்தில் வரிகொடா இயக்கத்தை ஆரம்பித்து விட காந்திஜி முடிவு செய்துவிட்டார். ஆரம்ப தினத்தை ஜனவரி மாதம் 31-ம் தேதிக்கு ஒத்திவைத்திருந்தார். இதை முன்னிட்டு வைசிராய்க்கு பிப்ரவரி மாதம் முதல் தேதியன்று காந்திஜி ஓர் கடிதம் எழுதினார். பம்பாயில் நவம்பர் மாதம் 17-ம் தேதி நடைபெற்ற கலவரத்தின் காரணமாக பர்டோலி வரிகொடா இயக்கத்தை ஏற்கனவே ஆரம்பிக்க முடியாமற் போய்விட்டதென்று அதில் குறிப்பிட்டிருந்தார். வைசிராய்க்கு எழுதிய கடிதத்தில் ஜனங்களுடைய சொத்துக்களைப் போலீஸார் கொள்ளையடிப்பதைப்பற்றியும், நிரபராதிகளை அனியாயமாகத் தாக்கிய சம்பவங்களைப்பற்றியும், சிறைகளில் ஒத்துழையா இயக்கக் கைதிகளை குரூரமான முறையில் காட்டுமிராண்டித்தனமாக சிறை அதிகாரிகள் நடத்துவதையும், சிறையில் சில அரசியல் கைதிகளுக்குக் கசையடி வழங்கப்பட்டதையும், அவர் சுட்டிக் காட்டினார். காங்கிரஸ் காரியக் கமிட்டி தமக்கு அளித்திருக்கும் அதிகாரத்தையும், பர்டோலியில் தற்சமயம் சட்டமறுப்பை ஆரம்பிக்கப்போவதாகவும், கொஞ்ச காலத்திற்குள் நிபந்தனைகளின்படி நடந்துகொண்டால், சென்னை மாகாணத்தில் 100 கிராமங்களில் சட்டமறுப்புக்கு அங்கீகாரம் அளிக்கத் தயாராக இருந்து வருவதாகவும், காந்திஜி வைசிராய்க்குத் தெரிவித்தார். அரசியல் கைதிகளை விடுதலை செய்யவும், பத்திரிகைகளுக்கு விதிக்கப்பட்டிருக்கும் வாய்ப்பூட்டுகளை எடுத்துவிடவும், ஜனங்கள் தங்கள் அபிப்பிராயங்களை இஷ்டப்படி தைரியமாகத் தெரிவிக்கவும், இஷ்டமானபடி கூட்டங்கள் கூட்டவும் உள்ள தடைகளை எடுத்துவிடவும் சர்க்காருக்கு ஒரு வார காலம் அவகாசம் கொடுப்பதாக அறிவித்தார். சர்க்கார் மேற்படி நிபந்தனைகளுக்குக் கட்டுப்படாவிடில் சட்டமறுப்பியக்கத்தை ஆரம்பித்துவிடுவதாக காந்திஜி அறிவித்துவிட்டார்.

தங்கள் அடக்குமுறை திட்டங்களை ஆதரித்து அவை மிகவும் நியாயமானவை யென்றும், அவசியமானவை யென்றும் சர்க்கார் காந்திஜிக்கு உடனேயே பதிலளித்து விட்டார்கள்.

## சௌரி சௌரா

இத்தருணத்தில் காங்கிரசுக்கு போதாத காலம் காத்துக் கொண்டிருந்தது. ஐக்கிய மாகாணத்தில் கோரக்பூரை யடுத்த சௌரி சௌராவில் பிப்ரவரி மாதம் 5-ம் தேதி ஓர் காங்கிரஸ் ஊர்வலம் நடைபெற்றது. கூட்டத்தில் கலவரம் ஏற்பட்டது. கலகக்காரர்கள் சுமார் 20 போலீஸ் கான்ஸ்டேபிள்களையும் ஒரு சப் இன்ஸ்பெக்டரையும் போலீஸ் ஸ்டேஷனுக்குள் தள்ளி, போலீஸ் ஸ்டேஷனுக்குத் தீ வைத்தனர். எல்லா போலீஸ் அதிகாரிகளும் தீயில் மடிந்து மாண்டனர். தவிர சென்னைக்கு ஜனவரி மாதம் வேல்ஸ் இளவரசர் விஜயம் செய்தபோது, பம்பாயில் நடைபெற்ற சம்பவங்கள் மீண்டும் சென்னையிலும் நடைபெற்றன. இந்த இரண்டு சம்பவங்களையும் காரணமாகக் கொண்டு பிப்ரவரி மாதம் 12-ம் தேதி பர்டோலியில் கூடிய காங்கிரஸ் காரியக்கமிட்டி சட்ட மறுப்பியக்கத்தையே நிறுத்திவிடும்படி முடிவு செய்துவிட்டது. இந்தத் தீர்மானத்தை அனுஷ்டிக்கும்படி எல்லா இடங்களுக்கும் தகவல் அனுப்பப்பட்டது.

பிறகு ஓர் நிர்மாண திட்டம் தொகுக்கப்பட்டது. இத்திட்டப்படி ஒரு கோடி காங்கிரஸ் அங்கத்தினர்களை பதிவு செய்யவேண்டுமென்றும், கதரை அதிகமாகப் பரவச் செய்ய வேண்டுமென்றும், தேசீயக் கல்வியை வளர்க்கவேண்டுமென்றும் வற்புறுத்தப்பட்டது. முன்போல அன்னியத் துணிக் கடைகளை மறியல் செய்யவும், கள், சாராயக் கடைகளை மறியல் செய்யவும் உரிமை யளிக்கப்பட்டது.

பர்டோலித் தீர்மானம் ஜனங்களிடை பலவிதமான உணர்ச்சிகளை ஏற்படுத்திவரலாயிற்று. ஆயிரக்கணக்கானவர் காந்திஜியின் திட்டத்தில் பூரண நம்பிக்கை கொண்டிருந்தனராயினும் சிலர் காந்திஜியுடன் அபிப்பிராய பேதம் கொண்டனர். டில்லியில் பிப்ரவரி மாதம் 24, 25 தேதிகளில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி பர்டோலியில் காரியக் கமிட்டி செய்த முடிவை ஒப்புக்கொண்டது. ஆனால் தனிப்பட்டவர் சட்ட மறுப்பு செய்ய அதிகாரம் அளிக்கப்பட்டது. தனிப்பட்ட சட்டமறுப்பு என்றால் என்ன என்பதை அக்கமிட்டி நிர்ணயம் செய்தது. டில்லியில்கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி தனிப்பட்டவர் சட்ட மறுப்பை

ஆதரிக்கவே சில தலைவர்களிடை கலக்கம் ஏற்படலாயிற்று. மத்தியஸ்தம் செய்ய முயன்றவர்கள், ஒரு சமயம் காந்திஜி சிறை சென்றுவிட்டால் என்ன செய்வதென்று அஞ்சலானார்கள். சட்டமறுப்பியக்கத்தை ஆரம்பித்து நடத்தியிருக்கவேண்டுமென்று லாலா லஜபதி ராய், பண்டித மோதிலால் நேரு போன்ற சிலர் காந்திஜிமீது குறைகூறலானார்கள். ஏதோ ஓர் ஊரில் சிலர் பிழை செய்துவிட்டதற்காக தேசத்தையே தண்டிப்பது சரியல்லவென்று அவர்கள் சிறையிலிருந்து காந்திஜிக்கு கடிதம் எழுதினார்கள். சிறைக்குள்ளிருப்பவர்கள் வெளியிலிருப்பவர்களுக்கு யோசனை சொல்லக்கூடாதென்ற கட்சியை காந்திஜி வற்புறுத்தினார். ஆனால், அக் கமிட்டிக் கூட்டம் நடைபெற்றபோது அவரவர் தங்கள் தங்கள் கோபத்தை வெளியிட்டனர். எல்லா பக்கத்திலிருந்தும் காந்திஜியை எதிர்க்கலானார்கள். சட்டமறுப்பியக்கத்தை நடத்தாது ரத்து செய்ததற்கும், பர்டோலித் தீர்மானத்தை நிறைவேற்றியதற்கும் காந்திஜி கண்டிக்கப்பட்டார். வங்காளப் பிரதிநிதிகளும், மஹாராஷ்டிரப் பிரதிநிதிகளும் காந்திஜியைக் கடுமையாகக் கண்டித்தார்கள். காந்திஜியின் செயலைக் கண்டிக்க டாக்டர் மூஞ்சே ஓர் தீர்மானத்தைப் பிரேரேபித்தார். சிலர் இத்தீர்மானத்தை ஆமோதித்துப் பேசினார்கள். ஆனால் கடைசியில் தீர்மானம் ஓட்டுக்கு விடப்பட்டபோது பேசியவர்களைத் தவிர மற்றவர் ஆதரிக்கவேயில்லை. ஸ்ரீ மூஞ்சேயின் தீர்மானத்தை எதிர்க்க ஒருவருக்கும் காந்திஜி அனுமதியளிக்க முடியாதென்று சொல்லிவிட்டார். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் கலவரம் புயல்காற்று பலமாக இருந்தாலும் காந்திஜி கலக்கமுறவில்லை. நாணலைப்போல் சற்று வளைந்து கொடுத்தாரே யல்லாது தைரியத்தையும், தமது கொள்கைகளையும் அவர் கைவிடவில்லை.

## காந்திஜிக்கு சிறை தண்டனை

அரசியல் சூதாட்டம் ஒருவிதமாக இப்பொழுது தான் முடிவடைந்தது என்று சொல்லவேண்டும். காந்திஜி மீது பாணப்பிரயோகம் செய்ய இதை விட்டால் சர்க்காருக்கு வேறு சந்தர்ப்பம் கிடையாது. காந்திஜியின் செல்வாக்கு நாட்டில் ஓங்கி உன்னத நிலையில் இருக்கும் போது ராஜதந்திரமும், அறிவும் கொண்ட எந்த அரசாங்கத்தாரும் அவரை எதிர்த்து அவர்மீது பாணப்பிரயோகம்

செய்யமாட்டார்கள்: 'ஓடுமீன் ஓட, உறுமீன் வருமளவும் வாடி யிருக்குமாம் கொக்கு' என்பதுபோல காந்திஜியின் செல்வாக்குக்கு ஹானி எப்பொழுது ஏற்படும் என்று சர்க்கார் ஆவலுடன் எதிர்ப்பார்த்துக் கொண்டிருந்தார்கள். காங்கிரஸ்காரர்களுக் குள்ளேயே சிலர் காந்திஜியைக் கண்டித்த சந்தர்ப்பத்தை பலமாகக் கொண்டு சர்க்கார் காந்திஜிமீது 'ஆடுகள்மீது ஓனாய் பாய்வதுபோல' ஒரே பாய்ச் சலாகப் பாய்ந்தனர். மார்ச்சு மாதம் 13-ம் தேதி காந்திஜி கைது செய்யப்பட்டார். காந்திஜிமீது ராஜத் துவேஷ குற்றம் சாட்டப்பட்டு அவர் செஷன்ஸ் கோர்ட்டில் விசாரணை ஏற்கவேண்டுமென்று உத்திரவிடப்பட்டது.

'இப் பெரிய வழக்கு விசாரணை' 1922-ம் வருஷம் மார்ச்சு மாதம் 28-ம் தேதி ஆரம்பமாயிற்று. சட்டப்படி காந்திஜி ஓர் குற்றவாளியாகவும், கைதியாகவும் இருந்த போதிலும், காந்திஜி கோர்ட்டுக்குள் நுழைந்ததும் ஆங்கு வீற்றிருந்த அனைவரும் தங்களை அறியாமலே எழுந்து நின்று காந்திஜிக்குத் தங்கள் வணக்கத்தைத் தெரிவித்தனர். காந்திஜியுடன் அவருடைய பக்தரும், தோழருமாகிய ஸ்ரீ சங்கர்லால் பாங்கரும் வந்தார். வழக்கு விசாரணையைக் கவனிக்க காந்திஜி பக்கத்தில் ஸ்ரீமதி சரோஜினி தேவி வீற்றிருந்தார். "ஒரு சமயம் என்னால் முடியாதபோனால் எனக்கு ஆதரவளிக்கப் பக்கத்தில் நீங்கள் இருக்கிறீர்கள்" என்று சரோஜினி தேவியை காந்திஜி பரிகாசம் செய்தார். கோர்ட்டில் கூடியிருந்த ஏராளமான ஜனங்கள்மனத்தில் கலக்கமும், பீதியும், பெருமையும், சந்தோஷமும் உதித்தது. நீதிபதி தமது ஸ்தானத்தில் அமர்ந்தார். இந்த நீதிபதி தூய்மையானவர். மிகவும் தைரியசாலியாவார். அவரது மனோதைரியமும், ஒழுக்கமும் போற்றத் தக்கவை யாகும். புருஷசிரேஷ்டராகிய காந்திஜியின் மேன்மையை உணர்ந்து அவருக்குத் தமது வணக்கத்தையும் மரியாதையையும் நீதிபதி தெரிவித்துக் கொண்டார். முன்னர் தெய்வத் தன்மை வாய்ந்த யேசுநாதரை இதே மாதிரி தத்துவத்தை உபதேசித்ததற்காகச் சிலுவையிலறையப்பட்டதை காந்திஜியின் விசாரணைக்கு ஸ்ரீமதி சரோஜினி தேவி ஒப்பிடுகிறார். இந்தப் பெரிய விசாரணை சிக்கிரத்தில் முடிந்துவிட்டது.

இதுவரை ஜனங்கள் அடக்கி வைத்திருந்த உணர்ச்சி தாங்கமுடியாமல் வெளிவர ஆரம்பித்துவிட்டது. ஜனங்கள் அடைந்த துக்கத்திற்களவே யில்லை. காந்திஜியின் கையைப் பிடித்துக்கொண்டு அடக்கமுடியாத வருத்தத்துடன் ஜனங்கள் காந்திஜியிடம் விடைபெற்றுச் சென்றனர். ஆயிரக் கணக்கானவர்கள் காந்திஜியை வணங்கலாயினர். இடைவிடாது அவர் தேச சேவை செய்துவந்த முறை எல்லாருடைய மனத்தையும் உருகச் செய்துவிட்டது. இவ்வளவு ஜனங்கள் மத்தியில் சிறிதும் கவலையின்றி, ஒளி பரந்த முகத்துடன், இந்திய மக்களின் உண்மைப் பிரதி நிதியேபோல், சாதாரண உடை தரித்துத் தியாகமே உருவெடுத்து வந்தாற்போல காந்திஜி முகமலர்ச்சியுடன் விளங்கினர்.

"சர்க்கார் அவரை பாதாளத்தில் அழுத்தலாம். ஆனல் காந்திஜியின் லட்சியம் ஒருநாளும் மாருது. இந்திய மக்கள் மனத்திலிருந்தும் இந்த லட்சியம் ஒருபொழுதும் அகலாது."

காந்திஜியை எந்தக் கட்டுரைக்காக குற்றவாளியென்று சொல்லுவதென்பது சர்க்கார் சட்ட அதிகாரிகளுக்கு கஷ்டமாக இருந்தது. காந்திஜி எழுதியதில் எல்லாமே ராஜத்துவேஷமாக அவர்களுக்குத் தோன்றின. "ராஜத் துவேஷப் பிரசாரம் செய்வதுதான் தம்முடைய கடமை யென்றும், தம்முடைய கட்டுரைகள் போதிய அளவு ராஜத் துவேஷப் பிரசாரம் செய்யவில்லையேல், அது தம்முடைய சக்திக் குறைவாகும்" என்றும் காந்திஜி சதா சொல்லிவந்திருக்கிருர். கடைசியாக காந்திஜி 'யங் இந்தியாவில்' பிரசுரம் செய்த மூன்று கட்டுரைகள் ஆட்சேபகரமானவை யென்று பொறுக்கி எடுக்கப்பட்டன. குற்றப் பத்திரிகை வாசிக்கப்பட்டவுடன், தாம் குற்றவாளியென்று ஒப்புக் கொள்ள காந்திஜி எழுந்து "மன்னருடைய பெயர் இக் குற்றப் பத்திரிகையில் சேர்க்கப்படவில்லையே. சரியான காரணத்தை உத்தேசித்துத்தான் சேர்க்கப்படவில்லை போலும்" என்று காந்திஜி கூறினர். ஸ்ரீ சங்கர்லால் பாங்கரும் தாம் குற்றவாளி என்று ஒப்புக்கொண்டார். செஷன்ஸ் விசாரணை உடனே முடிந்திருக்கும். ஆனல், பூரா விசாரணையும் நடைபெற வேண்டுமென்று அட்வகேட்டு-ஜெனரல் வற்புறுத்தினர். இதை ஜட்ஜ் ஒப்புக்

கொள்ள மறுத்து, எவ்வளவு தண்டனை விதிப்பது என்பதை முடிவு செய்ய விரும்பினர். காந்திஜி கோர்ட்டில் ஓர் அறிக்கை வெளியிடுமுன் பூர்வாங்கமாகச் சில வார்த்தைகள் பேசினர். ' யங் இந்தியா ' பத்திரிகையுடன் தமக்கு சம்பந்தம் ஏற்படுவதற்கு வெகுகாலத்திற்கு முன்னரே தாம் ஜனங்களிடையே அதிருப்தியைப் பிரசாரம் செய்து வந்ததாகவும், சென்னை, பம்பாய், சௌரிசௌரா முதலிய இடங்களில் நடைபெற்ற சம்பவங்களுக்குத் தாம் பொறுப்பாளி யென்றும், தெரிவித்துப் பின்வருமாறு பேசினர் :—

"நெருப்புடன் விளையாடுகிறேன் என்பதை நான் அறிவேன். இந்த ஆபத்தை நான் இஷ்டப்பட்டு மேற்கொண்டேன். இப்பொழுது என்னை விடுதலை செய்தாலும், அதே வேலையைத்தான் மேலும் ஆரம்பிப்பேன். இந்த வேலையைச் செய்யாவிட்டால், நான் என் கடமையைச் செய்தவனாக மாட்டேன். அதிருப்தியைப் பிரசாரம் செய்வதுதான் என் வாழ்க்கையின் லட்சியம். என்னுடைய தேசத்திற்குப் பெருந் தீங்குகளையும், நஷ்டங்களையும் இழைத்ததென்று நான் கருதும் ஓர் ஆட்சிக்குக் கட்டுப்பட்டாக வேண்டும், அல்லது என் மூலம் உண்மையை உணர்ந்து கோபமிகுதியால் ஜனங்கள் செய்யும் வெறிபிடித்த செயல்களால் ஏற்படும் ஆபத்துகளுக்கு நான் உட்படவேண்டும். இவ்விரண்டில் எது எனக்கு வேண்டுமென்று நிச்சயிப்பது எனது இஷ்டமாகும். எனது சகோதரர்கள் சில சமயங்களில் தவருன முறைகளைக் கையாண்டார்கள் என்பதை நான் அறிவேன். அதற்காக நான் அதிக வருத்தத்தைத் தெரிவிக்கிறேன். அதனுல் தான் நான் தற்சமயம் கடுமையான தண்டனையை ஏற்றுக்கொள்ள இங்கு அழைத்துவரப்பட்டிருக்கிறேன். எனக்குக் கருணை காட்ட வேண்டுமென்று நான் கேட்கவில்லை. சமாதான வேலைகளை நான் செய்ததாகக் கூறவில்லை. எவ்வளவு கடுமையான தண்டனை கொடுக்கக் கூடுமோ அவ்வளவுக்குத் தண்டனையை நான் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கிறேன். எந்த காரியத்தை அநியாயமான குற்றம் என்று சட்டம் கூறுகிறதோ அக் காரியம் ஓர் சாதாரண மனிதன் நிறைவேற்ற வேண்டிய முதற் கடமையாகும் என்று எனக்குத் தோன்றுகிறது. ஆகையால் நீதிபதியவர்களுக்கு ஒரே மார்க்கம் தான் இருக்கிறது. தங்கள் உத்தியோகத்தை ராஜினமாச் செய்து

கொள்ளலாம். இல்லையேல், தாங்கள் கூறும் நியாயம் ஜனங்களுடைய நன்மையைக் கோருகிறதென்று தாங்கள் அபிப்பிராயப்பட்டால், கடுமையான தண்டனையை விதிக்கலாம். திடீரென்று இவ்வித மாறுதல் தங்களிடம் ஏற்பட்டுவிடுமென்று நான் எதிர்பார்க்கவில்லை. ஆனால், நான் என்னுடைய அறிக்கையைப் படித்து முடித்தவுடன், இந்த அபாயத்தை ஏற்றுக்கொள்ள அறிவுபடைத்த ஓர் மனிதனுடைய உள்ளத்தில் எழுந்துள்ள உணர்ச்சி எவ்வாறானது என்பதைத் தாங்கள் ஒருவாறு உணரக் கூடும்.

ஸ்ரீ சங்கர்லால் நீண்ட அறிக்கையொன்றும் விடுக்கவில்லை. காந்திஜி எழுதிய கட்டுரைகளை பிரசுரம் செய்யும் பாக்கியம் தமக்கு இருந்ததென்றும், தாம் குற்றவாளி தான் என்றும் ஸ்ரீ சங்கர்லால் கூறிவிட்டார்.

## காந்திஜியின் அறிக்கை

"இந்தியாவிலுள்ள பொது ஜனங்களுக்கும், பிரிட்டனிலுள்ள பொது ஜனங்களுக்கும் நான் என்னுடைய நிலைமையைத் தெளிவுபடத்தக்க கடமைப்பட்டிருக்கிறேன். இங்கிலாந்திலுள்ள பொது ஜனங்களைத் திருப்தி செய்வதற்காகவே இப் பிராசிகியூஷன் வழக்கு தொடரப்பட்டிருக்கிறதினால் நான் இதுகாறும் தீவிர ராஜவிஸ்வாசியாக இருந்துவிட்டு, இப்பொழுது அதிருப்தியைப் பிரசாரம் செய்யும் ஒத்துழையாமைக்காரனாக ஏன் மாறிவிட்டேன் என்பதை விளக்க வேண்டியதவசியமாகும். சர்க்காரிடம் ஜனங்களுக்கு அதிருப்தியைப் பிரசாரம்செய்த குற்றத்தை நான் ஏன் ஒப்புக்கொண்டேன் என்பதைக் கோர்ட்டாருக்கும் தெரிவிக்கவேண்டும்."

"1893-ம் வருஷத்தில் தென்னாப்பிரிக்காவில் மிகவும் அசந்தர்ப்பமான வேளையில் நான் பொதுஜன சேவையில் இறங்கினேன். தென்னாப்பிரிக்காவில் எனக்கும் பிரிட்டிஷாருக்கும் ஏற்பட்ட முதல் சம்பந்தம் சந்தோஷகரமானதல்ல. மனிதன் என்ற முறையிலும், இந்தியன் என்ற முறையிலும் எனக்கு அங்கு ஒருவித உரிமையும் இல்லையென்பதைக் கண்டேன். நான் இந்தியன் என்ற காரணத்தினால், எனக்கு மனித உரிமை யில்லை என்பதை நான் அறிந்தேன்.

இதனால் நான் ஏமாற்றமடைந்துவிடவில்லை. இந்தியர்களை இம்மாதிரி நடத்துவது உண்மையில் மேன்மையான ஓர் அரசாங்கத்தில் இருந்து வரும் ஊழல்களின் வளர்ச்சி என்று எண்ணினேன். சர்க்கார் முறை எங்கு எங்கு தவறாக இருக்கிறதோ அதை நன்றாய் கண்டித்து, ஆனால் சர்க்காரின் அழிவை விரும்பாமல் சர்க்காருடன் பூரணமாக ஒத்துழைத்தேன்.

பிறகு 1899-ம் ஆண்டில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் உயிருக்கே போயர் யுத்தத்தால் வந்த ஆபத்தின் போது, சர்க்காருக்கு என்னுடைய சேவை அளித்து உதவினேன். பல தொண்டர் படைகளைத் திரட்டி யுத்தத்தில் கூடியவரை சேவை செய்தேன். 1906-ம் வருஷத்திலும், ஸுலூக்கள் கலகம் செய்தபோது காயமடைந்தவர்களுக்கு உதவியளிக்க ஓர் தொண்டர் படையைத் திரட்டி கலகம் அடக்கப்படும் வரை ஓயாது தொண்டாற்றினேன். இவ்விரு சந்தர்ப்பங்களிலும், எனக்குச் சர்க்கார் தங்கப் பதக்கங்கள் பரிசளித்ததுடன், சேவை புரிந்தவர் ஜாபிதாவில் என்னையும் சேர்த்திருந்தார்கள். தென்னாப்பிரிக்காவில் நான் ஆற்றிய சேவைக்கு மெச்சி லார்டு ஹார்டிஞ்சு எனக்கு ஓர் 'கைசரி ஹிண்டு' தங்கப் பதக்கம் பரிசளித்தார். 1914-ம் வருஷம் மகாயுத்தம் ஆரம்பித்தபோது, லண்டனிலுள்ள இந்திய மாணவர்களைக் கொண்டு ஓர் தொண்டர் படை திரட்டி யுத்த காலத்தில் தொண்டாற்றினேன். இத் தொண்டர்படையின் சேவையை பிரிட்டிஷ் அதிகாரிகள் போற்றி யிருக்கிறார்கள். 1917-ம் வருஷம் டில்லியில் நடைபெற்ற யுத்த மகாநாட்டில், லார்டு செம்ஸ்போர்டு விசேஷ வேண்டுகோள் விடுத்தபோது, என்னுடைய தேக நிலைமையையும் பொருட்படுத்தாது, ராணுவத்திற்கு ஆள் சேர்த்துக் கொடுத்தேன். இம்மாதிரி சேவைகள் செய்வதன் மூலம், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தில் இந்தியர்களுக்கு சம அந்தஸ்து பெறமுடியும் என்ற நம்பிக்கை என் மனத்தில் வேரூன்றி யிருந்தது.

ஜனங்களின் உண்மையான சுதந்திரத்தைக் கொள்ளை கொள்வதற்கென தயார் செய்யப்பட்ட ரௌலட் சட்டம் என் நம்பிக்கையை முதல் முதலாக உடைத்தெறிய ஆரம்பித்தது. இக் கொடிய சட்டத்தை எதிர்த்துக் கடுமையான கிளர்ச்சி செய்யவேண்டியதவசியம் என்று என்

மனத்தில் ஓர் உணர்ச்சி ஏற்பட்டது. ரௌலட் சட்டத்திற் கடுத்தாற்போல பாஞ்சால படுகொலை அட்டூழியம் நடை பெற்றது. ஜலியன்வாலா சதுக்கத்தில், நூற்றுக் கணக் கான இந்தியர் இரக்கமின்றி சுட்டு வீழ்த்தப்பட்டனர். ரஸ்தாக்களில் ஜனங்கள் புழுக்கள்போல நெளிந்து நெளிந்து செல்லவேண்டுமென்ற உத்தரவு தாண்டவமாடிற்று. நிர பராதிகள் பகிரங்கமாக நடுவீதிகளில் கசையடிக் கொடுமைக் குள்ளானார்கள். இன்னும் எடுத்துரைக்க முடியாத அட் டூழியங்களுக் குட்படுத்தப்பட்டார்கள். அத்துடனில்லாது துருக்கியின் கௌரவத்தைப்பற்றியும், மற்ற முஸ்லீம் ஸ்தலங்களைப்பற்றியும் இந்தியாவிலுள்ள முஸ்லீம்களுக்கு பிரிட்டிஷ் பிரதம மந்திரி கொடுத்த வாக்குறுதிகளும் நிறை வேற்றப்படவில்லை யென்பதையும் கண்டேன்.

இருந்தபோதிலும், 1919-ம் வருஷம் அமிருதசரஸில் நடைபெற்ற காங்கிரஸில், எத்தனையோ நேயர்கள் எச்ச ரிக்கை செய்தும், அவற்றை யெல்லாம் பொருட்படுத்தாமல், மாண்டேகு-செம்ஸ்போர்டு சீர்திருத்தத்தை ஆதரித்து வரவேற்று, சர்க்காருடன் ஒத்துழைக்க வேண்டுமென்று வாதாடினேன். அப்பொழுதுகூட இந்தியர்களுடைய குறைகளை பிரிட்டிஷ் பிரதம மந்திரி நிவர்த்தி செய்வார் என்று நம்பி யிருந்தேன்.

ஆனால் எல்லா நம்பிக்கையும் வீணாயின. கிலாபத்து உறுதிமொழிகள் நிறைவேற்றப் படவில்லை. பஞ்சாப் அட்டூழியத்திற்குக் கண்ணைத் துடைத்துப் போகச் சொல்லிவிட்டார்கள். பஞ்சத்தினாலும், வறுமையினாலும் வருந்தும் இந்திய ஜனங்கள் நாளுக்கு நாள் நசித்துவர லானார்கள். அந்நியர் நம் நாட்டுப் பொருள்களை யெல்லாம் கொள்ளை கொண்டு தாங்கள் செய்யும் வேலைக்குக்கூட சரியான அளவு சம்பளம் கொடுப்பதில்லை என்ற உண் மையை இந்தியமக்கள் அறியாமலிருந்தனர். இந்திய மக்களை ஏழையாக்குவதற்காகத்தான் பிரிட்டிஷ் இந்தியாவில் அர சாங்கம் நடைபெறுகிற தென்பதை ஜனங்கள் உணரவே யில்லை. இந்தியாவிலுள்ள லட்சக்கணக்கான கிராமங் களில் உடம்பில் சதையில்லாமல் எலும்பும் தோலுமாக வாழும் ஜனங்களின் நிலைமையை எவரும் மறுக்கமுடியாது. சரித்திரத்திலேயே இணையில்லாத இவ்வளவு பெரிய அக்கிரமத்தை மனித சமூகத்தினிடையே செய்து வருவ

தற்கு பிரிட்டிஷ் ஜனங்களும், இந்தியாவில் நகரங்களில் வாழும் ஜனங்களும் கடவுள் ஒருவர் இருப்பது உண்மையானால், அக்கடவுளிடம் ஜவாப் சொல்லியே தீரவேண்டும். அன்னிய நாட்டு பகாசுரனுக்கு சட்டம் சாதகமாக இருந்து வருகிறது. பாஞ்சாலத்தில் நடைபெற்ற ராணுவச்சட்டப்படி தொடரப்பட்ட வழக்குகளை நான் கவனித்ததிலிருந்து இந்த நாட்டில் நூற்றுக்கு 95 தண்டனைகள் முற்றிலும் அநியாயமானவை என்று நான் நம்புகிறேன். அரசியல் வழக்குகளில் எனக்குள்ள அனுபவத்திலிருந்து பத்துக்கு ஒன்பது வழக்குகளில் நிரபராதிகள் தண்டிக்கப்படுகிறார்கள். தாய் நாட்டிடம் அன்புகாட்டியதே அவர்களுடைய குற்றம் என்று கூறப்பட்டிருக்கிறது. இந்திய நீதிஸ்தலங்களில் ஐரோப்பியர்களுக்கு எதிராக 100-க்கு 99 வழக்குகளில் இந்தியர்களுக்கு நியாயம் வழங்கப்படுவதில்லை. நான் உண்மையை மிகைப்படுத்திக் கூறவில்லை. இவ்வழக்குகளில் சம்பந்தப்பட்ட இந்தியர்களுடைய அனுபவம் இதுவே. அன்னிய நாட்டு கொள்ளைக்காரருடைய நலத்திற்காக இந்த நாட்டில் சட்ட நிர்வாகம் விபசாரம் செய்யப்பட்டு வருகிறது.

எல்லாவற்றிலும் வருந்தத்தக்கதென்னவெனில், இந்த அக்கிரமங்களைத் தாங்கள் செய்துவருவதாக பிரிட்டிஷ் உத்தியோகஸ்தர்களும் இந்திய உத்தியோகஸ்தர்களும் அறியவில்லை. என்மீது குற்றம் சாட்டப்பட்டிருக்கும் இ. பி. கோ. 124-A பிரிவு, இந்திய மக்களின் சுதந்திரத்தை நசுக்குவதற்கு ஏற்படுத்தப்பட்ட முக்கிய சட்டமாகும். சட்டத்தின் மூலம் அன்பு ஏற்படுத்தப்பட முடியாது. ஒருவரிடம் மற்றொருவருக்கு விருப்பம் இல்லையேல் பலாத்காரத்தை கைக்கொள்ளாதவரை அவர் தமது அதிருப்தியை நன்கு வெளியிட அனுமதிக்கப்படவேண்டும். நானும், ஸ்ரீ பாங்கரும் அதிருப்தியை வளர்த்தோமென்று குற்றம் சாட்டப்பட்டிருக்கிறோம். இந்த பிரிவின்கீழ் இந்தியாவில் பல பிரபல தேசாபிமானிகள் தண்டிக்கப்பட்டிருக்கின்றனர். இப்பிரிவின் கீழ் என்னையும் குற்றம் சாட்டியது எனது பாக்கியமென்று நான் கருதுகிறேன். எனது அதிருப்திக்குக் காரணங்களை நான் விளக்கி விட்டேன். மன்னரிடத்திலோ அல்லது நிர்வாகத்திலிருந்துவரும் தனிப்பட்ட ஒரு நபரிடத்திலோ எனக்கு அதிருப்தி கிடையாது. இதுவரை இருந்து வந்த

அரசாங்கங்களைக் காட்டிலும் அதிக தீங்குகளை இழைத்துள்ள ஓர் நிர்வாகத்திடம் நான் அதிருப்தி கொண்டிருப்பது எனது நற்பயனாகும். பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இந்தியா வலிமை இழந்து விட்டது. இம்மாதிரியான மனோநிலையை வைத்துக்கொண்டு இந் நிர்வாகத்திடம் திருப்திகொள்வது பாபம் என்று நான் கருதுகிறேன். ஆட்சேபிக்கப்பட்ட கட்டுரைகளை எழுதியது என் பாக்கியம் என்று நான் கருதுகிறேன்.

ஒத்துழையா இயக்கத்தின் மூலம் இங்கிலாந்தும், இந்தியாவும் இருந்துவரும் இயற்கைக்கு மாறான வாழ்க்கையிலிருந்து தப்ப நான் ஓர் வழியைக் காண்பித்து இரு நாடுகளுக்கும் சேவை செய்திருப்பதாக நம்புகிறேன். அக்கிரமம் செய்கிறவனைத் துன்புறுத்துவதற்காகத்தான் ஒத்துழையா இயக்கம் ஆரம்பிக்கப்பட்டதென்பது என்னுடைய கருத்து. பலாத்காரத்துடன் கூடிய ஒத்துழையா இயக்கத்தினால் அக்கிரமங்கள் அதிகரிக்கும் என்பதையும், அக்கிரமங்கள் ஒழியவேண்டுமானால் முற்றிலும் அஹிம்சா தர்மத்தைக் கடைப்பிடிக்கவேண்டுமென்பதையும் இந்தியர்களிடை பிரசாரம் செய்ய நான் விரும்புகிறேன். அஹிம்சையென்றால் பலாத்காரமின்றி நடத்திய ஒத்துழையா இயக்கத்தால் விளைந்த துன்பங்களுக்குத் தானாகவே கீழ்ப்படிதலாகும். ஆகையால் கடுமையான தண்டனையை சந்தோஷத்துடன் வரவேற்கிறேன். சட்டப்படி நான் செய்தது தவறென்று சொல்லலாம். ஆனால் நான் ஓர் சாதாரண மனிதனுடைய கடமையைத்தான் செய்ததாகக் கருதுகிறேன். நீங்கள் பிரயோகம் செய்யும் சட்டம் அக்கிரமம் என்றும், நான் உண்மையில் நிரபராதி என்றும் உங்கள் மனதில் உதிக்குமாயின் நீதிபதியும், அசெஸர்களும் தங்கள் ஸ்தானங்களை ராஜீனமாச் செய்வதைத் தவிர வேறு மார்க்கமில்லை. இல்லையேல் எனக்குக் கடுமையான தண்டனையை அளியுங்கள்."

(ஒப்பம்) காந்தி

## ஜட்ஜின் தீர்ப்பு

"நீதிபதி யளித்த தீர்ப்பின் சாரம் வருமாறு:— குற்றவாளியென்று ஒப்புக்கொண்டதன் மூலம் நீங்கள் என் வேலையை சுலபமாக முடித்து விட்டீர்கள். ஆனால்

நியாயமான தண்டனையை நிர்ணயம் செய்வது கஷ்டமாக இருக்கிறது. சட்டம் ஒருவருக்கும் மரியாதை காட்டு வதில்லை. இருந்தபோதிலும் இதுவரை நான் விசாரித் தவர்களிலோ அல்லது இனி விசாரிக்கப்போகின்றவர்களிலோ தங்களுக்கு இணையானவர்களை நான் கண்டதுமில்லை, காணப்போவதுமில்லை. கோடிக்கணக்கான இந்திய மக்கள் உங்களை சிறந்த தேசாபிமானி யென்றும், தலைவர் என் றும் மதிப்பதை நான் ஒருபொழுதும் மறக்க முடியாது. அரசியல் கொள்கைகளில் தங்களைப் பின்பற்றுதவர்கள் கூட தங்களுடைய உயர்ந்த குணத்தையும், தூய்மையான வாழ்க்கையையும் போற்றுகின்றனர். தங்களை வேறு துறைகளில் குறைகூறுவது எனது அலுவலல்ல. அப்படிச் செய்யவும் நான் விரும்பவில்லை. சட்டத்திற்குட்பட்ட மனிதன், அரசாங்கத்திற்கு விரோதமாகச் சட்டத்தை மீறியதாகவே நான் தங்களைக் கருதவேண்டும். தாங்கள் இடைவிடாது பலாத்காரத்தை எதிர்த்துப் பிரசாரம் செய்துவந்திருப்பதை நான் அறிவேன். ஆனால் தங்களு டைய அரசியல் பிரசாரத்தின் தன்மையையும், அதைக் கேட்டுக்கொண்டிருந்த மக்களின் நிலைமையையும் கவனித் தால், பலாத்கார முறைகள் கையாளப்படமாட்டாதென்று தாங்கள் எவ்விதம் நம்பிக்கொண்டே யிருக்கக்கூடு மென்பது எனக்குப் புலப்படவில்லை. தங்களைச் சும்மா விட்டுவைக்க முடியாதபடி சர்க்காரை ஓர் நிலைமைக்குத் தாங்களே கொண்டு வந்துவிட்டதாக இந்த நாட்டில் பலர் கருதுகின்றனர். பொதுஜன சௌகரியத்தை முன்னிட்டுத் தங்களுக்கு எவ்வித தண்டனை விதிக்கலாம் என்பதையே நான் ஆலோசித்துக் கொண்டிருக்கிறேன். தங்களுக்குத் தண்டனை விதிக்கையில் சுமார் 12 வருடங்களுக்கு முன்னால் நடைபெற்ற இதேபோன்ற வழக்கில் அளிக்கப்பட்ட தீர்ப் பையே பின்பற்ற உத்தேசித்திருக்கிறேன். இதே குற்றத்திற் காக ஸ்ரீ பால கங்காதர திலகர்மீது விதிக்கப்பட்ட தண்டனை யையே நான் குறிப்பிடுகிறேன். அவருக்கு மொத்தமாக 6 வருடத்திய சாதாரண தண்டனை விதிக்கப்பட்டது. தங்களையும் நான் பால கங்காதர திலகருடன் சமமாக பாவிப்பதைத் தாங்கள் அநீதியென்று கருதமாட்டீர்க ளென நம்புகிறேன். தங்களுக்கு மொத்தம் ஆறு வருட சாதாரண சிறை தண்டனை விதித்திருக்கிறேன். இந்தியா வின் போக்கு மாறி தங்களுடைய தண்டனைக் காலத்தைச்

சர்க்கார் குறைத்துவிடுவார்களேயானால் என்னைவிட வேறு எவரும் அதிக சந்தோஷமடைய மாட்டார்கள் என்பதைத் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்."

ஸ்ரீ சங்கர் லால் பாங்கருக்கு ஒரு வருட சாதாரண தண்டனையும் ரூ. 1000 அபராதமும், அபராதம் செலுத்தத் தவறினால் மேலும் 6 மாத தண்டனையும் விதித்துள்ளதாக நீதிபதி தெரிவித்தார்.

தம்மைத் திலகருடன் சேர்த்ததற்குப் பெருமை கொள்வதாகச் சொல்லி வழக்கை கண்ணியமாக நடத்தியதற்கு காந்திஜி தமது வந்தனத்தைத் தெரிவித்துக் கொண்டார்.

காந்திஜிதேசத்தினிரிடமிருந்து தனியேபிரித்துக்கொண்டு போகப் பட்டார். இது எதிர்பாராத சம்பவமில்லை. மார்ச்சு மாதம் 9-ம் தேதியன்றே "நான் கைது செய்யப்பட்டால்" என்ற தலைப்பின்கீழ் காந்திஜி "யங் இந்தியா"வில் ஓர் கட்டுரை எழுதியிருந்தார். சௌரி சௌரா சம்பவத்தைப் பற்றி பண்டித குன்சுரூ அனுப்பிய அறிக்கையையும், பர்டோலியிலிருந்து காங்கிரஸ் காரியதரிசி அனுப்பிய அறிக்கையையும் ஆதாரமாகக் கொண்டு சட்டமறுப்பை ரத்து செய்துவிடும்படி காந்திஜி உத்திரவு பிறப்பித்துவிட்டார். தாம் கைது செய்யப்பட்டால், தேசத்தில் பலாத்காரச் செயல்களே இருக்கக்கூடாதென்றும், சர்க்காருடைய பயத்திற்குக் காரணமே இல்லையென்று ருசுப்படுத்த வேண்டுமென்றும் காந்திஜி கேட்டுக்கொண்டிருந்தார். காந்திஜியின் வேண்டுகோள்படி ஜனங்கள் நடந்து கொண்டனர்.

காந்திஜி தண்டிக்கப்பட்ட அதே சமயத்தில் வரி கொடா இயக்கம் சம்பந்தமாக ஆந்திர நாட்டில் அநேகர் கைது செய்யப்பட்டனர். காங்கிரஸ் சட்டமறுப்பியக்கத்தைத் தளர்த்த ஆரம்பிக்கவே, சர்க்கார் தங்கள் அடக்குமுறை பாணத்தை அதிக கடுமையாக பிரயோகிக்கலானார்கள். சட்டமறுப்புத் தலைவரைச் சிறைக்குள் புகுத்திய பிறகு அவருடைய சைன்யத்தைச் சர்க்கார் சிதறடித்து அழிக்க முயன்றார்கள். காந்திஜி ஆரம்பித்த சட்டமறுப்பியக்கத்தை இன்னும் ஆறு வருடங்களுக்கு யார் ஆரம்பிப்பது என்ற எண்ணமே ஜனங்களுடைய மனத்தைத் துன்புறுத்தலாயிற்று.

காந்திஜி சிறை சென்ற பிறகு மூன்று மாத காலம் காங்கிரஸ் காரியக் கமிட்டி சில ஏற்பாடுகளைத் துரிதமாகச் செய்துவந்தது. கதர் இலாக்கா சேத் ஜமன்லால் பஜாஜிடம் ஒப்படைக்கப்பட்டது. கதர் அபிவிருத்திக்காக அவரிடம் ஐந்து லட்ச ரூபாய் கொடுத்துவிட காரியக்கமிட்டி சிபார்சு செய்தது. மலையாளத்தில் மாப்பிள்ளைகள் கலகத்தில் கஷ்டப்பட்டவர்களுக்கு உதவிபுரிய ஏற்கனவே காரியக்கமிட்டி ரூ. 84,000 அளிப்பதாக முடிவுசெய்திருந்தது. கோர்ட்டுகளைப் பகிஷ்காரம் செய்ய வக்கீல்களுக்கு உதவியளிக்க சேத் ஜமன்லால் பஜாஜ் மற்றுமோர் லட்ச ரூபாய் நன்கொடையளித்தார். மாப்பிள்ளை கலகத்திற்குக் காரணம் என்ன என்பதை ஆராய்ச்சிசெய்யவும், கலகத்தின் நிலைமையையும், இக் கலகத்தை அடக்க ராணுவ ஆட்சி யுட்பட சர்க்கார் எடுத்துக்கொண்ட முறைகளையும், கட்டாயப் படுத்தி மாப்பிள்ளைகள் ஹிந்துக்களை முஸ்லீம்களாக்கியதையும், சொத்துக்களுக் கேற்பட்ட நஷ்டங்களையும், மறுபடியும் ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை ஏற்படுத்த அநுஷ்டிக்க வேண்டிய முறைகளையும் ஆராய்ச்சி செய்ய ஓர் கமிட்டி நியமிக்கப்பட்டது. காரியக் கமிட்டியின் சிபார்சுகளையும், மத்திய மாகாண, மகாராஷ்டிர மாகாண காங்கிரஸ் கமிட்டியின் யோசனைகளையும் லக்ஷ்மணபுரியில் ஜூன் மாதம் 7, 8, 9 தேதிகளில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கவனித்தது. காந்திஜி சிறை புகுந்தபின் மூன்று மாத காலம் குழப்பமும், யோசனையும், உள் விவகாரங்களையுமே காங்கிரஸ் காரியக் கமிட்டியும், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியும் கவனித்து வந்தன.

சட்ட மறுப்பியக்கத்தின் பலம் என்ன என்பதையே அகில இந்திய காங்கிரஸ்கமிட்டி கவனிக்கவேண்டியதாகும். இந்த சமயத்தில் சட்ட மறுப்பு வீரர்களும், தியாகிகளும், ஆனால், முழுமனதுடன் சட்டமறுப்பை ஒப்புக்கொள்ளாதவர்களுமான பிரபல அரசியல் நிபுணர்கள் ஸ்ரீ சி. ஆர். தாஸும், ஸ்ரீ. விட்டல்பாய் படேலும் காங்கிரஸ் கொள்கையையே மாற்றவேண்டுமென்று விரும்பினார்கள். அதிகார வர்க்கத்தினருடைய கோட்டைக்குள்ளேயே ஒத்துழையாமை இயக்கத்தை அநுஷ்டிக்க வேண்டுமென்று அவர்கள் வற்புறுத்தினார்கள். சிங்கத்தை அதன் குகையிலேயே எதிர்ப்பதுபோல, சர்க்காருடைய சட்ட சபைகளிலும், மந்திரி சபைகளிலும் பிரசாரம் செய்து சர்க்காரை பகிஷ்காரம்

செய்யவேண்டுமென அவர்கள் விரும்பினார்கள். இச் சமயத்தில் சிறையிலிருந்து பண்டித மோதிலால் நேரு வெளியே வந்து விட்டார். காந்திஜியின் சேவை பாராட்டப்பட்டது சட்ட மறுப்பியக்கம் நிறுத்தப் பட்ட பிறகும், சர்க்கார் அடக்குமுறைகளைக் கடுமை யாகப் பிரயோகம் செய்வதை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கண்டித்தது. முடிவில் நாட்டின் நிலைமையைக் கண்டறிய ஒரு சிலரை நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்ய நியமிக்கும்படி காங்கிரஸ் தலைவரை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி வேண்டிக்கொண்டது. அதன் பிரகாரம் பண்டித மோதிலால் நேரு, டாக்டர் அன்சாரி, ஸ்ரீ விட்டல்பாய் படேல், ஸ்ரீ ஜம்னுலால் பஜாஜ், ஸ்ரீ இராஜகோபாலாசாரியார், சேத் சோடானி ஆகிய ஆறுபேர் நியமிக்கப்பட்டனர். ஸ்ரீ ஜம்னுலால் பஜாஜ், இக் கமிட்டி யில் வேலை செய்ய முடியாததால் ஸ்ரீ எஸ். கஸ்தூரிரங்க ஐயங்கார் அவருக்கு பதிலாக நியமிக்கப்பட்டார். சேத் சோடானி இக் கமிட்டியில் இருந்து வேலை செய்யவே முடியவில்லை.

சட்டமறுப்பு விசாரணைக் கமிட்டியின் நடவடிக்கை களைக் கவனிக்குமுன் 1922-ம் வருஷம் மார்ச்சு மாதத்தில் நடைபெற்ற மற்ற சம்பவங்களைக் கவனிப்போம். லார்டு மாண்டேகு இந்தியா மந்திரி பதவியிலிருந்து விலகும்படி கட்டாயப்படுத்தப்பட்டார். துருக்கியுடன் செய்து கொண்ட ஓர் சமாதான உடன்படிக்கை விவரத்தை வெளிப் படுத்திவிட்டதே அவர் மீது குற்றமாம். எங்கு பார்த்தா லும் இந்தியாவில் அரசியல் தலைவர்கள் கைது செய்யப்பட்டு தண்டிக்கப்பட்டனர். இச் சமயத்தில் உத்தியோகங்களை இந்திய மயமாக்குவதுபற்றி மாகாண சர்க்கார்களுடைய அபிப்பிராயத்தை விடுக்கும்படி லாயிட் ஜார்ஜ் ஓர் சுற் றறிக்கை விடுத்திருந்தார். இவ் வறிக்கை பிரிட்டனிலும், இந்தியாவிலுமுள்ள வெள்ளை அதிகாரிகளிடம் பரபரப்பை உண்டுபண்ணிவிட்டது. ஆனால் இந்தியாவிலுள்ள அதிகாரி களைச் சாந்தப்படுத்துவதற்குத் தக்கபடி லாயிட் ஜார்ஜ் அறிக்கைக்கு வியாக்கியானம் செய்துவிட்டார்.

## போர்சாத் சத்தியாக்கிரகம்

இந்த சமயத்தில் கூர்ஜர நாட்டில் போர்சாத் தாலூக்காவில் ஓர் சத்தியாக்கிரக இயக்கம் ஆரம்பமாயிற்று. இச் சத்தியாக்கிரகம் ஆரம்பிக்கப்பட்ட காரணம் சிறிதும் நம்பக் கூடியதாக இல்லை. கொஞ்ச காலமாக தேவார் பாபு என்னும் பிரபல கொள்ளைக்காரன் ஒருவன் போர்சாத்தில் பல அக்கிரமங்களைச் செய்து வந்தான். பகலில் சாதாரண மனிதன் போல கிராமங்களில் சென்று சிறுவர்களுக்குத் தின்பண்டங்கள் வழங்கி, அவ் ஊரில் யார் பணக்காரன் என்பதை அறிந்துகொண்டு இரவில் தன் ஆட்களுடன் கொள்ளையை நடத்திவந்தான். தேவார் பாபு தன் அக்கிரம செய்கைகளை சில மாதகாலம் நடத்தி வரவே, மற்றோர் மகமதியன் சில ஆட்களைச் சேர்த்துக்கொண்டு ஓர் போட்டிக் கொள்ளை கோஷ்டிக்குத் தலைமை வகித்தான். போலீசாரால் ஒன்றும் செய்ய முடியவில்லை. இக் கொள்ளையர்களைப் பிடிப்பதில் பரோடா போலீசாரும் சிரத்தை காட்டினார்கள். ஒன்றும் பலிக்கவில்லை. கடைசியாக தேவார் பாபுவைப் பிடிக்க அவனுடைய எதிரியாகிய முஸ்லிம் கொள்ளைத் தலைவனோடு சர்க்கார் அதிகாரிகள் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். அம் முஸ்லிமுக்கு உதவியாக நாலு அல்லது ஐந்து கான்ஸ்டேபில்களையும், துப்பாக்கி, வெடிமருந்து, ரவைகளையும் சர்க்கார் கொடுத்து உதவினார்கள். இவ்வளவு ஆதரவுகளைப் பெற்ற கொள்ளைக்காரன் ஒப்பந்தத்தை மறந்து தன் கொள்ளை வேலைகளை முன்னிலும் ஊக்கமாக நடத்த ஆரம்பித்தான். கடைசியாக சர்க்காரால் ஒன்றும் செய்யமுடியாமல், ஜனங்கள் இதற்கெல்லாம் உடைந்தையாக இருந்துவருவதாகச் சந்தேகித்து அவர்கள்மீது தண்டப் போலீஸ் வரியை விதித்தனர். சர்க்காரும் முஸ்லிம் கொள்ளைக்காரனும் செய்துகொண்ட உடன்படிக்கை சில பொதுஜனத் தலைவர்களுக்குத் தெரியலாயிற்று. ஸ்ரீ விட்டல்பாய் படேல் உடனே போர்சாத் சென்று தண்டப் போலீஸ் வரியைச் செலுத்த வேண்டாமென்று பிரசாரம் செய்தார். கொள்ளைக் கலவரத்தில் சுடப்பட்டவர்கள் தேகத்திலிருந்து எடுக்கப்பட்ட துப்பாக்கி ரவைகள் சர்க்கார் ரவைகள் என்று ருசுப்படுத்தப்பட்டன. கொள்ளையர் சர்க்கார் ஆயுதங்களை உபயோகித்துவருகிறார்கள் என்பதை அறியலாயினர். இராப் பகலாய் காவல்புரிய ஸ்ரீ வல்லபாய் படேல்

200 தொண்டர்களை நியமித்தார். மாலை நேரத்திலிருந்து காலைவரை வீடுகளைப் பூட்டிவைக்கவேண்டாம் என்று ஸ்ரீ வல்லபாய் சொன்ன யோசனையை ஜனங்கள் ஒப்புக்கொண்டு அதன்படி நடந்தனர். புகைப் படங்கள் மூலம் தண்டப் போலீஸ் அதிகாரிகள் இராக் காலங்களில் வீடுகளில் பதுங்கி வீடுகளை உட்புறமும் வெளிப்புறமும் பூட்டி வைத்துக் கொள்ளுகிறார்களென்று நிரூபிக்கப்பட்டது. தண்டப் போலீஸ் அதிகாரிகள் செய்துவந்த அநீதிக ளெல்லாம் பகிரங்கப்படுத்தப்பட்டன. உண்மை தெரிந்த வுடன் பரோடா போலீஸ் திருப்பி யழைக்கப்பட்டது. வழக்கம்போல் நிலங்கள் ஜப்தி செய்யப்பட்டு வந்தன. இதற் குள்ளாக பம்பாய்க்குப் புதிய கவர்னர் வந்தார். சர் லெஸ்லி வில்ஸன் சர்க்கார் ஹோம் மெம்பரை போர்சாத்துக்கு அனுப்பி உண்மையைத் தெரிந்துகொண்டவுடன் தண்டப் போலீசை வெளியேறும்படி உத்திரவிட்டார். இதற் குள்ளாக ஃதவார் பாபா மறைந்துபோனான்.

இதே சமயத்தில் பாஞ்சாலத்தில் அகாலியர்கள் சாத் வீக சட்டமறுப்பு செய்து காந்திஜியின் அஹிம்சா தத்து வத்தின் மகிமையை நிலைநாட்டி அதிகாரவர்க்கத்தினரை பிரமிக்கச் செய்தனர்.

சில மாதங்களில் சட்ட மறுப்பு விசாரணைக் கமிட்டி இந்தியா முழுதும் சுற்றுப் பிரயாணம் செய்து முடித்தாய் விட்டது.

நாட்டில் ஜனங்களின் தேசிய உணர்ச்சி குன்றிவிட வில்லை. அவர்கள் போனவிடங்களில் எல்லாம் உற்சாக மான வரவேற்பைப் பெற்றார்கள். கடைசியாக இக் கமிட்டி ஓர் அறிக்கை வெளியிட்டது. இக் கமிட்டியின் அறிக்கை கல்கத்தாவில் தேசபந்து தாஸின் இளைய குமாரி யின் விவாகத்திற்கு விஜயம் செய்திருந்த அரசியல் தலைவர் களிடை விவாதிக்கப்பட்டது. இந்த சமயத்தில்தான் பண்டித மோதிலால் நேரு சட்டமறுப்பை விட்டு சட்ட சபைப் பிரவேசத்தில் இச்சைகொண்டார் என்று சொல்லப் படுகிறது. கடைசியாக இவ் விசாரணைக் கமிட்டி யங்கத் தினர்கள் சட்டமறுப்பைக் கைவிட்டுவிட சிபார்சு செய் தனர். சட்ட சபைப் பிரவேசத்தைப்பற்றி ஒரு பிரிவினர் சாதகமாகவும் மற்றோர் பிரிவினர் எதிரிடையாகவும் அபிப் பிராயம் கொண்டனர். ஸ்ரீ ஹக்கிம் அஜ்மால் கான், பண்டித

மோதிலால் நேரு, ஸ்ரீ விட்டல்பாய் படேல் மூவரும் சட்ட சபை பிரவேசத்தை ஆதரித்தனர். டாக்டர் அன்சாரி, ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியார், ஸ்ரீ கஸ்தூரிரங்க ஐயங்கார் மூவரும் இதை எதிர்த்தனர்.

## முல்டான் இந்து-முஸ்லீம் கலவரம்

சென்ற இரண்டு வருடங்களாக ஹிந்துக்களும் முஸ்லீம்களும் அதிக நேசமாகவும், பரஸ்பர சகோதர வாஞ்சையுடனும் வசித்து வந்திருக்கும் சமயத்தில் மூல்டானில் ஓர் பெரிய ஹிந்து முஸ்லீம் சச்சரவு நடைபெற்றது வருந்தத்தக்கதாகும். முஹரம் திருவிழாவின் போது நடைபெற்ற கலவரத்தில் பல ஹிந்துக்களும், சில முஸ்லீம்களும் உயிரிழந்தனர். ஏராளமான சொத்துக்கள் நாசமடைந்தன. எவ்வளவோ பாடுபட்டும் சமரசம் ஏற்படுத்த முடியவில்லை. பல நாட்களாக காந்திஜி கட்டி வைத்த கட்டிடம் தூளாகிவிட்டது.

நாட்டில் ஒத்துழையாமைக்காரர்களுக்குள் இரு பிரிவுகள் ஏற்பட்டுவிட்டதாக ஏற்கனவே சொன்னோம். இரு கட்சிக்கும் சரி சமத்துவமான பலம் இருந்தது. வைதீக கோஷ்டியினர் (தீவிர வாதிகள்) சட்ட சபை செல்லக்கூடாதென்று பிடிவாதம் செய்தனர். ஆனால் மாறுதல் விரும்பும் ஒத்துழையாமைக்காரர்கள் சர்க்காருடன் ஒத்துழைப்பதாகச் சொல்லவில்லை. சட்ட சபைகளுக்குள்ளிருந்து சர்க்காரை எதிர்த்து மும்முரமாக ஒத்துழையா இயக்கத்தை நடத்த அவர்கள் விருப்பங்கொண்டார்கள். ஏற்கனவே ஒத்துழையாமைக்காரர்கள் முனிசிபாலிடிகளிலும், ஜில்லா போர்டு, தாலூகா போர்டுகளிலும் ஸ்தானங்கள் வகிக்கலாயினர். ஆஸ்பத்திரிகளில் கதர் உபயோகிக்கும்படி வற்புறுத்தப்பட்டது. ஸ்தல ஸ்தாபனக் கட்டிடங்களில் காங்கிரஸ் கொடி பறக்கலாயிற்று. ஸ்தல ஸ்தாபனப் பள்ளிக்கூடங்களில் சர்க்காவும், ஹிந்தியும் போதிக்கப்படவேண்டுமென்று பலர் வற்புறுத்தலாயினர். கவர்னர்களுக்கும், மந்திரிகளுக்கும் வரவேற்பளிக்கும் வழக்கம் மறையலாயிற்று. போர்க்களத்தில் முன்னின்று யுத்தம் செய்த வீரர்கள் வீட்டிற்குள் பதுங்கி சதுரங்கம் ஆடுவதற்கல்லவென்று ஒரு கட்சியார் எண்ணலானார்கள். இந்த உணர்ச்சியே கயாவில் நடைபெற்ற காங்கிரஸ் பிளவுக்குக் காரண

மாக இருந்தது. இதனுல்தான் ஆகஸ்டு மாதத்தில் கூட்டப்படவேண்டிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் நவம்பர் மாதம் வரை கூட்டப்படவில்லை. நவம்பர் 20-ந்தேதி முதல் 24-ம் தேதிவரை கல்கத்தாவில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் இந்தியாவின் சரித்திரத்தில் மிகவும் முக்கியமானது. முதல் நாள் கூட்டம் இந்திய சங்கக் கட்டிடத்தில் நடைபெற்றது. அந்த இடம் அசௌக்கியமாக இருந்ததால் மற்ற நாலு நாள் கூட்டமும் ஸ்ரீ சி. ஆர். தாஸ் மாளிகையில் அழகாக அமைக்கப்பட்ட ஓர் பந்தலின் கீழ் நடைபெற்றது. பண்டித மோதிலால், ஸ்ரீ சி. ஆர். தாஸ் போன்ற பிரபலஸ்தர்கள் சட்ட சபைப் பிரவேசத்தை ஆதரித்தார்கள். இவ்விரு தலைவர்களையும் மகாராஷ்டிரப் பிரதிநிதிகள் ஆதரித்தனர். இருந்தாலும், சமீபத்தில் காந்திஜி சிறை சென்ற சம்பவம் அவரது சீடர்கள் மனத்தில் வருத்தத்தையும், உணர்ச்சியையும் வளர்த்துக்கொண்டேயிருந்தது. காந்திஜியின் திட்டத்தில் பூரணமாக நம்பி அதிக தியாகங்கள் செய்த பலர் இப்புதிய திட்டத்தைப் பலமாக எதிர்த்தார்கள். பண்டித மோதிலாலின் சாதுரிய சமாதானப் பேச்சும், தேசபந்துவின் மனோ தைரியமும், கம்பீரப் பேச்சும் இக்கோஷ்டியினரை வசப்படுத்த முடியவில்லை. ஐந்து நாள் கடுமையான விவாதத்திற்குப் பிறகு சட்ட மறுப்பு இயக்கம் ரத்து செய்யப்பட்டு, அதை ஆரம்பிக்க மாகாண கமிட்டிகளுக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. அதிகமாக விவாதிக்கப்பட்ட முக்கிய பிரச்னையான சட்ட சபைப் பிரவேசம், கயா காங்கிரஸ் வரை ஒத்திவைக்கப்பட்டது.

ஒவ்வொரு மாதம் 18-ம் தேதியும் காந்தி தினமாகக் கொண்டாடப்பட்டது. இந்த சமயத்தில் பண்டித ஜவஹர்லால் மீண்டும் கைது செய்யப்பட்டு சிறைக்கு அனுப்பப்பட்டார். வேல்ஸ் இளவரசர் விஜய பகிஷ்காரம் சம்பந்தமாக சிறை புகுத்தப்பட்ட பின், சில தினங்களுக்கு முன்னர் தான் ஜவஹர் விடுதலை செய்யப்பட்டார். மறுபடியும் அவர் மீது இ. பி. கோ. 124-வது பிரிவுப்படி குற்றம் சாட்டப்பட்டது. ஓர் பொதுக் கூட்டத்தில் அன்னியக் கடைகளை மறியல் செய்ய தாம் விருப்பம் கொண்டிருப்பதாக ஜவஹர்லால் பேசியதே இதற்குக் காரணம். ஆனுல் இவ்வழக்கில் விசாரணை நடைபெறவில்லை. உண்மையில் அன்னிய ஜவுளிக் கடைகளை அவர் மறியல் செய்ததாக அவர்மீது விசாரணை

நடைபெற்றது. இவ்வழக்கு விசாரணை முடிவில் ஜவஹர்லால் ஓர் அறிக்கை விடுத்தார். பத்து வருடங்களுக்கு முன்னர் பிரிட்டனில் ஆங்கிலேயர்களைப்போல வளர்ந்து, படித்து, அவர்களுடைய பழக்க வழக்கங்களைப் பின்பற்றிய தாம் தற்சமயம் இந்திய அரசியல் திட்டத்தை எதிர்க்கும் ஓர் புரட்சிக்காரராக மாறிய வரலாற்றை அவர் விளக்கினர். இச்சமயம் பண்டித ஜவஹர்லால் பேசியதின் சுருக்கம் வருமாறு:—

"இந்தியாவின் சுதந்திரப் போராட்டத்தில் சேவைபுரியும் பாக்கியம் எனக்குக் கிடைத்ததைக் குறித்து அளவிலா மகிழ்ச்சி யடைகிறேன். இந்த பெருமை எனக்குப் போதுமானது. தவிர மகாத்மாஜி போன்ற ஓர் தலைவரின் கீழ் பாரதத் தாய்க்குப் பணி செய்வது கிடைப்பதற்கரிய பாக்கியமாகும். என் அருமைத் தாய்நாட்டிற்குப் பணி செய்து லட்சியத்தை அடைவதில் கஷ்டப்படுவதும் பாக்கியமாகும்."

## கயா காங்கிரஸ்

1922-ம் ஆண்டு கயாவில் காங்கிரஸ் மகாசபை தேசபந்து தாஸ் தலைமையில் கூடியது. இந்திய காங்கிரஸ் எல்லா விதங்களிலும் மிகவும் முக்கியமானது. தேசீயப் போராட்டத்தில் கலந்துகொண்ட எல்லாத் தலைவர்களும் இந்த காங்கிரசுக்கு விஜயம் செய்திருந்தார்கள். தவிர இந்த காங்கிரஸில் மிகவும் முக்கியமான விஷயங்கள் கவனிக்கப்பட்டன. கயா காங்கிரஸில் மூன்று கட்சிகள் ஒருவரோடு ஒருவர் விவாதம் செய்யலானர்கள். இந்த காங்கிரஸில் காந்திஜி பிரத்யக்ஷமாக இல்லையாயினும், உண்மை, அஹிம்சை, சேவை, தியாகம், எல்லாவற்றையும் அவருடைய சிடர்கள் சரிவரப் பின்பற்றினர்கள். சட்ட சபைத் தேர்தல்களில் வெற்றி பெற்றபின் சட்ட சபைகளுக்குப் போவதில்லையென்றும், ராஜவிஸ்வாசப் பிரமாணம் செய்வதில்லையென்றும் புத்திமான்களடங்கிய ஓர் கோஷ்டியினர் சொன்னர்கள். அரசியல் வேலையில் அதிக ஊக்கமாகக் கலந்துகொண்டுள்ள மற்றோர் சாரார், சட்ட சபைகளைக் கைப்பற்றி மந்திரிசபைகள் ஏற்படுத்த முடியாமல் செய்துகவர்னர்களின் மந்திராலோசனை சபைகளை உடைத்து அதிகாரவர்க்கம் என்கிற சிங்கத்துடன் அதன் குகையாகிய சட்டசபைகளிலிருந்து போராடி வெற்றிபெறுவதாகக் கூறினர்கள். சர்க்கார்மீது

கண்டனப்பிரேரணைகளைநிறைவேற்றுவதாகவும்சர்க்காருக்கு முட்டுக்கட்டைகள் போடுவதாகவும் அவர்கள் மார்தட்டினார்கள். முடிவாக கயா காங்கிரஸ் காந்திஜியின் தத்துவத்திற்கு எதிரிடையானதென்றே சொல்லவேண்டும். இந்த நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டு தேசபந்து தமது கட்சியை விளக்கினார். காங்கிரஸின் வேலைமுறையையும் திட்டத்தையும் மாற்றவேண்டுமென்று அவர் பலமாக வற்புறுத்தினார். அவருடைய தலைமைப் பிரசங்கம் உணர்ச்சியும், வீரமும்,உண்மையும் கொண்டு ஜனங்களுக்குதிருப்தியளித்தது. ஆனால் முதல் நாள் கூட்டத்திலேயே காங்கிரஸ் கொள்கையை மாற்றுவதற்கு எதிர்ப்பு அதிகமாகிவிட்டது. ஸ்ரீ எஸ். ஸ்ரீனிவாசய்யங்கார், பண்டித மோதிலால் நேரு போன்றவர்கள் எவ்வளவோ முயன்றும் கூடபழைய திட்டத்தைக் கைவிடஒருவரும் சம்மதிக்க முன்வரவில்லை. காங்கிரஸ்காரர்கள் சட்ட சபைத் தேர்தல்களுக்குப் போட்டி செய்யலாம், ஆனால் சட்டசபைகளில் ஸ்தானம் வகிக்கக் கூடாது என்று ஸ்ரீ எஸ். ஸ்ரீனிவாசய்யங்கார் ஓர் திருத்தத்தைப் பிரேரித்தார். இத்திருத்தத்திற்கு பண்டித மோதிலால் அரைகுறையாக ஆதரவளித்தார். ஸ்ரீ எஸ். ஸ்ரீனிவாசய்யங்கார் அட்வகேட் ஜெனரல் பதவியை ராஜீனாமாச்செய்து சட்ட சபை அங்கத்தினர் பதவியையும் ராஜீனாமாச் செய்து, சி.ஐ.ஈ. பட்டத்தையும் உதறித் தள்ளி ஒரு வருடத்திற்குமுன்னர்தான் இப்புதியஇயக்கத்தில்சேர்ந்தார். அவரது வரவை தேசம் சந்தோஷத்துடன் வரவேற்றது. கயா காங்கிரசில் ஒன்றும் பலிக்கவில்லை. காந்திஜியின் ஆத்ம சக்தி அதிக பலம் கொண்டு ஜனங்களின் மனதைக் கவர்ந்துவிட்டது. காந்திஜி சிறை சென்றபின் சட்டசபை செல்வது காந்திஜியை அவமதிப்பதற்குச் சமானம் என்று எல்லாரும் எண்ணலானார்கள்.

கயா காங்கிரஸ் முடிவானதும், தேசபந்து தாஸ் காங்கிரஸ் தலைவர் பதவியை ராஜீனாமாச் செய்துவிட்டு உடனே சுயராஜ்யக் கட்சியை ஸ்தாபித்தார். 1920-ம் வருஷத்தில் வங்காள மாகாண காங்கிரஸ் கமிட்டி ஓர் சுயராஜ்யக் கட்சி திட்டத்தைத் தொகுத்து வைத்திருந்தது. கல்கத்தாவில் நடைபெற்ற விசேஷ காங்கிரசில் சட்ட சபை பகிஷ்காரப் பிரேரணையை வங்காளமும் மகாராஷ்டிரமும் எதிர்த்தனவென்று முன்னமேயே குறிப்பிட்டுள்ளோம். பிறகு நாகபுரி காங்கிரஸ் நடைபெற்றபோது கல்கத்தாவில்

ஏற்பட்ட எதிர்ப்பைப் போக்கடிக்க தேசபந்து சட்ட சபை பகிஷ்காரப் பிரேரணையைத் தாமே பிரேரித்தார். மீண்டும் கயா காங்கிரசில் தேசபந்துவின் மனம் மாறுபட்டு விட்டது. மோதிலால், வித்தல்பாய் போன்றவர்களுடைய ஆதரவு இருக்கையில் தாஸ் எவ்விதம் சட்டசபை பகிஷ் காரத்தை ஏற்றுக்கொள்ள முடியும்? உடனே ஓர் கட்சியை ஆரம்பித்து அதன் திட்டத்தைத் தொகுத்தார். வங்காள சட்ட சபையைக் கைப்பற்றிவிடுவதாக தாஸ் முடிவு செய் தார். டில்லியையும், சிம்லாவையும் பிடித்துக்கொள்ளும் பொறுப்பு மோதிலால்ஜியின் தலைமீது சுமத்தப்பட்டது. நாகபுரியை மகாராஷ்டிர காங்கிரஸ் கமிட்டி கவனித்துக் கொள்ளுவதாகச் சொல்லிவிட்டது. வங்காளத்தில் வெற்றி பெறுவது நிச்சயம் என்று தாஸுக்கு அளவு கடந்த நம்பிக்கையிருந்தது. கிராமப் புனருத்தாரண திட்டத்தில் தேசபந்துவுக்கு அதிக சிரத்தையுண்டு. ஒத்துழையா இயக்கத்தின் வேகம் சட்ட சபை வேலைகளில் செல்ல லாயிற்று.

இந்த சமயத்தில் இரண்டு முக்கிய விஷயங்கள் குறிப் பிடப்படவேண்டிய தவசியமாக இருக்கின்றன. நாட்டில் தொண்டர்படையில் சேர்ந்து வேலை செய்யவேண்டுமென்ற அவா வாலிபர்களிடை அதிகரித்து வருவதைச் சர்க்கார் கவனிக்காமலில்லை. வாலிபர்களின் கவனத்தை இழுக்க வேண்டி இந்திய வாலிபர்களை ராணுவ கல்லூரிகளில் சேர்த்துக்கொண்டு அவர்களுக்குப் பயிற்சி யளிக்க ஓர் திட்டத்தை தொகுத்தார்கள்.

சிறை விதிகளில் சிறிது சலுகை காட்டி கடுமையான முறைகளைச் சிறிது தளர்த்தும்படி சர்க்கார் சிறை அதிகாரி களுக்கு உத்திரவு பிறப்பித்தார்கள். ஆனால் இந்த ஏற்பாடுகள் அமலில் நடைபெறவே இல்லை.

---

# அத்தியாயம் 4

## சட்ட சபை பகிஷ்காரம்

1923-ம் வருஷ ஆரம்பத்தில் இந்தியாவின் அரசியல் நிலைமை வகுப்புச் சண்டைகளால் சீர்குலைய ஆரம்பித்து விட்டது. 1922-ல் மூல்தானில் கலவரம் நடந்ததென்று முன்னரே சொன்னோம். 1923-ம் வருஷத்தில் முகரம் திருவிழா காலத்தில் வங்காளத்திலும், பாஞ்சாலத்திலும் கடுமையான ஹிந்து-முஸ்லீம் கலவரங்கள் நடைபெற லாயின. இந்தியாவின் நிலைமை இவ்வாறிருக்க, கிலாபத்து பிரச்னை எதிர்பாராதபடி முடிவு செய்யப்பட்டது. முதெனியாவில் யுத்த சமாதானம் ஒப்புக்கொள்ளப் பட்ட பிறகு லாசெனில் நேச தேசங்கள் ஓர் மகாநாடு கூடின. அக்டோபர் மாதம் 20-ம் தேதி கூட்டப் பட்ட மகாநாடு இரண்டு மாத காலம் விவாதம் நடத்தியது. அங்கோரா நகரத்தின் நிர்வாகத்தை அங்கோரா சர்க்கார் ஏற்றுக்கொண்டுவிட்டனர். இதனால், துருக்கி சுல்தான் உயிர் தப்புவதற்காக ஓர் பிரிட்டிஷ் யுத்தக் கப்ப லில் ஏறி மால்டாவுக்கு ஓடிவிட்டார். அவர் ஓட்டம் பிடித்ததுதான் தாமதம். அவர் சுல்தான் பதவியையும் காலிபா பதவியையும் இழந்துவிட்டதாக அறிவிக்கப் பட்டது. அவருடைய மறுமகன் அப்துல் மஜித் பெண்டி புதிய காலிபாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். சுல்தான் பதவிக்கு ஒருவருமில்லை. துருக்கியில் குடியரசு ஸ்தாபிக் கப்பட்டது. இவ்வாறாக கிலாபத் இயக்கம் முடி வடைந்தது.

அரசியல் துறையைக் கவனிப்போம். கயா காங்கிர ஸில் மாறுதல் விரும்பாத தீவிரவாதிகள் அடைந்த வெற்றி சாஸ்வதமாக இல்லை. 1923-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தேதியன்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டம் நடைபெற்றது. ஏப்ரல் மாதம் 30-ம் தேதிக்குள் ளாக ரூ. 25 லட்சமும், 50,000 தொண்டர்களும் சேர்க்கப்படவேண்டுமென்று தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. இதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளையும் செய்ய காரியக் கமிட்டிக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. துருக்கி நிலைமை காரணமாக ஏற்படக்கூடிய நெருக்கடியான

நிலைமையைச் சமாளிப்பதற்கேற்ப டில்லியில் விதிக்கப் பட்ட சட்ட மறுப்பு விதிகளில் எதை வேண்டுமானாலும் தளர்த்த காரியக் கமிட்டிக்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. இக் கூட்டத்தில் தேசபந்து தாஸின் ராஜிநாமா கவனிக் கப்பட வேண்டியிருந்தது. சுயராஜ்யக் கட்சியை ஸ்தாபிக் கப் போவதாக தேசபந்து ஏற்கனவே அறிவித்து விட்டதால் அவர் ராஜிநாமாச் செய்ய வேண்டியதவசியமாக இருந்தது. காங்கிரஸ் தலைவரின் ராஜிநாமா அலகாபாத்தில் பிப்ரவரி மாதம்27-ம்தேதி நடைபெறப்போகும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் வரை ஒத்திவைக்கப்பட்டது. அலகாபாத் கூட்டத்தில் தீவிரவாதிகளும் சுயராஜ்யக் கட்சியாரும் ஓர் சமரசத்திற்கு வந்தார்கள். ஏப்ரல் மாதம் 30-ம் தேதிவரை இருதரப்பினரும் சட்ட சபைப் பிரவேசத் தைப்பற்றி பிரசாரம் செய்வதில்லை யென்று ஒப்புக் கொண்டு, அதற்கிடையில் மற்ற வேலைகளை கவனிப்பதாக ஒப்புக்கொள்ளப்பட்டது. ஏப்ரல் மாதத்திற்குப் பிறகு அவரவர்கள் தங்கள் கட்சியின் போக்குப்படி வேலை செய்து கொள்ள உரிமை யளிக்கப்பட்டது. இதற்கிடையில், பண்டித ஜவஹர்லால் நேருவும், மௌலானா அபுல் கலாம் அஸாதும் சிறையிலிருந்து வெளி வந்து விட்டனர். இனி சட்டமறுப்பியக்கத்தில் காங்கிரஸ்காரர்கள் அதிக ஊக்கம் செலுத்துவர் என்று எண்ணுவதற்கிடமில்லை. தவிர காங் கிரஸ்காரர்களுக்குள் இரண்டு கட்சிகள் ஏற்பட்டு விட்டன. இருந்தாலும் 1923-ம் வருஷத்து இந்திய சட்டசபை வரவு செலவு திட்டத்தில் ஓர் அரிய சந்தர்ப்பம் கிடைத்தது. உப்பு வரியைச் சர்க்கார் உயர்த்த ஓர் யோசனை கொண்டு வந்தார்கள். சட்ட சபை இந்த யோசனையை உடைத்துத் தள்ளிவிட்டது. இருந்த போதிலும் வைசிராய் தம்முடைய யதேச்சாதிகார பாணத்தைப் பிரயோகித்து உப்புவரியை உயர்த்த அனுமதி கொடுத்துவிட்டார். உப்பு வரியை உயர்த்துவதால் ஒத்துழையா இயக்கம் வலுக்கும் என்று சட்ட சபையில் விளக்கப்பட்டது. வைசிராயின் முறையைப் பிரபல ஆங்கிலேயர்களும் கண்டித்தனர். இந்த சமயத்தில், ஒத்துழையா இயக்கத்திற்கு முன்னிருந்த பலம் இருந்திருக்குமேல், ஒத்துழையா இயக் கத்திற்கு இச் சந்தர்ப்பம் புத்துயிர் அளித்திருக்கும். ஆனால் இந்த நிலைமையை காங்கிரஸ்காரர்கள் பயன்படுத் திக் கொள்ளவில்லை.

லார்டு ரீடிங்கின் யதேச்சாதிகாரம் காரணமாக இந்தியாவிலுள்ள எல்லா அரசியல் வாதிகளேயும் கூட்ட டாக்டர் (ஸ்ரீமதி) பெஸண்டு பிரயத்தினம் செய்யலானுர். அப்பொழுதுதான் வைசிராய் மந்திராலோசனை சபையில் சட்ட மெம்பர் ஸ்தானத்தை சர் தேஜ் பகதூர் சாப்ரூ ராஜிஞமா செய்துவிட்டு வந்தார். அவருடைய தலைமையில் ஓர் மாகாநாடு கூட்டப்பட்டது. இந்தியாவுக்கு சுய ஆட்சி அந்தஸ்து பெற ஓர் திட்டத்தின் பல அம்சங்களேயும் கவனிக்க கமிட்டிகள் நியமிக்கப்பட்டன.

நிர்மாணத் திட்டப் பிரசாரத்தை பாபு ராஜேந்திர பிரசாத், ஸ்ரீ சி. ராஜகோபாலாச்சாரி, சேத் ஜம்னுலால்ஜி, ஸ்ரீ தேவதாஸ் காந்தி ஆகியவர்கள் அதிதீவிரமாக நடத்தினுர்கள். பம்பாயில் மே மாதம் 25, 26, 27-ம் தேதிகளில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் தங்கள் வேலையைப்பற்றி இவர்கள் ஓர் அறிக்கையை காரியக் கமிட்டியிடம் சமர்ப்பித்தார்கள்.

மே மாதம் 25, 26, 27 தேதிகளில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் மற்ருெரு முக்கியகூட்டம் பம்பாயில் நடைபெற்றது. சட்டசபைப் பிரவேசத்தைக் கண்டித்து பிரசாரம் நடத்தக்கூடாதென்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

இந்த தீர்மானம் நிறைவேற்றப்பட்டவுடன் காங்கிரஸ் காரியக் கமிட்டியிலிருந்து ஸ்ரீ சி. ராஜகோபாலாசாரி, ஸ்ரீ வல்லபாய் படேல், ஸ்ரீ ராஜேந்திர பிரசாத், ஸ்ரீ பிரிஜ்கிஷோர் பிரசாத், ஸ்ரீ கங்காதர ராவ் தேஷ்பாண்டே, ஸ்ரீ ஜம்னுலால் பஜாஜ் ஆகிய ஆறு அங்கத்தினர்கள் ராஜிஞமாச் செய்துவிட்டார்கள். ராஜிஞமாச் செய்யக்கூடாதென்று இவர்களே பண்டித ஜவஹர்லால் நேரு மன்ருடிக் கேட்டுக்கொண்டார். அதனுல் பயனேற்படவில்லை. முடிவில் காரியக் கமிட்டியங்கத்தினர் ராஜிஞமாவும், காங்கிரஸ் தலைவர் ராஜிஞமாவும் அங்கீகரிக்கப்பட்டன. மறுபடியும் பம்பாயிலேயே காரியக் கமிட்டி அமைக்கப்பட்டது. டாக்டர் அன்சாரி புதிய காரியக் கமிட்டிக்குத் தலைமை வகித்தார்.

பம்பாயில் முடிவு செய்யப்பட்ட சமரசத்தைப் பல மாகாண காங்கிரஸ் கமிட்டிகள் முழு மனதுடன் ஆதரிக்க விரும்பவில்லை. ஆகவே நாகபுரியில் கூடிய அகில இந்திய

காங்கிரஸ் கமிட்டியில் பம்பாய் சமரசம் மீண்டும் வற்புறுத்தப்படவேண்டி யிருந்தது. தவிர இச் சமரசத்தை எதிர்த்து சில மாகாண காங்கிரஸ் கமிட்டிகள் வேலை நடத்தி வருவது வருந்தத்தக்க தென்றும் கூறப்பட்டது. ஒழுங்கு தவறி நடந்துகொண்டதற்காக தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியைக் கண்டிக்கவேண்டுமென்று பண்டித ஜவஹர்லால் ஓர் பிரேரணை கொண்டு வந்தார். போதிய ஆதாரங்கள் இல்லாமல் கண்டிக்கக் கூடாதென்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் ஓர் கட்சியார் பண்டித ஜவஹர்லாலை எதிர்த்து வெற்றியடைந்தனர். இதனால் பண்டிதரும், டாக்டர் அன்சாரியும் அவர்களைச் சேர்ந்தவர்களும் காங்கிரஸ் காரியக் கமிட்டியிலிருந்து ராஜீனமாச் செய்தார்கள். இவர்களுடைய ராஜீனமா ஒப்புக்கொள்ளப்பட்டது. அதே இடத்தில் புதிய அங்கத்தினர்கள் நியமிக்கப்பட்டனர்.

அடுத்த அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் நாகபுரியில் நடைபெற்றது. சட்ட சபை பகிஷ்காரத்தைக் கவனிக்க விசேஷ காங்கிரஸ் கூட்டப்படவேண்டுமென்ற ஓர் தீர்மானம் எதிர்பாராதபடி பிரேரிக்கப்பட்டு நிறைவேற்றப்பட்டது. இவ்விசேஷ காங்கிரஸ் பம்பாயில் கூட்டப்படுவதாகவும், மௌலானா அபுல் கலாம் அஸாத் தலைமை வகிப்பதாகவும் திட்டம் செய்யப்பட்டிருந்தது. காரியக் கமிட்டித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட மௌலானா அபுல் கலாம் அஸாத்துக்கு எல்லா அதிகாரமும் அளிக்கப்பட்டது.

நாகபுரியில் முடிவு செய்யப்பட்ட எதிர்பாராத தீர்மானத்தை உத்தேசித்தும், தீர்மானம் சம்பந்தமாக ஓட்டுக் கணக்கெடுத்ததில் வித்தியாசம் சொற்பமாக இருந்ததை உத்தேசித்தும் ஆகஸ்டு மாதத்தில் விசேஷ அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் கூட்டப்பட்டது. செப்டம்பர் மாதத்தில் விசேஷ காங்கிரஸ் கூட்டவேண்டுமென்றும், எந்த இடத்தில் காங்கிரஸ் கூடுவதென்பதைக் காங்கிரஸ் தலைவர் முடிவு செய்யலாம் என்றும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

## நாகபுரி தேசீயக் கொடி சத்தியாக்கிரகம்

விசேஷ காங்கிரஸ் பம்பாயில் கூடவில்லை. ஆனால் டில்லியில் கூடியது. டில்லி காங்கிரசை கவனிக்கு முன், நாகபுரியில் நடைபெற்ற தேசியக் கொடி சத்தியாகிரகத்தைக் கவனிப்போம். ஓர் தேசிய ஊர்வலத்தில் காங்கிரஸ் கொடி கொண்டுபோகக் கூடாதென்று போலிசார் தடுத்து 144-வது பிரிவுப்படி தடையுத்திரவு பிரேரித்தார்கள். இது தான் தேசீயக் கொடி சத்தியாக்கிரப் போருக்கு காரணமாயிற்று. 1923-ம் வருஷம் மே மாதம் முதல் தேதி சத்தியாக்கிரகப் போராட்டம் ஆரம்பமாயிற்று. எங்கு வேண்டுமானாலும் தேசீயக் கொடியைக் கொண்டு செல்ல தங்களுக்கு உரிமையுண்டென்று தொண்டர்கள் கர்ஜித்தனர். இப்போராட்டத்திற்கு காங்கிரஸ் காரியக் கமிட்டி ஆசி யளித்தது. சேத் ஜம்னுலால் பஜாஜ் கைது செய்யப்பட்டார். அவருக்கு விதித்த அபராதத் தொகையை வசூலிக்க, சேத்ஜியின் மோட்டாரைச் சர்க்கார் பறிமுதல் செய்து ஏலம் போட்டார்கள். ஒருவரும் கேட்காததால், மோட்டாரைக் கத்தியவாருக்கு கொண்டு போய் விற்கும்படி நேரிட்டது. நாகபுரி சத்தியாக்கிரக இயக்கத்தில் கலந்துகொள்ள குமரி முதல் இமயமலை வரை எல்லா மாகாணங்களிலிருந்தும் தொண்டர்கள் திரளாக வந்தனர்.

இச் சத்தியாக்கிரக இயக்கம் ஓர் அகில இந்திய இயக்கமாகிவிட்டது. ஜூலை மாதம் 10-ம் தேதியிலிருந்து இந்த இயக்கத்தை நடத்த ஸ்ரீ வல்லபாய் படேல் தலைவராக அனுப்பப்பட்டார். இச் சத்தியாக்கிரக இயக்கத்திற்கு விட்டல்பாய் படேல் அளித்த உதவியை காரியக் கமிட்டி பாராட்டிற்று. கௌரவமாக இப் போராட்டம் முடிவானதற்கு படேல் சகோதரர்கள் காரணமாவர். ஊர்வலக்காரர்கள் முன்னால் அனுமதி பெறவேண்டுமென்று சர்க்கார் வாதாடினார்கள். தடையின்றி எங்கு வேண்டுமானாலும் செல்ல தங்களுக்கு உரிமை வேண்டுமென்று காங்கிரஸ்காரர்கள் வாதாடினார்கள். முடிவில் ஜூலை மாதம் 18-ம் தேதி ஓர் பெரிய ஊர்வலம் நடத்தப்போவதாக வல்லபாய் அறிவித்தார். இந்த ஊர்வலத்திற்குச் சர்க்கார் தடை விதிக்காமல் மௌனமாக இருந்துவிட்டனர். நாகபுரி வெற்றி தேசமெங்கும் கொண்டாடப்பட்டது.

ஜூலை, ஆகஸ்டு, செப்டம்பர் மாதங்களில் காங்கிரஸ் வெளிநாட்டிலுள்ள இந்திய மக்களின் நிலைமையைக் கவனிக்கலாயிற்று. கெனியாவில் இந்தியர் நிலைமை மோசமாகிக் கொண்டே வந்தது. இந்தியர்களுடைய நியாயமான உரிமைகளை அங்கீகரிக்க தென்னாப்பிரிக்கா சர்க்கார் விரும்பவில்லை. டிரான்ஸ்வாலில் இந்தியர்கள் நிர்க்கதியாக இருந்தனர். நேட்டாலில் இந்தியர்களுக்கு முனிசிபல் வாக்குரிமை யளிக்கப்பட்டிருந்தபோதிலும் அவர்களுடைய நிலைமை கேவலமாகிக் கொண்டே வந்தது. இந்தியர்களின் உரிமைகளை ஏற்றுக்கொள்ளும்படி வற்புறுத்த கனம் சாஸ்திரி, ஸ்ரீ. கிரிஜா சங்கர் வாஜ்பே இருவரும் அடங்கிய ஓர் தூது கோஷ்டியை கானடா, நியூஸிலந்து, ஆஸ்திரேலியா ஆகிய மூன்று குடியேற்ற நாடுகளுக்கும் இந்திய சர்க்கார் அனுப்பினார்கள்.

## டில்லி விசேஷ காங்கிரஸ்

1923-ம் வருஷம் செப்டம்பர் மாதம் மூன்றாவது வாரத்தில் டில்லியில் விசேஷ காங்கிரஸ் கூடியது. மௌலானா அபுல் கலாம் அஸாத் இக் காங்கிரசுக்குத் தலைமை வகித்தார். அவர் ஓர் பிரபல முஸ்லீம் தலைவர். தவிர தெய்வ பக்தியும் தேசாபிமானமும் கொண்டவர். வங்காளத்திலும், டில்லியிலும் அவருக்கு மிகுந்த செல்வாக்கு உண்டு. சுயராஜ்யக் கட்சியாரும், தீவிரவாதிகளும் அவரிடம் நம்பிக்கை கொண்டிருந்தனர். சட்ட சபை செல்லுவதற்கும், ஓட்டு செய்வதற்கும் ஆட்சேபனை யில்லாத காங்கிரஸ்காரர்கள் அபேட்சகர்களாக நிற்கவும், ஓட்டு செய்யவும் இவர் காங்கிரஸின் அநுமதி பெற்றார். ஆனால், நிர்மாண திட்டத்திற்கு முன்னிலும் அதிக ஊக்கம் காட்டவேண்டுமென்று வற்புறுத்தப்பட்டது. சட்டமறுப்பு இயக்கத்தைப் பலமாக நடத்துவதற்கு ஓர் கமிட்டி ஏற்படுத்தப்பட்டது. வகுப்பு விவாதப் பிரச்னைகளைப்பற்றி கவனமாக எழுதவேண்டுமென்று பத்திரிகைகளுக்கு எச்சரிக்கை விடுக்கப்பட்டது. இச் சந்தர்ப்பத்தில் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்ட லாலா லஜபதிராயும், மௌலானா முகமதலியும் உற்சாகத்துடன் வரவேற்கப்பட்டனர். துருக்கி சம்பந்தமான தீர்ப்பு முஸ்லீம்களிடை திருப்தியை உண்டுபண்ணியபோதிலும்,

கெனியாவில் இந்தியர் நிலைமை ஜனங்களின் மனக் கொதிப்பை அதிகரிக்கச் செய்தது.

காங்கிரஸின் வேலை முறையைப் புதிய வழியில் திருப்புவதற்கு டில்லியில் இடையூறுகள் ஒன்றுமில்லை. கயாவில் ஆரம்பிக்கப்பட்ட மாறுதல் அநேகமாகப் பூர்த்தியாகி விட்டதென்று சொல்லலாம். சுயராஜ்யக் கட்சியின் லட்சியங்களும் வேலை முறைகளும் வெளியிடப்பட்டன.

அடுத்த காங்கிரஸ் காக்கினாடாவில் கூட்டப்பட வேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. காங்கிரஸ் கூடுவதற்கு முன்னால் தேர்தல்கள் நடைபெற்று விட்டன. ஆகவே டில்லியில் செய்யப்பட்ட முடிவுகளை காக்கினாடாவில் மாற்றுவதால் பயனில்லை யென்பதை சில வைதீக தீவிர வாதிகள் உணர்ந்தார்களாயினும், தங்கள் கொள்கைகளைத் தான் காங்கிரஸ் முக்கியமாகக் கொள்ளவேண்டுமென்று அவாக் கொண்டனர். காக்கினாடா காங்கிரசுக்கு மௌலானா முகமதலி தலைமை வகித்தார். டில்லியில் நடைபெற்ற விசேஷ காங்கிரசிலேயே, மகாத்மா காந்தியடிகள் சட்ட சபைப் பிரவேசத்திற்கு அனுமதியளித்துள்ளதாகத் தமக்கு ஓர் 'குருவி' சொல்லுவதாக மௌலானா முகமதலி கூறினார். இதை உண்மை யென்று ஏராளமானவர் நம்பிவிட்டார்கள். சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்ட மௌலானா முகமதலியைப் பாராட்டி சிறைக்குள்ளிருக்கும் காந்திஜி ஓர் கடிதம் எழுதி ஸ்ரீ தேவதாஸ் காந்தி மூலம் அனுப்பியிருந்தார். அக்கடிதத்தில் காந்திஜி மௌலானா முகமதலிக்குப் பின்வருமாறு எழுதியிருந்தார்: "நான் தங்களுக்கு ஆசி யனுப்ப முடியாது. சிறையிலிருப்பவர் செய்தியனுப்பக் கூடாது என்பது என்னுடைய நம்பிக்கை. தாங்கள் என்னிடம் காட்டிவரும் விஸ்வாசத்தை நான் பாராட்டுகிறேன். ஆனால் என்னிடத்தில் காட்டும் விஸ்வாசத்தை அவசியம் ஏற்பட்டபோது விட்டுவிட்டுக் கூட தேசத்திடம் விஸ்வாசம் காட்டும்படி நான் தங்களை வேண்டிக்கொள்ளுகிறேன். என்னுடைய லக்ஷியங்கள் தெளிவாக இருக்கின்றன. அவற்றை எல்லாரும் அறிவார்கள். சிறை செல்லுமுன் நான் அவற்றை வெளியிட்டேன். நாளதுவரை அவற்றில் மாறுதல்கள் ஏற்படவில்லை. அக்கொள்கைகளை விட்டுத் தாங்கள் விலகவேண்டி யிருந்தால், அதனால் நமக்குள்ளிருக்கும் ஒற்றுமைக்கும், பிரியத்திற்கும் சிறிதும் பங்கமேற்

படாது.'' இக்கடிதத்தை ஆதாரமாகக்கொண்டு மௌலானு முகமதலி சட்ட சபைப் பிரவேசத்திற்கு காந்திஜி யனுமதி யளித்துவிட்டதாகக் கூறினர். அலி சகோதரர்கள் போராட்டத்தை விரும்பவில்லை. சமாதானத்தில் அவர்கள் கவனத்தைச் செலுத்தினர்கள். இருந்தாலும், தீவிர ஒத்துழையா வாதிகள் காக்கினடாவில் பலம் திரட்டினர்கள். ராஜேந்திர பாபு தேக அசௌக்கியத்தால் வர முடியவில்லை. காங்கிரசின் கொள்கையில் மாறுதல் ஏற்படவில்லையென்று காக்கினடாவில் தெளிவுபடுத்தப்பட்டது. பிற்காலத்தில் சட்டமறுப்பியக்கம் ஆரம்பிப்பதற்காக நிர்மாண திட்டத்தை செவ்வனே பிரசாரம் செய்யும்படி வற்புறுத்தப்பட்டது.

ஸ்ரீ எஸ். கஸ்தூரிரங்க அய்யங்கார், ஸ்ரீ அஸ்வினி குமார் தத்தா ஆகியவர்களுடைய மரணத்திற்கு அநுதாபம் வெளியிடப்பட்டது. ஸ்ரீ தாமோதர விநாயக சவர்க்காரை நீண்ட காலமாக சிறையில் வைத்திருக்கும் சர்க்கார் வேலை முறை பலமாகக் கண்டிக்கப்பட்டது.

கதர் பிரசாரம் செய்வதற்காக ஓர் அகில இந்தியக் கதர் போர்டு ஸ்தாபிக்கப்பட்டது.

---

## அத்தியாயம் 5

---

### காங்கிரஸில் இரு கக்ஷிகள்

1924-ம் வருஷத்தில் ராஜீய வானத்தில் கரு மேகங்கள் கவிந்துகொண்டிருந்தன; தேசமக்களின் மனதை அலைக்கவல்ல பல நிகழ்ச்சிகள் இந்த வருஷத்தில் சம்பவிக்கலாயின. எரவாடா சிறையில் தவங்கிடந்து வந்த சபர்மதி முனிவர் திடீரென கடுமையான நோயில் வீழ்ந்து விட்டார். இந்தச் சம்பவம் மற்றெல்லாச் சம்பவங்களையும் மறக்கும்படி செய்துவிட்டது. உலக சிரேஷ்டரை நோயில் ஆழ்த்தியே இவ்வருஷம் தொடங்கிற்று. இவ்வாண்டில் நடைபெற்ற சம்பவங்களைக் குறித்துவிட்டு பிறகு அவற்றில் முக்கியமானவற்றைப்பற்றி ஆராய்வோம்.

அவைதான் யாவை? அப்பெண்டிஸிடிஸ் என்னும் கடுமையான வயிற்றுக் கோளாறினால் மகாத்மாஜி பீடிக்கப் பட்டு, ஆபரேஷனும் செய்துகொள்ளும்படி ஆயிற்று; நியாயமாக விடுதலை செய்யவேண்டிய காலத்திற்கு நான்கு வருஷங்களுக்கு முன்பே அவர் விடுவிக்கப்பட்டு விட்டார். சட்ட சபைகளில் சுயராஜ்யக் கக்ஷியினருக்கேற்பட்ட வெற்றிகள்; ஏற்கனவே பிரஸ்தாபிக்கப்பட்டுள்ள அகாலியர் போராட்டம்; கல்கத்தா தெருக்களில் கோபிநாத் ஸாஹா என்பவரால் எர்னஸ்ட் டே என்ற ஐரோப்பியர் கொலை யுண்டது; கோபிநாத் ஸாஹாவின் வீரத்தையும், தேசாபி மானத்தையும் பாராட்டி திருஜ்பூர் ராஜீய மகாநாட்டில் ஒரு தீர்மானம் நிறைவேறல்; ஜமீஹமூ சம்பாஷணைகளும், பின்னர் அவை முறிந்துபோனதும்; ஆமதாபாத்தில் நடை பெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டமும், அதனையொட்டிய விசேஷச் சம்பவங்களும், பிணக்குகளும்; வங்காளத்தில் மீண்டும் ஆரம்பிக்கப்பட்ட அடக்குமுறை; ஸ்ரீயுத சுபாஷ் சந்திர போஸ் முதலிய அரும்பெரும் தலைவர்கள் கைதியாதல்; டில்லி, குல்பர்கா, நாகபுரி, லக்ஷ்மணபுரி, ஷாஜஹான்பூர், அலகாபாத், ஜபல்பூர் இவ் விடங்களில் நடந்த வகுப்புக் கலவரங்கள்; கோஹத் என்னுமிடத்தில் நிகழ்ந்த மிகக் கோரமான வகுப்புக் கலவரம்; இவை காரணமாகக் காந்திஜி மேற்கொண்ட இருபத்தொரு நாள் உபவாஸம்; ஒற்றுமையை நிலைநாட்டு வதற்காக டில்லியில் கூடிய மகாநாடு; பம்பாயில் நடை பெற்ற சர்வகக்ஷி மகாநாடு; அலி சகோதரர்களுக்கு ராஜீய அறிவு புகட்டி, வளர்த்து, வீரர்களாக்கிய பெருமைமிகுந்த அவர்களது தாயாகிய பீ அம்மா என்ற தொண்டு கிழவியின் மரணம்; காந்திஜியின் தலைமையில் கூடிய பெல்காம் காங்கிரஸ்; காங்கிரஸில் ஏற்பட்ட பிளவு; இரண்டு கக்ஷி கள் ஏற்படுதல்; காந்திஜியின் திட்டத்தில் பூரண நம்பிக்கை கொண்ட மாறுதல் வேண்டாதவர்களும், பகிஷ்கார இயக் கத்தில் சற்றும் நம்பிக்கை கொள்ளாத, சட்ட சபைகளைக் கைப்பற்ற முற்பட்ட சுயராஜ்யக் கக்ஷியினரும். இவைதான் 1924-ம் வருஷத்திய முக்கிய நிகழ்ச்சிகள்.

இனி இவற்றை விரிவாகக் கவனிப்போம்; 1924-ம் வருஷம், ஜனவரி மாதம், 12-ந் தேதியன்று மகாத்மா விற்குக் கடுமையான நோய் கண்டது; வயிற்றில் பிரமாத மான கோளாறு. நள்ளிரவில் கர்னல் மாடாக் என்பவரால்

ரண சிகிச்சை செய்யப்பட்டது; தேசம் பூராவும் கவலையி லாழ்ந்தது; ஆனால் விரைவில் காந்திஜி சுகம் பெற்று, பிப்ரவரி மாதம் 5-ம் தேதியன்று எவ்வித நிபந்தனையு மில்லாமல் விடுவிக்கப்பட்டது மக்களின் கவலையை யொழித்தது.

ஆனால் இவ்விடுதலையால் மகாத்மாவுக்கு ஓய்வோ அல்லது மனவமைதியோ ஏற்படவில்லை. காகினடாவில் காங்கிரஸுக்குள் ஏற்பட்ட பிளவு அதிகமாகிக்கொண்டு வந்ததேயொழிய குறையவில்லை. "மகாத்மாஜிதான் சிறையிலிருந்து வந்துவிட்டாரே; இனி காங்கிரஸின் விசை சட்ட மறுப்பு பக்கம் திரும்பிவிடுவது நிச்சயம்" என ஒரு பக்கம் மாறுதல் வேண்டாதார் எண்ணிக் கிடந் தனர்; ஆனால் மாறுதல் வேண்டுபவர்களோ இன்னொரு பக்கம் முழுமுரமாக வேலை செய்து வந்தனர்; டில்லியிலும், காகினடாவிலும் தங்களுக்கு ஏற்பட்ட வெற்றிகளை சுப சூசகமாகக் கொண்டு அவர்கள் தங்கள் கக்ஷியை மேலும் வலுப்படுத்துவதில் ஈடுபடலாயினர். இவ்வாறாகக் காங் கிரஸும், தேசமும் பிரிவுண்டு கிடந்தது. காந்திஜி சிறையி னின்றும் வெளிப் போந்ததும் நாட்டின் இவ்வவல நிலையை உற்று நோக்கினார்; உள்ளங் கொதித்தார்; உணர்ச்சி கொண்டார்; சிதறிக் கிடந்த சக்திகளையும், மலிந்து கிடந்த பிணக்குகளையும், அவர் ஒன்றுபடுத்த வேண்டியிருந்தது. தாம் சிறைபுகுந்த தருவாயில் இருந் ததைவிடத் தேசம் வெகு தூரம் பின்னடைந்து விட்ட தைக் கண்டு அவர் நெஞ்சம் பதை பதைத்தார்.

மாறுதல் வேண்டாதவர்களையும், மாறுதல் வேண்டு பவர்களையும் ஒற்றுமைப் படுத்துவதிலேயே அவரது முதல் கவனம் சென்றது. சிறையைவிட்டு வெளி வந்ததும் மகாத்மா, தமது உடல் நிலை காரண மாக பம்பாய் நகருக்கருகிலுள்ள கடற்கரைப் பிரதேச மாகிய ஜுஹு என்னுமிடத்தில் சில தினங்கள் தங்கி யிருந்தார். ஓய்வு எடுத்துக்கொள்ளுவதற்காக. ஆனால் உண்மை உழைப்பாளிகளுக்கு ஓய்வு ஏது? எனவே இந்த இடத்தில் மகாத்மா காந்திக்கும், தேசபந்து தாஸ், மோதிலால் நேரு இவர்களுக்கும் அடிக்கடி சம்பா ஷணைகள் நடந்தன. மேற்கூறிய இரண்டு பிரிவினரை யும் ஒன்றுபடுத்தவே இம் முயற்சிகள் செய்யப்பட்டன.

இறுதியாக 1924-ம் வருஷம், மே மாதத்தில் காந்திஜி ஓர் அறிக்கையை வெளியிட்டுத் தமது கருத்தை விளக்கினர். அதேமாதிரி சுயராஜ்யக் கக்ஷித் தலைவர்களாகிய தேசபந்துவும், மோதிலால்ஜியும் ஓர் அறிக்கை மூலம் தங்கள் கொள்கையைத் தெரிவித்தனர்.

## மனப்போக்கே பிரதானம்

மகாத்மா விடுத்த அறிக்கையின் விவரம் பின்வருமாறு:—
" டில்லி சட்டசபையிலும், மாகாண சட்ட சபைகளிலும் புகுந்து வேலைசெய்யும் விஷயத்தைப்பற்றி எனது சுயராஜ்யக் கக்ஷி நண்பர்களுடன் நான் எவ்வளவோ தூரம் கலந்து, ஆலோசித்தும், அவர்களுடைய கருத்தை நான் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. அவர்களுடன் சேர்ந்துவிடுவதென நான் எவ்வளவோ முயன்று பார்த்தும் அவர்களுடைய நோக்கம் இன்னும் எனக்குப் பிடிபடவில்லை. அடிப்படையான விஷயங்களிலேயே இரண்டு பிரிவினரும் ஒத்துப் போக முடியவில்லையே, என்ன செய்வது? நான் கொண்டுள்ள ஒத்துழையா தர்மத்தில் சட்ட சபைப் பிரவேசத்திற்கு இடமேயில்லை; ஒத்துழையாமையும், சட்ட சபை நுழைவும் ஒன்றிற்கொன்று முரண்பட்டனவாகும். " ஒத்துழையாமை" என்ற பதத்தின் வியாக்கியானத்தில் தான் ஏதோ வித்தியாசங்களிருப்பதாக எவரும் எண்ணிவிட வேண்டாம்; மனப்போக்கிலேயே பேதமிருக்கிறது; மூவகைப் பகிஷ்காரம் வெற்றி பெறுமா அல்லது தோல்வியுறுமா என்பதை இந்த மனப் போக்கைக் கொண்டுதான் நாம் நிதானிக்க வேண்டும்; வெறும் பலன்களைக் கண்டு முடிவுகாணுதல் நேர்மையானதல்ல. தேச மக்களிடையே சரியான மனப் பான்மை தோன்றுமாறு செய்ய வேண்டுமானல் அதற்கு சட்ட சபை ஸ்தாபனங்களுக்கு வெளியில் தான் வேலை செய்யவேண்டும். என்னுடைய வேலை முறையின் உயர்வைச் சுயராஜ்யக் கட்சி அன்பர்கள் கண்டுகொள்ளுமாறு செய்யவும் என்னலியலவில்லை. எனவே மாறுபட்ட அபிப்பிராயங்களிருக்கும் வரையில் அவர்கள் சட்ட சபைகளிலிருப்பதுதான் நல்லது. இதனல் யாவருக்கும் நன்மையே. சுயராஜ்யக்கக்ஷி நண்பர்களில் பலர் பழுத்த தேசாபிமானிகள்; சிறந்த தேச ஊழியம் புரிந்து வருபவர்கள்; தேர்ந்த அனுபவம் மிகுந்தவர்கள்;

விசேஷ யோக்கியத்தன்மை படைத்தவர்கள். ஆகவே முன் யோசியாமலும், ஆர அமர ஆலோசிக்காமலும் இவர்கள் சட்ட சபைகளில் பிரவேசிக்கவில்லை; தாங்கள் மேற்கொண்ட வழியில் ஒன்றும் "பிரயோஜனமில்லை" யென்பதை தாங்களாகவே உணரும் வரையில் அவர்கள் அங்குதானிருக்க வேண்டும்.

சட்ட சபைப் பிரவேசம் என்பது இப்பொழுது ஒரு தீர்ந்துபோன விஷயமாக விருக்கிறது. சட்ட சபை நுழைவு சரியானதா, அல்லவா என்பதைப்பற்றி இனி சிந்திப்பதில் பயனில்லை. மாறுதல் வேண்டாதாரின் வேலை என்ன? சுயராஜ்யக் கக்ஷியினரின் வேலைகளை அவர்கள் மேலும் எதிர்த்துப் போராடுவதா அல்லது தங்கள் கொள்கைகளை விட்டுக் கொடுக்காமல் சாத்தியமான வரையில் அவர்களுக்குத் துணைபுரிவதா? இதைத்தான் நாம் இனி கவனிக்கவேண்டும்.

காங்கிரஸ்வாதிகளில் சட்ட சபைகளுக்குச் செல்வதற்கு யார்யாருக்கு நம்பிகையிருக்கிறதோ, அவர்களெல்லாம் அங்ஙனமே செய்யலாம் என டில்லி, காகினடா காங்கிரஸ் தீர்மானங்கள் அனுமதிகொடுத்திருக்கின்றன. எனவே சுயராஜ்யக்கக்ஷியினர் ஏற்கனவே சட்ட சபையில் புகுந்துவிட்டதில் நான் எவ்வகையிலும் ஆச்சரியம் கொள்ளவில்லை. அங்கு சென்ற பின்னர் அவர்கள் தடைமுறையை அனுஷ்டித்து வருவதும் சரிதான்; ஏனெனில் இது விஷயத்தில் காங்கிரஸ் எவ்விதமான நிபந்தனைகளும் விதிக்கவில்லை. ஆகவே சுயராஜ்ஜியக்கக்ஷியினரின் வேலை வெற்றி பெற்று அதனால் நாட்டிற்கு நன்மை கிடைக்குமானால் அப்பொழுது என்னைப்போன்ற பிடிவாதக்காரர்கள் தங்கள் தவறை உணர்ந்து கொள்ளுவரென்பதில் ஐயமில்லை. அனுபவத்தில் தங்கள் முறை எவ்விதத்திலும் பலனளிக்கவில்லை என்று அறிந்தவுடனே அவர்கள் சட்ட சபைகளை விட்டு வெளியேறிவிடுவர் என்பதும் எனக்குத் தெரியும். ஆகவே அவர்களை எதிர்த்து வேலை செய்வதில் எனக்கு இஷ்டமில்லை. நான் அவர்களுக்கு உதவி செய்யாத நிலையில் உபத்திரவமும் இழைக்க விரும்பவில்லை. மாறுதல் வேண்டாதவர்கள் அவர்களை எதிர்க்காமல் விட்டுவிட்டால்தான் நாம் பலன்களைச் சீக்கிரத்தில் காணமுடியும்.

சட்ட சபைகளில் செய்யவேண்டிய வேலைகளைப்பற்றி யோசனை கூறுமாறு என்னைப் பலர் கேட்கிறார்கள். சட்ட சபைகளை நாம் நமது நன்மைக்கு உபயோகப்படுத்திக் கொள்ள முடியும் என்றால் தான் நான் அவற்றில் கால் வைப்பேன். அப்படி நான் சட்ட சபைக்குள் நுழைவேனே யானால் தடை முறைகளிலெல்லாம் இறங்காமல் காங்கிரஸின் நிர்மாணத் திட்டத்தை வலுப்படுத்தவே முயல்வேன்.

(1) சர்க்கார் தங்களுக்கு வேண்டிய துணிகளுக்கெல்லாம் கையால் நூற்று, கையால் நெய்யப்பட்ட கதரையே வாங்கவேண்டும் ;

(2) அன்னிய நாட்டுத் துணிமீது கடுமையான வரி விதிக்க வேண்டும் ;

(3) மதுபானத்தை யொழித்து அதனால் கிடைக்கும் வருமானத்தையும் விட்டுவிடவேண்டும் ; ராணுவச் செலவைக் குறைக்கவேண்டும்.

என்பதாகத் தீர்மானங்களைப் பிரேரிப்பேன். இத்தகைய தீர்மானங்கள் சட்ட சபையில் நிறைவேறி, அவற்றைச் சர்க்கார் நிறைவேற்றி வைக்க மறுத்தால் சட்ட சபைகளைக் கலைத்துவிட்டு, அதே பிரச்னைகளைக் கொண்டு மீண்டும் தேர்தலை நடத்துமாறு நான் அறை கூவுவேன். கவர்ன்மெண்டார் அதனையும் அலக்ஷியம் செய்வார்களானால், உடனே நான் எனது ஸ்தானத்தை ராஜினாமா செய்துவிட்டு, தேசத்தைச் சட்ட மறுப்புப் போருக்குத் தயார் செய்வேன்.

இவ்வளவும் சுயராஜ்யக் கக்ஷி அன்பர்களுக்கு. இனி மாறுதல் வேண்டாதவர்களுக்கோர் வார்த்தை: "சுயராஜ்யக் கக்ஷியினர் என்ன சொல்லுகிறார்கள் என்பதைப்பற்றியோ அல்லது என்ன செய்கிறார்கள் என்பதைக் குறித்தோ நீங்கள் சற்றும் கவலைபடவேண்டாம். நீங்கள் நிர்மாணத் திட்டத்தில் உங்களுக்குள்ள நம்பிக்கையையும், உறுதியையும் கொண்டு விசேஷ ஊக்கத்துடன் வேலை செய்யுங்கள். ஆடம்பரமில்லாமல், அமைதியாக வேலைசெய்ய விரும்புவோர்க்கு கதரைப் பரப்புதலும், தேசீயப் பள்ளிக்கூடங்களை ஏற்படுத்துதலுமே போதுமான வேலைகளாகும். இவை தவிர ஹிந்து முஸ்லீம் பிரச்னை வேறிருக்கிறது. சுயராஜ்யக் கக்ஷியினரும் சரி, மாறுதல் வேண்டாதவர்

களும் சரி, இருவரும் தங்கள் தங்கள் வேலைகளை தீவிரமாகச் செய்தால்தான் நாம் பலன்களை ஒப்பிட்டுப் பார்க்க முடியும்.

ஆனால் மாறுதல் வேண்டாதவர்களுக்கு ஒரு அனுகூலமிருக்கிறது. அவர்களுக்குச் சட்ட சபைகளில் நம்பிக்கை யில்லாததால் அவர்கள் அந்த வேலையில் எந்த விதத்திலும் இறங்கப் போவதில்லை; ஆனால் சுயராஜ்யக் கக்ஷியினரோ நிர்மாணத் திட்டத்தில் தங்களுக்குள்ள பூரண நம்பிக்கையை வெளியிட்டுள்ளனர்; தேசம் விமோசனமடைய அது மாத்திரம் போதாது என்பதே அவர்களது கருத்து. எனவே சட்ட சபை வேலைகளில்லாத காலங்களிலெல்லாம் அவர்கள் நிர்மாணத் திட்ட வேலையில் ஈடுபடுவரென நாம் எதிர்பார்ப்பதில் நியாயமுண்டு. ஆதலால் சட்ட சபைகளுக்கு வெளியே செய்யப்படவேண்டிய வேலைகளில் இரு கக்ஷியினரும், எவ்வித வித்தியாசமு மில்லாமல் ஒன்று சேர்ந்து உழைத்து விசேஷ பலன்களைக் காட்டலாம்."

## சுயராஜ்ய கக்ஷியினரின் அறிக்கை

## முரண்பாடு எது?

தேசபந்து ஸி. ஆர். தாஸும், பண்டித மோதிலால் நேருவும் சேர்ந்து கையொப்பமிட்டு வெளியிட்ட அறிக்கையின் விவரம் :

" மகாத்மா காந்தியுடன் நேரில் சம்பாஷித்த காலையில் அவர் வெளியிட்ட கருத்துக்களையும், இப்பொழுது அவரது அறிக்கை மூலம் வெளிவந்துள்ள அபிப்பிராயங்களையும் நாம் கூர்ந்து கவனித்தோம்: ஆனால் அவரது கருத்துக்களையும், அபிப்பிராயங்களையும் நாம் ஏற்றுக்கொள்ள முடியவில்லை யென்பதை மிகவும் பணிவுடனும், வருத்தத்துடனும் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

சட்ட சபைப் பிரவேச விஷயத்தில் எங்களுடைய நோக்கங்களை மகாத்மாவுக்கு வலியுறுத்த முடியாமல் போய்விட்டதற்காக வருந்துகிறோம். நாகபுரி காங்கிரஸில் நிறைவேறிய ஒத்துழையாத் தீர்மானத்திற்கு சட்ட சபைப் பிரவேசம் எவ்வாறு முரண்படுகிற தென்பது எங்களுக்கு விளங்கவில்லை. நம்மைக் கட்டி யாளும் அதி

காரவர்க்கத்தின் அவ்வப்போதைய மனப்போக்குகளை நாம் சற்றும் கவனியாமலும், நமது தேசீய வாழ்வின் அவ்வப்போதைய நிலைமைகளை ஆராயாமலும், அவற்றிற் கொத்த வகையில் ஒத்துழையாமையை அனுஷ்டிக்காமலும் அந்தத் தர்மத்தை வெறும் மனப்பான்மையைப் பொருத்த ஒன்ருகக் கருதுவதனல் உண்மையில் தேச நன்மைகளைக் கவனிப்பதற்காக ஒத்துழையாமையையும் கைவிட நாங்கள் தயாராக விருக்கிறோம். ஒத்துழையாமை யை எல்லாத் துறைகளிலும் அனுஷ்டிக்க வேண்டுமென் பதே எங்கள் கருத்து. அதிகாரவர்க்கம் நமது சுயராஜ்ய முன்னேற்றத்தை தடைசெய்வதாக இருப்பதால் அதனை எதிர்த்துப் போராடவேண்டியது நமது கடமையாகும். வீணே இதைப்பற்றி வாய்ப் போர் செய்துகொண்டிருக்க நாங்கள் இஷ்டப்படவில்லை. எனவே ஒத்துழையாமையை நாங்கள் அறிந்துகொண்டுள்ள வரையில் சட்ட சபைப் பிரவேசம் அக் கொள்கைக்குப் பொருத்தமானதுதான் என்று கடைசி தடவையாகச் சொல்லி நிறுத்திக்கொள்ளு கிறோம்.

சட்ட சபைகளில் "தடைமுறை"களை அனுஷ்டிப் பதே எங்கள் வேலை யென்று அறிவித்துளோம். ஆனல் விசேஷ சுதந்திரம் படைத்துள்ள வெளி நாட்டு சட்ட சபைகளில் இந்தத் "தடைமுறை"க்கு அர்த்தமுண்டு. சுதந்திரத்தை யிழந்து, வெறும் பொம்மைச் சபைகளாக விருக்கும் நமது தேசத்தில் "தடைமுறை"யைப் பூரண மாக அனுஷ்டிப்பதென்பது சாத்தியமானதல்ல. எனவே "தடைமுறை" என்பதைவிட வேறொரு பதத்தைப் போட்டாலே அர்த்தம் சரியாக விருக்கும். நமது சுயராஜ் யப் பாதையில் அதிகாரவர்க்கம் எவ்வளவு தூரத்திற்கு முட்டுக்கட்டையாக இருக்கின்றதோ அதை எதிர்க்க வேண்டுமென்பதே எமது திட்டம். தடைமுறை என்று நாம் சொல்லுகையில் இதைத் தான் குறிப்பிடுகிறோம். சுயராஜ்யக் கக்ஷி அமைப்பின் தொடக்கத்தில் ஒத்துழை யாமைக்கு வியாக்கியானம் கூறி, அதை விளக்குகையில் நாம் இதைச் சரிவர எடுத்துக் காட்டி யிருக்கிறோம். அதிகார வர்க்கத்தின் இத்தகைய முட்டுக்கட்டைகளை அப்புறப்படுத்த வேண்டுமென்பதே எங்கள் அவா. இதுவரையில் சட்டசபை களில் இந்தக் கொள்கையைத்தான் நாங்கள் அனுஷ்டித்து வருகிறோம்; இனியும் இதையேதான் இன்னும் தீவிர

மாகக் கையாள விரும்பியுளோம். இக்கொள்கையைப் பின்பற்றியே நாங்கள் சட்ட சபைகளிலும், வெளியிலும் வேலை செய்ய உத்தேசித்திருக்கிறோம்.

சட்ட சபைகளில் எங்கள் வேலைத் திட்ட விவரம் பின்வருமாறு:—

(1) நமது உரிமைகளை அங்கீகரிக்கும் முறையிலோ அல்லது பிரிட்டிஷ் பார்லிமெண்டிற்கும் இந்தத் தேச மக்களுக்கும் ஏற்படும் ஒரு ஒப்பந்த முறையிலோ ஆக்ஷி முறை மாற்றப்படும் வரையில் அரசாங்கத்தின் வரவு, செலவு திட்டங்களை நிராகரித்தல்; இம்முறையைப்பற்றிக் கூறுகையில் மத்திய சட்ட சபையில் தயாரிக்கப்படும் வரவு செலவு திட்டத்தைப்பற்றிய சில ரஸமான விஷயங்களை இங்கு எடுத்துக் காட்ட விரும்புகிறோம்; மத்திய சட்ட சபைக்குச் சொல்வது மாகாண சட்ட சபைகளுக்கும் பொருத்தமானதுதான். மொத்த வரவு செலவு தொகையான 131 கோடி ரூபாயில் (ரயில்வேக்கள் நீங்கலாக) 16 கோடி ரூபாய்தான் சட்டசபைப் பிரதிநிதிகளின் ஓட்டுக் குட்பட்டவை. இது தவிர ஓட்டு செய்யப் பாத்தியமில்லாத தொகையில் சுமார் 67 கோடி ரூபாயை அதாவது மொத்த தொகையில் பாதிக்குமேல் ராணுவ பூதம் விழுங்கி விடுகின்றது. எனவே மொத்த வரவு செலவு தொகையில் 17-க்கும் குறைந்த பாகத்தைப்பற்றி விவாதிக்கவே இந்தத் தேசமக்களுக்குஉரிமையிருக்கின்றது. இம்மட்டோ! இந்தச் சிறு தொகை விஷயத்தில் நமக்குள்ள சொற்ப உரிமையையும் பறித்துக்கொள்ள கவர்னர் ஜெனரலுக்கு விசேஷ அதிகாரம் வேறு இருக்கிறது. ஆகவே நாம் எல்லோரும் சேர்ந்து சர்க்காருக்கு வரி மூலமாகக் கொடுக்கும் பணத்தைச் செலவு செய்யும் வகையில் நமக்கு எவ்வித மான அதிகாரமுமில்லை என்பதை நாம் நன்கு உணர்ந்தால் நமது அவல நிலையின் அவதி நமக்குப் புலப்படும். சர்க்கார் கேட்கும் வரியை நாம் நமது இரத்தத்தைச் சிந்தியாவது கொடுத்துவிட வேண்டும்; ஆனால் அதைச் செலவழிக்கும் முறையில் நமக்கு எவ்வித உரிமையும் கிடையாது. உள்ள நிலைமை இதுதான். ஆகவே இத்தகைய வரவு செலவு திட்டம் சட்ட சபை முன்பு ஆஜர் படுத்தப்படுகையில் சுயராஜ்யக் கக்ஷியினர் என்ன செய்வது? அவர்களது கொள்கை என்ன? அவர்களது கடமை

யாது ? என்று கேள்விகள் எழுவது சகஜமே. ஆகவே நாம் தற்போது அனுபவித்து வரும் இந்தக் கேவலமான ஆட்சி முறை மாற்றப்படும் வரையில் எல்லாச் சட்ட சபைகளிலும் வரவு செலவு திட்டங்களை நிராகரித்து விட வேண்டியதே நமது கடமை என்ற விஷயத்தில் தன் மதிப்புள்ள தேசப் பெரியார்கள் யாவரும் எங்களை ஆதரித்து நிற்பரென்பதில் எங்களுக்குச் சிறிதும் சந்தேகமில்லை.

(2) தன்னுடைய அதிகாரத்தை வலுப்படுத்திக் கொள்ளும் உத்தேசத்தால் சட்டங்கள் செய்வதற்காக அதிகாரவர்க்கம கொண்டுவரும் எல்லாவித பிரேரணைகளையும் நிராகரித்து விடுதல்.

(3) தேச க்ஷேமத்திற் கொத்தவையும், அவசியமானவையுமான தீர்மானங்களையும், சட்டங்களையும், மசோதாக்களையும், பிரேரித்தல் ; இவற்றினால் நாளடைவில் அதிகாரவர்க்கத்தை அப்புறப்படுத்த வேண்டுமென்பதே நோக்கம். நிர்மாணத் திட்ட விஷயமாக மகாத்மாஜி தமது அறிக்கையில் கூறியுள்ள யாவற்றையும் நாம் அங்கீகரிக்கிறோம். இவற்றிற்காகச் சட்ட சபையில் எவ்வளவு தூரம் பாடுபட முடியுமோ, எவ்வளவுக்குச் சாத்தியமோ அவ்வளவையும் நிறைவேற்றி வைக்கத் தயாராக விருக்கிறோம்.

(4) மேற்படி நோக்கங்களை அடிப்படையாகக் கொண்டே பொருளாதாரத் துறையில் ஒரு திட்டமான கொள்கையை அனுஷ்டித்தல் ; இந்தியாவின் செல்வத்தை பிறர் சுரண்டிக் கொண்டு போவதை எந்தவிதத்திலும் தடுக்க வேண்டும்.

சட்டசபைக்கு வெளியே நாம் செய்யவேண்டிய வேலை என்னவென்றால் மகாத்மா காந்தியின் நிர்மாணத் திட்டத்திற்கு முழு ஆதரவு மளித்து, காங்கிரஸ் ஸ்தாபனங்கள் மூலமாகவும், மாறுதல் வேண்டாதாருடனும் ஐக்கியப்பட்டு அந்தத் திட்டத்தை நிறைவேற்றி வைக்க வேண்டும். வெளியே மகாஜனங்களின் பேராதரவில்லாமல், அவர்களது வலுவில்லாமல், நாம் சட்ட சபைகளில் என்ன செய்தாலும் அது பிரயோஜனப் படாதாதலால் நிர்மாணத் திட்டத்தை நிறைவேற்றி வைப்பதன் மூலம் அந்த பலத்தைப் பெற வேண்டும்.

சட்டமறுப்பைப பற்றி மகாத்மாஜி என்ன யோசனை சொல்லுகிறாரோ அதை நாம் தயங்காமல் ஏற்றுக்கொள்ளத் தயாராக விருக்கிறோம். சட்டமறுப்பில் இறங்காமல் அதிகாரவர்க்கத்தை நாம் வணங்கச் செய்யமுடியாது என்ற உணர்ச்சி ஏற்பட்டதும் நாங்கள் சட்ட சபை ஸ்தானங்களை உதறி யெறிந்துவிட்டு சட்டமறுப்புப் போரில் குதிக்கத் தயாராக இருப்போம்.

இது தவிர தொழிலாளர் முன்னேற்றத்திற்காகவும், விவசாயிகள் நன்மைக்காகவும் நாம் பாடுபடவேண்டும். ஒவ்வொரு தேசத்திலும் தொழிலாளர் பிரச்னை மிகக் கடினமானதாகத்தானிருக்கிறது. ஆனாலும் இந்தியாவில் இப் பிரச்னை மிகுந்த சிக்கலானதாகவு மிருக்கிறது. முதலாளிகளும், நிலச்சுவான்தார்களும் தொழிலாளிகளைத் தங்களுடைய சொந்த நன்மைக்காக உபயோகித்துக் கொள்ளுவதைத் தடுக்க முற்பட வேண்டும். இந்தியத் தொழிலாளர்களைப் பாதுகாக்க வேண்டியது மிகவும் அவசியம் தான்; அதேமாதிரி தொழிலாளர் ஸ்தாபனங்களையும் நாம் பாதுகாக்கவேண்டும். இவ்வகையில் செவ்வையாக ஊழியம் புரியுமாறு தொழிலாளர் காங்கிரஸை வலுப்படுத்த வேண்டும்.

## சுயராஜ்யக் கக்ஷியின் வெற்றிகள்

நிற்க, சட்ட சபைகளைக் கைப்பற்றுவதில் முனைந்து நின்ற காங்கிரஸ் சுயராஜ்யக் கக்ஷியினர் நிலைமை எவ்வாறிருந்த தென்பதை ஆராய வேண்டியது மிகவும் அவசியமாகும். நாட்டில் பொதுத் தேர்தல் நடைபெறவிருந்த சமயத்தில்தான் சுயராஜ்யக் கக்ஷி நிறுவப்பட்டது. உடனே நடந்த தேர்தலில் சுயராஜ்யக் கக்ஷியினர் எங்கும் அபேட்சகர்களாக நின்றனர். இந்தியா சட்ட சபைக்கு மட்டும் 45 காங்கிரஸ் வாதிகள் தெரிந்தெடுக்கப்பட்டனர். இவர்களனைவரும் ஒரு கட்டுப்பாடு வாய்ந்த கட்சியைச் சேர்ந்தவர்கள், சிறந்த தேசாபிமானிகள். இவர்களுடன் அவ்வப்பொழுது தேசியக் கக்ஷி அங்கத்தினர்களும் சேர்ந்துகொண்டதால் எதிர்க் கக்ஷியில் பெருவாரியான அங்கத்தினர்களிருந்து அடிக்கடி சர்க்காரைத் தோற்கடிக்க வியன்றது. இந்தியாவிற்குப் பூரா பொறுப்பாக்ஷி அளிப்பது சம்பந்தமான திட்டமொன்றைச் சிபார்சு செய்வதற்காக சர்வகக்ஷி

மகாநாட்டைக் கூட்டவேண்டுமென்று கோரிய பண்டித மோதிலால் நேருவின் திருத்தப் பிரேரணை சம்பந்தமாக ஏற் பட்ட வெற்றிதான் சுயராஜ்யக் கக்ஷியினரின் முதல் வெற்றி யாகும். தமது திருத்தப் பிரேரணையை வற்புறுத்திப் பேசு கையில் பண்டித மோதிலால்ஜி ஆணித்தரமான சில வார்த்தை களை வெளியிட்டார். அவை பின்வருமாறு: "ஏதோ சர்க் காரை எதிர்ப்பதற்காக வந்த ஒரு கூட்டம் என்று எங்களைக் கவர்ன்மெண்டார் அலக்ஷியமாகக் கருதவேண்டாம். இந் தியாவிற்கு உடனே பொறுப்பாக்ஷியைத் தூக்கிக்கொடுத்து விடவேண்டுமென்று நான் கேட்கவில்லை. எங்களாலியன்ற வரையில் சர்க்காருடன் ஒத்துழைக்கவே நாங்கள் இங்கு வந்திருக்கிறோம். எங்களுடைய ஒத்துழைப்பைக் கவர்ன் மெண்டார் ஏற்றுக்கொண்டால் அவர்களுக்கும் நன்மை; எங்களுக்கும் நன்மை. இல்லையேல் நாங்கள் எங்களது உரிமைக்காகக் கடைசி வரையில் போராடியே தீருவோம்; ஆனால் ஒத்துழையாமையை அனுஷ்டித்தே போராடுவோம்."

இது சம்பந்தமாகக் கவர்ன்மெண்டு ஹோம் மெம்பரான ஸர் மால்காம் ஹெய்லி பேசுகையில் குடியேற்ற நாட்டந் தஸ்துக் கோரிக்கை புதியதென்றும், இந்தியா கவர்ன் மெண்டு சட்டத்தில் அதற்கு இடமே செய்யப்படவில்லை என்றும், சுயாட்சி படிப்படியாகத்தான் கொடுக்கப்படு மென்றும் கூறினர்.

## சர்க்காருக்கு தோல்வி மேல் தோல்வி

வருஷ ஆரம்பத்தில் நடைபெற்ற இவ்விந்தியா சட்ட சபைக் கூட்டத்தில் சுயராஜ்யக் கக்ஷியினருக்கு மேற் குறிப்பிடப்பட்ட வெற்றியைத் தவிர இன்னும் பல வெற்றிகளும் ஏற்பட்டன. சர்க்காரின் செலவினக் கோரிக்கைகளெல்லாம் நிராகரிக்கப் பட்டன. ராஜீயக் கைதிகளில் சிலரை விடுவித்தல், 1818-ம் வருஷத்திய III-வது ரெகுலேஷன் (ஆள் தூக்கிச் சட்டம்), தென்னுப் பிரிக்காமீது வரி விதித்தல், சீக்கியர் நிலைமையைப்பற்றி விசாரிப்பதற்காக ஓர் கமிட்டியை நியமித்தல் இவை சம் பந்தமான பிரேரணைகளிலெல்லாம் சுயராஜ்யக் கக்ஷியின ருக்கு வெற்றியும், சர்க்காருக்குத் தோல்வியுமே கிட்டி யது.

## அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டம்

ஜூலையில் தலைவர்களுக்குள் நடந்த சம்பாஷணைகளைப் பற்றி மேலே குறிப்பிட்டது நேயர்களுக்கு நினைவிருக்கலாம். ஜூன் மாதம் 27, 28, 29-ந் தேதிகளில் ஆமதாபாத்தில் நடந்த அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில் செய்யப்பட்ட முடிவுகளுக்கு இச் சம்பாஷணைகளே ஆஸ்பதமாக விருந்தன. காங்கிரஸ் ஸ்தானங்களைச் சேர்ந்தவர்கள் மாதா மாதம் தங்கள் கையினாலேயே நூற்ற, நல்ல முறுக்கேறிய நூலில் 2000 கெஜம் சந்தாவாகச் செலுத்த வேண்டுமென்றும், இங்ஙனம் செய்யத் தவறுபவர் தமது பதவியை இழந்தவராவர் என்றும் காங்கிரஸ் அமைப்பில் புதிய ஏற்பாடு செய்யவேண்டுமென்கிற விஷயமாக விவாதம் நடந்துகொண்டிருக்கையில், சில அங்கத்தினர்கள் கூட்டத்தை விட்டு வெளியேறி விட்டனர். நூல் சந்தா செலுத்தத் தவறினால் இன்னது நேரிடும் எனக் குறிப்பிடப் பட்டதுதான் இவர்களுக்குப் பிடிக்கவில்லை. அதனைக் கண்டிக்கும் முறையிலேயே இவர்கள் வெளியேறினர். கடைசியில் அந்தப் பிரிவு வாபீஸ் வாங்கிக் கொள்ளப்பட்டது. தவறுபவர்கள்மீது பொதுவாகக் கண்டிப்பான நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படும் என மாற்றப்பட்டது. ஆனால் 1935-ம் வருஷம் வரையில் இது வெறும் ஏட்டளவிலேயே இருந்து வந்தது. இந்த வருஷத்தில்தான் இத்துறையில் வகையான ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன.

அடுத்தபடியாக அன்னியத் துணி, கவர்ன்மெண்டு நீதிஸ்தலங்கள், பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், பட்டம், பதவிகள், சட்டசபைகள் இவற்றைப் பகிஷ்கரிக்க வேண்டியதன் அவசியம் நன்கு வற்புறுத்தப்பட்டது. இந்தப் பகிஷ்காரங்களில் நம்பிக்கையில்லாதவர்களை காங்கிரஸுக்குட்பட்ட பல்வேறு ஸ்தாபனங்களுக்குத் தெரிந்தெடுக்கக் கூடாதென காங்கிரஸ் வாக்காளருக்குக் கண்டிப்பாக உத்திரவிடப்பட்டது.

கவர்ன்மெண்டாரின் அபினிக் கொள்கை பலமாகக் கண்டிக்கப்பட்டது. அஸ்ஸாமியரின் அபினி வழக்கத்தைப்பற்றித் தீர விசாரிக்குமாறு பூஜ்யர் ஆண்டிரூஸ் கேட்டுக்கொள்ளப்பட்டார்.

## "டே" கொலைபற்றிய தீர்மானம்

எர்னஸ்ட் டே என்பவரைக் கொலை செய்த ஸ்ரீயுத கோபிநாத் ஸஹாவின் செய்கையைக் கண்டித்தது சம்பந்தமான தீர்மானத்தின் பேரில்தான் சபையில் விசேஷ உணர்ச்சி காணப்பட்டது. காலஞ்சென்ற மிஸ்டர் டேயின் குடும்பத்தாருக்கு அனுதாபம் காட்டுவதாகவும், இந்தக் கொலையை மாத்திரமல்லாமல் இதைப்போன்ற எல்லா ராஜீயக் கொலைகளையும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கண்டிப்பதாகவும், காங்கிரஸின் அஹிம்ஸா தர்மக் கொள்கைக்கு இத்தகைய செயல்களெல்லாம் முற்றிலும் விரோதமானவை என்று அபிப்பிராயப்படுவதாகவும், இத்தகைய செயல்கள் சுயராஜ்ய முன்னேற்றத்தைத் தடை செய்வன வென்றும், சட்டமறுப்புக்குத் தேசத்தைத் தயார் படுத்துவதை இவை பாழ்படுத்துவதாகவும், கமிட்டி தீர்மானித்தது. இந்தத் தீர்மான விஷயமாக உக்கிரமான போர் நடந்தது. உண்மையை மறைப்பதில் யாது பயன்? இந்தத் தீர்மானம் தேசபந்துவின் மனதிற்குச் சற்றும் பிடிக்கவே யில்லை. இதற்குக் காரணம் அவருக்கு அஹிம்ஸையில் நம்பிக்கையில்லை என்பதல்ல. தீர்மானத்தின் சில பகுதிகளை மாற்றவேண்டுமென்பது அவரது நோக்கம். தமது உத்தமத் தோழர்களில் பலர் தீர்மானத்திற்கு எதிராக ஓட்டு செய்ததைக் கண்டு காந்திஜி பெரிதும் ஏமாற்றமடைந்தார். அதுகண்டு வருத்தம் தாங்கமுடியாமல் அவர் கண்ணீர் விட்டு அழவும் அழுதார். இவ்வளவு பரபரப்புக்குக் காரணமென்னவெனில், திரஜ்பூரில் நடந்த வங்காள மாகாண மகாநாட்டில், கோபிநாத் ஸஹாவின் தன்னல மற்ற தியாகத்தையும், தேசபக்தியையும் மெச்சி ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருந்ததுதான்.

## நூல் சந்தா வெற்றி

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் இக்கூட்டத்தில் சுயராஜ்யக் கட்சியினரால் தங்களுக்குச் சாதகமாக எதுவும் சாதித்துக்கொள்ள முடியவில்லை. அவர்கள் தங்களுக்கு வலிமை தேடிக்கொள்ள நவம்பர் மாதம் வரையில் காத்திருக்கவேண்டியிருந்தது. ஆனால் மாறுதல் வேண்டா

தாரைப் பொருத்த மட்டிலேவெனில், அவர்கள் கை ஓங்கியே யிருந்தது. நூல் சந்தாவுக்குத் தேசம் நல்ல ஆதரவளித்தது. ஆகஸ்டு மாதத்தில் நூல் சந்தா செலுத்திய அங்கத்தினர்களின் தொகை 2780; செப்டம்பரில் 6301; அக்டோபரில் 7741; நவம்பரில் 7995 பேர்கள். மாதத்திற்கு மாதம் அங்கத்தினர் தொகை அதிகமாகி வந்ததை இப் புள்ளி விவரங்கள் காட்டுகின்றன.

## கோஹாத் கலவரம்

ஆனால் இவ் வருஷத்திய சம்பவங்களில் மிகவும் துக்கிக்கத் தக்கவை நாட்டின் பல விடங்களிலும் நிகழ்ந்த வகுப்புக் கலவரங்களே. இவற்றில் கோஹாத் என்னுமிடத்தில் நடந்த கலவரம் தான் மிகக் கோரமானதாகும். இக் கலவரத்திற்கான காரணங்களையும், உண்மை நிலைமையையும் ஆராய்ந்தறியுமாறு காந்திஜியும், மௌலானா ஷௌகத் அலியுமடங்கிய கமிட்டி ஒன்று நியமிக்கப்பட்டது. ஆனால் கலவரத்திற்கான காரணக்களைக் கண்டறிந்து வெளியிடுவதில் இருவரும் அபிப்பிராய பேதப்பட்டனர். 1924-ம் வருஷம், செப்டம்பர் மாதம் 9, 10-ந் தேதிகளில் தான் மேற்படி கலவரம் நடந்தது. ஆகவே அவை நடந்து இன்றைக்குப் பத்து வருஷங்களுக்கு மேலாகி விட்டன. எனினும் அதைப்பற்றிப் பிரசுரமான பூரா விவரங்களுமடங்கிய அறிக்கையை இன்று வாசித்தால் கூட நமது உள்ளம் கொதிக்கும்; நெஞ்சம் பதைக்கும். துப்பாக்கிப் பிரயோகத்திற்குப் பிறகு காயமுண்டு கிடந்த 4000 ஹிந்துக்களை ஒரு ஸ்பெஷல் ரெயிலில் அப்புறப்படுத்த வேண்டியிருந்ததெனின் கோஹாத் சம்பவத்தின் கொடுமையை நாம் ஒருவாறு அறிந்து கொள்ளுவதில் சிரமமேற்படுவதற்கில்லை. இந் நாலாயிரம் பேர்களில் 2600 பேர்கள் ராவல்பிண்டி தர்ம சகாய சபையினரின் உதவியில் இரண்டு மாத காலம் வசித்து வந்தனர்; ஆயிரத்து நானூறு பேர்கள் பற்பல இடங்களில் பற்பல விதமான சகாயத்தைப் பெற்றனர்.

## காந்திஜியின் 21 நாள் உண்ணாவிரதம்

ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையையே தமது சுவாசமாகக் கருதிவரும் மகாத்மாஜியின் மனதில் கோஹத் சம்பவங்கள் எவ்வளவு வேதனையை உண்டுபண்ணின வென்பதை அவர் 21 நாட்களுக்கு உபவாச மிருக்க-விரதம் பூண்டதிலிருந்து தெரிந்துகொள்ளலாம். கலவரத்தின் பூரா பொறுப்பையும் அவர் தாமே ஏற்றுக்கொண்டார். தம்முடைய குற்றத்திற்காகத் தம்மையே தண்டித்துக்கொள்ளும் முறையிலும், ஆண்டவனைக் குறித்து பிரார்த்தனை செய்யும் வகையிலும் மகாத்மா இவ்வுபவாசத்தை மேற்கொண்டார். அப்பொழுதுதான் ரண சிகிச்சையினின்றும் உயிர் பிழைத்தெழுந்த அவர் இத்தகைய உக்கிரமான விரதத்திலிறங்கிவிட்ட செய்தி கேட்டு இந்தியா மட்டுமின்றி உலகமே கவலையிலாழ்ந்தது. என்னாகுமோ, ஏதாகுமோ என்ற ஏக்கம். 21 நாட்களையும் அவர் சமாளித்து நின்று, வெற்றியுடன் வெளிக் கிளம்ப வேண்டுமே என்ற கவலைதான் ஒவ்வொருவரையும் பீடித்திருந்தது.

## ஒற்றுமை மகாநாடு

செப்டம்பர் மாதம் 26-ந் தேதிமுதல் அக்டோபர் மாதம் 2-ந் தேதி வரையில் நடைபெற்ற ஒற்றுமை மகாநாடு இவ்வுபவாஸத்தின் பலனே எனக் கூறலாம். காந்திஜி, ஹக்கீம் அஜ்மல்கான், லாலாஜி, ஜி. கே. நாரிமன், டாக்டர் எஸ். கே. தத்தர், மாஸ்டர் சுந்தர்லிங் இவர்களைக் கொண்ட மத்திய தேசிய பஞ்சாயத்தொன்று அமைக்கப் பட்டது. இதற்கு காந்திஜியே தலைவர். இச்சபையைக் கூட்டிவைக்க வேண்டியவரும் அவரே. மதவிஷயமாகப் பேசுதல், சில மத சம்பிரதாயங்களை அனுஷ்டித்தல், புண்ணிய ஸ்தலங்களின் தூய்மை, பசு வதை, மசூதி முன் மேளம் இப்பிரச்னைகள் விஷயத்தில் ஒற்றுமை மகாநாடு சில அடிப்படையான உரிமைகளை வகுத்தது. மத விஷயங்களைப்பற்றி எழுதுகையில் விசேஷ கவனஞ் செலுத்தவேண்டுமென்று பத்திரிகைகளுக்கு எச்சரிக்கை செய்யப்பட்டது. மகாத்மாஉபவாசத்தின் கடைசி வாரத்தில் தேசமெங்கும் பிரார்த்தனைகள் நடைபெறவேண்டுமென்றும்.

வேண்டிக் கொள்ளப்பட்டது. அக்டோபர் 8-ந் தேதி யன்று இந்தியா பூராவும் மாபெருங் கூட்டங்கள் கூடி, ஆண்டவனுக்கு வந்தனமும் வணக்கமுஞ் செலுத்த வேண்டுமென்றும் குறிப்பிடப்பட்டது.

பகவத் கிருபையால் மகாத்மாஜி தமது விரதம் பூரா வையும் அநுஷ்டித்து விட்டு, வெற்றியுடன் வெளிக்கிளம் பினார். ஆனால் உடைந்துபோன அவரது சரீரத்தையும், ஆரோக்கியத்தையும் தேற்றிக்கொள்ளுவதற்கு அவருக்கு அவகாசம் கிடைக்கவில்லை. ஏனெனில் நவம்பர் மாதம் 21, 22-ந் தேதிகளில் பம்பாயில் நடைபெற்ற சர்வகக்ஷி மகா நாட்டில் அவர் கலந்து கொள்ள வேண்டி ஏற் பட்டது. 23, 24-ந் தேதிகளில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டம் வேறு நடைபெற்றது. வங்காளத்தில், முக்கியமாக சுயராஜ்யக் கக்ஷியினர்மீதும், தாரகேஸ்வர் சத்தியாகிரத்தில் ஈடுபட்டிருந்தவர்கள்மீதும் சர்க்கார் அடக்குமுறையைக் கையாளத் தலைப்பட்டு, அது நாளுக்கு நாள் மிகவும் அதிகமாகப் போய்க்கொண்டிருந்ததால் அது விஷயத்தில் எல்லாக் கக்ஷியினரும் ஒன்றுபட்டு, ஏகோபித்த அபிப்பிராயத்தை வெளியிட வேண்டுமென் பதற்காகவே சர்வகக்ஷி மகாநாடு கூட்டப்பட்டது. கிரிமினல் சட்ட சம்பந்தமான அடக்குமுறைச் சட்டங் களையும், 1818-ம் வருஷத்திய ஆள் தூக்கிச் சட்டத்தையும் மகாநாடுபலமாகக்கண்டித்து,அவற்றைக் கவர்ன்மெண்டார் ரத்து செய்துவிடவேண்டுமென்றும் கேட்டுக் கொண்டது. தவிர 1925-ம்வருஷம், மார்ச்சு மாதம், 31-ந் தேதிக்குள் சமர்ப்பிக்கும் படியாக வகுப்புத் தீர்ப்பு உள்பட, சுயராஜ் யத் திட்ட மொன்றைத் தயாரிப்பதற்காக எல்லாக் கக்ஷிகளின் பிரதிநிதிகளுமடங்கிய கமிட்டி ஒன்றும் நியமிக் கப்பட்டது. சர்வகக்ஷி மகாநாடு சாதித்தவை இவைதான்.

இதற்குச் சில தினங்களுக் கெல்லாம் ராஜீய உலகில் ஓர் முக்கியமான சம்பவம் நிகழ்ந்தது அதாவது மகாத்மாஜி, தேசபந்து தாஸ், மோதிலால்ஜி இம் மூவரது ஏகோபித்த கையொப்பத்தின் கீழும் ஓர் அறிக்கை வெளி வந்தது. சட்ட சபைப் பிரவேச விஷயத்திலும்,இதரபகிஷ்காரங்கள் விஷயத்திலும் காந்திஜி தேசபந்துவுக்குப் பூராவும் விட்டுக் கொடுத்துவிட்டார். எல்லாக் கக்ஷியினரின் ஒத்துழைப் பையும் பெறுவதற்காக ஒத்துழையாத் திட்டத்தை அமுல்

நடத்தாமல் நிறுத்தி வைத்துக்கொள்ளுவதென்ற, தீர்மானத்திற்கு வந்திருப்பதாக மேற்படி அறிக்கை கூறியது. ஆனால் அன்னியத் துணி பகிஷ்காரம் மட்டும் எப்பொழுதும்போல் நடக்கவேண்டியதுதான். நிர்மாணத் திட்டம் பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொரு பிரிவையும் ஒவ்வொரு பிரிவினர் கவனித்து வருவர். சுயராஜ்யக் கக்ஷியினர் சட்ட சபைகளில் புகுந்து தேச வேலை செய்வர். இவ்வளவு தூரம் காந்திஜி விட்டுக்கொடுத்ததற்கு அவருக்குக் கிடைத்த பலனென்ன? காங்கிரஸில் அங்கத்தினராக சேருவோன் நான்கணுவிற்குப் பதிலாக மாதா மாதம் 2000 கெஜம் கதர் நூலைக் கொடுத்துவிட வேண்டும் என்று ஏற்பட்ட மாறுதல்தான். முன்போல் கமிட்டிகளில் அங்கம் வகிப்பதற்காகத் தெரிந்தெடுக்கப் படுபவர்கள் மட்டும் இந்த நூல் சந்தாவைச் செலுத்தின் போதாது. வருஷா வருஷம் நான்கணு கொடுத்து காங் கிரஸில் அங்கத்தினராகச் சேருபவர்கள் ஒவ்வொருவரும் நூல் சந்தா செலுத்தவேண்டும்.

1924-ம் வருஷம் டிஸம்பர் மாதத்தில் பெல்காம் என்னுமிடத்தில் நடைபெற்ற காங்கிரஸ் பல விதங்களிலும் முக்கியமானதாகும். பெல்காம் என்பது கர்நாடக மாகாணத்திலுள்ளது ; மகாத்மா காந்தியே இதில் தலைமை வகித்தார். இக் காரணத்தை உத்தேசித்தும், காங்கிரஸ் வாதிகளுக்குள்ளிருந்த வேற்றுமைகளை ஒருவாறு தீர்த்து வைப்பதற்குக் காரணமாக விருந்ததை முன்னிட்டும் இந்தக் காங்கிரஸ் விசேஷ பெருமை வாய்ந்ததாக விருக் கின்றது. காங்கிரஸ் வாதிகளுக்குள் ஓயாத சண்டை! இதை எவ்வளவு நாட்களுக்குச் சகித்துக்கொண்டிருப்பது? இரு பிரிவினருக்குள்ளும் சமரஸத்தை யுண்டுபண்ண காந்திஜி யைத் தவிர வேறு யாரால் முடியும்? இந்தத் துறையில் அவரைவிட சாமர்த்தியமும், சாதுர்யமும் வாய்ந்தவர்கள் வேறு யாரிருக்கிறார்கள்? சட்டமறுப்பை நிறுத்தி மாறுதல் வேண்டாதாரைச் சாந்தப்படுத்தவும், சட்டசபைப் பிர வேசத்தை எதிர்த்துக்கொண்டே சுயராஜ்யக் கக்ஷியினரின் மனக்குறையை அகற்றவும் அவர் ஒருவருக்குத்தான் தெரி யும்! பெரிய மகான்கள்தான் பெரிய திட்டங்களைப் போட முடியுமென்றால், அவைகளை நிறுத்தவும் அவர்களால் தான் முடியுமல்லவா! விசையை முடுக்குபவன் தானே பக்குவம் பார்த்து விசையை நிறுத்துவான்! ஆகவே இவ்வாண்டில்

காங்கிரஸ் மகாசபை மகாத்மாஜியின் தலைமையின் கீழ்க் கூடியதைவிடப் பொருத்தமானது வேறெதுவுமிருக்க முடியாது.

## மகாத்மாவின் தலைமையுரை

காந்திஜி தமது தலைமைப் பிரசங்கத்தில் 1920-ம் வருஷத்திலிருந்து நடந்த முக்கியமான சம்பவங்களை யெல்லாம் விவரித்தார். ஒத்துழையாமை பிறந்து, வளர்ந்த வகையையும், பிறகு அதனின்றும் பகிஷ்காரங்கள் தோன்றிய விதத்தையும் எடுத்துரைத்தார். ஹிம்ஸையின் பயனற்ற தன்மையையும், அஹிம்ஸையின் மகிமையையும் விளக்கினார். அஹிம்ஸா தர்மம் பலவீனர்கள் கையாளும் ஒன்றல்ல வென்றும், விசேஷ மனவலிமையும், சகிப்புத் தன்மையும் கொண்டவர்களே இந்த தர்மத்தை அனுஷ்டிக்க முடியுமென்றும் கூறினார். ஒத்துழையாமையை ஏற்கத் தயாராயில்லாதவர்கள்பால் சிலர் காட்டும் ஆத்திரமும், அருவையும் சகிக்க முடியாத ஹிம்ஸையாக விருக்கிறதென்றார்.

## குடிசைத் தொழில் நசுக்கொண்ட வகை

மேலும் அவர் கூறியதாவது :—"எது எப்படி யிருந்தாலும் பலாத்காரத்தை அடக்கி வைப்பது அஹிம்ஸையே. எனினும் அஹிம்ஸா தர்மத்தை அனுஷ்டிக்க விசேஷ பொறுமையும், சாந்தமும் அவசியம். இப்பொழுதுள்ள நிலைமை என்ன ? ஒத்துழையாமையிலிறங்கி தியாகம் செய்தவர்களில் பலர் தாம் அங்ஙனம் செய்ததற்காக இப்பொழுது வருந்துகின்றனர். இக் காரணத்தால் பகிஷ்காரங்களை யெல்லாம் நிறுத்தும்படி ஆய்விட்டது. அன்னியத் துணி பகிஷ்காரம் மட்டும் அப்படியே யிருக்கிறது. அதை நிறுத்தி வைப்பதென்பது சாத்தியமான காரியமல்ல. ஏனெனில் அதைச் செய்யவேண்டியது நமது கடமையாகும். லங்காஷயர் வியாபாரம் அக்கிரமமானது ; அநீதியானது ; ஏனெனில் லக்ஷக் கணக்கான இந்திய ஏழை மக்களின் வயிற்றிலடித்தே அந்த வியாபாரம் கொழுக்கின்றது. ஆகவேதான் நமது ஏழை மக்களுக்குப் பிழைப்பூட்டுவதற்காக நாம் நமது கைராட்டினத்தையும், கைத்தறி

யையும் உயிர்ப்பித்துளோம். ஆதிகாலத்தில் இவ் விரு தொழில்களும் மிக உன்னத நிலைமையிலிருந்தன. வெளி நாட்டவர்களெல்லாம் கண்டு வியக்கும் வகையில் இவை சிறப்புற நடந்து வந்தன. இத்தகைய தொழில்களை அன்னிய நாட்டவர் வேண்டுமென்றே கொடூரமான வழியில் நசுக்கிக் கொன்றனர். இதை எண்ணுகையில் தான் என் மனம் வெம்புகின்றது.

நிற்க, சுயராஜ்யக் கக்ஷியினருக்கும் எனக்கும் ஒரு வகையான ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கிறதென்பதை உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். அவர்கள் என்னுடைய நூல் சந்தா நிபந்தனையை ஏற்றுக்கொண்டனர். அவர்களது சட்டசபை வேலைக்கு நான் சம்மதித்தேன். முடிவைப்பற்றி நான் எதுவும் சொல்லமுடியாது. வழியைத்தான் நான் கவனிக்கமுடியும். அதுவே எனக்கு முக்கியம். வழி சரியானதாகவும், செவ்வையானதாகவுமிருந்தால் நல்ல முடிவுதான் ஏற்படும். கைராட்டினம், ஹிந்து-முஸ்லீம் ஒற்றுமை, தீண்டாமை விலக்கு, அன்னியத் துணி பகிஷ்காரம் இவையே நாம் பின்பற்றவேண்டிய வழிகள்.”

சுயராஜ்யத் திட்டத்தைப்பற்றி பிரஸ்தாபிக்கையில் அவர் நூல் சந்தா இருக்கவேண்டிய அவசியத்தையும் (இது சம்பந்தமாக 1934-ம் வருஷத்தில் பம்பாய் காங்கிரஸ் தீர்மானித்திருப்பதைக் கவனியுங்கள்), ராணுவச்செலவு குறைக்கப்பட வேண்டியதையும், மதுபானத்தை அறவே யொழிப்பதைப்பற்றியும், அதன் மூலம் கிடைக்கும் வருமானத்தின் அநீதத்தைப்பற்றியும், பாஷாவாரியாக மாகாணங்களைப் பிரித்தலைப்பற்றியும் குறிப்பிட்டார்.

இன்ன வகையான சுயராஜ்யமென்பதுபற்றி அவர் சொன்னதாவது: “பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்குட்பட்ட சுயராஜ்யத்தைப் பெறவே நான் பாடுபடுவேன்! ஆனால் பிரிட்டனின் தவறு காரணமாக பிரிட்டிஷாரின் சம்பந்தத்தை அறுத்துக்கொள்ளவேண்டிய அவசியமேற்படுமாயின் அதைச் செய்யவும் நான் சிறிதும் தயங்கமாட்டேன்.”

அலி சகோதரர்களின் தாயாராகிய பீ அம்மா, சர். ஏ. சௌத்ரி, சர். ஏ. முக்கர்ஜி, பூபேந்திரநாத் பாஸு, டாக்டர் சுப்பிரமணிய ஐயர் முதலிய பல காங்கிரஸ் தலைவர்களும், எண்ணிறந்த ஊழியர்களும் காலஞ் சென்றுவிட்டது குறித்து காங்கிரஸ் முதலில் தனது அனுதாபத்தைத்

தெரிவித்துவிட்டு மற்ற நடவடிக்கைகளில் இறங்கியது. நவம்பர் மாதத்தில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில் நிறைவேறிய காந்தி-தாஸ்-நேரு ஒப்பந்தம் அப்படியே உறுதிசெய்யப்பட்டது. நூல் சந்தா விதிக்கப் பட்டது. இவ்வருஷத்தில் அவ்வப்பொழுது பல விடங் களிலே நடந்த வகுப்புக் கலவரங்களைக் குறித்து காங்கிரஸ் மகாசபை தனது வருத்தத்தைத் தெரிவித்தது. தீண்டா மையை யொழிக்க வேண்டுமென்றும், இந்தத் துறையில் தென்னாட்டிலுள்ள வைக்கம் என்னுமிடத்தில் நடந்துவந்த சத்தியாக்கிரக இயக்கத்திற்குப் பொதுமக்கள் விசேஷ ஆதரவளிக்கவேண்டுமென்றும் கோரி காங்கிரஸ் ஒரு தீர்மா னத்தை நிறைவேற்றியது. அகாலியர் சத்தியாக்கிரகம், மது பானக்கேடு, அபினி வியாபாரம் முதலிய யாவும் ஆலோசிக் கப்பட்டன. வெளிநாட்டில் வசித்துவரும் இந்தியர்கள் சம்பந்தமாக காங்கிரஸ் அமைப்பில் சில மாறுதல்கள் செய்யப்பட்டன.

---

## அத்தியாயம் 6

---

### பிரிவினையா கூட்டுறவா?

1925-ம் ௵ முழுவதும் சட்ட சபை விஷயமாக அரசியல் வாதிகள் கவனம் செலுத்தினார்கள். சுயராஜ்யக் கட்சிக்காரர்கள் ஒருவராலும் தடைசெய்யப்படவில்லை. தாஸ், நேரு, லாலாஜி, படேல் போன்ற பிரமுகர்கள் பிறருடைய ஆதிக்கத்தின்கீழ் இருக்கமுடியவில்லை. மத்திய மாகாணத்திலும், வங்காளத்திலும் இரட்டை ஆட்சி ஒரு முடிவுக்குக் கொண்டுவரப்பட்டது. லார்டு லிட்டனது அழைப்பிற் கிணங்கி வங்காளத்தில் மந்திரி பதவியை ஏற்றுக்கொள்ள தேச பந்து தாஸர் மறுத்துவிட்டார். இதரர்களையும் மந்திரி சபையை அமைக்கவிடாமல் தடங் கல் செய்துவிட்டார். லார்டு ரீடிங்கின் 1924-ம் ௵ அவசரச்சட்டம் காலாவதி ஆயிற்று. 1925-ம் ௵ ஜனவரி மாதம் வங்காள சட்டசபையில் இதனைப் புதுப்பிக்கவேண்டி கொண்டுவரப்பட்ட ஒரு மசோதாவை சுயராஜ்யக் கட்சி யினர் தோற்கடித்து விட்டார்கள். அது லார்டு லிட்டனது

சம்மதிபெற்று அங்கீகாரத்துக்காக லண்டனுக்கு அனுப்பப் பட்டது. பிப்ரவரி மீ 17-ந் தேதி வங்காள சட்டசபையில் மந்திரிகளின் சம்பளத்துக்கு ஒரு திட்டம் தயாரிக்கப்பட்டு ஆலோசனைக்கு வந்தபொழுது அது புறக்கணிக்கப்பட்டது. நியமனம் செய்யப்பட்ட இரு மந்திரிகளின் சம்பளத்தை அனுமதிக்கும்படி சட்ட சபையில் கேட்டுக்கொள்ளப் பட்டபொழுது அதையும் தள்ளிவிட்டார்கள். இதற்கு 69 பேர்கள் சாதகமாயும், 63 பேர்கள் பாதகமாயும் வாக்கு கள் கொடுத்தார்கள். வங்காளத்தில் இதுமாதிரி ஒத்துழை யாமை நடந்தது. மத்திய மாகாணத்தில் மந்திரி பதவிகளை வகிக்காமல், சட்ட சபைக்குள் நுழைந்து எல்லா காரியங் களிலும் தடை செய்துவந்தார்கள். ஆனால் சில கமிட்டி களில் அங்கம் வகித்து, சில முக்கிய விஷயங்களில் கலந்து உழைத்துவந்தார்கள். சட்ட சபைக்குள் ஒரு கட்சி யாக நுழைந்து, சபையில் ஒவ்வொரு இதர கட்சிகளோடும் சில சமயத்தில் அரசாங்கத்தோடும் ஒத்துழைத்தார்கள்.

ஒரு சட்டம் மூலம் வங்காள அவசர சட்டத்தை எடுத்துவிடும்படி ஸ்ரீ வி. துரைசாமி அய்யங்கார் கொண்டு வந்த தீர்மானம் நிறைவேறியது. இதற்கு சாதகமாய் 58 வாக்குகளும், பாதகமாய் 45 ஓட்டுகளும் கிடைத்தன. ஸ்ரீ வி. ஜே. படேலினால் 1925-ம் வருஷ பிப்ரவரி மீ 3-ந் தேதி, 1850-ம் வருஷத்திய சமஸ்தான கைதிகளின் சட்டத்தை ரத்து செய்யவும், 1867-ம் வருஷத்திய எல்லைப்புற சட்டத் தையும், 1921-ம் வருஷத்திய ராஜத்துவேஷ பிரசங்கத் தடை சட்டத்தையும் விலக்கவேண்டியும் கொண்டுவரப் பட்ட மசோதா நிறைவேறியது. ஆனால் எல்லைப்புறச் சட்டம் மட்டும் புறக்கணிக்கப்பட்டது.

ஸ்ரீ நியோகியினால் "ரயில்வே சட்டத்திற்கு"த் திருத் தம் கொண்டுவரப்பட்ட தீர்மானம் தோற்கடிக்கப்பட்டது. டாக்டர் கவர், பிரிவி கவுன்சிலுக்கு அப்பீல் செய்வதைத் தடுக்கவேண்டி கொண்டுவந்த ஓர் தீர்மானத்தை சுயராஜ் ஜியக் கட்சியினர் அரசாங்கத்துடன் சேர்ந்து ஓட் கொடுத்து தோற்கடித்து விட்டார்கள். அச்சமயம் பண்டித மோதிலால் நேரு லண்டன் பிரிவி கவுன்சிலுக்கு அப்பீல் செய்துகொள்ள வேண்டும் என்று வற்புறுத்தினர். ஸ்ரீ வெங்கடபதி ராஜுவினால் இந்தியாவில் ஒரு ராணுவக் கல்லூரி ஏற்பட வேண்டுமென்று ஒரு தீர்மானம் நிறை

வேறியது. இதன் மூலம் அரசாங்கத்துக்கு மற்றொரு தோல்வி ஏற்பட்டது. சுயராஜ்யக் கட்சியினரும், சுயேச்சைக் கட்சியினரும் தங்களது சக்தியைக் காட்டிக் கொண்டார்கள். பண்டித மோதிலால் நேருவினால் கொண்டுவரப்பட்ட "ரயில்வே போர்டு அனுவசியம்" என்ற தீர்மானம் தோற்றுப் போயிற்று. மற்றொரு தீர்மானம் மோதிலால் நேரு கொண்டு வந்தார். மந்திராலோசனை சபை அங்கத்தினர்களுக்குப் பிரயாணப் படிகள் அநுமதிக்கக்கூடாது என்று அவர் கொண்டு வந்த தீர்மானம் 65 ஓட்டுகள் சாதகமாயும், 48 வோட்டுகள் பாதகமாயும் கிடைத்து நிறைவேறியது.

கோகட் அக்கிரமங்கள், சேனைகளை இந்திய மயமாக்குதல், முடிமான் ரிபோர்ட், வட்ட மேஜை மகாநாட்டு அடக்குமுறை யாவும் முதன்மை பெற்றது. வங்காள கிரிமனல் சட்ட மூலம் ஏற்படும் வழக்குகளுக்கு ஹைகோர்ட்டில் அப்பீல் செய்துகொள்ள வசதி அளிக்கும்படி டெல்லி சபையில் ஒரு மசோதா கொண்டு வரப்பட்டபொழுது ஒரு நூதன நிலைமை ஏற்பட்டது. விசாரணை இல்லாமல் கைது செய்வதை நிறுத்தவும், வங்காளத்தைத் தவிர்த்து இதர இடங்களில் அக்கைதிகளை சிறைவைப்பது நிறுத்தப்படவும் வேண்டி சில உபப் பிரிவுகளும் தீர்மானிக்கப் பட்டது. ஆனால் சுயராஜ்யக் கட்சியினர் கடைசிப் பகுதிகளைத் தள்ளி விட்டு மசோதாவை அங்கீகரித்தார்கள். லார்டு ரீடிங் சம்மதியும் கொடுக்கப்பட்டது.

பெல்காம் காங்கிரஸ் கூடுவதற்கு முன் தேசபந்து தாஸர் தமது சொத்துக்கள் யாவையும் பொது ஜன நன்மைக்காகக் கொடுத்துவிட்டதாக ஒரு அறிக்கை வெளியிடப்பட்டது. இதன் மூலம் தாஸரின் கீர்த்தி பரவியது. இச்சமயத்தில் டாக்டர் பெசண்டின் தேசீய சபை இந்திய மசோதா என்னும் ஒரு அறிக்கையை தயாரித்தது. ஒற்றுமை மகா நாட்டில் வகுப்புவாத விஷயமாக கவனிக்க வேண்டி ஏற்பட்ட கமிட்டி, வகுப்பு வாத விஷயமாக ஒன்றும் முடிவு செய்யாமல் ஒத்திவைக்கப்பட்டது. பிப்ரவரி மீ 25-ந் தேதி லாலாஜி ஹிந்து மகா சபை சார்பாக ஒரு அறிக்கை வெளியிட்டார். பம்பாயில் நவம்பர் மீ கூடிய சர்வகட்சி மகா நாட்டின் கமிட்டி கூட்டம் ஒரு சுயராஜ்ய திட்டத்தை தயாரிக்க வேண்டி

கூடிற்று. முடிவில் அது ஒன்றும்செய்யாமல் தேதி குறிப்பிடாமல் ஒத்திவைக்கப்பட்டது. 1925-ம் ஸு ஏப்ரல் ஸ்ரீ காந்திஜி தென்னாட்டிற்கும், கேரளத்திற்கும் சுற்றுப் பிரயாணம் செய்யும் பொருட்டு வந்தார். தென் கோடியில் வைக்கம் சத்தியாக்கிரக இயக்கம் பிரபல்ய மடைந்து வந்தது. காந்திஜி வருகையினால் சமரஸம் ஏற்பட்டது. வைக்கத்தில் ஒரு சில பொது ரஸ்தாக்களில் அனுமதிக்கப்படாத தீண்டப் படாதவர்களின்மீதுள்ள தடைகளை ஒழிக்க வேண்டி இயக்கம் ஆரம்பிக்கப்பட்டது. திருவாங்கூர் அரசாங்கம் சத்யாகிரகிகளுக்கு தடை விதித்தது. ஆனால் விரைவில் அரசாங்கம் தடைகளை எடுத்துவிட்ட போதிலும், பொது ஜன அபிப்பிராயம் சத்யாக்கிரகத்துக்கு விரோதமாக இருந்தபடியால் இயக்கம் கைவிடப்பட்டது. தமிழ் நாட்டிலிருந்து வங்காளத்துக்கு வந்தார் அடிகள். இச் சமயத்தில் தேசபந்து தாஸர் தேக அசௌக்கியத்துடனிருந்தார். அவரது வைத்தியர்கள் அவரை சிகிச்சைக்காக ஐரோப்பாவுக்குப் போகும்படி கூறினார்கள். அவர் அரசாங்கத்தாருடன் ஒரு முடிவுக்கு வர முடியுமென்று நம்பிக்கையுடனிருந்தார். சென்னை கடற்கரையில் நடந்த ஒரு பொதுக் கூட்டத்தில் அவர், அலகாபாத் காங்கிரஸுக்கு முன்னால் நடந்த காந்தி-ரீடிங் சம்பாஷணைகளையும், காந்திஜியினால் தமக்கு அலிப்பூர் சிறையில் அனுப்பப்பட்ட நிபந்தனைகளைப்பற்றியும் பிரஸ்தாபித்தார். இந்த சமாதான பேச்சுக்களை பெரிய இயக்கங்களை நடத்திய பொதுஜன நண்பர்கள் ஒரு பெரிய வெற்றியாகக் கருதினார்கள். அன்னி பெசண்டம்மை கூட இதனால் திருப்தி அடைந்தார்.

1922-ம் ஸு சிட்டகாங் ஹர்த்தாலை வெற்றிகரமாய் நடத்தியவரும், இளவரசர் வரவை மாகாண முழுவதும் பகிஷ்கரிக்கவும், மந்திரிகளை நியமிக்க முடியாமல் தடை செய்து, இரட்டை ஆட்சியை ஒழிக்கவும், காரணமாயிருந்த தாஸர் இருக்கும்பொழுது, ஏனோ! ஒரு முடிவு செய்து கொள்ளக்கூடாது ?

## ஸ்ரீ தாஸ் மரணம்

வங்காள மாகாண மகாநாடு நடந்த சமயம், சில விஷயங்களில் ஒத்துழைக்கத் தயாராயிருக்கும் விஷயத்தை தாஸர் பிரஸ்தாபித்தார். காந்திஜி, மாறுபாட்டினால் நாட்டில்

அமைதி உண்டுபண்ண முடியாது என்று கருதினர். ஆனால் தாஸரோ அதில் நம்பிக்கை கொண்டிருந்தார். "நான் எங்கும் மாறுபாட்டை பார்க்கிறேன்" என்று அவர் கூறினர். சண்டை, சச்சரவுகளினல் உலகம் அலுத்துப் போய்விட்டது. நிரந்தர வேலைகளைச் செய்ய விரும்பு கிறேன் என்று ஒரு பத்திரிகா நிருபரிடம் கூறினர். அதே நிருபரிடம் காந்திஜி தாம் எங்கும் மாறுதலைப் பார்க்கவில்லை என்றார். தாஸர் மேலும் கூறியதாவது: "நமக்குள் கௌரவமான திட்டங்கள் ஏற்பட்டவுடன் உங்களுக்கு சமாதானம் ஏற்படும்." தாஸர் தமது அதிகாரம் பெற்ற வழக்கறிஞரென்றும், காங்கிரஸ் சார்பாக சட்ட சபைக்குள் சுயராஜ்யக் கட்சி இருக்கிற தென்றும் காந்திஜி தெரிவித்தார். வங்காள மாகாண மகா நாட்டில் சமாதானத்துக்குள்ள நிபந்தனைகளை தாஸர் கூறி விட்டு, மூர்க்கத்தனத்தினல் ஒன்றும் ஏற்படாதென்றும் கூறினர். ஜனங்களுக்குரிய உண்மையான பாத்தியதைகளைக் கொடுத்துவிட்டால் ஏன் அரசாங்கத்துடன் ஒத்துழைக் கக் கூடாது என்று அவர் கேட்டார். முதலில் அடியோடு அரசாங்கம் மனமாறி, சுயராஜ்யம் கொடுப்பதைப்பற்றி வாக்குக் கொடுத்துவிட்டால் எல்லாம் முடிவுக்கு வந்து விடும் என்றும் கூறினர்.

"எல்லா அரசியல் கைதிகளுக்கும் விடுதலை யளித்து, எங்களது பாத்தியங்களுக்கு பாதுகாத்து, சுயராஜ்யம் ஏற்படுவதற்கு செய்யவேண்டிய வேலைகளை அங்கீகரித்தால், இதற்குப் பதில் நாங்கள் எத்தகைய புரட்சி இயக்கங் களையும் ஆதரிப்பதில்லை, அத்தகைய இயக்கங்களை ஒழித் துப்போடவும் வேலை செய்கிறோம். அரசாங்கம் தங்களது மனோநிலைமையை மாற்றிக் கொண்டுவிட்டால் புரட்சிக் காரன்கூட தங்கள் மனதை மாற்றிக் கொண்டுவிடுவர்" என தாஸர் அறிவித்தார். இந்த சமயத்தில் லார்டு ரீடிங் ரஜாவில் இங்கிலாந்தில் இருந்தார். லார்டு பர்கன்ஹெட் ஜூலை மீ 7-ந் தேதி சுயராஜ்ய கட்சியினருக்கு விடுத்த வேண்டுகோளில் "ஒத்துழையுங்கள். தடைசெய்யாதீர்கள்" என்று கேட்டுக் கொண்டார். கர்னல் வெட்ஜ்வுட்டும், கனம். ராம்சே மாக்டனல்டும் இந்தியா விஷயமாக சிரத்தை எடுத்துக்கொண்டார்கள்.

காந்திஜி தாஸர் மரணத்திற்குப் பிறகு ஒரு பிரசங்கத்தில், தாஸருக்கு பர்கன்ஹெட்டின்மீது அதிக நம்பிக்கை யுண்டென்றும், அவர் இந்தியாவுக்கு பல நன்மைகள் செய்வாரென்று அவர் நம்பி இருந்ததாகவும் கூறினர்.

மோதிலாலுக்கு தாஸர் எழுதிய கடைசி கடிதத்தில் "நாம் செய்யவேண்டிய வேலைகள் பல உள. சரித்திரத்தில் குறிப்பிடக்கூடிய சமயம் நெருங்குகிறது. அடுத்த வருஷத்தல் செய்யவேண்டிய வேலைகளுக்கு நல்ல பலன் கிடைக்கலாம். நாம் இருவரும் அசௌக்கிய முற்றிருக்கின்றோம். என்ன நடக்குமோ? ஈசன்தான் அறிவர்" என்று குறிப்பிட்டிருந்தார். அந்தக்கொடிய நாளான 1925ஞு ஜூன்மீ 16-ந் தேதி யன்று நமது நடுவிலிருந்த தாஸரை கடவுள் பறித்துக்கொண்டு போய்விட்டார். மகாத்மா காந்தி மிகத் துயரத்துடன் "தாஸர் போய்விட்டார். அழுது என்ன பயன்? இந்தியர் என்று கூறிக் கொள்பவர்கள் எதற்காக தாஸர் உழைத்து வந்தாரோ அதைத்தொடர்ந்து பின்பற்றி நடப்பதே, அவருக்கு நாம் செய்யும் மரியாதை. தாஸர் இறந்தபோதிலும் அவரது ஆன்மா இறக்கவில்லை. பெரியவர்களுக்கும் சிறியவர்களுக்கும் அவர் பெயரே ஊக்கத்தை ஊட்டுமென்பதில் சந்தேகமில்லை" என்று கூறினர்.

இந்தியா மந்திரியும், வைஸிராயும், கவர்னரும், தங்களது அனுதாபச் செய்திகளை தெரிவித்துக் கொண்டார்கள். ஆகஸ்டு மாதம் கூடிய சட்டசபையில் முதலில் தாஸருக்கு அனுதாபம் தெரிவிக்கப்பட்டது. ஆங்கிலேயர்களும் அரசாங்க உத்தியோகஸ்தர்களும் துக்கம் தெரிவித்தார்கள். மகாத்மாவைப்போலவே தாஸரும் நாடெங்கும் கௌரவிக்கப்பட்டார். அவரது எதிரிகளும் அவரிடத்தில் மரியாதை காட்டினார்கள்.

மகாத்மா காந்திக்கு தாஸரிடம் அதிக அன்பு உண்டு என்பதைக் காட்டினர். 10 லக்ஷம் ரூபாய் வசூலித்து அதில் தாஸரின் கடனுக்காக 2½ லக்ஷம் ரூபாய் கொடுத்தார். அவரது மாளிகையில் ஸ்திரீகளுக்காக ஆஸ்பத்திரியை ஏற்படுத்தினர். சுயராஜ்யக் கட்சியை வலுப்படுத்தி ஸ்ரீ ஜெ. எம். சென்குப்தாவை அதன் தலைவராகவும் நியமித்தார். நாட்டினருக்கு வேண்டுகோள் விடுத்து சுயராஜ்யக் கட்சியில் சேரும்படி கேட்டுக்கொண்டார்.

## சுயராஜ்யக் கட்சிக்கு காந்திஜி ஆதரவு

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் அதிகமாய் சுயராஜ்ய கட்சியினர் இருந்தார்கள். ஜுலை மீ 15-ந் தேதி கல்கத்தாவிலிருந்து பண்டித மோதிலாலுக்கு காந்திஜி ஒரு கடிதம் எழுதினார். அதில் மோதிலால் நேருவே கமிட்டித் தலைவராக இருக்கவேண்டுமென்றும், தான் தலைமைப் பதவியில் இருக்கமுடியாதென்றும் எழுதியிருந்தது. சுயராஜ்யக்கட்சியினரிடத்தில் பரபரப்பு காணப்பட்டது. முடிவில் காந்திஜி, அவ் வருஷ முடிவுவரையில் இருப்ப தென்றும், நூற்கும் பிரச்னை கழுவவிடப்பட்டால் தான் ராஜிநாமா செய்துவிட்டு, நூற்கும் விஷயத்துக்காக ஒரு தனி ஸ்தாபனம் ஏற்படுத்தவேண்டி வரும் என்றும் அறி வித்திருந்தார். இதற்கு மத்தியில் சுயராஜ்யக் கட்சியின ரோடு சேர்ந்து அவர்களுக்கு ஆதரவு கொடுத்ததுடன், மோதிலால் நேருவின் கக்ஷி அறிக்கையிலும் காந்திஜியின் பெயர் காணப்பட்டது. இது கண்ட காந்தி சிஷ்யர்களில் சிலருக்குக் கோபமேற்பட்டது. முடிவில் காந்திஜி கட்சியி லிருந்து ராஜிநாமா செய்துவிட்டதாகச் சொல்லப்பட்டது. நூற்கும் பிரச்னை கைவிடப்பட்டு, காங்கிரஸ் ஒரு அரசி யல் ஸ்தாபனமாகச் செய்யப்படவேண்டு மென்று சொல்லப் பட்டது. ஆகஸ்டு மீ காந்திஜி எழுதிய கடிதத்தில், "இனி ஒரு நிமிஷமும் காங்கிர சுக்கு தடங்கலாய் நான் நிற்க விரும்பவில்லை. காங்கிரஸ் படித்தவர்களால் ஆரம்பிக்கப்பட்டு ஆதரிக்கப்பட்டு வருகிற போது, பொதுஜன அபிப்பிராயத்துடன் நடக்கும் மனி தர்களிடம் இருப்பது சரியானது. நான் அவர்கள் சொல் பிரகாரம் நடக்கவும் தயாராயிருக்கிறேன். கட்டுப் பாடான வேலைகளை அவர்களது சம்மதத்தின் பேரில் செய்ய விரும்புகிறேன்" என்று எழுதியிருந்தார். சுயராஜ் யக் கட்சியினர் ஒரு விதத்தில் அவருடைய கொள்கைகளை யெல்லாம் விட்டு, அவரது தலைமையை வேண்டுகிறார்கள். அவர்களது போக்கின்படி காந்திஜி நடக்க விரும்புகிறார். இச் சமயத்தில் மோதிலால் நேரு "ஸ்கீன் கமிட்டியில்" ஒரு பதவியை பெற்றது அவரது சகாக்களுக்குப் பிடிக்க வில்லை. சட்ட சபையில் இருக்கும் கட்சி அங்கத்தினர் களில் 4-ல் 3 பேர் சம்மதியைப் பெறாமல் கமிட்டியின் சம்மதி பெற்று நடப்பது எங்கும் ஆக்ஷேபிக்கப்பட்டது.

1924-ம் வருஷம் பிப்ரவரி மீ சுயராஜ்யக் கட்சியினர் ஒரு தீர்மானத்தை டெல்லி சட்டசபையில் கொண்டுவந்தார்கள். அத்தீர்மானத்தில் "இந்த சபை 'வைசிராயை இந்திய அரசாங்க சட்டத்தை'த் திருத்தி, இந்தியாவுக்கு பூர்ண பொறுப்புள்ள ஒரு அரசாங்கத்தை ஏற்படுத்த சிபார்சு செய்யவேண்டுமென்றும், அதற்காக ஒரு வட்டமேஜை மகா நாட்டை கூட்டவேண்டுமென்றும், அதன் பின் புதிய சட்ட சபையை கூட்டுவதென்றும்" கண்டிருந்தது.

இந்தத் தீர்மானத்தினால் முடிமான் கமிட்டி ஏற்பட்டது. அது அனுப்பிய அறிக்கைகளை 1925-ம் வருஷம் செப்டம்பர் மீ 7-ந்தேதி சட்டசபை கவனித்தது. இதைப்பற்றி சபையின் கவனத்திற்காக சர் அலக்சாந்தர் முடிமான் ஒரு தீர்மானமாக இந்த அறிக்கையை பிரரேபணை செய்ய, பண்டித மோதிலால் நேரு அதற்கு சில திருத்தங்கள் கொண்டுவந்தார். இந்தத் திருத்தங்கள் சபையில் விவாதிக்கப்பட்டு முடிவில் நிறைவேறின. 72 வாக்குகள் சாதகமாயும், 45 வாக்குகள் பாதகமாயும் கிடைத்தன.

லார்டு பர்கண்ஹெட் சுயராஜ்யக் கட்சியைப்பற்றி நல்ல அபிப்பிராயம் தெரிவித்தார். "இந்தியாவில் நன்றாய் திருத்தி அமைக்கப்பட்ட அரசியல் கட்சி சுயராஜ்யக் கட்சியே" என்ற முடிவுக்கு வந்தார். சுயராஜ்யக் கட்சி சட்ட சபைக்குள் நுழைந்ததுடன், பல கமிட்டிகளில் அங்கம் வகித்து, பல திட்டங்களை நிறைவேற்றிற்று. ஸ்கீன் கமிட்டியில் அங்கம் வகித்த சுயராஜ்யக் கட்சி முடிமான் கமிட்டியில் அங்கம் வகிக்க மறுத்துவிட்டது.

சர் பேசில் பிளாகட், சட்டசபையில் பண்டித மோதிலால் நேருவின் ஒத்துழைப்பைப்பற்றி கூறினர்.

நேருவின் ஒத்துழைப்பைப் பாராட்டிவிட்டு, சபையில் தலைமைவகித்து ஒத்துழைக்கும் ஸ்ரீ வி.ஜே. படேலின் வேலைகளையும், ஸ்ரீ ஏ. ரங்கசாமி அய்யங்காரின் அரிய உதவிகளையும் அவர் பாராட்டிப் பேசினர்.

பாட்னவில் செப்டம்பர் மாதம் நடந்த சம்பவங்களைக் குறிக்கும் முன்பு சுயராஜ்யக் கட்சியினரது திட்டங்களை இங்கு கவனிப்போம். காந்திஜி சுயராஜ்யக் கட்சியினரது ஆதிக்கத்தில் காங்கிரசை விட்டுவிட முன் வந்ததை, கட்சித் தலைவர் பாராட்டினர்.

"தேசபந்து தாசருடைய ஒத்துழைப்பை லார்டு பர்கன்ஹெட் உதாசீனம் பண்ணிவிட்டார். சுதந்திர யுத்தத்தில் எவ்வளவோ எதிர்ப்புகளையும், எதிரிகளையும் சந்தித்தாக வேண்டும். நமது தற்கால வேலை திட்டத்தை நாம் தயாரித்து அதன்படி நடக்கவேண்டும்" என காந்திஜிக்கு ஒரு கடிதம் கட்சித் தலைவர் எழுதியிருந்தார்.

வங்காளத்தில், சுயராஜ்யக் கட்சியினரின் பதவி வகிக்கிற தில்லை என்ற கொள்கையினால் அக் கட்சியின் பலம், செல் வாக்கு குறைந்துபோனதாகக் கருதப்பட்டது. சட்ட சபைத் தலைவர் பதவிக்கு ஒரு சுயேச்சை கட்சி நபர் தேர்ந் தெடுக்கப்பட்டார். தலைவர் பதவிக்கு நின்ற சுயராஜ்யக் கட்சி அங்கத்தினர் 6 ஓட்டுகளால் தோல்வி யுற்றார். சபையில் கட்சி பலத்துக்காக, வியாதியஸ்தராயிருந்து படுக்கபடுக்கையிலிருந்த தேசபந்து தாஸரைகூட நாற் காலியில் உட்காரவைத்து அழைத்துவந்தார்கள்.

டாக்டர் ஏ. சுராவர்தி கட்சியிலிருந்து விலகினார். கவர்னரை சுராவர்தி பேட்டி கண்டு பேசினார். இதை காந்திஜி ஆக்ஷேபித்து, அம்மாதிரி பேசியது தவறென்றும், இதனால் அவர் "தேசத்தை விற்றதுபோலாகும்" என்றும் குறிப்பிட்டார். சுராவர்தி கட்சியிலிருந்து ராஜிநாமா செய்துவிட்டார்.

ஆகஸ்டு மீ 22-ம் தேதி டெல்லி சட்டசபையின் தலைவராக ஸ்ரீ விதல்பாய் படேல் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

இச்சமயத்தில் 1925-ம் ஹு செப்டம்பர் மீ 21 தேதி பாட்னாவில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூடிற்று. அரசியல் தோற்றத்திற்காக கதர் நூற்கப்பட்டது. காங் கிரஸ் அங்கத்தினராயிருக்க நாலணா கொடுப்பதற்குப் பதில் நூல் நூற்றல் முறையை மாற்றியும் சுயராஜ்யக் கட்சி அரசியல் வேலைகளைப் பார்த்துக்கொள்ளவும் முடிவு செய்யப்பட்டது.

1925-ம் ஹு கான்பூர் காங்கிரசுக்கு ஸ்ரீமதி சரோஜினி தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அகமதாபாத் நகர சபைக்கு ஸ்ரீ வல்லபாய் படேலும், பம்பாய் நகர சபைக்கு ஸ்ரீ வித்தலபாய் படேலும், அலகா பாத் சபைக்கு ஜவஹர்லாலும், பாட்னா நகர சபைக்கு ராஜேந்திர பிரசாதும் தலைவர்களாகத் தேர்ந்தெடுக்கப்

பட்டார்கள். சென்னை காங்கிரஸ் கமிட்டி நகர சபையில் ஏழு ஸ்தானங்களைக் கைப்பற்றிற்று.

அரசாங்கம்,ஸ்தலஸ்தாபனங்களுக்கு, சிறை சென்றவர்களை உத்தியோகத்தில் வைத்துக்கொள்ளக் கூடாதென்றும், தேசிய தலைவர்களுக்கு உபசாரப் பத்திரங்கள் வாசித்துக் கொடுக்கக்கூடாதென்றும், தேசிய கொடிகளை பறக்கவிடக் கூடாதென்றும் தடை விதித்தது.

இச்சமயத்தில் சென்னையில் ஸ்ரீ ஸ்ரீநிவாசய்யங்கார் காங்கிரசில் சேர்ந்து தலைவரானார்.

மத்ய மாகாணத்தில் ஸ்ரீ தம்பே பதவி வகிக்க ஒத்துக் கொண்டார். இது எங்கும் ஆட்சேபனைக்கு இடம் கொடுத்தது. ஸ்ரீ தம்பே பதவி வகித்ததும் மகாராஷ்டிர தலைவர்களுக்கும், மத்திய மாகாணத் தலைவர்களுக்கும் பகைமை ஏற்பட்டது.பலத்தவிவாதம் ஏற்பட்டு ஸ்ரீமான்கள் கெல்கார், மூஞ்சி, ஜயகர் ஆகியோர் தங்களது அங்கத்தினர் பதவியை ராஜிநாமா செய்துவிட்டு ஒரு அறிக்கையை வெளியிட்டார்கள்.

1925-ம் ஞூ காங்கிரஸ் கூடின விவரத்தைக் கவனிப் போம். ஸ்ரீமதி சரோஜினியின் பிரசங்கம் மிகச் சுருக்கமாய் இருந்தது. காலம் சென்ற ஸ்ரீ சுரேந்திரநாத் பானர்ஜி, ஸ்ரீ தேசபந்து தாஸ் முதலியவர்கள் மரணத்துக்கு அனுதாபம் தெரிவித்துவிட்டு ஆப்பிரிக்காவிலிருந்து வந்த தூது கோஷ்டிக்கு காங்கிரஸ் தனது வரவேற்பை தெரிவித்துக் கொண்டது. வட்ட மேஜை மகாநாடு கூடுவதை காங்கிரஸ் அங்கீகரித்தது.

1925-ம் ஞூ ஒரு அறுவருக்கத்தக்க சம்பவம் நடைபெற்றது. ஹிந்து-முஸ்லிம் கலகம் ஏற்பட்டது. மகாத்மா காந்தி ஹிந்து முஸ்லிம் ஒற்றுமையைப்பற்றி கூறும் போது "இந்த ஹிந்து முஸ்லிம் மனஸ்தாபத்திற்கு ஒரு மருந்து கண்டுபிடிக்கவேண்டும். நான் கூறுவதை ஒருவரும் ஏற்றுக்கொள்ளமாட்டார்கள். இதற்காக நான் ஒன்றும் கூறுவதில்லை. ஒரு நாள் முஸ்லிம்களும் ஹிந்துக்களும் சேர்ந்து வரும்படி நேரிடும்" என்று குறிப்பிட்டார்.

1925-ம் ஞூ ஜூன் மீ கல்கத்தா, டெல்லி, அலகாபாத் முதலிய விடங்களில் கலகம் ஏற்பட்டது.

1925-ம் ஞூ சிக்கியர்களின் நன்மைக்காக குருத்துவாரா மசோதா சட்ட சபையில் நிறைவேற்றப்பட்டது. சர் மால்காம் ஹெய்லி குருத்துவாரா சீக்கியக் கைதிகளை விடுதலை செய்வதாகவும் எதிர்காலத்தில் ஒரு வித இயக்கத்தையும் நடத்துவதில்லையென்று உறுதி கொடுக்கவேண்டுமென்றும் கூறினார். இதை பலர் ஆக்ஷேபித்தார்கள். ஆனால் சிலரை தவிர்த்து யாவரும் உறுதிகொடுத்து விடுதலை பெற்றார்கள்.

---

## அத்தியாயம் 7

---

## சட்ட சபை வேலை—1926

1926-ம் வருஷம் சட்ட சபை திட்டத்திற்கு அனுகூலமாக யில்லை. 1925-ம் வருஷத்தில் சட்ட சபைப் பிரவேசத்தில் ஜனங்கள் கொண்டிருந்த பிரமை குறையலாயிற்று. சர்க்காருடன் சண்டை செய்வதே நோக்கமாகக் கொண்டிருந்த திட்டம் ஜனங்களிடை கொஞ்சம் கொஞ்சமாக அதிருப்தியை அளித்தது. சர்க்காருடன் பரஸ்பர ஒத்துழைப்பு வேண்டுமென்ற உணர்ச்சி உருக்கொள்ள ஆரம்பித்தது. 1926-ம் வருஷம் ஜனவரி மாதம் 20-ம் தேதி இந்தியா சட்ட சபை கூடுவதற்கு முன்னால், பரஸ்பர ஒத்துழைப்பு முறைக்குப் பூரண ஆதரவளிப்பதாக பம்பாய் சுயராஜ்யக் கட்சி ஓர் தீர்மானம் நிறைவேற்றியது.

சுயராஜ்யக் கட்சியின் வேலைமுறையைப்பற்றிக் கவனிப்போம். தென்னாப்பிரிக்காப் பிரச்னை சம்பந்தமாக லாலா லஜபதிராய் உட்பட ஐந்து பிரதிநிதிகளுடன் பண்டித மோதிலால் நேரு வைசிராயுடன் பேட்டி கண்டு பேசினார். வைசிராயுடன் பேட்டி கண்டு பேசுவதற்கு சுயராஜ்யக் கட்சி நிர்வாகக் கமிட்டி பண்டிதருக்கு அனுமதியளித்தது. இச் செய்தி அரசியல் வாதிகளிடை சில காலம் திருப்தியை அளித்து வந்தபோதிலும், முடிவில் சித்திபெறவில்லை. இந்தியா சட்ட சபையில் ஜனவரி மாதம் 20-ம் தேதி லார்டு ரீடிங் பேசிய தித்திப்பான பேச்சு ஜனங்களின் மனத்தில் அதிக நம்பிக்கையை உண்டு பண்ணிற்று.

1926-ம் வருஷம் மார்ச்சு மாதம் 6, 7-ந் தேதிகளில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி டில்லியைச் சேர்ந்த 'ரவிஞ'வில் கூடியது. கான்பூரில் செய்யப்பட்ட முடிவு ஊர்ஜிதம் செய்யப்பட்டது. தேசம் சுயராஜ்யத்தை அடைவதற்கு தடையாக இருந்துவரும் சர்க்கார் வேலை முறைகளையும், மற்றவர் வேலைமுறைகளையும் ஊக்கத்துடன் எதிர்த்துப் போராட வேண்டுமென்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி வற்புறுத்திற்று. காங்கிரஸுக்கு நம்பிக்கை விளைவிக்கக்கூடிய முறையில் சர்க்கார் பரஸ்பர நல்லுணர்ச்சி காட்டும் வரையில், சட்டசபை அங்கத்தினர்கள் எவ்வித சர்க்கார் உத்தியோகத்தையும் வகிக்கக் கூடாது என்று திட்டம் செய்யப்பட்டது. ஹிந்துஸ்தான் சேவாதளத்திற்கு ரூ. 2000 உதவியும், அன்னிய நாட்டில் காங்கிரஸ் பிரசாரம் செய்ய ரூ. 5000-மும் அளிப்பதாக முடிவு செய்யப்பட்டதை மறக்கமுடியாது. காக்கிஞடா காங்கிரஸ் தீர்மானத்தை யொட்டி ஹிந்துஸ்தான் சேவா தளம் ஆரம்பிக்கப்பட்டது. இச்சேவாதளம் பெல்காமில் முதல் வருடம் மௌலாஞ ஷவுக்கதலி தலைமையிலும், இரண்டாம் வருடம் கான்பூரில் ஸ்ரீ டி. வி. கோஸ்வாமி தலைமையிலும் கூடியது.

இதுவரை பேச்சளவில் இருந்துவந்த வெளிநாட்டுப் பிரசார திட்டம் இப்பொழுது அரசியல் தலைவர்களுடைய முக்கிய திட்டமாகி விட்டது. காலம் செல்லச் செல்ல, இத்திட்டம் வலுக்கலாயிற்று. இச்சமயத்தில் தம் மனைவி ஸ்ரீமதி கமலா நேருவின் தேக அசௌக்கியத்தை முன்னிட்டு பண்டித ஜவஹர்லால் சுவிட்ஜர்லந்துக்கு பயண மானர்.. தவிர ஸ்கீன் கமிட்டி நடவடிக்கைகளைக் கவனிக்க் பண்டித மோதிலால் நேரு இங்கிலாந்து செல்லக்கூடு மென்று எதிர்பார்க்கப்பட்டது.

1926-ம் வருஷம் இந்தியா சட்ட சபையில் வரவு செலவு திட்டம் விவாதத்திற்கு வந்தபோது சுயராஜ்யக் கட்சியும், அதற்குப் பக்கபலமாக உள்ளவர்களும் ஓட் செய்யாமல் சபையிலிருந்து வெளியேறிவிடப் போவதாக பண்டித மோதிலால் தெரிவித்தார். சர்க்காருடன் கௌரவமான முறையில் ஒத்துழைப்பதற்கான நிபந்தனை களை தேசபந்து தாஸ் விடுத்திருந்தார். இந்த நியாயமான நிபந்தனைகளைச் சர்க்கார் நிராகரித்துத் தள்ளியதை பண்டித

மோதிலால் பலமாகக் கண்டித்தார். சர்க்கார் அதிக கவனமாக நடந்துகொள்ளவில்லையேல் நாடு முழுதும் ஆயிரக் கணக்கான ரகசியசங்கங்கள் தோன்றும் என்றுசர்க்காருக்குமோதிலால்ஜி எச்சரிக்கை விடுத்தார். பிறகு வரவு செலவு திட்டம் ஓட்டுக்கு வந்தபோது பண்டிதர் தம்முடைய சகாக்களுடன் சட்ட சபையிலிருந்து வெளியேறி விட்டார்.

பண்டித நேரு சட்ட சபையிலிருந்து தமது கோஷ்டியுடன் வெளியேறியது இந்திய சட்ட சபை நாடகத்தில் ஓர் காட்சியாகும். சட்ட சபையில் பலமுள்ள கட்சி வெளியேறிவிட்ட படியால், சட்ட சபை, பிரதிநிதித்துவத் தன்மையை இழந்து விட்டதாக சட்ட சபைத் தலைவர் ஸ்ரீ படேல் கூறினார். இனி சட்ட சபை தன் அலுவல்களை மேற்கொண்டு நடத்தக் கூடுமா என்ற பிரச்னையை அவர் கிளப்பினார். ஆட்சேபிக்கத்தக்க மசோதாக்களை பிரேரிக்க வேண்டாமென்று சர்க்காருக்கு சட்ட சபைத் தலைவர் தெரிவித்தார். அப்படிச் சர்க்கார் ஏதாவது ஆட்சேபமான பிரச்னைகளைக் கொண்டு வந்தால், தமக்கு அளிக்கப்பட்டிருக்கும்விசேஷ அதிகாரத்தை உபயோகித்து காலம் குறிப்பிடாமல் சட்ட சபையை ஒத்திவைத்து விடுவதாக ஸ்ரீ வித்தல்பாய் பயமுறுத்தினார். மறுநாள் சட்ட சபை கூடியதும் தாம் தம்முடைய அதிகாரத்தைப் பற்றிக் குறிப்பிட்டிருக்கக் கூடாதென்றும், தம்முடைய வார்த்தைகளைச் சர்க்கார் பயமுறுத்தலாகக் கொள்ளக் கூடாதென்றும், மேற்கொண்டு என்ன நடக்கப்போகிறதென்பதைத் தாம் கவனித்தாக வேண்டுமென்றும் தலைவர் அறிவித்தார். ஸ்ரீ வித்தல்பாய் இவ்வாறு கூறியதும் சர்க்காரின் கவலை ஒருவாறு நீங்கிற்று.

கயா காங்கிரஸின்போது உன்னத நிலைமையில் இருந்து வந்த ஒத்துழையா இயக்கம் 1926-ம் வருஷ ஆரம்பத்தில் இருந்த இடமே தெரியாமல் மறைந்து விடலாயிற்று. ஏப்ரல் மாதம் 3-ம் தேதி பம்பாயில் எல்லா கட்சித் தலைவர்களும் ஓர் மகா நாடு கூடினர். இதன் மூலம் 'இந்திய தேசியக் கட்சி' யென்று ஓர் கட்சி தோன்றலாயிற்று. இக் கட்சி இந்தியாவின் சுயராஜ்யத்தைக் கோரியதுடன், சட்ட மறுப்பையும், ஒத்துழையா

இயக்கத்தையும் கைவிட்டுவிட வேண்டுமென்று வற் புறுத்தியது. சட்ட சபைக்குள்ளிருந்து சர்க்காருடன் பரஸ்பரம் ஒத்துழைக்க உரிமை வேண்டுமென்று இக் கட்சி கேட்டது. இப் புதிய கட்சியை பண்டித நேரு பல மாகக் கண்டித்தார்.

மீண்டும் கடிதப் போக்கு வரத்துக்கள் நடைபெற லாயின. சில வாரங்களுக்குப் பிறகு ஏப்ரல் மாதம் 21-ம் தேதி சபர்மதியில் சுயராஜ்யக் கட்சியின் இரு பிரி வினரும் ஓர் கூட்டம் கூட்டினர். இரு கட்சிகளும் ஒன்று சேரக் கூடுமென்று முயற்சி செய்யப்பட்டது. இக் கூட்டத்திற்கு மகாத்மாஜி விஜயம் செய்திருந்தார். தாம் ஒருவருட காலம் ஓய்வெடுத்துக்கொள்ள போவதாக காந்திஜி கான்பூரில் பகிரங்கமாக அறிவித்து விட்டார். இக் கூட்டத்தில் ஸ்ரீமதி சரோஜினி, லாலாஜி, ஸ்ரீ கெல்கார், ஸ்ரீ ஜயகர், ஸ்ரீ ஆனே, டாக்டர் மூஞ்ஜே முதலிய பிரபலஸ் தர்களும் விஜயம் செய்திருந்தார்கள். 1924-ம் வருஷம் பிப்ரவரி மாதத்தில் இந்தியா சட்ட சபையில் சுயராஜ்யக் கட்சியார் விடுத்த கோரிக்கைக்கு சர்க்கார் அளித்த பதிலைக் கவனிப்பதாக சபர்மதியில் ஒப்புக் கொள்ளப்பட்டது. மாகாணங்களில் அதிகாரம், பொறுப்பு, எல்லா வசதிகளும் மந்திரிகளுக்கு அளிக்கப்பட்டால், சர்க்கார் அளித்த பதில் திருப்திகரமானதாகும் என்று ஒப்புக்கொள்ளலாம் என்ற அபிப்பிராயம் விடுக்கப்பட்டது. இந்த ஒப்பந்தத்தை ஆந்தர கேசரி ஸ்ரீ டி. பிரகாசம் முற்றிலும் பிற்போக்கான தென பலமாகக் கண்டித்தார். மாகாணங்களில் மந்திரி பதவி ஏற்கு முன் பின்கண்ட மூன்று நிபந்தனைகள் பூர்த்தி யாக வேண்டுமென்று பண்டித நேரு விளக்கியதும் ஸ்ரீ பிரகாசத்தின் கோபம் சாந்தியடைந்தது.

(1) மந்திரிகள் சர்க்கார் ஆதிக்கத்திற்குட்படுத்தப் படக் கூடாது. ஆனல் சட்ட சபைகளுக்கு அவர்கள் பொறுப்பாளிகளாக இருக்கவேண்டும்.

(2) தேச அபிவிருத்தித் திட்டங்களுக்கு சர்க்கார் வருமானத்தில் ஓர் பகுதி தனியாக ஒதுக்கி வைக்கப்பட வேண்டும்.

(3) ஒதுக்கப்பட்ட இலாகாக்களில் இருந்து உத்தி யோகஸ்தர்கள் வேலையை மேற்பார்வையிட்டு அவர்களுக்கு

கட்டளையிட மந்திரிகளுக்குப் பூரண அதிகாரம் அளிக்கப்பட வேண்டும்.

மறுபடியும் சிக்கலான நிலைமை ஆரம்பமாகிவிட்டது. பண்டித நேரு கொடுத்த வியாக்கியானத்தை ஸ்ரீ ஜெயகர் ஒப்புக்கொள்ள மறுத்துவிட்டார். அன்றுமுதல் சுயராஜ்யக் கட்சியினருக்கும் பரஸ்பர ஒத்துழைப்புக் கட்சிக்கும் வித்தியாசம் அதிகரிக்கலாயிற்று.

மே மாதம் 5-ம் தேதி ஆமதாபாத்தில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில்சபர்மதி ஒப்பந்தம் முறிந்துபோய்விட்டதாக பண்டித நேரு அறிவித்தார். இக் கூட்டத்தில் பண்டித நேருவுக்கு தென்னாட்டுத் தலைவர் ஸ்ரீ எஸ். ஸ்ரீனிவாசய்யங்கார் வந்தனோபசாரம் அளித்தது குறிப்பிடத்தக்க ஓர் அம்சமாகும். ஏனெனில், சபர்மதி ஒப்பந்தத்தை சென்னை மாகாணம் ஒப்புக்கொள்ளவில்லை. ஆரம்பத்திலிருந்து சென்னை மாகாணத்தின் அபிப்பிராயத்தை பண்டித நேரு நாடவில்லையென்ற வருத்தம் இருந்து வந்தது. ஆமதாபாத்தில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்திற்குப் பிறகு பண்டித மோதிலால் நேரு இங்கிலாந்து செல்ல விரும்பினார். இரண்டு மாத காலம் பண்டித நேரு ரஜா எடுத்துக்கொள்ளவே, அவருடைய ஸ்தானத்தில் ஸ்ரீ எஸ். ஸ்ரீனிவாசய்யங்கார் தலைவர் பதவியை வகிக்கலானார். இச்சமயத்தில் ஸ்ரீ எஸ். ஸ்ரீனிவாசய்யங்காரின் கீர்த்தி பரவலாயிற்று.

ஸ்ரீ எஸ். ஸ்ரீனிவாசய்யங்கார் சுயராஜ்யக் கட்சிக்குத் தலைமை வகிக்க வந்த காலத்தில், சுயராஜ்யக் கட்சிக்கு பலம் குறையத் தலைப்பட்டிருந்தது. மாகாணங்களில் காங்கிரஸ் வாதிகளுக்குள் சச்சரவுகள் ஏற்படலாயின. வங்காளத்தில் கிருஷ்ண நகர் என்னுமிடத்தில் கலவரம் நடைபெற்றது. இக்கலவரத்தை ஸ்ரீ ஜெ. எம். சென்குப்தா வெகு சாமர்த்தியமாகச் சமாளித்தார். இருந்தாலும் அதிருப்தி ஒழிய வில்லை. வங்காளத்தில் காங்கிரஸ்காரர்களிடை இரண்டு கட்சிகள் தோன்றலாயின. இன்னும் வங்காளத்தில் இத் தகராறு தீர்ந்தபாடில்லை.

1926-ம் ஆண்டு ஏப்ரல் மாதம் 6-ம் தேதி லார்டு இர்வின் இந்தியாவின்புதியவைசிராயாக இந்தியாவுக்குள்காலெடுத்து வைத்தார். இதே சமயத்தில் கல்கத்தாவில் இதுவரைகாணப் படாத ஓர் கடுமையான வகுப்புச் சண்டை நடைபெற்றது.

ஹிந்துக்களும் முஸ்லீம்களும் பலாத்கார முறைகளைக் கையாண்டு ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டுக் கொண்டனர். தெருக்களில் எங்கு பார்த்தாலும் கலவரங்கள் நடைபெற்றன. இச்சண்டை ஆறு வார காலம் நீடித்தது. கல்கத்தாவில் நடைபெற்ற அட்டூழியங்கள் அளவிடற்பாலது. வீடுகளுக்குத் தீ வைக்கப்பட்டது. ஹிந்து கோயில்களும், மசூதிகளும் தாக்கப்பட்டன. பலதடவை போலீசார் தலையிட்டுத் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இக்கலவரத்தில் 44 பேர் மாண்டனர். 584 பேர் பலத்த காயங்களடைந்தனர். கல்கத்தாவின் நல்ல பெயருக்கு ஹானி ஏற்பட்டு விட்டது. இச் சம்பவங்சள் லார்டு இர்வினுடைய மனத்தில் குழப்பத்தை உண்டுபண்ணலாயின. சமாதானத்தை வற்புறுத்தி லார்டு இர்வின் உருக்கமாகப் பேசினர்.

1926-ம் வருஷம் செப்டம்பர் மாதத்தில் லாலா லஜபதிராய்க்கும், பண்டித மோதிலாலுக்கும் ஓர் புதிய சச்சரவு ஏற்பட்டது. பாஞ்சால சிங்கத்திற்கும், அலகாபாத் புலிக்கும் நடைபெற்ற யுத்தம் சாமானியமானதல்ல. சுயராஜ்யக் கட்சியில் லாலாஜி காலம் தாழ்ந்த பிறகுதான் சேர்ந்தார். சுயராஜ்யக் கட்சியின் திட்டத்தின் கடுமையைச் சற்று தளர்த்தி சர்க்காருடன் பரஸ்பரம் ஒத்துழைக்கும்படி சுயராஜ்யக் கட்சியைத் திருப்பும் நோக்கத்துடன், லாலாஜி சுயராஜ்யக் கட்சிக்கு வந்தார். சிறிதும் தயை, தாக்ஷிண்யமின்றி லாலாஜியும், பண்டிதரும் ஒருவரையொருவர் மிதவாதி யென்று குற்றஞ் சாட்டிக்கொண்டார்கள். இதற்குப் பிறகு இந்தியா சட்ட சபையின் ஆயுட்காலம் முடிவடைந்தது. புதிய தேர்தல் நடக்கப்படுமென அறிவிக்கப்பட்டது. சட்ட சபைத் தலைவர் ஸ்ரீ வித்தல் பாய் படேலைப் பாராட்டாதவரே கிடையாது. வரப்போகும் தேர்தலில் சுயராஜ்யக் கட்சியாருடைய பலம் எவ்வளவிருக்கும் என்ற கவலை சர்க்காரைக் கலங்கச் செய்தது.

1926-ம் வருஷம் நவம்பர் மாதத்தில் பொதுத் தேர்தல் நடைபெற்றது. சென்னையில் காங்கிரஸ் பிரதிநிதிகள் பூரண வெற்றி பெற்றனர். கௌஹதி காங்கிரசில் சர்க்காருடன் ஒத்துழைக்கக் காங்கிரஸ்காரர்கள் இஷ்டப்படுகிறார்களா என்று லார்டு பர்கன்ஹெட் அதிக

ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். கௌஹாதி காங்கிரசுக்கு ஸ்ரீ எஸ். ஸ்ரீனிவாசய்யங்கார் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஸ்ரீ எஸ். ஸ்ரீனிவாசய்யங்கார் அரசியல் உலகில் அளவிலா கீர்த்தியை பெற்றிருந்தார். தவிர அவர் சிறந்த புத்திசாலி. சுயமாக எதையும் யோசித்து முடிவும் சக்தியும், திறமையும் கொண்டவர். பிறர் சொல்லுவதை அப்படியே அவர் கேட்க சம்மதிப்பதில்லை. தமக்குச் சமாதானம் ஏற்படாவிட்டால் கடைசிவரை எதிர்த்துப் போராடுவார். இந்த குணங்களைக் கொண்ட ஸ்ரீ எஸ். ஸ்ரீனிவாசய்யங்கார் பண்டித நேருவுக்கு கீழ் நின்று வேலை செய்ய விரும்பாதது ஆச்சரியமில்லை. இதனால் பின்னர் பண்டித நேருவுக்கும், ஸ்ரீ எஸ். ஸ்ரீனிவாசய்யங்காருக்கும் கடுமையான சச்சரவு ஏற்பட்டது. டில்லியில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்திலேயே இந்த தகராறு ஆரம்பமாய்விட்டது. பண்டித நேருவும், ஸ்ரீ ஸ்ரீனிவாசய்யங்காரும் பிரபல வக்கீல்கள். அத்துடனில்லாது இருவரும் பழுத்த அனுபவம் பெற்ற அரசியல் வாதிகள். இருவருக்கும் தகராறு சகஜம்தான். பண்டித மோதிலால்ஜி, ஸ்ரீ ஜெயகரை ஒரு புறமும், லாலாஜியை ஒரு புறமும், ஸ்ரீ அய்யங்காரை மற்றொரு புறமும் எதிர்த்துத் தளராமல் போராடினர்.

## கௌஹாதி காங்கிரஸ்

அரசியல் தலைவர்களுக்குள் ஒருபுறம் சச்சரவு ஓங்கியிருக்கும் நிலைமையில் கௌஹாதி காங்கிரஸ் கூடியது. சர்க்காருடன் ஒத்துழைக்கவேண்டுமென்கிறவர்களுக்கும், ஒத்துழைக்கக் கூடாதென்பவருக்கும் தான் உண்மையில் சச்சரவாகும். ஆனால் நாளடைவில் சுயராஜ்யக் கட்சியின் லட்சியங்கள் சர்க்காருடன் ஒத்துழைப்பதற்குச் சமமாகி விட்டது. சட்ட சபை கமிட்டிகளில் சுயராஜ்யக் கட்சி யங்கத்தினர்கள் ஸ்தானம் வகிக்க முன் வந்தார்கள். இந்திய சர்க்கார் நியமித்த கமிட்டிகளில் ஸ்தானம் பெற காங்கிரஸ் வாதிகள் அவாக்கொண்டனர். சுயராஜ்யக்கட்சியின் நிலைமை இவ்வளவு கேவலமான ஸ்திதிக்கு வந்துவிட்டது. இந்த நிலைமை காங்கிரஸ் தலைவர்களின் மனத்தைப் புண்படுத்தி வந்தது. இந்த நிலைமையில், காங்கிரஸ் கௌஹாதியின் முன் மற்றுமோர் துக்கச் செய்தி

எட்டியது. சுவாமி சிரத்தானந்தரை ஓர் முஸ்லீம் அவரது படுக்கையில் சுட்டுக் கொன்ற செய்தி காங்கிரஸ் தலைவர்களின் மனத்தைப் பிளந்தது. ஸ்ரீ ஸ்ரீனிவாசய்யங்கார் துக்க மிகுதியால், யானை மீது ஊர்வல ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததை நிறுத்தி விடும்படி கேட்டுக்கொண்டார். இக் கொடிய செயலை ஹிந்துக்களும், முஸ்லிம்களும் பலமாகக் கண்டித்தனர்.

ஸ்ரீ ஸ்ரீனிவாசய்யங்காரின் கொள்கைகளை ஜனங்கள் முன்னமேயே அறிவார்களாகையால், ஆச்சரியத்தக்க ஓர் அம்சமும் அவருடைய தலைமை யுரையில் காணவில்லை. சட்ட சபை திட்டத்தை ஸ்ரீ அய்யங்கார் பலமாக வற்புறுத்தினராயினும், மந்திரிப் பதவி ஏற்பதைப் பலமாக எதிர்த்தார்.

கௌஹதி காங்கிரஸ் தீர்மானங்கள் சாமானிய மானவையாகும். சிரத்தானந்தர் மரண அனுதாபத் தீர் மானத்தைக் காந்திஜி பிரேரித்தார். அதை மௌலானா முகமதலி ஆமோதித்துப் பேசினர். கிராம அபிவிருத்தி வேலை வற்புறுத்தப்பட்டது. கதர் பிரசாரம் மிகவும் அவசியம் என்று வற்புறுத்தப்பட்டதுடன், வழக்கமாக கதர் கட்டுகிறவர்கள் காங்கிரஸ் கமிட்டிகளில் ஸ்தானம் பெறலாம் என்றும், காங்கிரஸ் பிரதிநிதிகளாகத் தேர்ந் தெடுக்கப்படலாமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

கதர் பிரசாரம் முன்னிலும் தீவிரமாக நடைபெற் றது. கண்ணைக் கவரும்படியான கதர் வஸ்திரங்கள் தயார் செய்யப்பட்டன. கதர் துணியிலும் இவ்வளவு நேர்த்தியான வஸ்திரங்கள் செய்யமுடியுமா என்று ஜனங் கள் கண்டு பிரமிக்கலானார்கள். ஆங்காங்கு அகில இந்திய கதர் பொருட்காட்சிகள் நடத்தப்பட்டன. கதர்தான் ஏழைகளுக்கு உணவளிக்கக் கூடியது என்றும், கதர்தான் பொருளாதார சுதந்திரம் அளிக்கக்கூடியதென்றும் பாமர மக்களுக்கு விளக்கப்பட்டது.

---

# அத்தியாயம் 8

## காங்கிரஸ் மகாசபையும் சட்ட சபை வேலையும்

இப்பொழுது பல்வேறு சட்ட சபைகளிலும் காங்கிரஸ் கட்சி யாற்றிய வேலையை நாம் ஆராய்ச்சி செய்வோம். சென்ற மூன்று வருடங்களில் வங்காளத்திலும், மத்திய மாகாணத்திலும் இரட்டை யாட்சி முறை யொழிக்கப்பட்ட விஷயம் ஞாபகப்படுத்தப் படுகிறது. வங்காளத்தில் ஆறு வாக்குகளாலேயே மந்திரிகளின் சம்பளமான்யம் நிறைவேறியது.

1926-ம் வருடத்தில் இந்தியா சட்ட சபையில் நிகழ்ந்த சில விஷயங்களையும் ஈண்டு குறிப்பிட வேண்டியிருக்கிறது. மார்ச்சு மாதம் 26-ம் தேதியன்று, பொதுத் தேர்தலுக்கு முன் சட்ட சபைக்குள் மீண்டும் நுழைவதில்லை யென்ற கருத்துடன் சுயராஜ்யக் கட்சி, சபையிலிருந்து வெளியேறியது. ஆனால் நாணய மாற்று முறையில் ரூபாய்க்கு 16 பென்ஸ் விகித மிருந்து வந்ததை 18 பென்ஸ் விகிதத்திற்கு மாற்றும் பிரச்னை சம்பந்தமாக, மசோதா வொன்று சர்க்கார் கொணர்ந்த தந்திரத்தால் சுயராஜ்யக் கட்சி மீண்டும் சபைக்குத் திரும்பிவர நேரிட்டது. அதனால் சபையின் அடுத்த கூட்டம் வரை, அதாவது பொதுத் தேர்தல் முடிவடையும் வரை, இதுபற்றி ஆலோசனை செய்வதை ஒத்திவைக்கும்படி, நிறைவேற்ற முடிந்தது.

பொதுத் தேர்தலுக்குப் பின்னர் சபை முதன் முதலாகக் கூடியதும், சிறையிலிருக்கும்போது சட்டசபைக்கு தேர்ந்தெடுக்கப்பட்ட பாபு லால்யேந்திர மித்ரா, இக் கூட்டத்திற்கு வராமலிருக்கும் சர்க்கார் வேலை முறையைக் கண்டித்து பண்டிட்ஜியால் ஒத்திவைப்புப் பிரேரணை யொன்று கொண்டுவரப்பட்டது. இப் பிரேரணைக்குச் சாதகமாக 18 அங்கத்தினர்களின் அதிகப்படியான வாக்குகள் கிடைத்ததால் சர்க்கார் தோல்வி யடைந்தனர். அடுத்த பிரச்னை விசாரணையின்றிச் சிறைவைக்கப் பட்டிருக்கும் வங்க சிறைக் கைதிகளைப் பற்றியதாகும். அவர்கள் விடுதலை செய்யப்படவேண்டும் அல்லது விசா

ரணைக்குக் கொண்டுவரப்பட வேண்டுமென, ஆதித் தீர் மானத்திற்கு திருத்தமாக பண்டிட்ஜியால் இப் பிரச்னை கொண்டுவரப்பட்டது. 13 அதிகப்படியான வாக்கு களால் இத் திருத்தப் பிரேரணை நிறைவேறியது.

முதன் முதலில் சர்க்காருக்கும், உத்தியோகப் பற்றற்ற வர்களுக்கும் இடையே கடுமையான போராட்டம் நடை பெற்றது, எஃகுப் பொருள் பாதுகாப்பு மசோதாவை யொட்டியே யாகும். அடுத்த பிரச்னை, பிரச்னைகளிலெல் லாம் முக்கியமான 18 பென்ஸ் விகிதப் பிரச்னையே. இவ் விகிதத்தால், இறக்குமதியினும், ஏற்றுமதியே அதிகமாக வுள்ள இந்தியாவிற்கு வருடாந்தரம் ஒன்பது கோடி ரூபாய் நஷ்டமேற்படும். இதுவே, இப் பிரச்னை சம்பந்தமாக கடும்போராட்டம் நடைபெற்றதற்குரிய காரணமாகும். முடிவில் பொதுஜன அபிப்பிராயம் தோல்வியுற்றது. மூன்று அங்கத்தினர்கள் அதிகமாக வாக்களித்ததால் சர்க்கார் வெற்றிபெற்றனர். இத்துடன் டில்லியில் கூடிய சட்ட சபைக் கூட்டத்தில் காங்கிரஸ் செய்த வேலை முடிவடைகிறது.

இதன்பின் சில முக்கியமான விஷயங்களைப்பற்றி நாம் கவனிப்போமாக. ஸ்ரீ சக்லத்வாலா, இந்தியா வந்து சேர்ந்தார். அவரது நோக்கம் காந்திஜியையும் காங் கிரஸையும் தாக்கிப் பேசுவதே. ஏழு லட்சம் கிராமங் களில் வேலையின்றியும், பட்டினியுடனுமிருந்துவரும் விவ சாயத் தொழிலாளரின் மிக்க வருந்தத்தக்க நிலையைப்பற்றி அவருக்கு எவ்வித அபிப்பிராயமும் கிடையாது. கதர் சம் பந்தமாக இயற்கையில் அவருக்கு அனுதாபங் காட்ட முடி யாது.

அடுத்த விஷயம், நிலைபெற்ற கவனஞ் செலுத்தப்படக் கூடிய சில நிகழ்ச்சிகளை யொட்டியது. ஸ்ரீ வித்தல்பாய் படேல், சட்ட சபைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட காட்சிகள் முன்னரே குறிப்பிட்டுளோம். அவர் காங்கிரஸ் மகாசபையின் சார்பாக சபையின் தலைவராகத் தேர்ந் தெடுக்கப்பட்டதும் தமது சம்பளத்திலிருந்து மாதமொன் றிற்கு ரூ.1656 அளிப்பதாக காந்திஜியிடம் உறுதிகூறினர். கூர்ஜரத்திலுள்ள ராஸ் கிராமத்தில் கிராமப் பள்ளிக்கூட மொன்றைத் திறந்துவைக்கும்போது, இவ்விதம் சேர்ந்த தொகை ரூ. 40,000மும் தம்மிடமிருந்து வருவதாகவும்,

அதற்குக் கிடைக்கும் வட்டி ரூ. 1000 மே செலவிடப் பட்டு வருவதாகவும் காந்திஜி குறிப்பிட்டுள்ளார்.

காங்கிரஸ் தமது யோசனையைப் புறக்கணிக்குமபோ தெல்லாம், அது தன்னிஷ்டப்படி நடப்பதற்காக காந்திஜி விலகிக்கொண்டார். தேசபந்து ஞாபகார்த்த நிதி சேகரிப்ப தற்காக அவர் பிஹாரில் சுற்றுப் பிரயாணம் செய்தார். அத் தொகை கதர் அபிவிருத்திக்கேயாம். சட்டசபைத் திட்டத்தில் காந்திஜிக்கு மோகம் கிடையாது. லாலா லஜபதி ராய்க்கும் அதில் பற்றில்லை. சட்டசபை வேலையை அவர் கண்டித்தார். ஸ்ரீ எஸ். ஸ்ரீனிவாசய்யங்காரும் லாலாஜி யைப் பின்பற்றிக் குறிப்பிட்டார். பண்டிட்ஜி ஸ்கீன் கமிட்டியில் தமக்களிக்கப்பட்ட ஸ்தானத்தை ராஜிநாமாச் செய்துவிட்டார். 1926-ம் வருடத்தில் அக் கமிட்டியின் அறிக்கை இந்தியா மந்திரி முன் சமர்ப்பிக்கப்பட்டது.

## தென் ஆப்பிரிக்கா பிரச்னை

ஸ்ரீமதி சரோஜினி தேவி, தென் ஆப்பிரிக்கா சென்ற தைப்பற்றி ஏற்கனவே குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்திய சர்க்கார், யூனியன் சர்க்கார் பிரதிநிதிகளடங்கிய மகாநாடு கேப்டவுனில் நடைபெற்றது. இதனால் உடனே விசேஷ லாப மேற்படாவிடினும், இந்தியரைத் தனித்து ஒதுக்கும் பான்மையுடைய எவ்வித சட்டத்தையும் நிறுத்தி வைப் பதில் ஒரு தடை யேற்படுத்த முடிந்தது. சர் மகமது ஹபிபுல்லா தலைமையில் இந்திய தூது கோஷ்டி 1926-ம் வருடம் தென் ஆப்பிரிக்கா சென்றதும், தென் ஆப்பிரிக்கா பிரதம மந்திரியால் அம் மகாநாடு திறக்கப்பட்டதும் ஈண்டு ஞாபகப் படுத்தப்படுகிறது. இதில் செய்யப்பட்ட தற்கால ஒப்பந்தம் இருதரப்பினராலும் ஒப்புக்கொள்ளப் பட்டது. இதன் மூலம் மேல்நாட்டு வாழ்க்கை முறையை ஸ்திரப்படுத்துவதில், எல்லா நியாயமான சட்ட பூர்வமான முறைகளையும் மேற்கொள்ள தென் ஆப்பிரிக்காவிற்குள்ள உரிமை இரு சர்க்காராலும் அங்கீகரிக்கப்பட்டதுடன், மேல்நாட்டு வாழ்க்கை முறையை அனுஷ்டிக்கத் தயாராக விருக்கும் யூனியனில் குடி யேறியிருக்கும் இந்தியர்களுக்கு அவ்விதமிருந்துவரவசதியளிப்பதென்றவிஷயமும்யூனியன் சர்க்காரால் ஒப்புக்கொள்ளப்பட்டது. மகாநாட்டின் முடிவுகள் யாவராலும் மகிழ்ச்சியுடன் வரவேற்கப்பட்டன.

கௌரவமான சமரசமென காந்திஜியே இதைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளார். எனினும் இந்தியாவைத் தவிர ஏகாதிபத்தியத்தின் இதர பாகங்களில் சர்க்கார் உதவி மூலம் குடியேறுவது சம்பந்தமாகச் சிறிது அபாய மிருந்து வருவதாக அவருக்குப் பட்டது.

கோஹத்தி காங்கிரசுக்குப் பின்னர் காந்திஜி சுற்றுப் பிரயாணம் செய்தபோது மகாராஜாக்களும் அவரை வரவேற்றனர். அந்தக் காங்கிரஸில் சட்டமறுப்பியக்கத்தை பற்றி யொன்றும் குறிப்பிடாததே அவர்கள் அச்சத்தைப் போக்கியது. கதர், காங்கிரஸ் தொண்டர்களுக்குரிய தேசிய ராணுவ உடையல்ல வென்பதை அவர்கள் கண்டனர். அது தேசீயப் பொருளாதாரப் புனருத்தாரணத்திற்கான குற்றமற்ற முறையென அவர்களுக்குப் பட்டது.

பம்பாயில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி முன்பு, இந்து முஸ்லீம் பிரச்னை சம்பந்தமாக காரியக் கமிட்டியால் வகுக்கப்பட்ட திட்டமொன்று சமர்ப்பிக்கப் பட்டு அங்கீகரிக்கப்பட்டது. சட்ட சபையின் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தினர்களுடனும் இதர அரசியல் கட்சியின் தலைவர்களுடனும் கலந்து கொண்டு இந்தியாவிற்கு சுயராஜ்ய அரசியலமைப்பொன்று வகுத்து அதை கமிட்டியின் அடுத்த கூட்டத்தில் சமர்ப்பிக்கும்படியும் காரியக் கமிட்டியைக் கோரி, அதில் முக்கியமான தீர்மானமொன்றும் நிறைவேற்றப் பட்டது. ஏகாதிபத்திய எதிர்ப்பு சர்வதேச சங்கத்தைப் பற்றியும், பம்பாயில் கூடிய இக் கூட்டத்தில் பேசப்பட்டது. இவ்வமயம் ஜவஹர்லால் ஐரோப்பாவிலிருந்தார். பிரஸ்ஸெல்ஸில் கூடிய சர்வதேச ஏகாதிபத்திய எதிர்ப்பு காங்கிரஸில் அவர் இந்தியாவின் பிரதிநிதியாகக் கலந்துகொண்டார். அவர், அங்கிருந்து அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு அறிக்கையொன்றும் அனுப்பி யிருந்தார். கமிட்டியில் இச் சங்கத்தின் சேவை பாராட்டப்பட்டது. சக ஸ்தாபனமென்ற முறையில் இந்தச் சங்கத்திற்கு ஆதரவளிக்க வேண்டுமெனச் சிபார்சு செய்து தீர்மானமொன்றும் நிறைவேற்றப் பட்டது.

நான்கு வருட காலம் சிறையிலிருந்தபின் பாபு சுபாஷ் சந்திர போஸ் விடுதலை யடைந்தது இங்கு குறிப்பிட வேண்டிய நல்ல விஷயம். லார்டு லிட்டன் துணியாதிருந்தும்

வங்க சிறைவாசிகளுக்கு நிவாரணமளிக்கும் வேலை சர் ஸ்டான்லி ஜாக்ஸனால் மேற்கொள்ளப்பட்டது.

## இந்து-முஸ்லீம் பிரச்னை

1927-ம் வருடக் கோடையில் சட்ட சபை வேலைகளொன்றுமில்லாவிடினும், நாடெங்கும் இந்து-முஸ்லீம் கலகங்கள் ஏராளமாக நடைபெற்றன. லாகூர், மூல்டான், பீஹார், பெரில்லி, நாகபுரி முதலிய விடங்களில் பெருங் கலகங்கள் நிகழ்ந்தன. பேச்சு மூலமோ, அல்லது எழுத்து மூலமோ, அல்லது இதர முறைகளிலோ, மதத்தையோ, மதக் கொள்கைகளையோ, தூஷிக்கவோ அல்லது தூஷிக்க முயலவோபடின் இரண்டு வருட சிறை தண்டனை, அல்லது அபராதம் அல்லது இரண்டுமோ விதிக்கப்படுமென இந்தியா சட்ட சபையில் 1927 ஆகஸ்ட் மாதத்தில் மசோதா வொன்று நிறைவேறியது.

மொத்தத்தில் 25 கலகங்கள் நடந்தன. இந்தியா சட்ட சபை முன்பு லார்டு இர்வின், ஆகஸ்ட் மாதம் 29-ம் தேதி பேசியபோது, இக்கலகங்களால் 250 முதல் 300 பேர் வரை கொல்லப்பட்டதாகவும், 2500 பேருக்கு மேல் காயமடைந்ததாகவும் குறிப்பிட்டார். ஒற்றுமைப் படவேண்டுமென வைசிராய் வற்புறுத்திக் கூறியதையொட்டி ஒற்றுமை மகாநாடொன்று நடைபெற்றது. அதனால் விசேஷ பலனேற்படவில்லை. பின்னர் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியால், மகாநாடொன்று கூட்டப்பட்டது. அதில் விசேஷ விவாதத்தின்மீது அடியிற் கண்ட தீர்மானம் நிறைவேறியது:—

“இந்தியாவிலுள்ள எந்த சமூகமும், இதர சமூகத்தின்மீது தனது மதக் கடமைகளையோ அல்லது அபிப்பிராயங்களையோ, சுமத்தவோ, சுமத்த முயற்சிக்கவோ கூடாது. ஆனால் ஒரு மதத்தை பகிரங்கமாக ஒப்புக்கொள்வதும், அனுஷ்டிப்பதும், பொதுஜன அமைதிக்கும் ஒழுக்கத்திற்கும் ஒத்த முறையி லிருக்கவேண்டும். மதம் அல்லது சமூகம் சம்பந்தமாக, எந்தச் சமயத்திலும், ஊர்வலங்களை நடத்திச் செல்லவும், மசூதி முன் வாத்தியம் வாசிக்கவும இந்துக்களுக்குச் சுதந்திரமுண்டு. ஆனால் மசூதி முன்பு நிற்கவோ அல்லது விசேஷ ஆர்ப்பாட்

டம் செய்யவோ கூடாது. மசூதியில் பிரார்த்தனை செய்பவர்களுக்கு தொந்திரவோ அல்லது கஷ்டமோ, அல்லது குற்றமாகவோ யிருக்கக்கூடிய முறையில் பாட்டுகள் பாடவோ அல்லது வாத்தியம் வாசிக்கவோ கூடாது. முஸல்மான்களுக்கு தங்கள் உரிமைப்படி பசு பலியிடவோ அல்லது வதை செய்யவோ உரிமையுண்டு. ஆனால், எந்தக் கிராமத்திலாயினும், நகரிலாயினும், பொதுஜனங்கள் போக்குவரத்துக்குரிய பாதையிலோ, கோயிலின் அருகிலோ, இந்துக்களின் முன்பாகவோ, பசுவைப் பலியிடவோ, வதை செய்யவோ கூடாது. பலிக்காகவோ, அல்லது வதைக்காகவோ, பசுக்கள், ஆர்ப்பாட்டத்துடன் ஊர்வலமாக அழைத்துச் செல்லப்படக் கூடாது. பசுவைக் கொல்வது சம்பந்தமாக, இந்து சமூகத்தினரிடமிருந்து வரும் ஆழ்ந்த உணர்ச்சி கருதி, இந்துக்களுக்குப் புண்படாத முறையில் பசுப் பலியை நடத்துமாறு முஸ்லீம் சமூகத்தினர் வேண்டிக் கேட்டுக்கொள்ளப்படுகின்றனர்.''

மேலும் இம் மகாநாட்டில் கொலை செய்யும் நோக்கத்துடன் தாக்குவதைக் கண்டித்தும், இந்து முஸ்லீம் ஒற்றுமைபற்றிப் பிரசாரம் செய்வதற்காக ஒவ்வொரு மாகாணத்திலும் கமிட்டி நியமிக்கும்படி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு அதிகாரமளித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. கல்கத்தாவில் அக்டோபர் மாதம் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் சமூகங்களின் உறவு சம்பந்தமாக நிறைவேற்றப்பட்ட தீர்மானம் பூரணமாக அங்கீகரிக்கப்பட்டது.

## சைமன் கமிஷன்

நவம்பர் மாதம் முதல் வாரத்தில் வைசிராய் தமது சுற்றுப் பிரயாணத்தை ரத்து செய்து டில்லிக்குத் திரும்பினார். இந்தியாவிலுள்ள பிரபல அரசியல் வாதிகளுக்கு, 5-ம் தேதியன்று தம்மை வந்து காணுமாறு வைசிராயால் அழைப்பு அனுப்பப்பட்டது. இவ்வமயம் காந்திஜி மங்களூரிலிருந்தார். அவருக்கும் அழைப்புக் கடிதம் கிடைத்தது. தமது சுற்றுப் பிரயாணத்தை நிறுத்திவிட்டு, காந்திஜி டில்லிக்குச் சென்று வைசிராயைப் பேட்டி கண்டார். லார்டு இர்வின், அவரது கைகளில் சைமன் கமிஷனை யொட்டிய இந்தியா மந்திரியின் அறிக்கையைச்

சமர்ப்பித்தார். ஒரு அறை கவர் மூலம், இவ்விஷயம் தமக்கு அறிவிக்கப்படக்கூடுமென காந்திஜி கருதினார்.

வைசிராய், தேசப்பான்மையான ஒத்துழைப்பைப் பெற முயற்சித்தார். இவ்வளவு அவசரப்பட்ட நடவடிக்கையெடுப்பதற்குரிய காரணமென்னவென ஸ்ரீமதி அன்னி பெஸன்டால் கேட்கப் பட்டது. காரணங்கள் யாதாயிருப்பினும் சைமன் கமிஷன் எக்கட்சியினராலும் விரும்பப்படவில்லை.

அப்பொழுது இங்கிலாந்திலிருந்த பண்டித மோதிலால் நேரு, இக்கமிஷன் வெறுங் கண் துடைப்பென அறிவித்தார். கமிஷனை யாட்சேபித்து, ஸ்ரீ டி. இ. வாச்சா போன்ற அகில இந்தியத் தலைவர்களாலும், இதரர்களாலும் கையெழுத்திடப்பட்ட அறிக்கை யொன்று பத்திரிகைகளில் பிரசுரிக்கப்பட்டது.

அரசாங்க அமைப்புமுறை அமுல், கல்வி வளர்ச்சி, பிரிட்டிஷ் இந்தியாவில் பிரதிநிதித்துவ ஸ்தாபனங்களின் அபிவிருத்தி முதலியவைகளைப்பற்றி விசாரணை செய்வதுடன், பொறுப்பாட்சிக் கொள்கையை எவ்வளவு தூரம் ஸ்தாபிப்பதென்பது சம்பந்தமாகவும், பொறுப்பாட்சியை எவ்விதம் அமைத்துக் கட்டுப்படுத்துவதென்பதை யொட்டியும், மாகாணங்களில் இரு சட்ட சபைகள் அமைப்பதுபற்றியும், அறிக்கை அனுப்புவதும் சைமன் கமிஷன் மீது சுமத்தப்பட்ட கடமையாகும். கமிஷன், அறிக்கையை சமர்ப்பித்ததும், அதன் அறிக்கை இந்திய சர்க்காராலும், பிரிட்டிஷ் சர்க்காராலும் பரிசீலனை செய்யப்படும். பின்னர் பிரிட்டிஷ் சர்க்கார், அதைப் பார்லிமெண்ட் முன்பு சமர்ப்பிப்பர். பார்லிமெண்டின் இரு சபைகளின் பிரதிநிதிகளடங்கிய கூட்டுக் கமிட்டியால் அது ஆலோசனை செய்யப்படும். அப்பொழுது இந்தியர் அபிப்பிராயமும் அறிந்துகொள்ளப்படும்.

## சென்னை காங்கிரஸ்

நாம் இப்பொழுது 1927-ம் வருட காங்கிரஸைக் கவனிப்போம். இது சென்னையில் நடக்கவேண்டியது. இந்து-முஸ்லிம் ஐக்கியத்தைப்பற்றி விசேஷமாகப் பேசப்பட்டு வந்ததாலும், இந்து-முஸ்லிம் கலகங்கள் யாவர்

கண் முன்பும் நின்றதாலும் இம்மகா நாட்டிற்கு முஸல்மான் ஒருவரே தலைவராக யிருப்பது சிறந்ததெனக் கருதப் பட்டது. அதன் பிரகாரம் டாக்டர் அன்சாரி, காங்கிரஸ் மகாசபைத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் சென்னை காங்கிரசுக்குத் தலைமை வகித்து, தமது முன்னுரையில், காங்கிரஸ் வேலைத்திட்டம் 35 வருட காலமாக ஒத்துழைப்பெனவும், ஒன்றரை வருடமாக ஒத்துழையாமை யெனவும், நான்கு வருடங்களுக்கு தடையும், முட்டுக்கட்டைகளும் போடுவதாமெனவும் அவர் சுருக்கிக் கூறினார். 'ஒத்துழையாமை நம்மைக் கைவிடவில்லை. நாமே அதைக் கைவிட்டோமென' அவரால் குறிப்பிடப்பட்டது. இவ் வருட மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்களுள், பார்லிமெண்டரி கமிஷனை யொட்டியதே மிகவும் முக்கியமானது. யுத்த அபாயத்தைப்பற்றி ஒரு தீர்மானத்தில் குறிப்பிடப்பட்டது. யுத்தம் நேரின், எவ்வகையிலும் சர்க்காருடன் ஒத்துழைக்க மறுப்பதே இந்திய மக்களின் கடமையென காங்கிரஸ் அறிவித்தது. பர்மாவை இந்தியாவிலிருந்து பிரிப்பதும் கண்டிக்கப்பட்டது. 1885-ம் வருட முதலாவது காங்கிரஸில், பர்மாவை இந்தியாவுடன் சேர்ப்பதைக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றப்பட்ட விஷயம் ஞாபகத்திற் கொள்ளத் தக்கது. ஏற்கனவே அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியில் நிறைவேறிய தீர்மானத்தை யொட்டி, இந்து-முஸ்லீம் ஐக்யம் சம்பந்தமாகவும் தீர்மான மொன்று அங்கீகரிக்கப்பட்டது. சமீப வருடங்களில் பிரிட்டிஷ் சரக்குகளைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்ற விஷயமும் காங்கிரஸில் புதிய அம்சமாகும்.

பார்லிமெண்டரி கமிஷனைப் பகிஷ்கரித்து நிறைவேறிய தீர்மானம் குறிப்பிடத்தக்கது. இந்தியாவின் சுய நிர்ணய உரிமையைப் பொருட்படுத்தாமல் பிரிட்டிஷ் சர்க்காரால் இக் கமிஷன் நியமிக்கப்பட்டதால் அதை யொவ்வொரு படியிலும், ஒவ்வொரு முறையிலும் பகிஷ்கரிக்க வேண்டியதே இந்தியாவிற்குள்ள கௌரவமான ஒரே வழியெனவும், கமிஷன் இந்தியாவிற்கு வந்த அன்று, எங்கும் பொதுஜன ஆர்ப்பாட்டம் நடைபெறும்படிச்செய்வதுடன், அக்கமிஷன் வரும் ஒவ்வொரு நகரங்களிலும் இவ்வித ஆர்பாட்டங்கள் நடத்தி, அதைப் பகிஷ்கரிக்குமாறு பலதிறப்பட்ட அரசியல் கருத்துடையவர்களிடையும் தீவிர பிரசாரம் செய்ய

வேண்டுமெனவும், சட்டசபைகளிலுள்ள காங்கிரஸ் அங்கத்தினர்கள் இக் கமிஷன் சம்பந்தமாக நியமிக்கப்படும் கமிட்டியில் கலந்துகொள்ளக் கூடாதென்றும், சட்ட சபையிலுள்ள உத்தியோகப் பற்றற்ற அங்கத்தினர்கள், தங்கள் ஸ்தானம் காலியாக்கப்பட்டதாக அறிவிப்பதைத் தடுப்பதற்காகவோ, அல்லது பகிஷ்காரத்தை பலவுடைய தாக்கவோ, மந்திரி சபையை வீழ்த்தவோ, அல்லது காரியக் கமிட்டி எடுக்கச் சொல்லும் எந்த முக்கியமான மசோதாவையும் ஆட்சேபிக்கவோ அன்றி, சட்ட சபைக் கூட்டங்களில் கலந்துகொள்ளக் கூடாதெனவும், பகிஷ்காரத்தைப் பலப்படுத்த இதரர்களுடைய ஆதரவைப் பெற முயற்சிக்க வேண்டுமெனவும் காங்கிரஸ் கோருவதாக அத் தீர்மானத்தில் குறிப்பிடப்பட்டுளது.

பொது ஜனங்களின் ஆத்திரம் பலமாக வெளியிடப்பட்டும், காகோரி வழக்கு கைதிகளின் மீது மிருகத்தனமான தண்டனை விதிக்கப்பட்டதற்கும் வருந்துவதாகத் தீர்மானம் நிறைவேறியது.

முடிவில் காங்கிரஸின் கொள்கையை விளக்கித் தீர்மானமொன்று நிறைவேற்றப்பட்டது. அதில், 'இந்திய மக்களின் லட்சியம் பூரண தேசீய சுதந்திரமே' யெனக் குறிப்பிடப்பட்டது. இத் தீர்மானம் சில வருடகாலமாக வருடாந்தரம் கொண்டுவரப்பட்டு வந்தது. ஐரோப்பாவிலிருந்து திரும்பிய ஜவஹர்லால், இதற்கு ஆதரவளித்தது, இதை நிறைவேற்ற விசேஷ ஊக்கமளித்தது. விஷயாலோசனைக் கமிட்டிக் கூட்டத்தில், இந்த லட்சியம் ஸ்ரீமதி அன்னி பெஸண்டாலும், ஆட்சேபிக்கப்படவில்லை. இந்தியாவின் லட்சியத்தை, கம்பீரமாகவும் தெளிவாகவும் இதனால் கூறுவதாமென அவர் சொன்னார். காந்திஜி அப்பொழுது விஷயாலோசனைக் கமிட்டியிலில்லை. அது நிறைவேறியதுமே அவருக்கு இதுபற்றிய செய்தி யெட்டியது.

---

# அத்தியாயம் 9

## 'காங்கிரஸ் சரணாகதி'

1928-ம் வருட ஆரம்பத்தில் சைமன் கமிஷனை நியமித்தது பற்றி நாடெங்கும் விசேஷ ஆத்திரம் நிலவியது. அதைப் பகிஷ்கரிப்பதே ஒவ்வொருவருடைய நோக்கமா யிருந்தது. நாட்டுமக்கள் ஒத்துழைத்தாலும், ஒத்துழையாவிடினும், விசாரணை நடைபெற்று அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டு விடுமென வைசிராய் பேசினார். பிப்ரவரி மாதம் 3-ம் தேதியன்று சைமன் கமிஷன் பம்பாயில் வந்திறங்கியது. சென்னையில் அன்று நடைபெற்ற ஆர்ப்பாட்டத்தில் போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்யவும் நேரிட்டது. கமிஷன், சென்றவிடங்களிலெல்லாம் பகிஷ்கரிக்கப்பட்டது. பகிஷ்காரம் விசேஷ வெற்றியடைந்ததைக் கண்ட சர்க்கார், பயமுறுத்து, பயங்கரச் செய்கைகள் முதலிய வழிகளைக் கையாள முயன்றனர். லாலா லஜபதிராய், பண்டித ஜவஹர்லால் போன்ற பெரும் தலைவர்களும் போலீஸ் தடியடிக் குட்பட்டனர். எனினும் எங்கும் தீவிர பகிஷ்காரம் செய்யப்பட்டது. கமிஷன் மார்ச்சு மாதம் 31-ம் தேதியன்று பம்பாயிலிருந்து திரும்பிச் சென்றது. கமிஷனைப் பகிஷ்கரிப்பதென உறுதிகொண்ட இந்திய சட்ட சபைக் கட்சிகளின் தலைவர்கள், உத்தியோக தோரணையில் மட்டுமன்றி சமூகத் துறையிலும் அதைப் பகிஷ்கரித்ததாகவும், ஆகவே தங்களால் அவர்களைக் கலந்துகொள்ள முடியவில்லையெனவும் கமிஷன் அறிக்கையில் உத்தியோக தோரணையிலேயே அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது.

இவ்வருட நிகழ்ச்சிகள் சைமன் கமிஷன் சுற்றுப் பிரயாணம், சர்வகட்சி மகாநாடு, பர்டோலி இயக்கமுமாம். 1928-ம் வருடம் பிப்ரவரி, மார்ச்சு மாதங்களில் டில்லியில் சர்வகட்சி மகாநாடொன்று கூட்டப்பட்டது. பூரண பொறுப்பாட்சியை அடிப்படையாகக் கொண்ட அரசியலமைப்பொன்று வகுப்பது சம்பந்தமாக விவாதிக்கப்பட வேண்டுமென்ற விஷயம், மகாநாட்டிற்கு வந்திருந்த காங்கிரசுக்கும், இதர ஸ்தாபனங்களுக்கும் இடையே ஒப்புக் கொள்ளப்பட்டது. இரண்டாவது விஷயம் சமூக உறவும், விகிதங்களும். இரண்டு மாதங்களில் இம் மகாநாடு

இருபத்தைந்து முறை கூடியிருக்கிறது. முக்கால்வாசிப் பிரச்னைகள் சமரசமாகத் தீர்க்கப்பட்டுவிட்டன. மே மாதம் 19-ம் தேதியன்று இவ் வருடத்தில் மூன்றுவது முறையாக டாக்டர் அன்சாரி தலைமையில் இம் மகாநாடு கூடியது. அதில் 1928-ம் வருடம் ஜூலை மாதம் 1-ம் தேதிக்கு முன்பு, ஒரு அரசியலமைப்பிற்குரிய கொள்கைகளைத் தயாரிக்குமாறு பண்டித மோதிலால் நேருவைத் தலைமையாகக் கொண்ட கமிட்டியொன்று நியமிக்கப்பட்டது. அரசியலமைப்பின் நகல் நாடெங்குமுள்ள ஸ்தாபனங்களுக்கும் அனுப்பி வைக்கப்படவேண்டுமெனவும் அதில் நிறைவேறியது. இருபத்தொன்பது அரசியல் ஸ்தாபனங்களால் இத் தீர்மானம் ஆதரிக்கப்பட்டது. பின்னர் இவ் விஷயங்களைப் பற்றிக் குறிப்பிடுவோம்.

ஜூன் மாதம் மத்தியில் நம் மனதைக் கவரக்கூடிய மூன்று நிகழ்ச்சிகள் சம்பவித்தன. இவ் வருட காங்கிரஸ் கல்கத்தாவில் நடைபெறவேண்டும். அதற்கு பண்டித மோதிலால் நேரு தலைமை வகிக்கவேண்டுமெனப் பகிரங்கமாகப் பேசப்பட்டு வந்தது. இதற்கு தடையேற்படாமலிருப்பதற்காக, ஏகாதிபத்திய பார்லிமெண்டரி தூதுக் கோஷ்டியில், நான்கு பிரதிநிதிகளிலொருவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த தமது ஸ்தானத்தையும் அவர் ராஜிநாமாச் செய்துவிட்டார். அரசியல் நிலைமையிலேற்பட்டுள்ள நிலைமையைக் கண்டே பண்டிட்ஜி ராஜிநாமாச் செய்தார். 'வங்காளத்திற்கு வேண்டியது பெரிய நேரு'வென காந்திஜி கூறினர்.

மூன்றுவது விஷயம் மிகவும் முக்கியமானது. மறுபைஸல் மூலம் பர்டோலி தாலூக்காவில் இருபத்தைந்து சத விகிதம் நில வரியை உயர்த்தியிருப்பதாக உத்திரவிடப்பட்டது. உயர்த்துவதற்கான காரணமில்லையென்றும் நிலைமையைப் பரிசீலனை செய்ய பட்ச பாதமற்ற கமிட்டி யொன்று நியமிக்கப்பட வேண்டுமென்றும் பர்டோலி வாசிகள் கூறினர். சட்ட பூர்வமாக அவர்களால் மேற்கொள்ளப்பட்ட முயற்சிகள் யாவும் வீணுகவே, இக் குறையை நீக்குவதற்காக வரிகொடா இயக்கம் நடைபெறுமெனச் சர்க்காருக்கு எச்சரிக்கைச் செய்யப்பட்டது. சர்க்கார் பிடிவாதமாக யிருந்ததினுல் இயக்கம் ஆரம்பிக்கப் பட்டது. ஸ்ரீ வல்லபாய் படேல், கிராமவாசிகளின் வேண்டு

கோள்மீது இவ்வியக்கத்தைத் தலைமை வகித்து நடத்தினார். சங்கப சொத்துக்களும் நிலங்களும் ஜப்தி செய்யப்பட்டன. எனினும் மக்கள் உறுதியுடனிருந்தனர் பின்னர் சர்க்கார் நடவடிக்கை யாட்சேபிக்கப்பட்டது. பம்பாய் சட்டசபை யில் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளிற் சிலர், தங்கள் ஸ்தானங்களைக் காலி செய்துவிட்டு, இயக்கத்தில் கவனஞ் செலுத்தினர். சர்க்கார் மனந் திரும்பாவிடில், தமது சட்ட சபைத் தலைவர் பதவியை ராஜிநாமாச் செய்து, தாம் அவ் வியக்கத்தி லீடுபடப் போவதாக பயமுறுத்தி, ஸ்ரீ விட்டல் பாய் படேல், வைசிராய்க்குக் கடிதமொன்றெழுதினார். முடிவில் சமரசமொன்று செய்யப்பட்டது. ஏலத்தில் விடப்பட்ட நிலங்கள், அதன் சொந்தக்காரர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப்பட்டதும், வேலைகளிலிருந்தும் நீக்கப் பட்ட படேல்கள், தலாத்திகள் மீண்டும் வேலையிலமர்த்தப் பட்டதும் இம் முடிவில் முக்கியமானது. தீர்வை முந்திய நிலையிலேயே யிருந்தது.

## நேரு கமிட்டி அறிக்கை

1928-ம் வருடம் ஆகஸ்டு மாதம், 28, 29, 30-ம் தேதி களில் லட்சுமணபுரியில் மீண்டும் சர்வகட்சி மகாநாடு கூடியது. பூரண சுயேட்சையை லட்சியமாகக் கொண்ட அரசியல் கட்சிகளின் நடவடிக்கையைத் தடை செய்யாமல் நேரு கமிட்டிக்கு, அது ஆற்றிய பணிக்காக நன்றி யறிவிக் கப்பட்டது. குடியேற்ற நாட்டு ஆட்சி முறையை யாதரித்து மகாநாட்டில் தீர்மானம் நிறைவேறியது. இந்தியாவின் அரசியலமைப்பு, பூரண சுயேச்சையை அடிப்படையாகக் கொண்டிருக்க வேண்டுமெனக் குறிப்பிட்டு, பூரண சுயேச்சை வாதிகளால் அறிக்கையொன்று வெளியிடப் பட்டது. இவ்வறிக்கை மகாநாட்டிலும் வாசிக்கப்பட்டது. சிந்து, மாகாணங்கள் திருத்தி யமைப்பு, கூட்டுத் தொகுதி முதலிய பிரச்னைகளும் அதில் ஆலோசிக்கப்பட்டன. சட்ட பூர்வமாகச் சேர்க்கப்பட்டு, அனுபவிக்கப்பட்டு வரும் தனிப்பட்ட சொத்து உரிமைக்கு உத்திரவாத மளித்தும் தீர்மானமொன்று நிறைவேறியது.

டாக்டர் சாப்ரூ, சர் அலி இமாம், சர் ஸி. சங்கரன் நாயர், ஸ்ரீ சச்சிதானந்த சின்ஹா, சர் ஸி. பி. ராமசாமி அய்யர், மகமதாபாத் மகாராஜா, ராஜா ராம்பால் சிங் முதலி

யோரும் இம் மகாநாட்டில் கலந்து கொண்டனர். ராணுவ விஷயங்களிலும் இரட்டை யாட்சி முறையைப் புகுத்துவதற்கு இத் திட்டத்தில் ஆலோசனை செய்யப்பட்டதென்ற விஷயமும் இங்கு குறிப்பிடவேண்டும். நேரு திட்டத்தின் ஏழாவது அத்தியாயத்தில் 75 முதல் 78 வரையுள்ள பிரிவுகளிலும், ஆறுவது அத்தியாயத்தின் கடைசி இரு பாராக்களிலும் ராணுவ சம்பந்தமான விஷயம் அடங்கி யிருக்கிறது. பாதுகாப்பு சம்பந்தமாக கவர்னர் ஜெனரலால் கமிட்டியொன்று நியமிக்கப்படவேண்டுமென்றும், பாதுகாப்பு விஷயத்திலும், போலீஸ் சம்பந்தமான பொது விஷயங்களிலும் சர்க்காருக்கு இக்கமிட்டி ஆலோசனை கூறவேண்டுமென்றும், இக் கமிட்டியின் சிபார்சில்லாமல், ராணுவத்தின் எந்தப் பாகத்தையும் வைத்திருப்பது பற்றியோ அல்லது கட்டுப்பாடு பற்றியோ பார்லிமெண்டில் எவ்விதமான சட்டமும் கொண்டுவரப்படக் கூடாதென்றும் இயற்றுள் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

நவம்பர் மாதத்தில் 4, 5 தேதிகளில், டில்லியில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் நேரு கமிட்டி அறிக்கையை ஆலோசனைக்கு எடுத்துக்கொண்டது. பூரண சுயேச்சையே காங்கிரஸ் லட்சியமென்பதை அது மீண்டும் வெளியிட்டது. அறிக்கையில் வகுப்புகள் சம்பந்தமாகக் குறிப்பிடப்பட்டிருந்த விஷயமும் அங்கீகரிக்கப்பட்டது. பொதுவாக கமிட்டியிலடங்கிய விஷயங்களை அக்கூட்டம் ஒப்புக்கொண்டது.

## சட்ட சபை வேலை

இப்பொழுது மீண்டும் சட்ட சபை வேலையைப்பற்றி சற்று குறிப்பிட வேண்டி யிருக்கிறது. மெதுவாக காங்கிரஸ் சட்ட சபை அங்கத்தினர்களிடையில் பகிஷ்கார உணர்ச்சியே வலுவடைந்து வந்தது. சர்க்கார் சட்ட சபையிலாக்காவிலிருந்து சட்ட சபைத்தலைவர் காரியாலயத்தைப் பிரிப்பது பற்றி சபையில் தீவிரமான விவாதம் நடந்து கொண்டிருந்தது. சிம்லா சர்க்கார் உள்நாட்டு இலாக்கா, பிரஸிடெண்ட் படேல் வேலையையும் அவர் கூறிய முடிவுகளையும் கேவலப்படுத்துவதற்குச் செய்யப்படும் சதியை மறைத்துவைப்பதாக "பயோனீர்" பத்திரிகை, பகிரங்கமாக சர்க்கார்மீது குற்றஞ் சாட்டியது. சட்ட

சபை அங்கத்தினர்களிடை யிவ்விதம் பேசப்பட்டு வரும் விஷயத்தைத் தாங்களும் கேட்டதாக கட்சித் தலைவர்களாலும் இக்குற்றச் சாட்டிற்கு பலம் அளிக்கப்பட்டது. பிரஸிடெண்டை அவமதிப்பது, பார்லிமெண்டையும் எந்த வழக்கத்தையும் அவமதிப்பதாகும். இவ்விஷயம் தமது கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டபொழுது இந்திய சர்க்கார் இந்திய மக்களிடம் மன்னிப்புக் கோரவேண்டுமென லார்டு இர்வின் சிறிதும் தயக்கமின்றிக் கூறினர். உள்நாட்டு அங்கத்தினர் சர் ஜேம்ஸ் கிரிரார் மன்னிப்புக் கோர பண்டித நேருவால் அது அங்கீகரிக்கப்பட்டது.

சட்ட சபை விஷய அட்டவணையில் வைக்கப்பட்டிருந்த அடுத்த முக்கியமான விஷயம் ரிசர்வ் பாங்கி மசோதா, பொதுஜனப் பாதுகாப்பு மசோதா, தங்கச் செலாவணி. ரிசர்வ் பாங்கி மசோதா சம்பந்தமாக நடைபெற்ற போராட்டம் பெரும் போராட்டங்களிலொன்று. ஒவ்வொரு படியிலும் மசோதாவில் அநேக மாறுதல்கள் செய்யப்பட்டன. ஸ்ரீ சீனிவாசய்யங்கார் பிரேரணையின்மீது பங்குத்தரகர்கள் பாங்கியை யமைக்க சர்க்கார் ஒப்புக்கொண்டனர். யாவும் சரியாக நடந்துவருவதாகத் தோன்றியது. ஆனால் சில முக்கியமான விஷயங்களி லேற்பட்ட மாறுதலைக்கண்டு சர்க்கார் பீதி யடைந்து இம் மசோதாபற்றி மேல்கொண்ட நடவடிக்கை யெடுப்பதில்லையெனவும், புதிய மசோதா கொண்டுவரவேண்டுமெனவும் நிச்சயித்தனர். சபை முன்பு கொண்டுவரப்பட்ட எந்த மசோதா சம்பந்தமாகவும் முக்கியமான மாற்றங்கள் செய்யப்படவேண்டுமாயின், அம்மசோதா வாபஸ்வாங்கப்பட்டு திருத்தியமைக்கப்பட்டபடி புதிதாகக் கொண்டுவரப்பட வேண்டுமென, காமன்ஸ் சபைத் தலைவரால் கூறப்பட்ட முடிவுப்பிரகாரம் பிரசிடெண்ட் மாறுதல் செய்ய அனுமதி மறுத்துவிட்டார். இங்கிலமையில் சர்க்கார் பழைய மசோதாவை யொட்டி, மேற்கொண்ட நடவடிக்கை யெடுப்பதில்லையெனத் தீர்மானித்தனர். ஆகவே மசோதா நாள் குறிப்பிடப்படாமலேயே ஒத்திவைக்கப்பட்டது.

காங்கிரஸ் கட்சியால் ஆட்சேபிக்கப்பட்ட மற்றொரு மசோதா பொதுஜனப் பாதுகாப்பு மசோதாவாகும். அன்னியர்கள்மீது அமல் நடத்தப்படுமென வெளிப்படையாகக் கூறப்பட்டிருப்பினும், இந்தியர்கள் மீதே அது பிரயோ

கிக்கப்படுமென்பதில் மக்களுக்குச் சந்தேக மேற்படவில்லை. விவாதத்திற்குப் பின் மசோதா பற்றிவாக்கெடுக்கப்பட்டது. சாதகமாகவும் பாதகமாகவும் வாக்களித்தவர் தொகை சமமாக விருந்தது. பிரஸிடெண்ட் மசோதாவிற்கு விரோத மாக வாக்களித்தார். மசோதா கைவிடப்பட்டது.

## கல்கத்தா காங்கிரஸ்

வருங்கால முன்னேற்றத்திற்குரிய வழிகாட்ட நேரிட்டதால், தேசிய மகாசபை முக்கியமான கூட்டங்களில் கல்கத்தாவில் கூடிய காங்கிரஸ் மகாசபைக் கூட்டம் ஒன்றாகும். இதுவே பண்டித மோதிலால்நேரு இதன் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதற்குரிய காரணம். மேலும் சர்வகட்சி மகாநாட்டு முடிவைக் காங்கிரஸ் முன்பு கொண்டுவந்து அங்கிகரிக்க வேண்டியிருந்தது.

கல்கத்தா காங்கிரஸின் விசேஷ அம்சமென்னவெனில், நியூயார்க்கிலிருந்து ஸ்ரீமதி சரோஜினி நாயுடு, ஸ்ரீஸன்-யெட்-ஸென், எம். ரோமையின் ரோலண்டு, பாரசீக அபேத வாதக்கட்சி, நியூஸிலாண்டு பொதுவுடமைக் கட்சி, மனித உரிமைச் சங்கம் உள்பட வெளிநாடுகளிலிருந்து தனிப்பட்டவர்களிடமிருந்தும், ஸ்தாபனங்களிடமிருந்தும் வாழ்த்துச் செய்திகள் ஏராளமாகக் கிடைத்தன.

தொண்டர்களின் தளகர்த்தரென்ற முறையில் பாபு சுபாஷ் சந்திர போஸ் ராணுவ உடை தரித்திருந்தது, காங்கிரஸ் மகாசபையின் கட்சிக்கு விசேஷ உயர்வளித்தது. இந்தியாவின் கதியை யொட்டிச் சர்க்காருக்கு இறுதிக் கடிதமொன்று விடப்பட்டதைத் தவிர வழக்கமான முறையிலேயே தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. யுத்த அபாயத்தைப்பற்றிய தீர்மானம் இக்காங்கிரஸில் மீண்டும் நிறைவேறியது. அகில ஆசியா ஐக்கியக் கட்சி யொன்றமைக்கவும் யோசிக்கப்பட்டது. இந்திய சமஸ்தானங்களுக்குப் பொறுப்பாட்சி யளிக்கப்பட வேண்டுமெனக் கோரப்பட்டது. இந்திய சமஸ்தானங்களை யொட்டி கல்கத்தாவில் நிறைவேறிய தீர்மானம் முக்கியமானது. அதையாதாரமாகக் கொண்டு நாடெங்கும் விசேஷக் கிளர்ச்சி நடந்தேறியது. அத் தீர்மானம் வருமாறு :—

" சமஸ்தானங்களில், பிரதிநிதித்துவ ஸ்தாபனங்களை அடிப்படையாகக் கொண்ட பொறுப்பாட்சியைக் கொண்டு

வரவேண்டுமெனவும், கூட்டங்கூட்டும் உரிமை, வாக்கு சுதந்திரம், பத்திரிகை சுதந்திரம், தனிப்பட்ட மனிதர், சொத்து, பாதுகாப்பு போன்ற அடிப்படையான பிரஜா உரிமைகளுக்கு உத்தரவாதமளித்து, உடனே பிரகடனங்கள் வெளியிடவோ அல்லது சட்டங்களியற்றவோ வேண்டுமெனவும், இந்த காங்கிரஸ் மகாசபை இந்திய சமஸ்தான மன்னர்களை வற்புறுத்துகிறது.''

சர்க்காருக்கு விடப்பட்ட இறுதிக் கடிதத்தையொட்டித் தீர்மானமொன்றும் நிறைவேற்றப்பட்டது. அது வருமாறு :—

"இந்த காங்கிரஸ் சர்வகட்சி மகாநாட்டுக் கமிட்டியின் அறிக்கையில் சிபார்சு செய்துள்ள அரசியல் அமைப்பை, இந்தியாவின் அரசியல் வகுப்புப் பிரச்னைகளைத் தீர்ப்பதில் விசேஷ உதவியளிப்பதென, அதை வரவேற்பதுடன், அதன் சிபார்சுகளில் உண்மையான ஒற்றுமை நிலவி வருவதைக் கண்டும் அக் கமிட்டியைப் பாராட்டுகிறது. சென்னை காங்கிரஸில் நிறைவேற்றிய பூரண சுதந்திரம் சம்பந்தமான தீர்மானத்தை, இது அங்கீகரிக்கையில், கமிட்டியால் தயாரிக்கப்பட்ட அமைப்பை, நாட்டிலுள்ள முக்கியமான கட்சிகளின் விசேஷ பெரும்பாலான ஆதரவை, அது காட்டுவதால், அரசியல் முன்னேற்றத்தில் அதைப் பெரும் படியாக அங்கீகரிக்கிறது.

அரசியல் நிலைமையிலேற்படும் நெருக்கடிகளுக்குட்பட்டு, இவ்வமைப்பு பிரிட்டிஷ் பார்லிமெண்டால் 1929-ம் வருடம், டிசம்பர் மாதம், 31-ம் தேதிக்கு முன்போ அல்லது அன்றோ, பூரணமாக அங்கீகரிக்கப்படின், இந்த காங்கிரஸ் அதை ஒப்புக்கொள்ளும். ஆனால் அந்தத் தேதிக்குள் அது அங்கீகரிக்கப்படாவிடிலோ, அல்லது முன்னதாகவே அது நிராகரிக்கப்படிலோ வரி கொடாமலிருக்கும்படி சிபார்சு செய்வதுள்பட, தீர்மானிக்கப்படும் இதர முறையிலும் இந்தக் காங்கிரஸ் சாத்வீக சட்ட மறுப்பு இயக்கத்தை நடத்தும்.''

சுமார் ஐம்பதினாயிரம் தொழிலாளர்கள், ஆர்ப்பாட்டம் செய்வதற்காக அணிவகுத்து வந்து, தேசீயக் கொடியை வணங்கி, காங்கிரஸ் பந்தலில் இரண்டு மணி

நேரமிருந்து, இந்தியாவின் சுதந்திரத்தை யாதரித்துத் தீர்மானமியற்றி, வெளியேறியதும் ஞாபகத்திற் கொள்ளக் கூடியது.

## வருங்காலத் திட்டம்

வருங்காலத்தில் மேற்கொள்ளப்படுவதற்குத் திட்ட மொன்றும் இந்தக் காங்கிரஸில் வகுக்கப்பட்டது.

பூரண மதுவிலக்கிற்காக, மதுபானக் கடைகளை மறியல் செய்வதும், அந்நிய நாட்டுத் துணியை பகிஷ்கரித்து, கதர் அபிவிருத்திக்கு ஊக்கமளிப்பதும், மக்களிடை வெளிப்படையான குறைகள் காணப்படும் இடங்களில் சாத்வீக நடவடிக்கை யெடுப்பதின் மூலம், அக்குறையை நிவர்த்திக்க முயல்வதும், காங்கிரஸ் கமிட்டியால் நிர்ணயிக்கப்படும் நிர்மாணத் திட்டத்தை நிறைவேற்றுவதில் சட்ட சபை காங்கிரஸ் அங்கத்தினர்கள் தங்கள் காலத்தை செலவழிக்கவேண்டு மென்பதும், தேசீயப் புனருத்தாரண வேலையில் ஸ்திரீகள் தங்களுக்குரிய பாகத்தை யேற்று நடத்த ஊக்கமளிப்பதும், சமூகக் குறைகளை நீக்க முயல்வதும், தீண்டாமையை யொழிப்பது இந்துக்கள் கடமை யெனவும், அதற்குக் கூடுமான முறைகளில் நடவடிக்கை யெடுப்பதும், நகரத் தொழிலாளர்களிடையும், கிராமப் புனருத்தாரணத்திற்கும் உழைக்க தொண்டர்படை சேர்ப்பதும் காங்கிரஸ் வேலைத் திட்டமாகும். மேலே கண்ட திட்டத்தை நிறைவேற்றுவதற்காக, ஒவ்வொரு காங்கிரஸ் வாதியும், தனது வருமானத்திலோர் பாகத்தை காங்கிரஸ் நிதிக்கு அளிக்க வேண்டுமெனவும் எதிர்பார்க்கப்படுவதாகக் குறிப்பிடப்பட்டது.

ஏகாதிபத்திய எதிர்ப்புச் சங்கத்திலிருந்து காங்கிரஸின் பிரதிநிதியாக வந்திருந்த சகோதர பிரதிநிதி மிஸ்டர் டபிள்யூ. ஜி. ஜான்ஸ்டோன் என்பவரைக் கைதி செய்து விசாரணையின்றி நாடு கடத்தியதைக் கண்டித்தும், காங்கிரஸ் சர்வதேச சம்பந்தம் வைத்துக்கொள்வதைத் தடுப்பதற்காக சர்க்கார் வேண்டுமெனவே இவ்விதம் நடந்து கொண்டனரெனக் கருதுவதாகவும் நிறைவேற்றப்பட்ட தீர்மானம், இந்த காங்கிரஸின் முக்கியமான தீர்மானங்களிலொன்றாகும்.

இதன் மத்தியில் கல்கத்தா காங்கிரஸில் நிறை வேற்றப்பட்ட விசேஷ முக்கியமான தீர்மானத்தைப்பற்றிச் சிறிது குறிப்பிடவேண்டி யிருக்கிறது. அத் தீர்மானம் மூன்று கட்சியினரிடை யேற்பட்ட சமரசத்தின் முடிவாகும். பண்டித ஜவஹர்லால் நேருவும், பாபு சுபாஷ் சந்திர போசும், இத் தீர்மானத்திற்கு தனித்தனி திருத்தப் பிரேரணைகள் கொணர்ந்தனர்.

பண்டித ஜவஹர்லால் நேருவின் பிரேரணை வருமாறு:—

(1) "பூரண சுதந்திரமே இந்திய மக்களின் லட்சியமென அறிவித்த சென்னை காங்கிரஸின் முடிவை இந்தக் காங்கிரஸ் ஆதரிப்பதுடன், பிரிட்டிஷ் சம்பந்தம் ஒழியும் வரை உண்மையான சுதந்திரம் இராதென அபிப்பிராயப் படுகிறது.

(2) வகுப்பு வேற்றுமையைத் தீர்ப்பதற்காக லட்சுமணபுரியில் கூடிய சர்வ கட்சி மகாநாட்டால் செய்யப் பட்ட சிபார்சுகளை இந்த காங்கிரஸ் அங்கீகரிக்கிறது.

(3) தேசாபிமானத்துடன் செய்த வேலைகளுக்காக இந்த காங்கிரஸ் நேரு கமிட்டிக்கு நன்றி செலுத்துவதுடன், பூரண சுதந்திரத்தை யொட்டிய காங்கிரஸ் தீர்மானத்திற்கு யாதொரு பாதகமுமின்றி அரசியல் துறையில் நேரு கமிட்டி சிபார்சுகள் பெரிய படியாகுமென அபிப் பிராயப்படுகிறது. அதன் ஒவ்வொரு விவரத்திற்கும் தன்னைக் கட்டுப் படுத்திக் கொள்ளாமல் பொதுவாக அவற்றை ஒப்புக்கொள்கிறது."

பாபு சுபாஷ் சந்திர போஸ் கொணர்ந்த திருத்தப் பிரேரணை முதல் இரண்டிலும் ஒத்திருப்பதில் மூன்றுவது பாராவில் மட்டும் சிறிது மாறுபட்டிருக்கிறது. அது வருமாறு:—

"இந்த காங்கிரஸ், நேரு கமிட்டியின் தேசாபிமான வேலைகளைப் பாராட்டுகையில், சிபார்சு செய்யப்பட்ட அரசியலமைப்பின் அடிப் படையாக குடியேற்ற நாட்டு அந்தஸ்தை ஒப்புக்கொள்ளவில்லை. அறிக்கையிலடங்கிய இதர சிபார்சுகள் அரசியல் முன்னேற்றத்திற்கு ஒரு படியெனவும் அபிப்பிராயப்படுகிறது. ஒவ்வொரு விவரத்திற்கும் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ளாமல் பொதுவாக அவற்றை ஒப்புக்கொள்கிறது."

## காந்திஜியின் சம்பந்தம்

இவ் விரு திருத்தப் பிரேரணைகளிலும், கடைசியில் முடிவிற்கு வந்த சமரசத் தீர்மானத்திலும், ஆதித் தீர்மானத்தில், வேண்டிய நடவடிக்கைகளெடுப்பதற்காக வைசிராய்க்கு இத்தீர்மானத்தை அனுப்ப தலைவருக்கு அதிகாரங் கொடுக்கப்பட்டிருக்கிறதென விருந்த பாகம் நீக்கிவிடப்பட்டது. காந்திஜி, இது விட்டுவிடப்பட்டதை யொட்டி, அரிய பிரசங்க மொன்று செய்தார். அதுபற்றி விசேஷமாகக் குறிப்பிடுமுன் காந்திஜி, கல்கத்தாவிற்கு வரும்படி நேரிட்டதை யொட்டி நாம் குறிப்பிட வேண்டும். அகமாதாபாத் காங்கிரஸிற்குப் பின், 1922-ம் வருடம் மார்ச்சு மாதத்தில் அவர் கைதி செய்யப்பட்டதும், 1922-ம் வருட கயா காங்கிரஸ், 1923-ம் வருடம் செப்டம்பர் மாதம் டில்லியில் கூடிய விசேஷ காங்கிரஸ், 1923-ம் வருட காக்கிநடா காங்கிரஸ், ஆகிய காங்கிரஸ்களில் காந்திஜி, பிரசன்னராகயில்லை யென்பது ஞாபகத்திற் கொள்ளத்தக்கது. அதன் பின் 1924-ம் வருட பெல்காம் காங்கிரஸிற்கு விடுதலை யடைந்ததும் அவர் தலைமை வகித்தார். கான்பூர் காங்கிரஸில் பாட்னா முடிவுகளை நிறைவேற்றுவதற்காகவே கலந்து கொண்டார். பின்னர் அவர் ஒரு வருட மௌன விரதத்தை மேற்கொண்டார். அவ்விரதம் கோஹத்தியில் அவரால் பூர்த்தி செய்யப்பட்டது. கோஹத்தி காங்கிரசில் காந்திஜி தீவிரமாக எடுத்துக் கொண்டார். சென்னை காங்கிரஸில் அவர் முற்றிலும் சம்பந்தம் வைத்து கொள்ளவேயில்லை. ஆகவே பூரண சுயேச்சை தீர்மானம் அதில் நிறைவேற்றப்பட்டது. அவர் கல்கத்தா காங்கிரஸில் கலந்துகொள்வது சந்தேகமாக விருந்தது.

முப்பத்தாறு குதிரைகள் பூட்டப்பட்ட வண்டியில் சிறப்பாக வரவேற்கப்பட்ட பண்டித மோதிலால் நேரு, தாம் சிக்கலான நிலைமையிலிருப்பதை உணர்ந்து கொண்டார். இவ்வித நிலைமையில், உடனே கல்கத்தாவிற்கு வரும்படி மோதிலால்ஜி, காந்திஜிக்கு மும்முறை தந்தி யடித்தார். எப்பொழுதும், இணங்கும் சுபாவமுடைய காந்திஜி, கல்கத்தாவிற்கு விரைந்து வந்து அதில் தீவிரமாகக் கலந்து கொண்டார்.

சமரசத் தீர்மானத்தில் வைசிராயைப்பற்றிக் குறிப்பிடும் பிரிவு, விட்டுவிடப்பட்டதை யொட்டிப் பேசிய காந்திஜி குறிப்பிட்டதாவது:—

"இந் நடவடிக்கையின் பொருளின்ன வென்பதை நான் அறிவேன். இத் தீர்மானத்தைப்பற்றி நாங்கள் ஒன்றும் அறியோம் என, எவரும் கூறும்படி விட நான் விரும்பவில்லை. ஆனால் இது, பிரிட்டிஷ் சர்க்காரால், ஏகாதிபத்திய சர்க்காரால், வைசிராயால், இந்தியாவின் கதியை நிர்ணயிப்பவர்களெனச் சொல்லப்படுபவர்களால் ஆலோசனை செய்யப்படவேண்டிய தொன்று. அதற்காகவே இத் தீர்மானம் தயாரிக்கப்பட்டது."

இப்பிரிவு சேர்க்கப்படாததில் காந்திஜி உண்மையாகவே வருந்தினார். ஆதி தீர்மானத்தில் மற்றொரு மாறுதலும் செய்யப்பட்டது. அதில் இரண்டு வருட காலம் கொடுக்கப்பட்டிருந்ததை முடிவாகச் செய்யப்பட்ட தீர்மானம் ஒரு வருடமாக்கி விட்டது. இதை யொட்டி காந்திஜி குறிப்பிட்ட விஷயம், இங்கு மீண்டும் குறிப்பிடத்தக்கது. அதாவது, "நமது கழுத்தில் பூட்டப்படும் நுகத்தடி மிகப் பளுவானதாகவும், நெருக்கமானதாகவும் இருக்கும். ஏனெனில் 1921-ம் வருடத்திலும் நன்றாக ஆலோசனை செய்யப்பட்டது. நமக்குள் நம்பிக்கையும், ஊக்கமும், வகுப்பு ஒற்றுமையும் ஏற்படுத்த நமக்கு அதிக காலம் வேண்டியிருக்கிறது. மூன்றாவது குறிப்பிடப்பட்டது வெறுங் காகிதத்திலேயே யுள்ளது, இதயத்திலில்லை. நேரு அறிக்கையை நமது போராட்டத்தின் ஒர் பாகமாகக் கொள்ளவேண்டும்."

## சமூக பகிஷ்காரம்

தேசிய ஊழியரைத் தாக்குபவர்களோ, அல்லது கமிஷனுடன் ஒத்துழைப்பதில் தீவிர பாகம் எடுத்துக் கொள்பவர்களோ சமூக பகிஷ்காரம் செய்யப்பட வேண்டுமென, ஒரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. லட்சுமணபுரியில் நிகழ்ந்த சம்பவங்களின் விளைவே யிதுவாகும். பண்டிட் ஜவஹர்லால் அடிக்கப்பட்டபோது, பண்டித மோதிலாலும், டாக்டர் பெஸண்டும், சமூக பகிஷ்காரம் செய்யும்படி அறிவித்தனர்.

நாடெங்கும் இளைஞரியக்கம் எழுந்தது இவ் வருடத்தில் யாவற்றிலும் முன்னிற்கும் அம்சமாகும். இளைஞர் சங்கங்கள், மாணவர் சங்கங்கள், எங்கும் அமைக்கப்பட்டன. முக்கியமாக பம்பாயிலும் வங்காளத்திலும் இவ் வியக்கம் விசேஷ வலுப்பெற்றிருந்தது. சென்ற ஆகஸ்ட் மாதம், ஹாலண்டு, ஈயூடில் நடைபெற்ற உலக இளைஞர் காங்கிரஸிற்கு, இந்த ஸ்தாபனங்களால் பிரதிநிதிகள் அனுப்பப்பட்டனர். சைமன் கமிஷன் பகிஷ்கார ஆர்ப்பாட்டங்களில், இளைஞர்களால் விசேஷ பாகம் எடுத்துக் கொள்ளப்பட்டது. லட்சுமணபுரியில், போலீஸ் தடியடியால் பெரிதும் துன்புற்றவர்கள் அவர்களே யாவர்.

சர்வகட்சி மகாநாடுபற்றி, ஈண்டு ஒரு வார்த்தை குறிப்பிடவேண்டும். வருந்தத்தக்க முறையில் அதன் முயற்சி தோல்வியுற்றது. மகமதியர்களைத் தவிர இதர சிறுபான்மை சமூகத்தினர் ஒவ்வொருவராக வந்து வகுப்புப் பிரதிநிதித்துவத்தைப்பற்றிக் கண்டித்துச் சென்றனர். இங்கிலாந்திலிருந்து திரும்பிய ஜனாப் ஜின்னா, நேரு அறிக்கையைப் பலமாகத் தாக்கிப் பேசினார். விரைவில் முஸ்லீம்களாலும் பகைமை காட்டப்பட்டுவிட்டது. சர்வகட்சி மகாநாட்டுக் கமிட்டியால் சமர்ப்பிக்கப்பட்ட உப அறிக்கையிலிருந்து, நேரு அறிக்கை பலவிதமாகக் கண்டிக்கப்பட்டதென நாம் அறிகிறோம். முடிவில் கல்கத்தாவில் கூட்டப்பட்ட விசேஷக் கூட்டத்தில், காந்திஜி, அதை நாள் குறிப்பிடாமலேயே ஒத்திவைக்க வேண்டுமென பிரேரித்து, அறிக்கை புதைக்கப்பட்டது.

கல்கத்தா காங்கிரஸ், காங்கிரஸை காந்திஜியிடம் மீண்டும் சரணடையச் செய்தது. யௌவன இந்தியா, தீவிரமாக முன்னேறிக் கொண்டிருந்தது. பண்டித மோதிலால், தம்மால் இதை தாங்கமுடியாதென உணர்ந்தார். காங்கிரஸ் காந்திஜியிடம் மீண்டும் திரும்பிவந்தது. ஐரோப்பாவிற்கு வரும்படி காந்திஜி அழைக்கப்பட்டார். பண்டித மோதிலாலும் அநுமதி கொடுத்தார். ஆனால் இவ் வருடம் தாம் போகமுடியாதென்று காந்திஜி கூறி

விட்டார். 1929-ம் வருடம் பிப்ரவரி மாத முதல் வாரத்தில் அவர் கூறியதாவது :—

" காங்கிரஸ் முன்பு நிர்மாணத் தீர்மானமொன்றைக் கொணர்ந்து, யாவருடைய ஆதரவும் பெற்ற பின்னர், இப்பொழுது ஐரோப்பாவிற்குப் போனால், நான் கை நழுவ விட்டவனுவேன். பெரும் திட்டமென என்னால் மதிக்கப் படுவதை அமல் நடத்துவதற்குரிய வழிகளை நான் யோசிக்க வேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக, அடுத்த வருடப் போராட்டத்திற்கு, அது எந்த உருவைப் பெறினும், நான் என்னைத் தயாராக்கிக் கொள்ளவேண்டும்."

1930-ம் வருடம் பிப்ரவரி மாதத்தில் நாட்டிற்கு நேர்ந்ததை இப்பொழுது காண்போம்.

# நான்காம் பாகம்

## அத்தியாயம் 1

### போருக்கு ஆயத்தம்

1928-ம் வருஷத்தில் பண்டித மோதிலால் நேருவின் தலைமையின் கீழ் கல்கத்தாவில் கூடிய காங்கிரஸ், இன்னும் ஒரு வருஷகாலத்திற்குள்ளாகப் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் இந்தியாவின் ஏகோபித்த கோரிகைக்கு இணங்கி, குடியேற்ற நாட்டந்தஸ்தை வழங்க ஒருப்படா விட்டால் பெரிதும் சுயேச்சையையே லக்ஷியமாகக் கொண்டு காங்கிரஸ் வேலை செய்யுமென்றும், இத்துறையில் பரிபூரண சுயேச்சையை ஏற்படுத்துவதற்காக சட்டமறுப்பு இயக்கமும் தோற்றுவிக்கப்படு மென்றும் தீர்மானித்துக் கலைந்த தல்லவா? அதன்படியே மகாத்மா காந்தி, 1930-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் தேதி வரையில் பொறுத்துப் பார்த்தார். கவர்ன்மெண்டார் தங்கள் கொள்கையில் சற்றும் இரக்கம் காட்டாததால், ஏற்கனவே தாம் அறிவித்திருந்த படி காந்திஜி, லாகூர் காங்கிரஸில் பூரண சுயேச்சைக் கொடியை உயர்த்தினர். கல்கத்தா காங்கிரஸுக்குப் பிறகும் லாகூர் காங்கிரஸுக்கு முன்னரும் நாட்டில் நடந்த நிகழ்ச்சிகளே இவ்வத்தியாயத்தில் தொகுத்துத் தரப் பட்டிருக்கின்றன.

தந்தைக்குப் பிறகு தனயனைக் காங்கிரஸின் அரியாசனத்திலமர்த்திய பெருமை 1929-ம் வருஷத்திற்கே உரியது. அதுவரையில் காங்கிரஸ் அக்கிராசன பீடத்திலமர்ந்த எல்லோரையும்விட இவ் வருஷக் காங்கிரஸ் தலைவரே அதிபால்யர். அவர்தான் இந்தியாவின் இளஞ் சிங்கமாகிய பண்டித ஜவஹர்லால் நேரு; எனவே காங்கிரஸின் செங்கோல் இவ் வீரர்திலகத்தின் கையில் சென்றதை நோக்கினும் இவ் வருஷம் விசேஷ மகிமை வாய்ந்தது தான்.

பொது ஜன பந்தோபஸ்து மசோதா, டில்லி சட்ட சபை வெடிகுண்டு வீச்சு, நிர்மாண முறைக்கான பல்வேறு கமிட்டிகள், மீரத் சதி வழக்கு விசாரணையும் தீர்ப்பும், மகாத்மாவின் அகில இந்திய யாத்திரை, இது சம்பந்தமாகக் கல்கத்தாவில் நடந்த ருசிகரமான சிறு சம்பவம், காந்திஜிக்குக் கிடைத்த ஒரு ரூபாய் அபராத தண்டனை, அடக்குமுறை அமுல், அடக்குமுறைத் தாண்டவம், ஸாண்டர்ஸ் கொலை வழக்கு, யதீந்திரநாத் தாஸ், பொங்கி விஜயா இவர்களின் பட்டினியும், வீரச் சாவும், இர்வின் பிரபு இங்கிலாந்திலிருந்து திரும்புதல், அவரது அறிக்கையும், அதன் விளைவும், இராஜப்பிரதிநிதி — தலைவர்கள் சந்திப்பும், ஏமாற்றமும், வைஸ்ராய் வண்டியும் வெடி குண்டும், லாகூர் காங்கிரஸ் தீர்மானங்கள் இவையே இவ்வாண்டின் முக்கிய நிகழ்ச்சிகள். இவ்வளவையும் இனி விரிவாக ஆராய்வோம்.

1928-ம் வருஷம், செப்டம்பர் மாதம், இந்தியா சட்ட சபையில் கொண்டுவரப்பட்ட பொதுஜன பந்தோபஸ்து மசோதா சபைத் தலைவரின் ஓட்டால் நிராகரிக்கப்பட்டது உங்களுக்கு நினைவிருக்கலாம். இவ் வருஷம் ஜனவரி மாதத்தில் அதே மசோதா மீண்டும் சபை முன்னர் ஆஜர் செய்யப்பட்டது. இது ஏப்ரல் மாதத்தில் கவனிக்கப் பட்டபொழுது, 11-ந் தேதி, தலைவரான ஸ்ரீயுத வித்தல்பாய் படேல் இதைப்பற்றிய விவாதத்தை அனுமதிக்க மறுத்து விட்டார். ஏப்ரல் 2-ந் தேதியன்று அவர் கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டார் :—

“ நாம் முன்பு கூடிக் கலைந்ததற்குப்பிறகுச் சில விஷயங்களைக் கவனிக்க நேரிட்டது. பொதுஜன பந்தோபஸ்து மசோதாவைப்பற்றி அவ்வப்பொழுது எதிர்க்கட்சித் தலைவர் செய்த பிரசங்கங்களை யெல்லாம் வாசித்தேன்; இது தவிர மீரத் சதி வழக்கு 31 எதிரிகள் மீதும் சர்க்கார் தரப்பில் தாக்கல் செய்யப்பட்ட புகார்களையும் படித்தேன். இவற்றின் பயனாக நான் என்ன முடிவிற்கு வந்திருக்கிறேனென்றால், பொதுஜன பந்தோபஸ்து மசோதாவின் அடிப்படையான கருத்துகளும், மீரத் வழக்கு எதிரிகள்மீது தொடுக்கப்பட்டுள்ள வழக்கின் கருத்துகளும் ஒன்றே என்பதுதான். கோர்ட்டில் விசாரணையிலிருந்து வரும் எந்த விஷயத்தைப்பற்றியும் இந்தச் சபையில் எத்

தகைய கேள்வியும் கேட்கப்படக் கூடாதென்பதும், எந்த விதமான நிர்மானமும் பிரேரிக்கப்படக் கூடாதென்பதும் சபையின் விதிகளிலடங்கி யிருக்கின்றன வென்பதை அங்கத்தினர்கள் அறிவர்.

## தர்ம சங்கடம்

ஆகவே இந்த விதியை யொட்டிப் பார்த்தால், மீரத் சதிவழக்கைப்பற்றிப் பிரஸ்தாபிக்காமல் இம் மசோதா வைப்பற்றி எவ்விதமாக விவாதிக்க முடியும் என்பது தான் எனக்கு விளங்கவில்லை. அப்படியே மேற்படி விஷயத்தைப் பற்றி ஒன்றும் பிரஸ்தாபிக்காமல் மசோதாவை விவாதிக்க முற்பட்டால் அது உண்மையான விவாதமாகாது. தவிர அம்மசோதாவைச் சபை ஏற்றுக்கொண்டால் அதிலடங்கி யுள்ள அடிப்படையான தத்துவங்களேயும் ஏற்றுக்கொண்ட தாகும்; அன்றி அதை நிராகரித்துவிட்டால் அதன் அடிப் படையான கருத்துகளேயே நிராகரித்ததாகும்; இவ்விரண் டில் எது நடந்தாலும் அது மீரத் வழக்கைப் பாதிப்பதாக விருக்கின்றது.

இந்நிலேயில் நான் எப்படி மசோதாவை அனு மதிக்க முடியும்? ஆகவே கவர்ன்மெண்டாருக்கு ஒரு யோசனே சொல்லுகிறேன்; அதாவது மீரத் சதி வழக்கு விசாரணே முடியும் வரையில் இம்மசோதாவை ஒத்திவைக் கட்டும்; இல்லேயேல், இம்மசோதாவே அவர்களுக்கு முக்கிய மானதாக விருந்தால் மீரத் வழக்கை வாபீஸ் வாங்கிக் கொள்ளட்டும்.”

சபைத் தலேவரின் யோசனேகளே சர்க்கார் ஏற்காததால் “சபையின் ஒழுங்கு முறைக்கு விரோதமானது” எனக் கூறி ஸ்ரீயுத வித்தல்பாய் படேல் மேற்படி மசோதாவை அனு மதிக்க மறுத்துவிட்டார்.

## வைசிராய் பதில்

இதற்கு மறுதினம் இராஜப்பிரதிநிதி, ராஜாங்க சபையிலும், இந்தியா சட்ட சபையிலும் பிரசங்கங் கள் நிகழ்த்தினர். பொதுஜன பக்தோபஸ்து மசோதா மூலம் உத்தேசிக்கப்பட்ட அதிகாரங்களே மேலும் தாமத மில்லாமல் பெறவேண்டியது கவர்ன்மெண்டாரின் கடமை

என அவர் அப்பொழுது குறிப்பிட்டார். உடனே அவர் அவசரச்சட்ட மொன்றைப் பிறப்பித்தார். அது கண்டு ஸ்ரீயுத படேல் எவ்விதம் பொறுத்துக் கொண்டிருக்க முடியும்? "இந்த அவசரச் சட்டம் என்னுடைய அதிகாரத்தைக் கொண்டு நான் செய்த உத்திரவையே கண்டிப்பதாக விருக்கின்றது; அப்பொழுது என்னுடைய அதிகாரத்துக்கு என்ன மதிப்பு இருக்கிறது?"

என்ற தொனியில் அவர் வைசிராய்க்கு ஓர் கடிதம் விடுத்தார். அதற்கு வைசிராய் பதிலளிக்கையில், சபைத் தலைவரின் முடிவைப்பற்றிக் குறை கூறவோ அல்லது அதைக் கண்டிக்கவோ தமக்கு உத்தேசமில்லை யென்றும், சபையின் கௌரவத்தைக் காப்பதில் தலைவருக்கு எவ்வளவு சிரத்தை யிருக்கிறதோ அவ்வளவு சிரத்தை தமக்கு மிருப்பதாகவும் குறிப்பிட்டார்.

இது நிற்க, இந்தச் சட்டசபையின் இக் கூட்டத்தில் தான் ஓர் நாள், சபையின் நடவடிக்கைகளைப் பார்ப்பதற்காக வெளியிலிருந்து வந்து உட்கார்ந்திருந்தவர்களின் இடத்திலிருந்து இரண்டு வெடிகுண்டுகள் வீசியெறியப்பட்டு, அவை உத்தியோக அங்கத்தினர்கள் அமர்ந்திருந்த பெஞ்சிகளினிடையே விழுந்து வெடித்தன; இதனால் பலருக்குக் காய மேற்பட்டது.

இது சம்பந்தமாக பகத்சிங், தத்தர் என்ற இரு வாலிபர்கள் கைது செய்யப்பட்டு, தீவாந்திர சிக்ஷை விதிக்கப் பட்டனர். எனினும் இவ்விஷயம் மிகவும் முக்கியமானதானதால் இதன் இறுதியான முடிவை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கே விட்டுவிடுவதென தீர்மானிக்கப் பட்டது. ஜுலை மாதம் 26-ந் தேதியன்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் விசேஷக் கூட்ட மொன்றை அலகாபாத்தில் கூட்டுவதென முடிவாகியது.

## கமிட்டி மேல் கமிட்டி

இராஜாங்க சபை அங்கத்தினரில் நால்வரும், கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்பட்ட இந்தியா சட்டசபை அங்கத்தினரில் ஐவரும் அடங்கிய மத்திய கமிட்டியானது ஸைமன் கமிட்டி "ஸப்த ரிஷிகளு"டன் தேசத்தில் சஞ்சாரம் செய்து கொண்டிருந்தது. இன்னும் எத்தனையோ சிறு சிறு

கமிட்டிகளும் இத்துடன் வேலை செய்து வந்தன. சர் ஹார்கோர்ட் பட்லரைத் தலைவராக கொண்ட இந்திய சமஸ்தானக் கமிட்டி 1929-ம் வருஷம், ஏப்ரல் மாதத்தில் தன்னுடைய அறிக்கையை பார்லிமெண்டுக்குச் சமர்ப்பித்தது. சர் பிலிப் ஹார்ட்டாக் என்பவரின் தலைமையில் கல்விக் கமிட்டி இந்தியா முழுதும் சுற்றுப் பிரயாணம் செய்து பிரிட்டிஷ் இந்தியாவில் ஏற்பட்டுள்ள கல்வி அபி விருத்தியை ஆராய்ந்து வந்தது.

ஸைமன் கமிஷனின் நடவடிக்கைகளோ ஏப்ரல் 14-ந் தேதியுடன் முடிந்துவிட்டன. இக்கமிஷனின் அங்கத்தினர்கள் இங்கிலாந்து போய்ச் சேர்ந்தவுடனேயே, பொதுத் தேர்தலில் கன்சர்வேடிவ் கவர்ன்மெண்டு முறியடிக்கப்பட்டு தொழில் கட்சி அதிகாரத்துக்கு வந்தது. இது மே மாதத்தில் நடந்தது. மிஸ்டர் ராம்ஸே மாக்டனால்டு பிரதம மந்திரியாகவும், மிஸ்டர் வெட்ஜ்வுட் பென் என்பவர் இந்தியா மந்திரியாகவும் நியமிக்கப்பட்டனர்.

இந்திய வைஸ்ராயான இர்வின் பிரபு ஜூன் மாத இறுதியில் நான்கு மாத ரஜாவில் இங்கிலாந்து சென்றார்; ராஜீயப் பிரச்னையைத் தெளிவு படுத்தி, ஸைமன் கமிஷன் விசாரணையின் பயனாக இந்தியாவுக்கு வழங்கப்படக்கூடிய எத்தகைய சீர்திருத்தத் திட்டத்தையும் வகுக்க பார்லிமெண்டு முற்படுவதற்கு முன்பு இந்திய ராஜீயவாதிகளின் எல்லாப் பிரிவினரின் ஒத்துழைப்பையும் பெற வழிதேடும் உத்தேசத்துடனேயே இர்வின் பிரபு சீமைக்குச் சென்றார். இவர் இந்தியாவிற்குத் திரும்பி வந்ததும் தமது கொள்கையை விளக்கி வெளியிட்ட அறிக்கையை நாம் பிறகு கவனிப்போம்.

கல்கத்தா காங்கிரஸுக்குப் பின்னர் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டி காங்கிரஸ் திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவருவதற்காகப் பல்வேறு சப் கமிட்டிகளை நியமித்தது. இங்ஙனமாக அந்நியத் துணி பகிஷ்காரம், மது விலக்கு, தீண்டாமை விலக்கு, காங்கிரஸ் சபைகளை நிறுவுதல், தொண்டர் படைகளைத் திரட்டுதல், ஸ்திரீகளுக்குண்டான குறைகளை நீக்குதல் இவ் வேலைகளுக்காகத் தனித்தனிக் கமிட்டிகள் நியமிக்கப்பட்டன. ஸ்திரீகள் சம்பந்தமான சப் கமிட்டி செவ்வையாக வேலை செய்யவேயில்லை.

தொண்டர் வேலை சம்பந்தமான சப் கமிட்டி நல்ல வேலை செய்தது. தொண்டர் படைகளைப் பெருக்குவது சம்பந்தமாக இது பல முக்கியமான சிபார்சுகளை நிறை வேற்றி வைத்தது. இவற்றில் முக்கியமானது ஹிந்துஸ் தானி சேவாதளத்தை வலுப்படுத்த வேண்டுமென்பதே.

அன்னியத் துணி பகிஷ்காரக் கமிட்டியின் தலைவர் மகாத்மா காந்தி என்று சொன்னாலேயே, அது எங்ஙனம் வேலை செய்திருக்கும் என்பதை நண்பர்கள் எளிதில் ஊகித்துக்கொள்ள முடியும். ஸ்ரீயுத ஜெயராம்தாஸ் தௌலத்ராம் இக்கமிட்டியின் காரியதரிசியாகவிருந்தார். இப்பகிஷ்கார வேலையில் மும்முரமாக ஈடுபடுவதற்காகவே இவர் பம்பாய் சட்ட சபையில் தாம் வகித்து வந்த அங்கத் தினர் பதவியையும் ராஜிநாமா செய்தார். பகிஷ்காரத் துறையில் ஏராளமான துண்டுப் பிரசுரங்கள் வெளியிடப் பட்டன. வருஷ ஆரம்பத்தில் நாடெங்கும் அந்நியத் துணிகள் தீயிலிட்டுக் கொளுத்தப்பட்டன.

மதுவிலக்குக் கமிட்டியின் பூரா பொறுப்பையும் வகித்து வந்தவர் நமது தமிழ்நாட்டுத் தலைவரான ஸ்ரீமான் சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார். மதுவிலக்கு விஷயத்தில் இவருக்குண்டான பிரத்யேக சிரத்தையும், ஊக்கமும் இணையற்றவை. தமது அறிவையும், ஆற்றலையும் இவர் இந்த வேலையில் ஈடுபடுத்திச் சலி யாது உழைத்தார். மதுவிலக்கு வேலை முக்கியமாக தென்னாட்டிலும், கூர்ஜரத்திலும்தான் நடைபெற்று வந்தன. இதனால் விசேஷ பலன்கள் ஏற்பட்டன. இப் பொழுது மதுவிலக்கு இயக்கம் சர்வதேசங்களின் கவனத் தையும் ஈர்த்திருப்பதற்குக் காரணம் அப்பொழுது நடந்த ஜிரூதமான வேலையே. சென்னைச் சர்க்கார்கூட மதுவிலக்குப் பிரசாரத்திற்காக நான்கு லக்ஷம் ரூபாய்களை ஒதுக்கி வைத்தது. ஸ்ரீமான் ராஜகோபாலாச்சாரியார் அகில இந்திய மதுவிலக்குச் சங்கத்தின் காரியதரிசியாக நியமிக்கப்பட்டார்; இச்சங்கத்தாரால் வெளியிடப்பட்ட "ப்ரொஹிபிஷன்" (மதுவிலக்கு) என்னும் மாசிகைக்கும் அவர் ஆசிரியரானார்.

தீண்டாமை விலக்கு வேலையைக் கவனித்து வந்தார் ஸ்ரீயுத ஜமுனலால் பஜாஜ். இந்தத் துறையில் அவர் விசேஷ பிரயாசையுடன் வேலையை செய்தார். இதன்

பலனாக பொது மக்கள், தாழ்த்தப்பட்ட வகுப்பினர் விஷயத்தில் தாங்கள் இழைத்துவரும் அநீதிகளையும், கொடுமைகளையும் நன்கு உணர்ந்து கொண்டனர். மக்களிடையே ஏற்பட்ட இப் புதிய விழிப்பின் காரணமாக எண்ணிறந்த கோயில்கள் ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட்டன. தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் உபயோகத்திற்காக கமிட்டியார் ஏராளமான கிணறுகளை வெட்டி, பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தினர்.

இது ஒருபுறமிருக்க 1929-ம் வருஷம், மார்ச்சு மாதம், 20-ந் தேதியன்று பம்பாய், பஞ்சாப், ஐக்கிய மாகாணம் இவ்விடங்களில் இந்தியன் பீனல் கோட் சட்டம் 121-A பிரிவின்படி நூற்றுக் கணக்கான தேச சேவகர்களின் வீடுகள் சோதனை யிடப்பட்டன. இது தவிர அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி அங்கத்தினர்களில் எட்டு பேர்கள் கைது செய்யப்பட்டனர். இன்னும் பலரும் கைதியாயினர். இவர்களெல்லோரும் மீரத் நகருக்குக் கொண்டுவரப்பட்டு, அங்கு விசாரணை ஆரம்பமாகியது. இதற்குத்தான் மீரத் சதியாலோசனை வழக்கு எனப் பெயர். இவர்கள் யாவரும் பொது வுடமைப் பிரசாரத்தில் ஈடுபட்டிருந்ததாக இவர்கள்மீது குற்றஞ் சாட்டப்பட்டது. இவ் வழக்கு விசாரணை இந்திய மக்களின் கவனத்தை மட்டுமல்லாமல் உலக மக்களின் சிரத்தையையும் ஈர்த்தது. எதிரிகளின் சார்பில் வாதாடுவதற்காக மத்தியக் கமிட்டி ஒன்று நியமிக்கப்பட்டது. பிரபல காங்கிரஸ் வாதிகளில் பலரும் இதில் அங்கம் வகித்தனர். ஏற்கனவே கூறியபடி, காங்கிரஸ் காரியக் கமிட்டியானது தன் வழக்கத்தையும் மீறி, இதற்காக 1,500 ரூபாய் நன்கொடை யளித்தது. இவ்வழக்கின் பூர்வாங்க விசாரணை 1929-ம் வருஷம், ஜூலை மாதம், 12-ந் தேதி ஆரம்பமாகியது. இது சில மாதங்கள் நடந்து, வருஷ இறுதியில்தான் முடிவடைந்தது.

## காந்திஜிக்கு 1 ரூபாய் அபராதம்

மேற்கொண்டு சில விஷயங்களைக் கவனிக்குமுன் காந்தியைப்பற்றிய ஓரிரு சம்பவங்களைக் குறிப்பிட வேண்டியதவசியம். காந்திஜி தமது இந்தியப் பிரயாணத்தை முடித்துக்கொண்டு மார்ச்சு மாத மத்தியில்

கல்கத்தா வழியாக பர்மாவுக்குச் சென்றுகொண்டிருந்தார். அப்பொழுது அவர் கல்கத்தாவில் தங்கி அன்னியத் துணிகளுக்குத் தீ வைக்கும் வைபவத்தில் கலந்துகொண்டார். இதற்காகக் கவர்ன்மெண்டார் அவரை, ஆபாசங்கள் செய்வது சம்பந்தமான சட்டத்தின் கீழ்க் கைது செய்தனர். அதிகாரிகளின் தடை உத்தரவை மீறி அவர் அன்னியத் துணிகளைக் கொளுத்தியதாக அவர்மீது குற்றஞ் சாட்டப்பட்டது. கடைசியில் அவருக்கு ஒரு ரூபாய் அபராதம் விதிக்கப்பட்டது. இச்சம்பவத்தைப் பற்றி நாம் என்ன செய்வது? சர்க்கார் தனது அற்ப புத்தியைக் காட்டிக்கொள்ளவே இச்சம்பவத்தைச் சிருஷ்டிக் கொண்டது என்றுதான் நாம் சொல்லமுடியும். இதற்குப் பிறகு மகாத்மாஜி பர்மாவில் சுற்றுப்பிரயாணம் செய்துவிட்டு இந்தியாவிற்குத் திரும்பி ஆந்திர தேசத்தில் யாத்திரையைத் தொடங்கி, ஆறு வாரங்களில் கதரியக்கத்துக்காக 2 லக்ஷத்து எழுபதாயிரம் ரூபாய் வசூலித்தார்.

1929-ம் வருஷம், மே மாதம் பம்பாயில் நடைபெற்ற அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் மிகுந்த விசேஷமானதாகும். இந்தியா சட்ட சபையின் ஆயுள் காலம் நீடிக்கப்படுமென கவர்ன்மெண்டார் அறிவித்திருந்தனர். இதுபற்றி காங்கிரஸ் ஏதாவது தீவிர நோக்கு கொள்ளவேண்டியதாயிற்று. இம்மட்டோ! தேசத்தில் எங்கு பார்த்தாலும் அடக்குமுறை தாண்டவமாடி நின்றது. தேச பக்தர்களில் பலரை அரசாங்கம் கைது செய்தது. காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினரில் ஒருவரான ஸ்ரீயுத புலுசு சாம்பமூர்த்தியும் அதிகாரவர்க்கத்தின் இவ் வடக்குமுறை அமுலுக்கு ஆளானார். பஞ்சாப் மாகாணத்தில்தான் அடக்குமுறை மிகுந்த கோரமாகத் தலைவிரித்தாடிற்று. இது, டிஸம்பரில் காங்கிரஸ் மகாசபையை அங்கு நடக்கவொட்டாமல் செய்துவிடுவதற்கான முயற்சியோ என தேசமக்கள் எண்ணிக் கொதிப்படைந்தனர்.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி இவ் விஷயங்களையெல்லாம் ஆராய்ந்தது. காங்கிரஸ் அங்கத்தினர்களின் விதாசாரத்தைக் குறைக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டன. டில்லி சட்டசபையிலும், மாகாண சட்ட சபைகளிலுமுள்ள காங்கிரஸ் அங்கத்தினர்கள் எடுத்துக்கொள்ள வேண்டிய முறை

கள் விஷயத்தில் தேச நன்மையை முன்னிட்டு என்னென்ன செய்யவேண்டுமோ அவ்வளவையும் செய்ய காரியக் கமிட்டிக்கு பூரா அதிகாரமும் கொடுக்கப்பட்டது. சீன தேசத்தின் அரும் பெருந் தலைவரான டாக்டர் ஸன் யாட் ஸென்னின் மரணச் சடங்கில் பிரசன்னமாகி யிருக்க பூஜ்யர் உத்தமரை நியமிப்பதென்றும், ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் போராடும் சங்கத்தின் ஆதரவில் நடைபெறும் காங்கிரஸுக்கு ஸ்ரீயுத சிவப்பிரசாத குப்தாவைப் பிரதிநிதியாகத் தெரிந்தெடுப்பதென்றும் காரியக் கமிட்டி தீர்மானித்தது.

சட்ட சபையிலுள்ள காங்கிரஸ் அங்கத்தினர்களைப் பொருத்தமட்டில், இந்தியா சட்ட சபையிலும், வங்காளம், அஸ்ஸாம் நீங்கலான ஏனைய மாகாண சட்ட சபைகளிலும் உள்ள அங்கத்தினர்கள், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியோ அல்லது காரியக் கமிட்டியோ வேறுவிதமாக முடிவு செய்யும் வரையிலும் சட்ட சபைக் கூட்டங்களுக்கோ அல்லது அந்தச் சபைகளாலோ அல்லது சர்க்காராலோ நியமிக்கப்படும் கமிட்டிக் கூட்டங்களுக்கோ செல்லக்கூடாதென்றும், இனிமேல் அவர்கள் தங்கள் அவகாசம் பூராவையும் காங்கிரஸ் நிர்மாண திட்டத்தை நிறைவேற்றி வைக்கும் துறையிலேயே செலவிட வேண்டுமென்றும் காரியக் கமிட்டி தீர்மானித்தது.

தேச மகா ஜனங்கள் தங்களது வருமானத்தில் ஒரு குறித்த பகுதியைக் காங்கிரஸ் இயக்கத்திற்காகக் கொடுத்து உதவ வேண்டுமென கல்கத்தா காங்கிரஸ் கேட்டுக்கொண்டிருந்தது. முதலில் 100-க்கு 5-வீதம் பண உதவி புரிய வேண்டுமென உத்தேசிக்கப்பட்டது; பிறகு இது 100-க்கு 2½ வீதமாகவும், அதற்கடுத்த படியாக 100-க்கு 2-வீதமாகவும் குறைக்கப்பட்டது. காங்கிரஸ் அங்கத்தினர்களில் பணக்காரர்களாக உள்ளவர்கள் இவ்விஷயத்தில் சற்று அசிரத்தை காட்டினதால் இதை அவர்களின் உசிதா உசிதத்திற்கே விட்டுவிடுவதென யோசிக்கப்பட்டது. வசூலான தொகைகளின் விவரம் ஜூலை மாதம் காங்கிரஸ் வெளியீட்டில் பிரசுரிக்கப்பட்டது. இத்துறையில் தேசம் சொற்ப ஆதரவே அளித்த தென்பதை இங்கு குறிப்பிட வேண்டும்.

## தலை தெரியாத அடக்குமுறை

ஆகஸ்டு மாதத்திய நிலைமை மற்ற மாதங்களைக் காட்டிலும் எவ்விதத்திலும் மேன்மையானதாக இல்லை. எங்கு பார்த்தாலும் பிரபல தலைவர்கள் கைது செய்யப்பட்டு வந்தனர். பஞ்சாபில் சர்தார் மங்களசிங்கும், மௌலானா ஜபர் அலிகானும், ஏற்கனவே ஏழு வருஷ காலத்தைச் சிறையில் கழித்திருந்த மாஸ்டர் மேத்தா சிங்கும், ஆந்திர தேசத்தில் ஸ்ரீமான் அன்னபூரணய்யாவும் கைதியாகி விட்டனர்; டாக்டர் சத்தியபாலும் கைதியானார். இவருக்கு இரண்டு வருஷ கடின காவல் தண்டனை விதிக்கப்பட்டது.

பஞ்சாப் மாகாணத்தில் அமுலிலிருந்த அடக்குமுறைக்கு எல்லையே கிடையாது; வெளியிலிருந்தவர்களையெல்லாம் பிடித்துச் சிறைக்குள் தள்ளிக்கொண்டிருந்ததுடன் திருப்தியடையாமல் அதிகார மமதை கொண்டதுரைத்தனம் ஏற்கனவே சிறைக் கம்பிகளுக்குப் பின் உழன்று கொண்டிருந்த தேச வீரர்களைப் பலவிதத்திலும் கொடுமையாக நடத்த வாரம்பித்தது. தன் மதிப்புள்ளவர்கள் இத்தகைய கொடுமைகளை எவ்வளவு காலத்திற்குத்தான் சகித்து கொண்டிருப்பர்? எனவே பகத்சிங், தத்தர் முதலிய பல சிறையாளர் உண்ணாவிரதத்திலிறங்கி விட்டனர்.

இவர்கள் இத்தகைய விரதத்தை மேற்கொண்டு ஏற்கனவே ஆறு வாரங்களாகி விட்டன. இவ்விருவருக்கும் தீவாந்திர சிக்ஷை விதிக்கப்பட்ட விவரம் முன்னரே அறிவிக்கப்பட்டது. மீரத் சதி வழக்கைத் தவிர இவர்கள் லாகூர் சதி வழக்கிலும் எதிரிகளாகவிருந்தனர்; ஆனால் தத்தர் மாத்திரம் பின்னர் இக்குற்றத்தினின்றும் விடுவிக்கப்பட்டார். 1928-ம் வருஷம், செப்டம்பர் மாதம், 17-ந் தேதியன்று மாலை 4 மணிக்கு லாகூரைச் சேர்ந்த வாலிப போலீஸ் அதிகாரியாகிய மிஸ்டர் சாண்டர்ஸ் என்பவர் கொலை செய்யப்பட்டது சம்பந்தமாகவே இவ்வழக்கு தொடுக்கப்பட்டது. தங்கள் குறைகளைத் தீர்த்துக்கொள்ளவும், சிறைச்சாலைகளில் கைதிகள் கேவலம் மிருகங்களைப் போலல்லாமல் மனிதர்களாகவே பாவித்து நடத்தவேண்டுமென்பதற்காகவுமே.

பகத்சிங்கும், தத்தரும் உண்ணாவிரதம் அனுஷ்டிக்கலாயினர். இக்கோஷ்டியில் ஸ்ரீயுத யதீந்திரநாத் தாஸ் என்பாரும் ஒருவர். சிறைச்சாலைகளில் நிறத்திமிர் தலை விரித்தாடுவதாகவும், இந்தியர் ஒரு மாதிரியாகவும், ஐரோப்பியர் வேறு விதமாகவும் நடத்தப்படுகின்றன ரென்றும், இந்த வித்தியாசம் ஒழியவேண்டுமென்றும் கூறி ஸ்ரீயுத யதீந்திரர் உண்ணாவிரதம் கிடந்தார். உண்ணாவிரதம் என்றால் ஒரு நாளா, இரண்டு நாளா? அறுபத்து நான்கு நாட்களுக்குப் பட்டினி! தமது பிராணனை அர்ப்பணம் செய்தாவது சிறைச் சாலையிலுள்ள நிறத் துவேஷத்தைச் சர்க்காருக்கு வலியுறுத்த வேண்டுமென அவர் கங்கணம் பூண்டார். நாளுக்கு நாள், மணிக்கு மணி, நிமிஷத்திற்கு நிமிஷம், விநாடிக்குவிநாடி வீரர் யதீந்திரர் அங்கம்அங்கமாக, உருப்பு உருப்பாக, அணு அணுவாகத் தமது உடலை ஒடுக்கினார்; இரத்தத்தை வற்றினார்; வாழ்வை வெறுத்தார்; சுகத்தை அறுத்தார்; சூக்ஷ்ம நிலையைக் கண்டறிந்தார். பிராணனைச் சிறிது சிறிதாக உடலைவிட்டுப் பிரித்தார். பாரதத்தாயின் திவ்ய பாத கமலங்களில் தமது ஜீவனை அர்ப்பணஞ் செய்தார். அதிலேயே சாந்தியையும், அமைதியையும் கண்டார்.

பர்மா தேசத்தில் பூஜ்ய உத்தமர் என்று ஒருவர்; இவர் ஓர் பௌத்த சந்நியாசி. ராஜத்துவேஷம் சம்பந்தமாகக் குற்றஞ் சாட்டப்பட்டு, 21 மாதங்களுக்குக் கடின காவல் தண்டனை விதிக்கப்பட்டிருந்த இவர், அத்தனை மாதங்களையும் சிறையில் கழித்து விட்டு 1929-ம் வருஷம் பிப்ரவரி மாதம், 28-ந் தேதியன்றுதான் வெளியே வந்தார். ஆனால் விடுதலையடைந்து ஐந்து வாரங்கள் கூட ஆகவில்லை. அதற்குள் அரசாங்கம் அவர்மீது . மீண்டும் ராஜத்துவேஷக் குற்றத்தைக் கண்டதும் ஏப்ரல் 4-ந்தேதியன்று அவரைக் கைது செய்து ஆறு வருஷக்காலத்திற்குத் தீவாந்திர சிக்ஷை விதித்தது; இந்தத் தண்டனை பிறகு மூன்று வருஷங்களாக குறைக்கப்பட்டது. இவர் கைது செய்யப்பட்டுச் சிறையில் தள்ளப்பட்டவுடனேயே உண்ணா விரதத்தை ஆரம்பித்து விட்டார். தம்மைச் சிறையில் செவ்வையாக நடத்த வேண்டுமென்றும், விசேஷ தினங்களில் சந்நியாசி உடுப்பாகிய தமது மஞ்சள் வஸ்திரத்தை அணிந்து கொள்ளத் தமக்கு உரிமை

இருக்கவேண்டு மென்றும் இவர் கோரினர். இவைகள் மறுக்கப்படவே இவர் உண்ணு விரதத்திலிறங்கினர். வீரர் யதீந்திரரைப் போலவே இவரும் 164 நாட்களுக்குப் பட்டினி கிடந்து, பின்னர் உயிர் நீத்தார். இவ்விரு தியாகிகளின் பெயர்களும் இந்தியாவின் சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படும் என்பதில் ஐயமில்லை.

பஞ்சாபில் கைதிகள் உண்ணுவிரத மிருந்தது கவர்ன் மெண்டைச் சில கஷ்டங்களுக் குட்படுத்தியது. அதாவது அவர்கள் பட்டினி கிடப்பதன் காரணமாக உடல் தளர்ச்சி யடைந்து கோர்ட்டுக்கு அழைத்துச் செல்ல முடியாத நிலைமையிலிருந்ததால் வழக்கு விசாரணை தடைபட்டுவிடு மல்லவா? எனவே இச்சங்கடத்தினின்றும் விடுபடுவதற்காக சர்க்கார் ஒரு யோசனையைக் கண்டு பிடித்தனர். அதாவது செப்டம்பர் 12-ந்தேதியன்று அவர்கள் இந்திய சட்டசபை முன்பொரு மசோதாவை ஆஜர் செய்தனர். தாங்களாகவே தங்கள் உடலை அசக்தத்திற் குட்படுத்திக் கொள்ளும் எதிரி களின் வழக்கை மாஜிஸ்திரேட்டுகள் எதிரிகள் இல்லா மலேயே விசாரிக்கலாம் என்பது தான் இம்மசோதாவின் கருத்து. இம்மசோதா விசேஷ விவாதத்திற்கு ஆஸ் பதமாக விருந்ததால் இதைச் சபை அங்கத்தினர்கள் யாவரது பார்வைக்கும் விடவேண்டுமென்ற சபையின் கோரிக்கையை கவர்ன்மெண்டார் ஏற்றுக்கொண்டனர். ஆனல் அவசர நிலைமை ஏற்படுமானுல் தங்கள் அதிகாரத் திற்குட்பட்ட எந்த முறையையும் எடுத்துக்கொள்ள உரிமையை வைத்துக்கொண்டனர். சீக்கிரத்தில் இது சம்பந்தமாகக் கவர்னர் ஜெனரல் அவர்கள் அவசரச் சட்ட மொன்றை ஏற்படுத்திக்கொண்டார். "லாகூர் சதிவழக்கு விசாரணை அவசரச் சட்டம்" என இதற்குப் பெயர்.

## தலைமைப் பதவி யாருக்கு?

லாகூர் காங்கிரஸுக்குத் தலைவர் தெரிந்தெடுக்கப் பட்ட வகை வெகு ருசிகரமானது. பத்து மாகாணங்கள் காந்திஜியின் பெயரைச் சிபார்சு செய்திருந்தன; ஐந்து மாகாணங்கள் ஸ்ரீயுத வல்லபாயின் பெயரைக் குறிப்பிட் டிருந்தன; மூன்று மாகாணங்கள் பண்டித ஜவஹர்லாலைக்

கோரின. ஆகவே கிரமப்படி மகாத்மாஜி காங்கிரஸ் அக்கி ராசனராகத் தெரிந்தெடுக்கப்பட்டார். ஆனால் அவர் இப்பதவியை வகிக்க விரும்பாமல், ராஜிநாமா செய்து விட்டார். எனவே வெறொருவரை தெரிந்தெடுக்க வேண்டிய அவசிய மேற்பட்டது. இதற்காக செப்டம்பர் மாதம் 28-ந் தேதியன்று லக்ஷ்மணபுரியில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூடியது. காங்கிரஸ் தலைமைப் பதவி விஷயத்தில் தேசம் பெருத்த கவலையிலாழ்ந்தது. காங் கிரஸ் ரதத்தை வெற்றிகரமாக ஓட்டிச் செல்லக்கூடியவர் மகாத்மா ஒருவர்தான் என தேசம் நம்பியது. சட்ட சபைகளிலிருந்த காங்கிரஸ்வாதிகள் அவற்றில் நம்பிக் கையை யிழந்துவிட்டனர். மோதிலால்ஜி சட்ட சபைத் திட்டத்தில் வெறுப்புக் கொள்ளலானார். காங்கிரஸ் வாதி கள் தங்கள் சட்ட சபை ஸ்தானங்களை ராஜிநாமா செய்தே தீரவேண்டும் என்ற நிலைமை ஏற்பட்டிருந்தது. சரி, சட்ட சபைகளை உதறித் தள்ளிவிட்டுப் பிறகு என்ன செய்வது? இது அடுத்த கேள்வியாக விருந்தது. சாத்வீக சட்ட மறுப்புதான் மார்க்கம், என்ற பதிலே எங்கும் கிடைத்தது.

## காந்திஜி ஏற்க மறுக்கிறார்

அப்படியாயின் இச்சட்டமறுப்புப் போரில் நமக்குத் தலைவராக விருக்க வல்லவர் யார்? ராஜீயவானிடை போர் மேகங்கள் குமுறிக்கொண்டும் சமயத்தில் தைர்யமாகவும், திறமையாகவும் தேசமக்களுக்கு வழிகாட்டி அவர்களை அழைத்துச் செல்லக்கூடியவர் யார்? காந்திஜியைத் தவிர வேறு யார் இருக்கிறார்கள்? ஆதலால்தான் தேசம் காங் கிரஸ் தலைமைப் பதவியை அவருக்களித்தது. லக்ஷ்மண புரியில் நடந்த அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டத் திலும் தலைவர்கள் மகாத்மாவையே அக்கிராசனம் வகிக்கும் படி மீண்டும் வற்புறுத்தினர். ஆனால் காந்திஜியோ ஒரு இளஞ் சிங்கமே இந்தத் தடவை காங்கிரஸ் கிரீடத்தைத் தரிக்கவேண்டுமென்று அபிப்பிராயப்பட்டார்.

## ஜவஹருக்குக் கிரீடம்

வல்லபாயும் மகாத்மாவிற்கும், ஜவஹருக்குமிடையே நிற்க இஷ்டப்படவில்லை. கடைசியாகப் பண்டித ஜவஹர் லால் நேரு காங்கிரஸ் அக்கிராசனராகத் தேர்ந்தெடுக்கப்

பட்டார். இவரைவிடப் பால்யர் இதுவரையில் காங்கிரஸ் பீடத்திலமர்ந்ததில்லே.

அக்டோபர் மாதம் விசேஷ சம்பவங்களேக் கண்டது. இங்கிலாந்து சென்றிருந்த இர்வின் பிரபு இம்மாதம் 25-ந் தேதி இந்தியா வந்து சேர்ந்தார். உடனே இவர் ஓர் அறிக்கையை வெளியிட்டார். இது முன்னமேயே எதிர்பார்க்கப்பட்டதாதலால் நவம்பர் மாதம் முதல் தேதியன்று பண்டித மோதிலால் நேரு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டமொன்றை டில்லியில் கூட்டினுர்.

இராஜப்பிரதிநிதியின் அறிக்கையை எதிர்பார்த்தும், அது சம்பந்தமாக எல்லாக் கக்ஷினரும் ஒன்று சேர்ந்து ஏதாவது செய்யவேண்டியிருந்தால் அதற்குத் தயாராகவும் காங்கிரஸ் தலேவர்களேத் தவிர இதர கக்ஷித் தலேவர்களும் இச்சமயத்தில் டில்லியில் கூடியிருந்தனர்.

இர்வின் பிரபு தமது அறிக்கையில் என்ன சொல்லப் போகிருர் என்பதைக் கவனிக்குமுன், இங்கிலாந்துக்குப் புறப்படவிருக்கையில் அவர் என்ன சொன்னுர் என்பதைத் தெரிந்துகொள்வது உசிதமாகும். " இந்தியாவிலுள்ள கடுமையான விஷயங்களேப்பற்றி மன்னர்பிரானுடன் விவாதிக்கக்கூடிய சந்தர்ப்பங்களே நான் கட்டாயம் தேடுவேன். இந்தியாவின் ராஜீய அபிலாஷைகளேயும் இந்தியாவிலுள்ள பற்பல ராஜீயக் கக்ஷிகளின் நோக்கங்களேயும் நான் எடுத்துக் காட்டுவேன் " என்பதே அது.

## வைஸ்ராய் அறிக்கை

இர்வின் பிரபுவின் அறிக்கை அக்டோபர் மாதம் 31-ந் தேதியன்று வெளி வந்தது. அவர் கூறியதாவது :— ஸைமன் கமிஷன் யாதாஸ்தும், கவர்ன்மெண்டார் இனி தயாரிக்க விருக்கும் திட்டங்களும் பரந்த நோக்கங்களுடன் கூடியவையாக விருந்தால் இப்பொழுது உத்தேசிக்கப்பட்டுள்ள திட்ட முறையை அரசாங்கத்தார் திருத்தித்தான் அமைக்கவேண்டும். கமிஷன் யாதாஸ்தும், இந்திய மத்தியக் கமிட்டியின் அறிக்கையும் பிரசுரமாகி மேற்கொண்டு நடைமுறைகள் எடுத்துக் கொள்ளப்படுவதற்கு முன்பு கூட்டுப் பார்லிமெண்டரி கமிட்டி ஒரு மகாநாட்டை கூட்டிவைக்கும் ; இதில் மன்னர்பிரானின் அரசாங்கத்தார் பிரிட்டிஷ்

இந்தியாவின் பிரதிநிதிகளுடனும், இந்திய சமஸ்தானங்களின் பிரதிநிதிகளுடனும் கலந்து பேசுவார்கள். இறுதியாகக் கவர்ன்மெண்டார் தங்கள் யோசனைகளை பார்லிமெண்டு சபையில் ஆஜர்படுத்துவதற்கு முன்பு எவ்வளவு அதிகமான ஒற்றுமையையும், ஏகோபித்த அபிப்பிராயத்தையும் உண்டுபண்ணிக் கொள்ளலாமோ அவ்வளவையும் பெறவேண்டுமென்பதே இம் மகாநாட்டின் நோக்கம்.

"1917-ம் வருஷம் ஆகஸ்டு மாதத்தில் வெளியிட்டதொரு அறிக்கையில் கவர்ன்மெண்டார் பிரிட்டிஷ் கொள்கையின் போக்கை விளக்கினர். பிரிட்டிஷ் கவர்ன்மெண்டின் ஓர் அம்சமாக இந்தியாவில் நாளாவட்டத்தில் பொறுப்பாக்ஷியை ஏற்படுத்தும் நோக்கத்துடன் சிறிது சிறிதாக அங்கு சுய ஆக்ஷி ஸ்தாபனங்களை நிருவுவதே தங்கள் கொள்கை என அவர்கள் அறிவித்தனர். 1919-ம் வருஷம் பார்லிமெண்டு சபை வகுத்த திட்டங்களின்படி, இந்தியாவும் தமது ஏனைய குடியேற்ற நாடுகளுடன் சம அந்தஸ்திலிருக்கவேண்டு மென்பதே மன்னர்பிரானின் நோக்கம் என்பது வெளிப்படை. இதனையே வற்புறுத்தி பிரிட்டிஷ் மந்திரிகளில் எத்தனையோ பேர்கள் எவ்வளவோ தடவை பேசி யிருக்கிறார்கள். ஆனால் இது சம்பந்தமாக கிரேட் பிரிட்டனிலும் சரி, இந்தியாவிலும் சரி பலருக்குச் சந்தேகங்களிருந்து வருவதை முன்னிட்டு விஷயங்களைத் தெளிவு படுத்துமாறு மன்னர்பிரான் அரசாங்கத்தார் எனக்கு அதிகாரம் கொடுத்திருக்கிறார்கள். 1917-ம் வருஷத்திய அறிக்கையின்படி, இந்தியாவின் ராஜீய முன்னேற்றம் குடியேற்ற நாட்டந்தஸ்துதான் என்பதைத் தெளிவாக்க வேண்டுமென்பது தான் அவர்களது விருப்பம்."

## தலைவர்களின் கோரிக்கை

இவ்வறிக்கை வெளிவந்த காலையில் பண்டித மாளவியா, ஸர் தேஜ் பகதூர் சப்ரூ, டாக்டர் பெஸண்ட் முதலியவர்கள் டில்லியில்தானிருந்தனர். காங்கிரஸ் காரியக் கமிட்டி அங்கத்தினருமிருந்தனர். எல்லாத் தலைவர்களும் ஒன்று கூடி இராஜப்பிரதிநிதியின் அறிக்கையைப்பற்றி ஆலோசித்த பிறகு, பிரிட்டிஷ் அரசாங்கத்தின் உள்ளன்பைப்

பாராட்டுவதாகக் கூறி ஒரு கூட்டு அறிக்கையை வெளியிட்டனர். இவ்வறிக்கையில் மேலும் அவர்கள் சொன்னதாவது :—

" இந்தியாவின் தேவைகளுக்கேற்ற வகையில் குடியேற்ற நாட்டு ராஜீய அமைப்பு ஒன்றை வகுக்கும் முயற்சியில் கவர்ன்மெண்டாருடன் நாங்களும் ஒத்துழைக்கலாமென நம்பியுள்ளோம். ஆனால் கவர்ன்மெண்டார் இந்தியா ராஜீய ஸ்தாபனங்களிடமிருந்து இத்தகைய ஒத்துழைப்பைப் பெறுவதற்கு முன்னர் அவர்களிடையே போதுமான நம்பிக்கையை உண்டுபண்ணுவதற்காக அவர்கள் சில காரியங்களைச் செய்து, சில விஷயங்களைத் தெளிவாக்க வேண்டியது அவசியமென நாங்கள் கருதுகிறோம்.

சர்க்காரால் உத்தேசிக்கப்பட்டுள்ள மகாநாடு வெற்றிகரமாக நடைபெற வேண்டுமானால் கீழ்க்கண்ட காரியங்கள் நிறைவேற்றி வைக்கப்படவேண்டும் :

1. நாட்டின் ராஜீய நிலைமையில் காணப்படும் கொந்தளிப்பை நீக்கி சமாதானத்தையும், அமைதியையும் உண்டுபண்ணுவதற் கேதுவான சாந்த முறைகளைக் கையாளுதல் ;

2. ராஜீயக் கைதிகளை விடுதலை செய்தல் ;

3. நாட்டிலுள்ள பற்பல ராஜீய ஸ்தாபனங்களின் ஒத்துழைப்பையும், பிரதிநித்துவத்தையும் செவ்வையாக பெறுதல் ; இத்தகைய ஸ்தாபனங்களில் பிரதானமாக விளங்கும் இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபைக்கு விசேஷ பிரதிநிதித்துவ மிருக்கவேண்டும் ;

4. வைசிராயின் அறிக்கையில் குடியேற்ற நாட்டந்தஸ்தைப்பற்றி பிரஸ்தாபித்திருப்பது குறித்து சில சந்தேகங்கள் கிளம்பியிருக்கின்றன. குடியேற்ற நாட்டந்தஸ்தை எப்பொழுது ஏற்படுத்துவது என்பதைப்பற்றி விவாதிப்பதற்காக மகாநாடு கூடப்போவதில்லை என்று நாம் அறிகிறோம் ; இந்தியாவிற்கு குடியேற்ற நாட்டு ராஜீய அமைப்பை வகுக்கவே அது கூடுகின்றது என்பதே எமது கருத்து. புதிய ராஜீய அமைப்பு ஸ்தாபிதமாகும் வரையில் நாட்டின் அரசியலில் இப்பொழுதிருப்பதைவிட இன்னும் அதிக தாராளப் போக்கும் காட்டப்படவேண்டும்; இன்

றைய தினத்திலிருந்தே புதிய சகாப்த்மொன்று ஏற்பட்டு விட்டதை மகா ஜனங்கள் உணருமாறு செய்யப்பட வேண்டும். கடைசியாக வீணே காலம் கடத்தாமல் மகாநாட்டை விரைவில் கூட்டிவைக்க வேண்டும். பிரிட்டிஷ் துரைத்தனத்தின் கொள்கையில் இப்புதிய மாறுதல் ஏற்பட்டதற்குக் காரணம் தொழில் கக்ஷி அதிகாரத்திலிருந்ததுதான் என்பதில் சந்தேக மில்லை.

காங்கிரஸ் வாதிகளின் அபிப்பிராயம் எப்பொழுதும் போல் மாறுபட்டுத்தானிருந்தது. சீமையில் நடக்கப் போகும் மகாநாட்டினால் இந்தியாவிற்குப் பிரமாதமான நன்மை எதுவும் ஏற்பட்டு விடப்போதில்லை என்றே அவர்கள் கருதினர். இதற்கு மாறாக அவர்கள் எண்ணுவதற்கு அனுகுணமான நிலைமையும் நாட்டில் ஏற்படவில்லை. ராஜீயக் கைதிகளின் விடுதலை விஷயத்தில் சர்க்கார் அசிரத்தையாகவே இருந்தனர். 1919-ம் வருஷம் தண்டிக்கப் பட்ட ராணுவச் சட்டக் கைதிகளை விடுதலை செய்து விடுமாறு பஞ்சாப் ஜெயில் கமிட்டியார் சிபார்சு செய்திருந்தனர் ; 1915-ம் வருஷத்திய லாகூர் சதிவழக்குக் கைதிகளையும் விடுவிக்கச் சிபார்சு செய்யப்பட்டிருந்தது. ஸ்ரீயுத சாம்பமூர்த்தியின் விடுதலையைக் குறித்து தொழில் கக்ஷி அங்கத்தினரான மிஸ்டர் பென்னர் பிராக்வே காமன்ஸ் சபையில் பிரஸ்தாபித்தார் ; ஆனால் ஒன்றும் பயனில்லை.

இதற்குள்ளாக தொழில் கக்ஷித் தலைவர்களிடமிருந்து காந்திஜிக்குத் தந்திமேல் தந்தி வந்துகொண்டிருந்தது. இந்தியாவிற்கு உதவிபுரியும் வேலையில் தாங்கள் ஈடுபட்டிருப்பதாகவும், ஆகவே அதற்கு அனுகுணமாக நடந்து கொள்ளுமாறும் அவர்கள் அவரை வேண்டிக்கொண்டனர். நான் ஒத்துழைப்பையே தேடி அலைகிறேன் ; ஆனால் வாயிலிருந்து வெளிவரும் வாக்குக்கு மதிப்புண்டு. கல்கத்தா காங்கிரஸின் தீர்மானத்தை நான் எவ்வளவு உயிராகப் பாவித்து வருகிறேனோ அதேமாதிரித்தான் தலைவர்களின் கூட்டறிக்கையையும் நான் முக்கியமானதாகக் கருதுகிறேன். அதன் ஒவ்வொரு வார்த்தைக்கும் அர்த்தமுண்டு என்பதை நீங்கள் அறிய வேண்டும். இவ்விரண்டும் எந்த விதத்திலும் முரண்பட்டவையல்ல. வாயால் எதையும் சொல்லிவிட்டு ஹிருதயத்தால் அதற்குத் துரோகம் எண்ணுவதை விட அநீதி உலகில் வேறெதுமில்லை.. நிஜமான குடியேற்ற

நாட்டந்தஸ்து கிடைக்கும் போலிருந்தால் அதற்காக நான் காத்துக் கொண்டிருக்கத் தயார்; அதாவது பிரிட்டிஷா ரிடையே ஜமான மனமாறுதலையே நான் கோருகிறேன். இந்தியா ஸ்வதந்திரம் பெற்று, தன் மதிப்புடன் வாழ வேண்டும் என்ற உண்மையான எண்ணம் பிரிட்டிஷாருக்கு இருக்கிறதா என்பதே எனது கேள்வி. இந்தியாவிலுள்ள அதிகாரிகள் தங்களை ஜனங்களின்சேவகர்களாகப் பாவித்துக் கொள்ளுகின்றனரா? இவ்வளவும் உண்மையாயின் பிரிட்டிஷ் அரசாங்கம் தன் கையிலுள்ள துப்பாக்கியைத் தூர வைத்து விட்டு, இந்திய மக்களின் நன்மதிப்பையே பெற்று அரசாளத் தலைப்படும். ஜனங்களின் நன்மதிப்பைப் பெற்று அதன் உதவியால் தாங்கள் பத்திரமுடன் வாழ முடியும் என்பதில் ஆங்கிலேயர்கள் நம்பிக்கை கொண்டிருக் கின்றனரா? அல்லது தங்களது உயிர்களையும் பாதுகாத்துக் கொள்ள அவர்கள் துப்பாக்கிகளும் வெடிகுண்டுகளும் நிறைந்த கோட்டைகளையே நம்பியிருக் கிறார்களா? ஜனங்களின் நன்மதிப்பைப் பெற்று அரசியலை நடத்த அவர்கள் தயாராகவில்லை யென்றால், எனக்குத் திருப்தி யளிக்கக்கூடிய குடியேற்ற நாட்டந்தஸ்தை நான் காணமுடியாது.

## "நான் வேண்டுவது"

நான் மனதில் கொண்டிருக்கும் குடியேற்ற நாட்டந் தஸ்தின் லக்ஷணமே வேறு. நான் விரும்பினாலும் இன்று பிரிட்டிஷ் சம்பந்தத்தை அறுத்துக்கொள்ளுவது சாத்திய மில்லை யாதலால்தான் நான் குடியேற்ற நாட்டந்தஸ்தை ஏற்கத் தயாராக விருக்கிறேன். ஆகவே பிரிட்டனுக்கும் இந்தியாவுக்குமுள்ள சம்பந்த முறையில் நிர்ப்பந்தத்திற்கு எவ்வித இடமுமில்லை.

நான் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்திற்குள்ளிருக்க ஒருப் பட்டால், உலகில் சாந்தத்தையும், அமைதியையும், நல் லுணர்ச்சியையும் நிலைநாட்டும் துறையில் உதவிசெய்ய நான் விழைவதே அதற்குக் காரணம். ஒரு தேசத்தார் இன் னொரு தேசத்தினரைக் கொள்ளையடிப்பதிலும், பிரிட்ட னின் ஏகாதிபத்தியப் பேராசையிலும் நான் பங்கெடுத்துக் கொள்ள முடியாது. ஆகவே இங்கிலாந்திலும், இந்தியாவி

லுமுள்ள எனது நண்பர்கள் என்னுடைய நிலைமையை நன்கு உணர்ந்து கொள்ளவேண்டும்.

தன்னுடைய ஸ்வதந்திரத்தைத் தானே நிலைநாட்டிக் கொள்ளும் வலிமையை இந்தியா இன்னும் பெறவில்லை. ஆகவே இப்பொழுது இந்தத் தேசத்திற்குக் கிடைக்கும் எவ்வகையான ஸ்வதந்திரமும் பிரிட்டிஷாரின் கருணை யினின்றும் பிடிப்பதேயாகும். அத்தகைய கருணையை அவர்கள் இப்பொழுது காட்டுவாராயின் அதில் அதி சயிப்பதற்கு ஒன்றுமில்லை; தாங்கள் முன்பு இந்தியாவிற்கு இழைத்த அநீதிகளுக்கு அதுவே தக்க பிராயச்சித்த மாகும். ஆனால் இந்தியா விடுதலையைப் பெறுவதற்கான காலம் இன்னும் வரவில்லையென்றால்,அதற்காகப் பொறுமை யுடன் காத்திருக்க நான் தயார். அந்த லக்ஷியத்திற்காகவே நான் பாடுபடுகிறேன்; அதற்காகவே நான் உயிர் வைத்துக் கொண்டிருக்கிறேன்."

இந்தியாவைப் பொருத்தமட்டில் இராஜப்பிரதிநிதி தமது அறிக்கை மூலம் பிரமாதமாக எதையும் புரட்டிக் கொடுத்துவிடவில்லை. ஆனால் பிரிட்டிஷார் கண்களுக்கு இது பிரமாதமாகத்தான் பட்டது. ஆகவே பார்லிமெண்டு சபையில் விசேஷ கூச்சல் உண்டாகியது. மிஸ்டர் வெட் ஜ்வுட் பென்னும், இர்வின் பிரபுவும் சொன்னவற்றிற்கான பூராப் பொறுப்பையும் தாமே ஏற்றுக்கொள்ளுவதாகப் பால்டுவின் பிரபு அறிவித்தார். தம்முடைய செய்கையை யும், தமது கவர்ன்மெண்டின் போக்கையும் ஆதரித்துப் பேச பென் சற்றும் பின் வாங்கவில்லை. இந்தியாவுடன் சமரஸமுண்டுபண்ணிக் கொள்ளுவதற்கான கொள்கையை வற்புறுத்துவதில் பிரதம மந்திரி ஈடுபட்டார். காமன்ஸ் சபை அங்கத்தினர் இந்தியாவிற்கு ஆதரவாக விருக்கையில் பிரபுக்கள் சபையினரோ இதற்கு நேர் விரோதமான மனப் பான்மையைக் கொண்டிருந்தனர். இந்தக் கோஷ்டியி னரின் தலைவர் பர்க்கண்ஹெட். ஆனால் காமன்ஸ் சபையில் காப்டென்பென் எடுத்துரைத்தவாறு, பர்க்கெண் ஹெட் பிரபுவுக்கு ஏகாதிபத்தியத்தில் எவ்வித அதிகாரமும் கிடையாது. இப் பிற்போக்குக் கும்பலின் கூக்குரல் எவ் வளவு பலமாக விருப்பினும் மிஸ்டர் பென் தமது கொள்கை யிலேயே விடாப்பிடியாக நின்று, உத்தேசிக்கப்பட்டுள்ள மகாநாடு விரைவில் கூடுமென அறிவித்தார். இந்தியத்

தலைவர்களின் ஏகோபித்த அறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ள விஷயங்களைக் கவனித்தாரா என மிஸ்டர் லாயிட் ஜார்ஜ், மிஸ்டர் பென்னைக் கேட்டார். இராஜப்பிரதிநிதியின் அறிக்கையை அப்படியே அங்கீகரிக்குமாறு மிஸ்டர் லான்ஸ்பரி இந்தியரைக் கேட்டுக்கொண்டார். இந்தியாவிலுள்ள லிபரல் கக்ஷியினர் மகாநாடு என்று கூடுமெனக் காத்திருந்தனர். மகாநாட்டிற்கு அவர்கள் "சர்வகக்ஷி மகாநாடு" அல்லது "வட்டமேஜை மகாநாடு" எனப் பெயரிட்டனர். ஆனால் இர்வின் பிரபு என்னமோ இதை "லண்டன் மகாநாடு" என்று தான் குறிப்பிட்டு வந்தார். காங்கிரஸ் வாதிகளோ சர்வகக்ஷித் தலைவர்களின் கூட்டறிக்கையில் கண்டுள்ள நான்கு நிபந்தனைகளையே வற்புறுத்தினர்.

நவம்பர் மாதம் 16-ந் தேதியன்று சர்வகக்ஷி மகாநாடொன்று அலகாபாத்தில் கூட்டப்பட்டது. இதே சமயத்தில் காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டமும் நடைபெற்றது. எல்லா கக்ஷிகளுக்குள்ளும் ஒற்றுமையை யுண்டு பண்ண விசேஷ முயற்சிகள் செய்யப்பட்டன. நாம் நமது நண்பர்களை ஒன்று திரட்டி, எதிரிகளை எதிர்க்கவேண்டியிருந்தது ; மிதவாதக் கும்பலைப் புறக்கணித்துவிட்டு, தீவிர வாதிகளைச் சாந்தப்படுத்த வேண்டி யிருந்தது. காரியக் கமிட்டி தனது முடிவை அறிவிப்பதற்கு முன்னமேயே இளஞ்சிங்கங்களான ஜவஹரும், சுபாஷும் அக் கமிட்டியில் தாங்கள் வகித்து வந்த பதவிகளை ராஜிநாமா செய்துவிட்டனர். பண்டித மோதிலால் நேருவைச் சாந்தப்படுத்துவது தான் மிகவும் சிரமமாக விருந்தது. பிரிட்டிஷ் கவர்ன் மெண்டாரிடம் அவருக்குச் சிறிதுகூட நம்பிக்கையில்லை. அவர்களது அறிக்கைகளிலும் அவர் நம்பிக்கை கொள்ளவில்லை. சர்வகக்ஷி மகாநாட்டின் முடிவுகளை ஏற்கும்படி அவரைத் தூண்டுவதற்கு வெகுதூரம் சிரமப்படவேண்டியிருந்தது.

## இர்வினுக்கு யோசனை

முன்பு "பயோனீர்" பத்திரிகையின் ஆசிரிய கோஷ்டியிலிருந்த மிஸ்டர் வில்ஸன் என்பார் பத்திரிகைகளுக்கு எழுதிவந்த கட்டுரைகளில் லாகூர் காங்கிரஸுக்கு முன்ன

தாகச் சற்று இணக்கம் காட்டுமாறு இர்வின் பிரபுவுக்கு யோசனை கூறிவந்தார். டாக்டர் சப்ரூ மூலமாக இர்வின் பிரபு பண்டித மோதிலால் நேருவுக்கு அழைப்பனுப்பி டிஸம்பர் மாதம் 15-ந் தேதியன்று தம்மை சந்திக்குமாறு கோரினர். ஆனல் அதே தேதியில் பண்டித நேருவுக்கு லக்ஷ்மணபுரியில் சொந்த ஜோலியிருந்ததன் காரணமாக அன்று அவரால் இர்வினைக் காணமுடியவில்லை. சமீபத்தில் இராஜப்பிரதிநிதி, மகாத்மா காந்தி, பண்டித மோதிலால், பண்டித மாளவியா முதலியவர்களைக் கலந்து பேசுவாரென மிஸ்டர் வில்ஸன் பத்திரிகைகளில் எழுதி வந்தார்.

## வைசிராய் ரெயிலும், வெடிகுண்டும்

டிஸம்பர் மாதம் 15-ந் தேதியன்று தாம் தென்னிந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்யப் புறப்படுவதால் 23-ந் தேதியன்று—எப்படியும் கிறிஸ்மஸுக்கு முன்பு—காந்தியையும், நேருவையும் ஹைதராபாத்தில் சந்திப்பதாக இர்வின் டாக்டர் சப்ரூவுக்குக் கடிதம் விடுத்தார். அதே மாதிரியாக அவர் தமது பிரயாணத்தை முடித்துக்கொண்டு டில்லிக்குத் திரும்பிக்கொண்டிருக்கையில் புதிய டில்லிக்கு ஒரு மைல் தூரத்தில், அதாவது பழைய கோட்டைக்குச் சமீபத்தில், அவரது ரயில் வண்டி வெடிகுண்டு விபத்தொன்றுக் காளாக நேரிட்டது. வைஸ்ராய்க்கு எவ்வித ஆபத்தும் ஏற்படவில்லை; ஆனல் அவரது சாப்பாடு வண்டிக்குச் சேதமுண்டாகியது; அவரது வேலையாட்களில் ஒருவருக்குக் காயமேற்பட்டது.

## காந்தி-இர்வின் சந்திப்பு

23-ந் தேதியன்று இர்வின் தமது மாளிகையை அடைந்தார். அன்றுதான் காங்கிரஸின் சார்பில் காந்திஜியும், மோதிலால்ஜியும் அவரைச் சந்திப்பதென குறிப்பிடப்பட்டிருந்தது. ஆனல் அவர்களிருவரும் வைஸ்ராயின் மாளிகைக்குச் சென்றதும், அங்கு ஜனப் ஜின்னு, டாக்டர் சப்ரூ, ஸ்ரீயுத வித்தல்பாய் படேல் முதலியவர்களும் ஏற்கனவே வந்திருந்ததை அவர்கள் கண்டனர். நண்பர்களுக்குள் மனதை விட்டுப் பேசுவதாகச் செய்யப்பட்டிருந்த ஏற்பாடு போய், தூதுகோஷ்டி யொன்று

இராஜப்பிரதிநிதியைப் பேட்டி காணுவதுபோல் ஆய்விட்டது. எனினும் இர்வின் பிரபு சந்தோஷமாகவேயிருந்தார்.

முதலில் முக்கால் மணி நேரத்திற்கு எல்லோரும் வெடிகுண்டு சம்பவத்தைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர். பிறகு இர்வின் பிரபு ராஜீயப் பேச்சைத் துவங்கினார். "நாம் எங்கிருந்து பேச்சை ஆரம்பிக்கலாம்? எந்த விஷயத்தைப்பற்றிக் கவனிக்கலாம். உங்கள் அறிக்கையைப் பார்த்தேன். அதில் நீங்கள் கண்டுள்ள நிபந்தனைகளை ஒவ்வொன்றாகக் கவனிக்கலாமா?" என்றார் இராஜப்பிரதிநிதி தலைவர்களைப் பார்த்து. ஆனால் காந்திஜி இர்வின் செய்யும் தந்திரத்தை எளிதில் அறிந்துகொண்டு விட்டார். சிறிய விஷயங்களைப்பற்றிப் பேசிவிட்டுத் திரும்பி விடுவதில் அவருக்கு இஷ்டமில்லை. சிறிய விஷயங்களையும் உள்ளடக்கிக்கொண்டுள்ள பெரிய பிரச்னையைப் பற்றி அவர் பிரஸ்தாபிக்க ஆரம்பித்தார்.

"குடியேற்ற நாட்டந்தஸ்தைப்பற்றியே நாம் கவனிக்க வேண்டும். எங்களது அறிக்கையில் எங்கள் கோரிக்கைகளை நாங்கள் தெளிவுபடுத்தி யிருக்கிறோம். வார்த்தைகளைக் குழப்பிப் பேசுவதில் பயனில்லை. எங்கள் கோரிக்கைகள் இறுதியானவையே; இந்தியாவிற்கு குடியேற்ற நாட்டந்தஸ்து அளிக்கப்படும் என்ற உறுதியையே நான் தங்களிடமிருந்து கேட்கிறேன்" என்று ஒரு போடு போட்டார் காந்திஜி. இர்வினுக்கு தூக்கி வாரிப் போட்டது. "பார்லிமெண்டினிடமிருந்து இப்பொழுது எப்படி நாம் அவ்வுறுதியைப் பெறமுடியும்?" என்று இர்வின் குறுக்கிட்டார். "சரி பார்லிமெண்டினிடமிருந்து முடியாதென்றால் மந்திரி சபையினிடமிருந்து பெறுவோமே" என்றார் மகாத்மா. "அது என்னமாக முடியும்? மந்திரி சபையில் முன்னதாகவே தீர்மானிக்க முடியாதே" என்று இராஜப்பிரதிநிதி பதிலளித்தார். "அப்படியாயின் இராஜப்பிரதிநிதி என்ற ஹோதாவில் நீங்கள்தான் உறுதி கூறுங்களேன்" என்று மகாத்மாஜி மடக்கினார். "அதுவும் முடியாத காரியமே; மந்திரி சபையின் கொள்கையை நிறைவேற்றி வைக்கத்தான் என்னால் முடியும். வேறொன்றும் செய்ய வியலாதே" என்று சொல்லி இர்வின் பிரபு கையை விரித்தார். அப்பொழுதும் காந்திஜி விடவில்லை.

"சரி, கிடக்கட்டும்; இர்வின் பிரபு என்ற முறையில் நீங்கள் எங்களுக்கு வாக்குறுதி யளித்து, அதை நிறைவேற்றி வைப்பதற்காகப் பின்னர் போராடுங்களேன்" என்றார் மோஹனதாஸர்.

"அது என்னால் முடியாத காரியம்" என்று பதில் கிடைத்தது. "அப்படியாயின் நாம் மேலும் பேசுவதில் பயனில்லை, நாம் தேசத்தைச் சுயேச்சைப் போருக்குத் தயார் செய்யவேண்டியது தான்" எனச் சொல்லி விட்டு இந்தியாவின் பிரதிநிதி வைஸ்ராய் மாளிகையை விட்டு வெளியேறினார். இந்தச் சம்பாஷணைகள் நடந்து கொண்டிருக்கையில் டாக்டர் சப்ரூவும், ஜனுப் ஜின்னாவும் சும்மா விருந்தார்கள் என்று எண்ணுகிறீர்களோ? அது தான் இல்லை. அவர்களது விஷம வேலை நடந்துகொண்டு தானிருந்தது. காந்திஜிக்கும், மோதிலாலுக்கும் எதிராக அவர்கள்வாதித்தனர். மகாத்மாஜியும், நேருவும்தனிமையில் வைஸ்ராயைக் கண்டு பேசியிருந்தால் பலன் வேறு விதமாக இருந்திருக்கும் என்பது பொது மக்களின் துணிவு.

வைஸ்ராய் மாளிகையிலிருந்து காந்திஜி ஏமாற்றமடைந்து திரும்பியதே எதிர்காலத்தில் நடக்க விருந்த ஒரு பெரும் போருக்கு விதையாக விருந்தது. காந்திஜி இர்வின் சந்திப்புக்குச் சில தினங்களுக் கெல்லாம் லாகூரில் காங்கிரஸ் மகாசபை கூடியது. ராஜீயவானம் இருண்டு போர் மேகங்கள் மூடிக் கொண்டிருக்கையில் தான் பண்டித ஜவஹர்லால் காங்கிரஸின் மகுடத்தைத் தரித்துக் கொண்டார். அவர் தமது ஹிருதயத்தையே கிழித்துக் காட்டி சொற் பொழிவு நிகழ்த்தினார். இந்தியாவிற்கு இழைக்கப்பட்ட அநீதிகளைக் கண்டு பொறுக்க. முடியாத ஆத்திரமும். தேச விமோசனத்திற்கான திட்டமும், அபேதவாதக் கொள்கையின் விளக்கமும், அவரது வீர உணர்ச்சியும், மனவுறுதியும் அவருடைய பிரசங்கத்திலிருந்து வெளியாயின. "தீரமுடன் போராடுபவரே வெற்றியைக் காண்பர்" என்ற ஒரு வாக்கியத்தில் ஜவஹரின் வாழ்க்கை லக்ஷியமும், போர்முறையும் அடங்கிக் கிடந்தது.

இளைய நேருவின் பிரசங்க விவரத்தில் புகுமுன் சீமையில் நடந்த சில விஷயங்களை கவனிப்போம். டிஸம்பர் மாதத்தில் 3-வது வாரத்தில் மிஸ்டர் வெட்ஜ்வுட் பென்

மீண்டும் ஓர் அறிக்கையை வெளியிட்டு குடியேற்ற நாட்டந்தஸ்திற்குப் புதிய வியாக்கியானம் செய்தார். குடியேற்ற நாட்டந்தஸ்து இந்தியாவில் ஏற்கனவே இருந்து வருவதாக அவர் கூறினர். வார்ஸேல்ஸ் உடன்படிக்கையில் இந்தியா கையொப்பமிட்டது. இந்திய ஹைகமிஷ்னரின் நியமனம், லீக் மகாநாட்டின் இந்தியத் தூதுகோஷ்டிக்கு இந்தியர் ஒருவரே தலைவராக விருந்தது, சர்வதேசக் கப்பல் படைக் கமிஷனில் இந்தியாவிற்கிருந்த தனி ஓட்டுரிமை, சர்வதேசத் தொழிலாளர் மகாநாட்டில் இந்தியாவிற்குப் பிரதிநித்துவம்—இந்தியாவில் குடியேற்ற நாட்டந்தஸ்து ஏற்கனவே நடைமுறையில் இருந்த தென்பதற்கு மேற்கூறிய யாவும் சான்றுகளாகக் குறிப்பிடப்பட்டன. ஆனல் இந்திய மக்கள் பென்னின் இந்தப் புதிய வேஷம் கண்டு மயங்கிவிடவில்லை.

எனவே லாகூர் காங்கிரஸ் எத்தகைய நெருக்கடியான நிலைமைகளுக்கிடையே கூட்டவேண்டியிருந்த தென்பதை நீங்கள் இப்போது ஒருவாறு அறிந்துகொள்ளலாம். தலைவர்களின் அறிக்கையை நாம் உறுதி செய்வதா? இராஜப்பிரதிநிதியின் நல்லெண்ணங்களை நாம் பாராட்டுவதா? நமது லக்ஷியத்தை நாம் மாற்றிக்கொள்ளவேண்டிய காலம் வரவில்லையா? "ஸ்வராஜ்யம்" என்ற பதத்திற்கு நாம் புதிய வியாக்கியானத்தை வெளியிடவேண்டாமா? சட்ட சபைகளை நாம் பகிஷ்கரிக்கலாமா? அவற்றுடன் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், கோர்ட்டுகள் முதலியவற்றையும் பகிஷ்கரிக்கவேண்டாமா? ஸ்தலஸ்தாபனங்களையும் இந்தப் பகிஷ்காரத்தில் நாம் சேர்த்துக்கொள்ளலாமா? சீமையில் கூடவிருக்கும் சர்வ கக்ஷி மகாநாட்டிற்கு நாம் செல்வதா? இன்னும் இரண்டு மாதங்களுக்குப் பொறுத்திருந்து காங்கிரஸின் லக்ஷியத்தைப் பரிபூரண சுயேச்சையாக மாற்றிக்கொள்ளலாமா? என்ற இந்தக் கேள்விகளெல்லாம் தேசத் தலைவர்களின் மனதை அலைத்தன.

இனி பண்டித ஜவஹரின் வீரத்வனியில் சற்று கலந்துகொண்டு அவரது வீர உணர்ச்சியை அள்ளிப் பருகுவோம். காங்கிரஸ் சிம்மாசனத்திலேறி அவர் பேசியதாவது, "உலக இயக்கத்தின் ஓர் அம்சமாகவே இன்று இந்தியா விளங்குகின்றது. ஆனல் ஜன சமூகத் துறையில் தனது காரியங்களைச் செவ்வனே ஒழுங்குபடுத்திக்கொள்ள

யியலாமல் கஷ்டப்படுகிறது. மத விஷயங்களில் இந்தியா வைப்போல் ஸ்வதந்திரத்தை அனுபவித்த தேசம் வேறெதுவுமில்லை. ஆனால் இப்பொழுது நிலைமை தலைகீழாக விருக்கிறது. ஹிந்துக்கள், முஸ்லீம்கள், சீக்கியர்கள் இவர்களுக்கிடையே வகுப்பு ஒற்றுமையையும், ராஜீய ஒற்றுமையையும் ஏற்படுத்த முயற்சிகள் செய்யப்பட்டு வருகின்றன. ஆனால் சர்வகக்ஷி மகாநாட்டில் காணப்பட்ட திட்டம் எல்லாக் கக்ஷிகளையும் திருப்தி செய்யவில்லை. இராஜப்பிரதிநிதி நல்லவர்தான்; நன்றாகத்தான் பேசினார்; வார்த்தைகளோ அழகாகத்தானிருந்தன; ஆனால் அழகான வார்த்தைகள் ஸ்வதந்திரத்தை யளித்துவிடுமா?

நாம் நம்மைச் சுற்றியுள்ள நிலையை உள்ளவாறு அறிய வேண்டும். நாம் இன்னும் கடுமையான போரில் இறங்கவில்லை. சமரஸமாகப்போக இன்னும்வழியிருக்கிறது. காப்டென் பென்னின் குடியேற்ற நாட்டந்தஸ்தை நாம் என்னமாக ஏற்றுக்கொள்ள முடியும்? அவர் வீசும் அந்தத் தந்திரமான சுருக்கில் நாம் நமது கழுத்தை நுழைத்து விடுவதா? எல்லா விஷயங்களையும் நன்கு ஆராய்ந்தே நாம் கல்கத்தாவில் ஒரு தீர்மானம் செய்தோம்; அதனின்றும் நாம் இனி பின்னடைய முடியாது. நமது லக்ஷ்யம் "சுயேச்சை" தான்.

"நான் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை வெறுப்பவன்; பகிரங்கமாகச் சொல்லுகிறேன்; நான் ஒரு அபேதவாதி; எனக்கு ராஜாக்களின் ஆக்ஷியில் நம்பிக்கை கிடையாது. குடி ஆக்ஷியையே நான் கோருபவன்.

"ஹிம்சை மார்க்கத்தில் எனக்கு நம்பிக்கையில்லை; அஹிம்ஸா நெறியே சிறந்தது; நீடித்த, நிலையான பலன்களை யளிக்கவல்லது அதுவே. அதிலும் நம்முடைய தேசத்தில் பலாத்கார மார்க்கத்திற்கே இடமில்லை. இன்று பலாத்காரமே உருக்கொண்டு உலகை ஆண்டு வருவதென்னமோ வாஸ்தவம்தான். அதனால் ஒரு வேளை நாமும் நன்மை யடைந்தாலும் அடையலாம். ஆனால் அதை ஒழுங்கான ரீதியில் நடத்திவைக்க நம்மிடையேபோதுமான சக்தியும், வசதிகளுமில்லை. ஆகவே அந்த வழியை நாம் கைவிட்டு விட வேண்டியதுதான். விடுதலைக்கான எந்த இயக்கமும் பாமர மக்களைத் திரட்டிக் கொண்டு போகும் இயக்கமாக விருக்க வேண்டும். இத்தகைய இயக்கம்

சாந்தமும், அமைதியுமான முறைகளில்தான் நடைபெற வேண்டும்.

"எவ்வளவு தூரம் வெற்றிபெறுவோம் மென்பதை நாம் சொல்லமுடியாது. ஆனால் தைரியமுடன் போராடு பவர்களுக்குத்தான் வெற்றி கிட்டும். முள்ளுக்கிடையே ரோஜா மலரும், நச்சுக்கிடையே நாகமணியும் இருப்பது போன்றே பெருத்த கஷ்டங்களுக்கிடையே பெருமித வெற்றியும் அடங்கியிருக்கிறது.

"சுயேச்சை" என்று நாம் கூறுகையில் பிரிட்டிஷ் ஆதிக்கம் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இவற்றினின்றும் விடு பட்ட ஒரு நிலையையே கோருகிறோம். ஸ்வதந்திரத்தைப் பெற்ற பின்னர் உலகத்திலுள்ள சர்வதேசங்களின் ஒத் துழைப்புக்கும், உலக சமாதானத்திற்கும் பாடுபட இந்தியா தயாராகவிருக்கும். சம அந்தஸ்தைப் பெற தன்னுடைய சுயேச்சையில் சிறிதளவு விட்டுக்கொடுக்க வேண்டி யிருந் தாலும் அதற்கும் இந்தியா தயாராக விருக்கும். ஏகாதி பத்தியம் என்ற பேச்சு உள்ள வரையில் இந்தியா உலக சமுதாயத்தில் சம அந்தஸ்துடன்கூடிய பங்காளியாக விருக்க முடியாது. குடியேற்ற நாட்டந்தஸ்தில் எந்த விதத்திலும் இந்தியாவிற்கு அதிகாரம் கிடைக்குமென நான் நம்பமுடியாது. பொருளாதாரத்துறையான அதி காரமும், அன்னிய ராணுவ ஆதிக்கமும் ஒழிந்தால்தான் இந்தியர்களின் கைக்கு அதிகாரம் மாற்றப்படுகின்றதென நாம் நம்ப முடியும்".

இனி காங்கிரஸில் நிறைவேற்றிய தீர்மானங்களைக் கவனிப்போம்.

வைஸ்ராய் ஏறிச் சென்ற ரெயில்வண்டிக்கு நேரிட்ட வெடிகுண்டு விபத்திற்காக காங்கிரஸ் தனது வருத்தத்தைத் தெரிவித்து இத்தகைய செய்கை காங்கிரஸின் கொள்கைக்கு விரோதமானதென்றும், இத்தகைய செய்கைகளால் தேசீய இயக்கத்திற்கே தீங்கு நேரிடுகின்றதென்றும் அபிப்பிராயப் பட்டது.

## சுயேச்சைத் தீர்மானம்

பரிபூர்ண சுயேச்சையைப் பற்றிய தீர்மானம் மிக முக்கியமானதால் அதன் விவரத்தை மட்டும் பூராவாகத் தந்திருக்கிறோம்.

"குடியேற்ற நாட்டந்தஸ்து சம்பந்தமாக அக்டோபர் மாதம் 31-ந்தேதியன்று வைஸ்ராய் அவர்கள் வெளியிட்ட அறிக்கையைப் பற்றி காங்கிரஸ் வாதிகள் உள்பட சர்வகக்ஷித் தலைவர்களும் ஒன்று கூடி, கையொப்பமிட்டு வெளியிட்ட அறிக்கை விஷயமாக காரியக் கமிட்டி எடுத்துக்கொண்டுள்ள நடைமுறையை காங்கிரஸ் மகா சபை ஆதரிக்கின்றது ; தவிர ஸ்வராஜ்யப் போராட்டத்தை ஒரு விதமாகத் தீர்த்துவைக்க இராஜப்பிரதிநிதி அவர்கள் செய்துவரும் முயற்சிகளை இக் காங்கிரஸ் பாராட்டுகின்றது. எனினும் நடந்த விஷயங்கள் யாவையும் தீர்க்கமாக ஆலோசிக்கவேண்டும், மகாத்மா காந்தி, பண்டித மோதிலால் நேரு, இவர்களும், இதர தலைவர்களும் இராஜப்பிரதிநிதியுடன் கலந்து பேசியதன் முடிவைக் கண்ட பிறகும், உத்தேசிக்கப்பட்டுள்ள மகாநாட்டில் காங்கிரஸ் பங்கெடுத்துக்கொள்ளுவதால் எவ்வித நன்மையும் ஏற்படாதென காங்கிரஸ் அபிப்பிராயப்படுகிறது. ஆகவே கடந்த வருஷம் கல்கத்தாவில் நிறைவேற்றப்பட்ட தீர்மானத்திற்கிணங்க, காங்கிரஸ் அமைப்பின் 1வது விதியில் கண்டுள்ள "ஸ்வராஜ்யம்" என்ற பரிபூரணசுயேச்சை என்ற அர்த்தத்துடன் விளங்குமென்று, நேரு கமிட்டி யதாஸ்தை யினி கொண்டாட முடியாதென்றும் இக் காங்கிரஸ் அறிவிக்கின்றது ; ஆதலால் இனிமேல் யாவரும் இந்தியாவின் பூரண விடுதலைக்காகவே தாங்கள் முழு கவனத்தையும், சிரமத்தையும் செலவிட்டுப் பாடுபடுவரெனவும் காங்கிரஸ் நம்புகின்றது. பூரண சுயேச்சைக்கான போராட்டத்தைத் துவக்குவதற்குப் பூர்வாங்கமாகவும், காங்கிரஸ் கொள்கையைச் சாத்தியமான வரையில், மாற்றப்பட்டுள்ள லக்ஷியத்துடன் அனுசரித்துப் போகுமாறு செய்யவும் வேண்டி இந்தியா சட்டசபையையும், இன்னும் கவர்ன்மெண்டாரால் கூட்டப்படும் இதர கமிட்டிகளையும் பகிஷ்கரிப்பதென காங்கிரஸ் முடிவு செய்கின்றது ; இனிமேல் காங்கிரஸ் வாதிகள் நேரடியாகவோ அல்லது மறைமுகமாகவோ தேர்தல்களில் எவ்விதத்திலும் கலந்துகொள்ளக் கூடாதென்றும், இப்பொழுது சட்டசபையிலுள்ளவர்களைத் தங்கள் பதவிகளை ராஜிநாமா செய்துவிடும்படியும் இக் காங்கிரஸ் கட்டளையிடுகின்றது. மேலும் காங்கிரஸின் நிர்மாணதிட்டத்தை நிறைவேற்றி வைக்கும்படி இக் காங்கிரஸ் தேச மகா ஜனங்களைக் கேட்டுக்கொள்ளுகிறது. தவிர எப்பொழுது தகுதியெனத் தோற்றுகிறதோ அப்பொழுது குறிப்பிட்ட சில இடங்களிலோ அல்லது எல்லா இடங்களிலுமோ வரி மறுத்தல் உள்பட சட்டமறுப்புப் போரைத் துவக்குவதற்கு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு இக் காங்கிரஸ் அதிகாரமளிக்கிறது."

## காலத்தில் மாறுதல்

இந்தக் காங்கிரஸில் நிறைவேறிய தீர்மானங்களில் காங்கிரஸ் நடைபெறும் காலத்தை மாற்றுவது சம்பந்தமான தீர்மானமும் நமது கவனத்திற்குரியது. காங்கிரஸ்

மகாசபை குளிர்மிகுந்த டிஸம்பர் மாதத்தில் கூடுவதால் குளிரைத் தாங்கிக்கொள்ளும் வகையில் ஏழை மக்களுக்கு அதிகச் செலவும் இதர அசௌகரியங்களும் ஏற்படுவதை உத்தேசித்து இனி பிரதி வருஷமும் பிப்ரவரி மாதத்திலாவது மார்ச்சு மாதத்திலாவது காங்கிரஸைக் கூட்டுவதென முடிவு செய்யப்பட்டது.

நேரு யாதாஸ்து ரத்தாகிவிட்டதால் வகுப்புப் பிரச்னையைப்பற்றிப் புனராலோசனை செய்யவேண்டியிருந்தது. சுயேச்சை இந்தியாவில் தேசீயப்பான்மையை யொட்டியே வகுப்புப் பிரச்னைகளைத் தீர்க்கப்பட வேண்டியிருக்குமாதலால் இது விஷயமாக காங்கிரஸின் கொள்கையை அறிவிப்பது அநாவசியமென உணரப்பட்டது. ஆயினும் வகுப்புப் பிரச்னை சம்பந்தமாக நேரு யாதாஸ்தில் காணப்பட்டிருந்த தீர்ப்பை சீக்கியரும், முஸ்லீம்களும், இதர சிறுபான்மை வகுப்பினரும் ஏகோபித்து வந்ததால், மேற்குறித்த வகுப்பினருக்குப் பூரண திருப்தி யளிக்காத எந்த முடிவையும் எதிர்கால ராஜ்ய அமைப்பில் காங்கிரஸ் ஏற்றுக்கொள்ளாது என சீக்கியருக்கும், முஸ்லீம்களுக்கும் இதர சிறுபான்மை வகுப்பினருக்கும் காங்கிரஸ் உறுதி கூறியது.

இந்தியாவின் கடன் பொறுப்பு விஷயத்தையும் காங்கிரஸ் மகாசபை சர்ச்சை செய்தது. இதற்கு முன்னர் 1922-ம் வருஷத்தில் நடைபெற்ற கயா காங்கிரஸில்தான் இவ் விஷயம் கவனிக்கப்பட்டது. இந்தியக் கடன்களைப் பற்றித் தனிக் கமிட்டியார் உடனே பரிசீலனை செய்ய வேண்டுமென்றும், எவற்றை ஏற்றுக்கொள்வது, எவற்றை மறுத்துவிடுவது என்பதை அவர்கள் முடிவு செய்ய வேண்டுமென்றும், அதன்படியே காங்கிரஸ் மகாசபை நடந்துகொள்ளுமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

எண்ணற்ற ராஜ்ய தொழிலாளர் தலைவர்கள் கைது செய்யப்பட்டு, சிறைப்படுத்தப்பட்டது மட்டுமன்றி போலீசார் கையாண்ட அடக்குமுறை சகிக்க முடியாததாக இருந்தது. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி இதை "காட்டு மிராண்டித்தனம்" எனக் கூறியது. இச் சந்தர்ப்பத்தில் ஒரு சம்பவம் குறிப்பிடத் தக்கது. லாகூர் சதி வழக்கு எதிரிகளின் உதவிக்காக ஏழு தொண்டர்கள்

பணம் வசூலித்துக் கொண்டிருக்கையில் போலீசார் அவர்களை நையப் புடைத்தனர். இச் சமயத்தில் ஜில்லா மாஜிஸ்திரேட்டும் அவ்விடத்திலிருந்தனர். எவ்வாறு அடித்தனர் தெரியுமா? தொண்டர்களில் பலர் மூர்ச்சையாகி விழும் வரையில் அடித்தனர். எல்லோருக்கும் படுகாய மேற்பட்டது. "ஏகாதிபத்தியம் வீழ்க" "புரட்சி நீடூழி வாழ்க" என்று அவர்கள் கோஷித்தனராம்; இதுவே அவர்கள் செய்த குற்றம். இதை விட மிருகத்தனமான முறை கூட அநுஷ்டிக்கப்பட்டது. லாகூர் சதிவழக்கு எதிரிகள், கோர்டிலேயே, பகிரங்கமாக, மாஜிஸ்திரேட் முன்னிலையிலேயே கொடுமையாகத் தாக்கப்பட்டனர். கோர்ட்டுக்கு வெளியே அவர்கள் அனுபவித்த இன்னல்கள் கொஞ்ச நஞ்ச மன்று.

இவர்களைத் தவிர இந்தியாவின் பல்வேறு சிறைச் சாலைகளிலும், அந்தமான் தீவிலும் ஏராளமான ராஜீயக் கைதிகள் தண்டனை அனுபவித்து வந்தனர். இவர்களில் பலர் 1818-ம் வருஷத்திய ஆள் தூக்கிச் சட்டத்தின்படியும், ராணுவச் சட்டத்தின்படியும் கைது செய்யப்பட்டு 1919-வருஷத்தில். பஞ்சாபில் அமுலிலிருந்த ராணுவச் சட்ட ஆட்சி காலத்தில் விசேஷ கோர்ட்டுகளைக் கொண்டு தண்டிக்கப்பட்டவர்கள். 1914-15-ல் அதாவது யுத்த காலத்தில் தீவாந்திரசிட்சைவிதிக்கப்பட்டவர்களில் ராஜீயக் கைதிகள் வேறு சிறைகளில் உழன்று கொண்டிருந்தனர். இவர்கள் சாதாரண நியாயஸ்தலங்கள் முன்பு நிறுத்தப் பட்டு, விசாரிக்கப்படவில்லை; பிரத்யேக கமிஷன்களின் தீர்ப்பைக் கொண்டே இவர்களுக்குத் தண்டனை விதிக்கப் பட்டது. இவர்கள் சிறையிலடைக்கப்பட்டு இப்பொழுது (1929) பதினைந்து வருஷங்களாகி விட்டன.

இவ்வருஷத்தில் சிற்சில இடங்களில் தொழிலாளர் சச்சரவுகளும், வேலை நிறுத்தங்களும் ஏற்பட்டன. பம்பாய் ஆலை மில்லுகளில் பெரிய வேலைநிறுத்தம் ஒன்று நடந்தது. லக்ஷத்து ஐம்பதாயிரம் தொழிலாளர் இதில் பங்கெடுத்துக் கொண்டனர். இந்த வேலை நிறுத்தம் ஆறு மாதங்களுக்கிருந்து பிறகு தோல்வியுற்றது. இதே மாதிரி வங்காளத்திலும், சணல் ஆலைகளில் ஒரு வேலை நிறுத்தம் கிளம்பியது. இதில். 2 லக்ஷத்து ஐம்பதினாயிரம் பேர்கள் ஈடுபட்டனர். இது பாதி வெற்றியில் முடிந்தது.

கோல்மூரி, ஜாம்ஷெட்பூர் இவ்விடங்களிலுள்ள தகரத் தொழிற்சாலையைச் சேர்ந்த தொழிலாளர்களில் 3000 பேர்கள் வேலை நிறுத்தம் செய்தனர். இவர்களனைவரும் வேலையில் நல்ல திறமைசாலிகள். எட்டு மாதங்களுக்கு மேல் நீடித்திருந்த இவ்வேலை நிறுத்தம் நாட்டிலுள்ள யாவரது கவனத்தையும், அனுதாபத்தையும் ஈர்த்தது. தொழிலாளரின் கோரிக்கைகள் என்னமோ சாமானியமானவையாகத் தானிருந்தன. ஆனால் முதலாளிகளும், பிஹார் அரசாங்கமும் ஒரே பிடிவாதமாக விருந்து, விசாரணையைக் கூட நடத்த மறுத்து விட்டது. இந்தியா சட்டசபையும் இதில் ஈடுபட்டு, கவர்ன்மெண்டின் பிடிவாதக் கொள்கையைக் கண்டித்து, தகரத்தொழிலுக் களித்துள்ள பாதுகாப்பையும் வாபீஸ் வாங்கிவிடுவதாகத் தீர்மானித்தது. ஆனால் வழக்கம்போல் இந்தத் தீர்மானத்தையும் கவர்ன்மெண்டாரின் குப்பைத்தொட்டி நன்கு வரவேற்றது.

1928-ம் வருஷத்தில் நடைபெற்ற தென்னிந்தியா ரயில்வே வேலை நிறுத்தத்தை யொட்டி சதி செய்ததாகப் பலர் கைது செய்யப்பட்டு, விசாரிக்கப்பட்டதில் திருச்சினுப்பள்ளி நீதிபதி கடந்த ஏப்ரலில் இவர்களில் பதினைந்து பேர்களுக்குப் பத்து வருஷ கடினகாவல் தண்டனை விதித்தார். இத்தண்டனைகளை ஆக்ஷேபித்து மனுக்கள் தாக்கல் செய்யப்பட்டிருக்கின்றன.

லாகூர் காங்கிரஸில் காங்கிரஸ் லக்ஷியத்தில் " சாந்தமும், நியாயமுமான முறைகளில் " என்றுள்ள வசனத்தை " சத்யமும், அஹிம்ஸையும் கொண்ட முறைகளில் " என மாற்றவேண்டுமென காந்திஜி எவ்வளவோ முயன்றார், ஆனால் வெற்றி பெறவில்லை. இந்த விஷயம் இன்னும் ஊசலாடிக்கொண்டுதானிருக்கிறது ; 1934-ம் வருஷம் அக்டோபர் மாதத்தில் நடைபெற்ற பம்பாய் காங்கிரஸிலும் இவ்விஷய ஆலோசனை ஒத்திவைக்கப்பட்டு விட்டது.

லாகூர் காங்கிரஸின் வெற்றி மகாத்மா-ஜவஹர்லால் வெற்றியாகும். ஸ்ரீமான் எஸ். ஸ்ரீனிவாசய்யங்காரும், ஸ்ரீயுத சுபாஷ் சந்திர போஸும் " காங்கிரஸ் ஜனநாயகக் கக்ஷி " என்பதாக ஒரு புதிய கக்ஷியைத் தோற்றுவிக்கப் போவதாக அறிவித்தனர். இதனால் காங்கிரஸில் மீண்டும் பிளவு உண்டாகி விட்டதென எண்ணி துரைத்தனம் கொக்கரித்து நின்றது. ஆனால் அதன் உற்பவத்தைப்

பற்றிய விவரம் விரைவில் வெளிவந்து விட்டது. ஸ்ரீமான் ஐயங்காரும், சுபாஷ் பாபுவும் தேர்தல் மூலமாகவே காரியக் கமிட்டியை அமைக்க வேண்டுமெனக் கோரினர்; ஆனால் இம் முயற்சி தொல்லையுறவே அவர்கள் தென்னிந்திய நண்பர்கள் சிலருடன் சேர்ந்துகொண்டு வெளியேறினர். ஏற்கனவே உள்ள காரியக் கமிட்டியில் யார் விலகிக்கொள்ளப் போகிறார்கள் என்று கேட்டது காந்திஜியின் வழக்கம். லாகூரில் காரியக் கமிட்டியை அமைக்கையில் தனித்தனியே மூன்று ஜாபிதாக்கள் தயாரிக்கப்பட்டன. பண்டித மோதிலால்ஜி மகாத்மாவுடன் கலந்து ஒரு ஜாபிதாவைத் தயாரித்தார்; ஸ்ரீயுத சேத் ஜமுனலால் பஜாஜ் ஒன்றைத் தயாரித்தார், ஓமீர ஒரு பெயர்தான் இவ்விரண்டு ஜாபிதாக்களிலும் ஒத்துவராம லிருந்தது. இந்த வித்தியாசத்தைச் சரிப் படுத்தி காரியக் கமிட்டி அமைக்கப்பட்டது.

ஆனால்மேற்கண்ட இரு தலைவர்களும் தேர்தல் முறையை வற்புறுத்தினர், இது தோல்வியுற்றது. உடனே அவர்கள் வெளியே போய்விட்டனர். பத்து நிமிஷங்களுக்குள் மேற்கூறிய புதிய கக்ஷி பிறந்துவிட்ட செய்தி காதிற் கெட்டியது. சுயேச்சை லக்ஷியத்தைக் கொண்ட இக்கக்ஷி அதை அடைவதற்கான முயற்சியில் சாத்தியமான வரையில் இதர கக்ஷிகளின் திட்டங்கள், கொள்கைகள், நடைமுறைகள் இவற்றில் ஒத்துழைக்கத் தயாராக விருக்கும் என இப்புதிய கக்ஷி தன் கொள்கையை விஸ்தரித்தது. மகாத்மாவின் தீர்மானத்தை எதிர்த்த பரிபூரண சுயேச்சை வாதிகளில் பலர் சட்ட சபைப் பிரவேசத்தை ஆதரித்து நின்றது விந்தையினும் விந்தையே.

---

## அத்தியாயம் 2

---

## சுதந்திரப் போர்

“1929-ம் வருஷம், டிஸம்பர் மாதம், 31-ந் தேதிக்குள் பிரிட்டிஷ் துரைத்தனம் இந்திய மகா ஜனங்களின் ஏகோபித்த கோரிக்கைகளுக்கு இணங்கியும், வணங்கியும் வரத் தவறுவரேல், 1930-ம் வருஷம், ஜனவரி மாதம்

முதல் தேதியிலிருந்து நான் பூரண சுயேச்சை வாதியாக மாறிவிடுவேன்" எனக் கல்கத்தாவில் மகாத்மா விரவிரதம் பூண்டது அன்பர்களின் நினைவிலிருக்கலாம். இதை யொட்டியே கல்கத்தா காங்கிரஸும் தீர்மானித்துக் கலைந்தது. ஆனால் குறிப்பிட்ட காலம் பூர்த்தியாயிற்றே யொழிய அரசாங்கம் இம்மியும் அசைந்து கொடுக்கவில்லை. எனவே ஏற்கனவே செய்துள்ள தீர்மானத்தின்படி காங்கிரஸ் வாதிகள் பரிபூரண சுயேச்சைக் கொடியின் கீழ் ஒன்று சேரலாயினர்.

ஜனவரி மாதம் இரண்டாம் தேதியன்று காங்கிரஸ் காரியக் கமிட்டி கூடியது. சட்ட சபைகளைப் பகிஷ்கரிக்க வேண்டுமென்ற காங்கிரஸ் தீர்மானத்தை நிறைவேற்றி வைக்கும் வகையில், சட்டசபைகளிலுள்ள எல்லா காங்கிரஸ் வாதிகளையும் தங்கள் பதவிகளை ராஜிநாமா செய்து விட்டு வெளியேறும்படியும், அப்படி எவரேனும் காங்கிரஸ் கட்டளைக்குக் கீழ்படியத் தவறினால் அவர் தமது பதவியை விட்டுவிடும்படி அவர் தொகுதியைச் சேர்ந்த வாக்காளர்கள் நிர்பந்திக்கவேண்டு மென்றும், ஜூன் மாதத்தில் நடைபெற விருக்கும் பொதுத் தேர்தலின் வாக்காளர்கள் பங்கெடுத்துக் கொள்ளக்கூடாதென்றும் காரியக் கமிட்டி தீர்மானித்தது. இத் தீர்மானம் காரணமாக இந்தியா சட்ட சபை அங்கத்தினர்களில் இருபத்தேழு பேர்கள் ராஜிநாமா செய்தனர்.

பாரத மக்கள் யாவரும் பூரண ஸ்வராஜ்ய விரதத்தை மேற்கொள்ள வேண்டி ஜனவரி மாதம் 26-ந் தேதியை நாடெங்கும் பூரண ஸ்வராஜ்ய தினமாகக் கொண்டாடுவதென்றும் முடிவு செய்யப்பட்டது. அன்று மாலையில் நகரங்களிலும் பிரம்மாண்டமான மகாநாடுகளைக் கூட்டி, அதில் பூரண ஸ்வராஜ்யத் தீர்மானம் வாசிக்கப்பட்டு, மகா ஜனங்களால் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்றும் தீர்மானிக்கப்பட்டது. அத் தீர்மானத்தின் விவரம் பின்வருமாறு :—

### நமது உரிமை

"உழைப்பின் பலனை ஆண்டு அனுபவிக்கும், சுகவாழ்வினுக்குரிய தேவைகளைப் பெறவும், ஏனைய தேசமக்களைப்போல் இந்திய மகா ஜனங்களுக்கும் சுதந்திரமுண்டு. அப்பொழுதுதான் இந்திய மக்கள் உலக வாழ்வில் முன்னேறுவதற்குரிய பூரணமான சந்தர்ப்பங்கள் வாய்க்கும். இது எவரும் மறுக்கமுடியாத உண்மையாகும்.

மேலே சொல்லிய உரிமைகளையும், சந்தர்ப்பங்களையும் எந்த அரசாங்கமேனும் பறிக்குமாயின், அந்த அரசாங்கத்தை மாற்றவோ அல்லது மாய்க்கவோ மகாஜனங்களுக்கு உரிமையுண்டு.

இந்தியாவில் ஆட்சி செலுத்தும் பிரிட்டிஷ் அரசாங்கம் இந்திய மக்களின் சுதந்திரத்தையும், சுயேச்சையையும், பறித்துளது; அன்றியும் பாமர ஜனங்களைச் சுரண்டி அவர்களது நல பலன்களை ஏகபோகமாக அனுபவிப்பதையே அடிப்படையாகவும் கொண்டுளது; மேலும் பொருளாதாரம், ராஜீயம், ஞான மார்க்கம், ஆத்மார்த்தம் ஆகிய துறைகளிலும் இந்தியாவை நாசப்படுத்திவிட்டது. ஆதலால், இந்திய மகா ஜனங்கள் அத்தகைய பிரிட்டிஷ் தொடர்பை அறவே கைவிடுத்து பரிபூரண சுயேச்சை அடைதல் வேண்டும்.

செல்வ அபிவிருத்தி வகையில், இந்தியா தேசம் அழிக்கப்பட்டுக் கிடக்கின்றது. நமது மக்களிடமிருந்து வாங்கப்படும் வரிப் பணமோ வருவாய்க்கு மிகவும் மிதமிஞ்சியதாகும். நமது சராசரி வருமானம் அன்றாடம் ரூ. 0—1—9 தான். நம்மவர் செலுத்தும் பளுவான வரிகளில் நூற்றுக்கு இருபது பங்கு விவசாயிகளிடமிருந்து நிலவரியாக வாங்கப்படுகிறது. இன்னும் அவ்வரிகளில் நூற்றுக்கு மூன்று பங்கு உப்புவரியாகும். அந்த உப்புவரி ஏழை மக்களுக்கு ஒரு பெருஞ் சுமையாகும்.

ராட்டையில் நூல் நூற்றல்போன்ற கிராமத் தொழில்கள் நிர்மூலமாக்கப்பட்டு விட்டன. அதனால் ஏழை மக்கள் வேறு குடிசைத் தொழில் இல்லாமல், ஆண்டுதோறும் நான்கு மாதம் சோம்பிக் கிடந்து அறிவு குன்றுகின்றனர். கிராமக் கைத்தொழில்கள் நாசம் செய்யப்படின் ஏனைய தேசங்களிலே அம்மக்களுக்கு அரசாங்கம் வேறு தொழில் தேடித்தரும். நம் தேசத்திலோ அரசாங்கம் அவ் வாறு வேறு தொழில் ஒன்றும் ஏழை விவசாயிகளுக்குத் தேடித் தரவில்லை.

விவசாயிகளின் தலையில் இன்னும் சுமையைத் தூக்கி வைக்கும் முறையில் கடல் சுங்கமும், நோட்டுச் செலாவணியும் வகுத்து அமைக்கப்பட்டுள்ளன. நமது தேசத்தில் இறக்குமதியாகும் பொருள்களிலே பெரும்பாலானவை பிரிட்டிஷ் சாமான்களேயாம். கடல் சுங்கவரிகளுமே, வெளிப்படையாகப் பட்சபாதம் பிரிட்டிஷ் சாமான்களுக்கு நன்மை தருவனவாக இருக்கின்றன. தவிர அக்கடல் சுங்க வருமானத்தைக் கொண்டு, பர்மா ஜனங்களின் வரிச் சுமையைக் குறைக்காமல், அபாரமான செலவுக்கு இடமாகவுள்ள நிர்வாகத்தை நிலைநிறுத்துவதற்கான செலவு நடக்கிறது. நாணய மாற்று எனப்படும் பரிவர்த்தனை விகிதத்தில் கையாளப்படும் திரிசமனோ மேற்சொல்லியதைவிட இன்னும் கேள்வி முறையற்றதாகும். அதன் விளைவாக இத்தேசத்திலிருந்து லட்சக்கணக்கான பணம் வெளிநாடுகளுக்குக் கொள்ளைபோய் விடுகிறது.

இந்தியாவின் ராஜீய வாழ்வோ, பிரிட்டிஷ் பரிபாலனத்தின் கீழ் மிகவும் கேவலமாகும். இத்தகைய இழிநிலை இதற்கு முன் எக்காலத்திலும் இத்தேசத்திற்கு நேர்ந்ததில்லை. எந்தச் சீர்திருத்தமும் நமக்கு உண்மையான அரசியல் அதிகாரத்தை அளிக்கவில்லை. நம்மவரில் மிகவும் மகிமை வாய்ந்தவர்கள் கூட அன்னிய ஆதிக்கம் கண்டு தலை குனிய நேருகின்றது. தாராளமான பேச்சுச் சுதந்திரமும், பரஸ்பரம் நாம் கூடிவாழ்வதற்கான சங்க சுதந்திரமும் நமக்கு அளிக்கப்படாமல் மறுக்கப்பட்டுள. நமது மக்களிலே பலர் தேசப்பிரஷ்டர்களால் வெளிநாடுகளில் வசிக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுளது. அவர்கள் தாங்கள் தாயகத்திற்குத் திரும்பிவர வகையில்லை. அரசியல் துறையில் நமக்குள்ள விசேஷமான சாமர்த்தியத்தைக் கையாள வகையின்றி அது மாய்க்கப்பட்டுளது. ஜனங்களோ, கிராம உத்தியோக வேலையும், குமாஸ்தா வேலையும் கொண்டே திருப்தியடைய நேர்ந்துளது.

ஞானமார்க்கமாகப் பார்த்தாலோ, அறிவுத் துறையில் நெடுங்காலமாக நடுநாயகம் வகித்து வந்த நம்மைத் தற்கால கல்விமுறை கீழே வீழ்த்திவிட்டது. அன்றியும் நமக்குக் கிடைக்கும் கல்வியில் பயிற்சிபெற நம்மைக் கட்டிப் போட்டிருக்கும் அடிமைச் சங்கிலியில் மோகம் கொண்டு கிடக்கும்படி செய்கிறது.

நமக்கு ஆயுதம் தரிக்க வகையில்லை. அதனுல் நாம் ஆண்மையற்றவர்களாகி விட்டோம். நம்மை ஓங்கவொட்டாமல் தடுத்து, நம் தேசத்தைப்பற்றி நிற்கும் அன்னியச் சேனை நம்மை எப்பொழுதும் நசுக்கிக்கொண்டிருக்கிறது. ஆகவே, நாம் நம்மைப் பாதுகாத்துக்கொள்ள முடியாது. அன்னியரின் படையெடுப்பை எதிர்த்து நிற்க நம்மால் இயலாது. கள்வரும், கொள்ளைக்காரரும், கயவாளிகளும் நமது வீடுகளில் புகுந்து நமது மனைவி, மக்களைத் தாக்கினுல் அம் மனைவி மக்களைக் காக்கவும் நமக்கு வலுவில்லை என்ற எண்ணமே நமக்கு உண்டாகும்படி செய்துவிட்டது.

ஆதலால், மேலே சொல்லிய வண்ணம், நான்கு வகையிலும் நம் தேசத்தினுக்கு அனர்த்தம் விளைத்திருக்கும் ஆட்சியினுக்கு நாம் இனி ஒரு கணமும் உட்பட்டிருக்க முடியாது. உட்பட்டிருப்பின், அது மக்களுக்குப் பாவம் இழைத்ததாகும்; ஆண்டவனுக்கும் குற்றம் புரிந்ததாகும். எனினும் நமது சுதந்திரத்தை அடைவதற்குரிய திறமையான மார்க்கம் ஹிம்ஸையில் அன்று என்பதை நாங்கள் அறிவோம். ஆதலால் பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு வலுவில் உதவிபுரிவதை நம்மால் கூடியவரையில் நிறுத்திக்கொள்ள நாம் நம்மைத் தயார் செய்துகொள்ளுவோம்; மேலும் வரிகொடாமை உள்பட சட்டமறுப்புச் செய்யவும் நாம் ஆயத்தமாவோம்.

ஆத்திர மூட்டப்பட்டபோதிலும் ஹிம்ஸை வழியிலிறங்காமல் அரசாங்கத்துக்கு வலுவில் உதவியா யிருப்பதை விடுத்து, வரிமறுப்பும் செய்யக்கூடுமோயின் கருணையற்ற ஆட்சிமுறை ஒழிந்துபோவது நிச்சயம் என்று நாங்கள் நம்பிக்கை கொண்டுள்ளோம். ஆகவே பூரண சுயராஜ்யத்தை நிலைநாட்டுவதற்காக அவ்வப்பொழுது

காங்கிரஸ் மகாசபை வெளியிடும் அறிக்கையின்படி நடக்க நாங்கள் இப்பொழுது திரிகரண சுத்தியால் தீர்மானம் செய்கிறோம்.''

## பூரண சுயராஜ்யத் திருநாள்

காங்கிரஸ் காரியக் கமிட்டியின் தீர்மானப்படி ஜனவரி மாதம் 26-ந் தேதி, நாடெங்கும் பூரண சுயராஜ்யத் திரு நாளாகக் கொண்டாடப்பட்டது. "உரிமை கொண்டு வாழவேண்டும், இன்றேல் வீரங் காட்டி விழவேண்டும்" என்ற நோன்பில் தேசமக்கள் இறங்கினர்; அன்று தேசாபி மானிகள் பூண்ட சபதம் இதுவே; பொறித்த எழுத்தும், அறிவித்த வாசகமும், அயலாருக்கு உரைத்த போதமும், ஆளுவோருக்கு விடுத்த வீறுப்பும் இதுதான். அன்றே மக்கள் சுயேச்சைக் கொடி தூக்கி, மனத்தகத்தே சுதந்திர தேவிக்கு ஆலயம் அமைத்தனர். அந்நாள் ராஜீய நோன்பு நாளாக விளங்கியது.

"அடிமைச் சங்கிலியை அறுத்தெறிவோம்; அன்னிய ஆதிக்கத்தை அழித்துத் தள்ளுவோம்; அவலங்கெட்ட ஆக்ஷிமுறையை அகற்றுவோம்; அயலாரின் மாய வலையைக் கிழித்து வீசுவோம்; அடக்குமுறைகளை மடக்கி மாய்ப் போம்; அன்னையின் கண்ணீரைத் துடைத்து அனைவருக் கும் ஆறுதல் அளிப்போம்; அன்பர் பணி புரிய ஆருயிரை யும் பொருட்படுத்தோம்'' என்ற வீராவேசத்துடன் முப்பத்து முக்கோடி மக்களும் முனைந்து நின்றனர். அன்றே ''சுதந்திரச் சங்கு'' முதல் இதழ் வெளியாயிற்று. அதன் தொண்டு தமிழர் நன்கறிவர்.

இச்சமயத்தில், அதாவது 25-ந் தேதியன்று இந்தியா சட்ட சபை முன்பு இராஜப்பிரதிநிதி அவர்கள் செய்த பிரசங்கம் நாட்டு மக்களுக்குக் கிடைத்தது. இந்திய ராஜீய வாதிகளில் ஒரு சிலருக்கு பிரிட்டிஷ் துரைத்தனத் திடமிருந்த நம்பிக்கையையும் இப்பிரசங்கம் சிதறடித்தது. ஸைமன் துரை தமது கடிதத்திலும், ராம்சே மாக்டனால்டு தமது பதிலிலும், இர்வின் பிரபு தமது அறிக்கையிலும், வெட்ஜவுட் பென் தமது விவாதங்களிலும் இந்தியா விஷயத்திலுள்ள தங்கள் மனப்பான்மையை ஒரே பாஷை யைக்கொண்டு ஜோடித்து வந்தனரேயொழிய வேறொன்று மில்லை.

சர்வகக்ஷி மகாநாடு என்ன காரியத்துக்காக கூட்டப் படுகிற தென்பதையும், இந்தியாவுக்கு அளிக்கப்படப்

போவது இன்னதென்பதையும் விளக்கமாகவும், வியக்க மாகவும் எடுத்துரைக்க அரசாங்கம் பின் வாங்கியது. இராஜப்பிரதிநிதி மழுப்பியும், குழப்பியும் தமது பிர சங்கத்தைச் செய்தார். எல்லா ராஜீய வாதிகளின் அபிப் பிராயத்தை அறிவதற்கான சாதனமாகவே சர்வகக்ஷி மகாநாடு உபயோகித்துக் கொள்ளப்படும் என்பது மட்டும் இர்வினின் பிரசங்கத்தினின்றும் புலப்பட்டது. இந்தியா விற்கு சுய நிர்ணய உரிமை அளிக்கப்படமாட்டா தென் பதையும் அது நிதர்சனமாக்கியது.

## மகாத்மாவின் நிபந்தனைகள்

இப் பிரசங்கத்திற்குப் பதில் அளிக்கும் முறையில் மகாத்மா காந்தி லார்டு இர்வினுக்குச் சில நிபந்தனைகளை விடுத்தார். இவைகளுக்கு வைஸ்ராய் உட்பட்டு வந்தால் சட்டமறுப்பு இயக்கம் தொடங்கப்படமாட்டாது எனவும் எச்சரித்தார். அந்த நிபந்தனைகள் பின்வருமாறு :—

1. மதுபானத்தை அடியோடு ஒழித்துவிட வேண்டும்.

2. இந்திய நாணய மாற்று விகிதத்தை 1 ஷில்லிங் 4 பென்சுக்குக் குறைத்து விடவேண்டும்.

3. நிலத்தீர்வையை 100-க்கு 50-து வீதம் குறைப்ப தோடு, நிலத்தீர்வை சம்பந்தமான முழுப் பொறுப்பையும் சட்ட சபைகளுக்கு விட்டுவிட வேண்டும்.

4. உப்பு வரியை எடுத்துவிட வேண்டும்.

5. இப்போதைக்கு ராணுவச் செலவை பாதியளவுக் காவது குறைத்துவிடவேண்டியது அவசியம்.

6. உயர்ந்த சம்பளங்களிலிருக்கும் உத்தியோகஸ்தர் சம் பளத்தை வருமானம் குறையும் அளவுக்கு பாதிக்கோ அல்லது அதற்கும் குறைவாகவோ குறைத்துவிட வேண்டும்.

7. அன்னியநாட்டுத் துணிகள் மீது அதிக வரி. விதித்து, இந்தியத் துணி வியாபாரத்தைப் பாதுகாக்க ஏற்பாடு செய்யப்பட வேண்டும்.

8. இந்தியக் கரையோரக் கப்பல் மசோதாவைச் சட்ட மாக்க வேண்டும்.

9. கொலைக்குற்றம் செய்தோ அல்லது கொலை செய்ய முயற்சித்தோ தண்டனையடைந்த ராஜீயக் கைதிகளைத் தவிர மற்ற ராஜீயக் கைதிகளை உடனே விடுதலை செய்துவிட வேண்டும்.

அரசியல் குற்றத்துக்காக அரசியல் வாதிகள்மீது தொடுத்திருக்கும் வழக்குகளை உடனே வாபீஸ் வாங்குவதோடு, 1818-ம் வருஷத்திய சர்க்கார் சீர்திருத்தச் சட்டம் 124-A பிரிவு முதலிய சட்டங்களை உடனே ரத்து செய்யவேண்டும்; அன்றியும் நாடு கடத்தப்பட்ட சகல இந்தியர்களையும் இந்தியாவிற்குத் திரும்பிவர அனுமதி கொடுக்கவேண்டும்.

10. இரகஸிய போலீஸ் இலாகாவை ஒழித்துவிட வேண்டும்; இன்றேல் அதற்கிருந்துவரும் அளவு கடந்த அதிகாரத்தைக் குறைத்துவிட வேண்டும்.

11. தற்காப்புக்காக ஆயுதங்கள் வைத்துக்கொள்ள இந்திருக்கு உரிமை யிருக்கவேண்டும்; ஆனல் அதற்கு லைசென்ஸ் கொடுக்கும் அதிகாரம் பொதுவாக விருக்கவேண்டும்.

மேலும் மகாத்மா குறிப்பிட்டதாவது :—

"இந்தியாவுக்கு அத்தியாவசியமாக வேண்டிய சீர் திருத்தங்கள் இவையே- இவை ஹத்து மீறியவை எனக் கூறமுடியாது. இந்தச் சாதாரண நிபந்தனைகளை வைஸ்ராய் நிறைவேற்றி வைக்கட்டும். அப்புறம் அவர் சட்ட மறுப்பு என்ற பேச்சையே கேள்விப்பட மாட்டார். இந்தியருக்குச் சம உரிமை கொடுத்து, சர்க்கார் கூட்டும் எந்த மகாநாட்டிலும் காங்கிரஸ் வாதிகள் கலந்து கொள்ளச் சித்தமா யிருக்கிறார்கள்."

பிரதம மந்திரியான மிஸ்டர் ராம்ஸே மாக்டனல்டுடன் கலந்து பேசி, சமரஸத்திற்கு வழிதேட முயற்சி செய்த ஸ்ரீமான் போமான்ஜி என்பவருக்கு மகாத்மா விடுத்த நிபந்தனைகளும் இவையே.

இச் சமயத்தில்தான் பண்டித மாளவியாகூட இந்தியா சட்ட சபையில் தாம் வகித்து வந்த ஸ்தானத்தை ராஜீனமா செய்தார். மாள்வியாஜி ஒத்துழையாதாரல்ல; எனினும் சட்ட சபையின் விருப்பத்துக்கு விரோதமாக ஆலைத் தொழில் பாதுகாப்பு மசோதா திணிக்கப்பட்டதைக் கண்டு மனம் பொறுதவராய் அவர் தமது பதவியை வீசி எறிந்தார். இது எதிர்பாராத வகையில் காங்கிரஸுக்குக் கிடைத்த பலமாகும்.

நிற்க, சுத்த சுயராஜ்யத் திருநாள் கொண்டாட்டம் பாரத மக்களின் ஜீவ நாடி ஒய்ந்து விடவில்லை என்பதை உணர்த்தியது; மகா ஜனங்களின் சுதந்திர உணர்ச்சி நீறு பூத்த நெருப்பைப்போல் இருந்தது.

## 172 பேர்கள் ராஜிநாமா

இந் நிலையில் அரசாங்கம் என்ன செய்தது தெரியுமா? எக் காரணத்தைக் கொண்டோ நாட்டில் பலரைக் கைது செய்து வந்தது. மீரத் சதி வழக்கில், ஒருவரைத் தவிர மற்ற எதிரிகள் அனைவரும் செஷன்ஸ் நீதிபதியின் விசாரணைக்கு அனுப்பப்பட்டனர். கல்கத்தாவிலே வங்கமணியெனத் திகழும் ஸ்ரீயுத சுபாஷ் சந்திர போஸும் இன்னும் பதினொரு பேர்களும் கைது செய்யப்பட்டு, ஒரு வருஷக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டனர். காங்கிரஸின் கட்டளைக் கிணங்க சட்டசபை அங்கத்தினர்களில் 172 பேர்கள் ராஜிநாமா செய்திருந்தனர்.

## போருக்கு ஆயத்தம்

பிப்ரவரி மாதம் 14, 15, 16-ந் தேதிகளில் காரியக் கமிட்டிக் கூட்டம் சபர்மதியில் நடைபெற்றது. சட்ட மறுப்புப் போரைத் தொடங்குவதென மகாத்மா காந்தி உத்தேசித்திருப்பதை வரவேற்பதாகவும், அஹிம்ஸா தர்மத்தில் பூரண நம்பிக்கைகொண்ட அவரும், அவரது சீடர்களும் அப் போரைத் தொடங்க அதிகாரம் கொடுப்பதாகவும், போர் மும்முரமாக நடக்கையில் எல்லா காங்கிரஸ் வாதிகளும், மற்றவர்களும் சாத்வீக சட்டமறுப்புக்காரர்களுக்கு தங்களாலியன்ற சகாயத்தை அளிப்பரென நம்புவதாகவும், எவ்வளவுதான் ஆத்திர மூட்டப்பட்டாலும் தேச மகா ஜனங்கள் அஹிம்ஸா நெறியினின்றும் சிறிது கூட பிறழக் கூடாதென்றும் காரியக் கமிட்டி தீர்மானித்தது. தவிர மாபெரும் போராட்டம் நடைபெறும் சமயத்தில் துரைத்தனத்துக்கு உதவி புரியும் வக்கீல்களும், அதன் மூலமாக ஏதோ நன்மையைப் பெறுவதாகச் சொல்லிக்கொள்ளும் மாணவர்களும் சர்க்காருக்கு எவ்விதத்திலும் உதவி செய்யாமல், சுதந்திரப போரில் குதிப்பரென நம்புவதாகவும் காரியக் கமிட்டி முடிவு செய்தது. இதற்குச் சில தினங்களுக்குப் பிறகு ஆமதாபாத்தில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டமும் இத் தீர்மானங்களையே உறுதி செய்தது. இங்கு ஒரு விஷயம் குறிப்பிடத் தக்கது. காரியக் கமிட்டி கூட்டத்திற்காக வந்திருந்த பல நண்பர்களுடன் மகாத்மா காந்தி, உப்பு வரியின்

அநீதத்தைப்பற்றியும், அதை எங்ஙனம் எதிர்த்துப் போரிடுவது என்பது குறித்தும், கலந்து பேசினர். உப்பைத் தயாரித்தல், உப்பளங்களிலிருந்து உப்பை எடுத்தல், உப்பு டிப்போக்களை முற்றுகையிடுதல் இந்த உபாயங்களும் ஆலோசிக்கப்பட்டன.

## உப்புவரிச் சுமை

மனிதனுடைய உணவில் இன்றியமையாத பாகமாகிய உப்பு கடலினின்றே கிடைக்கின்றது. தேக சௌக்கியத்துக்கும், உணவின் சுவைக்கும் முக்கியமானது லவணமேயாகும். முப்புறத்திலும் கடல் சூழ்ந்த இந்தியாவுக்கு உப்பு விளைவிக்க அதிக சௌகரியமுண்டு. பஞ்சாப், ராஜபுதனம், கராச்சி முதலிய பகுதிகளில் கல்லுப்பு கூடக் கிடைத்து வருகிறது. இவ்விஷயங்களை ஆராய்ந்தால் இந்தியாவில் உண்டாகும், உண்டாகக் கூடும் அவ்வளவு உப்பையும் இந்த 30 கோடி மக்களும் இனமாகச் செலவழித்து மிஞ்சுவதை வெளியூர்களுக்குக்கூட தானமாக அனுப்பலாம். ஆனல் தர்ம யுகம் நசித்துப் போயுள்ள இந்தக் காலத்தில் உப்பைக் கூட நாம் விலை கொடுத்து வாங்கவேண்டியிருக்கிறது. செலவாகும் உப்பில் மூன்றில் ஒரு பங்கு வெளிநாடுகளினின்று வரவழைத்து உபயோகிக்கவும் வேண்டியிருக்கிறது.

ஊரெல்லாம் உப்புச் சாப்பிடுவதால் அவர்கள் எல்லோரும் துரைத்தனத்திற்கு வரி தரவேண்டுமென டியூக் ஆப் கர்லைல் என்ற ஆங்கிலப் பிரபு யோசனை கூறினராம். ஆதலால் பிரிட்டிஷ் துரைத்தனம் உப்பு வியாபாரத்திலும், உப்புக்கு வரி போடுவதிலும் மும்மரமாக இறங்கியதாம். இத்துறையில் இப்பொழுது சர்க்காருக்கு ஆறு கோடி ரூபாய்க்கு மேல் வருமானம் கிடைக்கிறது.

இந்திய வியாபாரங்களை ஒவ்வொன்றாகக் கைப்பற்றிய ஆங்கிலேயர் இந்த உப்புத்தொழிலைக் கைப்பற்றிக் கொண்ட சரித்திரம் வெகு விநோதமானது. கும்பினிக்காரர்களில் சாமர்த்தியசாலியான கிளைவ் என்பவன் இந்த உப்பு வியாபாரத்தைக் கொண்டு நடத்த ஏற்பாடு செய்து தனி வியாபாரிகளின் வாயில் மண் போட்டதிலிருந்து நமது லவண பாரதம் தொடங்குகிறது. 1836-ம் வருஷத்தில் உப்புக்

கமிஷன் என ஒன்று நியமிக்கப்பட்டது. சீமை உப்பை இந்தியாவில் விற்பதற்காக இந்திய உப்புக்கு வரி விதிக்க வேண்டுமென இந்தக் கமிஷன் சிபார்சு செய்தது. இங்கிலாந்தில் லிவர்பூல் துறைமுகத்திலிருந்த கப்பல்கள் ஏற்றி வருவதற்குச் சாமான்கள் எவையுமில்லாமல் கிடந்தன. கப்பல்கள் ஆடி, அசங்காமல் செல்வதற்கு அடிப்பாரம் வேண்டாமா? அதற்குக் கூட ஒன்று மில்லாமல் அவை சமுத்திரத்தில் எங்ஙனம் செல்லும்? எனவே அடிப்பாரத்துக்குத் தோதாக அவை ஏதாவதொரு சுமையை ஏற்றிக்கொள்ள வேண்டியிருந்தது. முதன் முதலில் அவை மண்ணை ஏற்றிக்கொண்டு பிரயாணம் செய்து வந்தன. இப்பொழுது கல்கத்தாவிலுள்ள சௌரிங் கிரோட் என்பது ஆதி காலத்தில் ஒரு கால்வாயாகவே இருந்தது; சீமைக் கப்பல்கள் மண்ணைக் கொண்டு வந்து தள்ளியே இந்தக் கால்வாய் மூடிப் போய் இன்று ரஸ்தாவாக விளங்கி வருகிறது.

உண்மை என்னவெனில் இந்திய ஏற்றுமதியை விட இறக்குமதி மிகவும் குறைவாக விருந்தது. 1925-ம் வருஷத்தில் இந்திய ஏற்றுமதியின் மதிப்பு 316 கோடி ரூபாய்; இறக்குமதியின் மதிப்போ 249 கோடி ரூபாய்; எனவே இந்தியாவிற்கு வரும் கப்பல்கள் அநேகமாகக் காலியாக வர நேரிட்டது. இதைத் தடுக்கவேண்டியே பிரிட்டிஷார் காலியாகச் செல்லும் கப்பல்களில் தங்கள் ஊர் உப்பை ஏற்றி அனுப்பத் தீர்மானித்தார்கள். இந்திய உப்புக்கு வரி விதித்து, அதன் விலையை உயர்த்தினுலொழிய சீமை உப்பு விற்பனையாகாதாதலால் அந்த உபாயமும் கைக்கொள்ளப்பட்டது.

ஹேஸ்டிங்ஸ் என்ற கவர்னர் உப்பளங்களுக்கெல்லாம் சொந்தக்காரர். ஆங்கிலேயர் என்று கூறியது மட்டுமன்றி, அந் நிலங்களை வியாபாரிகளுக்குக் குத்தகைக்கே கொடுக்கமுடியும் என்றும் சொன்னார். இந்த வரும்படியும் போதாதென்று ஏலக் குத்தகைக்கு விடுவதென கார்ன் வாலிஸ் பிரபு நிர்ணயித்தார்.

இவ்வாறு அடிமைத்தனமான குத்தகைக்கு ஒப்புக் கொண்டவர்கள் அவ்வளவு உப்பையும் மணு இரண்டு ரூபாய் வீதமோ அல்லது வேறு குறிப்பிட்ட தொகைக்கோ கம்பெனிக்காரர்களுக்கு விற்றுவிடவேண்டும். பிறகு

ஆங்கிலேயர் தங்களிஷ்டப்படி விலை விதித்து உப்பை விற்பனை செய்வர். இவ்வாறு உப்பு விவசாயிகளை நெருக்க நெருக்க சாகுபடி செய்பவர்கள் இந்தத் தொழிலை விட்டு விடத் தொடங்கினுர்கள். உப்பு விலை விஷம்போல் ஏற ஆரம்பித்தது. அதிகாரிகளின் தொந்தரவை மீறிச் சிலர் திருட்டு உப்பை விளைக்கவும் விற்கவும் ஆரம்பித்தார்கள். இதைத் தடைசெய்யவும் ஒரு சட்டம் இயற்றப்பட்டது. இவ்வாருக நாளடைவில் வங்காளத்தின் உப்பளங்கள் மூடப்பட்டன.

1845-ம் வருஷத்தில் பிரிட்டிஷ் உப்பு 5,62,616 மணு இந்தியாவில் இறங்கியதாகவும், பிறகு 1851-ம் வருஷத்தில் 18,50,762 மணுக்கள் இறங்கியதாகவும் புள்ளி விவரங்கள் அறிவிக்கின்றன. இவ்வளவும் போதாதென்று உப்பின் வரியை உயர்த்துவதிலும் அதிகாரிகள் பிரதி வருடமும் மும்முறமா யிறங்கினர். உதாரணமாக 1814-ம் வருஷத்திலிருந்து 1919-ம் வருஷத்திற்குள் நூற்றுக்கு இருபது பங்கு (சுமார்) வரி ஏறி யிருப்பதை ஸ்ரீமான் கே. டி. ஷா என்பவர் "இந்திய தனதாயம்" என்ற நூலில் காட்டி யிருக்கின்ருர். இந்தியாவில் ஒவ்வொருவரும் தலைக்கு மூன்றே காலணு வருஷா வருஷம் உப்புக்கென செலவிட அரசாங்கம் செய்திருக்கும் அநியாயத்தை என்னென்பது?

இதை யறிந்தே ஏழைகளின் பங்காளனுகத் தோன்றி யிருக்கும் காந்தியடிகள் வைஸ்ராய்க்கு விடுத்த பதினொரு நிபந்தனைகளில் உப்புவரியை ஒழிக்கவேண்டிய அவசியத்தை வற்புறுத்தினுர்.

சபர்மதியில் தலைவர்கள் கூடிக் கலந்ததும் இந்த உப்பு உணர்ச்சியே நாடெங்கும் பரவி யிருந்தது. நாமே உப்பைத் தயாரிப்பது லாபகரமாக விருக்குமா என ஜனங்கள் ஆராய்ந்தனர். கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்கள் இவ்வாராய்ச்சியில் வெகு மும்முறமாக ஈடுபட்டனர். ஆனல் லாபத்தை உத்தேசித்து உப்புச் சத்தியாக்கிரகம் தொடங்கவில்லை; ஒரு அநீதியை ஒழித்துப்போடுவதற்காகவே அப் போர் கிளத்தப்பட்டது. அப்படியாயின் காந்திஜியின் திட்டம் யாது? அவர் செய்யப்போவது தான் என்ன? என்ற கேள்விகளே எங்கும் எழுந்தன.

சீக்கிரத்திலேயே மகாத்மா காந்தி இராஜப்பிரதிநிதிக்கு ஓர் கடிதமெழுதி அதில் தமது போர்த்திட்டத்தை விளக்கினர். அக்கடிதத்தின் விபரம் இதுதான் :—

## இராஜப்பிரதிநிதிக்கு இறுதிக் கடிதம்

சத்தியாக்கிரக ஆசிரமம்,
சபர்மதி, 2—3—1930.

அன்பார்ந்த நண்ப,

சட்ட மறுப்பைத் தொடங்குவதற்கு முன்னமே அதனல் ஏற்படும் சிரமங்களை உணர்ந்திருக்கிறேனுதலால் தங்களுக்கு எனது மனக்கருத்தை அறிவித்து விட்டு பின்பு எனது போரை வகுக்க உத்தேசித்தே இதை எழுதலானேன்.

எனது நம்பிக்கை நிர்மலமா யிருக்கின்றது. எனக்கும் என்னைச் சேர்ந்தவர்கட்கும் இன்னல் இழைக்கும் எதிரியையும், மனிதசமூகத்தையும், உயிருள்ளயாவற்றையும் வேண்டுமென்று தாக்கும் எண்ணம் எனக்கு ஒருபொழுதும் கிடையாது. பிரிட்டிஷ் ஆட்சியை ஓர் சாபமென நான் எண்ணியிருந்தாலும் ஒரு ஆங்கிலேயனையோ அல்லது இந்தியாவின் மீது அவன் கொண்டுள்ள அன்பையோ தாக்கும் எண்ணம் எனக்கில்லை.

என்னைத் தப்பர்த்தம் செய்துகொள்ளக்கூடாது. ஆங்கிலேயர்களில் எனக்கு அநேக நண்பர்களுண்டு. அவர்களில் அநேகர் இந்த ஆட்சியை வெறுத்தும் கூறி யிருக்கின்றனர். சரி; நான் பிரிட்டிஷ் ஆட்சியைச் சாபம் எனக் கூறுவதற்கான காரணங்கள்தான் என்ன? பிரிட்டிஷ் ஆட்சியையாளும் கொள்ளையடிக்கும் முறை காரணமாக லக்ஷக் கணக்கான இந்திய மக்கள், ஏழைகள் வறுமை வாய்ப்பட்டுளர். ராணுவ அரசாங்கச் செலவுகள் நாட்டின் அளவுக்கு மிஞ்சி யிருக்கின்றன. ராஜீய விஷயத்திலோ நாங்கள் அடிமைகளினும் கேவலமாகக் கிடக்கிறோம். கலைகளை இழந்துவிட்டோம்; ஆயுதங்களைப் பறி கொடுத்துவிட்டோம்; ஆத்மசக்தியை இழந்தோம்; கோழைகளானோம்.

எல்லோரையும் போல நானும் கூட்டுறவு மகாநாட்டில் பெரிதும் நம்பிக்கை கொண்டிருந்தேன். ஆனல் பிரிட்டிஷ்

அரசு குடியேற்ற நாட்டு அந்தஸ்தையேனும் தரும் என்று பிரமாணம் செய்யத் தாங்கள் பின்வாங்கிவிட்டீர்கள். டில்லிப் பேச்சிலும் ஓர் நன்மையும் விளையாததால் கல்கத்தா காங்கிரஸின் தீர்மானப்படி நானும், பண்டித மோதிலாலும் வேறுவகை தேடவேண்டியதாயிற்று.

ஆனால் குடியேற்ற நாட்டந்தஸ்தைப்பற்றி உறுதி தந்திருந்தால் இந்த நிலை ஏற்பட்டிருக்காது. இதைத் தருவதைப்பற்றிய எண்ணமே பிரிட்டிஷ் துரைத்தனத்துக்கு இல்லைபோலிருக்கிறது! இதுவரை நடத்திவரும் முறையையே இன்னும் நடத்தவேண்டுமென பிரிட்டிஷ் ராஜதந்திரிகள் எண்ணியிருக்கின்றனர். பிரிட்டிஷ் வியாபாரம் குறையாதிருப்பதற்கான வழிதேடுவதிலேயே அவர்கள் அக்கரை காட்டுகின்றனர்.

இந்தியாவைக் கொள்ளையடிக்கும் முறையை அகற்றுவிட்டால் இந்தியாவின் இரத்தத்தையேனும் விரைவில் உறிஞ்சிவிட வேண்டும். பொக்கிஷ அதிகாரி தன் கைவசமுள்ள பேனாவின் ஓர் கிறுக்கலால் நாணயமாற்று விகிதத்தில் ஒரு மாறுதலைச் செய்து இந்தியாவின் செல்வத்தில் ஒரு சில கோடி ரூபாய்கள் கரையும்படி செய்துவிடுகிறார். சில அறிஞர்கள் யோக்கியமாக அம்முயற்சியை எதிர்த்தால் சில பணக்காரர்களை உடன்சேர்த்துக்கொண்டு எதிர்ப்பை நசுக்குகிறார்கள்; பொடிப் பொடியாக்கி விடுகிறார்கள்.

இதை அறிந்தே பூரண ஸ்வராஜ்யம் கோரினோம். ஆனால் தேசநலத்தைக் கோருபவர்கள் பூரண ஸ்வராஜ்யத்தைப் பூரணமாக அறியாதவரை வாயில்லாப் பூச்சிகள் போல் வாழும் ஏழைகளுக்கு நலம் ஏற்படாது. அதற்காக அதன் அந்தரார்த்தத்தை நான் போதித்து வருகிறேன். தங்களுக்கும் முக்கியமானவற்றை எடுத்துக் கூற விரும்புகிறேன்.

பூரண சுயராஜ்பத்தை அனுபவிக்கும் இந்தியாவில் நிலவரி பெரிதும் திருத்தி அமைக்கப்படும். தற்போது நிரந்தர வரி ஏற்பட்டுள்ள இடங்கள் பணக்கார ஜமீன்தார்களுக்கு அனுகூலமாக விருக்கின்றனவேயன்றி ஏழைக் குடியானவர்களுக்கல்ல. இருக்கும் நிலையில், இஷ்டப்பட்டால் ஏழையின் நில உரிமையையும் பிடுங்கிவிடலாம்; ஏழைக் குடியானவன் நலத்திற்கான தீர்வையின் முறைகள் நாட்டில்

ஏற்பட வேண்டும். இப்பொழுதுள்ள பிரிட்டிஷ் ஆட்சி முறை ஏழைகளைக் கசக்கிப் பிழிவதாக விருக்கிறது. அவன் தின்னும் உப்புக்கும் வரி கொடுக்க வேண்டியிருக்கிறது. பணக்காரனைவிட ஏழைதான் அதிக உப்பு தின்கிறான்; ஆதலால் அவன் மீதுள்ள சுமையின் பலம் அதிகமே ஆகின்றது.

ஏழையினிடமிருந்துதான் மதுபானத்திற்கும்,லாஹிரிப் பொருள்களுக்கும் வரி வாங்கப்படுகிறது. அவர்களது கௌரவத்தையும், ஆரோக்கியத்தையும் அழிப்பது அதுவே யாகும். ஒருவனுடைய ஸ்வதந்திரத்தில் தலையிடுவதில்லை எனக் கூறப்படுவதெல்லாம் வெறும் சாக்குப் போக்குகள் எனவே நான் கூறத் துணிவேன். 1919-ல் சீர்திருத்தத்தை ஸ்தாபித்த கெட்டிக் கண்கள் இந்த வரிவசூல் நிர்வாகத்தை இரட்டை யாட்சியின் பொறுப்பான பகுதிக்கு மாற்றினர். ஆனால் அப்பகுதிக்கோ அதிகாரமே கிடையாது. இந்த மதுபான வரியை ஒழித்து விட்டால் கல்வி இலாகா தடுமாற்றமடையும். ஏழைகளின்மீது வரி சுமரச் சுமர, நூல் நூற்பது போன்ற கைத்தொழில்கள் நாசமாகின்றன. இதனால் நாட்டின் செல்வம் பெருகுவதற்கான மார்க்கமும் போய்விடுகிறது.

போதாதென்று இந்தியாவின் கடனும் ஏறிக் கொண்டே வருகிறது. இந்தியா ஸ்வதந்திர மடைந்ததும் இந்தக் கடன் தொகைகள் பரிசீலனை செய்யப்பட்டு, நியாயமானவையையே ஏற்கப்படும். அக்கிரமமான கடன் தொகைகளைத் தரமாட்டோம். அந்நிய அரசு இந்தியாவில் இருப்பதால் உலகில் எந்த நாட்டிலும் இல்லாத அநீதச் செலவுகள் இங்கு நடைபெறுகின்றன.

உதாரணமாக தங்களுடைய சம்பளத்தையே பாருங்கள். மாதத்திற்கு 21,000 ரூபாய்க்கு மேல் சம்பளம் வாங்குகிறீர்கள். இத்துடன் இன்னும் சில தொகைகளும் கிடைக்கின்றன. பிரிட்டிஷ் மந்திரிக்கு வருஷத்திற்கு 5000 பவுன், அதாவது மாதத்திற்கு 5400 ரூபாய் சம்பளமே தருகிறார்கள். ஆனால் தாங்களோ நாள் ஒன்றுக்கு 700 ரூபாய் சம்பளம் பெறுகிறீர்கள். ஏழை இந்தியனின் சராசரி தின வருமானம் இரண்டணாகூட இல்லை. கிரேட் பிரிட்டனின் மக்களுக்கு சராசரி தினம் ஒன்றுக்கு இரண்டு

ரூபாய் வருமானம் கிடைக்கின்றது ; ஆனால் அங்குள்ள மந்திரியோ தினம் ஒன்றுக்கு 180 ரூபாய்தான் சம்பளம் வாங்குகிறார் ; அதாவது பிரிட்டனின் சராசரி வருமானத்தைப்போல் 90 பங்கே பெறுகின்றார். ஆனால் தாங்களோ இந்தியாவின் சராசரி வருமானத்தைவிட 5000 மடங்குக்கு மேல் சம்பளம் வாங்கிக்கொள்ளுகிறீர்கள். இதைப்பற்றி நன்றாக ஆலோசிக்க வேண்டுமென்று தங்களை வணங்கிக் கேட்டுக்கொள்ளுகிறேன். உண்மையை விளக்குவதற்காக ஒரு உதாரணத்தை இங்கு காட்டினேன். ஆனால் இதனால் தங்களையோ, தங்கள் உணர்ச்சிகளையோ புண் படுத்த நான் விரும்பியதாக எண்ணிவிட வேண்டாம். தங்கள் பால் நான் வைத்துள்ள அன்பும், மரியாதையும் அளவு கடந்தவை. தாங்கள் வாங்கும் சம்பளப் பணம் தங்களுக்குத் தேவையே இல்லை என்பதை நான் அறிவேன். ஒரு வேளை அவ்வளவும் தர்மத்துக்குப் போகிறதோ என்னமோ ! எது எப்படியிருந்தாலும் இவ்வாறு ஊதாரியாக விருக்கும் ஓர் அரசு முறையை ஒழிக்கத்தான் வேண்டும். இராஜப்பிரதிநிதியின் சம்பளத்துக்குச் சொல்லுவதை நிர்வாகம் பூராவுக்கும் சொல்லலாம்.

இந்தியாவின் வரிச்சுமையைக் குறைக்க வேண்டுமானால் நிர்வாகத்தின் செலவுகளைக் குறைத்தால்தான் முடியும். இதற்கு ஆட்சி முறையையே மாற்றவேண்டும். இந்த மாற்றத்தை ஏற்படுத்தவே பூரண ஸ்வராஜ்யம் தேவை. ஜனவரி மாதம் 26-ந் தேதி லக்ஷக்கணக்கான மக்கள் பேருணர்ச்சியுடன் நடத்திய கொண்டாட்டமே இதற்கறிகுறியாகும். தங்களைக் கொன்றுவரும் சுமையைத் தூக்கி எறிவதே ஸ்வராஜ்யம் என்று மக்கள் கருதுகின்றனர். இந்தியர்கள் ஒரு முகமாக எதிர்த்தபோதிலும் பிரிட்டிஷ் ராஜீயக்கட்சிகளில் ஒன்றாவது இந்த இந்தியக் கொள்ளையை நிறுத்துவதற்கு விரும்பவில்லை. இந்தியா ஒன்றுபட்ட ஓர் தேசமாக வாழவேண்டுமானால், உரிமை பெற்ற நாடாக விளங்கவேண்டுமானால், மக்கள் பசியால் வாடி, வதங்கி சிறுகச் சிறுகச் சாவது நிற்கவேண்டுமானால், உடனே ஓர் நிவர்த்தியைத் தேடவேண்டும்.

சர்வகக்ஷி மகாநாடு ஒருபொழுதும் நிவர்த்தியாகாது. வெறும் வாக்குவாதம் நிவர்த்தியாகிவிடுமா ? இந்தியாவில் தான் நடத்திவரும் வியாபாரம் குறையாதிருக்கவே கிரேட்

பிரிட்டன் பாடுபடும். அதேபோல் சாவினின்றும் மீட்கும் சக்தியை இந்தியா உணரவேண்டும். ஆனால் ஹிம்ஸையில் நம்பிக்கையுடையவர்கள் நாட்டில் நாளுக்கு நாள் மிகுந்து வருகின்றனர். நான் எதை அடைய விரும்பு கிறேனோ அதையே அவர்களும் விரும்பி நிற்கின்றனர். ஆனால் அவர்களது முயற்சியால் வாயில்லாப் பூச்சிகளான ஏழை மக்களுக்கு நலம் ஏற்படாது என்றே தோன்றுகிறது. நிர்மலமான அஹிம்ஸையினாலேயே பிரிட்டிஷ் துரைத் தனத்தின் பலாத்காரத்தை எதிர்க்க முடியுமென நான் நம்புகிறேன். அநேகர் அஹிம்ஸையின் சக்தியை உணருவ தில்லை. ஆனால் அஹிம்ஸையின் அபூர்வ சக்தியை நான் எனது அனுபவத்தால் அறிந்திருக்கிறேன். ஆதலால் இந் தச் சக்தியை உபயோகித்து பிரிட்டிஷ் ஆட்சியின் பலாத் காரத்தையும், கட்டுப்பாடில்லாவிடினும் வரவர வளர்ந்து வரும் ஹிம்ஸைக் கோஷ்டியின் சக்தியையும் தாக்க எண்ணி யுள்ளேன். நான் எதுவும் செய்யாமல் சும்மா இருந்தால் இரண்டு கக்ஷிகளும் வலுத்துவிடுமென கண்டுகொண்டேன். மேலும் நான் வாளா விருப்பது மகா பாபமாகும்.

முதன் முதலில் சத்தியாக்கிரக ஆசிரமத்தினர் இந்தச் சட்டமறுப்பு இயக்கத்தில் கலந்து கொள்ளுவார்கள். பின்பு நம்பிக்கை கொண்ட பலரும் இதில் சேருவர். இவ் வாறு நான் தொடங்கியுள்ள அஹிம்ஸைப் போரைச் சிலர் பித்தனின் துணிகரச் செயல் எனக் கூறலாம். ஆனால் சத்தியத்தின் வெற்றி தியாகத்தைப் பொருத்திருக்கிறது. தங்களைவிடப் பழமை பொருந்தியும், கலை உணர்ச்சி மிகுந்தும் உள்ள ஓர் நாட்டினரை இன்னொரு நாட்டினர் அறிந்தோ அறியாமலோ அடக்கிவந்தால் அதை மாற்ற எத் தகைய தியாகத்தையும் செய்யலாமென்றே நினைக்கிறேன். "மாற்ற" என்று நான் கூறியிருப்பதிலிருந்து பிரிட்டிஷ் மக்களின் எண்ணத்தை மாற்றவே முயலுகின்றேன் என்ப தும், அவர்கள் செய்துள்ள தீங்குகளை உணரச்செய்ய பாடு படுகின்றேனென்பதும், அவர்களுக்குத் துன்பமிழைக்க விரும்பவில்லை என்பதும் விசிதமாகும்.

எனது நாட்டு மக்களுக்கு நான் பணிசெய்வதுபோல் பிறருக்கும் தொண்டு செய்ய விரும்புகிறேன். 1919-ம் வருஷம்வரை கண்மூடித்தனமாக நான் பிரிட்டிஷ் அரசாங் கத்துக்குச் சேவை செய்தேன். பிறகே கண் திறந்தது ;

அதன் பயனாக ஒத்துழையாமை இயக்கத்தைத் தோற்று வித்தேன். அதுவே சிறந்த ஆயுதமென இன்னமும் கருதி யிருக்கிறேன். நாட்டு மக்கள் என்னோடு சேர்ந்து உழைத் தால், பிரிட்டிஷாரால் சுமத்தப்படக்கூடிய இன்னல்களைப் பொறுமையுடன் சகித்துக் கொண்டால் கல்நெஞ்சையும் கரைத்துவிடலாமென நான் உறுதிகூற முடியும்.

பிரிட்டிஷ் ஆட்சியால் இந் நாட்டிற்கு ஏற்பட்டுள்ள தீங்குகளை ஒழிக்கவே நான் முனைந்துள்ளேன். இத் தீங்கு களின் காரணமாகவே பிரிட்டிஷ் சம்பந்தத்தை அறுத்துக் கொள்ள நான் விரும்புகிறேன். பிரிட்டிஷ் ஆதிக்கத்தை ஒழிக்கவேண்டுமானால் இடையேயுள்ள இடைஞ்சல்களை அகற்றவேண்டும். சட்டமறுப்பினாலேயே ராஜீயப் பேச் சுக்கு இடமேற்படும் என்பது எனது துணிவு.

பிரிட்டிஷ் வர்த்தகம் என்னும் பேராசையில்லாவிடின் எங்களது சுதந்திரத்துக்குத் தாங்கள் இடம் தந்து விடுவீர் கள். ஆதலால் தங்களை நான் வருந்திக் கேட்டுக்கொள்ளு வதென்னவென்றால், மனித சமூகத்தின் நன்மையையே கோரவேண்டும் என்றும், இவ்வெண்ணத்துடன் சம அந் தஸ்தைப் பெற்று இரு தேசத்தினரும் சமரஸப் பேச்சில் இறங்க வேண்டுமென்றும், நட்புரிமை வளர வேண்டு மென்றும், ஒருவருக்கொருவர் உதவி செய்யும் பான்மை, பெருக வேண்டுமென்றும் நான் விழைகிறேன்.

தாங்கள் நான் மேலே குறிப்பிட்டுள்ள தீங்குகளைப் போக்க முற்படாமலும், எனது இக் கடிதத்தால் தங்கள் ஹிருதயத்தில் எவ்வித மாறுதலேற்படாமலு மிருந்தால் இம்மாதம் 11-ந் தேதி யன்று என்னுடைய ஆசிரமவாசி களை அழைத்துக்கொண்டு உப்புச் சட்டத்தை மீறுவதற் காக நான் புறப்படுவேன்.

ஏழை மக்களின் நிலையினின்று பார்த்தால் இந்த உப்பு வரி அநீதமானது. சுதந்திர இயக்கம் ஏழைமக்களுக் கென்றே ஏற்பட்டதாதலால் இந்த அநீதியை எதிர்த்துப் போரிடவே முதலில் முயற்சி செய்யப்படும்.

இந்த உப்பு விஷயத்தில் சர்க்கார் இவ்வளவு நாள்வரை ஏகபோகமாக அனுபவித்து வந்தனர். ஆனால் எந்நாளும் இதை நாம் அனுமதிக்க முடியாது. என்னைத் தாங்கள்

கைது செய்து என் கோரிக்கைகளை ஈடேறாமல் செய்து விடலாம். ஆனால் அந் நிலைமை ஏற்பட்டால் பதினாயிரக் கணக்கான மக்கள் கட்டுப்பாடாக என்னைப் பின்பற்றத் தயாராக இருப்பர். உப்புச் சட்டம் எடுபடாதவரை அதிகாரவர்க்கம் இழைக்கும் துன்பங்களைப் பொறுமையுடன் ஏற்பர்.

அநாவசியமாகத் தங்களுக்கு அசௌகரியங்கள் உண்டுபண்ணவோ, கஷ்டங்களில் தங்களைச் சிக்கவைக்கவோ விரும்பவில்லை. எனது கடிதத்தில் ஏதேனும் விஷயமிருக்கிறதாகத் தங்களுக்குத் தோன்றினால், தங்களுக்கு என்னுடன் கலந்து பேசவேண்டுமென விருப்ப மிருந்தால் இக்கடிதத்தைப் பத்திரிகைகளில் வெளியிடாதிருக்க எனக்குத் தந்தி கொடுங்கள்.

தங்களைப் பயமுறுத்துவதற்காக நான் இதை எழுதவில்லை. சட்ட மறுப்புக்கு இது முன்னறிக்கையாகும். ஆதலால் ஓர் ஆங்கில இளைஞர் மூலம் தங்களுக்கு இது சேருமாறு ஏற்பாடு செய்திருக்கிறேன். இந்தியா விஷயத்தில் அவருக்கு மிகுந்த அனுதாபமுண்டு. அவர் அஹிம்சையில் நம்பிக்கை கொண்டவர். இக்காரியத்திற்காகவே கடவுள் அவரை என்னிடம் அனுப்பினார் போலும்!

இப்படிக்கு,
தங்களுடைய அன்பன்,
எம். கே. காந்தி.

மிஸ்டர் ரெஜினால்ட் ரேனால்ட் என்ற ஆங்கில இளைஞர் இக்கடிதத்தை டில்லிக்கு எடுத்துச் சென்றார். இவ்வன்பர் சிறிது காலம் சபர்மதி ஆசிரமத்தில் இருந்தவர். இக்கடிதத்திற்கு விரைவிலேயே இர்வினிடமிருந்து பதில் கிடைத்துவிட்டது. பதில் பூராவும் அதிருப்திகரமாகவே இருந்தது என்பதைச் சொல்லத் தேவையில்லை.

## ரொட்டிக்குக் கல்லா?

வைஸ்ராயின் பதில் குறித்து மகாத்மா விடுத்த அறிக்கை அடக்கமானதாகும். ஆனால் தைரியமும், தீரமும் நிறைந்ததாகவு மிருந்தது.

"மண்டியிட்டு, வணங்கி நான் வைஸ்ராய்க்குக் கடிதம் எழுதினேன். ஆனால் சுத்த அதிருப்திகரமான பதிலே எனக்குக் கிடைத்திருக்கிறது. ரொட்டி கேட்டால் கல்லையா கொடுப்பது? மகாஜனங்களின் கிளர்ச்சிக்கே ஆங்கிலேயர் வணங்குவர். ஆகவே வைஸ்ராயின் பதில் கண்டு நான் ஆச்சரியப்படவில்லை. "சாந்தம் சாந்தம்—அமைதி அமைதி" என அவர் அடிக்கடி பேசுகிறார். சிறையிலுள்ள சாந்தமும், அமைதியும் தான் இந்திய மக்களுக்குக் கதி. இந்தியா பூராவுமே ஒரு பெரிய சிறைச்சாலையாகும். பிரிட்டிஷ் துரைத்தனத்தின் சட்டத்தை நான் சட்டை செய்யவில்லை; அதை மறுப்பதே எனது தர்மமென நான் கருதுகிறேன்."

இப்படியாக உப்புச் சட்டத்தை மீறுவதற்காக காந்திஜி புறப்பட்டுச் செல்லவேண்டியதுதான் என ஏற்பட்டுவிட்டது. இதற்கான ஏற்பாடுகளனைத்தும் துரிதமாக நடந்தன. ஆசிரமவாசிகளிலிருந்து காந்தி எழுபத்தோரு பேர்களைப் பொறுக்கி எடுத்துக்கொண்டார். குஜராத் வித்தியா பீடத்தின் மாணவர்கள்கூட இதில் பங்கெடுத்துக்கொண்டனர். இவர்கள் எந்தவிதமான கட்டுப்பாட்டிற்கும், கஷ்டங்களுக்கும் பழகினவர்கள். இருநூறு மைல் தூரம் காலால் நடந்து சென்று, தண்டி என்னும் கடற்கரைப் பிரதேசத்தை அடையத் தீர்மானித்தார் மகாத்மா.

இங்ஙனம் காந்திஜி போருக்கு ஆயத்தம் செய்து கொண்டிருக்கையில் அவரது பிரதம சீடரும், சத்தியாக்கிரகத்தில் ஊறி எழுந்தவருமான ஸ்ரீயுத வல்லபாய் படேல் அடுத்து வரும் பாரதப் போரைப்பற்றிக் கிராமவாசிகளிடையே பிரசாரம் செய்து, அவர்கள் எத்தகைய கஷ்டங்களையும் ஏற்கத் தயாராக விருக்க வேண்டுமென்றும் எச்சரித்து வந்தார். "இனி கல்யாணம், கார்த்திகைகளையெல்லாம் விட்டு விடுங்கள்; ராஜாங்கத்துடன் போரிடப் புறப்பட்டுவிட்ட தேச மக்களுக்குக் கல்யாணம் எதற்கு, கார்த்திகை எதற்கு? நாளைய தினத்திலிருந்து நீங்கள் எத்தகைய தியாகத்திற்கும் தயாராக விருக்கவேண்டும்; வீடு வாசல்களை விட்டொழிக்கவோ, பெண்டு பிள்ளைகளை விட்டுப் பிரியவோ, சிறைச்சாலைகளில் தவம் கிடக்கவோ அல்லது இன்னும் எப்படிப்பட்ட கஷ்டங்கள் நேரிட்டாலும் அவற்றை ஏற்கவோ சித்தமாக விருக்க வேண்டும்.

உங்கள் தாலூக்காவின் பெயரையும், கியாதியையும் நீங்கள் அறியாமல் காக்கவேண்டும். உங்களில் சிலர் நிலங்கள் பறி முதலாகிவிடுமே எனப் பயப்படுவதாக எனக்குத் தெரிய வருகிறது. பறிமுதலா? வரட்டுமே; அதற்குப் பயப்படுவானேன்? அரசாங்கம் என்ன நிலத்தை சீமைக்கா எடுத்துக்கொண்டு போய்விடும்? பின்னால் தானே திருப்பிக் கொடுத்து விடுகிறது. இதற்காக அஞ்சுவானேன்? ஒவ்வொரு கிராமமும் இனி போர்க்களமாக மாறி விடவேண்டும். ஒழுங்கும், கட்டுப்பாடும் மிக மிக அவசியம். எங்கேயாவது கொஞ்ச நஞ்சம் பயம் ஒட்டிக்கொண்டிருந்தால் அதையும் உதறி யெறியுங்கள்.

பலாத்காரத்தை மனதினால் கூட நினைக்காதீர்கள்; கோபத்தை விட்டொழியுங்கள். உலகமே கண்டிராத நிகரற்ற போர் ஒன்று ஆரம்பமாகிவிட்டது. இப் போரில் சாவுக்குப் பயப்படுகிறவர்கள் தீர்த்த யாத்திரைக்குக் கிளம்பிவிடுங்கள். பொருள் நஷ்டத்திற்குப் பயப்படும் பணக்காரர்கள் அன்னிய தேசங்களுக்கு ஓடிவிடுங்கள். உண்மையான கூர்ஜரன் கதவை அடைத்துக்கொண்டு வீட்டினுள் உட்காரமாட்டான். எறும்பு வரிசையைப் போல் மக்கள் சிறைபுக வேண்டும்.''

ப்ரோச் துறைமுக நகரில் ஸர்தார் படேல் கக்கிய வீரமொழிகள் இவை. படேலைக் கைது செய்து, சிறையில் அடைத்துவிட்டால் கூர்ஜரத்திலே சத்தியாக்கிரக இயக்கமே படுத்துவிடுமென்றும், மகாத்மாவுக்கு கை ஒடிந்தது போலாகிவிடுமென்றும் கருதி, சர்க்கார் மனப்பால் குடித்தது. ஆகவே மார்ச்சு மாத முதல் வாரத்தில் துரைத்தனம் அவரைக் கைது செய்தது. போர்ஸாத் தாலுக்காவில் ராஸ் என்ற கிராமத்தில் ஓர் பொதுக்கூட்டத்தில் பேசுவதற்காக அவர் போயிருந்தார். அங்குள்ள ஜில்லா மாஜிஸ்திரேட் அவரைப் பேசுவதினின்றும் தடுத்தார். குடியானவனாகப் பிறந்து, குடியானவரிடையே வளர்ந்து, குடியானவருக்காகப் பாடுபட்டுவந்த ஸர்தாரைக் குடியானவரிடையே பேசக்கூடாதெனத் தடுத்தால் அவர் மனம் கேட்குமா? ஆகவே அவர் சர்க்காரின் சட்டத்தை மீறி, உத்தரவை உடைத்தெறிந்து குடியானவர்களிடை சேர்ந்தார். அப்பொழுதுதான் அரசாங்கத்தின் நீண்ட கைகள் அவரைப் பற்றி இழுத்துச் சென்றன. மூன்று மாத சிறை

வாசமும், 500 ரூபாய் அபராதமும் அவருக்கு விதிக்கப் பட்டது. ஸர்தார் ஸபர்மதி சிறைச்சாலையை அடைந் தார். பாரதத்தின் சுதந்திரப் போரில் இதுவே களப்பலி யாகும்.

ஸர்தார் வல்லபாயை, பர்தோலி வீரனை, குஜராத்தின் முடிசூடா மன்னனைச் சிறைப்படுத்தியது கண்டு கூர்ஜரமே பொங்கி எழுந்தது. எழுபத்தையாயிரம் பேர்கள் சபர்மதி நதி தீரத்தில் கூடி, பரிபூரண சுயேச்சையைப் பெற உறுதி பூண்டு, தங்கள் தலைவரான வல்லபாய் போனவழியே தாமும் செல்லத் தீர்மானித்தனர். காந்திஜியே இக்கூட் டத்தில் தலைமை வகித்தார்.

தாம் கைதுசெய்யப்பட்டால் தேச மக்கள் என்ன செய்யவேண்டு மென்பதைப்பற்றி மகாத்மாஜி, பிப்ரவரி மாதம் 27-ந் தேதியன்று "யங் இந்தியா" வில் பின் வருமாறு எழுதினர் :—

"நான் சட்ட மறுப்பை ஆரம்பிக்கும்போது கவர்ன் மெண்டார் என்னைக் கைது செய்யாமலிருக்க முடியா தென்றுதான் நாம் வைத்துக்கொள்ளவேண்டும். பலாத் கார மின்மையை ஒரு மதக்கோட்பாடாக நம்பியிருப்பவர் கள் இம் முறை தம் சக்திக்கேற்றபடி சட்டமறுப்பில் கலந்துகொள்ளவேண்டும். ஒவ்வொருவரும் தம் தம் இஷ்டப்படி சட்டமறுப்பை நடத்த முடியாது. ஏகோ பித்தே செய்யவேண்டும்.

இம்முறை நான் ஆசிரமத்திலுள்ளவர்களையும், ஆசிரமத்தின் கண்டிப்புகளுக்கு உட்பட்டு அதில் நம்பிக்கை யுடையவர்களையும் கொண்டு மாத்திரம்தான் சட்ட மறுப்பை ஆரம்பிக்க உத்தேசித் திருக்கிறேன். முக்கியமான சத்தியாக்கிரகிகளைக்கூட நான் இப்போதைக்கு வெளியிலேயே வைக்க உத்தேசித் துள்ளேன். இந்தப்போராட்டத்தில் முதலில் என்னையும், ஆசிரமத்தையும் பரீக்ஷைக் குட்படுத்திக் கொள்ள விரும்பு கிறேன். நண்பர்களும், ஜனங்களும் வைத்திருக்கும் நம்பிக்கைக்கு நானும், ஆசிரமும் தகுதியானவர்களா வென்று சோதனைக் குட்படுத்த வேண்டிய காலம் வந்துவிட்டது. 15 வருஷகாலம் பரீக்ஷை நடத்திய பின்னும் அந்தத் தகுதி ஏற்படாவிட்டால் நானும்

ஆசிரமும் இல்லாமல் போய்விடுவதே நன்மை என்று எனக்குத் தோன்றுகிறது.

நான் கைது செய்யப்பட்ட பின் பலாத்கார மேற்படாமலிருக்கும் விஷயத்தைத்தான் மக்கள் அதிகமாகக் கவனிக்கவேண்டும். பலாத்காரம் எங்கு தோன்றினும் அதை அடக்குவதில் சத்தியாக்கிரகி தன் உயிரையும் கொடுக்கத் தயாராக இருக்கவேண்டும். இந்த நிபந்தனைக் குட்பட்டு போராட்டம் நடந்துகொண்டே போகவேண்டும். இதுவே எனது கடைசிப் போராட்டம் எனக் கருதுகிறேன். இதன் முடிவு ஆண்டவன் கையிலேயே இருக்கிறது.''

இனி நாம் யுத்தரங்கத்திற்குச் செல்லவேண்டியது தான். மார்ச்சு மாதம் பன்னிரண்டாம் தேதி. இந்தத் தினம இந்திய சரித்திரத்தை என்றும் பளிச்சிட்டுக்கொண்டிருக்கும். இந்தியரின் உயிருக்கு உயிரான உத்தம புருஷர், உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாத புண்ணியவான், நாமனைவரும் "மகாத்மா'' என அழைக்கும் மகிமை வாய்ந்த சிரேஷ்டர் "வெற்றி அல்லது சாவு'' என்ற வீராவேசத்துடன் சபர்மதியிலுள்ள சத்தியாக்கிரக ஆசிரமத்தை விட்டுப் புறப்பட்ட திருநாள். " இந்தப் போரில் வெற்றி கிடைக்காவிட்டால் எனது ஆசிரமத்தில் அடியெடுத்து வைக்கமாட்டேன்; சிறையிலேயே கிடப்பேன்; அல்லது பட்டினியிருந்து சாவேன்'' என்று மகாத்மா போர்க்களத்தில் குதித்த நன்னாள்.

அதிகாலையில் 6-30 மணிக்குக் காந்திஜி புறப்பட்டார். அவரது எழுபத்தோரு சீடர்களும் அவருடன் புறப்பட்டனர். மகாத்மா ஆவேசம் பூண்டு மகா யாத்திரை கிளம்பிய காட்சியை எம்மொழிகளால் வர்ணிப்பது? அன்று ஸ்ரீ ராமபிரான் வனவாசத்திற்குப் புறப்பட்ட காட்சியை யொத்திருந்ததாக ஒரு பத்திரிகை நிருபர் வர்ணித்துள்ளார். ஆமதாபாத் நகரமே கண்ணீர் பெருக்கியது. சபர்மதி மீண்டும் தனது முனிவரைப் பார்க்குமா? சென்ற பதினைந்து வருடங்களாக நாட்டு மக்களுக்குத் தமது தோலைச் செருப்பாகத் தந்ததை ஒப்ப உழைத்து உழைத்து மெலிந்த புண்ணியன் மறுபடியும் ஆமதாபாத்தினர் அகமகிழ அவ்வூருக்குள் நுழைவரா? இத்தகைய கேள்விகளே மக்களின் மனதைப் பெரிதும் அலைத்தன.

## தர்மப் போர்

உலக சரித்திரத்திலேயே இத்தகைய சம்பவம் நிகழ்ந்த தில்லை. முப்பத்து முக்கோடி மக்களின் ஏக பிரதிநிதியாக மகாத்மா போர்க் கோலம் பூண்ட காட்சி ஒப்பற்றதாகும். அச்சமயத்தில் அவரது முகத்தைக் சுற்றி ஜோதி அலைகள் தவழ்ந்தன. உதடுகளில் புன்சிரிப்பு தவழ்ந்தது, கையில் ஒரு தடியைப் பிடித்துக் கொண்டிருந்தார். சரி ! இந்தியா மட்டு மன்றி, பிரபஞ்சமே பிரமிக்கத்தக்க வகையில் இந்தியாவின் தலைவர், தளகர்த்தர், சேனுதிபதி தர்மப் போரில் இறங்கி விட்டார். இவ் வீரசிகாமணியுடன் பாரத நாடும் ஸத்தியப் போரை மேற்கொண்டது.

"என்ன இது ? உப்பாம் ; அதற்காகச் சத்தியாக்கிரக மாம் ; காந்தியாம்; என்னமோ காலால் நடந்துபோகிறாராம்! இதெல்லாம் என்ன, வேடிக்கையா அல்லது பித்தனின் மதி மயங்கிய செயல்களா ?" என ஏசினர் சிலர் ; எள்ளி நகை யாடினர் வேறு சிலர்; "பார்ப்போம் என்ன நடக்கிறதென்று" எனப் பக்குவமாகப் பேசி நின்றனர் ஏனையோர். ஆனால் காந்தி மூட்டிய தியாக அக்னி காட்டுத் தீபோல் நாடெங்கும் பரவி விட்டது. முன்னர் மகாத்மாவின் யாத்திரையைப்பற்றி இலேசாக எண்ணியவர்கள் நாட்கள் செல்லச் செல்ல தங்கள் தவறை உணரலாயினர். தேசம் பூராவுமே போர் முரசு கொட்ட வாரம்பித்து விட்டது. நகரங்கள் போரில் குதிக்கப் பின்வாங்கின காலத்து கிராமங்கள் ஜிமுதமாக ஈடுபட்டன. காந்திஜி தண்டிக்குப் போய்ச் சேர்ந்து, உப்புச் சட்டத்தை மீறுவதற்கு முன்னர் தேசமக்கள் எத் தகைய சத்தியாக்கிரகப் போரிலும் இறங்கக் கூடாதென காங்கிரஸ் கட்டளையிட்டிருந்தது. ஆனல் துரைத்தனம் மாத்திரம் ஏற்கெனவே தனது அடக்குமுறைப் பூதத்தை ஆட விட்டுவிட்டது. வங்காளத்தில் ஸ்ரீமான் சென்குப் தாவும் கைது செய்யப்பட்டார். கூர்ஜாத்தில் கிராமாதி காரிகளில் பலர் தங்கள் உத்தியோகங்களை ராஜினமா செய்துவிட்டனர்.

சத்தியாக்கிரகப் போரில் ஈடுபடுபவர்கள் மேற்கொள்ள வேண்டிய பிரதிக்ஞை ஒன்றைக காங்கிரஸ் மகாசபை தயாரித்தது. அதன் விவரம் பின்வருமாறு :—

(1) தேசிய காங்கிரஸ் நடத்திவரும் இந்திய ஸ்வதந்திரத்திற்கான சட்ட மறுப்பு இயக்கத்தில் நான் சேர விரும்புகிறேன்.

(2) எல்லா அமைதியான—சட்ட பூர்வமான—வழிகளாலும் பூரண சுயராஜ்யத்தை அடைவது என்ற தேசிய காங்கிரஸின் கொள்கையை நான் ஏற்றுக் கொள்ளுகிறேன்.

(3) இந்த இயக்கத்தில் சிறைக்குச் செல்லவும், எனக்கு ஏற்படக்கூடிய பிற துன்பங்களையும், தண்டனைகளையும் அனுபவிக்கவும் நான் தயாராகவும், சித்த முடையவனாகவு மிருக்கிறேன்.

(4) நான் சிறைக்கு அனுப்பப்பட்டால் காங்கிரஸ் நிதியிலிருந்து எனது குடும்பத்திற்கு எவ்விதப் பண உதவியும் வேண்டேன்.

(5) இயக்கத்தின் தலைவர்கள் இடும் கட்டளைகளுக்கு மாறு பேசாமல் உடனே கீழ்ப்படிந்து நடப்பேன்.

மகாத்மா யாத்திரையாகச் சென்று கொண்டிருக்கையில் அவரது ஆத்ம சக்தியின் பலத்தால் கண் விழித்தெழுந்த பாரதம் சிறிது சிறிதாகப் போருக்குத் தயார் செய்துகொண்டிருந்தது. பல்லாயிரக் கணக்கான ஆண், பெண் மக்கள் அய்யன் வெற்றியடைய வேண்டுமென ஆண்டவனைப் பிரார்த்தித்தனர். ஸ்திரீகள் போர் வீரர்களுக்குத் திலகமிட்டனுப்பினர். மகாத்மா வெகு வேகமாக நடக்கலானார். இளைஞர்களாலும் அவரது வேகத்தைப் பின்பற்ற முடியவில்லை. மகாத்மாவின் ஆவேச நடை ஆமதாபாத் வாசிகளின் மனதை வெட்டின. அவர் களைப்படைந்தால் ஏறிச் செல்வதெற்கென ஏறு குதிரை யொன்றும் படையுடன் சென்றது. உலகின் பல பாகங்களிலிருந்தும் வந்திருந்த பல்லாயிரக் கணக்கான பத்திரிகை நிருபர்களும் மகாத்மாவைப் பின் தொடர்ந்தனர்.

வழியெல்லாம் ஸினிமாப் படமெடுப்பவர்கள் பல நாட்டினின்று வந்து படமெடுத்துக் கொண்டிருந்தார்கள். இந்தப் படங்களை ஸினிமாக்களில் காட்டக்கூடாதென சர்க்கார் ஒரு பாணத்தைப் பிரயோகித்தனர். இந்தத் தடை உத்தரவு அநேகமாக எல்லா மாகாணங்களிலும் பரவி நின்றது. போலீஸார் தங்கள் நியாயமான வேலைகளை

யும் கடமைகளையும் மறந்தனர். அவர்களது கவன மெல்லாம் ஒத்துழையாதார்பாலே சென்றது.

காந்திஜி நாள் ஒன்றுக்கு பத்து அல்லது பதினைந்து மைல் வீதம் கிராமம் கிராமமாகச் சென்றார். ஒவ்வொரு கிராமத்திலும் அவருக்கு ராஜோபசாரம் நடந்தது. மக்களை அடக்கமாக விருக்கும்படியும், அஹிம்ஸையினின்று சிறிது கூட பிறழவேண்டாமென்றும், கதரை உடுத்தி தீண்டாமையை அகற்றும்படியும், தைர்யமுள்ளவர்கள் போரில் குதித்துத் தியாகம்புரிய வேண்டுமென்றும் அவர் உபதேசித்தார். மகாத்மாவின் படையினர் ஆங்காங்கு கிராமச் சீர்திருத்தப் பணி செய்துகொண்டே சென்றனர். பிரதி தினமும் மூன்று ரொட்டியும், கொஞ்சம் நெய்யும், கஞ்சியுமே அவர்களது ஆகாரம். நிஷ்காம்ய கர்மத்தைப்பற்றி அவர்களுக்கு அவர் அடிக்கடி உபதேசித்தார். வழி நெடுக மகாத்மாவின் தரிசனத்தைக் கண்ட போலீஸ் உத்தியோகஸ்தர்கள் கிராம உத்தியோகஸ்தர்களில் பலர் தங்களது உத்தியோகங்களை ராஜிநாமா செய்தனர்.

ஓரிடத்தில் மகாத்மா தமது எண்ணங்களைக் கொட்டிப் பேசினார். அதன் விவரம் இது : "பிரிட்டிஷ் ஆட்சியால் இந்தத் தேசம் நாசமாய்ப் போய்விட்டது. பணத்துக்குப் பணம் போயிற்று; கலைக்குக் கலை போயிற்று; ஆத்மசக்தியே அழிந்து போய் விட்டது. எனவே இந்த ஆட்சியை நான் ஒரு பெருத்த சாபமாகக் கொள்கிறேன். இதை அழித்துப் போட நான் முற்பட்டுவிட்டேன். "மன்னர் வாழ்கவே" என்ற பாட்டை நான் எத்தனையோ தடவை ராகம் போட்டு, வெகு அழகாகப் பாடி யிருக்கிறேன் ; என்னுடைய நண்பர்களில் பலரையும் பாடச் செய்திருக்கிறேன் ; மனுப்போடுவதிலும் பேட்டி கண்டு பேசுவதிலும் அப்பொழுது எனக்கு நம்பிக்கை யிருந்தது. ஆனால் இன்றோ அவை யெல்லாம் பறந்துவிட்டன. அந்த வழிகளில் இந்தக் கவர்ன்மெண்டு ஒருநாளும் இணங்கி வராது. இப்பொழுது ராஜத்துவேஷத்தையே எனது மதமாகக் கொண்டிருக்கிறேன். நமக்குச் சாபமாக விருக்கும் இந்தக் கவர்ன்மெண்டை அழித்துப் போடுவதே நமது தர்மமாகும்."

நிற்க, மார்ச்சு மாதம் 21-ந் தேதியன்று அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி ஆமதாபாத்தில் கூடி, மகாத்மாவைப்

பின்பற்றி தேசம் பூராவும் சுதந்திரப் போரில் ஈடுபட வேண்டுமென்றும், போரை அணி வகுத்து நடத்தும்படி மாகாண காங்கிரஸ் கமிட்டிகளுக்கு அதிகாரம் கொடுப்ப தாகவும், அவைகள் ஒழுங்கான வகையில் சட்டமறுப்புப் போரை நடத்தவேண்டுமென்றும், ஆனால் காந்திஜி தண்டியை அடைந்து, உப்புச் சட்டத்தை மீறி, தேசத்திற்குக் கட்டளையிடும் வரையில் போரை தொடங்கக் கூடாதென்றும், ஒரு வேளை அதற்கு முன்னதாகவே அவர் கைது செய்யப்பட்டுவிட்டால் அப்பொழுது தேசத்தினர் தாராளமாகப் போரில் இறங்கலாமென்றும் தீர்மானித்தது.

24 நாள் பிரயாணம் செய்த பிறகு (ஏப்ரல் 5-ந் தேதி) காந்திஜி தண்டி போய்ச் சேர்ந்தார். "எனக்கு வேண்டியதைப் பெற்றுக்கொண்டு திரும்புவேன்; இல்லையேல் எனது பிணம் கடலில் மிதக்கும்" என்று அவர் நவஸாரியில் கடைசியாக மிக உருக்கமாகப் பேசினார். அவரைப் பார்ப்பதற்காக ஸ்ரீமதி ஸரோஜினி தேவியும் அங்கு சென்றிருந்தார்.

தண்டியை அடைந்ததும் மகாத்மா ஒரு அறிக்கையை வெளியிட்டார். அதில் அவர் குறிப்பிட்டதாவது: "இதுவரையில் என்னுடைய திட்டத்தைத் தடை செய்யாமலிருக்கும் சர்க்காரை நான் பாராட்டாமலிருக்கமுடியாது. ஸர்தார் படேல், ஸ்ரீயுத ஸென்குப்தா இவர்களைக் கைது செய்த விஷயத்தில் மட்டும் துரைத்தனம் சற்று சிறு பிள்ளைத்தனமாக நடந்துவிட்டது. ஆனால் மேலும் கவர்ன்மெண்டார் சும்மா இருப்பார்களா என்பது கேள்வி. நாளையதினம்தான் நான் உப்புச் சட்டத்தை உடைத்தெறியப் போகிறேன். அதற்குப் பிறகு நாட்டிலுள்ள பல்லாயிரக்கணக்கான மக்களும் இந்த உப்புச் சத்தியாக்கிரகத்தில் ஈடுபடுவர். அப்பொழுதும் கவர்ன்மெண்டு சும்மா இருக்குமா? இதைப் பொறுத்துதான் பார்க்கவேண்டும்."

## மகாத்மா உப்பெடுக்கிறார்.

மறுதினம் அதாவது 6-ந் தேதி (தேசிய வார ஆரம்பம்) அதிகாலையில் பிரார்த்தனைகள் முடிந்ததும் காந்திஜியும், அவரது சீடர்களும் கடற்கரை சென்று, அங்கு சிதறிக் கிடந்த உப்பைப் பொறுக்கி, உப்புச் சட்டத்தை மீறினர்.

உடனே மகாத்மாஜி இன்னொரு அறிக்கையை வெளி யிட்டார். அதில் அவர் கூறியதாவது :—

"நான் உப்புச் சட்டத்தை மீறிவிட்டேன். இனிமேல் யார்வேண்டுமானாலும் உப்பைத் தயாரித்துச் சட்டத்தை மீறலாம். எங்கெங்கு இடங்களில் சௌகரியங்களிருக்கின்றனவோ அங்கெல்லாம் உப்புக் காய்ச்சலாம்; ஆனால் இதற்காக அவர்கள் தண்டிக்கப்படுவார்கள் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். இன்னொரு விஷயம். உப்புச் சட்டத்தை மீறுவதை இரகசியமாக அல்லாமல் பகிரங்கமாகச் செய்யவேண்டும். இம் மாதிரி தயாரிக்கப்படும் உப்பை ஜனங்கள் தங்கள் சொந்தத்திற்கும், கால் நடைகளுக்கும் உபயோகிக்கலாம்; விற்கவும் விற்கலாம். ஆனால் எல்லாம் சர்க்காரின் தண்டனைக் குட்பட்டுதான். இச் சத்தியாக்கிரகத்தில் ஈடுபட சக்தியற்றவர்கள் அன்னியத் துணி பகிஷ்காரம், கதர் அபிவிருத்தி, மது விலக்கு முதலிய வேலைகளில் ஈடுபடவேண்டும். மகாஜனங்கள் சிறைவாசத்துக்கு அஞ்சக் கூடாது. உப்பைப் பொறுக்கும்பொழுது கையிலுள்ள உப்பைச் சர்க்கார் அதிகாரிகள் பிடுங்க முற்படுவார்களானால் நம்மாலியன்ற வரையில் நாம் உப்பை விடக்கூடாது. ஒரு தாயானவள் தன் உயிர்போனாலும் எப்படித் தன் குழந்தையைப் பிறர் பறித்துக்கொண்டு போக இடங்கொடாளோ அதே மாதிரி நாமும் நமது உயிர்போனாலும் கூட நமது கையிலுள்ள உப்பை போலீசார் பிடுங்கிச் செல்ல விடக்கூடாது.

நான் கைது செய்யப்பட்டாலும் சரி, செய்யப்படா விட்டாலும் சரி, உங்கள் கடமையை நீங்கள் செய்து கொண்டே போகவேண்டும். கவர்ன்மெண்டார் உங்கள் எல்லோரையும் கைது செய்ய முடியாது. ஆனால் உங்கள் தலைவர்களைக் கைது செய்தால் நீங்கள் பயப்பட்டுவிடுவீர்களென அவர்கள் நம்பலாம். ஒரு தலைவர்கூட இல்லாவிடினும் நீங்கள் காரியத்தைச் செய்யமுடியுமென்பதைக் காட்ட வேண்டும். உலகமே புரண்டு வந்து உங்கள் கைகளைத் திறந்து உப்பைப் பிடுங்க வந்தாலும் உங்கள் கைகளைப் பிறர் திறக்கமுடியாதபடி நீங்கள் பார்த்துக்கொள்ள வேண்டும்.

## நாடெங்கும் சத்தியாக்கிரகம்

சத்தியாக்கிரகத் தீ நாடெங்கும் பற்றி எரிந்தது. பெரிய நகரங்களிலும் சரி, சிறு கிராமங்களிலும் சரி, தலைவர்களும் தொண்டர்களும் உப்புச் சத்தியாக்கிரகத்தில் ஈடுபட்டனர். சென்னைக் கடற்கரையில் ஸ்ரீமான்கள் பிரகாசம், நாகேஸ்வர ராவ் முதலிய தலைவர்கள் உப்புக் காய்ச்சியதையும், பிறகு அவர்கள் கைது செய்யப்பட்டதையும் நாம் இதற்குள் மறந்துவிடவில்லை. காந்திஜியின் கோஷ்டியைப் போன்று தென்னாட்டிலும் ஒரு சத்தியாக்கிரகக் கோஷ்டி திருச்சியில் டாக்டர் ராஜனின் பங்களாவிலிருந்து புறப்பட்டது. நமது அரும்பெருந் தலைவர் ஸ்ரீமான் சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் இக்கோஷ்டியைத் தலைமை வகித்து நடத்திச் சென்றார். இத்தொண்டர்படையில் 96 தியாகிகளிருந்தனர். இவர்களனைவரும் ஊர் ஊராக நடந்து சென்று வேதாரண்யம் கடற்கரைப் பிரதேசத்தை யடைந்து அங்கு உப்புச் சட்டத்தை மீறிச் சிறைபுகுந்தனர். இவர்களைப் பின்பற்றிச் சிறை சென்றவரின் தொகை அனந்தம்.

இவ்வண்ணமே பிரதிமாகாணத்திலும் சத்தியாக்கிரகப் போர் ஜரூராகத் தொடங்கப்பட்டுப் பிரபல தலைவர்களெல்லாம் சிறைபுகுந்தனர். சிறைக்கனுப்பப்பட்ட தொண்டர்களுக்குக் கணக்கில்லை. கராச்சி, பூனா, பாடலீபுரம், பெஷாவர், கல்கத்தா, சென்னை, ஷோலாப்பூர் முதலிய இடங்களில் சத்தியாக்கிரக இயக்கம் சம்பந்தமாகப் பொதுக் கூட்டங்கள் நடந்த காலையில் ராணுவ அதிகாரிகள் பலாத்காரத்திலிறங்கியதால் மிகுந்த கஷ்டங்களேற்பட்டன. பெஷாவரில் நடந்த துப்பாக்கிப் பிரயோகம் காரணமாகப் பிராணனை விட்டவர் பலர். சென்னையிலும் துப்பாக்கிப் பிரயோகம் நடந்தது.

கராச்சி துப்பாக்கிப் பிரயோகத்தைப்பற்றி மகாத்மாஜி "யங் இந்தியா"வில் எழுதியதாவது :—

" தத்தாத்திரேயன் என்ற வீர வாலிபன் சத்தியாக்கிரகம் செய்வதற்காகச் செல்லவில்லை. கூட்டத்தில் ஒழுங்கையும் சமாதானத்தையும் நிலைநாட்டுவதற்காகவே அவன் சென்றான். அத்தகையானுக்கு நேர்ந்த கதி யென்ன? அவன் குண்டுக்கிரையானான். 18 வயதான மேகராஜ் என்பவனும் குண்டுக்காயத்தால் மாண்டுபோனான். இங்ஙன

மாக எழுவர் தங்கள் இரத்தத்தைச் சிந்தினர். "கேள்வி முறையற்ற ஆட்சி" என மகாத்மாஜி இதை வர்ணித்து, "கவர்ன்மெண்டார் சத்தியாக்கிரகிகளைக் கைது செய்யாமலும், உப்பை இனுமாக உபயோகிக்க வகை காணுமலுமிருப்பார்களானல் வெகு சீக்கிரத்தில் மகாஜனங்கள் துப்பாக்கி முனையில் உயிரை விடத் தயாராக வருவதை அவர்கள் காண்பர்" என்று எழுதினர்.

ஏப்ரல் மாதம் 23-ந் தேதியன்று வங்காள ஆள் தூக்கிச் சட்டம் உயிர்ப்பிக்கப்பட்டது. 27-ந் தேதியன்று 1910-ம் வருஷத்திய பத்திரிகைச் சட்டமும் சில திருத்தங்களுடன் உயிர்ப்பிக்கப்பட்டது. காந்திஜியின் "யங் இந்தியா" பத்திரிகை கையெழுத்துப் பிரதிகளாக வெளியிடப்பட்டது.

## பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டு

பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டு இடப்பட்டதைக் குறித்து மகாத்மா வெளியிட்ட கருத்து பின்வருமாறு :—

"நாம் உணர்ந்தாலும் சரி, உணராவிடினும் சரி, கடந்த சில தினங்களாக நாம் ராணுவச் சட்ட ஆட்சியின் கீழேயே இருந்து வருகிறோம். ராணுவச் சட்டம் என்பது என்ன? ஒரு தனி மனிதனின் அதிகாரமே; இன்றுள்ள நிலையிலே இராஜப்பிரதிநிதியே அத்தகைய எதேச்சாதிகாரத்தைச் செலுத்தி வருகிறார். நினைத்தவாறெல்லாம் அவர் அவசரச் சட்டங்களைச் சிருஷ்டித்து, மக்களின் உரிமைகளைப் பிடுங்கி வருகிறார். ஆனல் பிரிட்டிஷ் அதிகாரிகளின் எதேச்சாதிகாரத்துக்கு நாம் உட்படும் காலம் மலையேறி விட்டதென நம்புகிறேன்.

இந்த அவசரச் சட்டங்களைக் கண்டு மகா ஜனங்கள் சிறிதும் பயப்படக்கூடாது. பத்திரிகைக்காரர்கள் தங்கள் கடமையைச் செவ்வனே உணர்ந்திருக்கின்றனர் என எண்ணுகிறேன். அவர்கள் ஜாமீன் தொகையைக் கட்ட மறுத்துவிட வேண்டும்; அப்படிக் கட்டும்படி வற்புறுத்தப் பட்டால் பத்திரிகை பிரசுரிப்பதை நிறுத்திவிட வேண்டும்; இல்லையேல் சொத்துக்களைப் பறிமுதல் செய்துகொள்ள விட்டுவிடவேண்டும். சர்க்கார் அச்சுக்களையும், இயந்திரங்

களையும்தான் கைப்பற்றலாம். மகா ஜனங்களின் மனதில் வேரூன்றிக் கிடக்கும் எண்ணங்களைக் கைப்பற்றிக்கொள்ள முடியாது."

இதனையொட்டி காந்திஜியின் "நவஜீவன்" அச்சுக் கூடச் சொத்துக்கள் சர்க்காரால் பறிமுதல் செய்யப் பட்டன. இதன் காரணமாக மகாத்மாவின் பத்திரிகைக ளெல்லாம் நின்றுவிட்டன. தேசப் பத்திரிகைகளில் பல ஜாமீனைக் கட்டி பிரசுரித்து வந்தன.

## மறுபடியும் வைஸ்ராய்க்குக் கடிதம்

இது இவ்வாறிருக்க மீண்டும் மகாத்மாவினிடம் செல்வோம். தண்டி கடற்கரையில் உப்புச் சட்டத்தை உடைத்தெறிந்த பிறகு அவர் சூரத் ஜில்லாவில் தர்சனு என்னுமிடத்திலுள்ள சர்க்கார் உப்பளத்தைத் தாக்க முயற்சித்தார். காற்றையும், நீரையும் போல் உப்பையும் ஜனங்கள் இலவசமாகவும் தாராளமாகவும் உபயோகிக்க உரிமையுண்டென்றும், உப்பு வியாபாரத்தைச் சர்க்கார் ஏகபோகமாக நடத்தி வருவதை யொழிக்க வேண்டு மென்றும் அவர் அபிப்பிராயப்பட்டார். ஆகவே தர்சனு உப்பு டிப்போவைக் கைப்பற்றிக்கொள்ள அவர் தீர்மானித்து இராஜப்பிரதிநிதிக்கு ஓர் கடிதம் விடுத்தார். அதன் விவரம் இது :—

"ஆண்டவனருளால் சீக்கிரத்தில் நான் எனது தோழர்களுடன் தர்சனுவுக்குச் சென்று அங்குள்ள உப் பளத்தைக் கைப்பற்ற எண்ணியுள்ளேன். தங்களுக்கு விருப்பமானாலும் இந்த எனது முயற்சியைத் தாங்கள் தடுக்கலாம் ; அதாவது (1) என்னைக் கைது செய்து சிறை யில் அடைக்கலாம் ; அல்லது (2) உப்பு வரியை எடுத்து விடலாம்.

ஆர அமர யோசிக்காமல் நான் இந்த உத்தேசத்துக்கு வரவில்லை. சாத்விகச் சட்டமறுப்பு வீரர்களை நாகரீக முறையில் சர்க்கார் எதிர்த்துப் போரிடுமென நான் நம்பி யிருந்தேன். சாதாரணமான சட்டங்களைப் பிரயோகித்து சட்டமறுப்புப் போரின் வேகத்தை அடக்க முற்பட்டிருந் தால் நான் ஒன்றும் சொல்லப்போவதில்லை. ஆனால் சர்க்கார்

இதற்கு மாறாக, கொடூரமாக, மிருகத்தனமாக நடந்து கொண்டிருப்பதை நாட்டு நிகழ்ச்சிகள் அறிவிக்கின்றன. பெருந் தலைவர்களை யெல்லாம் அதிகாரவர்க்கத்தின் அடக்கு முறைப் பூதம் விழுங்கிவிட்டது; ஆனால் உண்மையான போர்வீரர்களையும், சாமானிய தொண்டர்களையும் அதிகார வர்க்கம் காட்டுமிராண்டித்தனமாக அடித்திருக்கிறது.

இம்மாதிரி எங்கோ ஓரிரண்டு இடங்களில் நடந்திருந் தால் அதைப்பற்றி நான் பொருட்படுத்தாமல் விட்டிருப் பேன். ஆனால் வங்காளம், உட்கல், ஐக்கிய மாகாணம், டில்லி, பம்பாய் முதலிய பலவிடங்களிலும் இந்தக் காட்டு மிராண்டித் தனம் கையாளப்பட்டிருக்கிறது. கராச்சி, பெஷாவர், சென்னை இவ்விடங்களில் அனாவசியமாகவும், ஜனங்களுக்கு ஆத்திரமேற்படும் வகையிலும் துப்பாக்கிப் பிரயோகங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. பல இடங் களில் தேசத்தொண்டர்களின் எலும்புகள் முறிக்கப் பட்டுள்ளன; அவர்களது மர்மஸ்தானங்கள் பிடித்து கசக் கப்பட்டிருக்கின்றன; இவ்வளவும் எதற்காக? அவர்கள் கையிலுள்ள உப்பைப் பிடுங்குவதற்காக. மதுராபுரியில் பத்து வயதான பாலன் ஒருவனிடமிருந்து அசிஸ்டெண்ட் மாஜிஸ்திரேட் தேசீயக் கொடியைப் பிடுங்கினாராம். இந்தக் கொடியை அவனிடமே திருப்பிக் கொடுக்குமாறு கேட்ட ஜனக்கூட்டம் எல்லையில்லாமல் அடிக்கப்பட்டதாம். சில விடங்களில் சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் தானியங் கள் நிறைந்த வயல்களைத் தீ வைத்துக் கொளுத்தி யிருக் கின்றனர். குஜராத்தில், ஓரிடத்தில் உத்தியோகஸ்தர் களுக்குக் கறிகாரர்கள் விற்க மறுத்ததற்காக மார்க்கெட்டே கைப்பற்றப்பட்டது. உண்மையையே பேசுவதென விரதம் பூண்டுள்ளவர்களிடமிருந்து இந்தத் தகவல்கள் கிடைத் திருப்பதால் இவற்றை நீங்கள் நம்பித்தான் ஆகவேண்டும். கடந்த ஐந்து வாரங்களாக சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் ஆதாரமற்ற பொய்யுரைகளிலெல்லாம் ஈடுபட்டிருப்பதும் கவனிக்கத் தக்கது.

கள்ளு, சாராயக் கடைகளில் தேசபக்தர்கள் சாத்வீக மாக மறியல் செய்துகொண்டிருக்கையில் கடைச் சொந்தக் காரர்கள் அவர்களை நையப் புடைத்திருக்கின்றனர். இந்த அநீதச் செய்கை விஷயத்தில் அதிகாரவர்க்கம் எவ்வித கடத்தையும் எடுத்துக்கொள்ளவில்லை. சட்டத்துக்கு

விரோதமாக கள்ளு சாராயங்கள் விற்கப்படும் விஷயத்திலும் அதிகாரவர்க்கம் அசட்டையாகவே யிருக்கிறது.

இவ்வளவு துன்பங்களும் போதாதென்று தாங்கள் இப்பொழுது அச்சுச் சட்ட பூதமொன்றைச் சிருஷ்டித்திருக்கிறீர்கள். இவற்றை யெல்லாம் ராணுவ ஆட்சியின் அமுல் எனச் சொல்லாமல் நான் வேறென்னவென்று அழைப்பது? ஏற்கனவே தாங்கள் இவற்றை யெல்லாம் கவனிக்காவிட்டால் இனியாவது கவனிப்பீர்களென நம்புகிறேன்.

எனது பதினைந்து வருஷ. அனுபவத்திலிருந்து சொல்லுகிறேன். ஹிம்ஸையை அஹிம்சையால்தான் வெல்ல முடியும். நான் இறங்கியுள்ள சத்தியப் போரில், தர்ம யுத்தத்தில் ஹிம்சைக்கு ஒரு சிறிதும் இடமில்லை. ஹிம்ஸை எந்த இடத்திலிருந்து ஏற்பட்டாலும் சரி, அது அஹிம்ஸா யுத்தத்தின் போக்கையே தாக்குவதாம்.

உப்பு வரியை ஒழித்துப் போடுமாறு மீண்டும் தங்களை வேண்டுகிறேன். நீங்கள் சட்ட மறுப்பை எவ்வளவு அழுத்தமாக வேண்டுமானாலும் கண்டிக்கலாம். ஆனால் உங்களுக்குப் பலாத்காரப் புரட்சி வேண்டுமா? அல்லது சாத்விக சட்ட மறுப்புவேண்டுமா? சட்ட மறுப்புப்போர் பலாத்காரத்தில் தான் முடியுமெனத் தாங்கள் சொல்வீர்களானல் அதிகாரவர்க்கம் தனது வரம்பு கடந்த அடக்குமுறைகள் காரணமாக ஜனங்களைப் பலாத்காரத்துக்குத் தூரத்தியது என்று தான் எதிர்கால சரித்திரம் கூறும். எனினும் தேச மகா ஜனங்கள் இதற்கு ஒரு சிறிதும் உட்படாமல், அஹிம்ஸா நெறியிலேயே நிற்பரென நான் நம்புகிறேன்.

ஆகவே இக்கடிதத்திற்குப் பிறகும் தாங்கள் உப்பு வரியை ஒழிக்க முற்படா விட்டால் நான் எனது உத்தேசத்தை நிறைவேற்றி வைக்கப் புறப்படுவேன்."

## மகாத்மா கைதியானார்

ஏப்ரல் 5-ந் தேதி; நள்ளிரவு; உலகின் பேரிருளைப் போக்குவதற்கு இந்தியாவின் சந்திரனாய்த் தோன்றியுள்ள தூயனை, அடிமை நாட்டுக்கு அறிவும், ஆண்மையும் கொளுத்தும் அய்யனை, ஆன்ம சக்திக்கும், அஹிம்ஸை அறத்துக்கும் உறைவிடமாகத் திகழும் மெய்யனை,

முப்பது கோடி இந்தியரின் உயிருக்கு உயிராக விளங்கும் உத்தமனை எதேச்சாதிகார மமதை கொண்ட அரசாங்கம் கைது செய்தது, எரவாடா சிறையில் அடைத்தது. நடு ராத்திரியில் சந்தடியின்றி நுழைந்து நமது புருஷோத்தமரின் உடலைப் பற்றி ஓரிடத்தில் பூட்டிவைத்த கொடுமையை நாம் என்றும் மறக்க முடியாது.

## தேசமக்களுக்குச் செய்தி

கைது செய்யப்படுவதற்கு முன்பு மகாத்மாஜி தேச மக்களுக்குக் கீழ்க்கண்டவாறு ஓர் செய்தி விடுத்தார் :—

" மக்களிடையே இப்பொழுது ஏற்பட்டுள்ள உணர்ச்சி நீடித்திருக்குமாயின் நாம் பூரண சுயராஜ்யம் பெறுவது நிச்சயம்; இந்தியா உலகுக்கே ஒரு உதாரணமாக விளங்கக்கூடும். தியாகமின்றி, கஷ்டங்களை அனுபவிக் காமல் ஸ்வராஜ்யம் பெறுவது முடியாத காரியம். ஆகை யால் கடுமையான தியாகங்களையும் செய்ய ஜனங்கள் தயா ராக வேண்டும். உண்மையான தியாகத்தில் சத்தியாக்கிரகி கள் மட்டும் இறப்பார்களேயன்றி ஏனையோர் இறத்தல் கூடாது; அதாவது சத்தியாக்கிரகி தன்னுயிரை மாய்த்துக் கொள்ள வேண்டுமே யல்லாது பிறர் உயிரை மாய்த்தல் கூடாது. தற்பொழுது இந்தியாவின் தன் மதிப்பு கை உப்பில்தான் அடங்கி யிருக்கின்றது. கை மணிக்கட்டு முறிக்கப் படலாம் ; ஆனால் அம்மணிக்கட்டு திறவாமல் மூடினது மூடின வண்ணமாகவே இருக்க வேண்டும்.

நான் கைதியான பின்னர் தேச மக்களும் எனது தோழர்களும் அதைரியமடையவே கூடாது. நமது போரை நடத்துபவன் நான் அல்ல; ஆண்ட வனே இதை நடத்துகின்றான். அவனிடம் நமக்கு நம்பிக்கை யிருந்தால் நாம் வெற்றி பெறுவது நிச் சயம். நமது வழி நிர்ணயமாகிவிட்டது. கிராமம் கிராமமாக முன்வந்து மக்கள் லக்ஷக்கணக்கில் உப்பு காய்ச்ச வேண்டும். ஸ்திரீகள் பரதேசத் துணிக் கடைகளையும், கள்ளு, சாராயக் கடைகளையும் மறியல் செய்யவேண்டும். வீட்டுக்கு வீடு ராட்டினம் சுழல வேண்டும். குழந்தை முதல் வயோதிகர் வரை நூல் நூற்க வேண்டும். எங்கும் பரதேசத் துணி தீயிலிடப்பட வேண்டும். தீண்டாமை

யொழியவேண்டும். ஹிந்துக்களும், முஸ்லீம்களும் ஒற்றுமைப்படவேண்டும். மாணவர்கள் சர்க்கார் பள்ளிக்கூடங்களையும், சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் தங்கள் உத்தியோகங்களையும் விட்டுவிடவேண்டும்."

## மக்களின் மனக்கொதிப்பு

மகாத்மா கைது செய்யப்பட்ட செய்தி கேட்டதும் தேசம் பூராவும் ஹர்த்தால் கொண்டாடப்பட்டது. பம்பாயில் பிரும்மாண்டமான ஊர்வலமொன்று புறப்பட்டு நகரெங்கும் சென்றது. மாலையில் மாபெருங்கூட்டம் நடைபெற்றது. லக்ஷக்கணக்கான ஜனங்கள் குழுமியிருந்தனர். ஏழு மேடைகள் போடப்பட்டுப் பிரசங்கங்கள் நிகழ்த்தப்பட்டன. 80 ஆலைகளில் 40 ஆலைகள் மூடிக்கிடந்தன. ஏனெனில் 50,000 பேர்கள் வேலைக்குப் போகவேயில்லை. ஜி. ஐ. பி.; பி. பி அண்டு ஸி. ஐ. ரெயில்வே வொர்க்ஷாப்பில் வேலைசெய்யும் தொழிலாளர்களும் வேலைக்குச் செல்லாமல் ஹர்த்தாலில் கலந்துகொண்டனர்.

காந்தி கைது செய்யப்பட்டதைக் கண்டிப்பதற்காக ஜவுளி வியாபாரிகள் ஆறு தினங்களுக்குக் கடைகளை மூடிவிட்டனர்.

ஷோலாப்பூரில் நடந்த கலவரம் காரணமாக ஆறு போலீஸ் சௌக்கிகள் கொளுத்தப்பட்டனர்; இது சம்பந்தமாக நடந்த துப்பாக்கிப் பிரயோகத்தில் 25 பேர்கள் கொல்லப்பட்டனர்; சுமார் நூறுபேர்கள் காயமுண்டனர்.

கல்கத்தா நகரில் ஹர்த்தால் அமைதியாய் நடந்ததெனினும், ஹௌராவில் கலவரங்கள் ஏற்பட்டதால் போலீசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்யும்படி நேரிட்டது. 144-வது பிரிவின்படி ஐந்து பேர்களுக்குமேல் ஒன்று கூடுவது தடுக்கப்பட்டது.

## வெளிநாடுகளில் கண்டனம்

காந்தி சிறைப்படுத்தப்பட்டது கண்டு உலகமே கலக்கம் கொண்டது. பனமா (தென் அமெரிக்கா) விலுள்ள இந்தியர்கள் 24 மணி நேரம் ஹர்த்தால் அனுஷ்டித்தனர். சுமித்திரா தீவிலுள்ள இந்தியர்கள் வைஸ்ராயின் செய்கை

யைக் கண்டித்து அவருக்குத் தந்திகொடுத்தனர். பிரெஞ்சு பத்திரிகைகள் எல்லாம் பத்தி பத்தியாக காந்தியைப்பற்றிய சமாச்சாரங்களையே பிரசுரித்தன. இந்தியாவில் நடந்த பகிஷ்கார இயக்கம் ஜெர்மனியைப் பெரிதும் பாதித்தது. ஐரோப்பாவிலுள்ள இந்திய மக்களும் தங்கள் வேலைகளை நிறுத்தி, ஹர்த்தால் கொண்டாடினர்.

அமெரிக்கப் பாதிரிமார்களில் 102 பேர்கள் ஒன்று சேர்ந்து கையொப்பமிட்டு ராம்ஸே மாக்டனல்டுக்கு ஓர் செய்தி விடுத்தனர். காந்தியுடனும், இந்தியர்களுடனும் சமரஸமான முடிவைச் செய்துகொள்ளும்படி அவர்கள் வேண்டினர். டாக்டர் ஹோம்ஸ் என்ற அன்பரும் உலகப் பெரியார்கள் பலரிடமிருந்து கையெழுத்துக்கள் வாங்கி, இந்தியாவில் நிகழக்கூடிய பிரமாதமான போரைப் பற்றி எச்சரிக்கை செய்து, அதைத் தடுத்துக்கொள்ளும்படி பிரதம மந்திரியைக் கேட்டுக்கொண்டார்.

இந்தியாவில் ஏற்பட்டிருந்த கடுமையான நிலைமையை இந்திய அரசாங்கம் உணராமலில்லை. இராஜப்பிரதிநிதி அவர்கள் லிபரல் கட்சித் தலைவர்களான ஸர். டெஜ் பகதூர் ஸப்ரூ, ஸர். சிமன்லால் சேதல்வாட் முதலியவர்களுடன் நீண்ட நேரம் கலந்து பேசினார். லிபரல் பெடரேஷனின் கூட்டமொன்று பம்பாயில் நடந்ததில், சர்வகக்ஷி மகாநாட்டை விரைவில் கூட்டுவதாக வைஸ்ராய் மீண்டுமொரு அறிக்கையை வெளியிடவேண்டுமென்று கோரப்பட்டது. பிரிட்டிஷ் பிரதம மந்திரியுடன் தாம் நடத்திய கடிதப் போக்குவரத்து விவரங்களை இச்சமயத்தில்தான் இராஜப்பிரதிநிதி வெளியிட்டார்.

## இயக்கம் வலுக்கிறது

மகாத்மா சிறைபுகுந்ததும் அவரது ஸ்தானத்தை அபாஸ் தயாப்ஜி என்னும் பெருங் கிழவர் ஏற்றுக்கொண்டார். இவர் நவநகர் சமஸ்தானத்தில் மந்திரியாக இருந்தவர். வயது எண்பதுக்கு மேலாய் விட்டது; எனினும் வீரங் குன்றவில்லை. ஏப்ரல் மாதம் 12-ந் தேதி யன்று சர்க்கார் இவரையும் கைது செய்தது.

மே மாதம் அலகாபாத்தில் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டி சட்டமறுப்புப் போரை இன்னும் அதிகமாக விஸ்

தரித்து நடத்த முடிவு செய்தது. அன்னியத் துணி பகிஷ்காரத்தை அதிக மும்முறமாக நடத்துவதென்றும், பலவகையான வரிகொடா இயக்கங்களை ஆரம்பிக்க வேண்டுமென்றும், ஞாயிறுதோறும் தேசமெங்கும் பொது மக்கள் உப்புச் சட்டத்தைப் பகிரங்கமாக மீறவேண்டுமென்றும், வெளி நாட்டுத் துணி பகிஷ்காரத்தை வெற்றியுடன் நடத்திவைப்பதற்காக இந்திய ஆலைச் சொந்தக்காரர்களின் ஒத்துழைப்பைப் பெறுவதற்கு காங்கிரஸ் தலைவருக்கு அதிகார மளிப்பதாகவும், இந்திய மகா ஜனங்கள் அனைவரும் பிரிட்டிஷ் சாமான்களைப் பகிஷ்கரித்தே தீரவேண்டுமென்றும், மதுவிலக்கு விஷயத்தில் விசேஷ சிரத்தை காட்டி வேலைசெய்ய வேண்டுமென்றும், கள்ளு, சாராயக் கடைகளை மறியல் செய்ய மாகாண காங்கிரஸ் கமிட்டிகள் முனைய வேண்டுமென்றும் காரியக் கமிட்டி தீர்மானித்தது.

அபாஸ் தயாப்ஜி கைது செய்யப்பட்ட விஷயமறிந்த ஸ்ரீமதி சரோஜினி தேவி அலகாபாத்திலிருந்து தர்சனுவுக்கு ஓடி வந்து உப்பள முற்றுகையைத் தொடர்ந்து செய்யலானார். ஆனால் அவரும், அவரது தொண்டர் படையும் 16-ந் தேதி காலையில் கைது செய்யப்பட்டுப் பிறகு விடுவிக்கப்பட்டனர். ஏராளமான தொண்டர்கள் உப்பு டிப்போவைக் கைப்பற்ற விரைந்தனர். ஆனால் போலீஸ் புலிகள் அவர்களைத் துரத்திச் சென்று, பலரை அடித்தனர். அன்று மாலையில், சட்ட விரோதமான சபையைச் சேர்ந்தவர்களென 200 தொண்டர்கள் கைது செய்யப்பட்டனர். வாட்லாவிலுள்ள உப்பளத்தைக் கைப்பற்ற முயற்சித்த தொண்டர்களில் 400 பேர்கள் கைதியாயினர்.

“ இந்திய பகிஷ்கார இயக்கம் ஏற்கனவே லங்காஷயரைப் பாதிக்க வாரம்பித்து விட்டது. ஏராளமான நூல் நூற்கும ஆலைகளும், நெசவுச்சாலைகளும் மூடப்பட்டன. லங்காஷயரின் இந்திய வியாபாரமே படுத்துப் போய்விட்டதென்னலாம் ” என்று சீமையிலிருந்து “ ப்ரீ பிரஸ்” பத்திரிகை நிருபர் எழுதியுள்ள விவரம் அச்சமயத்தில் இந் நாட்டிலிருந்த பகிஷ்கார இயக்கத்தின் வேகத்தை நன்கு உணர்த்துகிறது.

மே மாதம் 21-ந் தேதி நடைபெற்ற தர்சனு முற்றுகையில் 2500 தொண்டர்கள் கலந்துகொண்டனர். காந்தி

ஜியின் தென்னாப்பிரிக்கா நண்பரும், 62 வயதானவருமான இமாம் சாஹெப் என்பவர் இப்படைக்குத் தலைவராக விருந்தார். சத்தியாக்கிரகிகள் உப்புக் குவியல்களை எடுக்க முற்படுகையில் போலீசார் அவர்களை மூங்கில் கழிகளால் பலமாக அடித்தனர். சிறிது நேரத்திற்கெல்லாம் இமாம் சாஹெப், பியாரிலால், மணிலால் காந்தி (மகாத்மாவின் புதல்வர்), சரோஜினி தேவி முதலியவர்கள் கைது செய்யப் பட்டனர். அன்று காயமடைந்த தொண்டர்களின் மொத்த தொகை 290.

ஜூன் மாதம் 3-ந் தேதியன்று 200 தொண்டர்கள் உந்தாடி முகாமிலிருந்து தர்சனா உப்பளங்களில் முற்று கைக்காக அழைத்துச் செல்லப்பட்டனர். போலீசார் இவர்களைத் தடிகொண்டு அடித்தனர்.

ஆனால் முதல் தேதி நடந்த முற்றுகை முயற்சி கண் கொள்ளாக் காட்சியாக விருந்தது. தொண்டர்களும், தொண்டர்களல்லாதவர்களுமாக சுமார் 15,000 பேர்கள் சரடலா உப்பள முற்றுகையில் ஈடுபட்டனர். போலீசார் கூட்டத்தினுள் புகுந்து எல்லோரையும் கழிகளால் அடித்து வெருட்டினர்.

## கண்ணால் கண்ட கொடுமைகள்

சத்தியாக்கிரகிகளைப் போலீஸார் மிருகத்தனமாக நடத்தியது குறித்து தேச மக்கள் ஆத்திரம் கொண்டனர். இக் கொடுமைகளை நேரில் கண்டவர்கள் தங்கள் மனக் கருத்தைப் பகிரங்கமாகப் பத்திரிகைகளில் வெளியிட்டனர். பம்பாய் கோர்ட்டு மாஜி நீதிபதியான மிஸ்டர் ஹூஸேன், "இந்தியன் ஸோஷியல் ரிபார்மர்" பத்திரிகை யின் ஆசிரியர், ஸ்ரீமான் கே. நடராஜன், இந்திய ஊழியர் சங்கத் தலைவரும் சமீபத்தில் காலஞ் சென்ற வரு மான ஸ்ரீமான் ஜி. கே. தேவதாஸ் இவர்கள் கையொப்ப மிட்டு பத்திரிகையில் பிரசுரித்த ஓர் அறிக்கையின் விவரம் பின்வருமாறு :—

"உப்பள எல்லையிலிருந்து சத்தியாக்கிரகிகள் துரத்தப் பட்ட பிறகு, குதிரை மீதேறிய ஐரோப்பிய சார்ஜெண்டு கள் கையில் தடிகளை வைத்துக்கொண்டு கனமாக ஓடி, தங்கள் கண்களில் தென்பட்ட ஜனங்களையெல்லாம் பச்சா

தாபமில்லாமல் அடித்த காட்சி மனதைப் பிளப்பதாக விருந்தது. அவர்கள் குதிரைகளை நாலுகால் பாய்ச்சலில் தூக்கிக்கொண்டு சுற்றுப் புறத்திலுள்ள கிராமங்களின் தெருக்களிலெல்லாம் ஓடி, ஆண்கள், பெண்கள், குழந்தைகள் யாவரையும் பயமுறுத்தித் துரத்தினர். கிராம மக்கள் பெரும் பீதியடைந்து, சந்து பொந்துகளிலும், வீடுகளுக்குள்ளும் ஓடி ஒளிந்து கொண்டனர்; ஆனால் யாராவது ஒளிய இடமில்லாமல் எக்கச் சிக்கமாகக் கண்ணில் அகப்பட்டால் அவர்கள் தடிகொண்டு தாக்கப்பட்டனர்."

"நியூமென்" என்ற மேனாட்டுப் பத்திரிகையின் நிருபரான மிஸ்டர் வெப் மில்லர் தர்சனாவில் தாம் கண்ணால் கண்டவற்றைப்பற்றி பின்வருமாறு எழுதினார் :—

"18 வருஷ காலமாக நான் பத்திரிகைகளுக்குச் செய்திகள் திரட்டி அனுப்பி வருகிறேன். இத்தொழிலில் நான் பல விடங்களுக்குச் சென்றிருக்கிறேன்; எத்தனையோ கலகங்கள், கலவரங்கள், சண்டைகள், சச்சரவுகளைப் பார்த்திருக்கிறேன். ஆனால் தர்சானாவில் நான் கண்ட கொடுமைகளைப் போல் இதுவரை எங்குமே கண்டதில்லை. சிற்சில சமயங்களில் அக்கொடுமைகள் கண் கொண்டு பார்க்கச் சகியாதவையாக விருந்ததால் அந்தச் சமயங்களில் சில நிமிஷங்களுக்கு நான் எனது முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக்கொண்டு விட்டேன். நெஞ்சில் ஈரமுள்ள எவரும் இப்படித்தான் செய்வர். சத்தியாக்கிரகிகள் காந்தியின் அஹிம்ஸா நெறியை விடாப்பிடியாகக் கடைப்பிடித்தது தான் எனது மனதைக் கவர்ந்தது.

"டெயிலி ஹெரால்ட்" பத்திரிகைப் பிரதிநிதியாகிய மிஸ்டர் ஜார்ஜ் ஸ்லோகோம் என்பவர் அருகிலிருந்த ஒரு குன்றின்மீது நின்றுகொண்டு தர்சனா கொடுமைகளையெல்லாம் கண்ணுற்றார். தமது மனச் சங்கடங்களை அவர் பின்வருமாறு தெரிவித்தார் :—

"சுத்த சாத்வீக வீரர்களடங்கிய கூட்டத்தினிடையே மகாமூர்க்கமும், மிருகத்தனமும் வாய்ந்த அதிகார வர்க்கத்தினர் புகுந்து பண்ணிய கோரமும், இழைத்த கொடுமையும் செப்பத் தரமன்று. அவை அப்படியே என் மனதைத் தைத்துவிட்டன."

## ஸ்லோகோம்-காந்தி சந்திப்பு

மே மாதம் 20-ந் தேதியன்று இதே மிஸ்டர் ஸ்லோகோம் எரவாடா சிறைக்குச் சென்று மகாத்மாவைக் கண்டு பேசி அதன் விவரங்களைத் தமது பத்திரிகைக்கு அனுப்பினார். அது கண்டு காமன்ஸ் சபை அங்கத்தினரும், பிடிவாதக்கார கோஷ்டியினரான டோரிகளும் பொங்கி எழுந்தனர்; விஷயங்கள் முற்றிப்போயுள்ள அந்நிலைமையில் கூட மகாத்மாவுடன் சமரஸ மேற்படுத்திக்கொள்ள மார்க்கமிருக்கிறதென்பதை மிஸ்டர் ஸ்லோகோம் அறிவித்தார். ஏற்கனவே காந்திஜி வெளியிட்ட நிபந்தனைகளில் முதல் நான்கு விஷயங்களில் சர்க்கார் இணக்கம் காட்டுவார்களானால் அவர் சட்ட மறுப்புப் போரை நிறுத்தும்படி காங்கிரஸ் மகா சபைக்கு சிபார்சு செய்யத் தயாராக விருப்பதையும் மிஸ்டர் ஸ்லோகோம் குறிப்பிட்டார். இது விஷயமாக அவர் இன்னொரு முறையும் மகாத்மாவைப் பேட்டி கண்டு பேசினார். பின்னால் ஏற்படக்கூடிய எவ்வளவோ ரஸாபாசங்களை யெல்லாம் தடுத்துக்கொள்ள வேண்டியதே கவர்ன்மெண்டாரின் கடமை என்பதை வற்புறுத்தினார். சிறையில் அடைபட்டுக் கிடக்கும் மகாத்மா இந்தியாவின் தெய்வீக புருஷரென்றும், அவர் வெளியிலிருப்பதை விட சிறைக்குள்ளிருப்பதுதான் மிகவும் ஆபத்தானதென்றும் அவர் பிரிட்டிஷாருக்கு எடுத்துக் காட்டி முன்னெச்சரிக்கை செய்தார்.

## எங்கும் கொந்தளிப்பு

இது இவ்வாறிருக்க நமது தேசமோ கொந்தளிப்பில் ஆழ்ந்து கிடந்தது. நாடெங்கும் தலைவிரித்தாடிய அடக்குமுறைப் பேயின் கொடுமைகளைச் சகிக்க முடியாமல் மக்கள் திணறிக்கொண்டிருந்தனர். ஆனால் அவர்கள் தங்கள் தலைவரது அருமையான உபதேசங்களை மட்டும் மறக்கவில்லை. நாட்டின் மூலைமுடுக்குகளிலெல்லாம் சத்தியாக்கிரகப் போர் நடந்தது. ஒவ்வொன்றையும் விரிவாகச் சொல்வதெனில் அதுவே ஒரு தனி சரித்திரமாகிவிடும்.

தியாக அக்னியில் குதித்த வீர புருஷர்களுடன் நாட்டின் வீர மாதரும் போட்டியிட்டனர். கள்ளுக்கடை மறியல், சீமைத் துணிக்கடை மறியல் முதலியவற்றைத்

திறம்பட நடத்திய பெண்ணுலகின் உத்தம சேவையை பாரதமாதா என்றும் மறவாள். காந்தியின் அபூர்வ சக்தி நாட்டிலே செவ்வனே வேலை செய்துவந்தது.

ஏப்ரல் மாதம் 14-ந் தேதியன்று நமது பாலசிங்கமான ஜவஹரிலால் நேரு கைது செய்யப்பட்டு தண்டிக்கப்பட்டார். தண்டனைகள் கடுமையாயின; சிறைவாசத்துடன் அபராதமும் சேர்க்கப்பட்டது. மறியலைத் தடுத்து அவசரச் சட்டங்கள் பிறப்பிக்கப்பட்டன. தடியடிப் பிரயோகம் தாராளமாக நடந்தது. கூட்டங்களெல்லாம் கலைக்கப்பட்டன. தென்னாட்டில் அடக்குமுறை தாண்டவமாடி நின்றது இன்னும் நமது மனதைவிட்டகலவில்லை. யாராவது கதர் அணிந்துகொண்டும், தலையில் காந்தி தொப்பி போட்டுக்கொண்டும் தெருவில் போனால் அவர்களையெல்லாம் போலீசார் பிடித்து அடித்தனர். மலையாள தேசத்திலிருந்து ராணுவ சேனைகள் கொண்டுவரப்பட்டு, சென்னை, பர்ஹாம்பூர், எல்லூர், காகினாடா, ராஜமகேந்திரபுரம் முதலிய இடங்களுக்கு அனுப்பப்பட்டனர். ஒவ்வொரு ஊரிலும் இவர்கள் தெருத்தெருவாக அலைந்து, கதரணிந்தவர்களையெல்லாம் தடிகொண்டு சாத்தினர். மொத்தமாகச் சொல்லப்போனால் அடக்குமுறைக் கொடுமையிலேயே, அதிகாரவர்க்க அமுலிலேயே நாடு ஆழ்ந்து கிடந்தது.

## அன்னியத் துணி பகிஷ்காரம்

மகாத்மா விதைத்த சத்தியாக்கிரக விதை நாட்டில் வேரூன்றி, பல கிளைகளுடன், விருக்ஷமாகத் தழைத்து நின்றது. பம்பாயில் அன்னியத் துணி பகிஷ்கார இயக்கம் வலுப்பெற்றிருந்தது. ஆலைச் சொந்தக்காரர்களும் இதில் விசேஷ சிரத்தை காட்டலாயினர். அதிர்ஷ்டவசமாக அப்பொழுது பண்டித மோதிலால் நேரு சிறைக்கு வெளியேயிருந்தார். அவர் பம்பாய், ஆமதாபாத் இவ்விடங்களிலுள்ள ஆலைச் சொந்தக்காரர்களுடன் கலந்து பேசினார். முதலில் அவர்களது ஒத்துழைப்பைப் பெறுவது சிறிது சிரமமாக விருந்ததாயினும், நாட்டு மக்களிடையே சுதேசி உணர்ச்சி வெகுதூரம் பரவி நின்றதால் ஆலைச் சொந்தக்காரர்களும் அதைப் புறக்கணிப்பதற்கில்லாமலிருந்தது. சீமை ஜவுளிகளை இறக்குமதி செய்யும் வியாபாரிகளெல்லாம் ஒன்று சேர்ந்து, இறக்குமதிகளை

டெலிவரி எடுத்துக் கொள்ளுவதில்லை எனத் தீர்மானித்தனர். இதனால் நாட்டில் துணி மணிகள் குறைந்து விட்டன. இந்திய ஆலைகளில் பல, காங்கிரஸின் அத்தாக்ஷியைப் பெற்று சுதேசிச் சரக்குகளை விற்கத் தொடங்கின. அன்னிய நாட்டு ஜவுளிகளுக்கு ஆதரவளிப்பவர்களின் கடைகள் மறியல் செய்யப்படுமென காங்கிரஸ் அறிவித்தது. நாடெங்கும் பிரிட்டிஷ் சாமான் பகிஷ்காரத்தை மும்முறமாக நடத்தும்படியும் காங்கிரஸ் காரியக் கமிட்டி ஓர் வேண்டுகோள் விடுத்தது.

சீமைத் துணி பகிஷ்கார இயக்கம் தேசமெங்கும் ஜீமூதமாக நடைபெற்று வந்ததையும், இதற்குப் பண்டித மோதிலால் நேரு எவ்வளவு தூரம் காரணபூதராக விருந்தாரென்பதையும் அறிந்த அரசாங்கம் ஜூன் மாதம் 30-ந் தேதியன்று அவரையும் பிடித்து ஆறு மாதங்கள் சிறைவைத்தது. பகிஷ்கார இயக்கம் வலுக்கவலுக்க நாட்டில் அடக்குமுறைப் பேயாட்டமும் ஓங்கியது. ஆரஞ்சி கலர் புடவைகளை யணிந்துகொண்டு நமது ஸ்திரீ ரத்தனங்கள் பம்பாய், சென்னை, கல்கத்தா முதலிய முக்கிய நகரங்களிலெல்லாம் சீமைத் துணிக்கடைகளை மறியலிட்ட காட்சியை சரித்திரம் என்றும் மறக்காது.

## பிரெயில்ஸ்போர்ட் பார்த்ததென்ன ?

இங்கிலாந்தில் தொழில் கட்சியைச் சேர்ந்த பிரமுகர்களில் ஒருவரும், இந்தியாவின் உண்மை அன்பருமான மிஸ்டர் பிரெயில்ஸ்போர்ட் என்பவர் உண்மை நிலையைக் கண்டறிவதற்காக இந்தியா பூராவும் சுற்றுப் பிரயாணம் செய்து அதிகாரவர்க்கத்தினர் இழைத்த சகிக்க முடியாத கொடுமைகளை நேரில் கண்ணுற்றார். இவற்றை யெல்லாம் ஒன்று திரட்டி அவர் 1931-ம் வருஷம் ஜனவரி மாதம் 12-ந் தேதியன்று லண்டன் “ மான்செஸ்டர் கார்டியன் ” பத்திரிகையில் ஓர் நீண்ட கட்டுரை வரைந்தார். இதில் அவர் தமது துக்கத்தை அப்படியே கொட்டினார். துரைத்தனத்தின் மிருகத்தன்மை, காட்டுமிராண்டித் தன்மை செயல்களை அவர் அலசிக் காட்டினார். ஒரு புறம் போலீசாரின் தடியடி மழை மாதிரி பொழிகிறது ; மற்றொரு புறத்திலோ சாந்த குணம் மிக்க, சாத்வீக சத்தியாக்கிரகிகள் புஷ்பமாரியை ஏற்பதுபோல், சற்றும் கோபங்

கொள்ளாமலும் ஆத்திரமடையாமலும் அடக்கமாக அதை அனுபவித்த காட்சியை நாம் இந்தியாவைத் தவிர வேறு எந்தத் தேசத்தில் காண முடியும்? என்னே அவர்களது வீரம், என்னே அவர்களின் தீரம்!

கல்கத்தாவில் நடந்த ஒரு சம்பவத்தைக் குறிப்பிடாம லிருக்க முடியவில்லை. தெருவில் சாந்தமாக ஓர் ஊர்வலம் போய்க்கொண்டிருந்தது; இதைப்போலீசார் தடிகொண்டு தாக்கினர். இக் கொடுமையை அருகிலிருந்த சர்வகலா சாலைக் கட்டிடத்தின் மேல்மாடியினின்றும் கண்ணுற்ற சில மாணவர்கள் "பேடிகள், பேடிகள்" என இரைச்சலிட்ட னர். இரண்டு மணி நேரத்துக்குப் பின்பு போலீசார் ஓர் ஆங்கில அதிகாரியின் தலைமையின்கீழ் சர்வகலாசாலைக் கட்டிடத்தினுள் புகுந்தனர்; வகுப்புகளுக்குள் சென்றனர்; மேஜைக் கருகில் உட்கார்ந்து வாசித்துக் கொண்டிருந்த மாணவர்களைப் பிடித்தடித்தனர்; இஷ்டம்போல் அடித்த னர்; மனம்போனவரையில் தாக்கினர். மேஜைகளிலும், சுவற்றிலும் இரத்தம் தெறித்துக் கிடந்தது. புரோபசர் கள் இதுபற்றிப் புகார் செய்தும் குற்றம் புரிந்தவர்கள் எவ் வித தண்டனைக்கும் ஆளாகவில்லை. இதேமாதிரி லாகூரில் ஒரு போலீஸ் அதிகாரி ஒரு கல்லூரியினுள் நுழைந்து மாணவர்களை மட்டுமன்றி, புரொபஸரையும் அடித்தார்.

வங்காளத்தில், கொண்டை என்னுமிடத்தில் ஐந்து கிராமவாசிகள் ஒரு குளத்தில் பிடித்துத் தள்ளப்பட்டனர். இது ஒரு கூட்டத்தைக் கலைப்பதற்காகச் செய்யப்பட்ட முயற்சியாம்.

குஜராத் மாகாணத்தில் நடந்த போலீஸ் அதிக்கிரமங் களை எந்த வார்த்தைகளால் எடுத்துரைப்பது. இப் பிர தேசத்தில் நான் ஐந்து தினங்கள் பிரயாணம செய்தேன். கிராமவாசிகளின் ஸ்வராஜ்ய தாகத்தையும், சுதந்திர வேட் கையையும், விவசாயிகளின் வீர உணர்ச்சியையும், மக்க ளின் மனவெழுச்சியையும் கடவுள் கொடுத்த என் கண் களால் கண்டு அனுபவித்தேன். வரி மறுப்புப் போர் இங்கு பலமாக நடந்துவந்தது. ஏழை விவசாயிகளின் சொத்துக்களெல்லாம், ஆடு மாடுகள், கலப்பைகள், நிலங் கள் முதலியவை யாவும் பறிமுதல் செய்யப்பட்டன. விவ சாயிகளைப் போலீசார் அடித்த கொடுமை மனதை ஒடிப் பதாக விருந்தது. இதன் காரணமாக கை முறிந்தவர்களை

யும், கால் ஒடிந்தவர்களையும், மூக்கில் காயம் பட்டவர்களை யும், கண்ணிழந்தவர்களையும் நான் நேரில் சந்தித்தேன். எங்கும் பயங்கர ஆட்சியே நிலவி யிருந்தது. ஓரிடத்தில் ஒரு கிராமவாசியைப் போலீசார் ஏழு தடவை தங்களுக்குச் சலாம் செய்யவேண்டுமென நிர்ப்பந்தித்து அவனைத் தடி கொண்டு பன்னிரண்டு அடிகள் அடித்தனர். "உனக்கு என்ன வேண்டும்? ஸ்வராஜ்யமா வேண்டும்? இதோ, இந்தா, இது தான் ஸ்வராஜ்யம்" என்று சொல்லிச் சொல்லி அடித்த கொடுமையை என்னென்பது?

"போர்ஸாத் என்னுமிடத்தில் நான் பார்த்த கொடுமை யைச் சொல்லட்டுமா? ஒரு அதிகாரி விசாரணையிலிருந்த சில கைதிகளை ஒரு கூண்டில் அடைத்துக் கட்டிவைத்திருந் தார். இதை நான் நேரில் பார்த்தேன். அந்தக் கூண்டு மிருகங்களை யடைத்துப்போடும் கூண்டை யொத்திருந்தது. இதன் நீளம் முப்பதடி. இதற்குள் 18 ராஜீயவாதிகள் இரவும் பகலும் அடைபட்டுக் கிடந்தனர்."

சட்டமறுப்புப் போரின் வேகத்தையும், அதன் சம்பந்த மாக ஒவ்வொரு மாகாணமும் அனுபவித்த போலீஸ் அதிக் கிரமங்களையும் எடுத்துரைப்பதற்கு இங்கு இடமில்லை. ஏப்ரல் 23-ந் தேதியன்று பெஷாவரில் நடந்த துப்பாக்கிப் பிர யோகத்தையும், அதனால் ஏற்பட்ட உயிர்ச் சேதங்களையும், இதற்குள் மகாஜனங்கள் மறந்திருக்க மாட்டார்கள். இந் நகரில் ராணுவச் சட்டம் அமுலிலிருந்ததும் அவர்கள் நினைவிலிருப்பது நிச்சயம். இப் பெஷாவர் சம்பவங்களைப் பற்றி இந்தியா சட்ட சபையில்கூட சரமாரியான கேள்வி கள் கேட்கப்பட்டன.

வெகு சீக்கிரத்தில் காங்கிரஸ் கமிட்டிகளெல்லாம் சட்ட விரோதமான சபைகளென அறிவிக்கப்பட்டன. ஜுலை மாதத்தில் காங்கிரஸ் காரியக் கமிட்டி பம்பாயில் கூடியது. அச்சமயத்தில் லோகமான்யர் தினக் கொண் டாட்ட சம்பந்தமாக நடைபெற்ற ஊர்வலத்தில் காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் பங்கெடுத்துக்கொண்டனர். இவர் கள் ஊர்வலமாகச் சென்றுகொண்டிருக்கையில் இவர்கள் மீது '144' பாணம் பிரயோகிக்கப்பட்டது. தலைவர்கள் தடை உத்தரவுக்குக் கீழ்ப்படியாது போகவே அவர்கள் கைது செய்யப்பட்டனர். ஸ்ரீயுத வல்லபாய் படேல், ஜெயராம்

தாஸ் தௌலத்ராம், பண்டித மாளவியா, ஸ்ரீமதி கமலா நேரு முதலியவர்களை அரசாங்கம் கைப்பற்றியது.

ஒரு சமயம் பம்பாயில் நடந்த ஓர் ஊர்வலத்தைப் பார்ப்பதற்காக பிகானீர் மகாராஜா சென்றார். ஊர்வலத்திலிருந்த தொண்டர்களைப் போலீசார் தடிகொண்டு தாக்குவதை அவர் பார்த்துவிட்டு, "தடியடி ராஜ்ஜியத்தைவிட ராணுவச் சட்ட ஆக்ஷியே மேல்" என்றுரைத்தார். சென்னையில் நடந்துவந்த சீமைத் துணிக்கடை மறியலைப் பார்ப்பதற்காகச் சென்ற பூஜ்யர் பேட்டன் என்ற பாதிரியாரைப் போலீசார் மிருகத்தனமாகத் தாக்கினர். எங்கு பார்த்தாலும் தடியடி ராஜ்ஜியமே பலத்திருந்தது.

மூன்று மாத சிறைவாசத்தை அனுபவித்துவிட்டு வெளிவந்த வல்லபாய் படேல் பண்டித நேருவுக்குப் பின் காங்கிரஸ் தலைவர் பதவியை ஏற்று பம்பாயிலும் குஜராத்திலும் போரை வலுப்படுத்தினார். காங்கிரஸ் ஆபீசுகளெல்லாம் சர்க்காரால் கைப்பற்றப்பட்டுவிட்டதால், பாரத நாட்டிலுள்ள ஒவ்வொரு வீடும் ஒவ்வொரு காங்கிரஸ் ஆபீஸாக மாறவேண்டுமென அவர் கூறினார். பர்தோலியிலும், போர்ஸாத்திலும் வரி மறுப்புப் போர் மிக உக்கிரமாகவிருந்தது. எனவே அதிகாரவர்க்கத்தின் அடக்குமுறைக்கும் எல்லையில்லாமலிருந்தது. துரைத்தனத்தின் கொடுமைகளைச் சகிக்க முடியாமல் 80,000 ஜனங்கள் தங்கள் வயல்களுக்குத் தீ வைத்துவிட்டுப் பிரிட்டிஷ் பிராந்தியத்திலிருந்து பரோடா சமஸ்தானத்துக்குள் குடிபுகுந்துவிட்டனர். ஸ்ரீயுத வல்லபாயின் 80 வயதான தாயார் சமையல் செய்துகொண்டிருக்கையில் போலீசார் சோற்றுப் பாத்திரத்தைக் கீழே தள்ளி உடைத்தனர்.

## மாகாணங்களில் போர் வரிசை

அந்தந்த மாகாணத்தின் நிலைமைக்கும், சக்திக்கும் தகுந்தவாறு ஆங்காங்கு சட்டமறுப்பும் நடந்தது. எப்பொழுதும்போல் தென்னாடு தனது முழு சக்தியையும் காட்டிப் போரிட்டது. வேதாரண்யம் போரைத் தலைமை வகித்து நடத்திய ஸ்ரீமான் சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார் உள்பட இதர தலைவர்கள் அனைவரும் ஏராளமான தொண்டர்களும் சிறை புகுந்தனர்; தடியடிக்கும்

ஆளாயினர். ஆனால் வங்காளம் தான் அதிக பேர்களைச் சிறைக்கனுப்பியது. வங்காளம், பீஹார், ஒரிஸா இம் மாகாணங்களில் பிரிட்டிஷ் துணி பகிஷ்கார இயக்கம் மிகவும் வலுத்திருந்தது. போரில் குஜராத் எடுத்துக் கொண்ட பங்கைப்பற்றி நாம் ஏற்கனவே கண்டோம். ஐக்கிய மாகாணத்தில் தான் வரிகொடா இயக்கம் பொது வான முறையில் நடைபெற்றது. பஞ்சாபும் மற்ற மாகாணங் களுக்கு எவ்விதத்திலும் பின்வாங்கவில்லை. வடமேற்கு எல்லைப்புற மாகாணம் மகாத்மாவின் அஹிம்ஸா தர்ம நெறியைக் கைக்கொண்டது அதி ஆச்சரியமாகும். மத்திய மாகாணத்தில் வன சத்தியாக்கிரகம் வெகு வெற்றிகரமாக நடைபெற்றது. கர்நாடக மாகாணம் நடத்திய வரிமறுப்புப் போரும் சிலாகிக்கத் தக்கதே. வட கன்னடத்தைச் சேர்ந்த சிரிசி தாலூகாவில் மூன்று லட்சம் பனைமரங்களும், ஈச்ச மரங்களும் வெட்டி வீழ்த்தப்பட்டன ; 130 கிராம அதி காரிகளில் 96 பேர்கள் ராஜினாமா செய்தனர்.

காங்கிரஸ் காரியாலயங்களை வசப்படுத்திக் கொள்ளு தல், காங்கிரஸ் கமிட்டிக்குச் சொந்தமான கணக்குப் புத்தகங்கள் கொடிகள் முதலியவற்றைக் கைப்பற்றிக் கொள்ளுதல், தடியடி ராஜ்ஜியம், பொதுக் கூட்டங்களை பலாத்காரத்தைப் பிரயோகித்துக் கலைத்தல், பயங்கர ஆக்ஷி, 144 வாய்ப்பூட்டு, வீடுகளையும் அச்சுக்கூடங்களை யும் சோதனையிடுதல், பத்திரிகைகளிடமிருந்து ஜாமீன் கோறல் முதலிய கொடுமைகளை எல்லா மாகாணங்களும் அனுபவித்தன. நாடெங்கும் நடந்த மும்முறமான கள்ளுக்கடை மறியல் காரணமாக சர்க்காருக்கு 40 லட்சம் ரூபாய் நஷ்டமேற்பட்டது.

## எல்லைப்புற காந்தி

பெஷாவரையும், அங்கு வசித்துவரும் பட்டாணிய ஜாதி யாரையும்பற்றி ஒரு வார்த்தை சொல்லிவிட்டு இப்போர் நிகழ்ச்சிகளின் விவரத்தை முடிப்போம். பட்டாணியர் மலைநாட்டு மக்கள்; முரட்டு ஜாதியார் ; "அடி, உதை, குத்து, வெட்டு" இவற்றிலேயே நம்பிக்கை கொண்டவர்கள். ஆனால் இவர்களை அஹிம்ஸைக்கு வசப்படுத்தி, ஆடுகள் போல் சாதுக்களாக்கின பெருமை மகாத்மாவுக்கே உரியது. கான் அப்துல் கபார் கான் இன்று " எல்லைப்புற காந்தி "

எனப் பெயர்பெற்றுத் திகழ்கிருர். "குதாய் கித்மத்கள்" என்ற அவரது சேவாஸ்தாபனம் இன்று இந்தியா பூராவும் பிரசித்திபெற்று விளங்குகிறது.

இம்மாகாணத்தில் நடந்த ஒரு ருசிகரமான சம்பவம் இங்கு முக்கியமாகக் குறிப்பிடத்தக்கது. ஒரு இடத்தில் ஒரு பொதுக்கூட்டம் நடந்துகொண்டிருக்கையில் அக் கூட்டத்தின்மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்யுமாறு சில களிவாலா சோல்ஜர்களுக்கு உத்தரவிடப்பட்டது. ஆனல் கூட்டம் நடக்கும் இடத்திற்கு அவர்களை ஏற்றிச் செல்வதற்காகத் தயாராகவிருந்த மோட்டார் லாரியில் அவர்கள் ஏறிக்கொள்ள மறுத்தனர். "அமைதியாகவும் சாந்தமாகவும் உள்ள ஜனங்களை நாங்கள் சுடமுடியாது" என்று அவர்கள் வீரமாகப் பதிலளித்தனர். உடனே அவர்களுக்குக் கடுமையான தண்டனை விதிக்கப்பட்டது. சிலருக்கு 14 வருஷ சிறைவாசமும் கிடைத்தது. காந்தி-இர்வின் ஒப்பந்தத்திற்குப் பிறகு இவர்களில் சிலரது தண்டனைகள் குறைக்கப்பட்டதாயினும், இன்னும் பலர் சிறைக் கம்பிகளுக்குப் பின் சுழன்றுகொண்டிருக்கிருர்கள்.

## சமரஸ முயற்சிகள்

நாடெங்கும் பெருமித வெற்றியுடன் நடைபெற்று வந்த இப்போரை நிறுத்துவதற்கும், ராஜீ உண்டுபண்ணுவதற்கும் பலர் எவ்வாறு முயற்சித்தனர் என்பதை நாம் இனி கவனிக்கவேண்டும். பண்டித மோதிலால்ஜி சிறைக்கு வெளியே இருக்கையிலேயே, அதாவது ஜூன் மாதம் 20-ந் தேதியன்றே, லண்டன் "டெயிலி ஹெரால்ட்" பத்திரிகையின் நிரூபரான மிஸ்டர் ஸ்லோகோம் என்பவர் பண்டிதரை நேரில் கண்டு பேசினர். லண்டனில் நடைபெறவிருக்கும் சர்வகக்ஷி மகாநாட்டில் காங்கிரஸ் கலந்து கொள்வதாயின் அதற்கான நிபந்தனைகள் யாவை என்பதை மிஸ்டர் ஸ்லோகோம் விசாரித்தறிந்தார். அவர் தாமே சில நிபந்தனைகளை எழுதினர்; பண்டித நேருவும், ஸ்ரீமான் ஜெயகரும், அவரும் ஒன்றுகூடிய ஓர் கூட்டத்தில் இந் நிபந்தனைகள் விவாதிக்கப்பட்டன.

மிஸ்டர் ஸ்லோகோம் இது விஷயமாக டாக்டர் சப்ரூவுக்கும் ஓர் கடிதமெழுதினர். கடைசியில் சர்க்காருக்

கும் காங்கிரஸுக்குமிடையேராஜியைஏற்படுத்துவதற்கான தாதர்களாக சப்ரூவும், ஜெயகரும் முன் வந்தனர். லண்டன் மகாநாடு இந்தியாவின் கோரிக்கையான பூரண பொறுப் பாட்சியை ஆதரிக்க சம்மதிப்பதாக விருந்தால் தாம் ராஜிப் பேச்சைப்பற்றி காங்கிரஸ் அக்கிராசனரான பண்டித ஜவ ஹரிலாலிடமும், மகாத்மாஜியுடனும் கலந்து பேசுவதாக மோதிலால்ஜி கூறினர். இந்தக் கருத்தைத் தெரிவித்து சப்ரூவும், ஜெயகரும் இராஜப்பிரதிநிதிக்குக் கடிதமெழுதி காந்திஜியையும், மோதிலால்ஜியையும் (அதற்குள் இவர் சிறைபுகுந்து விட்டார்), ஜவஹரையும் சிறையில் கண்டு பேச அனுமதி கோரினர்.

"இந்தியாவின் அபிலாஷைகளை நிறைவேற்றி வைக் கும் விஷயத்தில் எவ்வளவு தூரம் சாத்தியமோ அவ்வளவை யும் லண்டன் மகாநாடு செய்யும்" என்பதாக வைஸ்ராயிட மிருந்து கிடைத்த பதிலை வைத்துக்கொண்டு சப்ரூவும், ஜெயகரும் ஜுலை மாதம் 23, 24-ந் தேதிகளில் எர வாடா சிறையில் காந்திஜியைக் கண்டு பேசினர். மகாத்மா, நைனிடால் ஜெயிலிலிருந்த இரண்டு நேருக்களுக்கும் ஓர் கடிதம் எழுதிக் கொடுத்தார். பாதுகாப்புகளைப்பற்றி மட்டும் மகாநாட்டில் விவாதிக்கப்படவேண்டு மென்றும், கடைசியில் பூரண சுயேச்சையைக் கைவிடக் கூடாதென்றும் அவர் அதில் குறிப்பிட்டிருந்தார். சட்ட மறுப்புப் போர் நிறுத்தப்பட்டால் கூட சாந்தமான முறையில் அன்னியத் துணிக்கடை, கள்ளுக்கடைகளின் மறியல் நடந்துதான் வருமென்பதையும் அவர் பிரஸ்தாபித்தார். ராஜீயக் கைதி கள் விடுதலை, பறி முதலான சொத்துக்களையும் வசூலான அபராதங்களையும் திருப்பிக் கொடுத்தல், ராஜிஞமா செய்த சர்க்கார் உத்தியோகஸ்தர்களைத் திரும்பவும் வேலைக் கெடுத் துக்கொள்ளுதல், அவசரச் சட்டங்களை ரத்துசெய்தல், இவ் வளவையும் மகாத்மா கோரினர். ராஜீ பேசுவதற்கான சமயம் ஏற்பட்டு விட்டதா என்பது குறித்துத் தாம் சந்தே கப்படுவதாகவும் காந்திஜி அபிப்பிராயப்பட்டார்.

## ராஜிப் பேச்சு முறிவு

சப்ரூவும், ஜெயகரும் இக்கடிதத்தை எடுத்துக் கொண்டு 27, 28-ந் தேதிகளில் நேருக்களைச் சந்தித்தனர். அவர்களுக்குக் காந்திஜி கூறியவை பிடிக்கவில்லை. காங்கிர

வின் உறுதிமொழிகளினின்றும் அவை பின் வாங்குபவை யாக விருந்தன. அதன் பேரில் ஜூலை மாதம் 31-ந் தேதி, ஆகஸ்டு 1, 2-ந் தேதிகளில் ஸ்ரீமான் ஜெயகர் மறுபடியும் மகாத்மாவினிடம் சென்றார். இஷ்டமான பொழுது ஏகாதிபத்தியத்தினின்றும் பிரிந்துவிட இந்தியாவுக்கு உரிமை வழங்கப்படாத எந்த ராஜிப் பேச்சும் தம்மைத் திருப்தி செய்யாதென்றும், தவிர தமது பதினொரு கோரிக் கைகளை நிறைவேற்றி வைப்பதற்கான உரிமையும் இந்தியா வுக் கிருக்க வேண்டுமென்றும் அவர் கூறினார். இதற்குச் சில தினங்களுக்குப் பிறகு நேருக்களும், டாக்டர் ஸையத் முகம் மதும் ராஜிப் பேச்சைத் தொடர்ந்து நடத்துவதற்காக எரவாடா சிறைக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். இப் படியாக ஆகஸ்டு 14, 15-ந் தேதிகளில் எரவாடா சிறையில் தலைவர்கள் மகாநாடு ஒன்று நடந்ததென்றே சொல்லலாம். மேற்கூறிய தலைவர்களைத் தவிர ஸ்ரீயுத வல்லபாயும் ஜெய ராம்தாஸ் தௌலத்ராமும், ஸ்ரீமதி ஸரோஜினி தேவியும் இம்மகாநாட்டில் கலந்துகொண்டனர். பேச்சுகள் முடிந் ததும், எல்லோரது கையொப்பத்துடனும், பழைய நிபந்தனை களையே வற்புறுத்தி 15-ந் தேதியன்று இராஜப்பிரதிநிதிக்கு ஓர் கடிதம் அனுப்பப்பட்டது. இந்தக் கதையை மேலும் வளர்த்துக்கொண்டு போவதில் பயனில்லை யாதலால் ராஜிப் பேச்சுகள் முறிந்து போய்விட்டன என்று கூறி விடு வோம்.

ஆனால் மேனாட்டு அன்பர்கள் சப்ரூ, ஜெயகரின் முயற்சி கள் பலிக்காமல் போனது கண்டு ஏக்கமோ, வருத்தமோ கொள்ளவில்லை. மிஸ்டர் ஹொரேஸ் அலெக்ஸாண்டர் வைஸ்ராயையும், காந்தியையும் கண்டு பேசினார். மகாத்மா எடுத்துரைத்த விஷயங்கள் அவர் மனதைக் கவ்வின. இந்தியாவின் துர்ப்பாக்கியமான நிலைமையைக் காந்திஜி படம் பிடித்துக் காட்டி, தமது கோரிக்கைகள் எவ் வளவு சாமானியமானவை என்பதை விளக்கினார்.

## லண்டன் மகாநாடு

இங்கிலையில் நவம்பர் மாதம் 12-ந்தேதியன்று உத்தேசிக் கப்பட்டிருந்த கூட்டு மகாநாடு லண்டனில் கூடியது. 85 பேர்கள் இதில் இந்தியாவின் பிரதிநிதிகளாக வீற்றிருந் தனர். எல்லோரும் குடியேற்ற நாட்டந்தஸ்தைப்பற்றிப்

பேசினர். சிலர் சமஷ்டி அரசியலை விரும்பினர். இந்தியாவின் ஸ்வதந்திரத்தைப்பற்றி அறைந்து அறைந்து பேசிய மகாகனம் சாஸ்திரியார் முதலில் சமஷ்டியை விரும்பவில்லையாயினும், பின்னர் அதையே கட்டியணைத்தார். பற்பல விஷயங்களைப்பற்றி ஆராய்வதற்காக வேறு வேறு சப் கமிட்டிகள் நியமிக்கப்பட்டன. இதற்குப் பிறகு மகாநாடு 1931-ம் வருஷம் ஜனவரி மாதம் 19-ந் தேதியன்று மீண்டும் கூடியது. மேற்படி சப்-கமிட்டிகளின் அறிக்கைகள் இதில் ஆலோசிக்கப்பட்டன. ராஜீப் பிரச்னை விஷயத்தில் கவர்ன்மெண்டு தனது மனப்பான்மையை வெளியிட்டது. அது உண்மை இந்தியாவைத் திருப்தி படுத்துவதாக இல்லை. பா.துகாப்புகள் என்ற சங்கிலிகளால் இந்தியாவைப் பிணைத்துக் கட்ட வழிகள் தேடப்பட்டன. "இராஜப்பிரதிநிதியின் வேண்டுகோளுக்கு சட்டமறுப்பாளர்கள் இணக்கம் காட்ட முற்படுவார்களாயின் அவர்களது ஒத்துழைப்பையும் பெற முயற்சி எடுத்துக்கொள்ளப்படும்" எனப் பிரிட்டிஷ் மந்திரி கூறினர்.

## காங்கிரஸின் மனோபாவம்

இந்த மொழிகள் காரணமாக இந்திய ராஜீய உலகில் விசேஷ அபிவிருத்திகள் ஏற்பட்டன. லண்டன் மகாநாடு முடிந்த ஒரு வாரத்திற்கெல்லாம் மகாத்மா காந்தியும், அவரது முக்கியமான சகாக்களில் 19 பேர்களும் எவ்வித நிபந்தனையுமின்றி விடுவிக்கப்பட்டனர். இதற்கப்புறம் ஏழு பேர்களுக்கு விடுதலை ஏற்பட்டது.

இதற்கு நான்கு அல்லது ஐந்து தினங்களுக்கு முன்பு, அதாவது ஜனவரி மாதம் 21-ந் தேதியன்று அலாகாபாத்திலுள்ள ஸ்வராஜ்ய பவனத்தில் நடைபெற்ற காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்தில் லண்டன் மகாநாட்டைப் பற்றி யோசிக்கப்பட்டது. பிரிட்டிஷ் பார்லிமெண்டைச் சேர்ந்த சில அங்கத்தினர்களும், இந்திய இளவரசர்களும், இந்திய மக்களால் தெரிந்தெடுக்கப்படாத தனிப்பட்ட நபர்களும் அடங்கிய கூட்டு மகாநாட்டை இந்திய தேசீயக் காங்கிரஸின் காரியக் கமிட்டியினர் அங்கீகரிக்கவில்லையென்றும், இந்தியாவின் பிரதிநிதிகளைக் கலந்து தான் எல்லாம் செய்யப்படுவதாக பாவனை காட்டிவரும்

பிரிட்டிஷ் கவர்ன்மெண்டின் போக்கைக் கண்டிப்பதாகவும், இந்தியாவின் சார்பில் பேசக்கூடிய உண்மையான குரல்களெல்லாம் சிறைக் கம்பிகளுக்குப் பின் அடைந்து கிடக்கின்றனவென்றும், இந் நிலையில் சாத்வீக சட்டமறுப்பைத் தவிர தேச விமோசனம் பெற வேறு வழியில்லை என்றும், பிரிட்டிஷ் மந்திரி வெளியிட்டுள்ள அபிப்பிராயம் தெளிவாக இல்லை என்றும், ஆதலால் காங்கிரஸின் கொள்கையில் மாறுதல் செய்வதற்கான எதுவும் நடந்துவிடவில்லை என்றும், இந்தியாவின் ஒப்பற்ற தலைவர்களும், இணையற்ற வீரர்களும் சிறைகளில் உழன்று கொண்டிருக்கையில் சட்டமறுப்பை நிறுத்துவதுபற்றி சிந்தனைக்குக்கூட இடமில்லை என்றும் காரியக் கமிட்டி தீர்மானித்தது. இத் தீர்மானத்தைப் பத்திரிகைகள் மூலம் பகிரங்கப்படுத்தலாமா, வேண்டாமா என்பதைப்பற்றி ஒரு யோசனை எழுந்தது. இவ் விஷயத்தில் அபிப்பிராய பேத மிருந்தது. கடைசியில் அடுத்த நாள் வரையில் அதைப் பிரசுரிக்க வேண்டாமென முடிவு செய்யப்பட்டது.

அதற்குள்ளாக லண்டனிலிருந்த டாக்டர் சப்ருவிடமிருந்தும் மகாகனம் சாஸ்திரியாரிடமிருந்தும் தந்திகள் கிடைத்தன. தாங்கள் இந்தியா வந்து சேர்வதற்குள், தங்களைக் கலந்து கொள்ளாமல் பிரிட்டிஷ் பிரதம மந்திரியின் பேச்சைப்பற்றி காரியக் கமிட்டியினர் எவ்வித முடிவும் செய்யவேண்டாமென்று இத் தந்திகள் பேசின. எனவே மேற்படி தீர்மானம் பிரசுரிக்கப்படவில்லை.

## வைஸ்ராய் அறிக்கை—தலைவர்கள் விடுதலை

1931-ம் வருஷம் ஜனவரி மாதம் 25-ந் தேதி யன்று இராஜப்பிரதிநிதி அவர்கள் ஓர் அறிக்கையை வெளியிட்டனர். ஜனவரி மாதம் 19-ந் தேதி யன்று பிரிட்டிஷ் பிரதம மந்திரி வெளியிட்ட கருத்தைப்பற்றி தீர்க்கமாக ஆலோசிப்பதற்குச் சந்தர்ப்பமளிப்பதற்காகவும், இது விஷயமாக அகில இந்திய காங்கிரஸ் மகா சபையின் காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் ஒருவரை யொருவர் கலந்து யோசிக்க வகை யளிக்கவும் வேண்டி காங்கிரஸ் மகாசபையைச் சட்ட விரோதமாக்கி யிருக்கும் உத்தரவு ரத்து செய்யப்பட்டு, காந்தியையும் கீழ்க்கண்ட இதர தலை-

வர்களையும் யாதொரு நிபந்தனையு மின்றி விடுதலை செய்வதாக வைஸ்ராயின் அறிக்கை கூறிற்று. இவ்வறிக்கைக்கிணங்க கீழ்க்கண்டவர்கள் அன்றே விடுதலை செய்யப்பட்டனர் :—

1. மகாத்மாஜி.
2. பண்டித ஜவஹர்லால் நேரு.
3. ஸ்ரீயுத ஜே. எம். சென்குப்தா.
4. சேத் யமுனாலால் பஜாஜ்.
5. சர்தார் வல்லபாய் படேல்.
6. ஸ்ரீமான் ஸி. ராஜகோபாலாச்சாரியார்.
7. ஸ்ரீமதி சரோஜினி தேவி.
8. டாக்டர் பட்டாபி சீதாராமய்யா.
9. சர்தார் சர்தூல் சிங்.
10. டாக்டர் அன்சாரி.
11. மௌல்வி கிலயத்துல்லா.
12. டாக்டர் கிச்லு.
13. பண்டித கோவிந்த காந்த மாளவியா.
14. ஸ்ரீயுத மகாதேவ தேசாய்.
15. ஜனுப் எஸ். எப். பிரேல்வி.
16. ஸ்ரீமதி சென்குப்தா.
17. ஸ்ரீமதி கமலா நேரு.
18. ஸ்ரீமான் ராஜா ராவ் (அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி).
19. மௌலானா அபுல் கலாம் ஆசாத்.
20. ஸ்ரீயுத ஜெயராம்தாஸ் தௌலத்ராம்.

———

# ஐந்தாம் பாகம்

## அத்தியாயம் 1

### 1931-ம் வருட ஒப்பந்தம்

காந்திஜி விடுதலை செய்யப்பட்டதும் இந்திய மக்களுக்குச் செய்தி யொன்று விடுத்தார். வெற்றியில் கர்வமும், தோல்வியில் மனச்சோர்வும் அறியாத அவரது மனப்பான்மைக்கு ஒத்ததாகவே அச் செய்தி யிருந்தது. அது பின்வருமாறு :—

" சிறையினின்று நான், பகையுணர்ச்சி யின்றி, பட்சாபாதமற்று, பூரண நிலைமையையும் எல்லாத் துறைகளிலும் ஆராய்ச்சி செய்யத் தயாராகவும், பிரதம மந்திரியின் அறிக்கை சம்பந்தமாக, சர். தேஜ் பகதூர் சாப்ருவுடனும் இதரர்களுடனும் அவர்கள் திரும்பி வந்ததும் விவாதிக்கவும் பூரண, திறந்த மனத்தினனாய் வெளி வந்துளேன். லண்டனிலிருந்து சில பிரதிநிதிகள், தந்தி மூலம் அவசரமாகத் தங்கள் விருப்பத்தை அறிவித்ததற்கிணங்கியே நான் இச் செய்தியை விடுத்துளேன்.

விஷய மென்னவெனில், வட்டமேஜை மகாநாட்டு முடிவில், லண்டனிலுள்ள சில பிரதிநிதிகள், சர்க்காருடனும், காங்கிரசுடனும் சம்பந்தம் வைத்துக்கொண்டனர். கடுமையான வியாதி காரணமாக, பண்டித மோதிலால் நேரு தண்டனைக் காலம் முடிவடைவதற்கு முன்பு சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டார். 1931-ம் வருஷம் ஜனவரி மாதம் 21-ம் தேதியன்று அலகாபாத்தில் காரியக் கமிட்டியின் இடைக்கால அங்கத்தினர்கள் கூடிய கூட்டத்தில் காரியக் கமிட்டியின் ஆதி அங்கத்தினர்களின்றித் தங்களால் எவ்வித நடவடிக்கையும் எடுக்கமுடியாதிருக்கும் விஷயம் வெளியிடப்பட்டது. இத் தீர்மானம் வைசிராய்க்

குத் தந்தி மூலம் அனுப்பப்பட, இதுவே, வைஸிராய் நடவடிக்கை யெடுப்பதற்குக் காரணமா யிருந்ததாக நம்பப்படுறது. காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் மட்டும் விடுதலை செய்யப்பட்டதால் நிலைமை மிகவும் கஷ்டமாகி விட்டதாகவும், அங்கத்தினர்கள் எவ்வித நடவடிக்கையும் எடுக்க முடியாதபடி செய்துவிட்டதாகவும் காந்திஜி உணர்ந்தார். அவர் பத்திரிகா நிருபர்களிடம், ஒப்பந்த மேற்படுவதற்குரிய தமது நிபந்தனைகளின்னவெனக் குறிப்பாக வெளியிட்டார். "அதன் பழத்திலிருந்து வட்டமேஜை மகாநாடாம் விருக்ஷத்தைப்பற்றி நான் நிர்ணயிப்பேன்" என அவர் சொன்னார்.

நோய்வாய்ப்பட்டிருக்கும் பண்டித நேருவைக் காண காந்திஜி அலகாபாத்திற்கு விரைந்து வந்தார். விடுதலை செய்யப்பட்ட காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் யாவருக்கும் அழைப்பு அனுப்பப்பட்டது. அலகாபாத்தில் சுயராஜ்ய பவனத்தில் ஜனவரி மாதம் 31-ம் தேதி யன்று அவ்வங்கத்தினர்களடங்கிய கூட்டம் நடைபெற்றது. அதில், சட்ட மறுப்பு நிறுத்தி வைக்கப்பட்டதான அபிப்பிராயம பரவியிருக்கிறதென்றும், இயக்கம் நிறுத்தப்பட்டதாக அறிக்கைப்படும் வரையில், அதைத் தீவிரமாக நடத்தவேண்டிய தவசியமென்றும், அன்னியத் துணி கடைகள், மதுபானக் கடைகள் முதலியவற்றை மறியல் செய்வது சட்டமறுப்பியக்கத்தின் பாகமன்றெனவும், ஆனால் அமைதியாகவும் பொது ஜனங்களுக்குத் தடையின்றியும், அது நடைபெறும் வரையில், அது மக்களின் சாதாரண உரிமையை அமுல் நடத்துவதாகுமெனவும், அன்னியத் துணியை பகிஷ்கரிப்பது, பொது ஜனங்களின் உயிர் நாடியான நலத்திற்கு அவசியமாயிருப்பதால், தேசீய இயக்கத்தில் அது நிரந்தரமான அம்சமாக விருக்குமென்பதை ஞாபகப்படுத்துவதாகவும், அன்னியத் துணி பகிஷ்காரத்தை நடத்த உதவிய வியாபாரிகளைப் பாராட்டும்போது, அதை இந்தியாவில் விற்பனை செய்யக்கூடிய நம்பிக்கையளிக்க எந்த காங்கிரஸ் ஸ்தாபனத்திற்கும் அதிகாரமில்லை யென்பதையும் ஞாபகப்படுத்துவதாகவும் தீர்மானமொன்று நிறைவேற்றப்பட்டது.

## பண்டிட்ஜி மரணம்

அலகாபாத்திலேயே, பிப்ரவரி மாதம் ௬-ந் தேதி வரை காரியக் கமிட்டி அங்கத்தினர்களும், தற்காலிகமாக நியமிக்கப்பட்ட அக்கமிட்டியின் அங்கத்தினர்களு மிருந்தனர். காந்திஜி, மோதிலால்ஜியுடன் லட்சுமணபுரிக்குச் சென்றார். அங்கு அவரது தேக நிலைமை கேவலமாகிக்கொண்டு வந்ததால் அலகாபாத் சுயராஜ்ய பவனத்திற்கு அவர் திருப்பிக் கொண்டு வரப்பட்டார். அவர் "இந்தியாவின் கதியை சுயராஜ்யப் பவனத்திலேயே நிச்சயஞ் செய்க. என் முன்னிலையிலேயே உறுதிசெய்க. என் தாய்நாட்டின் கதியை நிர்ணயிக்கும் முடிவான, கௌரவமான ஒப்பந்தம் செய்யப்படுவதில் நானும் பங்கெடுத்துக் கொள்ளட்டும். நான் இறக்க வேண்டுமாயின், சுதந்திர இந்தியாவின் மடியில் இறக்கட்டும்," என்ற வார்த்தைகளைச் சொன்னார். அதுவே அவரது கடைசி வார்த்தைகள். பண்டிட்ஜி உயிர் நீத்தார்.

இந் நெருக்கடியான நிலைமையில் அவர் உயிர் துறந்தது நேர் செய்யமுடியாத பெரு நஷ்டமாகும். தமது செல்வத்தைத் தேசம் பகிர்ந்துகொள்ள உதவிய சில பெருஞ் செல்வர்களில் இவரும் ஒருவர். தமது வாசஸ்தலமாம் ஆனந்த பவனத்தை அவர் காங்கிரஸிற்கு அளித்தது, அவரை உண்மையான அபேதவாதியாகக் காட்டிவிட்டது. செங்கல்லாலும், சுண்ணும்பாலுமான இக்கொடையினும், அவர் தமது அருங்குமரனை தேசத்திற்காக அர்ப்பணஞ் செய்ததே, தேசத்திற்கு அவர் அளித்த பெருங்கொடையாகும். மோதிலால்ஜி மறைந்தார் எனினும், அவரது ஆன்மா, காங்கிரஸிலிருந்துகொண்டு, அதற்கு வழிகாட்டியா யிருந்து வருகிறது.

பண்டிட்ஜி மரணத்தையொட்டி, காந்திஜி அடியிற் கண்ட செய்தி விடுத்தார் :—

"மோதிலாலின் மரணம், ஒவ்வொரு தேசபக்தராலும் பொறாமைப்படத்தக்க மரணமாகும். தன்னிடமுள்ளயாவையும் கொடுத்துவிட்டு கடைசிவரை நாட்டைப்பற்றியே நினைத்துக் கொண்டு அவர் மரணமடைந்தார். அவர் போன்று யாவையும் தியாகம் செய்யாவிட்டாலும், இப்பொழுது எளிதில் கிட்டக்கூடிய, அவரால் ஆர்வத்துடன் விரும்பப்பட்ட சுதந்திரம் பெறுவதற்குரிய அளவாவது தியாகஞ் செய்து, இவ் வீரரின் மகத்தான தியாகத்திற்கு நம்மை அருகராக்கிக் கொள்வோமாக."

## அரசியல் நிலைமை

இச்சமயத்தில் அரசியல் நிலைமையில் உண்மையர்கத் தொந்திரவளித்ததும், முக்கியமாகக் காந்திஜிக்குத் துயரளித்ததும், சுதந்திரம் அளிக்கப்படுமென விசேஷமாக விளம்பரம் செய்யப்பட்டும் இந்தியாவில் யாதொரு பிரதிபலிப்பும் ஏற்படாததேயாகும். "டீயிஸ் கிரானிகள்" பத்திரிகைக்குக் காந்திஜி எழுதியதாவது :

"கடுமையான அடக்குமுறை எல்லா வழிகளிலும் தொடர்ந்து நடைபெறுகிறது யாதொரு காரணமுமின்றி குற்றமற்றவர்கள் இன்னும் தாக்கப்பட்டு வருகின்றனர். கௌரவமான மக்களின் ஸ்தாவர, ஜங்கம சொத்துக்கள் யாவும் வெளிப்படையான காரணமின்றி, நிர்வாக சர்க்கார் உத்திரவுப்படி பறிக்கப்பட்டு வருகின்றன. ஸ்திரீகளின் ஊர்வலமொன்று பலாத்காரத்தால் கலைக்கப்பட்டது. அவர்கள், கூந்தல் பற்றி யிழுக்கப்பட்டு, பூட்ஸ் காலால் உதைக்கப்பட்டனர். இதுபோன்ற அடக்குமுறை தொடர்ந்து நடந்துவருமாயின், இதர கஷ்டங்களை நீக்கி விடக் கூடுமாயினும் காங்கிரஸ் ஒத்துழைக்க முடியாமற் செய்துவிடும்."

இயக்கம் நடந்துவர வேண்டுமாயினும், புதிய கிளர்ச்சிகள் செய்யவோ அல்லது புதிய நிலைமைகள் ஏற்படும்படியோ செய்யக்கூடாதென, அந்தரங்கமாக யோசனைகள் கூறப்பட்டிருந்தன. இச் சமயத்தில், அதாவது 1931-ம் வருடம் பிப்ரவரி மாதம் 6-ம் தேதியன்று, இருபத்தாறு பிரதிநிதிகள், இந்தியாவில் வந்திறங்கியதும், திட்டம், சுருக்கமான அமைப்பை மட்டும் குறிப்பிடுகிறதென்றும், அதன் விவரங்கள், விரிவாக அமைக்கப்பட விருக்கிறதென்றும், அது பூர்த்திபெற காங்கிரஸ் கட்சியும், இதர கட்சியினரும் முன் வருவரெனத் தாங்கள் நம்புவதாகவும், அதற்குரிய பூரண சமாதான நிலைமை யேற்படுமெனவும், அரசியல் கைதிகள் விடுதலை செய்யப்படுவரெனவும் தாங்கள் நம்புவதாக வேண்டுகோளொன்றை விடுத்தனர்.

1931-ம் வருடம் பிப்ரவரி மாதத்திலேயே, மறியல் செய்ததற்காக 136 பேர் கைதியாயினர். உணவு, உடை சம்பந்தமாக அரசியல் கைதிகள் சிறையில் நடத்தப்பட்டு

வந்த முறை எப்பொழுதும்போல கேவலமாகவே யிருந்து வந்தது.

அலகாபாத்தில் பிப்ரவரி மாதம் 13-ம் தேதியன்று காங்கிரஸ் காரியக் கமிட்டி கூடியது. இச் சமயத்தில் டாக்டர் சாப்ரூவும், சாஸ்திரியும் இந்தியா திரும்பினர். அவர்கள், அலகாபாத்திற்கு விரைந்து வந்து, காந்திஜியை யும் காரியக் கமிட்டியையும் சந்தித்துப் பேசினர். நீண்ட காலம் சம்பாஷணைகள் நடந்தன. இருவரும் அங்கத்தினர் களால் கடுமையாகக் குறுக்கு விசாரணை செய்யப்பட்டனர். இங்கிலாந்திலிருக்கும்பொழுது சாஸ்திரியார் கூறிய சில வார்த்தைகளால் பொது ஜனங்களிடை மனக்கசப்பேற் பட்டிருந்ததே இதற்குக் காரணமாகும். காங்கிரஸ் வாதி கள் கொஞ்சம் அடிகள் வாங்கியதாக லண்டனிலிருக்கும் போது சாஸ்திரியார் லேசாகக் குறிப்பிட்டுவிட்டார்.

இஃதெவ்விதமாயினும், காந்திஜி போலீஸ் அதி காரங்களைப்பற்றியும், போர்ஸாதில் ஜனவரி மாதம் 21-ம் தேதியன்று தாக்கப்பட்டதை முக்கியமாகக் குறிப்பிட்டும், லார்டு இர்வினுக்குக் கடிதமொன்றெழுதி விட்டார். போலீஸ் நடத்தையைப்பற்றி விசாரணை செய்யவேண்டு மென அதில் கண்டிருந்தது புறக்கணிக்கப்பட்டது. சமாதானப் பேச்சு சம்பந்தமான யாவும் முறிந்ததாகக் காணப்பட்டது. எனினும் காங்கிரசும், சர்க்காரும் சந் திக்க வேண்டுமாயின், இருவரிலெவராவது இவ்விஷயத் தில் முதல் நடவடிக்கை யெடுக்க முன் வரவேண்டும். சர்க் கார் நிபந்தனையின்றி காரியக் கமிட்டி அங்கத்தினர் களை விடுதலை செய்துவிட்டனர். கமிட்டியோ அல்லது காந்திஜியோ, வைசிராய்க்குப் பேட்டி யளிக்குமாறு கோரி, ஏன் கடிதமெழுதக்கூடாதெனக் கேட்கப்பட்டது. சத்தியாக்கிரகி அத்துறையில் யாதொரு தயக்கமும் காட்ட வில்லை.

## காந்திஜி-வைசிராய் சந்திப்பு

கடிதம் 14-ம் தேதியன்று அனுப்பப்பட்டது. பதில் தந்திமூலம் 16-ம் தேதி காலை கிடைத்தது. காந்திஜி டில்லிக்குப் பயணமானார். காங்கிரஸின் பெயரால் சமாதானப் பேச்சு நடத்த அவரை தூதராக நியமித்திருப்

பதாகக் காரியக் கமிட்டியில் தீர்மானமொன்று நிறைவேற்றப்பட்டது. முதன்முதலாக, பிப்ரவரி மாதம் 17-ந் தேதியன்று காந்திஜி வைசிராயைச் சந்தித்தார். அப்பொழுது அவர் சுமார் நான்கு மணி நேரம் சம்பாஷணை செய்தார். மூன்று நாட்கள் தொடர்ச்சியாகப் பேச்சுக்கள் நடைபெற்றன.

சம்பாஷணையின்போது, காந்திஜி ஒப்பந்தத்திற்குரிய வழக்கமான நிபந்தனைகளான, அரசியற் கைதிகள் விடுதலை, அவசரச் சட்டங்கள் ரத்து, பறிமுதல் சொத்தைத் திருப்பிக் கொடுத்தல், ராஜினமா செய்த அல்லது நீக்கப்பட்ட சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கும், சிப்பந்திகளுக்கும் மீண்டும் வேலைகொடுத்தல் ஆகியவை உள்பட, போலீஸ் அதிக்கிரமத்தை விசாரணை செய்வதையும், மறியல் செய்யும் உரிமையையும் வற்புறுத்திக் கூறினர். கடைசி யிரண்டும் தகராறுக்குரியனவாதலால், வைசிராய் மாளிகையிலிருந்து விஷயங்கள் பரிசீலனை செய்யப்பட்டு வருவதாகவும், ஒருவிதமான முடிவிற்கு வர சில நாட்கள் செல்லுமெனவும் 19-ம் தேதியன்று சர்க்கார் அறிக்கை யொன்று வெளியிடப்பட்டது.

முதல் நாள் காந்திஜி, டாக்டர் அன்சாரி வீட்டிலுள்ள தாம் இறங்கி யிருந்த ஸ்தலத்திற்கு, விசேஷ நம்பிக்கையுடன் திரும்பி வந்தார். முதல் நாள் சம்பாஷணையில் உறுதியான நம்பிக்கை வெளியிடப்பட்டது. இரண்டாம் நாள், வைசிராய், காந்திஜி கூறியதை உணர்ந்துகொள்ளவில்லையென வெளியானது. இங்கிலாந்திலிருந்து விரைவில் தந்தி யொன்று வருமென எதிர்பார்த்துத் தற்காலிகமாகச் சம்பாஷணை நிறுத்திவைக்கப்படலாமென முற்கூறப்பட்டது. 21-ந் தேதி சனிக்கிழமையன்று காந்திஜியை திருப்பி யழைப்பதாக வைசிராய் கூறினர். ஆனால் 19-ந் தேதி வியாழக்கிழமையன்றே அவருக்குத் திடீரென அழைப்பு வந்தது. பன்னிருபேரடங்கிய கூட்டமொன்று நடத்துவதெனத் தீர்மானிக்கப்பட்டது. அந்த எண்ணிக்கை இருபதுக்கு உயர்ந்தது. சர்க்காருக்கும், காங்கிரசுக்கும் இடையே உள்ள பல்வேறு விஷயங்களை யொட்டியும் விவாதிப்பதற்காக இக் கூட்டம் கூடியது. இது சம்பந்தமாக வைசிராய், லண்டனிலிருந்து தந்தி யொன்றை எதிர்பார்த்துக் கொண்டிருந்தார். 28-ந் தேதிவரை, இக்

கூட்டத்தைத் தயாரித்து வைத்திருப்பதென உத்தேசிக்கப் பட்டது.

20, 21, 22, 23, 24 தேதிகள், அழைப்பு வருமென கமிட்டியால் எதிர்ப்பார்க்கப்பட்டிருந்த நாட்கள். திங்கட்கிழமையன்று, பிற்பகல் மூன்று மணிக்கே, தமது வழக்கமான உண்ணுவிரதத்தையும், மௌன விரதத்தையும் முடித்துக்கொண்டு, காந்திஜி, அழைப்பை யெதிர்பார்த்துக் கொண்டிருந்தார். ஆனால் எவ்வித அழைப்பும் வராததால், சில அங்கத்தினரிடை பரபரப்பேற்பட்டது. பொறுமையா யிருக்கும்படி காந்திஜி கூறினர். 25, 26 தேதிகளும்; அழைப்பு வீணே யெதிர்பார்க்கப்பட்டுக் கழிந்தன. இக்காலத்தை, சில கஷ்டங்களிருப்பதால், அடுத்த காங்கிரஸிற்குரிய ஏற்பாடுகளை யொட்டி யோசிப்பதில் கழித்தனர்.

கடைசியாக 26-ந் தேதியன்று, எதிர்ப்பார்க்கப்பட்ட அழைப்பு வந்து சேர்ந்தது. 27-ம் தேதி காந்திஜி, வைசிராயைச் சந்தித்தார். அவர் மூன்று மணி நேரம் பேசிக்கொண்டிருந்தார். பேச்சு தாராளமாகவும், பகிரங்கமானதாகவும், நேசப்பான்மையுடன் கூடியதாகவு மிருந்தது. காந்திஜியால், சம்பாஷணை முறிக்கப்படாமலிருக்கவேண்டுமென்பதில் வைசிராய், கவலையுள்ளவரா யிருந்தார். கடன்கள், உப்பு, மறியல், சத்தியாக்கிரக விடுதலை, அபராதங்கள், மறியல் செய்யப்பட்ட சொத்துக்களைத் திருப்பிக் கொடுத்தல், போலீஸ் அக்கிரமங்கள்பற்றி விசாரணை செய்தல் முதலிய விஷயங்களை யொட்டிப் பேச்சு நடைபெற்றது. உப்புச் சட்டத்தை அமுல் நடத்துவதில் கடுமையாக நடந்து கொள்ளாதிருக்கும்படி அதிகாரிகளுக்கு உத்திரவனுப்பப்படுமென்றும், ஆனால் சட்டத்தை ரத்து செய்ய முடியாதென்றும், வசூல் செய்யாத அபராதங்களை ரத்து செய்யவும், வரி செலுத்தியதின்மேல் சொத்துக்களைத் திருப்பிக் கொடுக்கவும், படேல்களுக்குத் திரும்பவும் வேலை கொடுக்கவும் வைசிராய் சம்மதித்தார். ஒப்பந்த சம்பந்தமாக போலீஸ் செய்கைகளைப்பற்றி விசாரணை செய்யமுடியாதென்று வைசிராய் கூறிவிட்டார்.

ஒவ்வொரு பிரச்னைகளை யொட்டியும் இறுதியான முடிவைக் காந்திஜி கூறவேண்டுமென வைசிராய் விரும்பி

ஞர். முன்னரே ஏற்பாடு செய்யப்பட்டிருந்தபடி, தமது மாளிகைக்கு மார்ச்சு மாதம் 1-ந் தேதி, பிற்பகல் 2-30 மணிக்கு வரும்படி காந்திஜி யழைக்கப்பட்டார். மார்ச்சு மாதம் 1-ந் தேதி, நிலைமை மிகவும் நம்பிக்கை யற்றதா யிருந்தது. காரியக் கமிட்டியின் ஒவ்வொரு அங்கத்தினரும் சமாதானப் பேச்சை முறித்துவிடும்படி கூறினர். ஒருவராவது இதை யாட்சேபிக்க வில்லை. இச்செய்தி விரைந்து எங்கும் பரவியது. எங்கும் பீதி நிலவியது. சர்க்கார் எடுக்க விருக்கும் நடவடிக்கைகளைப்பற்றி பத்திரிகைகாரரால் பல திட்டங்கள் முற்கூறப்பட்டன. காரியக் கமிட்டி அங்கத்தினர்கள் யாவரும், அரபிக்கடலிலுள்ள ஏதாவதொரு அழகிய தீவிற்குக் கடத்திச் செல்லப்படுவரென எதிர்பார்க்கப்பட்டது. குறிப்பிட்ட நேரத்தில் காந்திஜி வைசிராயைச் சந்தித்துவிட்டு, 6 மணிக்குத் திரும்பிவிட்டார். அவர் விரைந்து திரும்பி வந்ததால் முதலில் ராஜி, நிலைமையில் நம்பிக்கையில்லை யெனக் கருதப்பட்டது. ஆனால் சமாதானம் ஏற்படுவதற்குரிய நம்பிக்கை யிருக்கிறதென விரைவில் வெளியானது.

மார்ச்சு மாதம் 1-ம் தேதி பிற்பகல் காந்திஜி வைசிராயைச் சந்தித்தபோது, வைசிராய் முற்றிலும் நேசப்பான்மையுடையவராக விருந்தார். உள்நாட்டுக் காரியதரிசி மிஸ்டர் எமர்ஸனும், நல்லுணர்ச்சியுடன் நடந்துகொண்டார். தாங்கள் கண்டிப்பாக வெழுதிய குறிப்பை அவர்கள் திரும்பவும் வாங்கிக்கொண்டனர். காங்கிரஸ் அதைத் திருப்பிக் கொடுத்துவிட்டது. ஒருவருக் கொருவர் விட்டுக் கொடுக்கும் பான்மையையும், மற்றவரிடமிருந்து குறைவானதைப் பெற்றுக்கொள்ளும் உணர்ச்சியும் அப்பொழுது வெளிக் காட்டப்பட்டது. 'அன்னியத் துணிகளா அல்லது பிரிட்டிஷ் துணிகளா' மறியல் செய்யப்பட வேண்டுமென்பதே மறியல் சம்பந்தமாக நாவிலுள்ள ஒரே பிரச்னை. மறியலை நடத்தும் முறை பற்றியும் பேசப்பட்டது. பகிஷ்காரம் என்ற வார்த்தை வைசிராயால் ஆக்ஷேபிக்கப்பட்டது. மறியல் சம்பந்தமாக வொரு திட்டம் வகுக்குமாறு காந்திஜியையும் எமர்ஸனையும் வைசிராய் கேட்டுக் கொண்டார். 'பயமுறுத்து' பலனளித்தது.

வைசிராய் மாளிகையில், இரவில் வெகு நேரம் வரையில் பேச்சு நடைபெற்றதென இங்குக் குறிப்பிடவேண்டிய

நவசியமா யிருக்கிறது. மாலை 6 மணிக்கு வைசிராய் மாளிகையிலிருந்து திரும்பிய காந்திஜி இரவு 8-45 மணி வரை அன்சாரியின் வாசஸ்தலத்தில் கூடிய காரிய கமிட்டி முன்பு வைசிராயுடன் அன்று நடந்த சம்பாஷணையின் முடிவை எடுத்துக் கூறினர். அதில் தாம் காரியக் கமிட்டியின் காரியஸ்தரே யென்றும், நீங்கள் குறித்துவிட்டால் நானும் வைசிராய் மாளிகைக்கு சமரசத்தை குறிக்கவே போவேன் என்றும் அவர் குறிப்பிட்டார். பின்னர் காந்திஜி வைசிராய் மாளிகைக்குச் சென்றார். அங்கு இரவு 1 மணி வரை பேச்சு நடந்தது. அவர் அங்கிருந்து புறப்பட்டு வந்து 2-15 மணி வரை காரியக் கமிட்டி முன்பும், நண்பர்கள் முன்பும் நடந்ததை எடுத்துக் கூறினர். மார்ச்சு மாதம் 2-தேதி காந்திஜீயின் மௌன தினம். மார்ச்சு மாதம் 3-ந் தேதியன்று பிற்பகல் 2 மணிக்கே வைசிராயை அவர் சந்திக்கவேண்டுமானதால், பகல் 11 மணிக்கு அவர், உப்பு சம்பந்தமாக, ஒரு திட்டம் வகுக்க சர் ஜார்ஜ் ஷுஸ்டரைக் கண்டு பேசினர். பர்டோலி விவசாயிகளுக்கு நிலங்களைத் திருப்பி கொடுக்கும் விஷயம், சமரசப் பேச்சை முறித்துவிடக் கூடியதா யிருந்தது. முடிவில் சில நிலங்கள் ஏலம் போடப்பட்டது. சட்ட விரோதமானதும், அநீதியானதும் என காந்திஜி கூறியது ஒப்புக்கொள்ளப்பட்டது. 3-ம் தேதி யிரவும் காந்திஜி 2-30 மணிக்கே வைசிராய் மாளிகையிலிருந்து திரும்பினர். யாவரும் விழித்துக் கொண்டிருந்தனர். வழக்கம்போல அவர், இரவில் நிகழ்ந்தவற்றை யெடுத்துக் கூறினர். இவ்வாறு பதினைந்து நாட்கள் விவாதம் விடாது நடைபெற்று முடிவில் காந்தி-இர்வின் ஒப்பந்தம் முடிவு செய்யப்பட்டது. இச் சமரசத்தால் காந்திஜியிடமும், இர்வினிடமும் உள்ள பெருந்தன்மையான குணங்கள் பூரணமாக வெளியாயின. 5-ந் தேதியன்று இவ் வொப்பந்தத்தில் கையெழுத்திடப்பட்டது.

இச் சம்பாஷணைகள் நடைபெற்றுக்கொண்டிருக்கும் பொழுது காந்திஜியும் வைசிராயும், ஸ்ரீ பகத்சிங்கிற்கும், அவரது தோழர்களுக்கும் விதிக்கப்பட்ட மரண தண்டனையைக் குறைப்பது பற்றியும் பேசினர். 1928-ம் வருடம் செப்டம்பர் மாதம் 17-ம் தேதியன்று மிஸ்டர் ஸாண்டர்ஸைக் கொலை செய்ததாக ஸ்ரீ பகத்சிங், ராஜகுரு, சுகதேவ் ஆகிய மூவருக்கும் தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டிருந்தது. இதை யொட்டி வைசிராய்,

எவ்வித உறுதியும் காந்திஜிக்கு அளிக்கவில்லை. ஆனால் பாஞ்சால சர்க்காரிடம் தமது நல்லெண்ணத்தைத் தெரிவிப்பதாக வொப்புக்கொண்டார். ஆனால் காரச்சி காங்கிரஸ் முடியும்வரை தண்டனையை நிறுத்திவைக்க அவர் ஒப்புக்கொண்டிருந்தார்.

சமரச ஒப்பந்தத்தில் கையெழுத்திடப்பட்டதும், மிஸ்டர் எமர்ஸனிடமிருந்து காந்திஜிக்கு அரிய கடித மொன்று கிடைத்தது. அதில், அவர் தாம் சுயராஜ்யத் தின் கீழ் இந்தியாவிற்கு மகிழ்ச்சியுடன் பணியாற்றுவ ரெனக் குறிப்பிட்டிருந்தார். லார்டு இர்வினும் எழுதப் பட்ட கடிதத்தில், தாம் அவரைக் கூடிய சீக்கிரம் இங்கி லாந்தில் காணக்கூடுமென நம்புவதாகக் கூறியிருந்தார். சமரசப் பேச்சுக்களின் பல அம்சங்களில், மிகச் சிறந்த அம்சமென்னவெனில், சம்பாஷணையின் நிகழ்ச்சிகள் மிகவும் அந்தரங்கமாக வைக்கப்பட்டிருந்ததேயாகும். 1930-ம் வருடம் 4-ம் தேதி யன்று ஸ்ரீ ரெஜினல்டு ரெய்னால்ஸ் மூலம் காந்திஜியின் இறுதிக் கடிதம் சமர்ப்பிக் கப்பட்ட தேதிக்குச் சரியாக 1931-ம் வருஷம் அதே தேதி யில் ஒப்பந்தம் கையெழுத்திடப் பட்டது ஆச்சரியகரமாகத் திருப்தி யளிக்கக் கூடியதொன்று.

## பத்திரிகா நிருபர்களுக்கு காந்திஜி பேட்டி

மார்ச்சு மாதம் 5-ம் தேதி மாலை, பிரபல அமெரிக்க, ஆங்கில, இந்திய பத்திரிகா நிருபர்களின் உயர்ந்த அறிக்கை யொன்று வெளியிட்டதே காந்திஜி, ஒப்பந்தம் முடிந்த பின்னர், முதலில் செய்த காரியமாகும். சுமார் ஒன்றரை மணி நேரம் காந்திஜி தமது அறிக்கையை விடுத்தார். இவ் வறிக்கையில் அவர் லார்டு இர்வினைப் பாராட்டியுள்ளார். போலீஸ், சிவில் சர்விஸ் உத்தியோகஸ்தர்கள், புரட்சிக் காரர்கள் ஆகியோருக்குத் தக்க வேண்டுகோளும் அவர் விடுத்திருந்தார்.

டாக்டர் அன்சாரியின் வாசஸ்தலத்திலிருந்து, 1931-ம் வருடம் 5-ம் தேதியன்று மாலை, பிரபல பத்திரிகா நிருபர் களுக்கு காந்திஜி விடுத்த அறிக்கை வருமாறு :—

"முதலாவதாக, வைசிராயின் 'விசேஷ பொறுமையும், அளத்தற்கரிய உழைப்பும், சிறந்த குணமும் இன்றி, இவ் வொப்பந்தம் முடிந்திருக்க மாட்டாதென நான் கூற

விரும்புகிறேன். என்னை யறியாமல் நான் ஆத்திர மூட்டக் கூடிய முறையில் நடந்து கொண்டிருக்கிறேனென அறிவேன். நான் அவரது பொறுமையையும் சோதித்திருக்க வேண்டும். ஆனால் அவர் ஆத்திரத்துடனோ, பொறுமையை யிழந்தோ பேசியதாக, ஒரு சந்தர்ப்பத்தையும் என்னால் குறிப்பிட முடியாது. அவர், இந் நெருக்கடியான சம்பாஷணைகள் நடந்தபோது, வெளிப்படையாகவேபேசினாரென்பதையும் நான் கூறவேண்டும். நான் அச்சத்துடனும், நடுக்கத்துடனுமே, சமரசப் பேச்சை யாரம்பித்தேனென்பதை யொப்புக்கொள்ளவேண்டும். என்னிடம் அவ நம்பிக்கையும் அதிகமாயிருந்தது. ஆனால் அவர் ஆரம்பத்திலேயே, எனது சந்தேகங்களை நீக்கி, எனக்குச் சாந்தி யளித்தார். என் சம்பந்தப்பட்ட வரையில், அவரைக் காணவேண்டுமெனக் கோரி, நான் முதன் முதலில் கடிதம் எழுதும் போதே, கௌரவமான சமரசம் ஏற்படக் கூடுமாயின், அது சம்பந்தமாக, வைசிராயையும் மூர்திவிட வேண்டுமென்பதில் உறுதி கொண்டிருந்தேனென்பதையும் ஆட்சேபிக்கப் படுமோவென்ற அச்சமின்றி நான் கூறக் கூடும். ஆகவே, ஒப்பந்தம் ஏற்பட்டு, முறிவேற்பட்டால் நூறு மடங்கு அதிகமான கஷ்டத்திற்குள்ளாவதினின்றும் நாடு காப்பாற்றப்பட்டதற்காக நான் கடவுளுக்கு நன்றி பாராட்டுகிறேன்.

இதுபோன்ற ஒப்பந்தத்தைப் பற்றிய வரையில் வெற்றியடைந்த கட்சி யெதுவெனக் கூறவும் முடியாது, கூறுவதும் சிறந்ததன்று. ஏதாவது வெற்றி யிருக்குமாயின் அது இருவரையும் சார்ந்ததே. காங்கிரஸ் ஒருபொழுதும் வெற்றியை நினைத்ததில்லை. காங்கிரஸ் அடைவதற்கு உறுதியான லட்சிய மொன்றிருக்கிறது. அந்த லட்சியத்தை அடையாமல் வெற்றி யென்பதே யிருக்க முடியாது ஆகவே இந்த நிபந்தனைகளில் பெருமை யடைவதற்குரிய தெதுவும் காணின், கடவுள் முன்பு பணிந்து, தங்கள் லட்சியத்தை நிறைவேற்ற துன்பத்தை யேற்பதன் மூலமோ, அல்லது பொறுமையாக சமரசம் பேசி, ஆலோசனை செய்து, மகாநாடு கூடிப் பேசுவதன் மூலமோ நடவடிக்கை யெடுப்பதற்குரிய வலிமையும், அறிவும் தரும்படி பிரார்த்திக்குமாறு என் நாட்டு சகோதர, சகோதரிகளையும் நான் வற்புறுத்துவேன்.

## வீர சகாப்தம்

சென்ற பன்னிரு மாதங்களாக இத்துன்பப் போராட்டத்தில் கலந்துகொண்ட லட்சக் கணக்கான மக்கள், மகாநாடும், நிர்மாணமும் நடக்கவேண்டிய இக்காலத்தும், இந்தியாவின் சரிதத்திலேயே வீர சகாப்தம் என நான் குறிப்பிடும் காலத்தில் சிறப்பாகக் காட்டியதுபோல அதேமாதிரி ஆவலையும், ஒற்றுமையையும், முயற்சியையும், அறிவையும், காட்டுவார்களென நம்புகிறேன்.

ஆனால் ஒப்பந்தத்தில் பெருமிதம் அடையும் ஆடவர்களும், ஸ்திரீகளும் இருப்பினும், மிகவும் ஏமாற்றமடைந்த மக்களு மிருக்கின்றனர். வீரத்துடன் துன்பத்தை யேற்றல் அவர்களுக்கு சுவாசிப்பது போலாம். எவ்வளவு காலம் நீடிப்பினும் அவர்கள் சகிக்கமுடியாத துன்பத்தையும் ஏற்பர். ஆனால் துன்பம் நீங்கியபொழுது தங்கள் வேலையே போனதுபோலவும். லட்சியம், தோற்றத்திலிருந்து மறைந்ததைப்போலவும் உணர்வர். அவர்களுக்கு, நான், 'பொறுங்கள், கவனியுங்கள், பிரார்த்தனை செய்யுங்கள், நம்புங்கள்' எனவே கூறக்கூடும்.

துன்பத்திற்கு எல்லையுண்டு. துன்பமேற்பதில் அறிவும் உண்டு. அறிவின்மையும் உண்டு. எல்லையை யடைந்ததும், அதை நீடிப்பது அறிவுடைமையன்று, பெரு முட்டாள்தனமாகும்.

உங்களுடைய பேராவலையொட்டி விவாதிப்பதற்குரிய வழியை உங்கள் எதிரி எளிதாகச் செய்யும்போது, துன்பத்தை யனுபவித்துக் கொண்டிருப்பது முட்டாள்தனம். உண்மையான வழி ஏற்படுத்தப்பட்டதாயின், அதைப் பயன்படுத்திக்கொள்வது ஒருவரது கடமையாகும். இவ்வொப்பந்தம் உண்மையான வழியை யேற்படுத்தி யிருக்கிறதென்பதே எனதபிப்பிராயம். இவ்வித ஒப்பந்தம், இப்பொழுதுள்ளதைப்போல தற்காலிகமானதே. ஏற்பட்ட சமாதானம் நிகழ்கின்ற இதர நிகழ்ச்சிகளுக்குட்பட்டது. காங்கிரஸ் மகாநாட்டு நடவடிக்கைகளில் கலந்துகொள்வதற்கு முன்பு அநேக விஷயங்கள் நிகழவேண்டி யிருக்கிறது. அவைகளைக் குறிப்பிடுவதவசியமானது. ஆனால் காங்கிரஸின் லட்சியம், முக்கியமானதாயினும், பழந் தவறுகளுக்குப் பரிகாரந்தேடுவதன்று. அதன் லட்சியம் பூரண சுயராஜ்யம்,

ஆங்கிலத்தில் பூரண சுதந்திரம் என்பதாம். தேசம் என வழைக்கப்படும் எந்தத் தேசத்திற்கும் உள்ளதேபோல அது இந்தியாவின் பிறப்புரிமையாகும். அதற்குக் குறைவான எதிலும் இந்தியா திருப்தியடைய முடியாது. இவ் வொப் பந்த முழுவதிலும், அந்த மாந்திரீக வார்த்தையைக் காணோம். அவ் வார்த்தையை ஜாக்கிரதையாக மறைக்கும் பிரிவு இரு பொருள்படக்கூடியதா யிருக்கிறது.

மூன்று உத்திரங்களுடைய ஐக்கிய அரசியல்முறை வெறும் கான்ல் நீராயிருக்கலாம். அல்லது இரு அவயவங் களும் உடல் முழுவதற்கும் வலிமையளிக்கும்படியே வேலை செய்யக்கூடிய சிறந்த அமைப்பா யிருக்கலாம்.

பொறுப்பு என்ற இரண்டாவது உத்திரம் வெறும் நிழலாயிருக்கலாம் அல்லது வளைக்கமுடியாத வளையாத கம்பீரமுள்ள ஆலவிருட்சமா யிருக்கலாம். இந்தி யாவின் நலத்திற்கான பாதுகாப்புகள் எனப்படுவதை வெறும் மாயையாம், நாட்டின் கால்களையும் கைகளையும் கட்டும் கயிறுகளாகவு மிருக்கலாம் அல்லது இளஞ்செடி யைப் பாதுகாப்பதற்காக ஜாக்கிரதையுடன் இடப்பட்ட முள்வேலியாகவுமிருக்கலாம்.

ஒரு கட்சியினரால் ஒரு பொருள் கொடுக்கப்படும், வேறொரு கட்சியினரால் மூன்று உத்திரங்கள் எனப்படு வதற்கு மற்றொரு பொருள் கொடுக்கப்படும். இரு கட்சி யினரும் தங்களுக் கிஷ்டப்பட்ட முறையில் அப் பிரிவுப்படி வேலை செய்யலாம். மகா நாட்டில் கலந்துகொள்ள காங் கிரஸ், தனது ஆர்வத்தைக் காட்டி யிருப்பின், நாட்டின் அரசியல், சமூக, பொருளாதாரஒழுக்க முன்னேற்றத்திற்கு, ஐக்ய அரசியல், பொறுப்பு, பாதுகாப்புகள், ஒதுக்கிவைப்பு, இன்னும் இதுபோன்ற இதர பெயரால் அழைக்கப்படுவன வற்றாலும், அவற்றை அது பயன்படுத்தக் கருதியதுதான்.

தனது நிலைமையை மகாநாடு ஒப்புக்கொள்ளும்படிச் செய்வதில் காங்கிரஸ் வெற்றிபெறின் அதன் பலன் பூரண சுயேச்சை யெனவே நான் கூறுவேன். ஆனால் அவ் வழி மிகவும் களைப்பேற்படுத்தக் கூடியதென்பதும் எனக்குத் தெரியும். இப் புதிய வேலையில் காங்கிரஸ் வாதிகள் நம் பிக்கையுடனும், ஊக்கத்துடனும் இறங்குவாராயின், முடி வென்னதென்பதில் எனக்குச் சந்தேகமில்லை. ஆகவே இப்

புதிய சந்தர்ப்பத்தை சிறந்ததும், உயர்வானதும் பெற உபயோகப்படுத்துவதோ, அல்லது அதை நம்பிக்கையின்றி, லக்ஷ்யமின்றி வீணாக்குவதோ காங்கிரஸ் வாதிகள் கையிலிருக்கின்றது.

ஆனால் இவ்வேலைக்கு, இந்திய மன்னர்கள், கடைசியாக, ஆனால் எவ்வகையிலும் குறையாத ஆங்கிலர், வேலை இதர கட்சியினரின் உதவி தேவை. இந் நிலையில் நான் ஏனைய கட்சியினருக்கு வேண்டுகோள் விடுப்பதவசியமில்லை. ஏனெனில் தங்கள் நாட்டின், உண்மையான விடுதலையில் அவர்கள் காங்கிரஸ் வாதிகளினும் குறைந்த ஆர்வமுடையவர்களல்ல வென்பதில் எனக்குச் சந்தேகமில்லை.

## ஐக்ய அரசியல் கொள்கை

ஆனால் மன்னர்கள் சேரும் திட்டம் வித்தியாசமானது. ஐக்ய அரசியல் கொள்கையை அவர்கள் அங்கீகரித்தது எனக்கு ஆச்சரியத்தை விளைக்கிறது. ஆனால் ஐக்ய இந்தியாவில், அவர்கள் சமமான பாகஸ்தர்களாவாராயின், அது அவர்கள் சுயேச்சையாக, பிரிட்டிஷ் இந்தியா இத்தனை வருடங்களாகப் பெற முயற்சிக்கும் அந் நிலைக்கு தாங்களே முன்னேறி வருவதால்தானாக வேண்டுமென நான் கூறத் துணிகிறேன்.

எவ்வளவு ஜீவகாருண்யத்துடன் கூடியதாயினும் கலப்பற்ற யதேச்சாதிகாரமும், ஜனநாயகமும், ஒன்று சேர்க்கப்படுமாயின் அதனால் பலமான அதிர்ச்சியே ஏற்படும். ஆகவே பாகஸ்தினராகப் போகும் கட்சியினரிடமிருந்தோ அல்லது அவர்கள் சார்பாகவோ விடுக்கப்படும் வேண்டுகோளை, சமரசமற்ற பான்மையுடனும், பொறுமையின்றியும் அவர்கள் மறக்காமலிருப்பதவசியமென நான் நினைக்கிறேன். அவ்வித வேண்டுகோளை அவர்கள் மறுப்பின், காங்கிரஸின் நிலைமை சகிக்கமுடியாததாகவும், மிகவும் கேவலமானதாகவும் ஆகிவிடும். காங்கிரஸ், இந்தியாவிலுள்ள எல்லா மக்களின் பிரதிநிதியாக விருக்கிறது, அல்லது இருக்க முயற்சி செய்கிறது. பிரிட்டிஷ் இந்தியாவிலோ அல்லது இந்திய சமஸ்தானங்களிலோ வசிப்பவர்கள் சம்பந்தமாக, எவ்வித வேற்றுமையையும் அது அங்கீகரிக்கவில்லை.

காங்கிரஸ் விசேஷ யோசனையுடனும், அதற்குச் சம மான தன்னடக்கத்துடனும் சமஸ்தான விவகாரங்களிலோ அல்லது நடவடிக்கைகளிலோ தலையிடாதிருந்திருக்கிறது. சமஸ்தானங்களின் உணர்ச்சிக்கு ஊறுபடுத்தாமலிருக்கவே அது அவ்விதம் நடந்து கொண்டிருக்கிறது. அது மட்டு மன்று, தக்கதோர் சந்தர்ப்பத்தில் தான் சுயமாக மேற் கொண்ட தடையின்மூலம் தனது கோரிக்கைக்குச் செவி சாய்க்கும்படி செய்வதும் அதற்குரிய காரணமாகும். இப் பொழுது அச் சந்தர்ப்பம் வந்துவிட்டது. ஆகவே சமஸ் தான் மக்களின் சார்பாக காங்கிரஸ் விடுக்கும் வேண்டு கோளுக்கு மன்னர்கள் செவி சாய்க்கா திருக்கமாட்டார் களென நான் நம்புகிறேன்.

## ஆங்கிலருக்கு வேண்டுகோள்

ஆங்கில மக்களுக்கும் இதுபோன்ற வேண்டுகோ ளொன்று விருக்கவேண்டுமென்பதை நான் விரும்புகிறேன். மகாநாட்டின் மூலமும், கலந்தாலோசனை செய்வதன் மூல மும் இந்தியா தன் சுயநிலையை யடையவேண்டுமாயின், அதற்கு ஆங்கில மக்களின் நல்லுணர்ச்சியும், தீவிர உதவியும் அவசியமானது லண்டனில் நடைபெற்ற மகாநாட்டில் அவர்கள் விட்டுக்கொடுத்ததாகத் தோன்றுவது, காங்கிரஸ் அடைய விரும்பும் லட்சியத்தின் பாதியைக்கூட எட்ட வில்லை யென்பதை நான் ஒப்புக்கொள்ளவேண்டும். அவர் கள் உண்மையான உதவி யளிப்பதாயின், எதற்காகத் தாங் கள் இறக்கவும் தயாரா யிருப்பார்களோ அந்த சுதந்திரத் தின் ஒளியை இந்தியாவும் காணும்படிச் செய்ய அவர்கள் தயாரா யிருக்கவேண்டும். இந்தியாவை தனது இஷ்டப்படி, தவறாய் காட்டிற்குள் அலைந்து திரிய விடுவதற்கு ஆங்கில அரசியல் வாதிகள் துணியவேண்டும். தவறிழைக்கவும், பாதகமிழைக்கவும் சுயேச்சை தருவதா யில்லாதிருப்பின் அச் சுதந்திரம் பெறுவதில் பயனில்லை. சர்வ வல்லமை யுள்ள கடவுள், தனது கேவலமான சிருஷ்டிக்கும், தவறி ழைக்கவும் சுயேச்சை யளித்திருப்பாராயின், எத்தனை நிலைமையும் அனுபவமுடையவர்களாயினும் மனிதர்கள், இதர மனிதர்களின் இவ் வரிய உரிமையைப்பற்றி பதில் சந்தோஷமடையக் கூடுமென்பதை என்னால் உணர முடிய வில்லை. எதுவாயினும், வெளியார் போஷணையும், உதவியும்

வேண்டியிருக்கும். நோய்வாய்ப்பட்ட குழந்தையென இந்தியாவை காங்கிரஸ் மதிக்கவில்லை.

பெரும் அமெரிக்க குடியரசின் மக்களுக்கும் உலகிலுள்ள இதர தேச மக்களுக்கும் வேண்டுகோளொன்று விடுக்கவும் நான் விரும்புகிறேன். சில சந்தர்ப்பத்தில், சத்தியத்தையும், சாத்வீகத்தையும் அடிப்படையாகக் கொண்டு போராடும் நாங்கள், அவற்றிலிருந்து தவறி யிருப்பினும், அப் போராட்டம் அவர்களுடைய ஆவலையும் மனதையும் கவர்ச்சி செய்திருக்கிறதென்பதை நான் அறிவேன். விஷயத்தை யறிவதிலுள்ள ஆவலால், அவர்கள், முக்கியமாக அமெரிக்கர்கள், அனுதாபத்துடன் வெளிப்படையான உதவியளிக்க முன் வந்தனர். இப்பொழுது காங்கிரஸ் மேற்கொள்ளவிருக்கும், அதன் கஷ்டமான லட்சியத்திலும், அவர்களின் அனுதாபத்தைப் பெறக் கூடுமென நான் நம்புவதுடன், சத்தியத்தின் மூலமும், சாத்வீகத்தின் மூலமும், இந்தியா தனது லட்சியத்தை அடையின், உலகோர் விரும்பும், உலக சமாதானத்திற்கு அது பேருதவி செய்யத்தகு மென்பதையும், அதன் மூலம் தாராளமாக உதவியளித்த அந் நாடுகளின் மக்களுக்குச் சிறிது பதிலுதவி செய்யத்தகு மென்பதையும், மிகவும் தாழ்மையுடன் நான் கூறத் துணிகிறேன்.

போலீஸிற்கும், சிவில் சர்விஸ் இலாக்காவிற்கும் கடைசியாக எனது வேண்டுகோள். நடைபெற்றதாகச் சொல்லப்பட்டு போலீஸ் அதிக்கிரமங்களை யொட்டி விசாரணை செய்யும்படி நான் கோரியதாக, முடிவு செய்யப்பட்ட ஒப்பந்தத்தில் பிரிவொன்றிருக்கிறது. அவ்விசாரணை வேண்டாமென நிறுத்தியதற்குரிய காரணம், அதிலேயே குறிப்பிடப்பட்டிருக்கிறது. இந்தியா தன் வீட்டில்தானே எஜமானியாக விருக்க வேண்டுமென அவர்கள் விரும்புவராயின், விசுவாசத்துடனும், உண்மையுடனும், அதற்குப் பணியாற்ற அவர்கள் விரும்புவராயின், சிவில் சர்விஸினருடனும், போலீஸ் இலாக்காவினருடனும், நடவடிக்கை யெடுக்க நேரும்பொழுது, மக்கள், சந்தேகமின்றி கௌரவமும், அறிவும் உடைய தங்கள் ஊழியர்களுடன், எஜமானர்களன்று, ஊழியர்களுடன் நடவடிக்கை யெடுப்பதாகவே உணரும்படிச் செய்யவேண்டும்.

சென்ற பன்னிரண்டு மாதங்களில் தண்டிக்கப்பட்ட சத்தியாக்கிரகிகள் விடுதலை செய்யப்பட்ட பின்னரும், சிறையிலிருந்து துன்புறவேண்டிய, ஆயிரக்கணக்கிலிரா விடினும், நூற்றுக்கணக்கிலுள்ள என் சகாக்கைதிகளுக்கு நான் ஒரு வார்த்தை கூறவேண்டும். பலாத்காரத்திலீடு பட்டவர்களாயினும், அவர்களையும், தண்டனையாகச் சிறையிலடைப்பதில் எனக்கு நம்பிக்கையில்லை. அரசியல் நோக்கத்திற்காக பலாத்காரச் செயலி லிறங்கிய இவர்கள், அதே அறிவுடையவர்களெனக் கோரமுடியாவிட்டாலும், என்னைப்போலவே அன்புணர்ச்சியும், தங் நலத்தியாகமும் காட்டியவர்க ளென்பதை நான் அறிவேன். ஆகவே, என் விடுதலைக்கும், எனது சகோதர சத்தியாக்கிரகிகளின் விடுதலைக்கும் பதிலாக, அவர்கள் விடுதலையை நான் நியாயமாகப் பெறக்கூடுமாயின், அதை உண்மையாக நான் பெற்றிருப்பேன்.

ஆனால், நான் நியாயமாக, அவர்கள் விடுதலையைக் கோர முடியாதென்பதை அவர்கள் உணர்ந்திருப்பார்களென நம்புகிறேன். இதனால் நானோ, காரியக் கமிட்டி அங்கத்தினர்களோ அவர்களை மறந்துவிட்டோமென்பதன்று.

காங்கிரஸ், தற்காலிகமாக, வேண்டுமென்றே, ஒத்துழைப்பில் இறங்கி யிருக்கிறது. ஒப்பந்தத்தில் தாங்கள் நிறைவேற்றவேண்டிய நிபந்தனைகளை காங்கிரஸ் வாதிகள், கௌரவமாகவும், பூரணமாகவும் நிறைவேற்றுவராயின், காங்கிரஸிற்கு மகத்தான கண்ணியமேற்படுவதுடன், சட்ட மறுப்பை நடத்துவதில் அதன் நிலைமையை ருசுப்படுத்தியது போல, சமாதானத்தை நிறுவுவதிலும் அதின் திறமையில் சர்க்கார் நம்பிக்கை கொள்ளும்படி செய்யும். மேலும் பொது ஜனங்கள், காங்கிரசுக்கு, இவ்வதிகாரமும் கண்ணியமும் அளிப்பாராயின், விசாரணைச் சிறையில் வைக்கப்பட்டிருப்பவர்கள், மீரட் கைதிகள் உள்பட அரசியல் கைதிகள் யாவரும் விரைவில் விடுதலை யடைவரெனநான் கூறுகிறேன்

## பலாத்கார கட்சிக்கு வேண்டுகோள்

இந்தியாவின் சுதந்திரத்தை பலாத்காரச் செய்கை மூலம் பெற விரும்பும் சிறிய, ஆனால் தீவிரமுடைய, ஸ்தாபனமொன்று இருந்துவருகிறதென்பதில் சந்தேகமில்லை.

நான் ஏற்கனவே, அவர்களைக் கேட்டுக்கொண்டதுபோல, மன மாற்றத்தாலல்லாவிடினும், அவசியத்தை முன்னிட்டாவது, அவ்வித செயல்களிலீடுபடாதிருக்குமாறு இப்பொழுதும் கேட்டுக்கொள்ளுகிறேன். சாத்வீகத்தின் மகத்தான சக்தி யின்னதென்பதை நீங்கள் ஓரளவு உணர்ந்திருக்கக் கூடும். ஆச்சரியகரமான பொதுஜன விழிப்பு பெரும்பாலும் மாயமான ஆனால் பலனில் தவறாத சாத்வீகத்தாலேயே சாதிக்க முடியாதென்பதை நீங்கள் மறுக்க முடியாது. நீங்கள் பொறுமையாயிருந்து, காங்கிரஸிற்கோ அல்லது எனக்கோ, சத்திய, சாத்வீக திட்டத்தை நிறைவேற்றுவதற்குச் சந்தர்ப்பமளிக்கும்படி உங்களிடம் நான் கோருகிறேன். டான்டி யாத்திரை புறப்பட்டு, பூர்த்தியாக இன்னும் ஒரு வருடம் ஆகவில்லை. முப்பது கோடி மக்களைப் பாதிக்கும் ஓர் பரிசிலனையை நடத்துவதில் ஒரு வருட காலம் என்பது. காலச் சக்கரத்தில் ஒரு விநாடியேயாகும். யாவரும் விரைவில் அழைக்கப்பட விருக்கும் தாய்நாட்டின் சேவைக்காக உங்கள் அரிய உயிரைப் பாதுகாத்து வருக. இதர அரசியல் கைதிகளின் விடுதலைக்கும், கொலைக் குற்றத்திற்காக தூக்குத் தண்டனை விதிக்கப்பட்டிருப்பவர்களின் விடுதலையைப் பெறுவதற்கும் காங்கிரஸிற்கு ஓர் சந்தர்ப்பம் அளிப்பீராக.

ஆனால், நான் பொய்யான நம்பிக்கையை யேற்படுத்த விரும்பவில்லை என்னுடைய சொந்தமான அபிலாஷையும், காங்கிரஸினுடைய அபிலாஷையும் இன்னதென நான் பகிரங்கமாகக் கூறவே முடியும். முயல்வது நம் யாவரையும் சார்ந்தது. பலனளிப்பது கடவுளைச் சார்ந்தது.

ஒன்றைக் குறிப்பிட்டுவிட்டு நான் இவ்வறிக்கையை முடித்துவிடுகிறேன். கௌரவமான ஒப்பந்தத்திற்கு வருவதில், என் ஆத்மா முழுவதையும் ஈடுபடுத்தியுளேன் என நான் நம்புகிறேன். காங்கிரஸ் நிறைவேற்ற வேண்டிய நிபந்தனைகள் சம்பந்தப்பட்டவரையில், அவற்றை நிறைவேற்ற, என் இதயம், ஆத்மா பூர்வமாக, முயல்வேனென நான் லார்டு இர்வினுக்கு வாக்குக் கொடுத்துளேன். ஆரம்பத்திலேயே தகர்த்தெறிய வேண்டுமென்ற எண்ணத்துடன் நான் இவ் வொப்பந்தம் ஏற்பட வேலை செய்யவில்லை. ஆனால் இன்று தற்காலிகமாக விருப்பதை நிரந்தரமான தாக்குவதற்கும், எந்த லட்சியத்தைப் பெற காங்கிரஸ் நிலை

பெற்றிருக்கிறதோ, அந்த லட்சியத்திற்கு இதைத் முன்னடியாகச் செய்வதற்கும் பூரணமாக முயலுக.

கடைசியாக இவ் வொப்பந்தம் ஏற்படுவதில் தளராது முயன்று வந்த யாவருக்கும் எனது நன்றியறிதலை வெளியிடுகிறேன்."

## கேள்வி, பதில்

கேள்வி :—மறுதினம், அதாவது 1931-ம் வருடம் மார்ச்சு மாதம் 6-ம் தேதி பகல் 11-30 மணிக்கு, பல உள் நாட்டு, வெளிநாட்டு பத்திரிகா நிருபர்களுக்குக் காந்திஜி பேட்டி அளித்தார். அப்பொழுது முதலில் 'பூரண சுயராஜ்யம்' என நேற்று வெளியிடப்பட்ட அறிக்கையில் குறிப்பிடப்பட்ட வார்த்தையின் பொருளென்னவெனக் கேட்கப்பட்டது. அதற்கு காந்திஜி கூறியதாவது :—

"நான் இதற்குச் சரியான பதிலளிக்க முடியாது. ஏனெனில், ஆங்கில பாஷையில், 'பூரண சுயராஜ்யம்' என்ற வார்த்தைக்கு நேர் ஒத்த வார்த்தை யொன்றில்லை. சுயராஜ்யம் என்பதன் ஆதிப் பொருள் சுயாட்சி என்பதாம். சுதந்திரம் என்பதில் இந்தப் பொருள் இல்லை. நாட்டு மக்களாலேயே, கட்டுப்பாடான ஆட்சி நடைபெறுவதே சுயராஜ்யம் என்பதாம். பூரண என்னின் பூர்த்தியாக எனப்படும். இதற்குச் சமமானதொன்றும் கிடைக்காததால், 'பூரண சுதந்திரம்' என்ற வார்த்தையை நாம் உபயோகித்தோம். 'பூரண சுயராஜ்யம்' எந்தத் தேசத்துடன் சம்பந்தப்படுவதையும் விலக்கவில்லை. அதிலும் இங்கிலாந்துடன் உள்ள சம்பந்தத்தை நீக்கவில்லை. ஆனால் அதன் பொருள் பரஸ்பர நன்மைக்காக, இஷ்டப்பட்டு சம்பந்தப்படுவதென்பதாம்."

கேள்வி :—" ஒப்பந்தத்திலுள்ள இரண்டாவது பாராவைக் கவனிப்பின், சென்னை, கல்கத்தா, லாகூர் ஆகிய விடங்களில் நிறைவேற்றப்பட்ட பூரண சுதந்திரத்தை யொட்டிய தீர்மானத்தை, காங்கிரஸ் மீண்டும் உறுதிப் படுத்துவது, அதற்குப் பொருத்தமா யிருக்குமா ?"

பதில் :—" ஆம் நிச்சயமாகப் பொருத்தமானதே. கராச்சியில் இதே போன்ற தீர்மானத்தை நிறைவேற்ற

காங்கிரஸை தடைசெய்வதொன்றும் இல்லை. மேலும் நடைபெறவிருக்கும் வட்ட மேஜை மகாநாட்டில் அதுவே மிகவும் முக்கியமானது. அந் நிலைமையை யறிந்துகொள்ள நான் விசேஷ கவலை செலுத்தினேனெனவும், ஒப்பந்தத்தை அங்கீகரிப்பதற்கு, எனது நிலைமையைத் தெளிவாக விளக்கி விட்டேனெனவும், நான் உங்களிடம கூறுவதால், எவ்வித ரகசியத்தையும் வெளியிட்டவனானேன்."

## அடுத்த திட்டம்

கேள்வி :—"தங்கள் அடுத்த வேலைத்திட்டமென்ன?"

பதில் :—"ஞாயிற்றுக்கிழமையன்று நான் அகமதாபாத் போகிறேன். இரண்டு நாட்கள் அங்கு தங்கி யிருப்பேன். அங்கிருந்து கெய்ராவிற்குச் சென்று இரண்டு நாட்களும், சூரத்தில் இரண்டு நாட்களும் கழிப்பேன். 16-ம் தேதி பம்பாய் சேர்ந்து, டில்லிக்கு 19-ம் தேதி திரும்பிவிடுவேன்."

## இரண்டாவது வட்டமேஜை மகாநாடு

கேள்வி :—"இரண்டாவது வட்டமேஜை மகாநாடு, இந்தியாவிலா அல்லது இங்கிலாந்திலா நடப்பதற்குத் தாங்கள் ஆதரவளிக்கிறீர்கள் ?"

பதில் :—" அது வருங்காலத்தை பொறுத்தது. தற் சமயம், அதுபற்றி எனக்கு எவ்வித அபிப்பிராயமுமில்லை. எனினும், வெளிப்படையாக யோசனை செய்யின் அம்மகா நாட்டின் முதற் பாகம் இந்தியாவில் நடந்து, பின்பாகம் லண்டனில் முடிவடைவதை நான் ஆதரிப்பேன்."

கேள்வி :—"நீங்கள் காங்கிரஸில் கலந்து கொள்வீர் களா ?"

பதில் :—" கலந்து கொள்ளலாமென நம்புகிறேன். நிச்சயமாகவே அது நடைபெறக்கூடும்." (சிரிப்பு)

கேள்வி :—"மகாநாட்டில் தாங்கள் பூரண சுயராஜ் யத்தை வற்புறுத்துவீர்களா ?"

பதில் :—" நாம் அதை வற்புறுத்தாவிடில், நாம் உயி ருடனிருப்பதையே மறுக்கவேண்டும்."

## காங்கிரசும் பாதுகாப்புகளும்

கேள்வி :—" தற்சமயமுள்ள பாதுகாப்புகளையும் ஒதுக்கிவைப்பதையும் தாங்கள் அங்கீகரிப்பீர்களா ?"

பதில் :—"தற்சமயமுள்ளவற்றை யன்று. இது சம்பந்தமாக, காங்கிரஸின் அபிப்பிராயம் உலகிற்குத் தெளிவாக்கப்பட்டுவிட்டது. அரசியல் மகாநாட்டிற்கு காங்கிரஸை அழைப்பவரெவரும் அதன் கொள்கையை யறிந்திருக்கக் கடமைப்பட்டவர்கள். காங்கிரஸ் நிலைமையை விளக்குவதில், எடுக்கக்கூடிய முன்னெச்சரிக்கையாகவும் எடுத்துக் கொண்டேன். மகாநாட்டில் கலந்துகொள்ள காங்கிரஸை அழையாமலிருக்க பிரிட்டிஷ் சர்க்காருக்கு இப்பொழுதும் சுதந்திரம் உண்டு. மேலும், என் அபிப்பிராயப்படி, அதில் கலந்துகொள்ளுமாறு வற்புறுத்துவதற்கு ஒப்பந்தத்தில் யாதொன்றுமில்லை."

கேள்வி :—" கராச்சி காங்கிரஸ் நிகழ்ச்சிக் குறிப்பு யாது ?"

பதில் :—" என்னால் சொல்லமுடியாது. கராச்சி காங்கிரஸிற்கு முன்பு கூடும் காரியக் கமிட்டியையே அது பொறுத்திருக்கிறது."

## பகத்சிங் தண்டனை

கேள்வி :—" பகத்சிங் மீதும் இதரர்கள் மீதும் விதிக்கப்பட்ட தண்டனை ஆயுள்பரியந்த தீவாந்தர சிட்சையாகக் குறைக்கப்படுமாவென நான் கேட்கலாமா ?"

பதில் :—"என்னை, இக் கேள்வி கேட்காதிருப்பதே மேல். இது சம்பந்தமாக சமாச்சாரப்பத்திரிகைளில்போதிய விஷயங்கள் வெளியாகி யிருக்கின்றன. பத்திரிகா நிருபர்கள் தங்கள் சொந்த அபிப்பிராயங்களை அதிலிருந்து அறிந்து கொள்ளலாம். இதற்குமேல் நான் ஒன்றுங் கூற முடியாது."

கேள்வி :—" தாங்கள் 'யங் இந்தியா'வை மீண்டும் பிரசுரிக்கக் கருதுகிறீர்களா ?"

பதில் :—" என்னால் கூடிய விரைவில் ஆரம்பிப்பேன். அவசர அச்சுச் சட்டபடி பறிமுதல் செய்யப்பட்ட யந்திரங்

கள் யாவும், ஒப்பந்தத்தை அமுல் நடத்தும்போது திருப்பிக் கொடுக்கப்படுவதையே அது பொறுத்திருக்கிறது. "யங் இந்தியா"வை மீண்டும் பிரசுரிப்பதில் நான் உண்மையாகவே ஆவலுடையவனா யிருப்பேன். 'யங் இந்தியா' தொடர்ச்சியாக சைக்கிளோஸ்டைலில் பிரசுரிக்கப்பட்டதன்மையே. ஒப்பந்தப்படி இவ்வாரம் பிரசுரிப்பதை நாங்கள் நிறுத்தி விட்டோம். சட்ட பூர்வமான அதிகாரம் பெறாத சமாச்சாரப் பத்திரிகைகளை பிரசுரிப்பதில்லை யென்பதும் நிபந்தனை யுளொன்று."

## பரஸ்பர 'நல் உணர்ச்சி'

கேள்வி :—"சனிக்கிழமையன்று நிலைமையில் நம்பிக்கையை யிழக்க நேர்ந்தபோது, பின்னர் அதை மாற்றுவதற்குரிய காரணமா யிருந்ததெது?

பதில் :—"லார்டு இர்வின் காட்டிய நல்லுணர்ச்சியும், ஒருவேளை அதற்குச் சமமாக நான் காட்டிய நல்லுணர்ச்சியுமே யாகும்."

கேள்வி :—"இதுவரை தாங்களாற்றிய காரியங்கள் யாவினும், தற்சமயம் ஏற்பட்டுள்ள ஒப்பந்தத்தை மகத்தானதென தாங்கள் மதிக்கிறீர்களா?

பதில் :—(மகாத்மாஜி சிரித்துக்கொண்டு கூறியதாவது.) "இது அவற்றுளொன்றாயின், இதுவரை நான் சாதித்த அரிய காரியங்களின்னவென நான் அறியேன்."

கேள்வி :—"தாங்கள் பூரண சுயராஜ்யத்தைப் பெறின் அவ்விதம் கருதுவீர்களா?"

பதில் :—"அதுவருமாயின், நான் நிச்சயமாக அவ்விதம் நினைக்க வேண்டியதே."

கேள்வி :—62 வயதுள்ள இளைஞராகிய தாங்கள், தங்கள் ஆயுட் காலத்திற்குள் பூரண சுயாராஜ்யம் அடைந்துவிடலாமென எதிர்பார்க்கிறீர்களா?"

பதில் :—"நான் விசேஷ உறுதியுடன் எதிர்பார்க்கிறேன். (மேலும் புன் சிரிப்புடன் மகாத்மாஜி சொன்னதாவது) மேல் நாட்டு அபிப்பிராயப்படி, நான் இன்னும் 62 வயதுள்ள இளைஞனாகவே என்னை மதிக்கிறேன்."

கேள்வி :—"வருங்கால அமைப்பில் எவ்வித பாதுகாப்புகளையும் ஏற்க தாங்கள் தயாரா யிருப்பீர்களா ?"

பதில் :—" ஆம், நியாயமும் அறிவுடையனவுமாகிய வற்றை ஏற்பேன். உதாரணமாக சிறு பாலர் பிரச்னையை யெடுத்துக் கொள்க. சிறு பாலர் பிரச்னையை மதியாவிடில், அவர்களது உரிமை நம்மிடம் ஒப்புவிக்கப்பட்ட புதை சொத்தாக நாம் கருதாவிடில், பெருந் தேசமாகவாகும் நமது லட்சியத்தை நாம் நிறைவேற்ற முடியாது. அதை நான் நியாயமான பாதுகாப்பாகவே மதிப்பேன்."

## ராணுவமும் செல்வமும்

கேள்வி :—" ராணுவத்தையும் செல்வத்தையும்பற்றி யென்ன ?"

பதில் :—" செல்வம், ஆம். நமக்கிருப்பதுபோல, பொதுக் கடனிருப்பதாக வைத்துக் கொண்டோமானால், நாம் கொடுக்கவேண்டிய தின்னவென்பதை நிச்சயமாக்க வேண்டும். அது சம்பந்தப்பட்டவரையில் தேசத்தின் நாணயத்தையும், அதன் அபிவிருத்தியையும் நிலைநிறுத்த பாதுகாப்புக ளிருக்கவேண்டு மென்பதை நான் கௌரவத்தால் ஒப்புக்கொள்ளக் கடமைப்பட்டவன். ராணுவம் சம்பந்தமாக, என் அறிவிற் கெட்டிய வரையில், இந்தியாவிற்குத் தேவையான பிரிட்டிஷ் சோல்ஜர்களை யொட்டி, அவர்கள் சம்பளம் சம்பந்தமாகவும், இதர நிபந்தனைகள் சம்பந்தமாகவும்,நாம் கொடுத்துள்ள உத்திரவாதத்தை நிறைவேற்றுவதற்கான பாதுகாப்புகளைத் தவிர, ஏனைய பாதுகாப்புகளைப்பற்றி என்னால் நினைக்கவும் முடியாது. இதைத் தான் நன்கு அறிய முடியும்."

## கடன் மறுப்பு

கேள்வி:—" இந்தியாவின் கடன்களை தாங்கள் மறுத்து விடுவீர்களா ?"

பதில் :—நாங்கள் நியாயமாகக் கொடுக்கவேண்டியேற்படும் ஒரு தம்பிடியும் நான் செலுத்த மறுக்க மாட்டேன். ஆனால் துரதிர்ஷ்டவசமாக இக்கடன் மறுப்பு சம்பந்தமாக பெருங்குழப்ப மிருந்து வருகிறது. தேசம் செலுத்த வேண்டிக் கடமைப்பட்ட ஒரு ரூபாயையாவது

செலுத்த மறுக்க காங்கிரஸ் கருதவில்லை. ஆனால் புதிதாகச் சாமான் வாங்குபவன், வாங்குவதற்குமுன் தான் என்ன கொடுக்கவேண்டுமென்பதை யறிந்துகொள்ள விரும்புகிறானே, அதைப்போல வருங்கால சர்க்கார் மீது சுமத்தப் படும் ஒவ்வொரு விஷயத்தின் நியாயத்தையும் கடமையையும் அறிந்துகொள்வதையே காங்கிரஸ் வற்புறுத்தியது. இவ்விஷயத்தை நேர். செய்துகொள்ளாவிடில் பட்சபாத மற்ற பஞ்சாயத்து நியமிக்க வேண்டுமெனக் காங்கிரஸ் யோசனை கூறி யிருக்கிறது.

## பஞ்சாயத்து பிரச்னை

கேள்வி :—" சர்வ தேச சங்கத்தைச் சரியான பஞ்சாயத்தெனத் தாங்கள் ஒப்புக்கொள்கிறீர்களா ?" .

பதில் :—"சர்வதேச சங்கம் சரியான பஞ்சாயத்தென நான் கூறமுடியும். ஆனால், அது அவ்வித பொறுப்பை யேற்றுக்கொள்ளாதிருக்கலாம். மேலும் அவ்வித பஞ்சாயத்தை இங்கிலாந்து விரும்பாதிருக்கலாம். ஆகவே இங்கிலாந்திற்கும் இந்தியாவிற்கும் சம்மதமான எந்தப் பஞ்சாயத்தையும் ஏற்க நான் தயார்."

கேள்வி :—" தாங்கள் இப்பிரச்னையை வட்ட மேஜை மகாநாட்டில் வற்புறுத்துவீர்களா ?"

பதில் :—"தேசீயக் கடன் சம்பந்தமான விஷயங்களைப் பரிசீலனை செய்து அங்கீகரிக்கும் பிரச்னை யெழும்போது, நான் அவசியமாக இதை வற்புறுத்துவேன். அதாவது, இவ் விஷயம் தேசிய கணக்குப் பரிசோதனைக் குட்படுத்தப்படு மென்பதாம்."

## அன்னியத் துணி பகிஷ்காரம்

கேள்வி :—" ஒப்பந்த மேற்பட்டதின் விளைவாக அன்னியத் துணி பகிஷ்காரம் தளர்ச்சி செய்யப்படவேண்டு மெனத் தாங்கள் நினைக்கிறீர்களா ?"

பதில் :—" இல்லை. அதற்கு மாறாக நான் அவ்விதம் நினைக்கவில்லை. அன்னியத் துணி பகிஷ்காரம் அரசியல் ஆயுதமன்று. இந்தியா வெங்கும் சர்க்காவை உபதொழிலாக அபிவிருத்தி செய்வதற்காகவே அது மேற்கொள்ளப்பட்

டிருக்கிறது. அன்னியத் துணி இறக்குமதியை யொட்டியே அவ்வேலை யிருக்கிறது. நான் அதிகமான பாதுகாப்பு வரி விதிக்க நிச்சயமாக முயல்வேன். தற்சமயமுள்ள சர்க்காரும் பாதுகாப்பு வரி விதிக்கலாமென நான் நினைக்கிறேன். இப்பொழுது விதிக்கப்பட்டிருக்கும் வரிகள், பாதுகாப்புக்கானவை யன்று. அவை வரவு செலவிற்காக விதிக்கப்பட்ட வருமானத்திற்குரிய வரிகளேயாம்.''

## பூரண சமத்துவம்

கேள்வி :—" 'பூரண சுயராஜ்யம்' என்பதைப்பற்றிய தங்கள் கருத்தென்ன ?''

பதில் :—" நான் தோற்றத்தைக் காண்பவன். ஆகவே, உண்மையற்ற பலவிதமான தோற்றங்களையும் என்னுள் சிந்தித்துக்கொள்வேன். 'பூரண சுயராஜ்யம்,' பூரண சமத்துவத்தை யாதாரமாகக் கொண்டதே தவிர அதற்கு முரண்பட்டதன்று. இந்தியாவுக்கு நான் விரும்பும் சமத்துவத்தைக் கொடுக்கும்படியான காலம் வரின், தாங்கள் இவ்வளவு காலமாகக் கொடுக்க விரும்பியதும் அதுவேயென, அவர்களும் கூறுவாரென்பதை நான் அறிவேன். ஏனைய மக்களைப்போலின்றி பிரிட்டிஷ் மக்களுக்கு தங்களைத் தாங்களே ஏமாற்றிக்கொள்ளும் திறமை யுண்டு. ஆம், சமத்துவம் எனில் விலக்கிக்கொள்வதற்குரிய உரிமையுமென்பதாம்.''

கேள்வி :—" இதர ஜாதியினருக்குப் பதிலாக ஆங்கில மக்களை ஆளும் ஜாதியாராகக் கொள்ள தாங்கள் விரும்புவீர்களா !"

பதில் :—" இதில் நிச்சயிக்கவேண்டிய தொன்று மில்லை. என்னை நானே ஆள்வதன்றிப் பிறிதொருவரால் ஆளப்படுவதை நான் விரும்பவில்லை.''

கேள்வி :—" பிரிட்டிஷ் கொடியின்கீழ் 'பூரண சுயராஜ்யம்' பெறுவதை தாங்கள் விரும்புவீர்களா ?''

பதில் :—" இக்கொடிக்கீழ் அன்று. கூடுமானால் ஒரு பொதுக் குடியின் கீழ், அவசியமாயின் தனிப்பட்ட தேசியக் கொடியின் கீழ் 'பூர்ண சுயராஜ்யம்' பெறுவதை நான் விரும்புவேன்."

கேள்வி :—"மகா நாட்டிற்குச் செல்லுமுன் இந்து-முஸ்லீம் பிரச்னையைத் தீர்த்துவிடக் கூடுமெனத் தாங்கள் எதிர்பார்க்கிறீர்களா ?"

பதில் :—"அது என் அவா. ஆனால் எவ்வளவு தூரம் அது நிறைவேறுமென எனக்குத் தெரியாது. இப் பிரச்னை தீராமல் மகாநாட்டிற்குச் செல்வதால் பயனிராதெனத் தற்சமயம் நான் நினைக்கிறேன். மகா நாட்டில் ஒற்றுமை யேற்படுமென நான் நினைக்கவில்லை."

கேள்வி :—"இந்து முஸ்லீம் ஒற்றுமை யேற்படுத்த பல வருடங்கள் செல்லுமா ?"

பதில் :—"நான் அவ்விதம் நினைக்கவில்லை, இந்து முஸ்லீம் பொதுமக்களிடை யாதொரு ஒற்றுமையின்மை யும் இல்லை. வேற்றுமை மேலேயே யிருக்கிறது."

கேள்வி :—"'பூரண சுயராஜ்யம்' அடைந்ததும், தேசிய ராணுவத்தை நீக்கிவிடக் கூடுமெனத் தாங்கள் எண்ணுகிறீர்களா ?"

பதில் :—"தோற்றத்தைக் காண்பவன் என்ற முறை யில், ஆம். நான் அவ்விதமே நினைக்கிறேன். ஆனால் என் ஆயுள் காலத்தில், அதைக்காண முடியுமென நான் நினைக்க வில்லை. இந்திய மயமாக்குவதென்பது ராணுவம் வேண்டா மென்ற கொள்கையை அங்கீகரிப்பதற்கு முன்பு பல யுகங் கள் செல்லலாம். என் சம்பந்தப்பட்டவரையில் இந்நம்பிக்கை யின்மைக்கு எனது நம்பிக்கைக்குறைவே காரணமாயிருக்க லாம். ஆனால் அவ்விதம் நேரக்கூடுமென்பதை நான் ஒதுக்கிவிடவில்லை. தற்சமயம் ஏற்பட்டுள்ள பொதுஜன விருப்பையும், சிறிது தவறுகளிருப்பினும் மக்கள் பூரண சாத்வீகத்தைப்பற்றி நிற்பரென்பதையும் ஒருவரும் எதிர் பார்த்ததில்லை. அதுவே, தங்களால் கூடுமானால் எவ்வித ராணுவமும் அவசியமில்லையெனத் தைரியத்துடன் கூறு வார்களென நம்புவதற்கு எனக்கு நம்பிக்கை யளிக்கிறது. சிவில் வேலைகளுக்கு போலீஸ் போதுமானது.

### போல்ஷ்விக் படையெடுப்பு

கேள்வி :—"சமீபகாலத்தில் போல்ஷ்விக் படை யெழுச்சி யேற்படுமெனத் தாங்கள் அஞ்சவில்லையா ?"

பதில் :—"எனக்கு அவ்வித அச்சங் கிடையாது."

கேள்வி :—"போல்ஷ்விக் பிரசாரம் இந்தியாவில் பரவுவதைக் கண்டு தாங்கள் பயப்படவில்லையா ?"

பதில் :—இந்திய மக்கள் எளிதில் ஏமாறுபவர்களென நான் நினைக்கவில்லை."

கேள்வி :—" போல்ஷ்விக் விஷயத்தில் தாங்கள் என்ன நன்மையைக் காண்கிறீர்கள்?"

பதில்:—(மகாத்மாஜி சிரித்துக்கொண்டு கூறியதாவது) "அவ்வளவு தூரம் நான் போல்ஷ்விக்கை ஆராய்ச்சி செய்யவில்லை. அதில் ஏதாவது நன்மை யிருப்பின், அதை தனதாக்கிக்கொள்வதில் இந்தியா தயங்கக்கூடாது."

கேள்வி :—" வருங்கால சர்க்கார் பிரதம மந்திரியாக விருக்க தாங்கள் ஒப்புக்கொள்வீர்களா ?"

பதில் —" மாட்டேன். அது இளைஞர்களுக்கும் வலிமையுடையவர்களுக்கும் ஒதுக்கிவைக்கப்படும்."

கேள்வி :—" ஜனங்கள் தங்களையே விரும்பி வற் புறுத்தினால் " (சிரிப்பு.)

பதில் :—"தங்களைப்போன்ற பத்திரிகா நிருபர்களின் பின்னால் பாதுகாப்பிற்காக பதுங்கிக்கொள்வேன்."

கேள்வி :—"பூரண சுயராஜ்யம் பெற்றதும் தாங்கள் யந்திரங்கள் யாவற்றையும் ஒழித்துவிடுவீர்களா?" (அமெரிக்க நிருபர் கேட்டார்.)

பதில் :—"மாட்டேன். அதை ஒழிப்பதற்குப் பதிலாக நான் அமெரிக்காவிற்கு அதிக ஆர்டர் கொடுத்தாலும் கொடுப்பேன். (சிரிப்பு) பிரிட்டிஷ் யந்திரங்களுக்கு நான் சலுகை கொடுக்கலாமென்பதையும் யாரறிவார். (மேலும் சிரிப்பு).

கேள்வி .—"சுயராஜ்யம் அடைவதற்கு முன்பு தாங்கள் ஆசிரமத்திற்குத் திரும்புவீர்களா ?"

பதில் :—"இல்லை. நான் ஆசிரமத்தைக் காணவேண்டு மெனக் கருதுகிறேன். ஆனால் எனது பூரண சுயராஜ்ய விரதம் பூர்த்தியாகும் வரையில் ஆசிரமத்தில் வசிக்க மாட்டேன்."

கேள்வி :—" இந்திய ராணுவம் சம்பந்தமாகத் தாங்கள் அளித்த பதிலைக் கொண்டு, சர்வ தேச சிக்கலைத் தீர்ப்

பதில் சாத்வீகம் சரியான ஆயுதமாவெனத் தாங்கள் கருதவில்லையெனக் கொள்ளலாமா ?"

பதில்:—"சாத்வீகம் அத்தகைய ஆயுதமாகும் என நான் நினைக்கிறேன். உலகிலுள்ள இதர நாடுகளிலுள்ளதே போல இந்தியாவிலும் ராணுவ மிருப்பதாக வைத்துக் கொண்டால் முதல் கொள்கையில் மாற்றமிருக்கிறது. நடவடிக்கை யெடுப்பது மெதுவாகவிருக்கும். கலந்தாலோசிப்பதிலும், பஞ்சாயத்து செய்வதிலும், தேசங்களின் நம்பிக்கை அதிகரித்து வருவதுடன், ராணுவத்திலுள்ள நம்பிக்கை குறைந்து கொண்டே வரும். தேசத்தின் பாதுகாப்பிற்குரிய ஆயுதமாகவன்றி, பழங்காலத்து சின்னமாக, காட்சிக்காகப் பொம்மைகள்போல ராணுவம் படிப்படியாக குறைந்து கொண்டே வந்துவிடும்."

காந்திஜி லார்டு இர்வினைப் பாராட்டியதுபோல, மகாத்மா காந்தியின் உண்மையையும் உறுதியையும் உயர்ந்த தேசாபிமானத்தையும் லார்டு இர்வின், தமக்களிக்கப்பட்ட விருந்தொன்றில், வெகு உயர்வாகப் பேசினர். அவருடன் உழைப்பது மகிழ்ச்சியும், உரிமையுமாகுமென அவர் சொன்னர். மகாத்மா காந்தி, தன் நாட்டு மக்களுக்கு அறிவுறுத்தவோ நாட்டில் அமைதியான நிலைமை யேற்படுத்தவோ வேண்டியன யாவும் செய்து வருவதாகவும், இங்கிலாந்தும் இந்தியாவும் சமாதானமான முடிவிற்கு வரக்கூடுமெனத் தாம் நம்புவதாகவும் மேலும் லார்டு இர்வின் குறிப்பிட்டார். மே மாதம் 15-ம் தேதி யன்று லண்டன் ஹைட் பார்க் ஹோட்டலில் அளிக்கப்பட்ட விருந்தொன்றில் பேசுகையில் லார்டு இர்வின் "இந்தியாவைப்பற்றி நான் அறிந்த வரையில், காந்திஜி லண்டனுக்கு வரின், இப் பாதுகாப்புகள் சம்பந்தமாகவும் விவாதத்திற்கு வரும் இதர விஷயங்கள் சம்பந்தமாகவும் ஓர் ஒப்பந்தத்திற்கு வர தம்மாலான முயற்சி செய்வாரென நான் நம்புகிறேன்." எனக் கூறினர்.

## கராச்சி காங்கிரஸ்

இப்பொழுதோ போராட்டம் நின்றுவிட்டது. தடை நீக்கப்பட்டு விட்டதால் காங்கிரஸ் ஸ்தாபனங்கள் மீண்டும் ஸ்தாபிக்கப்பட்டன. அடுத்த காங்கிரஸிற்கு வேண்டிய

பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்குமாறு காங்கிரஸ் பொதுக் காரியதரிசியால் உத்திரவிடப்பட்டது. சட்ட மறுப்பு, வரிகொடா இயக்கம், பிரிட்டிஷ் சர்க்கார் பகிஷ்காரம் ஆகியவற்றை நிறுத்திவிடும்படியும் ஆர்ப்பாட்டமின்றி மறியலை நடத்தும்படியும் சட்ட விரோதமான பிரசுரங்களை வெளியிடாதபடியும் காரியதரிசியால் மேலும் யோசனை கூறப்பட்டது. இவற்றுடன் காந்திஜியும், மறியல் செய்யும் பொழுது விற்பவராவது வாங்குபவராது அவமரியாதையாக நடத்தப்படக் கூடாதெனவும் கடைகள், வண்டிகள் முன்பு தொண்டர்கள் படுத்துக்கொள்ளக் கூடாதெனவும் துக்க கோஷம் செய்யக்கூடாதென்றும், கொடும்பாவி கட்டிக் கொளுத்தக் கூடாதென்றும், எவ்வித சந்தர்ப்பத்திலும் உண்ணாவிரத மிருக்கக் கூடாதெனவும், இவ்வளவு நிபந்தனைகளையும் அனுஷ்டிக்க வேண்டுமென உத்திரவிட்டிருந்தார். சாத்வீகத்தைச் சரியாக அனுஷ்டித்து வந்தால், இரு பகிஷ்காரமும் வெற்றிகரமாக நடைபெறுமென அவர் மேலும் வற்புறுத்தி யிருந்தார்.

காரியக் கமிட்டியால், ஸ்ரீ வல்லபாய் படேல் கராச்சி காங்கிரஸ் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அசாதாரணமான நிலைமை நிலவியதாலேயே இம்முறை அனுஷ்டிக்கப்பட்டது.

மார்ச்சு மாதம் 25-ம் தேதியன்று காங்கிரஸ் கூடுமுன்பு, சுற்றிலும் அடைக்கப்பட்ட விடத்தில் பொதுக் கூட்டமொன்று நடைபெற்றது. அதில் பேசிய காந்திஜி "காந்தி இறக்கலாம், ஆனால் காந்தீயம் என்றும் நிலவும்" எனக் குறிப்பிட்டார். கராச்சி நகர சபைத்தலைவர் ஸ்ரீ ஜாம்ஷெட் ஆர். மேத்தாவின் ஒத்துழைப்பாலேயே ஏற்பாடுகள் யாவும் பெரும்பாலும் வெற்றிகரமாக நடந்தேறின.

இக் காங்கிரஸ் மகாசபை கூட்டத்தில் தலைமை வகித்த சர்தார் வல்லபாய் படேல், சுதந்திரப் போராட்டத்தில் விசேஷமாக எடுத்துக்கொண்ட கூர்ஜரத்திற்காகவே, தாம் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதாகக் கூறினார். காங்கிரஸ் காந்தி-இர்வின் ஒப்பந்தத்தைச் செய்திராவிடில் அது தவறான வழியில் சென்றிருக்குமென அவர் சொன்னார். ஒப்பந்தத்தின் விசேஷமும், அதை யொட்டி காங்கிரஸ் வாதிகளின் கடமையும் அவரால் விளக்கப்பட்டது.

ஸ்ரீ பகத்சிங், ஸ்ரீ ராஜகுரு, ஸ்ரீ சுகதேவ் ஆகிய மூவரும் தூக்கிலிடப்பட்டதால், உற்சாகத்துடன் நடைபெறவேண்டிய கராச்சி காங்கிரஸ் கூட்டம் பெருந் துக்கத்திலாழ்ந்திருந்தது. காந்திஜியின் பெயரைப் போலவே ஸ்ரீ பகத்சிங்கின் பெயரும் இந்தியா வெங்கும் அறிந்துகொள்ளப் பட்டிருந்த தெனவும், அத் துணை செல்வாக்குடையதாயிருந்ததெனவும் கூறின் மிகையாகாது. இம்மூவரின் மரண தண்டனையை மாற்ற காந்திஜி எடுத்துக்கொண்ட முயற்சிகள் யாவும் வீணாயின.

வழக்கம்போல் மரணமடைந்த பண்டித மோதிலால் நேரு, மௌலானா மகமதலி, மௌலானா மஸ்ருல் ஹக், ஸ்ரீ ரவிசங்கர் ஜாவேனி, ஜருப்வலி மகமது, ஸ்ரீ துபேர், ஸ்ரீ குருநாத முதலியார் ஆகியோர்பால் அநுதாபங் காட்டப்பட்டவுடன், ஸ்ரீ பகத்சிங்கை யொட்டிய தீர்மானமே முதல் முதலாக எடுத்துக்கொள்ளப்பட்டது. ஸ்ரீ பகத்சிங்கும், அவரது தோழர்களும் காட்டிய தைரியத்தையும், செய்த தியாகத்தையும் பாராட்டும்பொழுது 'எவ்விதத்திலும், எந்த முறையிலும் அரசியல் பலாத்காரம் உதவாதென ஆட்சேபிக்கும்பொழுதும் அதில் கலந்துகொள்ளாதபோதும்' என்ற பிரிவு தீர்மானத்தில் சேர்க்கப் பட்டிருப்பதுபற்றி பலமாக விவாதம் நடைபெற்றது. இளைஞர்களால் இது பலமாக ஆட்சேபிக்கப்பட்டது. இப் பிரிவை நோக்கி தொண்டர்கள் மகாநாட்டில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டதுடன், பின்னர் நடைபெற்ற மாகாண மகாநாட்டிலும் இதை யொட்டியே தீவிர வாதம் நடைபெற்றது.

அடுத்த தீர்மானம் அரசியல் கைதிகள் விடுதலையை யொட்டியது. கிரேட் பிரிட்டனுக்கும் இந்தியாவிற்கும் இடையே நல்லுணர்ச்சியை யேற்படுத்த வேண்டுமென்பதும், தங்கள் அதிகாரத்தை விட்டுக்கொடுக்க கிரேட் பிரிட்டன் உறுதி கொண்டிருக்கிற தென்பதைக் காட்ட வேண்டுமென்பதும், ஒப்பந்தம் செய்ததின் நோக்கமாயின், எல்லா அரசியல் கைதிகளும் சிறைவாசிகளும் விசாரணைக் கைதிகளும் விடுதலை செய்யப் படவேண்டுமென இத் தீர்மானத்தில் பலமாக வற்புறுத்தப் பட்டது.

## இந்து முஸ்லீம் கலகங்கள்

காங்கிரஸ் நடைபெற்றுக்கொண்டிருக்கும்போதே, கான்பூரில் கடுமையான இந்து முஸ்லீம் கலகம் நிகழ்ந்து கொண்டிருந்தது. 1926-ம் வருடம் கோஹத்தி காங்கிரஸ் கூடியதற்கு முன்தினம் சுவாமி சிரத்தானந்தர், கொலையுண்டதுபோல, இந்துக்களின் கோபத்திலிருந்து முஸ்லீம்களைக் காப்பாற்றும் முயற்சியில் பண்டித கணேச சங்கர வித்தியார்த்தி கொலையுண்டார். இவர் கொலையுண்டதும், பகத்சிங்கும், அவரது தோழர்களும் லாகூரில் மார்ச்சு மாதம் 23-ந் தேதியன்று தூக்கிலிடப்பட்டதும் காங்கிரஸையும், நாட்டையும் பெருந் துக்க சாகரத்திலாழ்த்தியது.

கான்பூரில் ஆறிலொரு பகுதியினரே முஸ்லீம்கள். இதரர்கள் இந்துக்கள். தூக்கிலிடப்பட்ட வீர உயிர் தியாகிகளுக்காக பம்பாய், கராச்சி, லாகூர், கல்கத்தா, சென்னை, டில்லி முதலிய விடங்களில் ஹர்த்தால் அனுஷ்டிக்கப்பட்டது. கான்பூரிலும் ஹர்த்தால் நடைபெற்றபோது முஸ்லீம்கள் கடைகளை யடைக்கவில்லை. இதற்குச் சிறிது முன்பு மௌலானா முகமதலி மரணமடைந்தபோது முஸ்லீம்களால் ஏற்பாடு செய்யப்பட்ட ஹர்த்தாலில் இந்துக்கள் கலந்துகொள்ளவில்லை. இந் நிலைமை அபிவிருத்தியடைய வேறு காரணம் வேண்டியதில்லை. மார்ச்சு மாதம் 24-ந் தேதியன்று இந்துக்களின் கடைகள் கொள்ளையிடப்பட்டன. கடைகளும் கோயில்களும் தீக்கிரையிடப்பட்டு வெந்து நீறாயின. போலீசார் எவ்வித உதவியும் அளிக்கவில்லை. அமைதியின்மை, கொலை, கொள்ளை, தீயிடுதல் முதலிய கொடுஞ்செயல்கள் காட்டுத் தீபோலப் பரவின. ஐந்நூறு குடும்பங்கள், நகரிலிருந்து வெளியேறி கிராமங்களில் அடைக்கலம் புகுந்தன. டாக்டர் ராமச்சந்திரரது மனைவி, பெற்றோர்கள் உள்பட அவரது குடும்பத்தினர் யாவரும் கொலை செய்யப்பட்டு, உடல்கள் சாக்கடையில் வீசப்பட்டன. 25-ந் தேதியிலிருந்து காணாமற்போன ஸ்ரீ கணேச சங்கரரின் உடல் 29-ம் தேதியன்று கதருடையாலும் கஜேந்திரர் என பச்சை குத்தப்பட்டிருந்த குறியாலும் அடையாளங் கண்டுபிடிக்கப்பட்டது. அன்று ஏமாற்றி அழைத்துச் செல்லப்பட்ட அநேக முஸ்லீம்களின் குடும்பத்தினரை, வெறிகொண்ட கூட்டத்தின் முன் தயங்காது சென்று தலைவணங்கிக் காப்பாற்றினர்.

தமது ரத்தத்தால் ஒற்றுமை யேற்பட்டு அவர்கள் தாகம் தணியுமாயின் தம்மைக் குத்திக் கொல்லும்படி சரியான சத்தியாக்கிரஹியாக அவர் நடந்துகொண்டார்.

இத் துக்ககரமான சம்பவத்தை யொட்டி காங்கிரஸில் தீர்மானமொன்று நிறைவேற்றப்பட்டது. அதில் கணேச சங்கர வித்தியார்த்தி கலகத்தின்போது கொலையுண்டதில் காங்கிரஸ் பெருந்துக்கத்தி லாழ்ந்ததாகவும், அவர் மரணமடைந்ததில் அவரது குடும்பத்தினருக்கு அனுதாபந் தெரிவிக்கையில், கலகமும் வெறியும் தாண்டவமாடிக் கொண்டிருந்தபோது, அமைதியையும் அறிவையும் ஏற்படுத்தவும், அபாயத்திலிருந்தவர்களைக் காப்பதற்காகவும், பிரபல வீரரியான அவர் தமது உயிரைத் தியாகம் செய்ததில் பெருமை கொள்வதாகவும், இவ் வரும் தியாகத்தை அமைதியேற்படுத்த உபயோகிக்க வேண்டுமெனக் கோருவதாகவும் குறிப்பிடப்பட்டிருந்தது.

காந்தி-இர்வின் ஒப்பந்தத்தை யொட்டிக் கொண்டு வரப்பட்ட தீர்மானமே, எல்லா தீர்மானங்களிலும் முக்கியமானதாகும். காரியக் கமிட்டிக்கும், இந்திய சர்க்காருக்குமிடையே செய்யப்பட்ட தற்காலிக ஒப்பந்தத்தை ஆலோசனை செய்து அங்கீகரித்ததாகவும், காங்கிரஸ் லட்சியம் 'பூரண சயராஜ்யம்' என்பது மாறுதல் செய்யப்படவில்லையெனத் தெரிவிக்க விரும்புவதாகவும், பிரிட்டிஷ் சர்க்கார் பிரதிநிதிகளடங்கிய எம் மகாநாட்டிலும் காங்கிரஸ் ஒத்துழைக்க வழியேற்படின், காங்கிரஸ் பிரதிநிதி கோஷ்டி, ராணுவம், வெளிநாட்டு விவகாரங்கள், வரவு செலவு, பொருளாதார வேலை முறை முதலிய விஷயங்களில் தேசத்தின் ஆதிக்கத்தைப் பெறும் தனது நோக்கம் நிறைவேற முயலுமெனவும் அத் தீர்மானத்தில் கண்டிருந்தது. அம் மகாநாட்டில், தனது பிரதிநிதியாக விருக்க மகாத்மா காந்தியை காங்கிரஸ் நியமித்தது.

சட்டமறுப்பியக்கத்தில் கலந்துகொண்டு சிறை, துப்பாக்கிப் பிரயோகம், தடியடிப் பிரயோகம் முதலிய துன்பங்களை யனுபவித்தவர்களைப் பாராட்டுவதற்காகவும் ஆயிரக்கணக்கான இந்திய ஸ்திரீகள் முன்வந்து சுதந்தரப் போராட்டத்தில் தங்கள் வீதத்தை யேற்றுக்கொண்டதற்

காக, இந்திய ஸ்திரீ சமூகத்தைப் பாராட்டுவதாகவும் ஆறுவதாக ஒரு தீர்மானம் நிறைவேறியது.

காசி, ஆக்ரா முதலிய விடங்களில் நடைபெற்ற கலகங்கள், தேசத்திற்குத் தீமை பயப்பனவெனக் குறிப்பிட்டும் ஸ்திரீகள், குழந்தைகள் உள்பட யாவரும் கொல்லப்பட்டதற்கு வருத்தம் தெரிவித்தும் தீர்மானமொன்று நிறைவேற்றப்பட்டது.

எட்டாவது தீர்மானம், பூரண மதுவிலக்கு சம்பந்தமாக சென்ற பன்னிரு மாதங்களில் தேசத்தில் ஏற்பட்ட முன்னேற்றத்தைக் கண்டு திருப்தியைக் காட்டியிருப்பதுடன், உடலையும் ஆத்மாவையும் பாழ்படுத்தும் குடியிலிருந்து குடியர்களை மீட்பதில் ஸ்திரிகளும் தீவிர முயற்சி செய்யவேண்டுமெனவும் கோருகிறது.

பொது ஜனங்களை, அன்னியத் துணியை வாங்காதிருக்குமாறு கோரியும், கோடிக் கணக்கான கிராமவாசிகளைப் பாதிக்கும் அன்னியத் துணி, நூல் வியாபாரத்தை விட்டுவிடும்படி வியாபாரிகளைக் கேட்டுக்கொண்டும், கதர்ப் பிரசாரத்தை தீவிரமாக நடத்துவதன் மூலம் அன்னியத் துணி பகிஷ்காரத்தை அதிகப்படுத்தும்படி காங்கிரஸ் ஸ்தாபனங்களை வேண்டியும், உள்நாட்டு ஆலைச் சொந்தக்காரர்களும், இம் மகத்தான நிர்மாண பொருளாதார இயக்கத்திற்கு உதவுமாறு கோரியும், இந்தியாவின் தேவைக்குரிய வழிகளில் தங்கள் முயற்சியைத் திருப்புவதனால் நாட்டு மக்களுக்கு உதவியளிக்கும்படி பெரும் அன்னிய நாட்டு வியாபார நிலையங்களுக்கு யோசனை கூறியும் ஒன்பதாவது தீர்மானம் நிறைவேறியது.

சர்க்காருக்கும் காங்கிரசுக்கும் இடையே செய்யப்பட்டுள்ள ஒப்பந்தத்திற்குக் கட்டுப்பட்டு, அமைதியாக அன்னியத்துணி, மதுபானக் கடைகளை மறியல் செய்யும்படி பத்தாவது தீர்மானம் கேட்டுக்கொள்கிறது.

எல்லைப்புற மக்களின் சுதந்திரத்தை யொழிக்க முயற்சி செய்யும் பிரிட்டிஷ் சர்க்கார் எல்லைப்புற மாகாணத்தில் அனுஷ்டிக்கும் முற்போக்கு வேலை முறையை அடுத்த தீர்மானம் கண்டிக்கிறது.

எல்லைப்புற மாகாணத்தில் மாறுகப் பிரசாரம் செய்யப்பட்டுவருவதால், இனி அமைக்கப்படும் எவ்வித அரசியல்

அமைப்பிலும், இந்தியாவிலுள்ள இதர மாகாணங்களைப் போன்ற முறையிலேயே அம் மாகாணசர்க்காரும் அமைக்கப் படுமென பன்னிரண்டாவது தீர்மானம் அறிவிக்கிறது.

பர்மிய மக்களுக்கு இந்தியாவிலிருந்து பிரிந்து தனி யரசாங்கத்தை நிறுவ உரிமை யுண்டென்பதை அங்கீ கரித்து, சுயேச்சை பெற இந்தியாவில் சுயேச்சையுள்ள பாகத்தினராகவும் பர்மா விரும்பினால் இருக்கலா மென்பதையும், குறிப்பிட்டு, தங்கள் அபிப்பிரா யங்களை வெளியிட பர்மிய மக்களுக்கு போதிய சந்தர்பங் கொடுக்காமல், தேசிய அரசியல் ஸ்தாபனங்களின் வெளி யிடப்பட்ட அபிப்பிராயத்திற்கு விரோதமாகவும் பர்மா வைப் பிரிக்க பிரிட்டிஷ் சர்க்கார் செய்யும் முயற்சியைக் கண் டித்து, பர்மாவிலும், சிங்கப்பூரிலும் பிரிட்டிஷ் ஆதிக் கத்தை நிரந்தரமாக்க வேண்டுமெனவே முயலப்படுவதாகத் தோன்றுகிறதென பதின்மூன்றாவது தீர்மானம் கூறு கிறது.

பதினான்காவது தீர்மானம், தென் ஆப்பிரிக்கா, கிழக் காப்பிரிக்கா இந்தியரைப் பற்றியது. அந்நாடுகளில் குடியேறி யிருக்கும் இந்தியரின் சட்ட பூர்வமான உரிமைகளைப் பாதிக்கும் முறையில் தென் ஆப்பிரிக்காவில் சட்டமாக்க யோசனை செய்யப்பட்டு வருவதைக் கண்டு பீதியடைவ தாகவும், சுயேச்சை யடைந்த இந்தியாவில் தங்கள் தேசத் தாருக்கு அவர்களால் கோரப்படும் அதே நீதியை இந் தியருக்குக் காட்டிவரும்படி அச் சர்க்காரைக் கோருவ தாகவும் இத்தீர்மானம் குறிப்பிடுகிறது.

## அடிப்படையான உரிமைகள்

பொது ஜனங்கள் கொள்ளையடிக்கப்படுவதை யொழிப் பதற்கு, பட்டினி கிடக்கும் லட்சக்கணக்கான மக்களுக்கு உண்மையான பொருளாதார சுதந்திர மளிக்கக் கூடியதாக அரசியல் சுதந்திர மிருக்க வேண்டுமானதால், காங்கிரஸ் சார்பாக ஒப்புக்கொள்ளப்படும் எந்த அரசியலமைப் பிலோ அல்லது சுயராஜ்ய சர்க்காரிலோ கீழ்க்கண்ட இருபது நிபந்தனைகளை நிறைவேற்றக்கூடிய சக்தியிருக்கவேண்டு மென பதினைந்தாவது தீர்மானம் அறிவிக்கிறது. மக்களின் அடிப்படையான உரிமைகள் அங்கிகாரம், மத விஷயங்களில் சர்க்கார் நடுநிலைமை, வயது வந்த

வர்களுக்கு வாக்குரிமை, இலவச ஆரம்பக் கல்வி, கைத்தொழில், தொழிலாளர்களுக்குப் போதியசம்பளம், குறைந்த வேலைநேரம் முதலியன, அடிமைத்தனத்திலிருந்து தொழிலாளரை விடுவித்தல், ஸ்திரீ தொழிலாளர் பாதுகாப்பு, தொழிலாளர் சங்கங்கள் அமைக்கும் உரிமை, விவசாயக் குத்தகை தீர்வை முதலியவற்றைக் குறைத்தல், விவசாய வருமானத்தின்மீது குறைந்த அளவு நிர்ணயிக்கப்பட்ட தொகைக்குமேல் கிடைக்கும் வருமானத்தின்மீது வருமான வரி விதித்தல், படிப்படியாக வகுக்கப்பட்ட வாரீசு வரி, ராணுவச் செலவை தற்சமயமுள்ளதில் பாதி யாக்குவது, சிவில் இலாக்கா செலவையும், சம்பளங்களையும் விசேஷமாக குறைத்து விடுவதுடன், மாதமொன்றிற்கு ரூ. 500-க்குமேல் பட்ட சம்பளங் கொடாதிருத்தல், அன்னிய நாட்டுத் துணி நூல் இவற்றிற்குத் தடை விதித்து உள்நாட்டுத் துணிக்குப் பாதுகாப்பு அளித்தல், பூரண மதுவிலக்கு, இந்திய உப்பின் மீது வரி விதியா திருத்தல், இந்தியக் கைத்தொழிலுக்கு உதவியும் பொதுஜனங்களுக்கு நிவாரணமும் அளிக்கும்படி நாணயமாற்று செலாவணி முறையை யமைத்தல், ஆதார பூதமான கைத்தொழில்களை சர்க்கார் நிர்வகித்து, உலோக வளப்பத்திற்குச் சர்க்காரே சொந்தக்காரரா யிருத்தல், வட்டிக்குக்கொடுக்கல் வாங்கல் செய்வதில் நேரிலோ மறை முகமாகவோ ஆதிக்கம் செலுத்துதல் ஆகிய இருபது நிபந்தனைகள்.

இத் தீர்மானம் காரியக் கமிட்டி முன்பு திடீரெனக் கொண்டுவரப்பட்டதே. இதிலிருந்து காங்கிரஸ் தீர்மானங்கள், நாட்டில் நிலவும் நிலைமையைப் பொறுத்திருக்கிறதென வெளியாகும். முதலில் அடிப்படையான உரிமைகளைப் பற்றிய விஷயம், அமிர்தசரஸ் காங்கிரஸில், ஸ்ரீ ஸி. விஜயராகவாச்சாரியாரால் கொண்டுவரப்பட்டது. அவர் தலைமை வகித்த நாகபுரி காங்கிரஸில் இது சிறிது முக்கியம் பெற்றது. இவ் விஷயம் சம்பந்தமாக நாட்டிற்கு உறுதி யளிக்கும்படி யேற்பட்டது. சத்தியத்தையும் சாத்வீகத்தையும் அடிப்படையாகக் கொண்டு, கிராம வாசிகளின் பிரச்னையுமாகவுள்ள எந்தப் பிரச்னைக்கும் காந்திஜி தயார். இந் நிபந்தனைக்குட்பட்ட அபேதவாத கொள்கைகளி லிருந்து அவர் அஞ்சுதற் கொன்றுமில்லை. பண்டித ஜவஹர்லால் நேரு.இவ்விஷயங்களில் தீவிர ஆவல் காட்டினர். காங்

கிரஸைக் குறைகூறும் போட்டிக் கூட்டங்களுக்காக மட்டு மன்றி, இவ் விஷயங்களில் தேசத்தினர் மனதில் யாவும் எளிதாக இருக்கவேண்டு மென்பதும், இதுபற்றி பொது ஜனங்களிடை பிரசாரஞ் செய்யவேண்டுமென்பதும் ஜவஹர் லாலின் கருத்தாகும். இதுவே இத் தீர்மானம் கொண்டு வரப்படுவதற்குரிய காரணம்.

சீக்கியரால் தங்களுக்கு விருப்பமான வர்ணம், தேசியக் கொடியில் சேர்க்கவேண்டுமெனக் கோரப்பட்டது. அதுபற்றி விசாரணை செய்ய புதிய காரியக் கமிட்டி யொன்றமைப்ப தெனத் தீர்மானித்தது. அடிப்படை யான உரிமைகளைப்பற்றிய தீர்மானத்தை யொட்டி பொது அபிப்பிராயத்தை யறிய வொரு கமிட்டியும், பொருளாதார விஷயங்களைப்பற்றிப் பரிசீலனை செய்ய வேறொரு கமிட்டியும், காரியக் கமிட்டியால் நியமிக்கப் பட்டது. வகுப்புப் பிரச்னையை யொட்டி முஸ்லீம் தலைவர்களைச் சந்திப்பதற்காக, காந்திஜி, வல்லபாய், சேத் ஜம்னாலால் பஜாஜ் ஆகியோரடங்கிய வேறு கமிட்டி யொன்றும், காரச்சியில் ஹரிச்சந்திரா நகரில் ஏப்ரல் 1, 2 தேதிகளில் கூடிய காரியக் கமிட்டி நியமித்தது.

இக் கமிட்டிக் கூட்டத்தில் கடைசியாக முடிவு செய் யப்பட்ட பிரச்னை வட்டமேஜை மகாநாட்டிற்கு காங்கிரஸ் பிரதிநிதி கோஷ்டியையனுப்புவது பற்றியதாகும். விவர மான அரசியலமைப்பொன்றை வகுக்கவன்றி, ஒரு உடன்படிக்கையின் அடிப்படையான விஷயங்களைப்பற்றிப் பேசவே காந்தி லண்டன் போகிறாரெனத் தெளிவாகக் கூறப் பட்டதும், காந்திஜியே இந்தியாவின் ஏக பிரதிநிதியாக இருக்கவேண்டுமென்பதில் அபிப்பிராய பேத மொழிந்தது. சுயநலமற்ற சமாதானமும் நல்லுணர்ச்சியையும் தவிர, இதர உலக விருப்பமற்ற ஒரு பெரியார் காங்கிரஸ் தனிப் பிரதிநிதியாக விருப்பது ஒழுக்க சம்பந்தமான உலகத்தி லேயே அருங்காரியமாகும். இதுவே, இந்தியாவின் அரை நிர்வாண பக்கிரியின் முயற்சியால் பிரிட்டனின் கௌரவத் தைக் குறைப்பதற்குக் காரணமா யிருந்ததுடன், அவர் டில்லியிலுள்ள வைசிராய் மாளிகையில் மட்டுமன்றி ஸெயின்ட் ஜேம்ஸ் அரண்மனையிலும் சமத்துவமாக சமா தானம் பேசவும் செய்தது.

---

# அத்தியாயம் 2

## ஒப்பந்தமும் முறிவும்

போராட்டமும் சச்சரவும் முடிவுபெற்றன. ஆயுதங்களை வைத்த பிறகும் சமாதானம் தென்படவில்லை. யுத்தத்தால் ஏற்படும் வெற்றியைவிடச் சிறந்த சாந்தமான வெற்றியைக் காங்கிரஸ் அடைந்தாலும் இந்த வெற்றியே விபத்திற்கும் காரணமாகியது. காங்கிரஸ் அடைந்த சன்மார்க்க வெற்றியின் நானாவித பயன்களும் காலக்கிரமத்தில் வெளிப்படலாயின. பட்ட மரங்கள் துளிர்விட்டு ஜீவிப்பதுபோல் ஆங்காங்கு புதைந்து கிடந்த காங்கிரஸ் கமிட்டிகள் மீண்டும் எழுந்தன. காங்கிரஸ்காரருடைய வீடுகளின் மீது காங்கிரஸ் கொடிகள் மீண்டும் பறந்தன. போலீஸாரைக் கைப்பற்றிய சிறு துண்டு துணுக்குகளையும் திரும்பவும் பெறக் காங்கிரஸ் உத்தியோகஸ்தர் உரிமைகொண்டாடினர். தேசீய ஆடைகளாலாய அரை ராணுவ உடுப்புகளணிந்து தேசீய கீதங்கள் பாடிக்கொண்டும் கொடிகளுடனும் தோரணங்களுடனும் தொண்டர்கள் ஊர்வலம் சென்றனர்.

காங்கிரஸ் சார்பில் ஆண்களும் பெண்களும், சிறுவர் முதல் கிழவர் வரையில் எல்லோரும், மதுபானக் கடைகளையும் அந்நிய ஜவுளிக்கடைகளையும் மறியல் செய்த காட்சி பெருமை பெற்றது. கிடையுள் ஓநாய் புகுந்ததைப் போல் இந்த ஜனங்களின்மீது பாய்ந்த அதே போலீஸார் கண்கள் முன், தங்கு தடையின்றி இக்காரியங்கள் நடைபெற்றன. இவ்விதம் சரண் அடைந்ததைக்கண்டு போலீஸ் சிப்பந்திகள் பொறுதவர்களாயினர். நியாயாதிபதிகளும் இந்த நிலையை விரும்பவில்லை. ஐ. ஸி. எஸ். கூட்டத்தவர்களான சிவிலியன்களின் நிலையோ கேட்க வேண்டாம்; தங்கள் கிரீடம் இழந்ததாகவே அவர்கள் கருதினர். சட்டமும் அமைதியும் காக்கும் அதிகார வர்க்கத்தினர் ஏமாற்றமடைந்தனர். தினந்தோறும் விடுதலையடையும் கைதிகளுக்கு மாலைகளும் ஊர்வலங்களும், அவர்கள் பல சமயங்களிலும் எல்லைமீறிச் செய்யும் வணக்கமற்ற பேச்சுக்களும், அலட்சிய நடையும் நிறைந்தன. காங்கிரஸுடன் அதிகாரிகளுக்கு வேலை யேற்பட்டுக் கொண்டிருந்

தது. காங்கிரஸ் உத்தியோகஸ்தர் இங்கொரு கைதியை விடக் கேட்பர்; அங்கொரு சொத்தைத் தரவேண்டுமென்பர்; மற்றோரிடத்தில் ஒரு உத்தியோகஸ்தருக்கு வேலையைத் திரும்பக் கொடுக்கவேண்டுவர். ஏப்ரல் மாதம் 18-ந் தேதி இர்வின் பிரபு இந்தியாவை விட்டுப் புறப்படும்போது பம்பாயில் காந்தி அவரை நேரில் சந்தித்து வழியனுப்பினார். வைசிராயும் மாறவே, பழைய நட்பும் வாக்குறுதிகளும் புதிய வைசிராயிடம் அண்டவில்லை. ஷோலாப்பூர் கைதிகளை விடுதலை செய்வதாக இர்வின் பிரபு வாக்குக் கொடுத்திருந்தாலென்ன? மறியலில் இருப்பவர்களைப்பற்றி தனித்தனியே கவனிப்பதாக அவர் சொல்லியிருந்தாலென்ன? குஜராத்தில் ராஜிநாமா செய்த இரண்டு டிப்டி கலெக்டரது பென்ஷனையும் ஜீவநிதியையம் கொடுக்கச் செய்வதாக வைசிராய் வாக்களித்தாலென்ன? பர்தோலியில், விற்கப்பட்ட நிலங்களையும் மீட்டுக் கொடுக்குமாறு மாகாண அரசாங்கத்துக்கு எழுதுவதாக வாக்களித்திருக்கலாம்; மீரட்டு கைதிகள் விசாரணை காலத்தில் அநுபவித்த கால வரையறையையும் தண்டனை காலத்தோடு சேர்ப்பதாகக் கூறியிருக்கலாம். அந்த லார்டு இர்வின் ஏப்ரல் மாதம் 18-ந்தேதி இந்தியாவை விட்டுப் போய்விட்டார். அதற்கு முதல் நாளே வில்லிங்டன் பிரபு பதவிபெற்றார். வைசிராய்கள் வருவதும் போவது முண்டு. ஜில்லாக்களில் ஆட்சி செலுத்தும் ஸிவிலியன்களே உண்மை வைசிராய்கள். 1929-ம் வருஷம் நவம்பர் மாதம் 2-ந்தேதி டில்லி அறிக்கையில் கையெழுத்திட்டவர்கள், அன்றுமுதல் ஆட்சியின் தத்வம் மாறவேண்டும் என்று கேட்டபோது, இந்த சிவிலியன் கலெக்டர்களது எதேச்சாதிகாரத்தினின்று இந்திய ஆட்சி மாறவேண்டு மென்றும் ஜனப் பொறுப்பேற்க வேண்டு மென்றுமே விரும்பினர். ஒரு வருஷப் போராட்டத்திற்குப் பிறகும் காந்தி இர்வின் உடன்படிக்கை கையெழுத்தான பிறகுங்கூட அந்த விருப்பம் நடைபெறவில்லை. தங்கள் இஸ்ஸெட், உடன்படிக்கையால் அவமதிக்கப்பட்டதென அதிகாரவர்க்கத்தவர் கருதி எங்கும் அதை அலட்சியம் செய்தனர் என்ற புகாரே நிரம்பியது. ஒப்பந்தத்தின்படி தனக்கேற்பட்ட கடமைகளைக் காத்துக்கொள்ள காங்கிரஸ் மிக்க கவலைகொண்டு நடந்தது. மறியல் செய்வதில் சில ஒழுங்குக்கும், பகிஷ்காரப் பிரசாரத்தில் பிரிட்டிஷ் சரக்குகளைக் குறிப்பிடலாகா தென்பதற்கும், காங்கிரஸ் கட்டுப்

படவேண்டும். இவைகளே முக்கிய விதிகள். ஆங்காங்கு தவறுகள் ஏற்பட்டால் காங்கிரஸ்காரரை ஒழுங்குபடுத்த அரசாங்கப் புலிகள் காத்திருக்கின்றன. ஒப்பந்தத்திற்குப் பிறகுகூட குண்டூரில் போலீஸார் தடியடிப் பிரயோகம் செய்தனர். கிழக்கு கோதாவரியில் உள்ள வடபள்ளியில் போலீஸார் ஆட்சேபனையை மீறியும் ஜனங்கள் ஒரு ரதத்தில் காந்தி படத்தை வைத்ததால் நிலைமை முற்றிப் போலீஸார் அவசியமில்லாமற் சுட்டனர். அதில் நால்வர் இறக்கப் பலர் காயமடைந்தனர். தடியடிகளும் துப்பாக்கிப் பிரயோகமும் போலீஸாருக்கு சகஜமாகிவிட்டன.

சமாதான மேற்பட்டதும் இந்தியாவிலுள்ள பல வகுப்பினருக்குள் சமாதானம் ஏற்பட்டு விடுமென்றும், அதற்கு அரசாங்கம் துணை செய்யுமென்றும் காங்கிரஸ் அதிக நம்பிக்கை வைத்திருந்தது; ஆனால் ஒன்றும் உபயோகமில்லை. ஹிந்து முஸ்லிம் ஒற்றுமை முடிவு பெறுமல் லண்டன் செல்லுவதை விடத் தாம் வீட்டில் தங்குவதே மேல் என்று காந்தி நன்குயறிவர். அப்படியிருந்தும் பம்பாயில் ஜூன் மாதம் 9, 10, 11 தேதிகளில் கூடிய காரியக் கமிட்டி, முஸ்லீம் நண்பர்களின் தூண்டுதலின் பேரில் காந்தியின் விருப்பத்திற்கும் விரோதமாகத் தீர்மானம் நிறைவேற்றியது:—

"இம் முயற்சிகள் அதிர்ஷ்டக் குறைவால் பலிக்காமற் போயினும், காங்கிரஸ் நிலைமையை எவரும் தவருகக் கிரகிக்காமலிருக்க வேண்டி சந்தர்ப்பங்கள் ஒத்துவந்தால் வட்ட மேஜை மகாநாட்டில் காங்கிரஸ் பிரதிநிதியாக மகாத்மா காந்தி இருக்கவேண்டுமென்று இந்தக் கமிட்டி கருதுகிறது" என்பது தீர்மானம். சமரஸம் சீக்கிரம் ஏற்படுமென்றே காரியக் கமிட்டி நம்பியிருந்தது. இந்தக் காரியக் கமிட்டியின் காரியங்களில் முக்கியமானவற்றைக் கவனிப்பது பொருந்தும். ராட்டின நூல்களைத் தவிர வேறு நூல்களைக் கொண்டு தயாரான ஜவுளிகளுக்குச் சில காங்கிரஸ் ஸ்தாபனங்கள் அநுமதிச் சீட்டளித்ததையும், கைவசமிருக்கும் அந்நிய சரக்குகளை விற்க உரிமை கொடுத்ததையும் தடுத்து விட்டது. உடன்படிக்கையில் காணுததும் ஸ்ரீமான் நரிமனுல் தயார் செய்யப்பட்டதுமான கைதிகளின் ஜாப்தா ஒன்று காந்திக்குக் கொடுபடவேண்டுமென்பது ஒரு முடிவு. ஜவுளியைத் தவிர இதர சரக்குகளுக்கும் அநுமதிச் சீட்டு

அளிக்க, ஒரு சுதேசி போர்டு ஸ்தாபிக்க முடிவாகியது. எல்லா காங்கிரஸ் கூட்டங்களின் தீர்மானங்களையும் ஹிந்தியில் மொழி பெயர்க்க ரூ. 250 மான்யம் விடப்பட்டது.

'ஒப்பந்த'ச் சரித்திரத்தைக் கவனிப்போம். காங்கிரஸின் கொள்கை எப்போதும் தற்காப்பாகவே இருந்தது. காங்கிரஸ்காரர் வலுப்போருக்குச் செல்லக்கூடாதென்பது காந்தியின் கண்டிப்பான எச்சரிக்கை; ஆயினும் தேசிய சுயமதிப்பிற்கு நேரக்கூடிய அவமதிப்புகளைப் பார்த்துக் கொண்டிருக்கலாகாது என்றார். பயத்தால் நடுங்குதல் என்னும் பைசாசத்தை விரட்டுவதில் காந்தி கருத்துடையவரா யிருந்தார். பயமென்பதே பெரிய விரோதி. நமக்குத் துணையில்லையே என்ற ஏக்கத்தை விரட்டுங்களென்று வற்புறுத்தி வந்தார். அவர் போதித்த சாரம் வருமாறு :—

சத்தியாக்கிரகிகளுக் கேற்பட்ட, அனுமதிக்கப்பட்ட, காரியங்களைத் தடுத்தார்களானால் அதையே எச்சரிக்கையாகக் கொண்டு தற்காப்பிற்கு முயற்சி செய்யவேண்டும். சிக்கலை நாம் உண்டாக்கக் கூடாதாயினும் தற்காப்பு செய்துகொண்டிருக்கவேண்டும். ஐவருக்கு மேல் மறியல் செய்யக்கூடாதென்றால் ஒவ்வொரு வாயிலுக்கு ஐவராக நிற்போம். சில்லரைத் தொல்லைகள நீடித்து நிற்காது; ஒன்று அவை நீங்கவேண்டும் அல்லது மீண்டும் மேலே செல்லவேண்டியவர்களாவர். ஊர்வலம் தவறாகத் தடுக்கப்பட்டால் நம் உரிமையை விடக்கூடாது. லைசென்ஸ் கேட்போம்; மறுக்கப்பட்டால் தடை உத்திரவை மீறுவோம். மாதந்தோறும் நடக்கவேண்டிய கொடியேற்று விழாக்களையும் பொதுக்கூட்டங்களையும் உத்திரவு கேட்காமலே நடத்தலாம். தைரிய மிழந்தவர்களாக நாம் தவிக்கலாகாது.

வரிகொடா இயக்கத்தை திட்டத்தில் சேர்க்காமல் தனியே நடத்த அனுமதி கொடுக்கலாம். தனிப்பட்டவர்கள் சகாக்களுடன் நடத்தினால் பொருள் நிலைக் கஷ்டத்தால் ஜனங்கள் அக்கிளர்ச்சியில் சேரக்கூடும்." இவைகளே காந்தியின் போதனுசாரம்.

கவர்ன்மெண்டார் சார்பில் லார்டு வில்லிங்டன் இனிமையான வார்த்தைகளை தாராளமாக வாரிப் பொழிந்து தள்ளிவிட்டார். 1931 ஜூன் மாதம் 27-ந் தேதி அவர்

அழகிய விருந்துப் பேச்சு நடத்தினர். அப்போது காந்தி-இர்வின் ஒப்பந்தத்தை மாகாண அரசாங்கத்தோடு சேர்ந்து ஒழுங்காக நிறைவேற்றுவதே தம் கவலையா யிருக்கு மென்றார். ஆனால் காந்தியைப் பற்றிய வரையில், அவருடன் நான் சம்பாஷித்ததன் பயனாக, அவர் பூரண சிரத்தை கொண்டிருக்கிறார் என்று சொல்ல முடியுமாயினும் வேறு சிலரைப்பற்றி எச்சரிக்கை செய்வது பொருந்து மென்றார். இந்த ஒப்பந்தம் சமாதான உடன்படிக்கையல்ல வென்றும் மேற்கொண்டு பலமாகக் கிளர்ச்சி செய்ய ஜனங்கள் தயார் செய்துகொள்ள ஏற்பட்ட தற்காலிக நிறுத்தமே என்றும் பலர் வெளியிட்டதைக் குறித்துக் காட்டி, வைசிராய் தாம் உறுதியான சமாதானத்தை விரும்புவதாகத் தெரிவித்தார். புதிய அரசியல் ஸ்தாபனத்தைப் பற்றி ஒழுங்காக வாதிக்கவும் சிக்கலான நிலைகளைச் சீர்திருத்திக் கொள்ளவும் இந்த உடன்படிக்கையை நிறைவேற்றி வைக்க ஜாதிமத பேதமின்றி எல்லோரும் உதவி செய்யவேண்டும் என்று அழகாகப் பேசினர். இந்தியா பிரிட்டிஷார் சம்பந்தத்தைக் காப்பதைப்பற்றிச் சந்தேகம் கொள்கிற சிலருக்கு தைரியமாகப் பெருமை பொருந்திய மொழிகளால் ஆறுதல் செய்த அருமொழிகள் பல. கஷ்டமான நிலை நேரும் போது அதைரியமும் பயமும் கொள்வது தகுதியல்ல வென்றும், நாமெல்லோரும் சேர்ந்து நடத்திக் காரியசித்தி பெறவேண்டும் என்றும் விளக்கிய வைசிராய் பிரிட்டிஷார் அரசியல் சம்பந்தத்தைப்பற்றியும் உயர்ந்த லட்சியத்தைத் தாம் கொண்டதாகக் கூறினர். "உலகெங்கும் வியாபித்த பெரிய தேசங்கள் பரிபூர்ண பலத்தை யடைந்து தத்தம் ஜனங்களால் நீதியுடன் ஆட்சி செலுத்திக் கொண்டும், நானாவித ஜாதி நிற மத பேதங்களுடன் கூடியிருந்தும் நமது மன்னர் சக்கரவர்த்தியினிடம் ராஜபக்தி செலுத்துவதென்ற ஒரு கட்டில் நின்று உலகத்து ஜன சமூகங்களுக்குள் அமைதியும் நன்னம்பிக்கையும் உண்டாக்க முயற்சி செய்துகொண்டும் விளங்கக் கூடிய பெரிய ஜன சமூகங்களின் ஒப்பற்ற சாம்ராஜ்யமாக நிற்கவேண்டும்" இதுவே தமது ஆவல் என்றார். இந்தக் காரியத்தில், நாம் எப்படி நடந்துகொண்டாலும், கடவுள் நமக்காக உருவாக்கி வருகிறாராதலால் பூர்ண சிரத்தையும் நம்பிக்கையும் தமக்கு உண்டு என்றார். தம் அதிகார எல்லை முடிவுக்குள்

பொறுப்புள்ள ஆட்சியை நடத்திச் செல்லுவது முடியலா மென்றும் நம்பினர்.

இந்த அழகான பேச்சினால் ஏற்பட்ட நம்பிக்கை நீங்க அதிக காலம் பிடிக்கவில்லை. எல்லாம் நொறுங்கி விட்டதோ என்ற சந்தேகம் காந்தியின் மனதிலும்கூட ஜூலை மாதம் முதல் வாரத்திலேயே தோன்றிவிட்டது. சுல்தான்பூரில் 90 பேர்மீது இ. பி. கோ. 107-வது செக்ஷன்படி வழக்கு தொடரப்பட்டது. பவான்ஷாபூரில் தேசிய கொடிகளைப் பெயர்க்க மறுத்த குடிகள் கைது செய்யப்பட்டனர். 144-வது செக்ஷன்படி ஜில்லா காங்கிரஸ் கமிட்டியின் பிரபல அங்கத்தினர்மீது நோட்டீஸ் கள் சமர்ப்பிக்கப்பட்டன. (வட) மதுராபுரியில் பொதுக் கூட்டமொன்றை ஒரு சப்-இன்ஸ்பெக்டர் பலவந்தமாகக் கலைத்தார். லட்சுமணபுரியில் ஒரே சமயம் 700 பேர்கள் மீது வழக்குகள் தொடரப்பட்டன. அரசியல் பிரசாரத் திற்காக ராஜிநாமா செய்த உபாத்தியாயர்களும் மற்றவரும் மீண்டும் விரும்பியும், அவர்களுக்கு வேலைகொடுக்க மறுத் தனர். கலாசாலைகளில் சேர விரும்பும் மாணாக்கர்களிடம் இனி யேற்படக்கூடிய கிளர்ச்சிகளில் சேர்வதில்லை யென்று உறுதிமொழி கேட்கப்பட்டது. வீடுகள் சோதனை, ஸ்திரீ களை அவமதித்தல், தேசிய கொடிகளை எரித்தல் முதலிய பல தொல்லைகள் மலிந்தன. ஒரு டிப்டி-கமிஷனர், ஜனங் கள் காந்தி குல்லாய் போட்டுக் கொள்ளக்கூடாதென்று தடுத்தது மன்றிச் சிலரிடமிருந்து தாமே அக் குல்லாய்களை அப்புறப்படுத்தினர். ஐக்கிய மாகாணங்களில் தாலூக் தார்கள் குடிகளுக்குச் செய்த கஷ்டங்களைச் சொல்லி முடியாது. ஆமதாபாத்தில் மறியல் வேலை முறிக்கப்பட் டது. உடன்படிக்கையை மீறிய செயல்கள் பல நடை பெற்றன. உடன்படிக்கை யேற்பட்டுப் பலகாலங்களுக்கப் பால் உப்பள கலெக்டர் தவறுதலாக விற்ற படகு, சொந்தக் காரருக்குக் கொடுபடவில்லை; நஷ்ட ஈடும் கிடைக்கவில்லை. நவஜீவன் அச்சுக் கூடத்தைத் திருப்பிக் கொடுக்கவில்லை. சென்னை ராஜதானியில் மறியல் வேலைக்கு இடையூறு விளைத்தனர். மறியல் செய்யும் கடைகளுக்கு 100 கஜத்திற் குள் செல்லக்கூடாதென்றும், குடைகள் கொடிகள் வைத்துக்கொள்ளக் கூடாதென்றும் உத்திரவுகள் பிறந் தன. மறியல் செய்யும் தொண்டர்களுக்குத் தண்ணீர்

கொடுப்பதையும் தடை செய்தனர். ஷோலாப்பூர் ராணுவச் சட்ட கைதிகளை விட்டுவிடுவதாக இர்வின் பிரபு உறுதி கூறியபடி விடவில்லை. பர்தோலி தாலூக்காவில் நடந்ததைக் குறிப்பிடவேண்டியது எல்லாவற்றிலும் அதிக முக்கியம்.

காந்தியின் புகார் :—தற்கால கிஸ்தி பர்தோலிக்கு 22 லட்ச ரூபாய். இதில் 21 லட்சம் வசூலாகிவிட்டது. இதை வசூல் செய்த பொறுப்பு காங்கிரஸ் தொண்டர்களுடையதென்று சொல்லப்படுகிறது. தற்கால கிஸ்தியையும் பழைய பாக்கியையும் ஜனங்கள் முடிந்த அளவுக்குக் கொடுத்துவிடவேண்டுமென்றே குடிகளுக்கு இவர்கள் போதித்து வந்தனர். பெரும்பாலோர் தர்கால தொகையைக் கொடுப்பதே கஷ்டமென்று தெரிவித்தனர். அதிகாரிகள் சில காலம் வாங்க மறுத்துப் பிறகு தற்கால தொகையைப் பெற்றுக்கொண்டு ரசீது கொடுத்தனர். கொடுக்கச் சக்தியில்லையென்று வாதிக்கிறவர்களிடம் தற்கால தொகையைப் பெறுவது தொண்டர்களிடமும் ஜனங்களிடமும் செய்துகொண்ட நம்பிக்கைக்குத் துரோகமாகும். பழைய பாக்கியைப் பற்றிய வரையில் ஒரு கட்சி. அக விலை குறைந்ததற்காக நிறுத்திவைக்கப்பட்ட தொகையை சட்டமறுப்பினால் அதிக நஷ்டங்களை யடைந்தவரிடம் வசூலிக்கலாகாதென்பதும் நியாயமல்லவா ? இவர்கள் வெளியூர்களுக்கும் சென்று குடியேறிப் பல கஷ்ட நஷ்டங்களை யடைந்தனர். அதிகாரிகள் சந்தேகப்படுமிடங்களில் விசாரணை நடத்தலாம். போலீஸ் படாடோபங்களை உபயோகித்து ஜனங்களைத் தொல்லைப் படுத்தக் கூடாது.

இதற்கு பம்பாய் கவர்ன்மெண்டார் பதில்:—ஜனங்கள் சக்தியில்லை யென்று சொல்வது மாத்திரம் போதாது ; அதை ருஜு செய்யவேண்டும் ; அப்போது மாத்திரமே நம்பிக்கை துரோகமென்ற கட்சியுண்டு. சட்டமறுப்பிற்காக மறுத்தவர்கள் விஷயத்தில் உண்மையில் சக்தியின்றி மறுத்தவர்கள் யாவர் என்று தனித் தனியே விசாரித்தறிய வேண்டும். கலெக்டர் நிதானமாகவே காரியங்களை நடத்தியிருக்கிறார். போலீஸ் உதவி அவசியமான இடங்களில் மாத்திரமே கொடுக்கப்பட்டது.

தாங்க முடியாத நிலை யேற்பட்டவுடன் காந்தி நேரே கலெக்டருக்கு எழுதித் தம் பயத்தை விளக்கியதுமன்றி

இந்தியா அரசாங்கத்துடனும் கடிதப் போக்கு வரவு நடத்தினர். அவற்றின் கருத்தையும் அறியவேண்டும். உடன்படிக்கைப்படி மாகாண அரசாங்கத்தார் ஒழுங்காக நடந்துகொள்ளவில்லை யென்ற சந்தேகம் நீங்க, உடன்படிக் கையின் கருத்தைப் பல அம்சங்களிலும் விளக்க மத்தியஸ்த சபை அவசியமாகிறதென்று காந்தி, இந்தியா அரசாங்கத் திற்குத் தெரிவித்தார். மற்றும் மறியல் வேலையைப் பற்றிக் கவர்ன்மெண்டாருக்குக் கிடைத்த விவரங்க ளும், நேரில் கண்ட தக்க சாட்சிகள் மூலம் காந்திக்குக் கிடைக்கும் விவரங்களும் முரண்பட்டன. காங்கிரஸ்காரர் உடன்படிக்கைப்படி முற்றிலும் நடந்தே தீரவேண்டு மென்று காந்தி கருதியதால் ஒரு யோசனை கூறினர். கவர்ன் மெண்டு மெம்பர் ஒருவரும், காங்கிரஸ் பிரதிநிதி ஒருவரும் சேர்ந்த விசாரணை சபை யொன்றை மாகாண கவர்ன் மெண்டு நிர்மாணிக்குமாறு செய்தால் நலமா யிருக்கும். மறியல் விதி மீறி தொண்டர்கள் நடந்ததாக ருஜுவானல் காங்கிரஸ்காரர் மறியலையே நிறுத்தவேண்டும் என்றும், தவறாக வழக்குத் தொடர்ந்ததாக ருஜுவானல் அவ்வழக்கு களை கவர்ன்மெண்டார் நிறுத்திக்கொள்ளவேண்டுமென்றும் சம்மதிக்கலாம். ஜூன் மாதம் எழுதப்பட்ட இந்தக் கடிதங் களுக்கு ஜூலை மாதம் 4-ந் தேதி இந்தியா அரசாங்கத்தினி டமிருந்து பதில் கிடைத்தது. உடன்படிக்கையின்படி நடப்பதில் ஏற்படக்கூடிய கஷ்டங்களையும் சந்தேகங்களை யும் நீக்கிக்கொள்ள காந்தி செய்யும் யோசனையில் அனு தாபம் ஏற்பட்டாலும் அந்த யோசனையை அனுஷ்டிப்பதில் கஷ்டமுண்டென்று கவர்ன்மெண்டார் நினைத்து மறுத்தனர். மறியல் செய்தவர் சட்டத்தை மீறி யிருக்கிறார்களா என்று முதலில் இரண்டு தரப்பும் சேர்ந்து சுருக்க விசாரணை நடத் தும்போது இருவருக்கும் அபிப்பிராய பேதம் வந்தால் சிக்கல் அதிகமாகும். மேலும் சட்டப்படிக்குப் போலீ ஸுக்கு ஏற்பட்ட கடமையை மற்றோர் சபைக்கு மாற்றுவ தாக ஆகிறது. உடன்படிக்கையில் இவ்வாறு இடம் தர வில்லை யென்பதும் கவனிக்கத்தக்கது. இதுவே அரசாங் கத்தார் பதில்.

பல மாகாணங்களிலிருந்து உடன்படிக்கையை மீறிய விபரங்கள் காந்திக்கு வந்து கொண்டிருந்தன. போர் சாதில் உடன்படிக்கைப்படி ஏற்பட்ட நிபந்தனைகளை நிறை

வேற்ற காந்தி நேரில் இரண்டு மாதங்களுக்குமேல் தங்க வேண்டியிருந்தது. ஒவ்வொரு காரியமும் வாதம் செய்ய வேண்டியதாயிற்று. படேல்களுக்கு வாக்கு அளித்த வாறு வேலை கொடுக்கப்படவில்லை. நிலங்களெல்லாம் பூரா வும் கிடைக்கவில்லை. முதலில் மனிதன் கையளவே தோன் றிய மேகம் வானம் முழுமையும் பலமாகச் சூழ்ந்து வியா பித்துப் புயற்காற்றுடன் சேர்ந்து கொண்டபடியால் ஆகஸ்டு மாத மத்தியில் காந்தி இங்கிலாந்து செல்வதா யிருந்த பிரயாணம் நின்றுவிட்டது.

ஜூலை மாதம் காந்தி கலெக்டருக்கும் மேலதிகாரி களுக்கும் அனுப்பிய கடிதங்களும் அவற்றிற்கு கவர்ன் மெண்டாரிடமிருந்து கிடைத்த பதிலும் நிலைமையைத் தெளியப்படுத்தும். ஜூலை மாதம் 21-ந் தேதி காந்தி வைசிராயிடம் பேசியபோது வாக்களித்தபடி, புள்ளிகளைக் கண்டு குறிப்பிட்டு ஒரு கடிதம் அனுப்பினர். அதில் பதினொரு குறிப்புகள் அடங்கியிருந்தன. மதுபானக் கடைகளை மறியல் செய்வது, மாகாண அரசாங்கத்தார் மறியல் செய்வோரை சமீபத்தில் செல்லவிடாமல் தடை ஏற்படுத்துவது முதலியன ஒப்பந்த நிபந் தனைகளில் சேர்ந்ததா? லைசென்ஸில்லாத இடங்களில் மது விற்க அனுமதிக்கலாமா? பறிமுதல் செய்யப்பட்ட பூமி களைத் திரும்பக் கொடுக்கும்போது நிபந்தனைகள் ஏற்படுத்த கவர்ன்மெண்டுக்கு இடமுண்டா? சட்டமறுப்பு இயக்கத் தில் சேர்ந்த மாணுக்கர்களைச் சேர்க்கும்போது வித்தியா இலாகா அதிகாரிகள் நிபந்தனைகளை ஏற்படுத்தலாமா? இயக்கத்தில் சேர்ந்தவர்க்கு பென்ஷனைப் பறிமுதல் செய் யவும், முனிஸிபாலிடிகளுக்கு உதவியை நிறுத்தவும் கவர்ன் மெண்டுக்கு இடமுண்டா? என்பன போன்ற விஷயங் களில் காந்தி-இர்வின் ஒப்பந்தப்படி எவ்வித உரிமைக ளுண்டு என்பதைத் தீர்க்க மத்தியஸ்த சபை ஏற்படவேண் டும். எதிர்பாராத நிலைமைகள் தோன்றினும் தீர்க்கலாம். மத்தியஸ்த சபை செய்யும் முடிவுக்கு காங்கிரசும் கவர்ன் மெண்டும் கட்டுப்படவேண்டும். உடன்படிக்கையின் பொரு ளைப்பற்றி முடிவு செய்ய மாத்திரமே மத்தியஸ்த சபைக்கு அதிகாரமுண்டு. இவ்வித சபை அவசியம் தேவை என்று கேட்ட காந்தி, நடைபெற்ற காரியங்களில் உண்மை விளங்க விசாரணை ஸ்தலத்தைப்பற்றி வற்புறுத்தவில்லை. ஆயினும்

அவசியம் நேர்ந்தால் அவ்வித நியாயஸ்தலம் கேட்கும் உரிமையை விடவில்லை யென்றார்.

சூரத் ஜில்லா கலெக்டரை பேட்டிகண்டு காந்தி ஜுலை 13-ந் தேதி பேசியபோது ஏற்படாத பயங்கர நிலை பிறகு 10 தினத்திற்குள் ஏற்பட்டன. ஆதலால் ஜுலை 24-ந் தேதி கலெக்டருக்கு விபரமாக ஒரு கடிதம் காந்தியால் எழுதப் பட்டது. அதன் சாரம் கமிஷனருக்கும் பம்பாய் கவர்ன் மெண்டுக்கும் அனுப்பப்பட்டது. கவர்ன்மெண்டுக்கு அனுப்பப்பட்ட கடிதத்தில் "கலெக்டர் தம் சொந்த பொறுப்பில் நடந்திருப்பார் என்று என்னால் நினைக்கமுடி யவில்லை. அவர் சொந்த பொறுப்பில் நடந்திருந்தாலும், மேலே இருந்து கிடைத்த உத்திரவின்படி நடந்திருந் தாலும், என் உணர்ச்சியை கவர்னர் அறிந்து இதில் தலையிட வேண்டுகிறேன்" என்று காந்தி கண்டிருந்தார். கலெக்டருக்கு அனுப்பிய கடிதத்தின் சாரம் பின்வரு மாறு :—"13-ந் தேதி நாம் சம்பாஷித்த பிறகு ஏதேனும் காரிய மேற்படுமென்று எதிர் பார்த்தேன். சென்ற பத்து தினங்களில் நடந்த கொடுஞ்செயல் களைச் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. நீங்களோ, உங்கள் கீழதிகாரிகளோ எளிய கிராமத்தார்கள்மீது பலவந்த மான அடக்குமுறைகளை உபயோகித்து அவர்களைக் கட்டாயப்படுத்தி வசூலித்திருக்கிறீர்கள். இது உடன் படிக்கைப்படியும் குற்றம்; நம்பிக்கை துரோகமுமாகும். காங்கிரஸ்காரர் ஜனங்களுக்கு எடுத்து விளக்கி வேலை செய்ததெல்லாம் கவர்ன்மெண்டிற்கே தெரியும். ஜனங்கள் அடைந்த கஷ்டங்களைப்பற்றி விசாரித்து உங்களுக்குத் தெரிவித்திருக்கிறோம். வசூல் செய்வதில் முழுமனதுடன் எங்கள் தொண்டர்கள் வேலை செய்தனர். இதைச் செய்த போதெல்லாம் பலவந்த முறையேற்படாதென்றே நம்பப் பட்டது. ஜனங்களைப் பயமுறுத்த போலீஸ் சோதனை களைச் சிறிதும் எதிர்பார்க்கவே யில்லை. காங்கிரஸிற்கு செல் வாக்கில்லாத இடங்களில் மாத்திரம் சர்க்கார் நடவடிக்கை எடுத்துக்கொள்வார்களென்று நம்பப்பட்டது. தற்கால ஸ்திதியைக் கொடுத்துவிட்டால், அல்லது அதுவும் முடிய வில்லை யென்று ருஜு செய்துவிட்டால் பலவந்த முறையை சர்க்கார் உபயோகிக்கமாட்டார்களென்று நாங்கள் ஜனங்க ளிடம் சொல்லிவந்ததை நீங்கள் அறிந்திருக்கக்கூடும்.

அப்படியிருக்க குறிப்பிட்ட கிராமத்தார்களின் நிலைமையை யறிய காங்கிரஸ் தொண்டர்களுக்குச் சிறிதும் இடம் கொடுக்காமல் அவசரப்பட்டுக் காரியங்களை நடத்தியிருப்பது நம்பிக்கை துரோகமே. ஆதலால் வஞலித்த தொகைகளைத் திரும்பக் கொடுப்பதுடன் ஐப்தி அறிக்கை முதலிய பலவந்த முறைகளையும் நிறுத்திவிடவேண்டும். 'வாரத்'தில் இப்போது உள்ள படேலை வேலையினின்று நீக்கவேண்டுமென்று நாங்கள் கேட்டோம். அதைப்பற்றி விசாரணையும் நடத்தவில்லை. புல்சார் தாலுகாவில் பறிமுதல் செய்யப்பட்ட பூமிகளைத் திரும்ப ஒப்புவிக்காதது உடன்படிக்கைக்கு விரோதம். மற்றும் பல விஷயங்களிருக்கின்றன. மேலே சொல்லியவைகளைப்பற்றி திருப்தி ஏற்படாவிட்டால் அவற்றைச் சொல்லவும் முடியாது. இங்கே குறிப்பிட்ட புகார்களை விசாரிக்க கட்சிச் சார்பில்லாத நீதிஸ்தலத்தை அரசாங்கத்தார் ஏற்படுத்தவேண்டும். அது வரையில் உடன்படிக்கையையும் அதன் மூலம் ஏற்பட்ட நம்பிக்கைகளையும் கவர்ன்மெண்டு மீறியதென்றே நான் கருதி, அதற்கு ஏற்றபடி, காங்கிரஸ் பிரதிநிதித்வம் வகிக்கும் ஜனங்களின் நன்மையை ரட்சிக்க அவசியம் எனத் தோன்றும் காரியங்களையும் நான் செய்ய உரிமையுள்ளவன் என்று என்னை எண்ணிக்கொள்ள வேண்டும். அடுத்த ஞாயிற்றுக்கிழமை நடுப்பகலுக்குள் பதில் கிடைக்குமாறு தயவு செய்யவேண்டும்.''

ஐக்கிய மாகாண கவர்னர் ஸர் மால்காம் ஹெயிலிக்கு 5-8-1931ல் காந்திஜி அனுப்பிய தந்திச்செய்தி:--''முற்றிலும் சொஸ்தமடைந்தீர்களென்று நம்புகிறேன். பிரதம காரியதரிசியிடம் பண்டிதர்கள் மாளவியாஜியும் ஜவஹர்லாலும் பேசியதன் விவரத்தைப் பார்த்தால் குடிகள் விஷயமாக கவர்ன்மெண்டுக்குள்ள கொள்கை தெளிவாயில்லையென்று தோன்றுகிறது. பலவந்த முறைகள் நடப்பதும் அப்புறப்படுத்தப்பட்ட குடிகளின் நிலையும் எனக்கு மிக்க கவலையைத் தருகின்றன. இந்த முக்கிய பிரச்னைகளில் கவர்ன்மெண்டின் கொள்கை என்னவென்று எனக்குத் தயவுசெய்து தெளிவாக விளக்க முடியுமா?''

இவ்வாறு காந்தி கவர்ன்மெண்டாருக்குத் தம் நிலைமையைத் தெரியப்படுத்தி எழுதியதற்குக் கிடைத்த பதில்கள் முக்கியமானவை. ஐக்கிய மாகாண கவர்னர் கொடுத்த

பதில் தந்தியில் (6-8-31): "லக்ஷ்மணபுரியில் எனக்குக் கண்ட இன்புளுயன்ஸா ஜுரத்தினின்றும் தேறிக் கொண்டு வருகிறேன்" என்று தொடங்கி யிருக்கிறார். அப்புறப்படுத்தப்பட்ட குடிகளின் தொகை அதிக மில்லை யென்றும், விவரமான குறிப்பைக் கேட்டிருப்பதாகவும் தெரிவித்து "கவர்ன்மெண்டாரின் கொள்கை, செய்கை யிலும் எண்ணத்திலும், நீதி தவறுமலிருப்பதுடன் விவசாயிகள் தற்கால கஷ்ட நிலையால் அதிகம் துன்பமடையா மலிருக்குமாறு எல்லா வழியாலும் முயற்சிப்பதாகும்" என்று தந்திச் செய்தி விளக்கியது.

இந்தியா கவர்ன்மெண்டாரின் சார்பில் 1931 வருஷம் ஜுலை 30-ந்தேதி எழுதிய பதிலின் சாரம் பின்வருமாறு.—

"இந்தியா கவர்ன்மெண்டார் நீங்கள் ஜுலை மாதம் 21-ந்தேதி எழுதிய கடிதத்திலடங்கிய விஷயங்களை நன்றாக கவனித்தனர். நிகழ்ந்த சம்பவங்களைப்பற்றி கவர்ன்மெண்டுக்கும் காங்கிரசுக்கும் உண்மை யிது வென்று அபிப்பிராய பேத மேற்பட்டால் அதை விசாரிக்க நியாய ஸதலம் வேண்டுமென்ற விருப்பத்தைத் தற்காலம் நிறுத்தி யிருப்பதாகவும், அவசியம் ஏற்பட்டால் அதைக் கேட்கும் உரிமையை வைத்துக்கொண்டிருப்பதாகவும் தெரிவிக்கிறீர்கள். ஜுன் மாதம் 14-ந்தேதி நீங்கள் எழுதிய கடிதத்திற்கும் இப்போது எழுதுவதற்கும் பேதமென்ன? உடன்படிக்கையின் கருத்தை விளக்க கவர்ன்மெண்டு இப்போதே மத்தியஸ்தத்திற்குத் தயாரா யிருக்க வேண்டுமென்று கேட்பதுடன் விரிவான பிரச்னையை சந்தேகத்திலேயே வைக்கிறீர்கள். ஜுலை மாதம் 4-ந்தேதி நான் எழுதிய கடிதத்தில் கண்டபடி கவர்ன்மெண்டார் அவ்விஷயத்தில் கொண்ட கருத்தை மாற்றமுடியாது. கருத்து அல்லது பொருளை விளக்கும் விஷயத்தில், உங்கள் கடிதத்தில் கண்ட பதிலொரு குறிப்புகளைக் கவனித்தனர். ஆட்சியினிடம் அடங்கியுள்ள பொறுப்புகளையும் கடமைகளையும் இவை எவ்வளவு வரையில் பாதிக்க வல்லவை என்று கவனிக்க வேண்டும். நிர்வாக யந்திரமும் சாதாரண சட்டமும் செல்ல முடியாமல் தடை செய்யும் ஏற்பாடுகளுக்கும், இதர ஜனங்களை விடக் காங்கிரஸ்காரருக்கு விசேஷ விசாரணை வசதி யளிக்கவும் கவர்ன்மெண்டின் அதிகாரத்தை வேறோர் ஸ்தாபனத்திற்கு விட்டுக் கொடுப்பதற்கும் அரசாங்கத்

தார் இணங்க முடியா தென்பதை நீங்கள் ஒப்புக்கொள்வீர்கள். மார்ச்சு மாதம் 5-ந் தேதி ஏற்பட்ட உடன்படிக்கை இம்மாதிரி காரியத்தை யோசிக்கவில்லை. மறியலைப் பற்றி நீங்கள் தெரிவித்த குறிப்புகள் கவனிக்கப்பட்டன. அதிகாரிகளின் நிர்வாக எல்லைக்கு பங்கம் விளைக்கத்தக்க காரியங்களைச் செய்ய முடியாதவர்களா யிருக்கிறார்கள். மாகாண அரசாங்கத்தார் கலால் இலாகா சட்டத்தை மீறிய காரியங்களுக்கு இடம் கொடுப்பதாகத் தெரியவில்லை; மேலும் மாகாணங்களில் மாற்றப்பட்ட இலாகாவாகிய கலால் நிர்வாகத்தை இப்படி நடத்துங்கள் என்று குறிப்பிட நியாயஸ்தலம் நிர்மாணித்தல் தகுதியற்றது. மற்ற விஷயங்களிலும் மத்தியஸ்த சபை எதிர்பாராத உரிமைகளைக் கொள்வதாகும். இவ்வித காரியங்களால் பொருளையறிய மட்டில் கூட மத்தியஸ்த சபை தகாததாகிறது. ஒரு விஷயம் கருத்தை யறியத்தக்கதா அல்லவா என்பதில் கூட சந்தேகங்கள் தோன்றிப் புதிய கஷ்டங்களை யுண்டாக்கக் கூடும். உடன்படிக்கையில் சில நிபந்தனைகளை மீறிய நடத்தையாக நீங்கள் சிம்லாவில் என்னிடம் கொடுத்த ஜாப்தாவை மாகாண கவர்ன்மெண்டுகள் விசாரித்துத் தெரிவிக்குமாறு அனுப்பி யிருக்கிறோம். பதில் வருவதன் பேரில் உண்மையை யறிந்து தக்கது செய்வோம். இதே மாதிரி இனியும் தவறுகளைக் குறித்து அனுப்புவதன் மூலம் நிலைமை சீர்திருந்தக் கூடுமே யல்லாது மத்தியஸ்த சபை உபயோகப்படாது என்பது கவர்ன்மெண்டின் கருத்து."

பம்பாய் அரசாங்கத்தார் 1931 வருஷம் ஆகஸ்டு 10-ந் தேதி எழுதிய பதிலின் சாரம் வருமாறு :—

"முக்கியமான குறிப்புகளுக்கு மாத்திரம் இப்போது பதில் தெரிவிக்க அனுமதி கிடைத்திருக்கிறது. குஜராத்தில் முக்கியமாக பர்தோலியில் கிஸ்தி வசூல் செய்யப்பட்ட விவரத்தில் ஒப்பந்தத்தை மீறி கலெக்டர் செல்லவே யில்லை. பல மாதங்கள காத்திருந்த பிறகுமிகச் சிலரிடமே பலவந்த முறை உபயோகிக்கப்பட்டது. கிஸ்தி அநேகமாக வசூலாகியதால், பலர் கொடுக்கச் சக்தி யிருந்தும் கொடாமலிருந்தனர் என்பது தெளிவு. இதனால் குடிகள் ஒப்பந்தப்படி நடக்கத் தவறியதால் கவர்ன்மெண்டார் கடுமை காட்ட வேண்டியதாயிற்று எனத் தெரிகிறது. கிஸ்திகொடுக்க முடியாதவர்களென்று காங்கிரஸ்காரர் நம்பித் தயார்செய்துள்ள

ஜாப்தாவை அப்படியே ஏற்றுக்கொள்வதாக எவரும் ஒப்புக்கொள்ளவில்லை. அவர்களைப்பற்றி விசாரித்து முடிவு செய்யவே கலெக்டர் ஏற்றுக் கொண்டார். ஒருவர் கொடுக்கச் சக்தியுள்ளவரா இல்லையா என்று முடிவு செய்வது கலெக்டருக்கே உரிமையென்று நீங்கள் அறியக் கூடும். கிஸ்தி வசூல் காரியம் காங்கிரசின் ஆலோசனைப் படி நடப்பதல்ல. ஆதலால் ஒப்பந்தம் மீறிய செய்கையோ, நம்பிக்கை மோசமோ நடந்ததாகச் சொல்லமுடியாது. இந் நிலையில் வசூலித்த தொகையைத் திருப்பிக் கொடுப்பதை சபையோடும் கூடிய கவர்னர் அங்கீகரிக்க முடிய வில்லை. மற்றும் கிஸ்தி வசூல் முறை தவறி எங்கும் எதுவும் நடைபெறவில்லை. நியாயமான விசாரணைகளை நடத்த எப்போதும் கவர்ன்மெண்டார் சித்தமா யிருக்கிறார் கள்."

இந்தக் கடிதம் கிடைத்தவுடன் காந்தி வைசிராய்க்கு 11—8—1931-ல் தந்திச் செய்தி யனுப்பினார் :—

"பம்பாய் அரசாங்கத்தார் பதிலின் பயனாக நான் லண்டன் செல்வது முடியாத காரியமாகிவிட்டது என்று மிக வருத்தத்துடன் தெரிவிக்கிறேன். நிகழ்ந்த செய்தி களின் உண்மையிலும் சட்டக் கருத்திலும் மிக முக்கிய பிரச்னைகளை அக் கடிதம் எழுப்பி விட்டது. இரண்டு விஷயங்களைப்பற்றியும் கவர்ன்மெண்டாரே முடிவு செய்ய வேண்டியவர்களென்று சொல்லப்படுகிறது. அதாவது, கவர்ன்மெண்டாரே ஒரு கட்சியா யிருக்க வேண்டிய வழக்கில் வழக்குத் தொடர்கிறவரும் அவரே, நீதி செலுத்தி முடிவு செய்பவரும் அவரே யென்று கருத்தாகிறது. இதைக் காங்கிரஸ் ஏற்றுக்கொள்ள முடியாது. பம்பாய் கவர்ன்மெண்டின் கடிதம், ஸர் மால்காம் ஹெய்லி என் கேள்விக்குப் பதிலாகக் கொடுத்த தந்தி, ஐக்கிய மாகாணங் களிலும் எல்லைப்புற மாகாணங்களிலும் மற்றும் பல மாகா ணங்களிலு மிருந்து வரும் ஜனங்களின் தொல்லைபற்றிய அறிக்கைகள் ஆகிய இவைகளை நோக்கினல் நான் குறிப் பிட்டபடி கப்பலேறக் கூடாதென்றே தெரிகிறது. முடிவு செய்வதற்கு முன் உங்களுக்குத் தெரிவித்துப் பதிலை யெதிர் பார்க்க விரும்பி இவ் விவரங்களைத் தெரிவித்தேன். தங்கள் பதிலை எதிர்பார்க்கிறேன்."

1931 வருஷம் ஆகஸ்டு மீ 13-ந் தேதி சிம்லாவிலிருந்து தந்தி கிடைத்தது:—காந்தி குறிப்பிட்ட காரணங்களுக்காக, காங்கிரஸ் தன் கருத்தை லண்டன் மகாநாட்டில் தெரிவிக்காமலிருக்க நேருவதைக் கண்டு வைஸிராய் வருந்தினார். காந்தி மீண்டும் பிடிவாதமாக மறுத்தபடியால் பிரிட்டிஷ் பிரதம மந்திரிக்கு காந்தி வரமுடியாதென்ற செய்தி அனுப்பப்பட்டது. ஜூலை மாதம் 30-ந் தேதி இந்தியா கவர்ன்மெண்டார் சார்பில் காந்திக்கு அனுப்பிய கடிதத்துடன் மறுதினம் வைஸிராய் ஸ்ரீ எமர்ஸன் உடன்படிக்கை சம்பந்தமான விஷயங்களைக் கவனிப்பதாக உறுதி கூறி ஒரு கடிதம் எழுதி, காந்தி வட்டமேஜை மகாநாட்டுக்குப் போகவேண்டியதவசியமென்று வற்புறுத்தினார். அதற்குள் நிலைமை இப்படி மாறிவிட்டது.

ஜூன் மாதத்திலிருந்தே சந்தேகம் தோன்றியது; காங்கிரஸ் வட்டமேஜை மகாநாட்டிற்குச் செல்வது தடைப்படலாமென்று நினைத்தனர். ஆயினும் சந்தர்ப்பம் ஒழுங்குபடலாமென்று நம்பிக்கையும் பரவியது. இடையில் காங்கிரஸ் தன் வேலையை நிறுத்தவில்லை. ஜூலை மாதம் 20-ந் தேதி காரியக் கமிட்டி கூடி இந்திய பிரிட்டிஷ் பொருள் நிலை சம்பந்தமான அறிக்கையைப் பிரசுரம் செய்ய அதிகாரம் கொடுத்தது. மசூலிபட்டினத்தில் கூடிய மூலாதார உரிமைக் கமிட்டியின் அறிக்கையை அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் முன் வைப்பதென்று காரியக் கமிட்டி தீர்மானித்தது. ஸ்ரீமான் ஹார்டிகரின் தலைமையில் திறமையாகத் தொண்டு செய்து வந்த ஹிந்துஸ்தான் சேவாதளத்தைக் காரியக் கமிட்டியின் அதிகார எல்லைக்குள் கொண்டுவந்ததும், மாகாணக் கமிட்டிகள் இம்மாதிரி தொண்டர்படை வைத்துக்கொள்ள வேண்டுமென்று முடிவு செய்ததும் இக்காலத்தில் தான். வகுப்புப் பிரச்னையைப்பற்றிக் காங்கிரஸ் செய்த முடிவு மிக முக்கியமானது.

## வகுப்புப் பிரச்னை

பரிசுத்தமாகக் கலப்பின்றி ஏற்படக்கூடிய தேசியமே காங்கிரஸின் லட்சியம். சுதந்திர இந்தியாவில் பிரச்னைகளை யெல்லாம் தேசிய வாதம் பற்றியே முடிவு செய்து கொள்ள முடியும் என்பது காங்கிரசின் நம்பிக்கை. ஆயி

னும் அனுபவத்தில் இக் கொள்கை பல உருவத்துடன் தோன்றி வருகிறது. லாகூர் தீர்மானம் ஒரு குறிப்பிட்ட நிலையைக் குறித்துக் காட்டும். பொதுவாக முஸ்லிம்கள் முதலிய பல சிறு பாலார் வகுப்புகளும்,விசேஷமாக சீக்கியரும் நேரு அறிக்கையின் முடிவை ஏற்றுக்கொள்ள மறுப்பதால் கொள்கையைச் சிறிது விட்டுக்கொடுக்க லாகூரில் காங்கிரஸ் இசைந்தது.. வரும் அரசியல் ஸ்தாபனத்தில் எந்த வகுப்பு சம்பந்தமான முடிவும் குறிப்பிட்ட வகுப்பினர்க்குத் திருப்தியளித்தா லன்றிக் காங்கிரஸால் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

இதனால் வகுப்பு பிரச்னையில் காங்கிரஸ் நேரே எவ்வித பரிகாரமும் செய்ய முடியவில்லை. ஆனால் தேசத்தில் ஏற்பட்ட நெருக்கடியான நிலைமையைக் கருதி ஒரு சமரசமான முடிவை காரியக் கமிட்டி சிபார்சு செய்வது அவசியமெனத் தோன்றியது. நீண்ட நேரம் வாதித்த பிறகு காரியக் கமிட்டி செய்த முடிவு ஒரு முக்கிய சம்பவம். பல வகுப்புகளுக்கும் ஏற்பட்ட பயிற்சி, பாஷை, எழுத்து, கலைகள், தொழில், மத சம்பந்தமான பழக்கங்கள், தர்ம நிதி நிர்வாகம் முதலியவற்றில் பாதுகாப்புகளே மூலாதார உரிமைகளாக்க வேண்டும். பல மாகாணங்களிலுள்ள சிறு பாலார்களின் அரசியல் முதலிய பல உரிமைகளைப்பற்றிய விஷயங்களையும் 'பெடரல்' என்ற மத்திய ஐக்கிய நிர்வாகத்திற்கு விடவேண்டும். வயது வந்தவர்களுக்கெல்லாம் ஓட்டுரிமை வேண்டுமென்ற கராச்சி காங்கிரஸ் முடிவைக் காரியக் கமிட்டி மாற்றமுடியாது. ஆதலால் பல வகுப்புகளுக்கும் ஜனத்தொகுதிக் கேற்றபடி வாக்காளர் தொகை நிரவி வருமாறு வாக்காளர் ஜப்தா தயார் செய்யவேண்டுமென்ற கொள்கையை இப்போது ஏற்கிறது. வரப்போகும் அரசியல் கூட்டுத்தொகுதிகளையே ஏற்றுக்கொண்டு பல மாகாணங்களிலும் ஏற்படக்கூடிய ஹிந்து முஸ்லிம் சீக்கிய சிறு பாலார்க்கு, சட்ட சபைகளில் ஒதுக்கப்பட்ட ஸ்தானங்கள் விடுவதுடன் மற்ற பொதுத் தேர்தல்களிலும் அவர்களுக்கு எல்லோரையும்போல் இடம் கொடுக்கவேண்டும். உத்தியோகங்கள் கொடுப்பதில் வேலை செய்யும் திறமையைக் குறைக்காதபடி, பல சிறு பாலாருக்கும் தேசத்துப் பொது உத்தியோகங்களில் வீதம் ஏற்பட இடம் கொடுக்குமாறு கொள்கை ஏற்படலாம்.

அரசியலமைப்பில் 'பிடரல்' திட்டம் அங்கீகரிக்கப் பட்டது. விசேஷ அதிகாரங்கள் பின்னால் இந்தியரின் முன்னேற்றத்திற்கு இடையூறென்று தோன்றினாலன்றி, அதுவரையில் மாகாணங்களுக்கே உரியனவா யிருப்பது தகுதி.

மேலே சொல்லிய திட்டங்களைச் சமரசமாகக் காரியக் கமிட்டி ஏற்றுக்கொண்டது. அந்நிய ஜவுளிகளையும் நூலை யும் பகிஷ்காரம் செய்வதாக உறுதிமொழியும் அங்கீகரிக் கப்பட்டது தீண்டாமை விலக்குக் கமிட்டியை ஸ்ரீயுத ஜம்னாலால் பஜாஜ் புனருத்தாரணம் செய்து புதுப்பிக்க வழி தேடவேண்டுமென்பது ஒரு முடிவு. காங்கிரஸ் உறுதி மொழியை ஏற்றுக்கொண்ட மில்களில் தொழிலாளர் நலத்தையும் பாதுகாக்கவேண்டும். விசேஷ உரிமைகள் மாகாணங்களிடம் விடவேண்டுமென்று மேலே சொல்லி யதைப்பற்றி ஒரு வார்த்தை. முஸ்லிம்கள் மெஜாரிடியாக இருக்கும் மாகாணங்களில் தம்மிடம் சில விசேஷ பலம் வைத்துக்கொள்ள வேண்டுமென்று கருதி இந்தக் கருத்தை விரும்பினார்கள். ஹிந்துக்கள் மெஜாரிடியாக இருக்கும் மாகாணங்களில் முஸ்லிம்களுக்கு இடையூறு நேர்ந்தால் தமக்கும் சில மாகாணங்களில் சக்தி யிருப்பது பரிகாரமாகு மென்று நினைத்தனர். அதற்காகப் பாதுகாப்பளிக்கப் பட்டது. பின்னால் சமயம் நேரும்போது அவசியமானால் புனராலோசனை செய்யலாமென்ற நிபந்தனை எல்லோராலும் வரவேற்கப்பட்டது.

1931-ல் ஆகஸ்டு மாதம் 6, 7, 8 தேதிகளில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி பல முக்கிய தீர்மானங் களை நிறைவேற்றியது. தேசீயக் கொடியைப்பற்றிய உருவம் ஒன்று. கொடியில் மூன்று நிறங்கள் படுக்கை யில் வரிசையாக மேலும் கீழுமாக இருக்கவேண்டும். மேலே காஷாய நிறம் தியாகத்தையும் தீரத்தன்மையையும் குறிக்கிறது. அடுத்தபடி நடுவில் வெள்ளை நிறம் சத்தியம், அமைதி யென்ற கொள்கையையும், கீழேயுள்ள பச்சை நிறம் சிரத்தை, எளியாரைக் காத்தல் என்ற கொள்கையை யும் குறித்துக் காட்டும். வெள்ளையான பாகத்தின் மத்தி யில் பாமர ஜனங்களின் நம்பிக்கையாக கை ராட்டினம் கரு நீல நிறத்தில் விளங்குகிறது. இவ்வித புதிய தேசீய கொடியை மாதந்தோறும் கடைசி ஞாயிற்றுக்கிழமையில்

நாட்டி கொடிவிழா கொண்டாடவேண்டும். அடுத்தபடி மூலாதார உரிமைகளும் கடமைகளும் தீர்மானமாக நிறைவேறின. சுயராஜ்ய இந்தியாவில் ஜனங்களின் உரிமைகள் எவ்விதம் ஏற்படுமென்பதை விளக்கவே இத்தீர்மானம் ஏற்பட்டது. சகல ஜனங்களுக்கும் பொருள் நிலையுரிமைகள் அடங்கிய அரசியல் திட்டம் அடிப்படையாகும். பொது நலத்திற்கு விரோதமில்லாத முறையில் மத தர்ம அனுஷ்டானங்கள், சட்டப்படி சர்வஜன சமத்வம், இந்தியாவெங்கும் ஒருவன் ஒரேமாதிரியான சுதந்திரத்தை யனுபவிப்பது, பொருள் நிலையுரிமையில் தொழிலாளர் பாதுகாப்பிற்கு வேண்டிய நலங்கள் ஆகிய பல விஷயங்கள் இதில் அடங்குகின்றன. வரி வசூல் செய்யும் முறையும் செலவும் தீர்மானிக்கப்படும் விதங்கள் காணப்படுகின்றன. எளிய விவசாயிகளுக்கு மிகக் குறைந்த வரியும், சில இடங்களில் கிஸ்தியே இல்லாத தன்மையும் உண்டு. இதற்கு பதில், நிலத்திலிருந்து அதிக வருமானம் பெறுகிறவர்கள் படிப்படியாக அதிகரித்த வருமான வரி கொடுக்க நேரிடும். மற்றும் ஏழைகளுக்குத் துன்பமில்லாத பல புது வரிகள் ஏற்பட்டு ராணுவச் செலவு சரிபாதிக்குள் குறைக்கப்படும். மற்றும் எந்த அரசாங்க உத்தியோகத்திற்கும் மாதம் ரூ. 500-க்கு மேல் சம்பளம் இருக்கக்கூடாது. அடுத்தபடி சுதேசிய தொழில்களை வளர்க்கவும் பொது நலத்திற்கும் முக்கியமான இருப்புப் பாதைகள், கால்வாய் வழிகள், கப்பல்கள், சுரங்கத் தொழில் முதலியவற்றை அரசாங்கம் சொந்தமாக்கிக் கொள்ளவோ முற்றிலும் நிர்வாகம் செய்யவோ வேண்டும். இவ்வித தீவிர தேசிய கொள்கைகளை நிறைவேற்றும் காரியங்கள் காங்கிரஸ் திட்டங்களாகச் செய்யப்பட்டன.

இதே காலத்தில் பம்பாயில் கூடிய காரியக் கமிட்டியார் வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் ஜர்காக்களையும் மாகாண காங்கிரஸ் கமிட்டிகளோடு இணைத்து 'குதே கிட்மட்கார்' சங்கங்களையும் காங்கிரஸ் தொண்டர் சங்கங்களாக்க முடிவு செய்தனர். இதற்காக அந்த மாகாணத் தலைவர்களுடன் கலந்து யோசித்தனர். எல்லைப்புற மாகாண ஜர்கா என்ற பெயர் அந்த மாகாண காங்கிரஸ் கமிட்டிக்கு ஏற்றுக்கொள்ளப்பட்டது. அங்கு இருந்த பல கொடிகளும் மாறி தேசிய கொடி ஏற்றுக்கொள்ளப்பட்டது. காரியக்

கமிட்டியார் கேட்டுக்கொண்டபடி எல்லைப்புற தலைவரான கான் அப்துல் கபார் கான் அம்மாகாணத்தில் காங்கிரஸ் இயக்கத்தை நடத்த ஒப்புக்கொண்டார். தேசத்திலுள்ள நிலையைக் கருதி வட்டமேஜை மகாநாட்டுக்குக் காங்கிரஸ் பிரதிநிதி செல்வது நிறுத்தப்பட்டாலும் டில்லி உடன் படிக்கையைக் காங்கிரஸ் நிராகரிக்கவில்லை. காங்கிரஸ் ஸ்தாபனங்கள் அந்த உடன்படிக்கையில் கண்ட நிபந்தனை களுக்குக் கட்டுப்படவேண்டுமென்று தெளிவாக விளக்கி னார்கள். ஆனால் எதிர்பாராத அவசர நிலை ஏற்பட்டால் காரியக் கமிட்டியைக் கூட்டாமல் அதன் பெயரால் காரியங் களை நடத்த தலைவருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது. ஆகஸ்டு மாதம் 14-ந்தேதி பம்பாயில் முடிவுபெற்ற காரியக் கமிட்டி செப்டம்பர் மாதம் 8-ந்தேதி ஆமதாபாத்தில் கூடுவதென்று முடிவாகியது. இதற்குள் ஸர் தேஜ் பகதூர் சப்ரூவும், ஸ்ரீமான் ஜெயகரும் செய்யும் முயற்சியால் காந்தி லண்டன் செல்ல வசதி யேற்படலாம் என்ற வதந்தி மணி பவனில் வலுத்தது. ஆனாலும் அப்போது பயன் தெரிய வில்லை. இரவு 8-45 மணிக்கு மணிபவனை விட்டுப் புறப்பட்டு காந்தி குஜராத்திற்கு மூன்றாவது வகுப்பில் பிரயாணமானார். ஆகஸ்டு மாதம் 15-ந் தேதி டாக்டர் சப்ரூ, ஸ்ரீமான் ஜயகர், ஸ்ரீமான் ஏ. ரங்கசாமி அய்யங்கார் முதலியவர்கள் பம்பாயில் கப்பலேறுமுன் காந்தியை சந்தித்துப் பேசினார் கள்.

காந்தியின் புறப்பாடு நின்றுவிட்டது. அதிகார வர்க்கத்தார் உடன்படிக்கையை அலட்சியம் செய்தனர். நல்ல சமயங்களிலெல்லாம் காங்கிரஸ் வேலைகளுக்கு இடை யூறாகச் சில கொடுஞ் செயல்களும் சேர்ந்தன. புனாவில் பர்கூஸன் கலாசாலைக்கு அழைத்த இடத்தில் ஆக்டிங் கவர் னர் ஸர் ஈ. ஹாட்ஸனை ஒரு இளைய மாணுக்கன் இந்தச் சமயத்தில் சுட்டது தீய நிலையை வளர்த்தது. நல்ல வேளை யாக ஸர் ஹாட்ஸன் தைரியமிழக்காமல் உறுதியாக நின்று தப்பினார். இதெல்லாம் சில்லரை யிடையூறுகளே. அதி காரிகளின் செயலை விரிவாக மற்றொரு இடத்தில் முன்னரே விளக்கிவிட்டோம். காந்தியால் சாட்டப்பட்ட குற்றங் களுக்கெல்லாம் ஆகஸ்டு மாதம் 24-ந் தேதி அரசாங்கத் தார் பதில் விளம்பரம் செய்தனர். இந்தப் பதில்களுக்குக் கண்டன மொன்றைக் காங்கிரஸ் அக்டோபரில் விவரமாக

வெளியாக்கியது. காங்கிரஸ் சொல்கிறபடி கவர்ன்மெண்டார் கேட்பது மிகக் குறைவென அவர்கள் கருதியதே முக்கியம். தங்கள் மதிப்பை நிலைநாட்டவே அவர்கள் பாடுபட்டனரே யன்றி வேறெதையும் கவனிக்கவில்லை.

காந்தி இங்கிலாந்து செல்ல மறுத்ததற்கு மற்றொரு முக்கிய காரணமு முண்டு. வட்டமேஜை மகாநாட்டுக்கு டாக்டர் அன்ஸாரியை கவர்ன்மெண்டார் பிரதிநிதியாக எடுக்கவில்லை. அவர் சிறந்த காங்கிரஸ் வாதியா யிருப்பதுடன் முஸ்லீம் தேசியக் கட்சிக்கும் தலைவர். இக் கட்சியார் பூர்ண சுயராஜ்ய லட்சியத்தைக் கொண்டவர். மேலும் காந்தியின் வேண்டுகோட்கு இணங்கி லார்டு இர்வின் தெளிவாகவே பண்டித மதன் மோகன மாளவியாவையும், ஸ்ரீமதி ஸரோஜினி தேவியையும், டாக்டர் அன்ஸாரியையும் பிரதிநிதிகளாக்க வாக்களித்தார். இம்மூவரில் டாக்டர் அன்ஸாரியை மாத்திரம் நியமிக்க தவறிவிட்டனர். லார்டு இர்வின் வாக்களித்தது லார்டு வில்லிங்டனுக்குத் தெரியாததல்ல. முஸ்லீம்கள் சுயராஜ்யத்தை விரும்பவில்லையென்று வட்டமேஜை மகாநாட்டில் காட்டவேண்டியது பிரிட்டனுக்கு முக்கியமாகிறது. லார்டு இர்வின் செய்த வாக்குறுதியை நிறைவேற்ற வேண்டுமென்று கேட்டபோது, முஸ்லீம் பிரதிநிதிகள் டாக்டர் அன்ஸாரியை நியமிப்பதற்கு விரோதமாக இருக்கிறார்களென்று லார்டு வில்லிங்டன் தெரிவித்தார். முஸ்லீம் பிரதிநிதிகள் அவ்விதம் விரோதமாக நிற்காவிட்டால் அவர்கள் இந்தியப் பிரதிநிதிகளாகிவிடுவார்கள்; முஸ்லீம் பிரதிநிதிகளென்ற பெயர் போய்விடுமல்லவா? ஆகஸ்டு மாதம் 15-ந் தேதி புறப்படுவதற்குத் தயாராகவே டில்லியினின்று டாக்டர் அன்ஸாரி பம்பாய் வந்து சேர்ந்தார்; அவரைப் பிரதிநிதியாகத் தேர்ந்தெடுக்கச் சந்தேகமில்லையென்று எல்லோரும் நம்பினார்கள்; கடைசி நேரத்தில் மறுக்கப்பட்டது. வட்டமேஜை மகாநாட்டுக் கூட்டுயோசனையின் ஒழுங்கு இதனால் விளங்கிவிட்டது. உடன்படிக்கை விதிகளை அரசாங்கத்தார் மீறாமலிருந்தாலும் பர்தோலியில் பலவந்த முறைகளைக் கையாடாமலிருந்தாலும்கூட, டாக்டர் அன்ஸாரி நியமனத்தை மறுத்தது மாத்திரமே காந்தியின் பிரயாணத்தை நிறுத்தப் போதுமானது. வகுப்புப் பிரச்னைக்குக் காங்கிரஸ் ஒரு முடிவு தயார் செய்தது. அதை வட்டமேஜை மகாநாட்டில் ஒரு ஹிந்துவும்

ஒரு முஸ்லீமும் சேர்ந்து கொண்டுவரவேண்டும். கவர்ன் மெண்டாருக்கு இது தெரியும்; ஆதலால் காங்கிரஸின் முஸ்லீம் காலை ஒடித்து அதை நொண்டியாக்கி அனுப்பத் தீர்மானித்தனர்போல் தோன்றியது. இதனால் கௌரவ மான ஒரே வழியைப் பின்பற்றி காந்தி தம் பிரயாணத்தை நிறுத்திக் கொண்டார். தேசம் கவலையுள் ஆழ்ந்தது. பண்டித மதன் மோஹன மாளவியாவும், ஸ்ரீமதி ஸரோ ஜினி தேவியும் மூல்தான் கப்பலுக்கு வாங்கிய சீட்டை ரத்து செய்துகொண்டனர். காந்தி நிலை மையை விளக்கினார்: "மகத்தான ஒரு கவர்ன்மெண் டுக்கும் தேச ஜன சமூகத்திற்கே பிரதிநிதித்வம் வாய்ந்த ஒரு பெரிய ஸ்தாபனத்திற்கும் ஒப்பந்தம் ஏற்பட்டது. அதன் கருத்தைப்பற்றி அபிப்பிராய பேதம் ஏற்பட்டால், எல்லா ஒப்பந்தங்களுக்கும் உள்ள முறையில் அதை நிவர்த்தி செய்யவேண்டும். சட்டப்படி பலவந்தம் செய்ய முடியாதென்ற நிலைமை இருப்பதால், இரு கட்சிகளுக்கும் ஏற்படக்கூடிய பேதங்களைத் தீர்த்துக்கொள்ள கவர்ன்மெண் டார் மத்தியஸ்த நீதிமன்றத்தை எவ்வழியாலும் வர வேற்க முந்தவேண்டும். இந்தச் சிறு வேண்டுகோளை அலட்சியம் செய்வது இலகு வென்று அரசாங்கத்தார் கருதிவிட்டனர்." இதுவே காந்தியின் கருத்து. மாகாண அதிகாரிகள் ஒப்பந்தத்தை மதித்து நடந்து வழிகாட்டினால் "உடனே லண்டனுக்குப் பாய்வேன்" என்றார். "பெரிய தேசிய ஸ்தாபனமாகிய காங்கிரஸ் தன்மதிப்புடன் ஏற்றுக் கொள்ள முடியாத நிலையிலன்றி வேறுவிதமாக நான் மகா நாட்டிற்குச் செல்வதை ஸிவிலியன் உத்தியோகஸ்தர்கள் விரும்பவில்லை" என்ற உண்மையை வெளியிட்டார். கவர்ன்மெண்டுக்குச் சமமாக மற்றொரு கவர்ன் மெண்டாகக் காங்கிரஸைச் செய்வதே காந்தியின் முயற்சி யென்று அதிகாரவர்க்கத்தார் தந்திரமாகச் செய்தி பரப் பினார்கள்.

பம்பாயினின்று காந்தி ஆமதாபாத்திற்குப் புறப்படு முன் லார்டு வில்லிங்டனுக்குச் சொந்த முறையில் ஒரு கடிதம் எழுதினார். அதன் சாரம்: "ஜூலை 31-ந் தேதி நீங்கள் எழுதிய கடிதத்தில் சிரத்தை யதிகம் காட்டி யிருக்கிறீர்கள். ஆயினும் பிறகு ஏற் பட்ட நிலைமைகள் நமக்குள் அடிப்படையான வித்தியாச

மிருப்பதாகக் காட்டிவிட்டன. என் கடமையை முன்னிட்டு நான் வட்டமேஜை மகாநாட்டிற்குச் செல்வதை நிறுத்த வேண்டியதாயிற்று. மத்தியஸ்த போர்டை நான் நிர்ப்பந்தமாகக் கேட்டேன் என்று சொல்வது வருத்தத்தை யுண்டாக்குகிறது. அதைக் கேட்கும் உரிமை எனக்குண்டு. ஆயினும் அதை நான் வற்புறுத்தவில்லை. கிடைக்க வேண்டிய நீதிகிடைத்தாலே நான் திருப்தியடைவேனென்று தங்களிடம் தெரிவித்திருக்கிறேன். காங்கிரஸ் வட்டமேஜை மகாநாட்டிற்குச் செல்ல மறுத்த பிறகும் ஒப்பந்தம் அமுலிலிருப்பதாகவே காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானித்திருக்கிறது. நீங்களும் அவ்விதமே நினைக்கிறீர்களா என்பது தெரிய வேண்டும். காரியக் கமிட்டி இச்சமயம் கவர்ன்மெண்டிற்குத் தொல்லை கொடுக்க விரும்பவில்லை; இதேமாதிரி மாகாணாதிபதிகளும் நடந்து கொண்டாலே ஒப்பந்தம் நடைபெறுவது உண்மையாகும். அவர்களுடைய நடவடிக்கையால் காரியம் அதிகமாகத் தவறிக் கொண்டே வருகிறதென்று நான் உங்களுக்கு அடிக்கடி தெரிவித்துள்ளேன். அரசாங்கத்தார் செய்கைகளால் காங்கிரஸ் தொண்டர்களையும் காரியங்களையும் நசுக்குவதென்று அவர்கள் கங்கணம் கட்டிக்கொண்டார்களோ எனச் சந்தேகிக்க வேண்டி யிருக்கிறது. தினமும் காரியக் கமிட்டிக்குச் செய்தி கிடைத்தவண்ண மிருக்கிறது. ஆதலால் ஒப்பந்தம் நிலைக்கவேண்டுமானால் குற்றங்களுக்குச் சீக்கிரமே பரிகாரமளித்துப் பதிலும் தெரிவிக்க வேண்டுகிறேன். இல்லாவிட்டால் தற்காப்பு முறைக்காவது என் சகா தொண்டர்கள் அனுமதி கேட்கிறார்கள். ஸிவில் அதிகாரிகளின் விரோத செயல்களால் கவர்ன்மெண்டாரே ஒப்பந்தத்தை ஒழித்து வருகிறார்கள். ஸிவில் சர்விஸைச் சேர்ந்தவர்கள் இந்தியாவின் லட்சியம் முழுச் சுதந்திரமென்று ஏற்க விரும்ப வில்லை. ஆதலால் அவர்கள் எல்லோரும் மனம் மாறும் வரையில் காங்கிரஸ் வாதித்துப் பயன் பெறாது. மிகப் பெரும் கஷ்டங்களை யெல்லாம் தாங்க வேண்டியிருக்கும். ஆதலால் பர்தோலியில் ஸிவிலியன்களின் மனதைச் சோதித்து விடவேண்டும்.''

அதிகாரிகள்மீது குற்றச்சாட்டுகளைக் காந்தி வெளியிட்டதால் வைசிராயுடன் தாம் செய்யும் மத்தியஸ்த முயற்சி கஷ்டப்படுவதாக டாக்டர் சாப்ரூவும், ஸ்ரீமான்

ஜெயகரும் தெரிவித்தார்கள். காங்கிரஸ்மீது ஏற்படக் கூடிய குற்றங்களை ஒழுங்கான நீதிஸ்தலத்தில் விசாரிக்க காந்தி சம்மதித்தார். காந்திக்கு வைசிராய் அளித்த பதில் முழு திருப்தியும் அளிக்கவில்லை. காங்கிரஸின் செயல்களை—முக்கியமாக ஐக்கிய மாகாணங்களிலும், வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திலும்—ஒப்பந்தத்தை அலட்சியம் செய்கின்றனவென்று கூறி, கவர்ன்மெண்டார் கூடியவரையில் விசேஷ அதிகாரங்களைக் கையாள மாட்டார்கள் என்றும் உறுதி செய்தார். இது காந்திக்கு ஆறுதல் அளித்தது. வட்டமேஜை மகாநாட்டிற்கு காங்கிரஸ் செல்ல மறுத்தது கூட ஒப்பந்தத்தின் லட்சியத்திற்கு விரோதமென்று வைசிராய் குறித்துக் காட்டினார். காந்தி தைரிய மடைந்து காங்கிரஸ்காரர் மிக ஜாக்கிரதையாக ஒப்பந்த விதிகளை அனுசரிக்க வேண்டுமென்றார். காந்தியின் விருப்பப்படி வைசிராயிடம் பேட்டி கிடைத்தது. காந்தி, வல்லபாய் படேல், ஜவஹர்லால், ஸர் பிரபாசங்கர் பட்டாணி ஆகிய நால்வரும் ஆகஸ்டு மாதம் 25-ந் தேதி சிம்லா சென்று வைசிராயுடன் கலந்தாலோசித்தனர். வைசிராய் நிர்வாக சபைக் கூட்டத்திற்குப் பிறகு ஆகஸ்டு மாதம் 29-ந் தேதி காந்தி இங்கிலாந்துக்குக் கப்பலேறுவதென்று முடிவாகியது. சூரத் ஜில்லாவில் நிலவரி வசூல் செய்ததில், குறிப்பிட்ட பர்தோலி தாலூகா கிராமங்களில் மற்ற கிராமங்களைவிட அதிக கடுமை காட்டப்பட்டதா என்று விசாரிக்க கவர்ன்மெண்டார் ஏற்றுக்கொண்டனர். மற்ற விஷயங்களுக்கு விசாரணை கிடையாது. இதிலிருந்து காங்கிரஸின் விருப்பம் முற்றிலும் ஈடேற வில்லை யென்பது புலப்படுகிறது. பரிகாரம் கிடைக்காத குறைகளில் காங்கிரஸ்காரர் நேரே ஒப்பந்த விதிகளை மீறாமல் பரிகாரம் தேடிக்கொள்ள உரிமையடைந்தனர். ஒழுங்கான முறையில் பரிகாரம் தேடமுடியாவிட்டால் பிரஸிடெண்டிடம் தெரிவித்து அவர் யோசனையைக் கைக்கொள்ளவேண்டும். டில்லியில ஆகஸ்டு மாதம் 27-ந் தேதி கவர்ன்மெண்டுடன் காந்தியும் தலைவரும் செய்துகொண்ட புதிய உடன்படிக்கை செப்டம்பர் மாதம் 11-ந் தேதி ஆமதாபாத்தில் கூடிமுடிந்த காரியக் கமிட்டியில் அங்கீகாரம் பெற்றது. சுதேசியத்தை மில்கள் கைக்கொள்வதற்கேற்ற திட்டங்களும் இந்தக் கூட்டத்தில் ஆலோசிக்கப்பட்டன.

மிகக் குறைந்த சாமான்களுடன் மகாதேவ தேசாய், தேவதாஸ் காந்தி, பியாரிலால், மீராபென், ஸ்ரீமதி ஸரோஜினி இவர்களும் காந்தியுடன் சென்றனர். ஏடனில் அரபியரும் இந்தியரும் இவர்களை வரவேற்றனர். ஏடன் ரெஸிடெண்டு கூட்டத்தில் தேசிய கொடி நாட்ட அனுமதி தரவில்லை. இந்தியர்கள் கலங்கியதைக் கண்ட காந்தி பரிகாரம் தேட வழிகாட்டினார். வரவேற்புக் கமிட்டி தலைவரையழைத்து ரெஸிடெண்டுக்கு டெலிபோன் மூலம் செய்தியனுப்பச் சொன்னார். இந்தியா கவர்ன்மெண்டுக்கும் காங்கிரஸிற்கும் சமாதானம் ஏற்பட்டிருப்பதால், கவர்ன் மெண்டார் கொடியைக்கண்டு சமாதான காலத்தில் வருந்தினால்,காந்தி வரவேற்பையே அங்கீகரிக்க முடியாதென்கிறார். இந்தச் செய்தியைக் கேட்டதும் ரெஸிடெண்டு இணங்கி விட்டார். அங்கு காந்திக்கு 328 கினி வெகுமதி கிடைத்தது. அப்போது தேசிய கொடியின் பெருமையைப்பற்றி அங்கு காந்தி பேசியபோது இதைக் காக்கவே பலர் தடியடிகள் வாங்கி உயிரையும் இழக்கப் பார்த்தனர் என்றும், அவ்வித கொடியை நாட்டாத இந்தியக் கூட்டங்கள் தேசிய தலைவர்களை வரவேற்பது ஒழுங்கல்லவென்றும் விளக்கினார். கப்பலில் ரூ. 700 பெறக்கூடிய சால்வை யொன்றைக் காந்தி போபால் நவாப்பிடம் ரூ. 7000-க்கு விற்றதும், செல்லும் வழியில் சூயஸ் துறைமுகத்தில் எகிப்திய தலைவர் தம் தேசத்தார் சார்பில் உபசரணை செய்தி யனுப்பியதும் அரிய செய்திகள். இங்கிலாந்தின் பண நெருக்கடியான நிலையை அறிந்த காந்திஜி "இங்கிலாந்தின் கஷ்டம் பணநிலையை ஒழுங்குபடுத்துவதால் தீராது; இந்தியாவுடன் வைத்துக் கொள்ளவேண்டிய சம்பந்தத்தைப்பொறுத்த பிரச்னை" என்று சொல்லிவிட்டார்.

மார்சேல்ஸ் நகரில் ரொமெயின் ரோலந்தின் சகோதரி மெடிலீயோனைன் ரோலந்து என்றமாது மகாத்மாவை வரவேற்கக் காத்திருந்தாள். அவளுடன் மான்சியர் பிரிவட்டும் அவர் மனைவியும் வந்தனர். இவ்வளவு மகிழ்ச்சியுடன் காந்தி லண்டன் போய்ச் சேர்ந்ததும் அங்கு ஏழைகள் நிறைந்து சந்தடிமிகுந்த கிழக்கோடியில் மிஸ் முரில்லெஸ்டர் என்ற மாதின் அதிதியாக வசித்தார். சிறந்த வெகுமதிகளும் வரவேற்பும் காந்தியை யடைந்தன. வெஸ்ட்

எண்டுக்குச் செல்வதை விட்டு காந்தி ஏன் ஈஸ்டு எண்டுக்குச் சென்றார்; பிரிட்டிஷ் அரசாங்க விருந்தின ராகாமல் ஏன் மிஸ் முரியல்லெஸ்டருடைய விருந்தினரானார்; தனவந்தரின் நட்பை விட்டு எளியாரின் நட்பைப்பெரிதென மதிப்பானேன்; இந்திய பாதரட்சை தவிர வேறொன்று மில்லாத பாதங்களுடனும் கதருடையுடனும் கூடிய காந்தி மாமாவைச் சுற்றி தினமும் காலையில் ஈஸ்டு எண்டு குழந்தைகள் எப்படி மகிழ்ந்து குலாவும்; மாலையில் அவர் செய்யும் பிரார்த்தனைகள்; லங்காஷயர் தொழிலாளருக்கும் அநேகமாதிரி பிஷப், ஆர்ச்-பிஷப்களுக்கும் காந்தி விருந்தினரான அதிசயம்; தாம் வழக்கமாக உடுத்தும் ஆடையுடனே மன்னர் பெருமானைக் கண்ட பெருமை; ஆகிய எல்லாம் காங்கிரஸுக்கும் மதிப்பை யளிக்கும்.

## வட்டமேஜை மகாநாட்டு காந்தி

ஐக்கிய அமைப்பு கமிட்டியில் காந்தி செய்த பிரசங்கம் மற்ற மகாநாட்டுப் பிரசங்கங்களுக்குச் சரியான ஆரம்பப் பேச்சாக அமைந்தது. காங்கிரஸின் சரித்திரத்தைச் சுருக்கமாகவும் தெளிவாகவும் அங்கு விளக்கினார். அதன் சரித்திரம், அங்கங்கள், கொள்கை, அது அனுசரிக்கும் வழிகள், அதன் லட்சியம் எல்லாம் அழகாக விளக்கப்பட்டன. காங்கிரஸிற்கும் கவர்ன்மெண்டுக்குமுள்ள அடிப்படை பேதங்கள், மற்ற கட்சிகளுக்கும் காங்கிரஸுக்கும் உள்ள வித்தியாசம், கராச்சி தீர்மானங்கள் ஆகிய எல்லாம் தெளிவாயின. இந்தியர் விரும்பும் ஆட்சி முறையில் பொறுப்புள்ள மத்திய ஆட்சி, ஐக்கிய திட்டம், இந்தியர் சார்பில் பாதுகாப்புகள் ஆகிய மூன்று உத்திரங்கள் உண்டு என்றும், இரண்டு சமத்துவ தேசங்களின் சேர்க்கையே லட்சியமென்றும் தெரிவித்தார்.

சிறு பாலரைப்பற்றிய கமிட்டியில் சில உண்மைகளை ஒளியாமல் காந்தி தெரிவித்தார். 6,000 மைல் கடல் தாண்டி வந்தது வகுப்புப் பிரச்னையைத் தீர்ப்பதற்கல்ல என்றும், இந்தியா சுய ஆட்சி யடையத்தக்க நிர்வாக முறையை நிர்மாணிக்க ஏதேனும் வழிபெறவேண்டும் என்றும் வேண்டினார். சுதந்திர விருட்சமும் பொறுப்பாட்சி முறையும் வளரமுடியாத ஒரு திட்டத்திற்கு வணங்குவதைக் காட்டிலும் எவ்வளவு ஆண்டுகளானாலும் காங்கிரஸ்

கஷ்டப்பட சம்மதிக்குமென்று தைரியமாகப் பேசினார். முஸ்லீம்கள் சீக்கியர்கள் தவிர மற்றவர்களுக்குள் பிரத்யேக பிரிவை ஏற்படுத்துவதை—முக்கியமாக தீண்டாதாருக்கு ஏற்படுத்துவதை—பலமாகக் கண்டித்தார். சீக்கியர் எப்போதும் சீக்கியராகவே இருக்கலாம், அப்படியே முஸ்லிம்களும் கிறிஸ்துவரும். அதுபோலவே தீண்டாதார் எப்போதும் தீண்டாதாராக இருப்பதா என்று காந்தி கேட்டதை ஆழ்ந்து கவனித்தல் தகும். மகாநாட்டில் பேசிய காந்தி காங்கிரஸின் அஹிம்ஸா தர்ம லட்சியத்தை விளக்கித் தம் லட்சியம் பூர்ண சுயராஜ்யமென்றார். டிஸம்பர் மாதம் முதல் தேதி மகாநாடு முடிவு பெற்றபோது காந்தி செய்த வந்தனோபசாரப் பேச்சும் தைரிய மொழிகள் நிறைந்திருந்தன. "என்வழி எங்கே கொண்டு சேர்க்குமோ அறியேன், ஆனால் எனக்கு பாதகமில்லை. நேர்விரோதமான வழியில் நான் செல்லவேண்டியிருந்தாலும் என் மனமார்ந்த வந்தனம் உங்களுக்கு உரியது." என்று பயங்கர நிலையை விளக்கும் பேச்சால் விடைபெற்றுப் பிரிந்தார். தீண்டாதாருக்குத் தனித்தொகுதியை எதிர்த்துப் பேசியபோது இவர் கூறிய ஒரு சபதம் பின்னால் இவருடைய உயிருக்கு ஆபத்து வரும்போல் செய்ததைக் குறிப்பிடவேண்டும். "தீண்டாதார்களைத் தனிப்பட்ட பிரிவாகக் கருத நாங்கள் விரும்பவில்லை. தீண்டாமை நிலைப்பதைவிட ஹிந்து மதமே அழியலாமென்று நான் விரும்புவேன். ஆதலால் இதை எதிர்ப்பதற்கு நான் ஒருவனே பாக்கியானாலும் கூட என் உயிரைக் கொடுத்தும் எதிர்ப்பேன் என்பதை மிக அழுத்தமாகவே தெரிவிக்கிறேன்" என்றார்.

## இந்தியாவின் நிலைமை

வட்டமேஜை மகாநாட்டுக்கு காந்தி சென்றபோது வைஸிராய் செய்துள்ள சில உறுதிகளை முன்னம் தெரிவித்தோம். அந்த உறுதிமொழிப்படி கிஸ்தி சம்பந்தமாக விசாரணை நடத்த ஒரு விசேஷ உத்திபோகஸ்தர் நியமிக்கப்பட்டார். அவர்தான் மிஸ்டர் R. G. கார்டன் I. C. S. பர்தோலி சம்பந்தமாக அக்டோபர் மாதம் 5-ந் தேதி விசாரணை தொடங்கியது. காங்கிரஸ்

சார்பில் ஸ்ரீமான் புலாபாய் தேசாயும், ஸர்தார் வல்லபாய் படேலும் ஆஜராயிருந்தனர். ஜனங்கள், சத்தியாக்கிரகிகளாயிருந்து அதிகமாக நஷ்டமடைந்திருந்தாலன்றி, கடன் வாங்கியாவது செலுத்த முடிந்தால் வரி செலுத்தவேண்டும் என்று இரண்டு தரப்பினரும் ஒப்புக்கொண்டனர். அப்படியிருக்கப் போலீசாருடன் சென்று சில கிராமங்களில் கலெக்டர் சூறையாடியதாகக் கிடைத்த கடிதங்களையும் தந்திகளையும் ஸ்ரீமான் தேசாய் ஆஜர் செய்தார். கொஞ்சதூரம் விசாரணை நடந்த பிறகு கவர்ன்மெண்டார் செய்த சில உத்திரவுகளுக்கு நகல் வேண்டுமென்று தேசாய் கேட்டார். இதன் அவசியத்தைப்பற்றி விவாதம் ஏற்பட்டது. குற்றம் சாட்டிய காங்கிரஸ் குற்றத்திற்கு வேண்டிய ருஜு விடவேண்டுமென்று மிஸ்டர் கார்டன் தெரிவித்தார். இதன் பயனாக விசாரணையே ஒழுங்காக நடைபெற முடியாமல் காங்கிரஸ் தலைவர் விசாரணையை நிறுத்திக்கொள்ள வேண்டியதாயிற்று. 13—11—1931-ல் லண்டனில் இருக்கும் காந்திக்குத் தந்தியும் அனுப்பப்பட்டது.

ஐக்கிய மாகாணங்களிலும் குடிகளின் கஷ்டம் அதிகரித்து வந்தது. தாங்க முடியாத வரிப்பளுவைச் சுமத்தினார்கள். மாகாண காங்கிரஸ் கமிட்டியார் அரசாங்க பிரதிநிதிகளுடன் விவரமாகப் பேச ஒரு மகாநாடு வேண்டியும் பலிக்கவில்லை. பிறகு காங்கிரஸ் கமிட்டியார் தம் சொந்த முறையில் விஷயங்களைக் கவனித்து வேண்டியதைச் செய்ய ஒரு கமிட்டியை ஸ்தாபித்தனர். இக் கமிட்டி அரசாங்கத்தாருடன் கலந்தாலோசிப்பதை விடவேயில்லை. குடிகளுக்குப் போதுமான பரிகாரம் நியாயமாகக் கிடைக்கும்படி செய்யவல்ல எந்த முடிவையும் தாம் ஏற்றுக்கொள்ளத் தயார் என்று இக் கமிட்டியார் தெளிவாகக் கூறினார்கள். வசூல் காலம் நெருங்கியபோது தாம் யாது செய்யவேண்டுமென்று குடிகள் விசேஷ கமிட்டியைக் கேட்கலாயினர். ஜனங்களை யழித்துவிடுமென்று நிச்சயமாகத் தெரியக்கூடிய இடத்தில் கிஸ்தியைக் கொடுக்களென்று எப்படி போதிப்பது. ஆதலால் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டித் தலைவரிடம் உத்திரவு பெற்று இந்தக் கமிட்டியார் அரசாங்கத்தோடு பேச்சு நடத்தும் வரையில் தொகையைச் செலுத்த

வேண்டாமென்று குடிகளுக்குத் தெரிவித்தனர். அரசாங்கத்தாரிடம் இதைத் தெரிவிக்கும்போது பரிகாரம் கிடைத்தவுடன், அல்லது அரசாங்கத்தாரோ இந்தப் பேச்சு முடியும் வரையில் வசூல் செய்வதை நிறுத்துவதாக ஒப்புக்கொண்டால், தாம் ஜனங்களுக்குக் கொடுத்த போதனையை ரத்து செய்வோமென்றனர். அரசாங்கத்தாரோ முதலில் வரிகொடா இயக்கத்தை நிறுத்தவேண்டுமென்றனர். இதைக் கமிட்டி ஏற்கவில்லை. இதனால் போராட்டம் வலுத்தது. நூற்றுக் கணக்கான காங்கிரஸ்காரர் சிறை சென்றனர். காந்தி வந்திறங்குவதற்கு 5 நாட்களுக்கு முன் ஸ்ரீமான்கள் ஜவஹர்லால், டி. ஷர்வானி, பி. தாண்டன் ஆகிய மூவர் கைது செய்யப்பட்டனர். ஜவஹர்லால் மீதும் ஷர்வானி மீதும் அவர்கள் தம் இடத்தைவிட்டு எங்கும் செல்லக்கூடாது என்று நோட்டீஸ்கள் சாதரா செய்யப்பட்டன. இவற்றை அவர்கள் மீற வேண்டிய அவசியம் ஏற்பட்டதால் அந்தக் குற்றத்திற்காக தண்டனையடைந்தனர். வங்காளத்திலும் எல்லைப்புற மாகாணத்திலும் ஏற்பட்ட தொல்லைகளும் சேர்ந்தன. வங்காளத்தில் சிட்டகாங் நகரில் ஆகஸ்டு மாதக் கடைசியல் சில ஐரோப்பியரும் காலிகளும் அச்சாபீசுக்குள் புகுந்து யந்திரங்களை உடைத்தெறிந்து மானேஜரையும் மற்றும் சிலரையும் தாக்கினார்கள். இதைப்பற்றி உத்தியோகப் பற்றில்லாதார் விசாரணை நடத்தி ஒரு அறிக்கை யனுப்பினார்கள். டில்லியில் நவம்பர் மாதக் கடைசியில் கூடிய காரியக் கமிட்டி கூட்டத்தில் இந்த அறிக்கையைக் கவனித்து இது ஜனங்களை பயமுறுத்தும் கொள்கையுடன் போலீஸாரால் ஆமோதிக்கப்பட்டதென்று கண்டனத் தீர்மானம் நிறைவேற்றினார்கள். இந்த சம்பவத்தை ஹிந்து முஸ்லீம் சண்டையென முதிரும்படி விடவே, தாராளமாக முயற்சி செய்யப்பட்டும், அவ்விதம் மாறாமலிருந்ததைக் கண்டு திருப்தியையும் காரியக் கமிட்டி குறிப்பிட்டது. இவ்வித முடிவு தெரிவதால் அரசாங்கத்தார் நஷ்டமடைந்தவருக்கு ஈடு செய்து கொடுப்பதுடன் குற்றத்திற்குப் பொறுப்புள்ளவர்களைத் தண்டிக்கவும் வேண்டுமென்று கமிட்டியார் கருதினர். இந்த சம்பவம் தவிர ஹிஜிலியில் மறியலில் வைக்கப்பட்டவர்களுக்கு நேர்ந்த விபத்தால் இருவர் இறந்தும் இருபது பேர் காயமடைந்தும் போயினர். விசாரணையின்றி மறியலில் வைக்கப்பட்டவரிடம் கவர்ன்

மெண்டு அதிக ஜாக்கிரதை காட்டாமலிருந்ததை காரியக் கமிட்டி கண்டித்தது.

அதே காரியக் கமிட்டி கூட்டத்தில் நடந்த வேறு இரண்டு விஷயங்களையும் குறிப்போம். உப்பின்மீது அதிக வரிபோட முயற்சிப்பது டில்லி ஒப்பந்தத்திற்கு விரோத மென்று ஒரு தீர்மானம். மற்றொன்று நாணயச் செலா வணியையும் பணமாற்றையும் பற்றிய கொள்கை சம்பந்த மானது. செப்டம்பர் மாதம் 21-ந் தேதிக்குப் பிறகு இங்கிலாந்து தங்கமிழந்து நாணயத்திற்குத் தங்க இணைப்பை நீக்கியது. அப்போதுகூட ரூபாய் நாணயத்தை ஸ்டர்லிங்குடன் இணைப்பது இந்திய பொன் நஷ்டத்தின் பேரில் இங்கிலாந்து பயனடையுமென்றும், அவ்வித பயனடையவே கவர்ன்மெண்டார் அதே நிலையைக் காத்து வருகிறார்களென்றும் ஒரு தீர்மானம் நிறைவேறியது. ஸ்டர் லிங்குடன் ரூபாயை இணைக்காமல் இயற்கைக்கு விடு வதே செய்திருக்கவேண்டிய காரியம்.

இனி வடமேற்கு மாகாணத்தில் நடந்ததைக் கவனிப் போம். இதே கிட்மட்கார்கள் மிகச் சிறந்த தொண்டர் கள். கான் அப்துல் கபார் கான் சாகிப்பின் வழிபற்றி இவ்விதம் சிறந்த பயிற்சி பெற்றவர்களாக லட்சம் பேர் உண்டு. இவர்களைப்பற்றிப் பலவித கருத்துக்கள் வெளி யானபோதிலும் ஆகஸ்டு மாதம் காங்கிரசுடன் இவர்கள் சேர்க்கப்பட்டபடியால் முன்னிருந்த சந்தேகங்கள் பறந் தன. ஸ்ரீமான் தேவதாஸ் காந்தி நேரில் எல்லைப்புறம் சென்று நடத்திய விசாரணையின் பயனாக மேலே சொல்லிய முடிவு ஏற்பட்டது. ஆனாலுமென்ன! அரசாங்கத்தாரின் சந்தேகம் நீங்கவில்லை. குணத்திலும் அடக்கத்திலும் தியாகத்தாலும் தொண்டின் சிறப்பாலும் கீர்த்திபெற்று விளங்கி எல்லைப்புற காந்தியென்ற பட்டமும் பெற்ற ஒரு வீரனாகிய கான் அப்துல் கபார் கான் தலைமையில் நடக்கும் இந்த தொண்டர்களுக்கு சிகப்பு உடுப்புகளுண்டு. ராணுவ சின்னங்களிலும் ஆயுதங்களில்லாத சிலவற்றை யுடையவர் கள். இவர்களைக் கண்டு அரசாங்கத்தார் பயந்தனர். சிகப்புடையுடன் கூடிய லட்சம் பட்டாணியருடன் இத் தலைவன் சாது என்ற வேஷத்தில் எல்லைப்புற ஜாதிகளுடன் சேர்ந்து இந்தியா அரசாங்கத்துக்குத் தொல்லை கொடுக் கலாமென்ற சந்தேகம் போலும். வடமேற்கு எல்லைப்புற

மாகாண கமிஷனர் நடத்திய தர்பாருக்கு இந்தத் தலைவர் செல்லவில்லை; பரிபூரண சுதந்திரமே லட்சியமெனப் பிரசாரம் செய்கிறார். இக்காரணங்களுக்காக இவரும் இவருடைய அருமைச் சகோதரரான டாக்டர் கான் சாகிப்பும் 1931-ம் வருஷம் நவம்பர் மாதம் சிறையிலிடப் பட்டனர். காந்தி டிஸம்பர் மாதம் வருமுன் இச் சம்ப வங்கள் ஒன்று கூடின. கான் அப்துல் கபார்கானும் அவர் சகோதரரும் ராஜாங்க கைதிகளாகவே வைக்கப்பட்டனர். ஸ்ரீமான் ஜவஹர்லாலும் ஷர்வானியும் கைதி செய்யப்பட்ட வுடன் கப்பலில் வந்துகொண்டிருந்த காந்திக்கு கம்பி யில்லா தந்தியில் செய்தி யனுப்பப்பட்டது. அந்தந்தியை அவரிடம் சேர்க்கவில்லை. இவ்வளவு சங்கட நிலைகளுக்கு மத்தியில் காந்தி டிஸம்பர் மாதம் 28-ந் தேதி பம்பாய் துறைமுகத்திற்கு வந்து சேர்ந்தார்.

---

# ஆறாம் பாகம்

## அத்தியாயம் 1

### மீண்டும் போர்

இந்தியாவின் ஒப்பற்ற புதல்வர்களுள் முதன்மையான வராக விளங்கும் மகாத்மாவை வரவேற்பதற்காக அன்று பம்பாய் நகரம் விசேஷ ஏற்பாடுகள் செய்திருந்தது. இந்தியாவின் நாளு பக்கங்களிலிருந்தும் பிரபலஸ்தர் களில் பலர் பம்பாய் வந்து சேர்ந்திருந்தனர். இவர்களில் முக்கியமானவர்களும், காந்திஜியின் அருமைத் தோழர் களும் கப்பலிலேயே அவரை எதிர் கொண்டழைத்தனர். பாபூஜி சிலரைத் தட்டிக் கொடுத்தார்; வேறு சிலரை அணைத்துக் கொண்டார்; இன்னும் சிலரைத் தமது மோஹனச் சிரிப்புடன் வரவேற்றார்; வயோதிக வீரபுருஷ ரான அப்பாஸ் தயாப்ஜியின் தாடியைப் பிடித்து இழுத்து சிறிது தமாஷ் செய்தார். துறைமுகத்திலேயே அவருக்கு ஓர் வரவேற்பு உபசாரம் நடந்தது. அதற்குப் பிறகு பிரம் மாண்டமானதொரு ஊர்வலம் நடைபெற்றது.

ராஜோபசாரமாக இந்தியாவின் முடிசூடா மன்னனை, தனது அருமை மைந்தனை, அன்னைப் பாரத தேவி மீண்டும் அணைத்துக் கொண்ட காட்சி தேவர்களும் கண்டு வியக்கத்தக்கதாக விருந்தது. உலகத்தை முற்றும் துறந்த முனிவராகவும், தவசிரேஷ்டராகவும் அவர் மேனுடுகளில் திக்விஜயம் செய்துவிட்டுத் திரும்பினுர். ஐரோப்பிய நாடுகளில் சாந்தத்தையும், சமா தானத்தையும், அஹிம்ஸையையும், சத்தியத்தையும் போதித்து விட்டுத் திரும்பினுர். அவருக்குத் தகுந்த முறையில் மரியாதை செய்ய பம்பாய் நகரம் சற்றும் பின் வாங்கவில்லை.

அன்று பம்பாய் வாசிகள் பல்லாயிரக்கணக்கில் அஸாத் மைதானத்தில் கூடினர். எங்கு பார்த்தாலும் ஓரே ஜன ஸமுத்திரமாக விருந்தது. அந்த ஜனத்திரள்

முன்பு காந்திஜி தமது ஹிருதயத்தை அப்படியே கொட்டி அளந்தார்; சமாதானத்திற்காகவே தாம் உழைக்கப்போவதாக உறுதி கூறினார். ஹிந்து சமூகத்திலிருந்து தாழ்த்தப்பட்ட வகுப்பினரை வேறுபடுத்துவதை என்ன செய்தும் எதிர்க்கப்போவதாக அவர் சபதம் செய்தார். கூட்டுக் கமிட்டிக் கூட்டத்திலேயே அவர் இக்கருத்தை வெளியிட்டார். சிறுபான்மைக் கமிட்டியிலும் இதையே வற்புறுத்தினார். ஆனாலும் இதை வியாஜமாகக் கொண்டு அவர் பிறகு பெருத்த உபவாசத்தில் இறங்குவார் என எவரும் எதிர்பார்க்கவில்லை.

தாம் இந்தியாவில் இல்லாத காலத்தில் ஆங்காங்கு என்னென்ன நடந்ததென்பதை விசாரித்தறிவதில் மகாத்மாஜி மூன்று தினங்கள் செலவிட்டார். இந்தியாவின் தலைவர்களையெல்லாம் அழைத்துக் கலந்து பேசினார்; உள்ள நிலைமையை உணர்ந்தறிந்தார். அவர் என்ன செய்வார் பாவம்! வங்காளத்தில் ஆள் தூக்கி அவசரச் சட்டமும் அடக்குமுறையும் சீறி நின்றன. ஐக்கிய மாகாணத்திலும் வடமேற்கு எல்லைப்புறத்திலும் அடக்குமுறை தாண்டவமாடியது. ராஜி உடன்படிக்கை அமுலிலிருந்த காலத்திலேயே எங்கும் அடக்குமுறை தலை தூக்கி நின்றது. இவைதான் வில்லிங்டன் பிரபுவினிடமிருந்து தமக்குக் கிடைத்த கிறிஸ்துமஸ் வெகுமதிகள்'' என காந்திஜி கூறினார். ஆனால் அவர் உண்மைச் சத்தியாக்கிரகி அல்லவா? ஆகவே சமாதானத்தை நிலைநாட்டுவதற்கான எல்லா வழிகளையும் தேடாமல் அவர் தேசத்தை மீண்டும் தியாக அக்னியில் தோய்த்தெடுக்க விரும்பவில்லை. ஒவ்வொரு மாகாணத்திலிருந்தும் பிரதிநிதிகள் அன்றுடம் அவரைச் சந்தித்து தங்கள் தங்கள் பிரதேசங்களில் அதிகார துஷ்பிரயோகம் எவ்வளவு அதிக்கிரமமாக நடந்ததென்பதை எடுத்துரைத்தனர்.

காந்திஜியோ லண்டனிலிருந்து தாம் கொண்டுவந்த கதையை வெளியிட்டார். "லண்டன் மாகாநாட்டிற்குச் செல்ல நான் தயாராகவேயில்லை. எனக்கு அதில் சிறிதும் விருப்பமில்லை. ஆனால் காரியக் கமிட்டி நான் போகத்தான் வேண்டுமென்றது. எப்படியாவது என்னைக் கப்பலில் மூட்டை கட்டி அனுப்பிவிட வேண்டுமென தொழில் கட்சியினர் கவலைப்பட்டனர். எல்லா முயற்சிகளும் ஒருங்கு

சேர்ந்து என்னைச் சிறைக்கனுப்பின. நானும் லண்டனுக்குப் போய் அங்கு நடந்த விஷயங்களை நேரில் கண்டேன். அவை ஒன்றும் எனக்குப் பிடிக்கவில்லை. நமது கதியை நாமேதான் நிர்ணயித்துக்கொள்ள வேண்டும்'' என்று மகாத்மாஜி தமது மனதை விட்டுப் பேசினர். இந்தியாவில் ராஜி உடன்படிக்கை முறிந்து எங்கு பார்த்தாலும் அடக்கு முறைச் சட்டங்கள் சீறிக்கொண்டிருந்ததைக் கண்ட அவர் 1931-ம் வருஷம், டிஸம்பர் மாதம் 29-ந் தேதியில் இராஜப் பிரதிநிதிக்கு ஒரு தந்தி அனுப்பினர். அதன் விவரம் வருமாறு :—

"நேற்று நான் கப்பலிலிருந்து இறங்கியதும், எல்லைப்புற மாகாண அவசரச் சட்டம், ஐக்கிய மாகாண அவசரச் சட்டம், எல்லைப்புறத் துப்பாக்கிப் பிரயோகம், மேற்படி இரு மாகாணங்களிலும் என்னுடைய ஆப்த சகாக்கள் கைதியாயிருந்தது, இவ்வளவும் போதாதென்று வங்காள அவசரச் சட்டம் இவையே என்னை வரவேற்றன. இவற்றிற்கு நான் சற்றும் தயாராகவேயில்லை. நமக்குள் சிநேகமுறையில் ஏற்பட்ட சம்பந்தம் முறிந்து விட்டதாக இவை அறிவிக்கின்றனவா ; அல்லது நான் மறுபடியும் உங்களைச் சந்தித்து காங்கிரஸுக்கு யோசனை கூற என்ன வழியை அனுஷ்டிப்பதென்பதில் உங்கள் உதவி பெறலாமென்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா என்பது தெரியவில்லை. பதில் தந்தி அனுப்பினல் சௌகர்யமாகவிருக்கும்''—காந்தி, பம்பாய்.

## இராஜப்பிரதிநிதியின் பதில்

இராஜப்பிரதிநிதியின் அந்தரங்கக் காரியதரிசி டிஸம்பர் மீ 31-ந் தேதி, மகாத்மாஜிக்குப் பின்கண்ட பதிலை அனுப்பினர் :—

"வங்காள, ஐக்கிய மாகாண, எல்லைப்புற மாகாண அவசரச் சட்டங்களைப்பற்றி நீங்கள் 29-ந்தேதி தந்தி அனுப்பியதற்கு இராஜப்பிரதிநிதி தங்களுக்கு வந்தனமளிக்குமாறு எனக்கு ஆக்ஞாபித்திருக்கிறர். வங்காளத்தைப் பொறுத்த வரையில் தங்கள் உத்தியோகஸ்தர்களும், தனிப் பிரஜைகளும் கோழைத்தனமாகக் கொலை

செய்யப் படுவதைத் தடுக்க கவர்ன்மெண்டார் சாத்திய மான எல்லா நடவடிக்கைகளையும் எடுத்துக்கொள்வது அவசியமாக இருந்தது; இன்னமு மிருக்கிறது. இராஜப் பிரதிநிதியும் அவரது கவர்ன்மெண்டாரும் எல்லா ராஜீயக் கட்சிகளுடனும், பொது ஜனங்களில் எல்லாப் பிரிவுகளுடனும் சிநேகமாக இருக்கவும், முக்கியமாக சாத் தியமான வரையில் தாமதமின்றி நடத்திவைக்கத் தீர்மானித் திருக்கும் பெரிய அரசியல் திருத்த வேலையில் எல்லோ ருடைய ஒத்துழைப்பை பெறவும் விரும்புவதாக அறிவிக்கு மாறு இராஜப்பிரதிநிதி தெரிவிக்கிறார். ஆனால்ஒத்துழைப்பு பரஸ்பரமாக விருக்கவேண்டும்.

ஐக்கிய மாகாணத்திலும், எல்லைப்புற மாகாணத்திலும் காங்கிரஸின் நடவடிக்கைகள், இந்தியாவின் நன்மைக்கு அவசியமாயுள்ள மனப்பூர்வமானஒத்துழைப்புக்கு ஒத்திருப் பதாக இராஜப்பிரதிநிதியும் அவருடைய கவர்ன்மெண் டாரும் கருத முடியவில்லை. ஐக்கிய மாகாணத்தை யொட்டி, இப்போதுள்ள நிலைமையில் சாத்தியமான எல்லா நிவர்த்தியையுமளிக்க மாகாண கவர்ன்மெண்டார்வழிதேடிக் கொண்டிருக்கையில், மாகாண காங்கிரஸ் கமிட்டி வரி கொடா இயக்கத்தை நடத்துமாறு கூறி இப்போது அம் மாகாணத்தில் காங்கிரஸ் ஸ்தாபனங்களால் தீவிரமாக நடத்திவரப்படுவது உங்களுக்கு நிச்சயமாகத் தெரிந்திருக் கும். காங்கிரஸ் ஸ்தாபனங்கள் இம்மாதிரி செய்த தால் பொதுவான குழப்பம் ஏற்பட்டு விடாமலும், வகுப்பு ஜாதித்துவேஷம் பரவாமலும் தடுக்க கவர்ன் மெண்டார் நடவடிக்கை எடுத்துக்கெள்வது அவசியமா யிற்று. இயக்கத்தைத் தடுக்காமல் விட்டிருந்தால் நிச்சய மாக இது பரவி யிருக்கும். வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் அப்துல் கபார் கானும், அவருடைய ஆதிக் கத்திலுள்ள ஸ்தாபனங்களும் தொடர்ந்தாப்போல் கவர்ன் மெண்டுக்கு எதிரான வேலைகளை நடத்தி வகுப்புத்துவேஷத் தைக் கிளப்பிவிட்டு வந்திருக்கின்றன. அவரும் அவரு டைய நண்பர்களும் அவர்களுடைய ஒத்துழைப்பைப் பெற சீப் கமிஷனர் எடுத்துக்கொண்ட முயற்சிகளையெல்லாம் பிடி வாதமாக எதிர்த்து, பிரதம மந்திரியின் அறிக்கையை நிராகரித்து பூரண சுயேச்சையை வேண்டுவதாக அறிவித் திருக்கின்றனர்.

கான் அப்துல் கபார் கான் பல பிரசங்கங்கள் செய்தார். அவை புரட்சி செய்யும்படி தூண்டுவதற்காகச் செய்யப் பட்டவை என்பதைத் தவிர வேறு எவ்விதத்திலும் அவை களைக் கருதுவதற்கில்லை. அவருடைய சிஷ்யர்கள் எல்லைப் புற தேசத்தில் தொல்லையை விளைவிக்க முயன்றனர். சீப் கமிஷனர் இந்தியா கவர்ன்மெண்டின் அங்கீகாரத்தின் பேரில் விசேஷப் பொறுமையைக் காட்டிவந்ததோடு, அரசியல் திருத்த விஷயத்தில் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் கொண்டுள்ள உத்தேசத்தை சீக்கிரத்தில் அமுலுக்குக் கொண்டுவர கடைசிவரை கான் அப்துல் கபார் கானு டைய ஒத்துழைப்பைப் பெற முயன்றார். கவர்ன் மெண்டுடன் சீக்கிரத்தில் போராட்டத்தை ஆரம்பிக்க பகிரங்கமாகவும் விரிவாகவும், அவரும், அவருடைய சகாக் களும் செய்து வந்த முஸ்தீப்புகள், அந்தப் பிரதேசத்திலும் எல்லைப்புறங்களிலும் அமைதிக்கு அதிக பாதகத்தை விளைவிக்கச் சக்தி பெறும் வரை கவர்ன்மெண்டார் எவ்வித நடவடிக்கையையும் எடுத்துக்கொள்ளவில்லை. நடவடிக்கை யை எடுத்துக்கொள்ளாமலிருப்பது அசாத்தியமாகிவிட்ட பிறகே அதை எடுத்துக்கொண்டனர். தேசத்தில் சமாதானத் தையும், அமைதியையும் காப்பாற்றும் பொறுப்பை ஏற்ற தாய், மேலே குறிப்பிட்ட நடவடிக்கைகளுக்கு ஜவாப் தாரிகளான நபர்கள் அல்லது ஸ்தாபனங்களுடன் எவ்வித சம்பந்தமும் வைத்துக்கொள்வது அசாத்தியமென்பதை இராஜப்பிரதிநிதி தெளிவுபடுத்த விரும்புகிறார். நீங்கள் சர்வகக்ஷி மகாநாட்டு விஷயமாக இந்தியாவிற்கு வெளியே சென்றிருந்தீர்கள். அங்கு நீங்கள் காட்டியுள்ள மனோபாவத்தைக் கவனிக்கையில், அந்தப் பொறுப்பில் உங்களுக்கு எவ்வித பங்குமிருந்ததென்றாவது அல்லது ஐக்கிய மாகாணத்திலும் எல்லைப்புற மாகாணத்திலும் சமீப காலமாக காங்கிரஸ் நடத்திவரும் காரியங்களை நீங்கள் ஒப்புக்கொள்ளுகிறீர்கள் என்றாவது நினைக்க அவர் விரும்பவில்லை. இது சரியாயின் அவர் உங்களைச் சந் தித்து, சர்வகட்சி மகாநாட்டில் காட்டப்பட்ட ஒத் துழைப்பு உணர்ச்சியை இனியும் காப்பாற்றி வருவதற்கு நீங்கள் எவ்விதம் உதவி செய்யலாமென்று தெரிவிக்கத் தயாராக இருக்கிறார். ஆனால் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டின் சம்மதத்தின் பேரில் வங்காளம், ஐக்கிய மாகாணம், எல்லைப்புற மாகாணம் இவைகளில் இந்தியா கவர்ன்மெண்

டார் எடுத்துக்கொண்டுள்ள நடவடிக்கைகளைப்பற்றி விவாதிக்கத் தாம் சம்மதிக்க முடியாதென்பதை அவர்கள் வற்புறுத்திச் சொல்ல வேண்டியது அவசியமென்று கருதுகிறார். அந்த நடவடிக்கைகள் எந்த நோக்கத்தை உத்தேசித்து எடுத்துக் கொள்ளப்பட்டனவோ அந்த நோக்கம் சித்திக்கும் வரை அமுலிலிருக்க வேண்டியவைதான். அதாவது நல்லாட்சிக்கு அவசியமான சமாதானமும் ஒழுங்கும் ஏற்படும் வரையில் அவை இருந்து வரவேண்டும். உங்களுடைய பதில் கிடைத்ததும் இந்தக் கடிதப் போக்குவரத்துகளின் விவரங்களை வெளியிட்டுவிட இராஜப்பிரதிநிதி உத்தேசித்திருக்கிறார்."

(ஒப்பம்) மீவில்லி,
அந்தரங்கக் காரியதரிசி.

## காந்திஜியின் பதில்

இராஜப்பிரதிநிதி அனுப்பிய பதிலுக்கு மகாத்மா 1-1-32-ந் தேதியன்று அனுப்பிய தந்தியின் விவரம் இது:—

"எனது முன்னைய தந்திக்கு இராஜப்பிரதிநிதி அவர்கள் பதில் அனுப்பியதற்காக அவருக்கு வந்தனம். நட்புத் தன்மையுடன் நான் முன்வந்ததை இராஜப்பிரதிநிதி அவருடைய பெரிய அந்தஸ்துக்கு ஏற்றதல்லாத விதத்தில் நிராகரித்துவிட்டது எனக்கு வருத்தத்தைத் தருகிறது. நான் பிரஸ்தாபித்த அசாதாரண முறைகளைப் பற்றிக் கவர்ன்மெண்டாரின் அபிப்பிராயத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆசையுடன் நான் விளக்கம் பெறக் கருதி இராஜப்பிரதிநிதிக்குத் தந்தி கொடுத்தேன். நான் இவ்விதம் முன் வந்ததைத் பாராட்டாமல் ராஜப் பிரதிநிதி அதை நிராகரித்து விட்டதோடு மதிப்பிற்குரிய எனது சகாக்களின் அபிப்பிராயத்தையும் மறுக்கும்படி கூறியிருக்கிறார். நான் அவ்விதமே யோக்கியமற்ற விதத்தில் அவர்களின் அபிப்பிராயத்தை மறுத்து பேட்டி காண அநுமதி பெற்றுப் போனாலும் தேசத்திற்கு மிக முக்கியமான விஷயங்களைப்பற்றி நான் பிரஸ்தாபிக்கக்கூடாதென்றும் சொல்லியிருக்கிறார்.

அவசரச் சட்டத்தைக் கவனிக்கையில் மற்ற அரசியல் அமைப்பு விஷயம் எனக்கு அவ்வளவு முக்கியமானதாகக்

காணப்படவில்லை. இந்த அவசரச் சட்டங்களைக் கண்டிப்பாக எதிர்த்துப் போராடாவிட்டால் இவை தேசத்திற்கே நாசத்தைத் தேடும் என்பதே எனதபிப்பிராயம். சந்தேகத்துடன் கூடிய ஒரு அரசியலை அடையப்போகிறோம் என்பதற்காகச் சுயமதிப்புள்ள இந்தியர் எவரும் தேசிய உணர்ச்சியைக் கொன்றுவிட மாட்டார்கள்.

எல்லைப்புற மாகாண விஷயமாக சில சம்பவங்களை நீங்கள் தந்தியில் பிரஸ்தாபித்திருக்கிறீர்கள். அதற்காக பொதுஜனங்களால் விரும்பப்படும் தலைவர்களைக் கைது செய்வதற்கும், அசாதாரண சட்டங்களைப் பிறப்பித்து உயிருக்கும் உடமைக்கும் சேதம் விளைப்பதற்கும், நிராயுத பாணிகளான கூட்டத்தார் தங்கள் நம்பிக்கைக்குப் பாத்திரமான தலைவர்களைக் கைது செய்ததைக் கண்டித்து ஆர்ப்பாட்டம் செய்ததற்காக அவர்களைச் சுடுவதற்கும் யாதொரு காரணமுமில்லை.

கான் சாகிப் அப்துல் கபார் பூரண சுயேச்சைவேண்டுமென வற்புறுத்தியது நியாயமான கோரிக்கையே யாகும். அது லாகூரில் நிறைவேற்றிய தீர்மானத்திற்கேற்ப வெளியிடப்பட்ட கோரிக்கையாகும். லண்டனில் நானும் என்னால் கூடியவரை அதைப் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டு முன்பு வற்புறுத்தினேன்.

காங்கிரஸ் கோரிக்கையில் இவ்விஷயமும் அடங்கியிருக்கிறதென்பதைக் கவர்ன்மெண்டார் அறிந்திருந்தும் என்னைக் காங்கிரஸ் பிரதிநிதியாக லண்டன் மகாநாட்டில் கலந்துகொள்ள அழைத்தார்கள் என்பதையும் நான் இராஜப்பிரதிநிதிக்கு ஞாபகமூட்ட விரும்புகிறேன்.

தர்பாருக்குப் போகாமலிருந்தது விசாரணையன்னியில் சிறைப்படுத்தி விடுவதற்குப் போதிய காரணம் என்று எனக்குத் தோன்றவில்லை. கான் சாகிப் ஜாதித் துவேஷத்தைக் கிளப்பி விட்டுக்கொண்டிருந்தால் அது வருந்தத் தக்கதுதான். ஆனால் தாம் அவ்விதம் செய்வதற்கில்லை யென்று அவர் என்னிடம் கூறியிருக்கிறார். அவ்விதமின்றி அவர் கிளப்பி விட்டாரென்றே சொல்லுவதாயின் பகிரங்கமான விசாரணைக்கு அவரைக் கொண்டு வந்திருக்க வேண்டும். அப்பொழுது அவர் பதில் சொல்லியிருக்கக் கூடும்.

ஐக்கிய மாகாணம் சம்பந்தப்பட்ட வரையில் இராஜப் பிரதிநிதிக்கு உண்மை விஷயம் அறிவிக்கப்படவில்லை. வாரங்கொடா இயக்கத்தை அங்கு நடந்த காங்கிரஸ் அனுமதிக்க வில்லை. இருதரத்தினருக்கும் பேச்சுவார்த்தை நடந்து கொண்டிருக்கையில் வரி வசூல் காலம் வந்தது. வாரத்தை ஜமீன்தார்கள் கேட்க ஆரம்பித்தார் கள். ஆகவே பேச்சு வார்த்தை முடியும்வரை வாரங் கொடுப்பதை நிறுத்தி வைத்துக் கொள்ளும்படி காங் கிரஸ் தலைவர்கள் யோசனை சொல்ல வேண்டியதாயிற்று. அதிகாரிகள் பேச்சு வார்த்தை முடியும் வரை தாங்க ளாகவே வசூலை நிறுத்தி வைத்தால் தாங்கள் சொல் லிய யோசனையை வாபீஸ் வாங்கிக்கொண்டு விடுவதாக ஜனாப் ஷெர்வானி சொல்லியிருந்தார். இந்த விஷயத்தை நீங்கள் உங்களுடைய தந்தியில் இலேசாக நினைத்து அலட்சி யம் செய்திருக்கிறீர்கள். ஐக்கிய மாகாணத் தகராறு வெகு காலமாக இருக்கிறது. அது கசக்கிப் பிழியப்பட்டிருக் கும் லட்சக்கணக்கான குடிகளின் க்ஷேமத்தைப் பொருத்த தாக விருக்கிறது. ஜனங்களுடைய க்ஷேமத்தில் உண்மை யில் கவர்ன்மெண்டார் சிரத்தையுள்ளவர்களாக இருந்தால் அவர்களுடைய அபிவிருத்தியையே முக்கிய நோக்கமாகக் கொண்டதாகவும், அவர்களிடத்தில் விசேஷ செல்வாக் குள்ளதாகவுமுள்ள காங்கிரஸின் ஒத்துழைப்பை அவர் கள் வரவேற்றிருக்க வேண்டும். சகிக்க முடியாத பொரு ளாதார பளுவினால் பாதகமடைந்துள்ளவர்கள் அதிலிருந்து விடுதலை பெறுவதற்கு அனுஷ்டித்த இதர எல்லா முறை களும் பலன் தராமற் போய்விடின் கடைசிப் பட்சமாக வரி கொடாமலிருக்கலா மென்பது புராதன காலம் முதல் ஒப் புக்கொள்ளப்பட்ட தர்மம். அமைதி யின்மையை எந்த வழியிலேனும் ஏற்படுத்துவது காங்கிரஸின் நோக்க மென்று சொல்லியிருப்பதை நான் மறுக்கிறேன்.

வங்காளம் சம்பந்தப்பட்டவரை பயங்கரச் செயல் களை ஒடுக்க வேண்டு மென்பதில் காங்கிரஸுக்கும் கவர்ன் மெண்டுக்கும் அபிப்பிராய பேதமில்லை. குற்றங்களை ஒழிப் பதற்கு கவர்ன்மெண்டார் எடுத்துக்கொள்ளும் நடவடிக் கைகளில் காங்கிரஸும் மனப்பூர்வமாக ஒத்துழைக்கும். காங்கிரஸ் பயங்கரச் செயல்களை அழுத்தமாகக் கண்டித்த போதிலும், கவர்ன்மெண்டார் சட்ட பூர்வமாக அவசரச்

சட்ட மூலம் செய்துவரும் பலாத்காரச் செயல்களையும் அது தன்னுடைய கொள்கையின் வரையறைக்குட்பட்டு எதிர்க்க வேண்டும். ஒத்துழைப்பு பரஸ்பரம் இருக்க வேண்டுமென்று உங்களுடைய தந்தியில் சொல்லியிருப்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் கவர்ன்மெண்டார் ஒத்துழைக்க இஷ்டப்படாமல் காங்கிரஸ் மட்டும் ஒத்துழைக்க வேண்டுமென்று இராஜப்பிரதிநிதி கோருவதாக அவருடைய தந்தியிலிருந்து தெரிகிறது. இரண்டு கக்ஷிகளின் அம்சங்களை விவாதிக்கக்கூட முடியாதென்று அவர் சொல்லியிருப்பதற்கு வேறு எவ்வித அர்த்தமும் நான் கொள்ளுவதற்கில்லை. ஜனங்களுடைய கக்ஷியை எனக்குத் தெரிந்த வரை நான் எடுத்துச் சொல்லியிருக்கிறேன். ஆனால் ஒரு முடிவான தீர்மானத்துக்கு வருமுன் எதிர்க் கக்ஷியினர் என்ன சொல்ல விரும்புகிறார்கள் என்பதை அறிந்துகொள்ள விரும்பினேன். அதைத் தெரிந்துகொண்டு காங்கிரஸ் என்ன செய்வதென்ற யோசனையை வெளியிடவேண்டுமென நான் கருதினேன்.

உங்களுடைய தந்தியின் கடைசிப் பாராவில் சொல்லப்பட்டிருக்கும் விஷயம் சம்பந்தப்பட்ட வரையில் எல்லைப்புற மாகாணத்திலோ அல்லது ஐக்கிய மாகாணத்திலோ என்னுடைய சகாக்கள் செய்துள்ள காரியங்களின் பொறுப்பிலிருந்து நான் கழித்துக்கொண்டுவிட முடியாது. ஆனால் நான் இந்தியாவில் இல்லாதபோது அவர்கள் செய்தது என்னவென்பது எனக்கு விரிவாகத் தெரியாது. அதைத் தெரிந்துகொள்ளவும், காங்கிரஸ் கமிட்டிக்கு யோசனை சொல்லவும்தான் நல்லெண்ணத்துடனும் இராஜப்பிரதிநிதியைப் பேட்டி கண்டு அவர் என்ன வழிகாட்டுகிறார் என்பதைத் தெரிந்துகொள்ள விரும்புவதாக அறிவித்தேன். சிநேக பாவத்துடனும், நல்லெண்ணத்துடனும் நான் அனுப்பிய தந்திக்கு அவர் சரியான வகையில் பதில் அனுப்பவில்லை என்பதை நான் அவருக்கு அறிவிக்காமலிருப்பதற்கில்லை. இன்னும் காலங் கடந்துவிடவில்லை யென்றால் அவர் தமது அபிப்பிராயத்தைப் புனராலோசனை செய்து எவ்வித நிபந்தனையும் விதிக்காமல் என்னைக் கண்டு பேசும்படி கேட்டுக்கொள்ளுகிறேன். அவர் தெரிவிக்கும் விஷயங்களை நிஷ்பக்ஷபாதமாகப் பரி

லேனை செய்வேன் ; சிறிதும் தவக்க மன்னரியில் சம்பந்தப் பட்ட மாகாணங்களுக்குப் போய் அதிகாரிகளுடைய உதவி யைக் கொண்டு இரு கக்ஷிகளேயும் கண்டறிவேன். அவ்வி தம் தெரிந்துகொண்ட பின்பு ஜனங்கள் செய்தது பிசகென் முல், காரியக் கமிட்டியினரும் நானும் தவருன விவரங்களை அறிவிக்கப்பட்டுவிட்டதாகவும், கவர்ன்மெண்டார் செய் தது சரியென்றும் நான் முடிவுக்கு வரும் பக்ஷத்தில் அதைப் பகிரங்கமாக ஒப்புக்கொண்டு, அதற்குத் தகுந்த படி. காங்கிரஸுக்கு யோசனை சொல்ல நான் தயங்கமாட் டேன்.

சட்ட மறுப்பு ஏற்பாடு சம்பந்தமாக நான் தற்காலிக மாகச் சொன்ன யோசனையைக் காரியக் கமிட்டி ஒப்புக் கொண்டிருக்கிறது. அந்தத் தீர்மானத்தின் விபரத்தையும் இத்துடன் அறிவித்திருக்கிறேன். என்னைப் பார்க்கலா மென்று இராஜப்பிரதிநிதிக்கு இருந்தால் அந்தத் தீர்மா னத்தை அமுலுக்குக் கொண்டுவருவது நிறுத்திவைத்துக் கொள்ளப்படும்.''

மேற்படி பதிலில் மகாத்மாஜி பிரஸ்தாபித்துள்ள காரி யக் கமிட்டித் தீர்மானத்தின் விவரம் :—

"மேனாட்டுக்கு விஜயஞ் செய்துவிட்டுவந்த விவ ரத்தை மகாத்மா வெளியிட்டதைக் காரியக் கமிட்டியார் கேட்டறிந்தார்கள். வங்காளத்திலும், ஐக்கிய மாகா ணத்திலும், வடமேற்கு எல்லைப்புறத்திலும் அசாதா ரணமான அவசரச் சட்டங்கள் இயற்றப்பட்டதா லும், கான் அப்துல் கபார் கான், ஜெனுப் ஷெர்வானி, பண்டித ஜவஹர்லால் முதலிய பலரைக் கைது செய்ததாலும், எல்லைப்புறத்தில் நிரபராதிகள் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்து பலருக்கு உயிர்ச் சேதத் தையும், காயத்தையும் உண்டுபண்ணியதாலும் ஏற்பட் டுள்ள நிலைமையைக் காரியக் கமிட்டியார் கவனித்தார்கள். மகாத்மா காந்தி இராஜப்பிரதிநிதிக்கு அனுப்பிய தந்திக்கு அவர் அனுப்பிய பதிலேயும் காரியக் கமிட்டியார் பார்த்தார் கள். இவ்வளவையும் பார்த்தால் கவர்ன்மெண்டின் கொள்கை அடியோடு மாறினலொழிய கவர்ன்மெண்டுடன் இனியும் காங்கிரஸ் ஒத்துழைப்பது அசாத்தியம் எனத் தெரிகிறது எனக் காரியக் கமிட்டியார் அபிப்பிராயப் படுகி ருர்கள்.

எவ்விதத்தில், யாரால் செய்யப்பட்டாலும் சரி, சமீபத்தில் வங்காளத்தில் தனிப்பட்டவர்களால் அனுஷ்டிக்கப்பட்ட பலாத்காரச் செயல்களைக் காங்கிரஸ் காரியக் கமிட்டி அழுத்தமாகக் கண்டிக்கிறது. இவ் விஷயத்தில் காங்கிரஸ் யாருக்கும் பின் வாங்காது. அத்துடன் கவர்ன்மெண்டார் அனுஷ்டித்து வரும் அடக்குமுறைச் சட்டங்களையும் காரியக் கமிட்டி பலமாகக் கண்டிக்கிறது.

கோமில்லாவில் இரண்டு சிறுமிகள் கொலைக் குற்றம் செய்தது பெருத்த தேசிய அவமானம் என இக் கமிட்டியார் கருதுகின்றனர். தேச மகாஜனங்கள் காங்கிரஸ் மூலம் அஹிம்ஸா முறையில் சுயராஜ்யம் பெற உறுதி கொண்டிருக்கையில் இவ்விதக் குற்றம் செய்வது தேசத்திற்கே பெரிய தீங்கை விளைக்கிறதாகக் காரியக் கமிட்டியினர் அபிப்பிராயப் படுகின்றனர். ஆனால், ஒரு சிலர் செய்த குற்றத்துக்காக எல்லோரையும் தண்டிக்க வங்காள அவசரச் சட்டத்தைப் பிறப்பித்தது சற்றும் நியாயமல்ல. அவ்விதக் குற்றங்கள் செய்யப்படுவதற்கு என்ன காரணம் என்பதைக் கண்டறிந்து, அதற்குப் பரிகாரம் தேடுவதே தக்க முறையாகும். வங்காள அவசரச் சட்டத்தைப் பிறப்பிக்கக் காரணமில்லை யானால் ஐக்கிய மாகாண அவசரச் சட்டத்தையும், எல்லைப்புற அவசரச் சட்டத்தையும் பிறப்பிக்க யாதொரு காரணமும் இல்லை யென்றே சொல்ல வேண்டும். ஜனுப் ஷெர்வானியையும், பண்டித ஜவஹர்லாலையும், அவர்கள் காந்திஜியோடு கலந்து பேச பம்பாய்க்குச் செல்லுகையில், வழியில் கைது செய்தது அவசரச் சட்டத்தில் குறிப்பிட்ட முறையையும் மீறியதாகும்.

எல்லைப்புறத்தில் துப்பாக்கிப் பிரயோகம் நடத்தியது, வேண்டுமென்றே இரக்கமின்றிச் செய்த காரியமாகுமெனக் கமிட்டி அபிப்பிராயப்படுகிறது. எல்லைப்புற வாசிகள் தைரியத்துடனும் பொறுமையுடனும் நடந்து கொண்டதைக் காங்கிரஸ் காரியக் கமிட்டி பாராட்டுகிறது. பிரதம மந்திரியின் அறிக்கை மிக்க அதிருப்தியை அளிக்கிறது. காங்கிரஸ் கோரிக்கைகளைப் பார்க்கையில் அது போதுமானதல்ல. பாதுகாப்பு, அன்னிய நாட்டு விஷயம், பொக்கிஷம் முதலியவைகளை நிர்வகிக்கப் பூரண சுதந்திரத்துடனும், நாட்டின் நன்மைக்கான பாதுகாப்புகளுடனும் கூடிய பூரண சுயேச்சை கிடைத்தா

லொழிய காங்கிரஸுக்குத் திருப்தி ஏற்படாது. தேசத்தினர் காங்கிரஸே தங்களின் தனிப் பிரதிநிதித்துவம் வாய்ந்த சபையென்பதைக் காட்டவும், தேசியக் கொள்கைப்படி பற்பல வகுப்பாருக்கும் ஏற்ற அரசியல் ஏற்பட்டாலொழிய திருப்தி ஏற்படாதென்று எண்ணக்கூடிய ஒரு நிலை ஏற்படும்படியும், இடைவிடாமல் முயற்சி செய்ய வேண்டுமென இக் கமிட்டி கேட்டுக்கொள்ளுகிறது. இதற்கிடையில் இன்று காந்திஜி இராஜப்பிரதிநிதிக்கு அனுப்பிய தந்தியை அவர் புனராலோசனை செய்து, அவசரச் சட்டங்கள் விஷயமாகவும், சமீபத்தில் நடந்த காரியங்களைப்பற்றியும் தக்க பரிகாரம் தேடினால் காங்கிரஸ் கவர்ன்மெண்டோடு ஒத்துழைக்கச் சித்தமாக விருக்கிறது. மேற்சொன்னபடி திருப்திகரமாக கவர்ன்மெண்டார் பதிலளிக்காவிட்டால், கவர்ன்மெண்டார் டில்லி ஒப்பந்தத்தை ரத்து செய்து விட்டார்கள் என்றே காரியக் கமிட்டி கருதும். அத்தகைய சந்தர்ப்பத்தில் சட்ட மறுப்பை ஆரம்பிக்கும்படி காரியக் கமிட்டி தேசத்தினரைக் கேட்டுக் கொள்ளுகிறார்கள். இவ் வகையில் கீழ்க்கண்ட நிபந்தனைகளை மனதில் கொள்ள வேண்டும் :—

“இந்தப் போராட்டத்தின் அஹிம்சைத் தன்மையைப் பொதுஜனங்கள் பூரணமாக அறிந்துகொண்டு உயிரையும், உடைமையையும் இழக்கவும், மற்றெல்லாக் கஷ்டங்களையும் சகிக்கவும் தயாராக இல்லாவிட்டால் எந்தக் கிராமமும், எந்தத் தாசிலும், எந்த ஜில்லாவும், எந்த மாகாணமும் சட்டமறுப்பு இயக்கத்தை ஆரம்பிக்க வேண்டியதில்லை. மனம், வாக்கு, காயம் ஆகிய மூன்றிலும் அஹிம்சையை அனுஷ்டிக்கவேண்டும். எவ்வளவு ஆத்திரமூட்டப்பட்டாலும் இந்த விரதத்திலிருந்து பிறழக் கூடாது. எதிர்ப்பவரிடம் பழிக்குப் பழி வாங்கவோ அல்லது அவர்களுக்குத் துன்பம் விளைவிக்கவோ இந்த இயக்கம் ஆரம்பிக்கப்படுவதாக எவரும் நினைக்கக் கூடாது. இது தன்னலத் தியாகத்திற்காகவும், ஆத்ம பரிசுத்தத்திற்காகவும் ஏற்பட்டதாகும்.

கவர்ன்மெண்டு உத்தியோகஸ்தர்களையும் போலீசாரையும் தேசியவாதிகள் அல்லாதவரையும் துன்பப்படுத்தும் நோக்கத்துடன் சமூக பகிஷ்காரத்தை

ஆரம்பிக்கக் கூடாது. அவ்விதம் செய்வது அஹிம்ஸா தர்மக் கொள்கைக்கே விரோதமானதாகும்.

எல்லாச் சந்தர்ப்பங்களிலும் பிரிட்டிஷ் ஜவுளியையும், மற்றெல்லா அன்னிய நாட்டு ஜவுளிகளையும் பகிஷ்கரித்தே தீரவேண்டும். சுதேசி ஆலைகளில் செய்யப்பட்ட ஆடைகளையும் விலக்கிக் காங்கிரஸ்காரர்கள் கைராட்டினத்தில் நூற்கப்பட்ட நூலைக்கொண்டு கைத்தறியில் நெய்யப்பட்ட ஆடைகளையே உபயோகிக்கவேண்டும். கள்ளு, சாராயக் கடைகள் மறியலையும், மும்முறமாக நடத்தி வரவேண்டும். இவ்வேலையில் பலாத்காரம் சிறிதும் ஏற்படாமலிருக்க இதை விசேஷமாக ஸ்திரீகளே செய்ய வேண்டும்.

லைசென்ஸில்லாமல் உப்பு தயாரிக்கும் வேலை மீண்டும் துவக்கப்பட வேண்டும். ஊர்வலங்களையும், மற்ற கூட்டங்களையும் நடத்தினால் அவை கலைக்கப்படுவதற்காகத் தடியடியும், துப்பாக்கிப் பிரயோகமும் நடக்குமானால், அவற்றை இருந்த இடத்திலிருந்து, உயிர்போகும் வரையில் தாங்கிக் கொள்வதற்கான ஆற்றல் படைத்தவர்களே அவற்றில் கலந்துகொள்ள வேண்டும்.

பிரிட்டிஷ் சரக்குகளையும், கம்பெனிகளையும் மும்முறமாகப் பகிஷ்கரிக்கவேண்டும். ஒழுக்கமற்ற சட்டங்களையும், பொது ஜனங்களுக்குப் பாதகம் விளைவிக்கும் சட்டங்களையும், எங்கெங்கு வசதி யிருக்கின்றதோ, எங்கெங்கு உசிதமெனத் தோன்றுகிறதோ அங்கெல்லாம் மீறி நடக்கலாம். அவசரச் சட்டப்படி பிறப்பிக்கப்படும் முக்கிய உத்தரவுகளையும் மீறி நடக்கலாம்."

## வைஸ்ராய் கை விரிக்கிறார்

2-ந் தேதியன்று வைஸ்ராய் மகாத்மா காந்திக்குப் பதில் தந்தி கொடுத்தார். அதன் விவரம் பின்வருமாறு:—

" தங்கள் தந்தி கிடைத்தது. அதில் தாங்கள் சில நிபந்தனைகளைக் குறிப்பிட்டிருக்கிறீர்கள். அவை நிறைவேற்றிவைக்கப்படாவிடில் மறுபடியும் சட்ட மறுப்பைத் தொடங்கும்படி தங்களது யோசனையின் பேரில் காங்கிரஸ் காரியக் கமிட்டி தீர்மானித்திருக்கிறது. அரசியல் சீர்திருத்தத்தைத் துரிதமாக நடத்திவைக்க வேண்டுமென

பிரிட்டிஷ் அரசாங்கத்தார் கருதியிருக்கையில் காரியக் கமிட்டியின் இத்தகைய தீர்மானம் மிகவும் வருந்தத்தக் கறுதான்.

சட்டத்தை மீறிக் காரியங்கள் செய்ய முற்படும் எந்த ராஜீய ஸ்தாபனத்தின் பயமுறுத்தலையும் ஏற்று, அதன் நிபந்தனைகளுக் குட்பட்டு, பொறுப்பறிந்த எந்தக் கவர்ன் மெண்டும் நடந்துகொள்ளத் தயாராக இராது. மற்றெல்லா வழிகளையும் பார்த்துத் தீர்த்த பின்னர்தான் கவர்ன்மெண் டார் கடுமையான நடைமுறைகளை எடுத்துக்கொண்டனர். ஆகவே இது விஷயமாகத் தங்களைக் கலந்துகொண்டுதான் எதையும் செய்யவேண்டுமென்பதற்கு கவர்ன்மெண்டார் ஒப்புக்கொள்ள முடியாது.

சட்ட மறுப்பு ஆரம்பிக்கப்படும் என்ற பயமுறுத்த லினிடையே இராஜப்பிரதிநிதி தங்களை நேரில் அழைத்து அநுகூலமாக எதுவும் பேசமுடியும் என்று தாங்கள் நம்பு வீர்கள் என்பதில் எனக்கும், என்னுடைய கவர்ன்மெண்டுக் கும் ஒரு சிறிதும் நம்பிக்கையில்லை.

காங்கிரஸ் அறிவித்துள்ளபடி சட்ட மறுப்பு மீண்டும் தொடங்கப்பட்டு அதன் காரணமாக நாட்டில் ஏற்படக் கூடிய எல்லா விளைவுகளுக்கும் காங்கிரஸே ஜவாப்தாரியாக இருக்கும் என்பதையும், அதனை யடக்குவதற்கான எல்லா அவசியமான நடைமுறைகளையும் கவர்ன்மெண்டார் எடுத்துக்கொள்ளுவர் என்பதையும் அவர்கள் அறிய வேண்டும்.''

## காந்திஜியின் கடைசித் தந்தி

3-ந் தேதியன்று காந்திஜி தமது இறுதித் தந்தியை இராஜப்பிரதிநிதிக்கு அனுப்பினார். அதில் அவர் குறிப் பிட்டிருந்ததாவது :—

"தங்கள் தந்தி கிடைக்கப் பெற்றேன்; வந்தனம். தாங்களும், தங்கள் கவர்ன்மெண்டாரும் செய்துள்ள முடி வுக்கு நான் வருந்தாமலிருக்க முடியவில்லை. யோக்கிய மான மனக்கருத்தை வெளியிட்டதைத் தாங்கள் "பய முறுத்தல்" எனத் தவறாக அழைத்திருக்கிறீர்கள். சட்ட மறுப்புப் போர் மூர்த்தன்யமாக நடந்து கொண்டிருக் கையிலே டில்லி சமரஸப் பேச்சுகள் தொடங்

நடைபெற்றன என்பதையும், ராஜி உடன்படிக்கை ஏற்படுகையில் சட்ட மறுப்புப் போர் கைவிடப்படவில்லையென்பதையும், அது நிறுத்தித் தான் வைக்கப்பட்டதென்பதையும் நான் கவர்ன்மெண்டாருக்கு ஞாபகமூட்டுகிறேன். நான் லண்டனுக்குப் புறப்படுவதற்கு முன்பு, அதாவது, கடந்த செப்டம்பர் மாதத்தில் தாங்களும் தங்களுடைய கவர்ன்மெண்டும் இந்த நிலைமையை ஏற்றுக்கொண்டீர்கள். இந்த நிலைமை தங்களுக்குப் பிடிக்கவில்லையென்றால் அவர்கள் அதை அப்பொழுதே வெளியிட்டு, என்னை லண்டனுக்கு அனுப்பாமலிருந்திருக்கலாம். ஆனால் என்னை லண்டனுக்கு அனுப்பியது மாத்திரமல்லாமல், தங்களது பூரா ஆசியையும் பெற்ற நான் புறப்பட்டுச் சென்றேன். என்னைக் கேட்டுக்கொண்டுதான் கவர்ன்மெண்டார் எந்த விஷயத்திலும் முடிவு செய்ய வேண்டுமென்று நான் எங்கே, எந்த இடத்தில் சொல்லியிருக்கிறேன்? ஆகவே இதுவும் சுத்த தவறு. ஆனால் ஒரு விஷயத்தைமட்டும் நான் சொல்ல முடியும். அதாவது பொது ஜனங்களின் அபிப்பிராயத்துக்கு மதிப்பு காட்டி நடக்கும் எந்த அரசாங்கமும், பொது மக்களின் நன் மதிப்புக்குப் பாத்திரமாக விளங்கும் ஸ்தாபனங்களையும், அவற்றைச் சேர்ந்த பிரதிநிதிகளையும் அழைத்து, அவர்களது யோசனைகளைக் கேட்டே எந்தக் காரியத்தையும் செய்யுமென்று மட்டும் சொல்லுவேன். யாருடைய கட்சி சரி என்பதைக் காலம்தான் நிர்ணயிக்க முடியும். பகைமை உணர்ச்சி எதுவுமில்லாமல், அஹிம்ஸா தர்மத்தைப் பூரணமாக அனுஷ்டித்துப் போரை நடத்த எல்லா முயற்சிகளும் செய்யப்படும் என்று கவர்ன்மெண்டாருக்கு உறுதி கூறுகிறேன். எல்லா விளைவுகளுக்கும், காங்கிரஸும் அதன் பிரதிநிதியாகிய நானும் தான் பொறுப்பாளி என்று தாங்கள் எனக்கு நினைவூட்டியிருக்க வேண்டிய அவசியமேயில்லை.''

சௌகரியத்தை முன்னிட்டு இத் தந்திகளெல்லாம் ஒருங்கே திரட்டித் தரப்பட்டிருக்கின்றன. இத் தந்திப் போக்குவரத்து ஆறு நாட்களுக்கு நடைப்பெற்றது. உண்மை என்னவெனில் காந்திஜிக்கும், இர்வினுக்கும் ஏற்பட்ட ஒப்பந்தத்தைவிரும்பாத சில பிற்போக்காளர் சீமையில் ஒன்று கூடிக்கொண்டு இந்திய தேசியவாதிகளின் கோரிக்கைகளை முறியடிக்க வரிந்து கட்டிக்கொண்டு கிளம்பினர் என்பதை இங்கு குறிப்பிட வேண்டியதவசியம்.

இதனால்தான் லண்டன் மகாநாட்டிலும் மகாத்மாவின் கருத்துகள் காலின்கீழ்ப் போட்டு மிதித்துத் துவைக்கப்பட்டன. சர்வகட்சி மகாநாட்டில் இந்தியாவின் வியாபாரப் பிரதிநிதியாக வீற்றிருந்த மிஸ்டர் பெந்தால் வெளியிட்ட ஒரு "ரகஸிய" சுற்றறிக்கையில் இந்த உண்மையை நன்கு விளக்கினார்? இந்தியாவின் தேசிய அபிலாஷைகளை நசுக்கிக் கொல்லவேண்டுமென்ப தற்கான சதி ஸிம்லாவிலேயே தொடங்கப்பட்டது.

காந்தி-வில்லிங்டன் தந்திப் போக்கு வரத்துக்கள் முறிந்ததே போரின் ஆரம்பமாகும். காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டத்திற்காக வந்திருந்த தலைவர்கள் எல்லாரும் தம் தம் ஊருக்குத் திரும்பிச் சென்றனர். 1931-ம் வருஷம் மார்ச்சு மாதம், 4-ந் தேதி யன்று எந்த நிலையில் போர் நிறுத்தப்பட்டதோ அதே நிலையில் கவர்ன்மெண்டு மீண்டும் அதைத் தொடங்கிவிட்டது. காந்தி-இர்வின் ஒப்பந்த காலத்தை மறுபடியும் போருக்குத் தயார் செய்துகொள்ளும் காலமாகவே துரைத்தனம் பயனபடுத்திக்கொண்டது. இக்காலத்தில் அது பல்லாயிரக் கணக்கான தடிகளுக்கு ஆர்டர் செய்து வரவழைத்து வைத்துக்கொண்டிருந்தது. ஏற்கனவே மூன்று அவசரச் சட்டங்கள் நாட்டில் லீலைகள் புரிந்து வந்தன. இவை போதாவென்று வில்லிங்டன் பிரபு எண்ணிறந்த அவசரச் சட்ட பூதங்களைச் சிருஷ்டித்துத் தயாராக வைத்துக்கொண்டிருந்தார். "காங்கிரஸை நசுக்கியே தீருவேன்" என்று அவர் கை வரிசை காட்டிக் கொக்கரித்து நின்றார். மீசை முறுக்கி முண்டா தட்டி, மகா காளி அவதாரம் பூண்டு, சாந்த மகாமுனியான மகாத்மாவை வலுச்சண்டைக் கிழுத்தார். ஆனால் அந்தச் சமயத்தில்கூட நமது புருஷோத்தமர் "பதறாதே, பொறு, சமரஸத்திற்கு இடமுண்டா?" என்று கேட்டார். எனினும் பயனில்லாமல் போய்விட்டது.

கப்பலிலிருந்து இறங்கியது முதற்கொண்டே காந்திஜி மீண்டும் சிறைபுகத் தம்மைத் தயார் செய்துகொண்டார். "வைஸிராயின் மாளிகையில் கால் வைக்க நான் அருகதையுடையவன் எனக் கருதப்பட்டு எனக்கு அழைப்பு வந்தால் நான் அங்கு செல்லத் தயாராக விருக்கிறேன்; அல்லது சிறையில் அடி வைக்கத்தான் நான் தகுதியானவன் எனக் கூறி சர்க்கார் என்னைச் சிறைக்கழைப்பாராகில் அங்கு

செல்லவும் நான் தயார்'' என்று அவர் ஓர் பத்திரிகை நிருபரிடம் கூறி தமது உள்ளக்கருத்தை வெளியிட்டார்.

அவர் தங்கியிருந்த மணிபவன் கட்டிடத்தை ஜனத் திரள் சூழ்ந்து கொண்டது. அவரைத் தரிசிக்க வேண்டு மென மக்கள் ஆவலுற்றனர். ஒருவாரமாக ராத்திரி பகல் ஓய்வில்லாமல் அவர் சமாதானத்திற்கு வழியுண்டா என்று ஆராய்ந்து பார்த்தார். ஆனால் அரிப்பெடுக்கும் வில்லிங் டனின் ஆயுக்கை அவரை வலுச் சண்டைக்கிழுத்தது. டில்லி ஒப்பந்தம் தூள் தூளாயிற்று.

திங்களன்று தான் கப்பலை விட்டிறங்கிய காந்திஜி, மறுபடியும் 4-ந் தேதி திங்களன்று சிறைச் சாலையாம் தவச்சாலைக்குள் செல்ல வேண்டி நேரிட்டது. திங்களின் விசேஷம் தான் என்னே! திங்கள் கிழமைதான் எப்பொழுதும் காந்திஜியைச் சிறைக்கழைக்கின்றது. ஆம்! தர்ம சந்திரனுக்கும் திங்களுக்கும் அதிகத் தொடர் புண் டல்லவா? மற்ற கிழமைகளை யெல்லாம் விட்டு விட்டு, திங் களைத்தானே அவா தமது மௌன தினமாகப் பொறுக்கிக் கொண்டிருக்கிறார். ஆகவே திங்களும் அவருக்குத் தனது நன்றியைச் செலுத்தத் தவறவில்லை. முதல் சத்தியாக்கிரகப் போரிலும் திங்களன்று தான் அவர் சிறை புகுந்தார்; இந்தத் தடவையும் அதே தினத்தில்தான் சிறை சென்றார்.

எந்தச் சட்டத்தைக் கொண்டு மகாத்மாவைக் கைது செய்வதெனப் பார்த்தது துரைத்தனம்; பழைய, உளுத்துப் போன ஒரு சட்டம் தான் அதற்குக் கிடைத்தது. "1827-ம் வருஷத்திய 25-வது ரெகுலேஷன்'' என்று அதற்குப் பெயர்! பாரத நாடு அயர்ந்து தூங்கிக்கொண்டிருக்கை யில், பாரதத்தின் சொத்தான, ஏன் உலகத்தின் சொத் தான காந்திஜியை, விலையில்லா மாணிக்கத்தை, அரசாங்கம் அபகரித்துச் சென்றது. மறுநாள் பொழுது விடியாதா அல்லது அவர்தான் என்ன, இரகஸ்யமாக மறைந்து விடுவாரா? இராத்திரியில், அவரது தூக்கத்தைக் கெடுத்து, அவரை எழுப்பிக் கைது செய்யதிராவிட்டால் பிரிட்டிஷ் ஆட்சி கவிழ்ந்து போயிருக்கும் போலும்! இருட்டிலேயே பிடித்து, அவரை இருட்டுச் சிறை யிலேயே அடைத்தது அரசாங்கம். அதே சமயத்தில் சர்தார் வல்லபாயும் கைது செய்யப்பட்டதைக் கேள்வி

யுற்று மகாத்மா சிரித்தார். அவர் பிரிந்த காட்சி கல்மனதையும் கரைப்பதாக விருந்தது. கண்ணீரும், கம்பலையுமாக நின்ற தமது தர்மபத்தினி, கஸ்தூரிபாயை அவர் கட்டித் தழுவினர். மற்றவர்களையும் அன்புடன் அணைத்துக் கொண்டார். காந்திஜி அவர்களைத் தட்டிக் கொடுத்து, ஆறுதல் கூறினார். ஸ்ரீமதி மீராபாய் முழந்தாளிட்டு, காந்திஜியின் இரு கரங்களையும் பிடித்துத் தன் கண்களில் ஒத்திக் கொண்டார்; அவரது பாதத்தைப் பலதடவை முத்தமிட்டார்; ஏனையோரும் அவர் பாத கமலங்களைத் தொட்டு வணங்கினர். பிறகு போலீஸார் வண்டியில் ஏறிக்கொண்டு எரவாடா சிறைக்குச் சென்றார். இப்படியாக "போதுமான நல்ல காரணங்களை முன்னிட்டு" மிருக பலத்திமிர் பிடித்த ஒரு அரசாங்கம், ஏகாதிபத்தியத் திமிர் கொண்ட ஒரு துரைத்தனம், ஒரு மகானை, ஒரு மகாத்மாவை, ஒரு புண்ணிய புருஷரை, ஒரு முனி புங்கவரை, சத்தியாவதாரத்தை, சாந்தஸ்வரூபத்தைப் பிடித்து, அவரது சரீரத்தை ஓர் இருட்டறையில் தள்ளிப் பூட்டிவிட்டது. ஆனால் அவரது சக்தியைச் சிறைப்படுத்த அதனால் முடியவில்லை.

சரி, தேசம் பூராவும் சட்ட மறுப்புப் போரில் மும்முரமாக இறங்குவதற்கு முன்னரே, சர்க்கார் ஏதோ ஒரு சாக்குப் போக்கைச் சொல்லி தேசத்தலைவர்களையெல்லாம் சிறைப்படுத்திவிட்டது. காங்கிரஸ் ஸ்தாபனங்களையெல்லாம் சட்ட விரோதமான சபைகள் என அறிவித்தது. வில்லிங்டனின் இரும்புக் கை ஆட்சி நன்கு வேலை செய்ய வாரம்பித்தது. எங்கு பார்த்தாலும் அடக்கு முறைகள் கையாளப்பட்டன; அவசரச் சட்டங்கள் வாரி இறைக்கப்பட்டன; தலைவர்களுக்குச் சிறை; பத்திரிகைகளுக்கு வாய்ப்பூட்டு; தொண்டர்களுக்குத் தடியடி; எங்கும் துப்பாக்கிப் பிரயோகம்; உடைந்த மண்டைகள்; ஓடிய இரத்த வெள்ளம். இதுதான் பாரத தேசம் கண்ட காட்சி. "இதோ ஒழித்தேன்; கிள்ளிப்போட்டுவிட்டேன் சத்தியாக்கிரக இயக்கத்தை" என்று வீறு பேசினார் வில்லிங்டன். ஆனால் பலன் என்ன? 1921-ம் வருஷத்தில் முப்பதாயிரம் பேர்கள் போரிலிறங்கினர் என்றால் இப்பொழுதோ தொண்ணூறாயிரம் பேர்கள் போர் முனையில் குதித்தனர். எத்தனையோ ஆண்களும், எத்தனையோ ஸ்திரீ ரத்னங்களும், குழந்தைகள் கூட சிறை புகுந்தனர். அடிபட்டவர்களின் தொகை

யைக் கணக்கிடுவ தென்பது சாத்தியமல்ல; ஆனால் சிறைப்பட்டவர்களைவிட மூன்று அல்லது நான்கு பங்குக்குக் குறையாதென்று சொல்லலாம்.

சிறைகளில் சத்தியாக்கிரகக் கைதிகள் அடிக்கபபட்டனர்; இன்னும் பலவிதங்களில் துன்புறுத்தப்பட்டனர். கதர் தரித்துக்கொண்டு, காந்தி குல்லாய் அணிந்துகொண்டு தெருவில் செல்ல யோக்கியதையில்லை. இந்த உடையில் தெருவில் தோன்றியவர்களை யெல்லாம் போலீசார் பிடித்துக் கண்டபடி திட்டினர்; தடிகளைக் கொண்டு தாக்கினர்; இந்த அக்கிரமத்தைக் கேளுங்கள். ஓரிடத்தில் ஒரு வக்கீல் வீதி வழியே போய்க் கொண்டிருந்தாராம்; போலீசார் அவரைத் தேக்கி, அவரது ஊர், பெயர்களை விசாரித்தனராம். அவர் அவற்றை வெளியிட மறுத்தாராம். உடனே என்ன நடந்தது தெரியுமா? போலீஸ் புலிகள் அவரது தலைமயிரைப் பிடித்திழுத்து துன்புறுத்தினவாம். என்ன அதிக்கிரமம்! அவசரச் சட்டங்களுக்கு வரம்பேயில்லை. ஒரு விசேஷ அவசரச் சட்டம். இது என்ன சொல்லிற்று தெரியுமா? இதன்படி எந்தச் சத்தியாக்கிரகியும் ஒவ்வொரு நாளும், ஒரு குறிப்பிட்ட நேரத்தில் போலீசார் முன்பு ஆஜர் கொடுக்கவேண்டுமென நோட்டீஸ் பிறப்பிக்கப்படலாம் இப்படிச் செய்ய சத்தியாக்கிரகி தவறிவிட்டால் 2 வருஷச் சிறை; தாங்கமுடியாத அபராதம் வேறு. எவரையும் ஒரு குறிப்பிட்ட இடத்தில் வசிக்கக் கூடாது என உத்தரவிடலாம்; உடனே அந்த இடத்தை விட்டு வெளியேற வேண்டும் என உத்திரவு பிறப்பிக்கலாம்

1930—31-ல் நடந்த சத்தியாக்கிரகப் போரைவிட இந்தத் தடவை போர் இன்னும் கடுமையாக இருந்தது; அடக்குமுறை அமுலும் அதிகமாகத் தானிருந்தது; கஷ்டங்களும் பன்மடங்கு மிகுந்திருந்தன. மக்கள் காட்டிய வீரத்துக்கும், தைரியத்துக்கும் எல்லையேயில்லை. மறியல், ஹர்த்தால், தேசிய வாரக் கொண்டாட்டம், பிரிட்டிஷ் சாமான் பகிஷ்காரம், சுதேசிய உணர்ச்சி இவை யாவும் நாடெங்கும் ஜிமுதமாக நடந்தன. காங்கிரஸ் ஆபீஸ்களெல்லாம் போலீசாரால் முற்றுகை யிடப்பட்டுக் கைப்பற்றப்பட்டன.

ஏப்ரல் மாதத்தில் டில்லியில் விசேஷ காங்கிரஸ் ஒன்று கூட்டப்பட்டது. இதில் காங்கிரஸாருக்கும் போலீசாருக்கும் பெருத்த போராட்ட மூண்டது. காங்கிரஸை நடைபெறாமல் செய்ய சர்க்கார் தன்னாலியன்ற வரையில் முயன்றது; பிரதிநிதிகளை யெல்லாம் கண்ட கண்ட இடத்திலேயே தாக்கி யடித்தது. அப்படியும் பலர் மாற்றுடையுடன் காங்கிரஸ் கூடுமிடத்தை அடைந்துவிட்டனர். இந்தக் காங்கிரஸ் ரகஸ்யமாகவே நடந்ததெனலாம்.

பிஹாரில் வெளி நாட்டுச் சர்க்கரை, மண்ணெண்ணெய், சிகரெட்டுகள், பிரிட்டிஷ் பாங்கிகள், இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் இவை யெல்லாம் பகிஷ்கரிக்கப்பட்டன. நாட்டில் ஆங்காங்கு நடந்து வந்த ஆசிரமங்களை தரைத்தலம் சூறையாடியது இப்போராட்டத்தில் ஒரு புதிய ஆயுதமாகும். ஆந்திர தேசத்தில், சீதா நகரத்திலுள்ள டாக்டர் சுப்பிரமணியத்தின் ஆசிரமத்தில் போலீசார் புகுந்து அங்கிருந்த சாமான்களையெல்லாம் நாசமாக்கினர். பிகாரில் நடந்த முற்றுகைகள் காரணமாக 54 பேர்கள் கைதியாயினர்; இதில் ஒன்பது பேர்கள் ஸ்திரீகள்.

பல இடங்களிலும் ராணுவப் போலீஸ் முஸ்தீப்பு பலமாக விருந்தது. பல இடங்களில் தண்டப் போலீஸ் நிறுத்தப்பட்டு, மக்களிடமிருந்து தண்டவரி வசூலிக்கப்பட்டது.

தொண்டர்களைப் போலீசார் ஹிம்ஸித்த வகையை எந்த வார்த்தைகளால் எடுத்துரைப்பது? அவர்களது ஆஸன வாயில் மிளகாய்கள் திணிக்கப்பட்ட கொடுமையைச் சொல்வதா? குச்சிகளைச் சொருகித் துன்புறுத்தியதை வெளியிடுவதா? அவர்களது மர்மஸ்தானங்களைப் பிடித்துக் கசக்கிய அட்டூழியத்தைப்பற்றிக் கூறுவதா? அப்பப்பா! என்ன கொடுமைகள்.

சில்ஹெத் என்னுமிடத்தில் ஜனங்கள் வாரம்கொடுக்க மறுத்ததற்காக அவர்களது வீடுகளைத் தரைமட்டமாக்க யானைகளும் உபயோக படுத்தப்பட்டன. தாம்லுக் என்ற இடத்தில் வரிகொடா இயக்கம் வலுத்திருந்ததால், அவ்விடத்திய காங்கிரஸ் மாளிகை இடித்துத் தள்ளப்பட்டது. பம்பாய் மாகாணத்தில் சீமைப்பருத்தி வியாபாரம் படுத்

துப்போய் விட்டது. மறியல் வேலை இங்கு மும்முறமாக நடைபெற்றது. நாகபுரியில் டெப்டி கமிஷனர் ஆபீஸின் மீது தேசீயக்கொடி பறக்கவிடப்பட்டது. திலகர் வித்யாலயத்திற்குச் சொந்தமான 8000 ரூபாய் மதிப்புகொண்ட சொத்துக்கள் 700 ரூபாய்க்கு விற்கப்பட்டன. இம் மாகாணத்தில் வன சத்தியாக்கிரகம் மிக உக்கிரமாக நடந்தது.

சூரத் ஜில்லாவில் பயங்கர ஆட்சி நிலவியிருந்தது. சூரத் நகரில் பூட்டி ஸீல் வைக்கப்பட்டிருந்த ஒரு கட்டிடத்தை உள்ளூர் ஜில்லா மாஜிஸ்திரேட் திறந்து, அதிலிருந்த 3000 ரூபாய் மதிப்பான சொத்துக்களை 400 ரூபாய்க்கு விற்றார்; தவிர ஸ்ரீமான் மேத்தா என்பவரால் எழுதப்பட்ட மதசம்பந்தமான புத்தகங்களில் ஆயிரத்தைக் கொளுத்திவிடும்படி உத்தரவு செய்தார்.

போர்ஸாத் தாலுகாவில் இருபத்தேழு கிராமங்கள் கிஸ்தி செலுத்த மறுத்துவிட்டன; ஜலம்புகள் தாலுகாவில் 8 கிராமங்கள் இதேமாதிரி தீர்வையை மறுத்தன. ஜூன் மாத முடிவிற்குள் 345 ஏகரா நிலங்கள் பறிமுதல் செய்யப்பட்டன. சூரத் ஜில்லாவில் பலர் கைது செய்யப்பட்டனர்; சட்ட விரோதமான ஜப்திகள் நடைபெற்றன; தொண்டர்கள் நையப் புடைக்கப்பட்டனர். கர்நாடகத்தில் பத்தாயிரம் பேர்கள் ஓர் உப்பளத்தை முற்றுகையிட்டு இருபதாயிரம் மணங்கு உப்பை எடுத்துச் சென்றனர்.

கேரளத்தில் நடந்த ஓர் அதிக்கிரமத்தை என்னென்று சொல்வது? ஸ்ரீமான் எல். எஸ். பிரபு என்பவர் சிறையிலிருந்தார். தலைச்சேரி சப்-டிவிஷனல் மாஜிஸ்திரேட் மேற்படியாரின் மனைவி கழுத்திலிருந்த மாங்கல்யச் சரடை கோர்ட்டில் பகிங்கரமாக அப்புறப்படுத்தும்படி உத்திரவிட்டார். இந்த மடத்தனமான செய்கை காரணமாக மக்களிடையேயிருந்த மனக்கொதிப்பு ஏற்பட்டுக் கடைசியில் கவர்ன்மெண்டார் மன்னிப்புக் கேட்டுக்கொள்ளும்படியாயிற்று. மற்ற மாகாணங்களில் நடந்த யாவும் தமிழ் நாட்டிலும் நடந்தது. எல்லா மாகாணங்களிலும் காங்கிரஸ் கமிட்டிகளுக்குச் சொந்தமான ஏராளமான தொகைகள் சர்க்காரால் பறிமுதல் செய்யப்பட்டன.

# அத்தியாயம் 2

## மகாத்மாவின் மகா தியாகம்

இவ்வளவையும் விடுத்து இனி நாம் இந்தியாவின் சரித்திரத்திலேயே மிக முக்கியமானதாகக் கருதப்படும் ஓர் சம்பவத்தில் கவனஞ் செலுத்தவேண்டி யிருக்கிறது. அது தான் மகாத்மாவின் பிராயோபவேசம்.

1932-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 13-ந் தேதி காலை "சாகும் வரையில் பட்டினி கிடப்பேன்" எனக் காந்திஜி விரதம் பூண்ட செய்தி காட்டுத் தீ போல் பாரத நாடு முழுதும் பரவியது. அதுகேட்டு முப்பத்தைந்து கோடி இந்திய மக்களும் திடுக்கிட்டுப் போயினர். அந்த உபவாஸப் பேரலை இங்கிலாந்தின் கரையையும் போய் மோதியது; வெகு தூரத்திலுள்ள அமெரிக்கா தேசத்திலும் அதன் எதிரொலி கேட்கப்பட்டது. உலகம் ஆழ்ந்திருந்த பிரமிப்பில், மகாத்மாவின் உபவாஸ விரதத்தின் தத்துவத்தையும், அதன் உத்தேசத்தையும் அதனால் உணர்ந்து கொள்ள முடியவில்லை. ஆனால் அந்த வாரம் முடிவதற்குள்ளாகவே அற்புதமான செய்திகளை நாம் கேள்வியுற நேர்ந்தது.

காந்திஜி இத்தகைய கடுமையான உபவாஸத்தில் இறங்கவேண்டிய காரண மென்ன என்பதை நாம் ஆராய வேண்டுமாயின், லண்டன் நகரில் நடந்த இரண்டாவது ஸர்வ கக்ஷி மகாநாட்டுச் சரித்திரத்தைக் கவனிக்கவேண்டும். ஆஹா! அந்த மோசம் மிகுந்த நாடகத்தில் எவ்வளவு தந்திரமும், எவ்வளவு சூழ்ச்சியும் தாண்டவ மாடின? சிறுபான்மையோர் ஸப்-கமிட்டியின் கூட்டம் நடக்க வாரம்பித்தது. தங்களுக்குள் உள்ள சண்டை, சச்சரவுகளை மகாநாட்டில் விவாதித்து அதைக் கண்டு உலகம் எள்ளி நகை யாடும்படியாக விட காந்திஜி விரும்ப வில்லை. ஆகவே மகாநாட்டை ஒத்தி வைத்து, இவ் விஷயங்களை அந்தரங்கமாக ஆலோசித்து, முடிவு செய்யலாமென அவர் பிரேரித்தார். அவர் தலைமை வகித்து இந்த விவாதங்களை நடத்த வேண்டுமென அழைக்கப்பட்டார். தம்மைப் பிடித்துக் கொள்ள கூண்டு தயாராக வைக்கப்பட்டிருந்ததையும்,

காட்சிகளின் வெறும் மாயத் தன்மையையும் அவர் கண்டு கொண்டார். இருந்தாலும் சோதனையை எதிர்த்து நிற்க அவர் நிர்மானித்தார்.

சட்ட சபைகளில் தாழ்த்தப்பட்டவர்களுக்கு சில ஸ்தானங்கள் அளிக்கப்படவேண்டுமென்ற உரிமை காந்திஜியின் முன்பு வற்புறுத்தப்பட்டது. மற்ற வகுப்புக்கள் ஒப்புக்கொண்டால் தாழ்த்தப்பட்டவர்களுக்குச் சில ஸ்தானங்கள் அளிக்கப்படுவதைப்பற்றி மகாத்மா கவலை கொள்ள வில்லை. தாழ்த்தப்பட்டவர்களின் பிரதிநிதியான டாக்டர் அம்பேத்கர் தங்களுக்குத் தனித் தொகுதிவேண்டு மென்றும், தங்களுக்கென பிரத்யேகமாக ஸ்தானங்கள் ஒதுக்கி வைக்கப்பட வேண்டுமென்றும் கூச்சல் போடக் கிளம்பி விட்டார். சிறுபான்மையோர் ஒப்பந்தம் என்று ஒன்று ஏற்படுத்திக் கொள்ளப்பட்டது. 1931-ம் வருஷம் நவம்பர் மாதம் 13-ந் தேதியன்று, சிறுபான்மை சப்-கமிட்டிக் கூட்டத்தில் பிரதம மந்திரி, உத்தியோக தோரணையில் இந்த ஒப்பந்தத்தையும் தாழ்த்தப்பட்டவர்களின் தனித் தொகுதிக் கோரிக்கையையும் ஆசீர்வதித்த பொழுது புதரில் மறைந்திருந்த பாம்பைக் காந்திஜி கண்டார்.

ஹிந்துக்களான தாழ்த்தப்பட்ட சகோதரர்களை ஹிந்துக்களின் தொகுதியிலிருந்து பிரித்துவிடும் யோசனை மகாத்மாவுக்குப் பிடிக்கவில்லை; அது விஷமத் தன்மை வாய்ந்த தென்பதையும், அதில் பெருத்த ஆபத்துக்கள் அடங்கி யிருக்கின்றன வென்பதையும் அவர் தமது ஞான திருஷ்டியால் அறிந்து கொண்டார். ஆகவே எப்படி யாவது, என்ன செய்தாவது, தமது உயிரைக் கொடுத்தாவது அந்த யோசனையை மண்டையி லடிக்க அவர் தீர்மானித்தார். அச்சமயத்தில் தமது மனத்துயர் அனைத்தையும் அவர் வார்த்தைகளாக அப்படியே கொட்டி விட்டார். அவ் வார்த்தைகள் தான் என்ன? "மற்ற சிறுபான்மை வகுப்புகள் தனித்தொகுதி கோருவதன் அர்த்தத்தை நான் அறிந்துகொள்ள முடியும். ஆனால் "தீண்டத் தகாதவர்களி"ன் சார்பில் தனித் தொகுதி கோரப்படுவது எனக்கு கத்தியைக் கொண்டு என் சதையைத் துண்டிப்பது போன்றிருக்கிறது. அது என் ஹிருதயத்தையே பிளக்கின்றது. அந்த யோசனையின் அர்த்தம் என்ன? நிரந்தரமாக ஒரு

பகுதியினரைப் பிரித்து வைப்பதுதான். இது நியாயமா? இந்தியாவிற்கு ஸ்வதந்திரம் கிடைக்காமல் போனாலும் போகட்டும். ஆனால் ஏழைப் பஞ்சமர்களின் ஜீவாதாரமான நலனை மட்டும் நான் விற்க மாட்டேன். இந்தியாவிலுள்ள அத்தனை தாழ்த்தப்பட்ட மக்களுக்கும் நான் ஒருவன்தான் பிரதிநிதி........வேண்டுமானால், இதைச் சோதிக்க விரும்பினால், என்னை இந்தியாவில் நிறுத்தி வைத்து ஓட்டு எடுத்துக் கொள்ளுங்கள். தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் ஓட்டுகள் எனக்குத்தான் அதிகமாக விழும்; நான்தான் தெரிந்தெடுக்கப் படுவேன். தனித் தொகுதியும், தனிப் பிரதிநிதித்துவமும் கூடவே கூடாது என்றும், அதனால் பயனெதுவும் கிட்டாதென்றும் பாரத நாடு முழுதும் பிரசாரம் செய்து நிரூபிப்பேன்."

தனிப் பிரதிநிதித்துவம் அளிக்கப்படும் விஷயத்தில் சிக்கியர்களுடனும் முஸ்லீம்களுடனும் தாழ்த்தப்பட்ட மக்களை இணைப்பது சரியானதல்ல என்று கூறி அவர் பேசியதாவது: "ஸிக்கியர்கள் எக்கெந்தக் காலத்திற்கும் ஸிக்கியர்களாகவே யிருக்கலாம்; முஸ்லீம்களும் அப்படியே; ஐரோப்பியர்களும் அப்படித்தான்; ஆனால் "தீண்டத் தகாதவர்கள்" என்றென்றும் தீண்டத் தகாதவர்களாகவே இருப்பார்களா? 'தீண்டத்தகாதவர்கள்' என்ற ஒரு ஜாதி இந்தியாவில் இருப்பதற்கு அவர்கள் வெட்கப்பட வேண்டியதில்லை; அதற்காக வெட்கப்பட வேண்டியவர்கள் வைதிக ஹிந்துக்களே; ஹிந்து மத சீர்திருத்தக்காரர்களில் பலர் இன்று இவ் வுண்மையை உணர்ந்திருக்கிறார்கள் என்பதையும், இந்த மாசை அகற்ற அவர்கள் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கின்றனர் என்பதையும் இந்தக் கமிட்டி மாத்திர மல்ல உலகம் முழுதும் அறிந்து கொள்ளட்டும். எங்களுடைய வாக்காளர் ஜாப்தாவிலும், ஜன சங்கியைப் புத்தகங்களிலும் தீண்டத் தகாதவர்களைத் தனி வகுப்பாகப் பிரித்து எழுத நாங்கள் விரும்பவில்லை. ஹிந்து மதம் செத்துப் போனாலும் போகட்டும்; தீண்டாமை உயிருடனிருக்கக் கூடாது. தனிப்பிரதிநிதித்துவ மளிக்கும் முறை ஹிந்து மதத்தையே பிளவு படுத்துவதாகும் என எச்சரிக்கை செய்கிறேன். தனித் தொகுதி என்று கூறி, தீண்டத்தகாதவர்களைப் பிரித்து வைப்பதை நான் ஒப்புக்கொள்ளவே முடியாது. என் திராணி யுள்ளவரை அந்த யோசனையை நான்

எதிர்த்தே தீருவேன். நான் ஒருவனுகவே நின்றாலும் சரி, என் உயிரையும் தியாகம் செய்து அதை நான் எதிர்க்கத் தயாரா யிருக்கிறேன் என்பதை அழுத்தமாகச் சொல்லு கிறேன்.''

தாழ்த்தப்பட்டவர்களுக்குச் சட்ட சபைகளில் பிரதி நிதித்துவ மிருக்கக் கூடாதென்பது மகாத்மாவின் கக்ஷி யல்ல. சரியான வகையில் அவர்களுக்குப் பிரதிநிதித் துவம் இருக்கவேண்டு மென்பதே அவரது கருத்து; அதிலேயே அவர் ஆவல் கொண்டார். ஆனல் சர்க்கார் அம் மக்களைப் பிரித்துவிடுவது அவரது மனதில் சுருக் கெனத் தைத்தது.

1931-ம் வருஷம் டிஸம்பர் மாதம் 28-ந் தேதியன்று காந்திஜி பம்பாய் வந்து சேர்ந்தார். இங்கிலாந்திலிருந்து தமது தாய்நாட்டிற்குத் திரும்பி வரும்போதுகூட ஏழைப் பஞ்சமர்களைப்பற்றியே மகாத்மா எண்ணிக் கொண்டு வந்தார். வகுப்புப் பிரச்னையையும், முக்கியமாகத் தாழ்த் தப்பட்டவர்களின் பிரதிநிதித்துவ விஷயத்தையும் தீர்த்து வைக்கவேண்டு மென்ற மன உறுதியுடனேயே காந்திஜி கப்பலை விட்டிறங்கினர்.

பம்பாயில் வந்திறங்கியதும், அவர் பத்திரிகா நிருபர் களுக்கு அளித்த பேட்டியில் அதன் உண்மை நன்கு புலனு யிற்று. அவர் சொன்னதாவது :—

"தாழ்த்தப்பட்ட மக்கள் என்மீது சீற்றங்கொண் டிருக்கின்றனர் எனக் கூறுவது பொய். எனது ஒவ்வொரு எலும்பும், தசையும் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்காகவே ஆக்கப்பட்டிருக்கிறது. இந்த ஏழை வாயில்லாச் சீவன்கள் வாழவேண்டியதற்காக என் உயிரைத் தியாகம் செய்ய, முகமலர்ச்சியோடு சாக நான் தயாராக விருக்கிறேன். நானும் ஒரு பஞ்சமன் தானே?''

இவ்வாறு பேசிய மகாத்மா, நாடெங்கும் சுற்றித் திரிந்து, தாழ்த்தப்பட்ட மக்களின் அபிப்பிராயத்தைத் தமக்குச் சாதகமாகத் திரட்டி, தாம் தான் அவர்களின் உண்மையான பிரதிநிதி என்பதையும், தமது கருத்துக் களே நேர்மையானவை என்பதையும் பிரிட்டிஷ் சர்க்காருக் கும் உலகிற்கும் எடுத்துக்காட்ட விருப்பங் கொண்டார்.

ஆனால் 1932-ம் வருஷம் ஜனவரி மாதம் 4-ந் தேதி யன்று, நள்ளிரவில் சர்க்கார் அவரைக் கைது செய்து, எரவாடா சிறையிலடைத்தனர். ஆம், மகாத்மாவின் ஸ்தூல சரீரம் எரவாடா சிறைக் கம்பிகளுக்குப் பின் தள்ளப் பட்டுப் பூட்டப்பட்ட தென்னவோ வாஸ்தவம்தான். ஆனால் தாழ்த்தப்பட்டவர்களின் எண்ணத்தில் தோய்ந்து கிடந்த அவரது சிந்தனையை அவர்கள் சிறைப்படுத்தவில்லை; அவர்களால் அதைச் சிறைப்படுத்தவும் முடியாது.

ஆகவே, இந்தியாவின் முப்பத்தைந்து கோடி மக்க ளின் மனதை ஆட்கொண்டுள்ள அந்த மகான், எரவாடா வின் மதில்களுக் குள்ளிருந்து கொண்டே தமது சிந்தனையை வளர்த்தார்; தாழ்த்தப்பட்டவர்களின் பிரச்னை அவரது மனதை விட்டகலவே யில்லை. தமது காரியங் களை நிறைவேற வொட்டாமல் செய்த சர்க்காரின் சூழ்ச்சி யையும் அவர் உணர்ந்தார். அமைதியான நேரங்களில் அவகாசம் மிகுந்த வேளைகளில் தாம் லண்டனில் செய்த பிரஸங்கங்களும் தாழ்த்தப்பட்டவர்களுக்காகத் தாம் கொ டுத்த வாக்குறுதிகளும் அவ்வப்பொழுது அவரது மனதை நிரப்பின. அதிகார மமதை கொண்ட ஒரு துரைத்தனம் தமது வாழ்வின் முக்கியமான காரியத்தைச் செய்யவொட் டாமல் தடுத்துவிட்ட அநீதி ஒரு பக்கமும், அதே அதிகார வர்க்கம் தாழ்த்தப்பட்ட மக்களைப் பிரிக்கக் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கும் கொடுமையும் அவரது மனதை வாட்டின. சிறைக்குள்ளிருந்து கொண்டே, பின்னர் கூறிய சூழ்ச்சியை எப்படி எதிர்ப்பதென்று அவர் யோசித் தார்; ஆண்டவனை நோக்கி பிரார்த்தித்தார்; அடர்ந்த இருள் நடுவே அகப்பட்டுக் கொண்டு தத்தளிக்கும் தமக்கு உற்ற வழியைக் காட்டுமாறு அனுதினமும். ஈசனை வேண்டினார்; ஆத்ம சக்தியை வளர்த்தார்.

மகாத்மாவுக்கு ஒருநாள் பளிச்சென்று ஒரு வெளிச் சம் தோன்றியது; ஒரு யோசனையும் பிறந்தது; ஒரு உறு தியும் வளர்ந்தது; ஒரு பிரதிக்ஞையும் எழுந்தது; அவ ரது அந்தராத்மாவும் ஒரு ஆக்ஞை யிட்டது; ஆண்டவன் கட்டளை அவரது செவிகளில் விழுந்தது. உடனே அவர், மார்ச்சு மாதம் 11-ந் தேதியன்று தமது பிரார்த்தனையை முடித்துவிட்டு, இந்தியா மந்திரியான ஸர் ஸாம்யூல் ஹோருக்கு ஒரு கடிதம் எழுதினார். தாழ்த்தப்பட்டவர்

களுக்கென தனிப் பிரதிநிதித்துவம் ஏற்படுத்துவதாக சர்க்கார் முடிவு செய்தால், தாம் அதற்குப்பின் உயிர்வைத்துக் கொண்டிருக்க முடியாதென்றும், ஆகவே "உயிர் போகும் வரையில் உபவாஸம்" இருக்கத் தாம் தீர்மானித்து விட்டதாகவும் அக்கடிதத்தில் மகாத்மா அறிவித்தார்.

## சபத சாஸனம்

ஸர் ஸாம்யூல் ஹோருக்கும், பிரதம மந்திரி ராம்ஸே மாக்டனால்டுக்கும் மகாத்மாஜி எழுதிய கடிதங்களும், அவற்றிற்கு மேற்படியார்களிட மிருந்து அவருக்குக் கிடைத்த பதில்களும் பின்வருமாறு :—

எரவாடா மத்திய சிறை,
11—3—1932.

அன்பார்ந்த ஸர் ஸாம்யூல் அவர்களுக்கு,

வட்டமேஜை மகா நாட்டின் இறுதியில் சிறுபான்மையோரின் கோரிக்கைகள் சமர்ப்பிக்கப்பட்ட பொழுது நான் கூறிய வார்த்தைகள் தங்களுக்கு நினைவிருக்கலாம். "தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் தனித்தொகுதி கொடுப்பதை என் உயிரைக் கொடுத்தாவது எதிர்ப்பேன்" என நான் அப்பொழுது சொன்னேன். அந்தச் சந்தர்ப்பத்தில் எனக்கேற்பட்ட ஒரு உணர்ச்சி மிகுதியாலோ, அன்றி சொல் அலங்காரத்துக்காகவோ நான் அவ்விதம் சொல்லவில்லை. விஷயத்தின் முக்கியத்தை நன்கு உணர்ந்தே, மனப்பூர்வமாக நான் அவ்வார்த்தைகளை வெளியிட்டேன்.

எனக்கு அனுமதிக்கப்பட்டுள்ள சமாச்சாரப் பத்திரிகைகளிலிருந்து துரைத்தனத்தார் வகுப்புப் பிரச்னை சம்பந்தமாகத் தங்களுடைய முடிவை சீக்கிரத்தில் வெளியிட்டு விடுவார்கள் என தெரிகின்றது. தாழ்த்தப்பட்ட மக்களுக்கு தனித்தொகுதி ஏற்படுத்துவதென ஒரு திட்டம் வரையறுக்கப்பட்டு விட்டால் உடனே எனது சபதப்படி நான் நடந்துகொள்ள வேண்டுமென எண்ணினேன். ஆயினும் முன்னெச்சரிக்கை செய்யாமல் அங்ஙனம் செய்வது சரியல்லவென எனக்குத் தோன்றிற்று. ஏனெனில் அங்கு நான் பேசியபேச்சில் அவ்வளவு பொருள் உண்டு என்பதை அவர்கள் உணருவதற்கு நியாயமில்லை யல்லவா?

தாழ்த்தப்பட்ட மக்களுக்கு தனித் தொகுதி தரலாகா தென்பதற்கு நான் சொன்ன காரணங்களை மீண்டும் இங்கு சொல்லத் தேவையில்லை. என்னையும் தாழ்த்தப்பட்டவர் களில் ஒருவனுகவே நான் எண்ணிக் கொள்ளுகிறேன். பிறர் கஷ்டம் எவ்வாறாயினும் தாழ்ந்தப்பட்ட ஏழைகளின் கஷ்டம் வேறானது. அவர்கள் சட்ட சபையில் பதவி வகிப்பதை நான் எதிர்ப்பவனல்ல. ஆனால் அம்மக்களில் வயது வந்தவர் களான ஆண், பெண் அனைவருக்கும் கல்வி உடைமை, சொத் துரிமை ஆகிய நிபந்தனைகளின்றி ஓட்டுரிமை இருக்கவேண்டு மென்று கோருகிறேன். படிப்பு, பணம் முதலியன இல்லை என்பதற்காக ஓட்டுரிமையை எவருக்கும் மறுக்கலாகாது என்றும் நான் கருதுகிறேன். பிற ஜாதியார்களுக்கு ஓட்டு ரிமை விஷயத்தில் என்னென்ன கட்டுப்பாடுகள் செய்தா லும், தாழ்த்தப்பட்ட மக்களுக்கு எத்தகைய இடைஞ்சலும் இருக்கவே கூடாது. ஆனால் அவர்களுக்குத் தனித் தொகுதி ஏற்படுத்தினால் அதனால் அவர்களுக்குக் கஷ்டமே யுண்டாகும்; அதனால் ஹிந்து மதத்திற்கே ஹானி ஏற் படும். இதை நன்கு உணரவேண்டுமானால் தற்காலத்தில் "நீண்டா" மக்கள் எவ்வாறு "மேல் ஜாதியார்" என்று சொல்லப்படுபவருக்கு அடிமைப்பட்டுக் கிடக்கின்றன ரென்பதை உணரவேண்டும். இந்தத் தனித் தொகுதி ஏற் பட்டு விட்டால் அது ஹிந்து மதத்தையே வெட்டிப் பல பிரிவுகளாகப் பிரித்துவிடும்.

ஆகவே பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் தனித் தொகுதி அளிக்க முடிவு செய்யும் பக்ஷத்தில் நான் பட்டினி கிடந்து இறக்க வேண்டியதுதான் என்பதை அவர்களுக்கு மிக்க மரியாதையுடன் தெரி வித்துக்கொள்ளுகிறேன்.

நான் அனுஷ்டிக்க விரும்பும் வழி ஏதோ ஒரு காரியத் தைச் சாதித்துக் கொள்ளுவதற்காக என்று நினைக்க வேண்டாம். அவ்விஷயம் என் உயிருக்குயிரானது. அது என் மனச் சாக்ஷியைப் பாதிக்கின்றது. ஆகவே அதை மீறி நடக்க என்னால் இயலாது.

என் மனதை அலைத்து வரும் இன்னொரு விஷயத்தை யும் நான் இந்தச் சந்தர்ப்பத்தில் எடுத்துச் சொல்ல விரும் புகிறேன். இன்னொரு காரணத்திற்காகவும் நான் இந்த

உபவாஸ விரதத்தை மேற்கொள்ளவேண்டுமென்று என் மனம் துடி துடித்துக் கொண்டிருக்கிறது. நாட்டில் எங்கும் அடக்குமுறை கடுமையாகத் தாண்டவமாடுகின்றது. எந்த நிமிஷத்தில் அதிர்ச்சியும், உணர்ச்சியு மேற்பட்டு, நான் அதற்காக வென்று இந்தத் தியாகத்தை ஏற்பேனே அதை என்னால் சொல்ல முடியாது. நியாய வரம்பை மீறி அடக்குமுறைகள் அதிகரித்து வருகின்றன. சர்க்காரின் பயங்கரச் செயல்கள் நாட்டில் வலுத்து வருகின்றன. துரைத்தனத்தின் ஆங்கில உத்தியோகஸ்தர்களும், இந்திய அதிகாரிகளும் காட்டுமிராண்டிகளாக மாறி வருகின்றனர். சர்க்கார் "சபாஷ்" சொல்வார்கள் என்ற ஆசையால் இந்திய அதிகாரிகள் மரவர தீமை மிகுந்தவராகின்றனர். ஜனங்களிடம் சிறிதாவது இவ்வூழியர்களுக்குப் பக்தியில்லை. மனிதத் தன்மைக்குக் குறைவான முறையில் உடன்பிறந்த சகோதரர்களின்மீது அடக்குமுறைகளைச் செலுத்தி வருகின்றனர். ஜனங்கள் பயமுறுத்தப்பட்டு அடக்கப்படுகின்றனர். அவர்களின் பேச்சுச் சுதந்திரமும் அடக்கப்படுகின்றது. சட்டத்தின் பெயரைச் சொல்லிக்கொண்டு ஒழுங்கீனமான காரியங்களைச் செய்து வருகிறார்கள். நாட்டில் காலித்தனம் வலுத்து வருகின்றது. பொது ஜன சேவை செய்ய முற்பட்டுள்ள ஸ்திரீகள் தங்கள் மானத்துக்கும் பங்கம் விளைந்துவிடுமென்று பயப்படக்கூடிய அபாயம் ஏற்பட்டிருக்கிறது.

காங்கிரஸ் உண்டுபண்ணும் சுதந்திர உணர்ச்சியை நசுக்கவே இவை யாவும் செய்யப்படுகின்றனவென்று நான் நினைக்கிறேன். சாதாரண சட்டங்களை மீறுவதைத் தடுப்பதற்காக மட்டும் அடக்குமுறை அனுஷ்டிக்கப்படவில்லை. இவ்விஷயங்களை யெல்லாம் கவனிக்கையில் ஜனநாயகத் தத்துவம் என்பது இருப்பதாகவே தெரியவில்லை.

ஜன நாயகம் என்று சொல்லப்படும் ஒரு முறையில் 33 கோடிக்கு மேற்பட்ட புராதனமான ஒரு ஜன சமூகத்தின் கதிமோக்ஷத்தை நிர்ணயிக்கக் கூடிய அதிகாரம் ஒருவரிடமிருப்பதும், அந்த அதிகாரத்தை நிலை நிறுத்த அவர் நாசத்துக்கு ஹேதுவான பயங்கரத் தன்மையுடன் கூடிய எல்லா சக்திகளையும் உபயோகிப்பதும் சற்றும் பொருத்தமாகவில்லை. இதை நினைக்கையில் என் உடல் பதறுகிறது; உயிர் துடிக்கிறது.

வெளியே நடக்கின்ற காரியங்களைப்பற்றிப் படிக்கும் போது எனது உயிர் நிலையே ஆடிப்போகிறது. ஆகவே தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் தனித் தொகுதி தருவதுபற்றி யான் கொண்டுள்ள அபிப்பிராயத்தை உங்களுக்குச் சொல்லாதிருப்பதற்கில்லை. அத்தகைய உபவாஸ சபதம் ஒன்றை நான் ஏற்றுக் கொள்ளவும் இடமிருக்கிறது.

தங்கள் உண்மையுள்ள,
(ஒப்பம்) எம். கே. காந்தி.

## இந்தியா மந்திரியின் பதில்

இந்தியா ஆபீஸ், ஒயிட்ஹால்,
13—4—1932.

அன்புள்ள மிஸ்டர் காந்திக்கு,

மார்ச்சுமீ 11உ யிட்டுத் தாங்கள் எழுதியனுப்பிய கடிதத்திற்கு நான் பின்வருமாறு பதிலெழுதுகிறேன். தாழ்ந்த வகுப்பினருக்குத் தனித் தொகுதி கொடுக்கும் விஷயமாகத் தாக்குள்ள பலமான உணர்ச்சியை நான் பூரணமாக அறிவேன். இவ்விஷயத்தின் உசிதா உசிதங்களை அறிந்தே நாங்கள் ஒரு முடிவு கூற உத்தேசித்திருக்கிறோம். லார்டு லோதியன் கமிட்டி தனது சுற்றுப் பிரயாணத்தை இன்னும் முடிக்கவில்லை யென்பது தங்களுக்குத் தெரியும். அக்கமிட்டியின் முடிவை நாங்கள் அறிந்து கொள்ள இன்னும் சில வாரங்கள் பிடிக்கும். அந்த அறிக்கை வந்தபின், நாங்கள் மிக்க ஜாக்கிரதையாக அதைப் பரிசிலனை செய்து பார்த்து, தங்களுடைய அபிப்பிராயத்தையும் தங்களைப் போன்ற எண்ணக் கூடிய மற்றவர்களின் அபிப்பிராயங்களையும் நன்கு கவனித்து, பிறகே ஒரு முடிவு கூறுவோம். தாங்கள் எங்களுடைய நிலையிலிருந்தால் நாங்கள் என்ன செய்ய உத்தேசித்திருக்கிறோமோ அதைத்தான் செய்வீர்கள் என்பது நிச்சயம். கமிட்டியின் யாதாஸ்துக்காகத் தாங்கள் காத்திருந்து அது வந்தபின் அதைப்பற்றித் தீர்க்கமாக ஆராய்ந்தே ஒரு முடிவு சொல்லுவீர்கள். இது சம்பந்தமாக இரு தரப்பிலும் வெளியிடப்பட்ட அபிப்பிராயங்களையும் தாங்கள் கவனிப்பீர்கள். இதைத்தான் நாங்

களும் செய்ய விருக்கிறோம். இதைத் தவிர நான் ஒன்றும் தற்சமயம் அதிகமாகச் சொல்லுவதற்கில்லை. தாங்களும் இதைவிட அதிகமாக எதிர்பார்க்க மாட்டீர்கள் என நம்பு கிறேன்.

அவசரச் சட்டம் விஷயமாக நான் முன்னும் தனியாக வும், பஹிரங்கமாகவும் சொன்னதைத் தான் மீண்டும் சொல்லவேண்டி யிருக்கிறது. கவர்ன்மெண்டின் அஸ்திவா ரத்தையே தாக்கத் திட்டமாக முயற்சி நடப்பதால் அந்தச் சட்டங்களைப் பிறப்பிக்க வேண்டியது அவசியமென்பதே என் அப்பிராயம்.

தங்கள் உண்மையுள்ள,
(ஒப்பம்) சாமியூல் ஹோர்

## பிரதம மந்திரிக்கு காந்திஜியின் கடிதம்

எரவாடா மத்திய சிறை,
18—8—1932.

அன்புள்ள நண்ப,

தாழ்த்தப்பட்ட வகுப்பினர் பிரதிநிதித்துவ விஷயமாக நான் மார்ச்சு மாதம் 11-ந் தேதி எழுதிய கடிதத்தை ஸர் ஸாமியூல் ஹோர் உங்களுக்கும், மந்திரி சபையினருக்கும் காட்டி யிருப்பாரென்று நம்புகிறேன். அந்தக் கடிதத்தை இக்கடிதத்தின் ஒரு பாகமாக பாவித்து, இதனுடன் சேர்த் துப் படிக்க வேண்டும்.

சிறுபான்மை சமூகத்தினரின் பிரதிநிதித்துவ விஷய மாகப் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் வெளியிட்டுள்ள முடிவை நான் படித்துப் பார்த்து, அதைப்பற்றி வெகுவாக ஆலோசனை செய்தேன். நான் ஸர் ஸாமியூல் ஹோருக்கு எழுதிய கடிதத்தை அனுசரித்தும், சர்வகக்ஷி மகாநாட்டின் சிறுபான்மைக் கமிட்டிக் கூட்டத்தில் நான் தெரிவித்ததை யொட்டியும், என்னுடைய உயிரைக் கொடுத்தேனும் உங்க ளுடைய முடிவை நான் எதிர்க்க வேண்டி யிருக்கிறது. உப் பும் ஸோடாவும் சேர்ந்தோ சேராமலோ ஜலத்தை மட்டில் பருகிக்கொண்டு உயிர் போகும் வரை பட்டினி கிடப்பதன் மூலமாகவே நான் அதை எதிர்க்கக் கூடும். இவ்விதம்

நான் உபவாஸமிருந்து வரும் காலத்தில் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் தாங்களாகவோ, அல்லது பொது ஜன அபிப்பிராயத்தின் நிர்ப்பந்தத்தினாலோ தங்களுடைய முடிவை மாற்றிக் கொண்டு, பொதுத் தொகுதிகளின் மூலம் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் தங்களுடைய பிரதிநிதிகளைத் தெரிந்தெடுக்கும்படி, வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவ ஏற்பாட்டை வாபீஸ் வாங்கிக்கொண்டு விடும் பக்ஷத்தில் இந்த உபவாஸம் நின்றுவிடும். அந்தப் பொதுத் தொகுதி எவ்வளவு விரிவானதாக இருந்தாலும் சரியே.

மேலே குறிப்பிட்டபடி செப்டம்பர் ௴ 20-ந் தேதிக்குள் அந்த முடிவைப் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் மாற்றிக் கொள்ளாவிடில் அன்று பகல் முதல் எனது உபவாஸம் ஆரம்பமாகி விடும். உங்களுக்குப் போதுமான அவகாசமிருக்கும்படி இந்தக் கடிதத்தின் விவரத்தைத் தந்தி மூலமாக தெரிவிக்கும்படி இங்குள்ள அதிகாரிகளை நான் கேட்டுக்கொண்டிருக்கிறேன். அவ்விதம் அவர்கள் செய்யாவிடினும், மிகவும் மெதுவான மார்க்கத்தின் மூலமாக இது உங்களிடம் சேருவதற்கு வேண்டிய அவகாசத்தையும் நான் கொடுத்திருக்கிறேன்.

தங்கள் அன்புள்ள நண்பன்,
(ஒப்பம்) எம். கே. காந்தி.

## பிரதம மந்திரியின் பதில்

10, டௌனிங் தெரு,
8—9—1932.

அன்புள்ள மிஸ்டர் காந்திக்கு,

நான் உங்களுடைய கடிதத்தைப் பெற்று மிக்க ஆச்சரியமடைந்தேன்; வருத்தமும் கொண்டேன். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் விஷயமாகக் கவர்ன்மெண்டார் செய்திருக்கும் முடிவினால் ஏற்படும் நிலைமையைச் சரியாகத் தெரிந்து கொள்ளாமலே நீங்கள் இக் கடிதத்தை எழுதியிருக்கிறீர்கள் என்றே நான் நினைக்க வேண்டியிருக்கிறது.

தாழ்த்தப்பட்ட வகுப்பினர்களின் ஸ்தாபனங்கள் பலவற்றினிடமிருந்து கிடைத்திருந்த விண்ணாபனங்கள் காரண

மாகவும், நீங்களே ஒப்புக்கொண்டுள்ளபடி அவர்களுக்குச் சமூகத் துறையில் இருந்து வரும் பல அசௌகரியங்களை உத்தேசித்தும், சட்டசபைகளில் கிரமமான பிரதிநிதித்துவம் பெறுவதற்கு அவர்களுக்குள்ள பாத்யதையைப் பாதுகாப்பது எங்களுடைய கடமையென்று நாங்கள் கருதிய போதிலும், அந்தச் சமூகத்தினரை ஹிந்து உலகினின்று பிரித்துவிடக்கூடிய காரியம் எதையும் நாங்கள் செய்யவில்லை. மார்ச்சு மாதம் 11-ந்தேதி எழுதிய கடிதத்தில் நீங்களே சட்டசபைகளில் அவர்களுக்குப் பிரதிநிதித்துவம் ஏற்படுவதில் ஆக்ஷேபமில்லை யென்று தெரிவித்திருக்கிறீர்கள். கவர்ன்மெண்டார் செய்துள்ள முடிவின்படி தாழ்த்தப்பட்ட வகுப்பினர் ஹிந்து சமூகத்தின் ஒரு அங்கமாகவே யிருந்து வருகின்றனர். ஹிந்து வாக்காளர்களுக்குச் சரி சமத்துவமான சுதந்திரத்துடன் அவர்கள் அந்தத் தொகுதிகளில் வோட்டுச் செய்வார்கள். ஆனால் முதல் இருபது வருஷ காலம் வரையில், ஓட்டுரிமை விஷயத்தில் அவர்கள் ஹிந்து சமூகத்தின் ஒரு அங்கமாகவே இருந்து வந்தபோதிலும், ஒரு வரையறுக்கப்பட்ட பிரத்யேக தொகுதிகள் மூலமாக தங்களுடைய உரிமைகளையும், பாத்தியதைகளையும் பாதுகாத்துக்கொள்ள அவர்களுக்கு வசதி ஏற்படும். இப்போதைய நிலைமையில் இது அவசியமென்று நாங்கள் நினைக்கிறோம். இந்தத் தொகுதிகள் ஏற்படுத்தப்படும் இடங்களிலும் ஹிந்துத் தொகுதிகளில் வோட்டுச் செய்ய அவர்களுக்கு உரிமை யில்லாமல் போய்விடாது. ஹிந்து சமூகத்தை அவர்கள் சேர்ந்தவர்கள் என்பதற்கு எவ்வித பாதகமும் ஏற்படாமலிருக்கும் பொருட்டு அவர்கள் இரண்டு வோட்டுகளைப் பெறுவார்கள். நீங்கள் வகுப்புத் தொகுதி என்று கூறுவதை நாங்கள் வேண்டுமென்றே அவர்களுக்கு ஏற்படுத்தாமலிருக்கிறோம். தாழ்ந்த வகுப்பினர் எல்லோரையும் பொது அல்லது ஹிந்துத் தொகுதிகளில் சேர்த்திருக்கிறோம். இதனால் மேல்ஜாதி ஹிந்துக்கள் தாழ்த்தப்பட்ட வகுப்பினருடைய வோட்டுகளைக் கோரவும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மேல்ஜாதியாருடைய வோட்டுகளைக் கோரவும் இடமேற்படும். இவ்விதமாக ஹிந்து சமூகத்தின் ஒன்றுபட்ட தன்மை பாதுகாக்கப்பட்டிருக்கின்றது.

எங்களுடைய ஏற்பாட்டின்படி பொது ஹிந்துத் தொகுதிகளில் அவர்களுக்குள்ள ஓட்டுரிமையுடன் ஒரு வரையறைக்குட்பட்டு பிரத்தியேகத் தொகுதிகள் ஏற்படுவதால், ஆரம்பத்தில் அவர்களுக் கேற்படும் அனுகூலமானது தனித்தொகுதிகள் மூலமாக சிறுபான்மை சமூகத்தினரான முஸ்லீம்கள் போன்றவர்களுக்கு ஏற்படும் பிரதிநிதித்துவ முறையின் தர்மத்திற்கு மாறானது. உதாரணமாக, ஒரு முஸ்லீம், ஒரு பொதுத் தொகுதியில் ஓட்டுச் செய்யவோ அல்லது அபேக்ஷகராக விருக்கவோ முடியாது. ஆனால் ஓட்டுச் சுதந்திரமுள்ள எந்தத் தாழ்த்தப்பட்ட வகுப்பினரும் பொதுத் தொகுதிகளில் ஓட்டு செய்யவோ அல்லது அவைகளில் அபேக்ஷகர்களாக நிற்கவோ சுதந்திரமுடையவர்களாக விருப்பார்கள். பிரத்யேகத் தொகுதிகள் மூலமாகத் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் தெரிந்தெடுக்கும் பிரதிநிதிகள் குறைவாகவே யிருப்பார்கள். அவர்களுடைய ஜனத் தொகைக்குத் தகுந்த பிரதிநிதித்துவம் அவர்களுக்கு ஏற்படுத்துவதற்காகவும் இந்த ஏற்பாடு செய்யப்பட்டிருக்கவில்லை. அவர்களாலேயே தெரிந்தெடுக்கப்பட்ட சிலராவது சட்ட சபைகளில் இருக்கவேண்டு மென்பதற்காகவே இந்த ஏற்பாடு செய்யப்பட்டுளது. அவர்களுக்கு எங்கும் ஒதுக்கி வைத்திருக்கும் தனி ஸ்தானங்களும் அவர்களுடைய ஜனத்தொகை விகிதாசாரத்தைவிடக் குறைவாகவே யிருக்கின்றன.

பட்டினி கிடந்து உயிரை விடும் அதி தீவிரமான முறையில் இறங்க நீங்கள் உத்தேசித்திருக்கிறீர்கள் என்று தெரிகின்றது. இதர ஹிந்துக்களுடன் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குக் கலப்புத் தொகுதி ஏற்படும்படி செய்வதற்காக நீங்கள் பட்டினி கிடப்பதாகவில்லை. ஏனெனில், அதற்கு ஏற்கனவே ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. ஹிந்து சமூகத்தின் ஒற்றுமையைப் பாதுகாப்பதற்காகவும் நீங்கள் பட்டினி காட்டப் போவதாக இல்லை. ஏனெனில் அதற்கும் இப்பொழுதே ஏற்பாடு செய்யப்பட்டுளது. பல விதமான அவதிகளுக்குட்பட்டுக் கஷ்டப்படும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர் தங்களுடைய நம்பிக்கைக்குப் பாத்திரமான பிரதிநிதிகளைத் தாங்களாகவே தெரிந்தெடுக்கும் சுதந்திரம் பெறுவதைத் தடுப்பதற்காகவே நீங்கள் உபவாசமிருந்து உயிரை விடுவதாகச் சொல்லுகிறீர்கள்.

நீங்கள் இத்தகைய முடிவுக்கு வந்திருப்பதன் காரணத்தை என்னால் தெரிந்துகொள்ள முடிய வில்லை. உள்ள விஷயங்களைத் தெரிந்துகொள்ளாமலே இவ்வித முடிவுக்கு நீங்கள் வந்திருக்கிறீர்கள் என்றுதான் நான் நினைக்க வேண்டி யிருக்கிறது.

சிறுமான்மைப் பிரச்னை விஷயத்தில் இந்தியர்கள் இன்னும் தங்களுக்குள் ஒரு முடிவைச் செய்துகொள்ள வில்லை. அவர்கள் பொதுவாக வேண்டிக் கொண்டதன் பேரிலேயே கவர்ன்மெண்டார் தங்களுடைய இஷ்டத்திற்கும் விரோதமாக இந்தப் பிரச்னை விஷயத்தில் ஒரு முடிவைக் கூற ஒப்புக்கொண்டார்கள். அந்த முடிவை இப் பொழுது அவர்கள் வெளியிட் டிருக்கிறார்கள். அவர்கள் குறிப்பிட்டுள்ள நிபந்தனைகளுக் குட்பட்டன்றி, அதை அவர்கள் மாற்றுவார்கள் என்று எதிர் பார்ப்பதற்கில்லை. ஆகவே கவர்ன்மெண்டின் முடிவு அப்படியே தானிருக்க வேண்டுமென்றும், பல சமூகங்களும் சேர்ந்து சமரஸமாக ஒரு முடிவைச் செய்து கொண்டு அதை அங்கீகரிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டால்தான், தாங்கள் தீர்க் காலோசனையின் பேரில் வெளியிட்டுள்ள முடிவை அவர்கள் தள்ளிவிட முடியுமென்றும் நான் உங்களுக்குப் பதிலளிக்க வேண்டி யிருக்கிறது.

இருந்தாலும் கவர்ன்மெண்டார் வெளியிட்டுள்ள முடி வின் விவரங்களை மறுபடியும் ஊன்றிக் கவனித்து நீங்கள் செய்துகொண்டுள்ள முடிவுக்கு அது அவசியத்தை உண் டாக்கி யிருக்கின்றதா என்பதை யோசிக்குமாறு கேட்டுக் கொள்ளுகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
(ஒப்பம்) ஜே. ராம்சே மாக்டனால்டு.

## காந்திஜியின் இறுதிக் கடிதம்

எரவாடா மத்திய சிறை,
9—9—1932.

அன்புள்ள நண்ப,

உங்களுடைய கடிதத்தின் முழு விவரமும் தந்தி மூலம் அனுப்பப்பட்டு இன்று எனக்குக் கிடைத்தது. எல்லா விஷயங்களையும் ஒளிக்காமல் சொல்லி யிருப்பதற்

காக உங்களுக்கு வந்தன மளிக்கிறேன். ஆனால் நான் உத்தேசித்துள்ள காரியத்திற்கு நீங்கள் கற்பிக்கும் கருத்து என் புத்தியில் பட்டதேயில்லை. அங்ஙனம் நீங்கள் எண்ணுவதற்காக நான் வருந்துகிறேன். எந்த வகுப்பினருக்காகப் பேச நான் பாக்கியம் கொண்டாடியிருக்கிறேனோ அந்த வகுப்பின் நலத்தைத் தியாகம் செய்துவிடுவதற்காக உயிரை விடவும் நான் விரும்புவதாக நீங்கள் எனக்கில்லாத ஒரு விருப்பத்தைக் கற்பிக்கிறீர்கள். நான் உத்தேசித்துள்ள அதி தீவிரமான காரியமே அப்படிப்பட்ட தூர் எண்ணம் கற்பிக்கப்படுவதைத் தடுக்குமென்று நான் எதிர்பார்த்தேன். இவ்விஷயம் என்னைப்பற்றின வரையில் மத சம்பந்தமானது என உங்களுக்குத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் இரண்டு ஓட்டுகளைப் பெறப்போவது அவர்களைப் பாதுகாக்கவும் செய்யாது; ஹிந்து சமூகம் பிளவுபட்டுப் போவதைத் தடுக்கவும் செய்யாது. தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் தனித் தொகுதி ஏற்படுத்துவதானது ஹிந்து மதத்தை அழிக்கவேண்டிய எண்ணத்துடன் ஒரு விஷத்தை ஊசி மூலம் செலுத்துவதற்கு ஒப்பாகும்; தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு அது எவ்வித நன்மையையும் செய்யாது. இதுவே எனது அபிப்பிராயம்.

ஹிந்து சமூகத்திற் குட்பட்டவர்களாக விருக்க அவர்கள் சம்மதப்படுகையில் சட்டத்தின் மூலம் அவர்களை ஒரு பிரத்தியேக சமூகமாகப் பிரித்து விடுவதைப்பற்றியே நான் ஆக்ஷேபிக்கிறேன். உங்களுடைய முடிவு நிலைத்துவிடுமானால், ஒடுக்கப்பட்டவர்கள் என்று சொல்லப்படும் தங்களுடைய சகோதர மக்களை வாழ்வின் ஒவ்வொரு துறையிலும் கை தூக்கி விடுவதற்காகத் தங்களுடைய வாழ்வை அர்ப்பணம் செய்துவருகிற சீர்திருத்தக்காரர்களின் வேலை பாழ்பட்டு விடுமென்பதை நீங்கள் உணர்கிறீர்களா?

ஆகவே எனது விருப்பத்திற்கு விரோதமாகவே, எனது தீர்மானப்படி நான் நடக்கவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டிருக்கின்றது. தாழ்த்தப்பட்டவர்களைப்பற்றிய முடிவு சம்பந்தமாக மட்டும் நான் விசேஷமாக உங்களுக்கு எழுதியிருப்பதிலிருந்து உங்களது மற்ற முடிவுகளை நான் அங்கீகரிப்பதாக நீங்கள் எண்ணிவிடக் கூடாது. வேறு பல முடிவுகளும் விசேஷமாக ஆக்ஷேபிக்கத் தக்கனவாயிருக்கின்றன. ஆனால் தாழ்த்தப்பட்டவர்களின் பிரச்னையை முன்னிட்டு

பிராணத் தியாகம் செய்துகொள்ளும்படி எனது மனச்சாக்ஷி என்னைத் தூண்டி யிருப்பதுபோல் அந்தப் பிரச்னைகள் விஷயத்தில் அப்படிப்பட்ட தீவிர உணர்ச்சி எனக்கு இன்னும் ஏற்படவில்லை.

தங்கள் அன்புள்ள நண்பன்,
(ஒப்பம்) எம். கே. காந்தி.

## மன வேதனை

1932-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் 17-ந் தேதியன்று வகுப்புப் பிரச்னைத் தகராறு சம்பந்தமான தமது தீர்ப்பை பிரதம மந்திரி வெளியிட்டார். காந்திஜி எந்த ஆபத்தை எதிர் பார்த்தாரோ அந்த ஆபத்துக்கு அஸ்திவாரம்போடுவதாகவே அந்தத் தீர்ப்பு விளங்கியது. தாழ்த்தப்பட்டவர்களுக்காக ஏராளமான தனித் தொகுதிகள் சிருஷ்டிக்கப்படுமென்றும், பொதுத் தொகுதிகளிலும் அந்த வகுப்பினர் அபேக்ஷகர்களாக நிற்கலாமென்றும், இந்தத் தனித் தொகுதிகளும், ஸ்தானங்களை ஒதுக்கிவைப்பதும் இருபது வருஷ காலம் வரையில் தானிருக்குமென்றும் அத் தீர்ப்பு கூறியது. இதைக் கண்டதும் காந்திஜியின் மனம் கொதிப்புற்றுக் கிளர்ந்தெழுந்தது.

பிரதம மந்திரியின் தீர்ப்பு, இந்தியாவில் ஜாதிப் பிரிவினைகளையும், ஜாதிச் சண்டைகளையும், ஜாதித் துவேஷங்களையும் அதிகமாக்கிவிடும் என அவர் எண்ணினார். ஆபத்து ஏற்பட்ட பிறகு, தீப்பிடித்துக் கொண்ட பின்னர் தாம் "சாகும் வரையில் பட்டினி கிடப்ப"தால் என்ன பிரயோஜனம் என்றும் அவர் சிந்தித்தார். முளையிலேயே இந்த ஆபத்தைக் கிள்ளி எறியவேண்டுமெனத் தீர்மானித்தார். இந்தியாவிலுள்ள லக்ஷக் கணக்கான மக்களின் ஜீவாதார உரிமை விஷயத்தில் உண்மை விஷயங்களை அறியாத ஆங்கில ஆளும் வகுப்பினர் ஜட்ஜ்களாக உட்கார்ந்து தீர்ப்புக் கூறுவதைக் கண்டு மகாத்மா மட்டற்ற ஆத்திரமும் எரிச்சலுமடைந்தார். "சர்க்காரின் அறியாமையை அகற்றுவதற்காகவும்கூட நான் எனது உயிரைக் கொடுத்து அவர்களது முடிவை எதிர்க்கவேண்டுமென்று எனது அந்தராத்மா கட்டளை யிடுகின்றது" என அவர் கூறியது, அவர் தியாக அக்னியில் குதிக்க வேண்டி ஏற்பட்டதன் அவசியத்தை நன்கு உணர்த்துகின்றது.

## தேச மக்களின் தவிப்பு

மகாத்மா-லேஹார்-மாக்டனால்டு கடிதப்போக்கு வரத்தின் முழு விவரத்தையும் இந்திய சர்க்கார் செப்டம்பர் மாதம் 12-ந் தேதி யன்று வெளியிட்டது. இந்தியப் பத்திரிகைகளெல்லாம் அதை 13-ந் தேதி யன்று பிரசுரித்தன. அதைப் படித்த பின்னர் தான் தேசமக்களுக்கு விஷயங்கள் தெரிய வந்தன. 20-ந் தேதி மகாத்மாஜி தமது உண்ணு விரதத்தை தொடங்கி விடுவாரே என்ற ஏக்கத்தில் மக்கள் ஆழ்ந்தனர். அவரது உயிரை எப்படிக் காப்பாற்றுவது என்ற பிரச்னையே தலைவர்களின் மூளையை உடைத்தது. தேசம் பூராவும் ஒரே பரபரப்பும், புதியதோர் விழிப்பும், தவிப்பும் காணப்பட்டது. எங்கு பார்த்தாலும் பொதுக் கூட்டங்கள் கூட்டப்பட்டன; பிரதம மந்திரி தமது தீர்ப்பைப் புனராலோசனை செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்வதாகவும், தீண்டத்தகாதவர்கள் அனுபவித்து வரும் சகலவிதமான கஷ்டங்களும், மத பூர்வமான தடைகளும் நீக்கப்பட வேண்டுமென்றும் அக்கூட்டங்கள் வற்புறுத்தின. மகாத்மாவின் அந்தச் சர்வபரித்தியாகத்தின் முன்னர் பாரதம் தன் வித்தியாசங்களனைத்தையும் மறந்து, காந்திஜியின் உயிரை எப்படியாவது காப்பதெனக் கங்கணம் பூண்டது.

தாழ்த்தப்பட்டவர்களின் தலைவரான ராவ் பகதூர் எம். ஸி. ராஜா பத்திரிகைகளுக்கு வெளியிட்ட ஒரு அறிக்கையில் மாக்டனால்டின் பிரிவினைத் திட்டத்தைப் பலமாகக் கண்டித்து "ஏழைகளுக்காகவும், வருந்தி அவதியுறுபவர்களுக்காகவும் தமது வாழ்வையே அர்ப்பித்து, உழைத்துவரும் உத்தமோத்தமரான காந்திஜி தமது வகுப்பினரின் நன்றிக்குப் பாத்திரமாகி விட்டாரென்றும், அவரது உயிரைக் காப்பாற்ற சகல முயற்சிகளும் செய்யப்பட வேண்டுமெனவும்" கூறினார். டில்லி சட்டசபையிலும் இது சம்பந்தமாக ஒரு அவசரப்பிரேரணை கிளர்த்தப்பட்டு பிரதம மந்திரியின் தீர்ப்பை அழுத்தமாகக் கண்டித்துப் பிரசங்கங்கள் செய்யப்பட்டன. 13-ந்தேதி யன்றே, லிபரல் கக்ஷிப் பிரமுகரான ஸர் டேஜ் பஹதூர் சப்ரூ ஒரு அறிக்கையை வெளியிட்டு, மகாத்மாஜியை உடனே விடுதலை செய்யவேண்டுமெனக் கோரினார்.

நமது அரும்பெருந் தலைவரான பண்டித மதன் மோஹன மாளவியாஜியின் யோசனையின் பேரில் 19-ந் தேதியன்று பம்பாயில் ஹிந்துத் தலைவர்களின் மகாநாட்டைக் கூட்டுவதெனத் தீர்மானிக்கப்பட்டது. மகாத்மாஜி உபவாஸத்தைத் தொடங்குந்தினமாகிய செப்டம்பர் 20-ந் தேதியன்று இந்தியாவிலுள்ள முப்பத்தைந்து கோடி மக்களும் உபவாஸமிருந்து, ஆண்டவனைக் குறித்துப் பிரார்த்தனை செய்யவேண்டுமென்றும், அதற்கு முதல் நாளன்று மாலையில் கிராமங்கள் உள்பட எல்லா இடங்களிலும் பொதுக் கூட்டங்கள் கூட்டப்பட்டு, தனித்தொகுதி சம்பந்தமான தமது தீர்ப்பைப் பிரதம மந்திரி வாபீஸ் வாங்கிக் கொள்ளவேண்டு மென்றும், காந்திஜியின் உயிரைக் காப்பாற்றித் தரவேண்டும் மென்றும், கடவுளைத் தியானிக்க வேண்டுமென்றும நமது தென்னாட்டுத் தலைவர் ஸ்ரீமான் சக்கரவர்த்தி ராஜகோபலாச்சாரியார் ஒரு வேண்டுகோள் விடுத்தார்.

காந்திஜியின் உண்ணாவிரதத் தீர்மானத்தைக் கேட்டுப் பாரதநாடு மட்டுமே துக்கத்திலாழ்ந்து கிடந்ததாக எண்ணிவிடவேண்டாம். அலைகடலுக்கப்பாலுள்ளதேசங்கள்யாவும் அங்ஙனமே சோகக்கடலில் தோய்ந்தன. மகாத்மா இந்தியாவுக்குமட்டுமோ சொந்தம்? அவர் உலகிற்கே மணிபூஷணமாக விளங்குகிறாரல்லவா? ஆகவே அத்தகைய பொக்கிஷத்தை இழந்துவிட உலகம் சம்மதிக்குமா? "காந்தியின் உயிரைக் காப்பாற்ற எங்களாலியன்றதை நாங்கள் செய்தே தீருவோம்" எனக் கூறி சர்வ தேசங்களும் வெளிக் கிளம்பின.

மற்ற விஷயங்களில் தேசீய இந்தியாவுடன் வித்தியாசம் கொண்டாடும் பல தலைவர்களும், சங்கங்களும் கூட மகாத்மாவின் விடுதலையைக் கோரின. இங்கிலாந்தில் "டோரி"க் கக்ஷியினிரின் பத்திரிகையான "டைம்ஸ்" கூடக் காந்தியைச் சிறையிலேயே இறக்குமாறு விட்டுவிடக் கூடாது என எழுதியது. உபவாஸத்தைத் தொடங்குவதற்குமுன் காந்திஜி விடுவிக்கப் படலாமென ஸிம்லாவிலிருந்து பல பத்திரிகா நிருபர்கள் வெளியிட்டனர். ஆனல் அவரை விடுவிக்காமலிருப்பதற்காக திரை மறைவில் நின்று வேலை செய்த சூழ்ச்சியே இறுதியில் வெற்றிபெற்றது. மகாத்மாவும் விடுதலையடையவில்லை. சில நிபந்தனை

களின்பேரில் ஒரு தனி இடத்தில் காவலில் வைக்கப்படுவ தற்குச் சம்மதிக்க மகாத்மா மறுத்து, தாம் சிறையிலேயே இருப்பதாகக் கவர்ன்மெண்டாருக்கு அறிவித்தார். இதன் பேரில், தாழ்த்தப்பட்டவர்களின் பிரச்னை சம்பந்தமாக மட்டும் அவர் யாருடனும், எவ்விதத்திலும் கலந்து பேச வும், விவாதிக்கவும், கடிதப் போக்குவரத்துகள் நடத்திக் கொள்ளவும் சர்க்கார் பூரணமாக அனுமதித்தனர்.

## சமரஸ முயற்சி

தீண்டாமையைக் குழிவெட்டிப் புதைத்துவிட்டு, ஹரி ஜனங்களைத் தன்னுடன் வாரி அணைத்துக்கொள்ள ஹிந்து சமூகம் ஒரு பக்கம் ஜீமூதமாக வேலை செய்து வருகையில், மற்றொரு பக்கம் தேசத் தலைவர்கள் அதே பிரச்னையின் சிக் கலைத் தீர்த்து, பாபுவின் உயிரையும் தாழ்த்தப்பட்டவர்க ளின் ஜீவாதாரமான உரிமைகளையும் காப்பாற்ற முனைந்து பாடுபடலாயினர். தாழ்த்தப்பட்டவர்கள் ஹிந்து சமூகத்தி லிருந்து பிரிக்கப்படக் கூடாது என்ற விஷயத்தில் காந்திஜி எவ்வளவு உறுதியாக விருந்தாரோ, அதேமாதிரி அவ் வகுப்பினரின் பிரதிநிதியாகச் சர்க்காரால் தெரிந்தெடுக் கப்பட்டு, சர்வகக்ஷி மகாநாட்டிற்குச் சென்று, தனித் தொகுதி எண்ணத்தை நிறைவேற்றிக்கொண்டு திரும்பிய டாக்டர் அம்பேத்கர் தனித்தொகுதி விஷயத்தில் பிடிவாத மாக விருந்தார். எப்படியானாலும் ஒற்றுமையைக் காண்ப தென விரதம் பூண்டிருந்த பண்டித மாளவியாஜி அவர்கள் சற்றும் காலத்தை வீணாக்காமல், உடனே டாக்டர் அம்பேத்கரைக் கலந்து பேசினார்.

தனித்தொகுதி ஏற்பாட்டையும், ஸ்தானங்களை ஒதுக்கி வைக்கும் யோசனையையும் தாம் ஒப்புக்கொள்ள முடியாதென லண்டனில் காந்திஜி அறிவித்திருந்தார். இவ்விஷயத்தில் அவரது கருத்தை யறிந்துவர பம்பாய்த் தலைவர்கள் சிலர் அடங்கிய ஒரு தூதுகோஷ்டி புறப் பட்டது.

பம்பாய்த் தூதுகோஷ்டியினர் 18-ந் தேதி ஞாயிற்றுக் கிழமை மாலையில் எரவாடாவுக்குச் சென்று மகாத்மாவைக் கண்டனர். ஆனால் அச்சமயத்தில் மகாத்மா தமது மௌன விரதத்தைத் தொடங்கிவிட்டிருந்ததால்,

எல்லா விவாதங்களையும் எழுத்து மூல்யமாகவே நடத்த வேண்டியிருந்தது. இதை நீடித்து நடத்துவது மகாத்மாஜிக்கும் சரி, தலைவர்களுக்கும் சரி கஷ்டமா யிருந்ததால் அவர்கள் மறுதினம் பகலில் மகாத்மாவைக் காண்பதாகக் கூறிவிட்டுத் திரும்பினர்.

மறுநாள் பகல் சரியாக 1 மணிக்கு தூதுகோஷ்டியினர் மீண்டும் எரவாடாவுக்குப் போயினர். ஸ்தானங்களை ஒதுக்கிவைக்கும் விஷயத்தில் அவர்கள் யாவருக்கு மிருந்த சந்தேகங்களை மகாத்மாஜி தீர்த்து வைத்தார். அவ்விஷயத்தை தாம் முற்றிலும் எதிர்ப்பவராக விருந்தாலும் தனித்தொகுதிகள் கைவிடப்பட்டு, கூட்டுத் தொகுதிகள் யோசனை ஏற்கப்பட்டாலே அதில் ஸ்தானங்களை ஒதுக்கி வைக்கும் பிரச்னையும் ஒருவாறு தீர்ந்துவிடுகிறதென்றும், எது எப்படியாயினும் ஸ்தானங்களை ஒதுக்கி வைப்பதென்ற விஷயம் தமது உபவாஸத்தின் ஒரு அம்சமாகவிராதென்றும் அவர் உறுதி கூறினர்.

அடுத்தபடியாக பொது மக்களின் கவனம் அம்பேத்கரின் பேரில் பாய்ந்தது. ஜாதி இந்துக்களுடன் தாம் எந்த விதத்திலும் ஒப்பந்தம் செய்து கொள்வதற்கு சிறுபான்மை ஒப்பந்தம் எவ்விதத்திலும் தடைக்கல்லாக இல்லையென்று அம்பேத்கர் விளக்கிக் கூறியது நிலைமையில் முற்றிலும் மாறுதலை யுண்டு பண்ணியது.

ஹிந்துத் தலைவர்களின் முதல் கூட்டம் செப்டம்பர் மாதம் 19-ந் தேதி பம்பாயில், பண்டித மாளவியாஜியின் தலைமையின் கீழ் நடைபெற்றது. ராஜீயப் பிரச்னைகள் சம்பந்தப்பட்டமட்டில் மகாத்மாவின் நிபந்தனைகளை இன்னதென அறியாமல் தாம் எவ்வித யோசனையும் வெளியிட முடியாதென டாக்டர் அம்பேத்கர் கூறவே இக்கூட்டம் ஒத்திவைக்கப்பட்டது.

எரவாடாவில் மகாத்மாஜியைக் கண்டு திரும்பிய தூது கோஷ்டியினரின் அபிப்ராயங்களை அறிந்து கொள்ளுவதற்காக 20-ந் தேதி தலைவர்கள் மீண்டும் கூடினர். மகாத்மாஜி கூறிய கருத்து வெளியிடப்பட்டது. அம்பேத்கரும் சமரஸ மனப் பான்மையைக் காட்டினர். இத்துடன் மகாநாடு மறு தினத்திற்கு ஒத்திவைக்கப் பட்டது.

## தியாக அக்கினியில் குதித்தல்

உபவாஸ தினம் நெருங்குவதைக் கண்டு தேசம் பூரா வும் கொந்தளிப்பில் ஆழ்ந்து கிடக்கையில், மகாத்மாஜியோ சாந்தக் கடலில் திளைத்து நின்ருர். உபவாசத்தைத் தொடங்குவதற்கான பூர்வாங்க ஏற்பாடுகளை யெல்லாம் செய்துகொண்டார். உபவாஸத்தின் தத்துவத்தை விளக்கி முக்கியமான நண்பர்களுக்கும், ஆசிரம வாசிகளுக்கும் கடிதங்கள் எழுதினுர். எனது உபவாஸம் மூலமாக, தற்போது செத்துக் கிடக்கும் ஹிந்துமத உணர்ச்சிக்கே உயிரூட்ட நான் விரும்புகிறேன் என பம்பாய் சர்க்காருக்கு விடுத்த அறிக்கையில் அவர் குறிப்பிட்டார்.

இப்படியாக, நமது புருஷோத்தமனின் பிராயோபவேச தினமாகிய அந்த 20-ந் தேதியும் வந்துவிட்டது. ஜெயில் மணியும் 12 அடித்தது. அவர் சத்தியப் போரில் இறங்கி விட்டார். அச்சமயம் பாரதத் தாயும் தன் ஒப்பற்ற மைந்தனின் உயரிய தியாகங் கண்டு, வியந்து நின்றனள்; அவளுடன் உலகமும் வியப்புற்றது.

அன்று மாலை பல பத்திரிகைப் பிரதிநிதிகளுக்கு அவர் பேட்டி யளித்தார். எனது கூக்குரல் ஆண்டவனின் சன்னிதானத்தையும் அதிரச் செய்யும் என எண்ணுகிறேன், என்று அவர் கூறினுர்.

மகாத்மா மகா தியாகத்தில் இறங்கின அந்த செப்டம்பர் மாதம் 20-ந் தேதி உலக சரித்திரத்தில் பொன்னெழுத்துக்களால் பொறிக்கப்படு மென்பதில் ஐயமில்லை. அன்று நடந்த ஏகோபித்த இந்தியாவின் பிரார்த்தனை தேவலோகத்தின் கதவுகளையும் போய்த் தட்டியது.

பாரத வர்ஷத்தின் பல விடங்களிலுள்ள பல கோயில் களும், கிணறுகளும் அன்று ஹரிஜனங்களுக்குத் திறந்து விடப்பட்டன.

காந்திஜி முதல் நாளைய உபவாஸத்தைச் சௌக்கிய மாகக் கழித்துவிட்டார்.

21-ந் தேதி பூராவும் தமது காரியங்கள் எல்லாவற்றையும் அவர் தாமே கவனித்தார். ஸ்நானம் செய்யும் பொழுதுகூட தமக்கு ஒருவரும் உதவி புரிய வேண்டாமெனச் சொல்லிவிட்டார்.

ஆனால் 22-ந் தேதியன்று அவரது சக்தி வெகுவாகக் குறைந்து விட்டது. அப்பொழுதுதான் அவருக்கு மற்ற வர்கள் உதவி செய்யவேண்டி யிருந்தது.

மணி ஆக ஆக, மகாத்மாவின் உடல் களைப்பும் அதிக மாயிற்று; சுவாசோசை மங்கி விட்டது; மிகவும் கடுமை யான விவாதங்கள் நடக்கையில்தான் அவரது கண்கள் சற்றுத் திறந்து ஒளி வீசின; அப்பொழுதுதான் அவரது அரிய ஆன்ம உறுதியை அனைவரும் அறிய முடிந்தது.

26-ந் தேதி, மகாத்மாவின் நிலைமை மிகுந்த கவலைக் கிடங் கொடுத்தது. டாக்டர்கள் பல முறை ஊசி மூலம் அவரது தேகத்திற்குள் மருந்தேற்றினர். கல்கத்தாவி லிருந்து கவி ரவீந்திரர் அன்று வந்து சேர்ந்தார். அதிக கஷ்டங்களிலும் தமக்கு ஆறுதலளிக்கும் நண்பனாக விளங் குவது சங்கீதம்தான் என்றும், ஆகவே கவி தாகூரிட மிருந்து சில பாட்டுக்களைப் பாடிக் கேட்க ஏற்பாடு செய்ய வேண்டு மென்றும் அவர் கேட்டுக் கொண்டார். இந்த அனுமதி உடனே அளிக்கப்பட்டது. 27, 28-ந் தேதி களிலும் தமக்கு வெகு பிரியமான பாடல்களைப் பாடச் சொல்லிக் கேட்டு, மகாத்மா மன மகிழ்ந்தார்.

## கரு மேகங்கள்

20-ந் தேதி கூடிய ஹிந்துத் தலைவர்களின் மகாநாடு ஒத்தி வைக்கப்பட்டதாயினும், பம்பாயிலுள்ள "பிர்லா ஹவுஸ்" எப்பொழுதும் தேன் கூடு மாதிரி சுறு சுறுப்புட னேயே விளங்கியது. தலைவர்கள் ஒருவரோடொருவர் கலந்து பேசிய வண்ணமாகவே யிருந்தனர். இதற்குள் மகாத்மா உபவாசத்தைத் தொடங்கிவிட்ட செய்தியும் அவர்களுக்கு எட்டி விட்டது. வெற்றியைக் காணாமல் அவர் உபவாஸத்தை நிறுத்தப் போவதில்லை யென்பதையும் அவர்கள் உணர்ந்தனர். டாக்டர் அம்பேத்கரும், அவரது நண்பரான டாக்டர் ஸோலங்கியும், பண்டித மாளவியா, ஸர் டேஜ் பகதூர் ஸப்ரூ, காங்கிரஸ் தலைவர் ஸ்ரீமான் ஸி. ராஜகோபாலாச்சாரியார், ஸர் சுனிலால் மேத்தா, ஸர் புருஷோத்தம தாஸ் தாகூர்தாஸ், ஸேத் மதுராதாஸ் வாஸன்ஜி, ஸ்ரீயுத கன்ஷியாம்தாஸ் பிர்லா ஸ்ரீயுத ஜெயகர், பாபு ராஜேந்திர பிரசாத், ஸ்ரீயுத டி. பிரகாசம் முதலிய பல

தலைவர்களைக் கண்டு பேசினர். தலைவர்கள் எவ்வளவோ வற்புறுத்திச் சொல்லியும், கூட்டுத் தொகுதிகளை ஏற்றுக் கொள்ள அம்பேத்கர் விரும்பவில்லை. இக்கிலையில் ஸர் ஸப்ரு ஒரு யோசனையைச் சமர்பித்தார். இதன்படி கூட்டுத் தொகுதிக் கொள்கை அங்கீகரிக்கப்பட்டது; தங்களுக்கு வேண்டிய அபேக்ஷகர்களைத் தாங்களே பொறுக்கிக் கொள்ளத் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு இந்தத் திட்டம் உரிமை யளித்தது இந்த யோசனையை டாக்டர் அம்பேத்கர் வரவேற்றாராயினும், பிரதம மந்திரியின் வகுப்புத் தீர்ப்பு மூலம் தங்களுக்குக் கிடைக்கும் மொத்த ஸ்தானங்களை விட அதிகமான ஸ்தானங்கள் வேண்டுமென அவர் கோரினர்.

நீர்க்கமான ஆலோசனையின் பேரில் ஸர் ஸப்ருவின் திட்டத்தை காந்திஜியிடம் சமர்ப்பிப்பதெனத் தலைவர்கள் முடிவு செய்தனர்.

ஸர் ஸப்ரு, ஸ்ரீயுத ராஜகோபாலாச்சாரியார், ஜெயகர், பிர்லா, ராஜேந்திர பாபு, தேவிதாஸ் காந்தி இவர்கள் காந்திஜியைக் கண்டார்கள். இடியிடித்த சிரிப்புடன் மகாத்மா அவர்களை வரவேற்றார். அப்பொழுது தான் அவர் உபவாஸம் ஆரம்பித்து பூரா 24 மணி நேரம் ஆயிற்று. ஸர் டேஜ் பகதூர் விவாதத்தைத் தொடங்கி, தமது திட்டத்தை விளக்கினர். அரை மணி நேரம் விவாதம் நடந்தது. இறுதியில் மகாத்மா, உங்கள் திட்டத்தை நான் ஆதரவான நோக்குடன் கவனிக்கத் தயார். "நான் முடிவு செய்வதற்குள், சாத்தியமானல் டாக்டர் அம்பேத்கரையும், ராவ் பகதூர் ராஜாவையும் பார்த்துப் பேச வேண்டும். அவர்களுடைய மனதை அறிந்தால்தான் எனது முடிவுக்கான வழியை நான் காண முடியும்" என்றார் அவர்.

தலைவர்களின் அவசர அழைப்புக் கிணங்கவும், மகாத்மாஜியின் வேண்டுகோளின் பேரிலும் அம்பேத்கரும், எம். ஸி. ராஜாவும் பம்பாயிலிருந்து பூனவிற்கு ஓடிவந்தார்கள்.

ஸப்ருவின் எழுத்து மூலமான திட்டத்தையும், அது சம்பந்தமான டாக்டர் அம்பேத்கரின் நகல் திட்டத்தையும் அவர் ஊன்றிக் கவனித்து விட்டார். அவை அவருக்குத் திருப்தி யளிக்கவில்லை. " இதில் ஒரு மாசு இருக்கிறது.

இது எனக்கு பிடிக்கவில்லை. இது மீண்டும் தீண்டத்தகாதவர்களை இரு பிரிவாகப் பிரித்துவிடும்'' என்றார் காந்திஜி.

இந்தப் பேட்டி இத்துடன் முடிந்தது. ராஜாஜியும், ராஜேந்திர பாபுவும் பண்டித மாளவியாவின் கிருகத்திற்கு விரைந்தனர். மாளவியாஜியையும், ஸர் ஸப்ரூ, ஸ்ரீயுத ஜெயகர்களையும் மகாத்மா அழைத்திருந்ததால் அவர்கள் எரவாடாவுக்குச் சென்றனர். ராஜாஜியினிடமும், ராஜேந்திர பாபுவினிடமும் முதல் தினம் என்ன அறிவித்தாரோ அதையே காந்திஜி இவர்களுக்கும் எடுத்துச் சொன்னார். அதுகேட்ட தலைவர்கள் திடுக்கிட்டுத் திரும்பினர். மாலையில் தம்மை வந்து காணும்படி அம்பேத்கருக்குத் தகவலறிவிக்குமாறு மகாத்மாஜி கேட்டுக் கொண்டார்.

இதற்குள்ளாக காந்திஜி, ராவ் பகதூர் எம் ஸி. ராஜாவையும், பம்பாயைச் சேர்ந்த ஸ்ரீயுத பி. பாலு என்பாரையும் சந்தித்துப் பேசினார். ராவ் பகதூர் ராஜா என்பவர் டில்லி சட்ட சபையில் தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் பிரதிநிதியாகக் கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்பட்ட அங்கத்தினர். அம்பேத்கரைப் போன்றல்லாமல் இவர் கூட்டுத் தொகுதியை ஆதரித்து வந்தார்.

காந்திஜிக்குத் திருப்தி யுண்டாக்கக் கூடிய எந்த ஒப்பந்தத்தையும் ஏற்படுத்துவதற்குத் தங்களாலியன்ற வரையில் தாங்கள் பாடுபடத் தயார் என்று அவர் கூறினர். தாழ்த்தப்பட்ட வகுப்பினரை ஜாதி ஹிந்துக்களுடன் சரி சமமான அந்தஸ்தில் வைக்கும் விஷயத்தில் அதிக கவனம் செலுத்துமாறு அவர்கள் காந்திஜியை வேண்டிக் கொண்டனர். அங்ஙனமே செய்வதாக அவர் உறுதியளித்தார்.

மாலையில் டாக்டர் அம்பேத்கரும், டாக்டர் ஸோலங்கியும் காந்திஜியைக் கண்டனர். பூனாவிலிருந்த எல்லாத் தலைவர்களும் அவர்களுடன் எரவாடாவுக்குச் சென்றனர்.

நீண்ட நேரம் பேசியபின் மகாத்மாவின் அந்தரங்க உணர்ச்சியை அம்பேத்கர் அறிந்து கொண்டார். காந்திஜியின் அன்பு வெள்ளத்தில் அவரும், ஸோலங்கியும் ஆழ்ந்து விட்டனர். காந்திஜியை விடத் தங்கள் நன்மைக்காக உழைக்கக் கூடியவர் வேறெவருமில்லை என்பதையும் அவர்கள் முற்றிலும் உணர்ந்தனர். இனி அவரை எதிர்த்து

கிறபதென்பது அசாத்தியமான காரியம். தங்கள் நன்மையையே அவர் தமது ஹிருதயத்தில் கொண்டிருக்கிறார் என்ற உறுதியைக் கேட்டு அவர்கள் சந்தோஷமடைந்தனர். காந்திஜிக்கு எவ்விதத்தில் தகுந்தவாறு பதிலளிப்பதென்று அவர்களுக்குப் புரியவில்லை இறுதியில், "எல்லா ஸ்தானங்களுக்கும் பூர்வாங்கத் தேர்தல் முறையை வைத்துக் கொள்ளுமாறு தாங்கள் அருளியது கண்டு ரொம்ப சந்தோஷம். நாலும் எனது பிடிவாதத்தைச் சற்று விட்டுக் கொடுத்து, கூட்டுத் தொகுதிகளை ஏற்றுக்கொள்ளுகிறேன்" என்று அம்பேத்கர் கூறினார். அவரது முகம் சந்தோஷத்தால் பூரித்தது. பிறகு தலைவர்கள் எரவாடாவைவிட்டு வெளியேறினர்.

## வெற்றி

மாளவியாஜியின் தலைமையின் கீழ் மீண்டும் தலைவர்கள் ஒன்று கூடினர். விவாதங்கள் மிகவும் ஜரூராக நடைபெற்றன.

அதற்குள் காந்திஜி மிகவும் அபாய நிலைமைக்கு வந்து விட்டதாகத் தலைவர்களுக்குச் செய்தி கிடைத்தது. டாக்டர்களும் தைரிய மிழந்து விட்டனர் என அவர்கள் கேள்விப்பட்டனர். அப்பொழுது ஏற்கனவே இரவு ஆரம்பமாகி விட்டது. இருந்தாலும் தலைவர்கள் விஷய விவாதங்களை முடிக்கவில்லை. வாக்கெடுப்பதை ஸர் ஸப்ரூ பலமாக ஆக்ஷேபித்தார்.

அம்பேத்கர் இணங்கவில்லை. தாங்கள் ஏன் அவ்விஷயத்தில் அவ்வளவு விடாப் பிடியாக விருக்கின்றனர் என்பதை அக்கக்ஷியினர் மீண்டும் விளக்கினர். தமது கோரிக்கைகளுக்குக் காந்திஜி இணங்குவார் என்று அம்பேத்கர் பரிபூரணமாக நம்பியதால் அவர் மகாத்மாவை போய்ப்பார்ப்பதே நல்லதென தலைவர்கள் அபிப்பிராயப்பட்டனர். உடனே எல்லோரும் எரவாடாவுக்குப் புறப்பட்டனர்.

காந்திஜி, மிகவும் களைப்புற்றுக் கிடந்தார். எனினும் அவர் தலைவர்களுடன் கலந்து பேச சம்மதித்தார். அவர்களுக் கேற்பட்டுள்ள சிக்கலான விஷயத்தைப்பற்றிக் கேள்விப்பட்டுக் கவலை கொண்டார். "மகாத்மாஜி, தாங்கள்

தான் எங்கள் உதவிக்கு வர வேண்டும் ; ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பின்னர் வாக்கெடுக்கும் விஷயத்திற்கு இந் நண்பர்களில் சிலர் சம்மதிக்க மறுக்கிறார்கள். தீண்டாமையை ஒழித்துப் போட அது மிகவும் அனுகுணமாக விருக்குமென்பதை உணர்ந்தே நாங்கள் அது இருக்க வேண்டுமென வற்புறுத்துகின்றோம். எங்கள் கோரிக்கையைத் தாங்கள் ஆதரிப்பீர்கள் என நம்புகிறோம்" என்று அம்பேத்கர் பேச்சை ஆரம்பித்தார். காந்திஜி யாவற்றையும் வெகு உருக்கமாகவும், அனுதாபத்துடனும் கேட்டார். வாக்கெடுக்கப் படுவதைத் தாம் ஆட்சேபிக்காம லிருப்பது மட்டுமின்றி அதனைத் தாம் வரவேற்பதாகவும் மகாத்மா கூறியது அம்பேத்கருக்கு மகிழ்ச்சியை யூட்டியது. ஜாதி ஹிந்துக்கள் பரிக்ஷிக்கப்படும் யோசனையை அவர் ஆதரித்தார். ஆனால் அத்தகைய வாக்கெடுக்கும் காரியத்தை உடனேயோ அல்லது சமீப காலத்திலோ ஏன் நடத்தக் கூடாதென அவர் அம்பேத்கரைக் கேட்டார். இதற்கு ஒரு வருஷ காலம் தகுந்ததல்லவெனக் கருதப்பட்டால் ஐந்து வருஷங்களாக வைத்துக் கொள்ளுமாறு யோசனை சொன்னார். காந்திஜி தமது கருத்துக்களைப் பூராவாக வெளியிடுவதற்குள் டாக்டர்கள் ஓடி வந்து அவர் மேலும் சம்பாஷணைகளில் கலந்து கொள்ளக் கூடாதென எச்சரிக்கை செய்தனர். மகாத்மாவை அதிகமாகத் தொந்தரவு செய்ய இஷ்டப்படாமல் தலைவர்கள் அவரை மறுதினம் வந்து காண்பதாகக் கூறி விடை பெற்றுக் கொண்டனர்.

சனிக்கிழமை அதிகாலையில் தலைவர்களின் மகாநாடு மறுபடியும் கூடியது. பல சில்லரை விஷயங்களெல்லாம் சர்ச்சை செய்து தீர்க்கப்பட்டன. ஆனால் அம்பேத்கரின் கோரிக்கை அப்படியே முடிவு செய்யப்படாமல் கிடந்தது. அவர் மறுபடியும் காந்திஜியைச் சந்திக்க விரும்பவே, பகலில் அவரும், ஸோலிங்கியும், ராஜாஜியை அழைத்துக் கொண்டு எரவாடா போய்ச் சேர்ந்தனர். பத்து வருஷங்களுக்குப் பின் வாக்கெடுப்பதை அங்கீகரிக்குமாறு டாக்டர் மகாத்மாவைக் கேட்டுக் கொண்டார்.

"உமது வாதத்தை எவரும் ஆட்சேபிக்க முடியாது. இருந்தாலும் வாக்கெடுப்பதை ஐந்து வருஷங்களுக்குப் பின் வைத்துக் கொள்வது நல்லது. ஹிந்துக்களின் நல்லெண்ணத்தை நிரூபிக்க ஐந்து வருஷகாலம் போதுமானது.

இரண்டிலொன்றுக்கு நீங்கள் தயாராக விருக்க வேண்டும். ஒன்று ஐந்து வருஷ காலத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும், அல்லது காந்தி இறந்துவிடத் தயாராக விருக்க வேண்டும் என்று சொல்லி முடித்தார் மகாத்மா.

முடித்தாரோ, இல்லையோ, உடனே அவர் சுத்தமாகக் களைத்துப் போயிருந்ததை யாவரும் கண்டனர். காதுடன் காது வைத்துப் பேசினால் நாம் எவ்வளவு மெல்லிய குரலில் பேசுவோமோ அப்படியே அவர் பேசினார். அவரைச் சுற்றி யிருந்தவர்களில் பலர் கண்ணீரும் விட்டனர். அப்பொழுதுதான் அம்பேத்கர் என்ற கல்லும் கரைந்து விட்டதை அனைவரும் கண்டனர்; ஒப்பந்தத்திற்கு குறுக் காக விருந்த தடையும் விலக ஆரம்பித்தது.

சிறையை விட்டு வெளி வந்ததும், டாக்டர் அம்பேத் கர் தமது சிநேகிதர்களைக் கலந்து ஆலோசித்தார். ஒரு மணி நேரம் ஆழ்ந்த ஆலோசனை நடைபெற்றது. கடைசி யில் வெளி வந்ததும் அவர் "பத்து வருஷத்திற்குக் குறைந்த எந்தக் கால அளவையும் நாங்கள் ஏற்றுக்கொள்ள முடியாது" என்று கூறினார். இனிமேல் என்ன செய் வது?

மறுபடியும் நாம் எரவாடாவைத்தான் நோக்கவேண் டும். ஸ்ரீயுத ராஜகோபாலாச்சாரியார் வந்திருப்பதாக மகாத்மாவுக்கு அறிவிக்கப்பட்டது. ஒப்பந்த மேற்பட்டு விட்ட செய்தியை அவர் எல்லோருக்கும் அறிவித்தார். "நீங்கள் ஒப்புக் கொண்டே தீரவேண்டும் என எண்ணி, என்னுடைய சொந்த பொறுப்பின் பேரிலேயே நான் ஒரு ஒப்பந்தத்தை ஏற்படுத்தியிருக்கிறேன். வாக்கெடுக்கும் விஷயத்தைப் பிற்காலத்தில் பரஸ்பரம் இரு வகுப்பினரும் கலந்து முடிவு செய்துகொள்ளுவதென நாங்கள் ஒப்புக் கொண்டிருக்கிறோம். டாக்டர் அம்பேத்கரும், அவருடைய நண்பர்களும் இந்த ஏற்பாட்டுக்கு இசைகின்றனர். யாவற் றையும் காந்திஜி கவனமாகக் கேட்டார். கடைசியில் அவ ரது உதடுகளில் ஒரு புன் சிரிப்பு துள்ளி விளையாடியது. "பேஷ்!" என்று ஒரே வார்த்தையில் தமது உள்ளக் கருத் தையும், உவகையையும் வெளியிட்டார்.

ராஜாஜி உடனே தலைவர்கள் மகாநாட்டிற்கு ஓடினார் ஒப்பந்தம் மகாத்மாவின் ஆசீர்வாதத்தைப் பெற்று விட்ட.

செய்தியைக் கேட்டதும் அம்பேத்கர் அடைந்த சந்தோஷத்திற்கு எல்லையே இல்லை.

பிறகு எரவாடா ஒப்பந்தத்தின் நகல் வரையப்பட்டது. இந்த வேலை வெகு சீக்கிரத்தில் முடிந்து விட்டது. எல்லாரிடமிருந்தும் கையெழுத்துக்கள் வாங்கப்பட்டன. இங்ஙனமாக உபவாஸத்தின் ஐந்தாவது தினத்தன்று பூரண ஒப்பந்தமும் ஏற்பட்டு விட்டது. மறுதினம், அதாவது செப்டம்பர் மாதம் 25-ந் தேதி பம்பாயில் கூடிய தலைவர்கள் பூனா ஒப்பந்தத்தை உறுதிப்படுத்தியது மட்டுமின்றிச் சில தீர்மானங்களையும் நிறைவேற்றினர்.

## எரவாடா ஒப்பந்தம்

சட்ட சபைகளில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு இருக்க வேண்டிய பிரதிநிதித்துவம் சம்பந்தமாகவும், அவர்களது நன்மைகளைப் பாதித்து வரும் இதர விஷயங்களைப்பற்றியும் ஜாதி ஹிந்துக்களின் தலைவர்களுக்கும், தாழ்த்தப்பட்ட வகுப்பினரின் தலைவர்களுக்கும் ஏற்பட்ட ஒப்பந்தத்தின் முழு விவரமும் இது தான்.

1. பொதுத் தொகுதிகளிலிருந்து தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு ஸ்தானங்கள் ஒதுக்கி வைக்கப்பட வேண்டும். மாகாண சட்ட சபைகளில் அவர்களுக்கு ஒதுக்கி வைக்கப்பட வேண்டிய ஸ்தானங்களின் தொகை பின் வருமாறு :—

| | |
|---|---|
| சென்னை ... .... | 30 |
| சிந்துவுடன் கூடிய பம்பாய் ... | 15 |
| பஞ்சாப் ... ... | 8 |
| பீஹார், ஒரிஸா ... ... | 18 |
| மத்திய மாகாணம் .... | 20 |
| அஸ்ஸாம் ... ... | 7 |
| வங்காளம் ... ... | 30 |
| ஐக்கிய மாகாணம் ... ... | 20 |
| மொத்தம் | 148 |

இந்த எண்ணிக்கைகள், பிரதம மந்திரியின் தீர்ப்பில் கண்டுள்ள மாகாண சட்ட சபைகளின் மொத்த ஸ்தானங்களைப் பொறுத்துக் கணக்கிடப்பட்டிருக்கின்றன.

2. இந்த ஸ்தானங்களின் தேர்தல்கள் கூட்டுத்தொகுதிகள் மூலமாக நடைபெறும். ஆனால் இவ்விஷயத்தில் கீழ்க்கண்ட நடைமுறை அநுஷ்டிக்கப்படும்.

ஒரு தொகுதியின் பொது வாக்காளர் ஜாபிதாவில் வாக்காளர்களாகப் பதிவு செய்யப்பட்டிருக்கும் தாழ்த்தப்பட்ட வகுப்பு அங்கத்தினர் யாவரும் சேர்ந்து ஒரு தேர்தல் சபையாக அமைவர்; இவர்கள் தங்கள் வகுப்பிலிருந்து மேற்படி ஒதுக்கி வைக்கப்பட்ட ஸ்தானங்கள் ஒவ்வொன்றுக்கும் ஒற்றை ஓட்டுகள் வீதம் நான்கு அபேட்சகர்களைத் தெரிந்தெடுப்பர்; இந்தப் பூர்வாங்கத் தேர்தலில் எந்த நால்வருக்கு அதிகமான ஓட்டுகள் கிடைக்கின்றனவோ அவர்கள் தான் பொதுத் தொகுதியால் தெரிந்தெடுக்கப்படுவதற்கான அபேட்சகர்களாக நிற்பர்.

3. மாகாண சட்ட சபைகளில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குப் பிரதிநிதித்துவமும், ஸ்தானங்கள் ஒதுக்கிவைப்பதும் எவ்விதம் நடைபெறுகின்றனவோ அதே மாதிரி அதாவது, மேற் கூறிய 2-வது ஷரத்தில் கண்டுள்ள பூர்வாங்கத் தேர்தல் முறைப்படியே மத்திய சட்ட சபையிலும் அவர்களுக்குப் பிரதிநிதித்துவம் அளிக்கப்படும்; ஸ்தானங்களும் ஒதுக்கி வைக்கப்படும்.

4. மத்திய சட்ட சபையில், பிரிட்டிஷ் இந்தியப் பொதுத் தொகுதியில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் மொத்த ஸ்தானங்களில் 100க்கு 18 வீதம் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு ஸ்தானங்கள் ஒதுக்கி வைக்கப்படும்.

5. மத்திய சட்ட சபை, மாகாண சட்ட சபைகள் இவைகளின் தேர்தலுக்கு அபேக்ஷகர்களாக நிற்கும் பேர்டுக்கு அங்கத்தினர்களைத் தெரிந்தெடுக்கும் பூர்வாங்கத் தேர்தல் முறை முதல் பத்து வருஷங்களுக்குப் பின்னர் முடிவடையும்; ஆனால் கீழ்க் கண்ட 6-வது ஷரத்தில் கண்டுள்ளபடி பரஸ்பர ஏற்பாட்டின் பேரில் இந்த முறையை மேற்குறிப்பிட்ட காலத்திற்குள்ளாகவும் நிறுத்திக்கொள்ளலாம்.

6. இந்த ஏற்பாட்டில் சம்பந்தப்பட்டுள்ள வகுப்புகள் தங்களுக்குள் பரஸ்பர ஒப்பந்தத்தை ஏற்படுத்திக்கொண்டு உறுதிப்படுத்தும் வரையில், மாகாண சட்ட சபைகளிலும் மத்திய சட்ட சபைகளிலும் ஸ்தானங்களை ஒதுக்கி வைத்து தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குத் பிரதிநிதித்துவம் அளிக்

கும் முறை 1, 4-வது ஷரத்துக்களில் கண்டுள்ளபடி. அளிக்கப்பட்டு வரும்.

7. மத்திய சட்ட சபையிலும், மாகாண சட்ட சபைகளிலும் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குள்ள வாக்குரிமை லோதியன் கமிட்டி அறிக்கையில் குறிப்பிட்டுள்ளபடியிருந்துவரும்.

8. ஸ்தல ஸ்தாபனங்களின் எந்தத் தேர்தல்களிலும் அல்லது பொது உத்தியோகங்களுக்கு நியமனம் செய்யும் விஷயங்களிலும் எவருக்கும் அவர் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர் என்ற காரணத்தைக் கொண்டு யாதொரு தடைகளும் ஏற்படுத்தப்படமாட்டா.

பொது உத்தியோக நியமனங்களில் அபேக்ஷகர்களுக்கு இருக்கவேண்டிய கல்வி யோக்யதைகளைத் தழுவி, அவற்றில் தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்கு நியாயமான பிரதிநிதித்துவமேற்படுவதற்கான எல்லா முயற்சிகளும் செய்யப்படும்.

9. ஒவ்வொரு மாகாணத்திலும் கல்விக்காக சர்க்கார் அளிக்கும் நன்கொடையிலிருந்து தாழ்த்தப்பட்ட வகுப்பினருக்குக் கல்வி போதிப்பதற்கான வசதிகள் ஏற்படுத்த போதுமான தொகை ஒதுக்கி வைக்கப்படும்.

## தலைவர்கள் மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்கள்

25-ந் தேதி பம்பாயில் கூடிய தலைவர்கள் மகாநாட்டில் நிறைவேறிய தீர்மானங்களின் விவரம் :—

"இனி ஹிந்துக்களில் எவரும் பிறப்பினால் தீண்டத்தகாதவர் எனக் கருதப்படக் கூடாது. இதுவரை தீண்டத்தகாதவர்களாகக் கருதப்பட்டு வந்தவர்களுக்கு பொதுக் கிணறுகள், பொதுப் பள்ளிக்கூடங்கள், பொது ரஸ்தாக்கள், இன்னும் இதர பொது ஸ்தாபனங்கள் இவற்றை உபயோகிப்பதில் மற்ற ஹிந்துக்களுக்குள்ள அதே உரிமைகள் உண்டு. இந்தச் சீர்திருத்தம் முன்னதாகவே ஊர்ஜிதம் பெறாவிட்டால், ஸ்வராஜ்யப் பார்லிமெண்டு ஏற்பட்டதும் சட்டங்கள் ஏற்படுத்துவதில் இதுவே முதலாவதாக விருக்கும்.

"தீண்டத்தகாதவர்கள் என்று சொல்லப்படுபவர்கள் மீது ஜாதி ஹிந்துக்கள் தற்போது வழக்கம் என்ற பெய

ரால் சுமத்தி வரும் எல்லா சமூகத் தடைகளையும், அசௌகர்யங்களையும், கோயில்களுக்குள் அவர்களை அனு மதிக்க மறுத்து வரும் கொடுமையையும் விரைவில் நீக்க ஹிந்துத் தலைவர்கள் கிரமமான, சாந்த பூர்வமான எல்லா வழிகளையும் கைக்கொள்ள வேண்டுமென்றும் தீர்மானிக்கப் படுகின்றது.''

ஒப்பந்தம் ஏற்பட்டு விட்டதாயினும், மகாத்மா உப வாஸத்தை நிறுத்துவதற்கான இன்னொரு முட்டுக்கட்டை அகலாமலே யிருந்தது. இவ்வொப்பந்த சமாசாரம் காந்தி ஜிக்கு எட்டியதும், அவர் உடனே லண்டனிலிருந்த பூஜ்யர் ஆண்டிரூஸுக்கு ஒரு தந்தி யடித்தார். ஒப்பந்தம் பூராவையும் பிரிட்டிஷ் மந்திரி சபை ஏற்றுக்கொண்ட செய்தியைக் கேள்வி யுற்றால்தான் தாம் தமது உப வாஸத்தை நிறுத்த முடியும் என மகாத்மாஜி அத்தந்தியில் குறிப்பிட்டிருந்தார். மகாத்மா உபவாஸத்தை நிறுத்து வதற்காக என்னென்ன நடைமுறைகள் எடுத்துக்கொள்ள வேண்டுமோ அவை யாவையும் சற்றும் கால தாமதமின்றி உடனே எடுத்துக் கொள்ளுமாறு ஸர் ஸ்ப்ரூ, ஸ்ரீயுத அம்பேத்கர், ராவ் பகதூர் எம். ஸி. ராஜா, பண்டித மாள வியா முதலியவர்களும் தனித்தனியே பிரதம மந்திரிக்கு அவசரத் தந்தி கொடுத்தனர்.

எரவாடா ஒப்பந்தத்தைச் சர்க்கார் ஏற்றுக்கொண்டு விட்டதாக 26-ந் தேதி காலையில் இங்கிலாந்திலும், இந்தி யாவிலும் ஏககாலத்தில் அறிக்கைகள் வெளியாயின.

அப்பொழுதும் காந்திஜி தமது உபவாசத்தை நிறுத்தச் சம்மதிக்கவில்லை. கவர்ன்மெண்டு அறிக்கை பூரா வையும் தாம் படித்துப் பார்த்த பின்னர்தான் உபவாஸத்தை நிறுத்த முடியுமென அவர் தெளிவாகக் கூறி விட்டார். மாலை மணி 4 இருக்கும். சிறை இனிஸ்பெக்டர் ஜெனர லான கர்னல் டாயில் யாவரும் எதிர் பார்த்துக்கொண்டி ருந்த தஸ்தாவேஜுடன் எரவாடா வந்து சேர்ந்தார். அதை அவர் தாமே தமது கையினால் காந்திஜியிடம் சமர்ப் பித்தார்.

பிரார்த்தனைக்குப் பிறகு ஆரஞ்சு பழ ரஸத்தை உட் கொண்டு காந்திஜி தமது உபவாஸத்தை நிறுத்தினார்.

## மகாத்மாவின் அறிக்கை

உடனே மகாத்மா பத்திரிகைகள் மூலம் கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டார்:—

" ஆண்டவன் பெயரால் ஏற்றுக்கொள்ளப்பட்ட உபவாஸம் அவரது பெயராலேயே நிறுத்தப்பட்டது.

" ஹிந்து மதத்தில் தீண்டாமை என்ற விஷம் துளியாவது ஒட்டிக் கொண்டிருக்கும் வரையிலும் ஒரு முறை மூட்டப்பட்ட அந்த தியாக அக்னி அணைக்கப்படவே மாட்டாது. என்னுடைய வாழ் நாளில் இந்த தீண்டாமை ஒழியவில்லை என்றால், அந்தக் கொடுமையை அகற்றி ஹிந்து மதத்தைப் பரிசுத்தப்படுத்தத் தங்கள் உயிர்களையும் பலி கொடுக்க பல்லாயிரக் கணக்கான சீர்திருத்தக்காரர்கள் தயாராக விருக்கின்றனர்.

" எல்லோரும் தயாளத்துவம் பரஸ்பரம் விட்டுக் கொடுத்ததினாலேயே இந்த ஒப்பந்தம் ஏற்பட்டது. இவ்வொப்பந்தத்தில் எல்லா ஹிருதயங்களும் ஒன்றுபட்டன.

" ஒப்பந்தம் முடிவின் ஆரம்பமேயாகும். வருங்காலத்தில் ஜாதி ஹிந்துக்கள் செய்யவேண்டிய வேலை ஏராளமாக விருக்கின்றது ; ஹிந்துக்களில் ஏராளமான பேர்கள் பல வருஷங்களாக அனுபவித்துவரும் சமூக மதக் கொடுமைகளைப் பூராவும் அகற்ற அவர்கள் பாடுபட வேண்டும். இவ்வேலைகளைக் கவனிக்குமிடத்து, ஒப்பந்தத்தின் ராஜீய அம்சம் எவ்வளவு முக்கியமானதாயினும் அது தன் முக்கியத் தன்மையை இழந்துவிடுகின்றது.

" இச் சீர்திருத்த வேலை துரிதமாக நடந்து, சீக்கிரத்தில் மேற்படி கொடுமைகள் எல்லாம் அகலாமலிருக்குமானால், நான் உபவாஸத்தை மீண்டும் தொடங்க நேரிடும் என்ற உறுதியின் பேரிலேயே இப்பொழுது நான் உபவாஸத்தை நிறுத்தியிருக்கிறேன். ஆகவே இவ்விஷயத்தை நான் சீர்திருத்தக்காரர்களுக்கும், ஜாதி ஹிந்துக்களுக்கும் எடுத்துரைத்து எச்சரிக்கை செய்யாமல் போவேனேயானால் நான் நம்பிக்கைத் துரோக மிழைத்தவனாவேன். தீண்டாமை யொழிக்கப்படுவதற்கு நான் ஒரு கால வரையறையை நிபந்தனையாக ஏற்படுத்தலாமென எண்ணியிருந்

தேன்; ஆனால் அந்த வழியில் இன்னும் எனது அந்த ராத்மா திட்டமாக ஆக்ஞை யிடவில்லை. விடுதலைச் செய்தி தீண்டத்தகாதவர்கள் வீடு தோறும் பரவ வேண்டும்; சீர் திருத்தக்காரர்கள் ஒவ்வொரு கிராமத்திற்கும் சென்று வேலை செய்ய ஆரம்பித்தால்தான் அந்தக் காரியம் கைகூடும். ஆனால் ஒரு விஷயத்தை மட்டும் அவர்கள் மறந்து விடக் கூடாது. நாடெங்கும் ஏற்பட்டுள்ள புதிய ஊக்கத்திலும், மீண்டும் நான் தியாக அக்கினியில் குதிக் காமலிருக்கும்படி என்னைக் காக்கவேண்டுமென்ற ஆசை யிலும் யாரும் நிர்ப்பந்த முறையில் இறங்கக்கூடாது. நாம் பொறுமையாக விருந்து நாமே எல்லாக் கஷ்டங்களை யும் அனுபவித்து, அறியாமையிலும் மூட நம்பிக்கைகளி லும் ஆழ்ந்து கிடப்பவர்களின் மனதை மாற்றவேண்டும்.

"இறுதியாக, என்னை வெகு ஜாக்கிரதையுடன் பரி பாலித்து வந்த கவர்ன்மெண்டுக்கும் ஜெயில் சிப்பந்திகளுக் கும் வைத்தியர்களுக்கும் எனது வந்தனம் உரித்தாகுக.

"தங்கள் தீர்ப்பை விரைவில் வெளியிட்ட பிரிட்டிஷ் மந்திரி சபைக்கும் நான் எனது வந்தனத்தைச் செலுத்து கிறேன்.

"ஆனால் அவ்வொப்பந்தம் பூராவையும் நிறைவேற்றி வைக்க நான் கட்டுப்பட்டிருக்கிறேன் என்பதை எனது ஹரி ஜன நண்பர்களுக்கு நான் உறுதி கூறுகிறேன். இந்தத் துறையில் எனது உயிரையே பிணையாக வைக்கவும் நான் தயாராக விருக்கிறேன் என்பதையும் அவர்கள் அறிந்து கொள்ளட்டும்."

## உபவாஸத்தின் பலன்

தேச மக்களுக்கு மகாத்மாஜி தமது அறிக்கை மூலம் விடுத்த இவ் வேண்டுகோள் எதிர்பார்த்த பலனைத் தராம லில்லை. அகில இந்திய தீண்டாமை விலக்குச் சங்கம் ஏற் பட்டு, அதன் மூலமாக இன்று தீண்டாமையை ஒழிக்க நாடெங்கும் நடந்துவரும் ஜீமூதமான இயக்கம் மகாத்மாவின் உபவாஸத்தால் ஏற்பட்டதேயாகும். பிரதம மந்திரியின் வகுப்புத் தீர்ப்பை உடைத் தெறிய பூனா ஒப்பந்தம் ஏற் பட்டதுமன்றி, நமது ஹிந்து சமூகம் கடைத் தேறுவதற் கான சில தீர்மானங்களும் நிறைவேற்றப் பட்டனவென்

பதை முன்னம் குறிப்பிட்டோம். அவற்றை அமுலில் கொணர்ந்து, ஹரிஜனங்களை உத்தாரணம் செய்வதற்கான மகத்தான இயக்க மொன்று நாட்டில் நடந்து வருகின்றது. கேரளத்தில் ஸ்ரீயுத கேலப்பன் என்ற வீரர் குருவாயூர் கோயிலின் முன்னே "சாகும் வரை பட்டினி" கிடக்க முற்பட்டாரென்பதை நாம் மறக்க முடியாது. ஹரிஜனங்களுக்கு ஆலயப் பிரவேசம் தந்தே யாகவேண்டு மென்ற ஆவேசம் ஹிந்து மக்களிடையே ஏற்பட்டுள்ளது. அதன் அறிகுறியாகவே கேலப்பன் உண்ணாவிரத மேற்றார். எரவாடாவிலிருந்து கிடைத்த உத்தரவு காரணமாகவே அவர் அதை நிறுத்தவேண்டி ஏற்பட்டது. குருவாயூர் கோயிலை ஹரி ஜனங்களுக்குத் திறக்குமாறு செய்யும் முயற்சியில் தாமும் தியாகம் புரியத் தயார் என்று மகாத்மாஜி உலகிற் கறிவித்தார். ஆகவே குருவாயூரைச் சுற்றியுள்ள ஹிந்து மக்களின் அபிப்பிராயம் கோயில் பிரவேச விஷயத்தில் எவ்வாறுளது என்பதைக் கண்டறிய, அங்கும் வாக்கு எடுக்கப்பட்டது. ஹிந்துக்களில் முக்கால் வாசிப் பேர்களுக்கு மேல் சாதகமாக ஓட்டு செய்தனர்.

பல்லாயிரம் ஆண்டுகளாக நாட்டைப் பற்றிக்கொண்டிருந்த தீண்டாமை என்னும் பேயை அடித்து விரட்ட வழி தெரியாது இருளில் தவித்துக் கொண்டிருந்த தேச மக்களுக்குத் காந்திஜியின் உபவாசம் ஒளி தந்தது.

காங்கிரஸ் ஸ்தாபனங்களை யெல்லாம் துரைத்தனம் சட்ட விரோதமான சபைகள் என அறிவித்துவிட்டதால் இந்த இரண்டாவது போராட்டத்தின் ஆரம்ப காலத்தில் காங்கிரஸின் அக்கிராசனராக விருந்த ஸ்ரீயுத வல்லபாய் படேல் தாம் கைதுசெய்யப்பட்ட பிறகு இன்னின்னார் தலைமைப் பதவியை ஏற்று போரை நடத்தவேண்டுமென முதலிலேயே திட்டம் போட்டிருந்தனர். இதனையொட்டி சர்தார்ஜி கைதியானதற்குப் பிறகு பாபுராஜேந்திர பிரசாத், டாக்டர் அன்ஸாரி, சர்தார் சார்துல் சிங்கவீரர், கங்காதர ராவ் தேஷ்பாண்டே, டாக்டர் கிச்சிலு, ஸ்ரீமான் ராஜகோபாலாச்சாரியார், ஸ்ரீயுத ஆனே இவர்கள் 1932-ம் வருஷம் ஜனவரி முதல் 1933-ம் வருஷம் ஜூலை மாதம் வரையில் காங்கிரஸ் அக்கிராசனராக இருந்து போரை அணி வகுத்தனர். 1932-ம் வருஷம் ஜனவரி மாதம் 4-ந் தேதியன்று சர்க்கார் மகாத்மாவைக் கைது

செய்து போரைத் தொடங்கியதால் 1933-ம் வருஷம ஜனவரி மாதம், அதே தினம் நாடெங்கும் திருநாளாகக் கொண்டாடப்பட்டு, போரின் விவரங்கள் விஸ்தரிக்கப்பட்டன. அன்று நடந்த கூட்டங்களில் ஏராளமான பேர்கள் கைதியாயினர்; ஆயிரக் கணக்கானவர்களுக்குத் தடியடிப் பிரயோகம் கிடைத்தது.

மார்ச்சு மாதம் 31-ந் தேதி கல்கத்தாவில் காங்கிரஸ் மகாசபை கூடியது. சர்க்காரின் தடை அமுலிலிருந்த காலத்தில், டில்லி காங்கிரஸைப் போலவே இத் திருக் கூட்டமும் நடந்தது. பண்டித மாளவியா இதற்குத் தலைமை வகிக்க இசைந்திருந்தார். ஆனால் அவர் கல்கத்தாவை அடைவதற்கு முன்னமேயே அரசாங்கம் அவரைப் பிடித்துச் சிறைப்படுத்தியது. இவருடன் ஸ்ரீமதி நேரு வும், டாக்டர் சையத் முகம்மதும், இன்னும் சிலரும் கைது செய்யப்பட்டனர். காங்கிரஸ் ஆக்டிங் தலைவராகிய ஸ்ரீயுத ஆனேயும் இதே சமயத்தில் கைதியானார். உபசாரணைக் கமிட்டி அங்கத்தினர்களும் சிறைப்படுத்தப்பட்டனர். பல தலைவர்களுக்குக் கல்கத்தா செல்லக் கூடாதென தடை உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. இவர்களில் முக்கியமானவர்கள் ஸ்ரீமதி சென்குப்தாவும், டாக்டர் ஆலமுமாவர். பிரதிநிதிகளில் சுமார் ஆயிரம் பேர்கள் காங்கிரஸுக்குப் புறப்பட விருக்கையிலோ அல்லது நடுவழியிலோ கைது செய்யப்பட்டனர். இவ்வளவையும் சமாளித்துக்கொண்டு 1,100 பேர்கள் எப்படியோ கல்கத்தாவில் கூடிவிட்டனர். போலீசார் உள்ளே பிரவேசித்து தடிப்பிரயோகம் செய்தனர். பலருக்குப் படுகாய மேற்பட்டது. ஸ்ரீமதி சென்குப்தாவும், இதர பிரபலஸ்தர்களும் கைதியாயினர். சரமாரியாக விழுந்த தடியடிகளையும் தாங்கிக்கொண்டு பிரதிநிதிகளில் பலர் எழு தீர்மானங்களை நிறைவேற்றி விட்டு காங்கிரஸைக் கலைத்தனர். இக் காங்கிரஸ் சம்பந்தமாகக் கைது செய்யப்பட்டவர்களில் அநேகம் பேர்கள் காங்கிரஸ் முடிந்ததும் விடுதலை பெற்றனர். சிறையினின்று வெளி வந்ததும் பண்டித மாளவியா நேரே கல்கத்தாவிற்குச் சென்று, காங்கிரஸைக் கலைக்கும் வகையில் கவர்ன்மெண்டார் கையாண்ட மிருகத்தனத்தை அலசிக்காட்டி, இவ்விஷயத்தில் தகுந்த விசாரணையை நடத்தும்படி அர

சாங்கத்தாரை அறை கூவியழைத்தார். ஆனால் அரசாங்கமோ வாளாவிருந்து விட்டது.

இதனையடுத்து எதிர்பாராத சம்பவம் ஒன்று நிகழ்ந்தது. அதுதான் மகாத்மாஜியின் விடுதலை. தாமே ஏற்றுக் கொண்ட காரியத்தைச் செவ்வனே நிறைவேற்றிவைக்கவும் ஹரிஜன இயக்கத்தை வலுப்படுத்தவும் வேண்டி காந்திஜி இருபத்தோரு நாள் உபவாசத்தை ஏற்றுக் கொண்டார். இது மே மாதம் 8-ந் தேதி தொடங்கும் மகாத்மாவின் கருத்தை யறிந்த அரசாங்கம் அன்றே அவரை விடுதலை செய்தது. சிறையினின்று வெளிப் போந்ததும் காந்திஜி நாட்டினர் நிலையை உள்ளவாறு அறிந்து, சட்டமறுப்புப் போரை ஆறு வாரங்களுக்கு நிறுத்தி வைக்கலாமென சிபார்சு செய்தார்; இதனை யேற்று ஸ்ரீயுத ஆனேயும் போரை மேற்படி காலத்திற்கு நிறுத்தி வைத்தார். அதற்குள்ளாக, மகாத்மா வெளியிலிருப்பதால் தேசத்தின் நிலைமை குறித்துத் தலைவர்கள் ஒன்று கூடிக்கலந்து ஆலோசிக்க, அதுவே தகுந்த சமயமென பலர் அபிப்பிராயப்பட்டனர் இத்தகைய மகாநாட்டில் கலந்து கொள்ளுவதற்குக் காந்திஜி தகுந்த ஆரோக்கிய நிலையை அடைவதன் பொருட்டு சட்ட மறுப்புப்போரை நிறுத்திவைத்துள்ள காலம் மேலும் ஆறு வாரங்களுக்கு நீடிக்கப்பட்டது.

மகாத்மாவின் உபவாசம் நன்கு முடிவுபெற்றதும், 1933-ம் வருஷம் ஜூலை மாதம் 12-ந் தேதியன்று தலைவர்களின் மகாநாடு பூனாவில் கூடியது. காந்திஜி தமது மனக்கருத்தை வெளியிட்டார்; சில யோசனைகளையும் எடுத்துக் கூறினார். யாதொரு நிபந்தனையுமில்லாமல் சட்ட மறுப்புப் போரை நிறுத்திவிடுவதென்ற தீர்மானமும், தனி நபர்கள் சட்ட மறுப்பு செய்யலாம் என்ற தீர்மானமும் நிராகரிக்கப் பட்டது. சர்க்காருடன் சமரஸம் ஏற்படுத்திக் கொள்ளுவதற்காக வைஸ்ராயை பேட்டி காணுமாறு கடைசியில் மகாநாடு மகாத்மாவுக்கு அதிகாரம் தந்தது.

அதனை யொட்டி காந்திஜி இராஜப்பிரதிநிதிக்குத் தந்தி கொடுத்தார். ஆனால் பூனா மகாநாட்டு நடவடிக்கைகளைப்பற்றிய தவறான செய்திகளைக் கண்ணுற்று வைஸ்ராய் சட்ட மறுப்பு நிறுத்தப்படாத வரையில் மகாத்மாவுக்குப் பேட்டியளிக்க முடியாதெனத் தெரிவித்தார். தலைவர்களின் மகாநாடு அந்தரங்கமாக நடந்ததென்றும், அத

ஐப்பற்றிய அதிகாரம் பெருத செய்திகளை வைஸ்ராய் பார்த்து விட்டு முடிவு செய்திருப்பது தவறென்றும் கௌரவமான சமாதானத்தை அடிப்படையாக வைத்துக் கொண்டே மகாநாட்டு நடவடிக்கைகள் நிகழ்ந்தன வென்றும் காந்திஜி மறுபடியும் இராஜப்பிரதிநிதிக்கு எழுதினார். தம்மை நேரில் கண்டு பேச சந்தர்ப்பமளித்தால் உண்மை நிலைமையை எடுத்துக் காட்டுவதாகவும் கூறினார். ஆனால்சமாதானத்தை ஏற்படுத்துவதற்காக அவர் செய்த முயற்சிகள் பலித்தமடையாமல் போகவே, மீண்டும் போரை நடத்துவதென தீர்மானிக்கப்பட்டது. ஆனால் இப்போரில் மகாஜனங்களை ஆழ்த்துவதில்லை யென்றும், தனிப்பட்ட நபர்களைக் கொண்டே போரை நடத்துவதென்றும் முடிவாகியது.

இந்தச் சத்தியாக்கிரகத்தைக் காந்திஜி முதலில் துவக்கினர். தமது அரும்பெரும் சொத்தாகிய சபர்மதி ஆசிரமத்தைத் தியாகம் செய்து, போராட்ட காலத்தில் சொல்லற்கரிய கஷ்டங்களை யனுபவித்த கிராமவாசிகளுடன் தாமும் பங்கெடுத்துக் கொள்ளலானார். ஆசிரமத்தைக் காலிசெய்துவிட்டு, தியாக அக்னியில் குதிக்குமாறு ஆசிரமவாசிகளுக்கு உத்தரவிட்டார். பின்னர் ஆசிரமத்தைச் சேர்ந்த ஜங்கம சொத்துக்களை யெல்லாம் பொது ஜன உபயோகத்திற்காக சில ஸ்தாபனங்களின் வசம் ஒப்படைத்தார்; வரி செலுத்தும் உபத்திரவத்தில் பிறரை ஆழ்த்த மனமில்லாமல் நிலங்கள், கட்டிடங்கள், பயிர்கள் முதலிய யாவற்றையும் அரசாங்தாருக்கே வழங்கினார். ஆனால் அதனை ஏற்க அரசாங்கம் இணங்காததால் அவர் அதை ஹரிஜன சங்கத்தாருக்கு வழங்கினார். இங்ஙனமாக அவர் உலகப் பற்றினின்றும் தம்மை விடுவித்துக் கொண்டார்.

ஆகஸ்டு மாதம் முதல் தேதியன்று மகாத்மாஜி ராஸ் என்னும் கிராமத்திற்குக் கால்நடையாகப் புறப்படுவதாக இருந்தார். 1930-ம் வருஷம் பிப்ரவரி மாதத்தில் சர்தார் வல்லபாய் படேல் கைது செய்யப்பட்ட இடம் இதுதான். ஆனால் அவர் புறப்பட விருந்த தினத்துக்கு முந்திய நாள் இரவு சர்க்கார் அவரையும், ஆசிரமத்தைச் சேர்ந்த 4 சிஷ்யர்களையும் கைது செய்தனர்; அதற்குள் துரைத்தனத்தாருக்கு என்ன தோன்றியதோ, தெரியவில்லை; 4-ந் தேதி, காந்திஜியை விடுதலை செய்து, எரவாடவை விட்டுச் சென்று, பூனாவிலேயே வசிக்கவேண்டுமென ஓர் தடை உத்தரவைப்

பிறப்பித்தனர். இவ்வுத்தரவை மீறிவிடவே, அரைமணி நேரத்திற்குள் அவர் மீண்டும் கைது செய்யப்பட்டு ஒரு வருஷ சிறை தண்டனை விதிக்கப்பட்டார்.

மகாத்மா காந்தியைப் பின்பற்றி நாடெங்கும் தலைவர்கள் வெவ்வேறு வகையில், தனிப்பட்ட முறையில் சட்ட மறுப்பு செய்து சிறைபுகுந்தனர். நூற்றுக்கணக்கான தொண்டர்களும் அவர்களைத் தொடர்ந்தனர். ஆகஸ்டு மாதம் முதல், 1934-ம் வருஷம் மார்ச்சு மாதம் வரையில் ஆயிரக்கணக்கான வீரர்களை நாட்டுச் சிறைகள் மீண்டும் ஏற்றுக்கொண்டன.

மே மாதத்தில் காந்திஜி விடுதலை யாவதற்கு முன்பு சிறையில் அவருக்கு அளிக்கப்பட்டு வந்த சௌகர்யங்கள் இப்பால் மறுக்கப்படவே, சிறைபுகுந்த சில தினங்களுக்குள் அவர் மறுபடியும் உபவாசத்தை மேற்கொள்ள நேரிட்டது. அரசாங்கம் சற்றும் விட்டுக் கொடுக்காமல் அப்படியே கல்போலிருந்தது. ஆனால் ஆகஸ்டு மாதம் 20-ந் தேதி (உபவாசத்தின் 5-வது நாள்) காந்தியின் நிலைமை கேவலமாகி விடவே சர்க்கார் அவரை கைதியாகவே பூனாவிலுள்ள ஸாஸுன் ஆஸ்பத்திரிக்கு அனுப்பினர். 23-ந் தேதியன்று அவர் ஆபத்தான நிலைமைக்கு வந்து விட்டதால் கவர்ன்மெண்டார் அன்றே அவரை யாதொரு நிபந்தனையுமின்றி விடுவித்தனர். சர்க்காரின் இச்செய்கை கண்டு காந்திஜி திகைத்துப்போனார். தமக்கு விதிக்கப்பட்டிருந்த தண்டனைக்காலம் முடியும் வரையில் அவர் ராஜீய விஷயங்களில் எவ்வித சம்பந்தமும் வைத்துக்கொள்வதில்லையெனத் தாமே தம்மை தடைப்படுத்திக் கொண்டார். அந்தக் காலத்தில் ஹரிஜன முன்னேற்ற வேலையில் ஈடுபடுவதெனத் தீர்மானித்தார்.

இச்சமயத்தில் ஸ்ரீமதி மோதிலால் நேருவின் தேகநிலை மிகக் கேவலமாகி வந்ததால், ஐக்கிய மாகாண அரசாங்கத்தார் பண்டித ஜவஹர்லால் நேருவை அவரது விடுதலைத் தினத்திற்குச் சில நாட்கள் முன்னதாகவே விடுவித்தனர். இங்ஙனமாக ஆகஸ்டு 30-ந் தேதி அவர் வெளிவந்தார். நேரே தாயாரிடம் சென்று, அங்கு சில தினங்கள் தங்கி, அவளது தேக நிலைமையில் அபிவிருத்தி ஏற்பட்டதும், பூனா போய் மகாத்மாவைக் கண்டார். 1931-ம் வருஷம்

மகாத்மா சிறைக்குப் புறப்படுவதற்குமுன் இவ்விருவரும் சந்தித்ததுதான்; அதற்குப் பிறகு இப்பொழுதே ஒருவரையொருவர் பார்த்தனர்.

தமது பிரதிக்ஞைப்படி மகாத்மாஜி நவம்பர் மாதத்தில் அகில இந்திய ஹரிஜன யாத்திரையைத் தொடங்கினர். பத்துமாத காலத்தில் பாரத நாடு முழுதும் சுற்றுப்பிரயாணம் செய்து தீண்டாமையை ஒழித்துப் போடவேண்டிய அவசியத்தை வற்புறுத்தினர். இந்தப் பிரயாணத்தால் எவ்வளவு பலன் ஏற்பட்டதென்பதை நாம் அளவிட்டுச் சொல்லமுடியாது. ஹரிஜன நிதிக்காக தேசம் பூராவும் எட்டு லக்ஷ ரூபாய் வசூலாகியது. இப் பிரயாணத்தின் போது இரண்டு துக்ககரமான சம்பவங்கள் நேரிட்டன. ஒன்று பூனாவில் நிகழ்ந்தது: பூனா முனிசிபாலிடியின் உபசார பத்திரத்தைச் சமர்ப்பிப்பதற்காகக் கூட்டப்பட்டிருந்த சமயத்தில் யாரோ ஒருவன் அவரது பிரசாரத்தை விரும்பாதவன் போலும்; அவர்மீது ஒரு வெடிகுண்டை எறியத் தீர்மானித்து ஆனல் வேறொருவரது மோட்டார்காரை அவர் ஏறிச்சென்ற வண்டி என எண்ணி அதன்மீது வெடிகுண்டை வீசி எறிந்தான். இதனால் ஏழு பேர்களுக்குக் காயமேற்பட்டது. இதற்குப் பதினைந்து தினங்களுக்குப்பிறகு அஜ்மீரில் மற்றொரு சம்பவம் ஏற்பட்டது. இங்கு யாரோ மூன்ற புரண்ட சீர்திருத்தக்காரர் ஒருவர் காசியைச் சேர்ந்த பண்டித லால்நாத் என்பவரைத் தடியாலடித்து மண்டையைப் பிளந்து விட்டனர். பண்டித லால்நாத் பரம வைதிகர். இந்தத் துராக்கிருதச் செயலுக்குப் பிராயச்சித்தமாக மகாத்மா ஏழு நாட்கள் உபவாசம் அனுஷ்டித்தார்.

1934-ம் வருஷம் ஜனவரி மாதம் 15-ந் தேதி யாது காரணமோ இயற்கை தேவி கோபாவேசம் கொண்டாள். அதன் காரணமாக பீகாரிலே பூமி வெடித்து பிரமாதமான பூகம்பம் ஏற்பட்டது. மாடமாளிகைகளும், கூடகோபுரங்களும் மண்ணில் மறைந்தன. அத்துடன் வெள்ளப்பாழும் நேரிட்டது. இவ் விபத்துக்களால் உண்டான உயிர்ச்சேதத்திற்கோ அளவில்லை; பொருள் சேதமோ செப்பத்தரமன்று. முப்பதாயிரம் சதுரமைல் பாதகமடைந்தது; ஒன்றரை கோடி மக்கள் வீடு, வாசலில்லாமலும் உண்ண உணவின்றியும், உடுக்க உடையின்றியும் தவித்துத் தத்தளித்தனர்.

பீஹாரின் துயரைத் துடைக்க தேசம் பூராவுமே எழுந்து நின்றது. கோடிக் கணக்கான ரூபாய்களைக் கொடுத்து உதவினர் இந்திய மக்கள். ஏழை பங்காளனான காந்தியோ மனமுருகிப் போனார்; ஒரு மாத காலம் பீகாரிலே சுற்றித் திரிந்தார்; சில கிராமங்களைப் பார்வையிட்டார்; பாழ் பட்ட பிரதேசங்களை நேரில் கண்டார்; ஏழைமக்களின் தவிப்பை உணர்ந்தார். தமது முக்கியமானவர்களை யெல்லாம் வரவழைத்து, பீகாரின் நிவாரணத் தொண்டில் ஈடுபடுத்தினார். இவ் வுத்தம சேவையில் உயர்ந்து விளங்கினார் நமது ராஜேந்திர பாபு.

பண்டித ஜவஹர்லாலும் பீகாருக்கு விஜயஞ் செய்தார். இடிந்து கிடந்த கல் தூக்கும், மண்ணுக்கும் கீழே பலர் புதையுண்டு கிடந்ததைக் கேள்விப்பட்ட அவர் கையில் கோடரியை எடுத்துக்கொண்டு, பல தொண்டர்களுடன் சென்று அவர்களைக் காப்பாற்றலானார்? தாமே கல்லையும், மண்ணையும் கூடைகளில் வாரி அப்பால் கொட்டினார் இம் மாதிரி அவர் பீகாரில் பத்து நாள் அருஞ் சேவை புரிந்ததை அன்னை பாரத தேவி என்றும் மறக்க முடியாது.

ஆனால் அவர் அலகாபாத் வந்து சேர்ந்ததும் இந்தியச் சிறை மறுபடியும் அவரைத் தழுவிக் கொண்டது. விடுதலைக் குப் பிறகு அவர் கல்கத்தாவுக்குச் சென்றிருந்த காலையில் மீண்டும் பிரசங்கங்கள் புரிந்ததே அவர் செய்த குற்றமாம். இக் குற்றத்திற்காக அவருக்கு இரண்டு வருஷ சிறைவாசம் விதிக்கப்பட்டது.

தாங்க முடியாத அவசரச் சட்டங்கள் பிறப்பிக்கப் படுவதை அவ்வப்பொழுது தடுப்பதற்கு சட்ட சபை களிலும் வலுவான காங்கிரஸ் கட்சி ஒன்று இருக்கவேண்டு மென்ற அபிப்பிராயம் இச் சமயத்தில் நாட்டுத் தலைவர்க ளிடையே பரவி நின்றது; எனவே இது விஷயமாகக் கலந்து ஆலோசிப்பதற்காக 1934-ம் வருஷம் மார்ச்சு மாதம் 31-ந் தேதியன்று டில்லியில், டாக்டர் அன்ஸாரியின் தலைமையின் கீழ் தலைவர்கள் மகாநாடொன்று நடைபெற் றது. அகில இந்திய சுயராஜ்ஜியக் கட்சியை மீண்டும் தோற்று விப்ப தென்றும், அடுத்துவரும் இந்தியா சட்டசபைத் தேர்தலில் கலந்துகொள்ளுவதென்றும் இம் மகாநாடு தீர் மானித்தது. ஒன்று அடக்குமுறைச் சட்டங்களை ரத்து செய்யப் பாடுபடுதல்; இரண்டு வெள்ளை அறிக்கையை

நிராகரித்தல். இவ்விரண்டு பிரச்னைகளையும் வைத்துக் கொண்டு காங்கிரஸ் கட்சியின் தேர்தலில் அபேட்சகர் களாக நிற்கவேண்டுமெனவும் முடிவு செய்யப்பட்டது. சட்டமறுப்புப் போரில் ஈடுபட விருப்ப மில்லாமலோ அல்லது இயலாமலோ உள்ளவர்களில் யார் யாருக்குச் சட்டசபைகளில் நம்பிக்கை யிருக்கிறதோ அவர்கள் உடனே சட்டசபை ஸ்தானங்களைக் கைப்பற்றிக்கொள்ள வேண்டியது அவர்கள் கடமை என்றும், சட்டசபைகளைப் பற்றிய தமது கருத்து மாறவில்லையாயினும், இந்த வகை யில் தாம் தமது சகாக்களில் பலருக்கு அனுமதி கொடுக் கத் தயாராக விருப்பதாகவும் காந்திஜி டாக்டர் அன்஬ா ரிக்கு எழுதிய ஓர் கடிதத்தில் குறிப்பிட்டார். டில்லியை விடப் பெரிய மகாநாடொன்று பின்னர் ராஞ்சியில் நடை பெற்றதில் டில்லி தீர்மானங்கள் ஊர்ஜிதப்பட்டு, சுயராஜ் ஜியக் கட்சி உயிர்ப்பிக்கப்பட்டது.

நிற்க, நாட்டின் நிலைமையையும், ஜனங்களின் உணர்ச்சி நாடியையும் மகாத்மா அளந்தறிந்தார். சத்தியாக்கிரகத் தத் துவத்தையும், அஹிம்ஸா நெறியையும் ஜனங்கள் இன்னும் செவ்வையாகக் கைக்கொள்ளவில்லை என்பதைக் கண்ட அவர், தம்மைத் தவிர வேறு எவரும் சட்டமறுப்பு செய்ய வேண்டாமென காங்கிரஸுக்குச் சிபார்சு செய்யலாமென எண்ணினார்; உடனே ஏப்ரல் மாதம் 7-ந் தேதியன்று அவர் ஓர் அறிக்கையை வெளியிட்டு, குறிப்பிட்ட சில குறைகளுக்காக அல்லாமல், ஸ்வராஜ்ஜியத்தைப் பெறு வதற்காகக் காங்கிரஸ் வாதிகள் சட்ட மறுப்பு செய் வதை நிறுத்தி விடும்படி யோசனை கூறினார்.

இந்த யோசனையைப்பற்றி ஆலோசிப்பதற்காக மே மாதம் 18, 19-ந் தேதிகளில் பாடலீபுரத்தில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டம் நடை பெற்றது. மகாத்மாவின் யோசனையை இக் கூட்டம் ஏற்றுக் கொண்டது. சட்ட சபை வேலைகளைக் கவனிப்பதற்காக காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டும் ஏற்படுத்தப்பட்டது. இந்தப் போர்டு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் அதிகாரத்திற்குட்பட்டது.

# அத்தியாயம் 3

## சமயம் எதிர்பார்த்தல்

இந்திய தேசிய காங்கிரஸ் சீக்கிரம் கூடவேண்டு மென்ற விருப்பம் எங்கும் நிறைந்தபடியால் அதன் வருஷாந்தர கூட்டத்தை 1934 அக்டோபரில் கூட்டவேண்டு மென்று முடிவு செய்யப்பட்டது.

பாட்னாவில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டத்திற்கு முன்னும் பின்னும் 1934 மே மாதம் 18, 19, 20 தேதிகளில் காரியக் கமிட்டி கூடியது. சட்ட மறுப்பை நிறுத்திக்கொள்வதாக முடிவு செய்யப்பட்டபடி தேசமெங்கும் காங்கிரஸ்காரர் நடக்கவேண்டுமென்று காரியக் கமிட்டி சிபார்சு செய்தது. இயக்கமும் மே மாதம் 20-ந் தேதி முதல் நிறுத்தப்பட்டது. அதோடு கூட சாதாரண திட்டங்களை நடத்த வேண்டியதற்காக எல்லா காங்கிரஸ் கமிட்டிகளையும் புதுப்பிக்கவும் காரியக் கமிட்டி முயற்சி எடுத்துக்கொண்டது. சட்ட மறுப்பு நிறுத்தப் பட்டபடியால் உதவி தலைவர் பதவி முடிவடைந்து காரியக் கமிட்டியின் தலைமை ஸ்தானத்திற்கு ஸ்ரீஜத் ஜம்னுலால் பஜாஜ் நியமனம் பெற்றார்.

இந்தியாவில் முதன் முதல் சமதர்ம கட்சியின் அகில இந்திய மகாநாடு 17—5—1934-ல் பாட்னு நகரில் கூடியது. பிறகு பல மாகாணங்களிலும் கிளைகள் ஸ்தாபிக்கப்பட்டன. காங்கிரஸிற்குட்பட்டு அகில இந்திய சமதர்ம கட்சியொன்று ஸ்தாபிப்பதென முடிவும் தீர்மானமாகியது. சட்ட மறுப்பைக் காங்கிரஸ் நிறுத்திய பிறகு காங்கிரஸ் ஸ்தாபனங்களின்மீது கவர்ன்மெண்டார் ஏற்படுத்திய தடைகள் இயற்கையாகவே நீங்கவேண்டும் அல்லவா? பாட்னுவில் கூட்டம் நடந்த சில வாரங்களில், கவர்ன்மெண்டார் சட்ட விரோதமான கூட்டமென்று அறிக்கை செய்த பல காங்கிரஸ் ஸ்தாபனங்களை அந்தக் கட்டிலிருந்து விடுவித்தனர். மாகாண அரசாங்கங்களும் அவ்வாறே செய்தன. ஆயினும் ஹிந்துஸ்தான் சேவாதளத்தின்மீதும் குதே கிட்மட்கார்கள்மீதும் ஏற்பட்ட தடைகள் நீங்கவில்லை. இவைகள் காங்கிரஸின் கிளைகளாகிய தொண்டர்

ஸ்தாபனங்கள். சட்டமறுப்பியக்கத்தில் சம்பந்தப்பட்டதாகச் சந்தேகப்பட்ட சில ஸ்தாபனங்களின் கட்டடங்களை கவர்ன்மெண்டார் இன்னும் திருப்பிக் கொடுக்கவில்லை. குஜராத்தில் பல நிலையங்கள் இன்னும் தடை நீக்கப்படாமலே இருக்கின்றன. இந்தச் சில விலக்குகள் போக மற்றப்படி தடைகள் நீங்கின. சட்ட மறுப்புக் கைதிகளை விடுதலை செய்ததிலும் அரசாங்கத்தார் இதே விதம் நடந்து கொண்டனர். குஜராத்தில் பலர் சிறையிலும் சமஸ்தானங்களில் சிறத்தப்பட்டும் கஷ்டப்பட்டனர். மற்றும் பல இந்தியருக்கு இந்தியாவிலிருந்து வெளியே செல்ல அனுமதிச் சீட்டு மறுக்கப்பட்டது. இந்தச் சில குறைகள் அரசாங்கத்தாரால் ஏற்பட்டாலும் தேசமெங்கும் ஜூன் மாதத்திலே பல காங்கிரஸ் கமிட்டிகள் புதுப்பிக்கப்பட்டு 1932-க்கு முன் நடந்ததுபோல் வேலைகளைத் தொடங்கின. வார்தாவில் ஜூன் 12, 13 தேதிகளிலும், பம்பாயில் 17, 18 தேதிகளிலும் மீண்டும் காரியக் கமிட்டி கூடியது. அப்போது புதுக் கமிட்டிகளுக்கு நிர்மாண வேலைத்திட்டங்கள் தீர்மானிக்கப்பட்டன. ராட்டின நூல்கள் நூற்குமிடத்திலேயே ஆடைகள் நெய்து செலவிடுவது, தீண்டாமை யகற்றுவது, சமூகங்களுக்குள் ஒற்றுமை வளர்த்தல், மதுவிலக்கு, தேசியக் கல்விமுறை ஸ்தாபனம், சில்லரைத் தொழிலபிவிர்த்தி, கிராம நிர்மாண வேலைத்திட்டங்கள், மில் தொழிலாளர் ஸ்தாபனங்கள் முதலிய பலவும் சிபார்சு செய்யப்பட்டன. காங்கிரஸ்மீது தடை நீக்கியிருந்தும் அதன் கிளைகளாகிய தொண்டர் சங்கங்களுக்குத் தடையேற்படுவது ஒழுங்கற்ற முறை யென்பதை அரசாங்கத்தாருக்குக் கமிட்டி சுட்டிக் காட்டியது. அரசாங்கத்தார் எல்லைப்புற மாகாணத்து செம்படைகள்மீதுள்ள தடையை நீக்க மறுத்தனர்.

வெள்ளை யறிக்கையிலடங்கிய ஆலோசனைகள்மீதும் வகுப்புத் தீர்ப்பினிடமும் காங்கிரஸின் கொள்கை ஏற்பட வேண்டிய முறை ஆலோசனைக்கு வந்தது. காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டார் இவ்விதம் யோசித்து முடிவு செய்யுமாறு காரியக் கமிட்டியைக் கேட்டுக்கொண்டனர். இதைப் பற்றிப் பலமான வாதப் பிரதிவாதங்கள் நேர்ந்தன. பண்டித மாளவியாவும் ஸ்ரீயுத M. S. ஆனேயும் அடிப்படைக் கொள்கையில் கருத்து வேறுபட்டனர். வகுப்புத் தீர்ப்பைப்

பற்றிக் காங்கிரஸ் அதை ஏற்கவுமில்லை, மறுக்கவுமில்லை. பண்டித மாளவியாயும் ஸ்ரீயுத ஆனேயும் அதை அடியுடன் தள்ளவேண்டு மென்றனர். ஜூலை மாதம் காசியில் கூடிய காரியக் கமிட்டி கூட்டத்தில் காந்தியின் மத்தியஸ்த முயற்சியும் பலிக்காதபடியால், பார்லிமெண்டரி போர்டின் தலைமை ஸ்தானத்தை மாளவியாஜியும், காரியக் கமிட்டி ஸ்தானத்தினின்று ஆனேயும் ராஜிநாமா செய்தனர். இந்தக் காசிக் கூட்டத்தில் சுதேசியத்தைப்பற்றிக் காங்கிரஸுக்கு உள்ள கருத்தும் தெளிவாக்கப்பட்டது. ராட்டினத் தொழிலையும் கதரையுமே பெரிதும் போற்ற வேண்டிய அவசியத்தை வற்புறுத்திக் கதரை எப்போதும் காங்கிரஸ்காரர் உபயோகிக்க வேண்டுமென்று உறுதி செய்தனர். மற்றும் இந்தியாவில் குடிசைத் தொழில்களின் மூலமாகச் செய்யப்படும் சுதேசச் சரக்குகளை வளர்க்கவேண்டுமென்று அவற்றை வாங்கவும் தீர்மானம் நிறைவேறியது. விலைகளைத் திர்மானிப்பதிலும், தொழிலாளருக்குக் கூலிகள் கொடுப்பதிலும் காங்கிரஸின் நிர்வாகத்திற்கு உட்படும் தொழில்கள் எவையோ அவற்றிக்குக் காங்கிரஸ்காரர் பேராதரவு கொடுக்கவேண்டும். தேர்தல் காலங்களில் வழக்கமாகக் கதர் அணியாதவர்களுடைய ஓட்டுகளை ரத்து செய்யுமாறு தேர்தல் போர்டுக்கு அதிகாரமும் கொடுக்கப்பட்டது. காங்கிரஸ் நிர்வாக ஸ்தாபனங்களில அங்கத்தினராக இருப்பவர்கள் காங்கிரஸின் திட்டங்களை நிறைவேற்றக் கடமைப்பட்டவர்கள். இவ்வாறு காங்கிரஸ்காரரின் கடமைகளைப்பற்றி முடிவு செய்யப்பட்டது.

சட்ட மறுப்பிலீடுபட்டவர்களைச் சிறையிலிருந்து விடுவிக்க அரசாங்கத்தார் முழு மனமும் கொள்ளவில்லை என்றோம். இவர்களுள் ஸர்தார் வல்லபாய் படேல், கான் அப்துல் கபார் கான், பண்டித ஜவஹர்லால் ஆகிய மூவரையும் விடுவதற்குச் சற்றும் அரசாங்கம் சம்மதிக்கவில்லை யென்றே தோன்றியது. முதலில் கூறப்பட்ட இருவரும் அரசாங்கக் கைதிகளாக எல்லை குறிப்பிடாமல் மறியலில் வைக்கப்பட்டவர்கள். குஜராத்திலும் எல்லைப்புற மாகாணத்திலும் ஏற்பட்ட சட்ட மறுப்பு பலத்தை அரசாங்கத்தாரால் மறக்க முடியவில்லை. ஆயினும் தெய்வ சம்மதம் வேறாகியது. ஸர்தார் வல்லபாய்க்கு எப்போதுமுள்ள மூக்கு நோய் சிறைவாச கஷ்டங்களால் முதிர்ச்சி பெற்றது. அடிக்கடி வைத்

திய சோதனை நடந்தும் ஜூலை மாதம் நிலைமை தீவிரமாக முற்றி ரண சிகிச்சை செய்யவேண்டியதாயிற்று. இதற்கு சிறைவாசம் ஏற்றதல்ல வென்று அரசாங்கத்தார் கருதி 14—7—1934-ல் இவரை விடுவித்தனர்.

ஆகஸ்டு மாதம் ஸ்ரீமதி கமலா நேருவுக்கு நோய் முதிர்ச்சியடைந்து தேசமெங்கும் ஜனங்களுக்குப் பெரும் மனக்கவலை மிகுந்து விட்டது. அப்போது பண்டித ஜவஹர்லாலை 1934 கஸ்டு மாதம் 13-ந் தேதி விடுதலை செய்தனர். ஆனால் கணவரின் வரவைக் கண்ட ஸ்ரீமதி கமலா சொஸ்தமடையும் சின்னங்களையடைந்தவுடன் அரசாங்கத்தார் ஆகஸ்டு மாதம் 23-ந் தேதி மீண்டும் ஜனங்கள் எதிர்பாராத நிலையில் பண்டிதரைக் கைது செய்து சிறைக்கு இட்டுச் சென்றனர். பிறகு மீண்டும் நோய் முற்றிவிட்டது; மூன்று தடவை, ஒவ்வொரு தடவையிலும் சில மணி நேரமே, தன் மனைவியைக் காண பண்டித ஜவஹர்லால் விடுதலை செய்யப்பட்டார். அரசாங்கத்தாரின் இச்செய்கை ஜனங்களுக்குள் மிக்க அதிருப்தியை உண்டாக்கியது. எல்லைப்புற காந்தியைப்பற்றி ஒரு வார்த்தை. 1930-ம் ஆண்டிலும் பிறகு 1932—34 வரையிலும் எல்லைப்புற மாகாணம், யுத்தவீரர்களான பட்டாணியர் நிறைந்த மாகாணம், பலமான அடக்குமுறைகளைச் சிறந்த பொறுமையுடன் தாங்கி நின்றது. அந்த மாகாணத் தலைவரைச் சிறையில் வைத்ததிலிருந்து குழப்பம் தெளியவில்லை. காந்தியும் இதைப்பற்றி கவலை கொண்டிருந்தார்; யாது செய்வதென்று யோசித்துக் கொண்டிருந்தார். இப்படியிருக்கையில் ஆகஸ்டு மாதக் கடைசியில் கான் அப்துல் கபார் கானும் அவருடைய சகோதரர் டாக்டர் கான் சாகிப்பும் விடுவிக்கப்பட்டனர். ஆனால் அவர்கள் தங்கள் மாகாணத்திற்குள் செல்லக்கூடாதென்று தடுக்கப்பட்டனர். சட்டமறுப்பு நிறுத்தப்பட்ட காலமாதலால் அவர்கள் உத்திரவுக்குக் கீழ்ப்படிய வேண்டியதாயிற்று.

பண்டித மாளவியாவும் ஸ்ரீஜத் ஆனேயும் ராஜிநாமா செய்த பிறகு ஒரு மகாநாடு கூட்டினர். ஆகஸ்டு மாதம் 18, 19 தேதிகளில் கல்கத்தாவில் பண்டித மாளவியா தலைமையில் காங்கிரஸ் வாதிகளும் மற்றோரும் சேர்ந்த ஒரு மகாநாடு கூடியது. அப்போது வகுப்புத் தீர்ப்பையும் வெள்ளையறிக்கையையும், சட்டசபையிலும் வெளியிலும் எதிர்த்துக்

கிளர்ச்சி செய்யவும் இந்த லட்சியம் வளரவேண்டியதற்காக இந்தியா சட்ட சபைத் தேர்தலுக்கு அபேட்சர்களை நிறுத்தவும் தனியே ஒரு கட்சி ஸ்தாபிக்கவேண்டுமென்று தீர்மானித்தனர். தங்கள் கொள்கைகளை நிர்மாணித்துக்கொண்டு பிறகு அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியும் வகுப்புத் தீர்ப்பைப்பற்றிய கருத்தை மாற்றிக்கொள்ள ஒரு கூட்டம் கூடவேண்டுமென்று கேட்டுக்கொண்டனர். இது ஒரு தீர்மானம். இதன் பிறகு இந்த தீர்மானத்தைக் காட்டி பண்டித மாளவியாவும் ஸ்ரீஜத் ஆனேயும் காங்கிரஸ் காரியக் கமிட்டிக்கு எழுதிய கடிதம் வார்தாவில் செப்டம்பர் மாதம் 9, 11 தேதிகளில் கூடிய காரியக் கமிட்டி முன் வைக்கப்பட்டது. ஏற்கனவே செய்த முடிவில் தங்களுக்குச் சம்சயம் ஏற்படவில்லையாதலாலும் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்குப் புதிய தேர்தல்கள் நடந்துவந்தபடியாலும் கடிதத்தில் கண்டபடி அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியைக் கூட்டும் பொறுப்பைத் தாங்கள் ஏற்றுக்கொள்ளமுடியாதென்று காரியக் கமிட்டியார் முடிவுசெய்தனர். ஜனங்கள் மனதில் ஏற்பட்ட சந்தேகங்களை நிவர்த்திசெய்ய வேண்டியதற்காக பூர்ண சுயராஜ்யமே லட்சியமென்று உறுதி கூறப்பட்டது. தேசஜனங்களுக்கு ஒழுங்கான முறையில்தாங்களேபிரதிநிதிகளென உறுதிசெய்துகொள்ள படிப்படியாக நிர்மாண திட்டங்கள் நிறைவேற்ற வழிகாட்டினார்கள். ஸான்ஸிபார் இந்தியர்களுக்கு ஏற்பட்டிருக்கும் அரசியல் குறைகளை யாராய்ந்து அவர்கள்பால் அநுதாபம்செலுத்திய தீர்மானமும், தீனபந்து ஆண்ட்ரூஸின் முயற்சியைப் பாராட்டி நன்றிசெலுத்த ஒரு தீர்மானமும் இங்கு நிறைவேறின. சென்ற சில மாதங்களில் நடந்த காரியங்களால் காங்கிரஸுக்கும் தேசத்துக்கும் நன்மையேற்பட தாம் காங்கிரஸிலிருந்து விலகவேண்டியதவசிமென்று எடுத்துக்காட்டும் காரணங்களை காந்திஜி அதே கூட்டத்தில் தெரிவித்தார்.

## இரண்டாவது உண்ணாவிரதம்

1934 மே மாதம் 8-ந் தேதி காந்தி தம் இரண்டாவது நீண்ட உண்ணாவிரதத்தைத் தொடங்கினர். அன்றே அவரை அரசாங்கத்தார் சிறையினின்று விடுதலை செய்தனர். காந்தியும் ஆறு வாரம் சட்ட மறுப்பை நிறுத்திவைத்து அரசியல் கைதிகளை விடுவிக்குமாறு அரசாங்கத்தைக் கேட்

டுக் கொண்டார். ஆயினும் அரசாங்கத்தார் அதற்கு இணங்க வில்லை. இது நிற்க, உண்ணாவிரதத்தைப்பற்றிச் சிறிது விசாரிக்கலாம். இந்த உண்ணாவிரதம் ஏற்பட்டதற்குக்காரணமும் அதன் தத்துவமும் காந்தியின் மொழிகளால் விளக்கு மடைந்த சிறப்புடையதாகும். "சில நாட்களாக என்னுள்ளே ஒரு புயற்காற்று வீசிக்கொண்டிருந்தது. அதனுடன் நான் போராடிக் கொண்டிருந்தேன். ஹரிஜன நாள் கிட்டியதும் 'ஏன் அதைச் செய்யவில்லை' என்ற தொனி பலமாகியது. அதையும் நான் எதிர்த்துப் பார்த்தேன்? ஆயினும் பயன் படவில்லை. உடனே நிபந்தனையற்றதும் மாற்றமுடியாததுமான உண்ணாவிரதத்தை, திங்கட்கிழமை (மே. 8) பகல் 12 மணிக்குத் தொடங்கி மே மாதம் 29-ந் தேதி திங்கட் கிழமை பகல் 12 மணியுடன் முடிவாகக்கூடிய 21 நாள் உண்ணாவிரதத்தை மேற்கொள்வதென்று உறுதி செய்து கொண்டேன். சமீபகால சம்பவங்களை நான் கவனிக்கையில் மிகப் புனிதமான பல காரணங்கள்—சொல்லக்கூடாத பல ரகஸ்யங்கள்—இந்த விரதத்தை துரிதப்படுத்தியிருக் கின்றன. அவைகளெல்லாம் மகத்தான ஹரிஜன பிரச்னையைப்பற்றியவைகளே. என்னையும் என் சகாக்களையும் அதிக ஜாக்கிரதையா யிருக்குமாறு பரிசுத்தம் செய்யவே இது ஏற்பட்டது. இந்த உண்ணாவிரதத்தில் மற்றவர் சேர்வது அவர்களுக்கும் எனக்கும் தொல்லையைக் கொடுப்பதாகும். இந்த என் விரதமானது இனிமேல் என்னினும் அதிக பரிசுத்தவான்கள் இம்மாதிரி பல உண்ணாவிரதங்கள் எடுத்துக்கொள்ளத் தயார் . செய்வதா யிருக்கட்டும். சென்ற செப்டம்பர் மாதத்திலிருந்து இவ்வளவு மாதங்களாக நான் கவனித்து வருகிறேன். பண்டிதருடனும் பாமரருடனும் ஹரிஜனங்களுடனும் மற்றவர்களுடனும் சம்பாஷித்து வந்தேன். நான் நினைத்ததற்கு மேல் பலமடங்கு அதிகதீமைகள் இருக்கின்றன. செல்வம், சங்கநிர்மாணங்கள், மற்றும் ஹரிஜனங்களுக்கு அரசியல் பலம் ஆகிய இவைகள் அவசியமேயாயினும் இவற்றால் மாத்திரம் தீமைகள் நீங்க மாட்டா. காரியசித்திக்கு மனோபலமாகிய செல்வம், ஒழுக்கம், அதிகாரம் ஆகிய இவை வேண்டும். ஆத்ம பரிசுத்தம் என்ற ஒரு மொழியிலடங்கும். இதற்கு உண்ணாவிரதமும் பிரார்த்தனையும் அவசியமாகும்.

வரப்போகும் உண்ணாவிரதத்தைப்பற்றிச் சந்தேகம் வேண்டாம். நான் இறக்கவிலே விரும்பவில்லை. இந்த இயக்கத்திற்கு உழைக்க நான் ஜீவித்திருக்கவேண்டும். இதற்காக உயிர்த்தியாகமும் செய்ய பலம் பெறுவேன் என்றும் நம்புகிறேன். நான் வேண்டுவதெல்லாம் எனக்கும் என் சகாக்களுக்கும் பரிசுத்த வாழ்க்கை; இப்போதிருப்பதைவிட அதிக பரிசுத்தம், விசேஷ சிரத்தையும் நிவிரத் தன்மையும்; அநேக தொண்டர் தகர்க்கமுடியாத பரிசுத்த தன்மையுடன் சேவை. பயங்கரமான பாவச் செயல்கள், பரிசுத்தமற்ற தொண்டுகள் என் முன் கொண்டுவரப்பட்டன. அப்படிப் பட்டவர் இந்த இயக்கத்தை விட்டு நீங்க என் உண்ணா விரதம் உபயோகமாகட்டும். சென்ற செப்டம்பர் மாதம் நான் ஒரு குறிப்பிட்ட காரியத்திற்காக உண்ணாவிரதமிருந்தேன். இப்போது கருதியது குறிப்பிட்ட காரியமெதற்காகவுமல்ல. மகத்தான காரியம் எடுத்துக் கொள்ளும்போது பரிசுத்தம் அடைய பட்டினி விரதங்கள் ஹிந்துக்களுக்கு சகஜமாயுள்ளவை. எனக்குள் ஏற்பட்ட போராட்டமின்றியே இதை நான் தொடங்கி யிருக்கலாம். அதற்கு என்னிடம் தைரியமில்லை யென்றே நினைக்கிறேன். மகத்தான பொறுப்பு என்னை அமுக்கிவிட்டது. பலதடவை என்னை அது தூண்டிய பிறகும் நான் அதை அலட்சியம் செய்து எதிர்த்தேன்.'' 1932-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 20-ந் தேதி தொடங்கிய 'சாகும்வரை உண்ணா விரதம்' காரிய சித்தியால் 26-ந் தேதி முடிவு பெற்று புனா ஒப்பந்தம் ஏற்பட்டது. அப்போது காந்திஜி "என்னைப் பற்றிய வரையில் என் ஹரிஜன நண்பர்களுக்கு ஓர் உறுதி கூற விரும்புகிறேன். அந்த ஒப்பந்தம் முழுவதற்குமே நான் அடிமைப்பட்டவன். அதை நிறைவேற்றும் விஷயத்தில் என் உயிரையே புணையாகக் கொள்ளலாம்'' என்றார். அதுமுதல் அவர் ஹரிஜன இயக்கத்தைக் கவனித்து வருகிறார்.

காந்தி உண்ணாவிரதம் தொடங்குவதாகத் தெரிவித்த மே மாதம் 8-ந் தேதி அவரை அரசாங்கத்தார் யாதொரு நிபந்தனையுமின்றி விடுதலை செய்தார்கள். அப்போது எவரும் எதிர்பாராத நிலையில் திடீரென்று சட்ட மறுப்பியக்கத்தை ஆறு வாரங்கள் நிறுத்திவைக்க காந்தி முடிவு செய்தபடி காங்கிரஸின் தற்காலிக தலைவர் ஸ்ரீமான் M. S. ஆனே

ஓர் அறிக்கையை வெளியிட்டார். சிறிது காலத்திற்கு மாத்திரம் சட்ட மறுப்பை நிறுத்தத் தகுந்த காரணங்களிருந்தன. ஹரிஜன கிளர்ச்சி சம்பந்தமாக உண்ணாவிரதமிருக்கும்போது, அதுவும் மேலே குறிப்பிட்ட லட்சியத்துடன் இருக்கும்போது, வேறு காரியங்களில் காந்தி கருத்தைச் செலுத்தக் கூடாது. சிறைவாச காலத்தில் இந்த விசேஷ உண்ணாவிரதத்திற்காக மாத்திரம் காந்தியை கவர்ன்மெண்டார் விடுதலை செய்தபடியால் இதர காரியங்களைப் பற்றிய வரையில் தன்னைக் கைதியாகவே மதித்துக் கொள்ளவேண்டுமென்பது காந்தியின் கருத்து. சட்ட மறுப்பு செய்தவர்களுள் முக்கியமான தலைவர்கள் சிறைக்குள் இருக்கும் போது இயக்கத்தை முற்றிலும் நிறுத்திவிட எவருக்கும் உரிமையிருக்கலாகாது. சட்ட மறுப்பைப்பற்றிய கொள்கை காந்தியின் மனதில் மாறவில்லை. இவ்வளவும் சொல்லிய பிறகு சட்ட மறுப்பியக்கத்தில் சேர்ந்தவர்கள் ரகஸ்ய முறைகளைத் தழுவினார்களென்று காந்தி கண்டிக்கவேண்டியிருந்தது. "ஆர்டினன்ஸ் ஆட்சியினால் பயந்துவிட்டார்களென்பதில் சந்தேகமிருக்க முடியாது. ரகஸ்ய முறைகளும் ஒழுங்கீனத்தை வளர்த்தன" என்றார். ஆறு வார உண்ணாவிரதம் முடிந்த பிறகு அரசியல் நிலையில் தெளிவு ஏற்படாமலும் சமரச முயற்சிகள் பலிக்காமலும் போனால் ரகஸ்ய வழியை யோசிக்க மறுத்து தம்மை மீண்டும் சிறைக்கு அழைத்துச் செல்லுமாறு அரசாங்கத்தாரை வேண்டுவேனென்று காந்தி கூறும்போது அவர் கருத்து விளங்குகிறது.

சட்ட மறுப்பியக்கம் முற்றிலும் நிறுத்தப்பட்டதென்று காங்கிரஸ் சார்பில் வெளியானாலன்றி அரசியல் கைதிகளை விடுதலை செய்வதைப்பற்றி அரசாங்கத்தார் யோசிக்க முடியாதென்று தெரிவித்தனர். சட்ட விரோதமான காரியங்களை இவர்கள் நிறுத்த வேண்டியதற்காக அரசாங்கத்தார் கலந்துயோசிக்கத் தயாராயில்லை. இதுவே அரசாங்கத்தார் நிலை. மே மாதம் 9-ந்தேதி வயன்னா நகரிலிருந்து ஸ்ரீமான்கள் வி. ஜெ. படேலும் சுபாஷ் சந்திர போஸும் சேர்ந்து கையெழுத்திட்டு ஓர் அறிக்கையை வெளியிட்டனர்.

காந்தி சட்ட மறுப்பை நிறுத்திவைத்த செய்கை தன் வழி தவறியதாக (வெற்றி பெறவில்லையென்று) ஒப்புக்

கொண்டதாகும் என்பதும், "காந்தி அரசியல் தலைவர் என்ற முறையில் வெற்றிபெறவில்லை யென்பதே எங்கள் தெளிவான அபிப்பிராயம்" என்பதும், "ஆதலால் காங்கிரஸையே அடியுடன் மாற்றிப் புதுப்பித்து புதிய கொள்கை, புதிய முறை இவற்றை யுண்டாக்கிப் புதிய தலைவரையும் தேடிக் கொள்ளவேண்டும்" என்பதும், "காந்தி தன் வாழ்க்கையின் தத்துவமாக கொண்டுள்ள ஒரு கொள்கை யுடன் இந்தப் புது திட்டத்தை நடத்துவார் என்று எதிர் பார்ப்பது நீதியல்ல" என்பதும் அறிக்கையின் சாராம்சம். காங்கிரஸ் இம்மாதிரி மாறுவது திறமான காரியமென்றும் அப்படி நடைபெறா விட்டால், காங்கிரஸுக்குள் புதிய கொள்கைகளுடன் புதுக்கட்சி தோன்றவேண்டுமென்றும் அறிக்கை முடிகிறது.

இந்தியர்களுக்கு ஏற்பட்ட பலவித கவலைகளுக் கிடையில் மே மாதம் 29-ந்தேதி ஒரு ஹரிஜன பையன் கொடுத்த ஆரஞ்சு பழச் சாற்றை அருந்தி தம் உண்ணா விரதத்தை முடித்துக் கொண்டார். இது காந்தியின் நான்காவது உண்ணா விரதம். பம்பாய் கலகத்திற்காக 1921-ல் ஐந்து தினங்கள் பட்டினி கிடந்தார். 1922-ல் சௌரி சௌரா கொடுமைக்காக அதே மாதிரி ஐந்து தின விரதம் ஏற்பட்டது. 1924-ல் ஹிந்து முஸ்லீம் சச்சரவுகளுக்காக புது டில்லியில் இருபத்தி ஒரு நாட்கள் கிடந்தார். 1932 செப்டம்பரில் ஹரிஜனங்களுக்குத் தனித்தொகுதி கூடாதென்று 'சாகும்வரை உண்ணாவிரதம்' தொடங்கி ஆறு தினங்களில் வெற்றி பெற்றார். பிறகு இப்போது ஏற்பட்ட பரிசுத்த சேகர விரதம். இதன் பின்னர் புனாவில் ஏற்பட்ட முடிவுகளின்படி ராந்தி ராஸ் என்ற இடத்திற்குச் செல்லும்போது கைது செய்யப்பட்டு 4-8-1933-ல் ஒரு வருஷ தண்டனை யடைந்தார். சிறையிலிருந்து ஹரிஜன சேவை செய்ய கவர்ன்மெண்டார் முழு உரிமையும் கொடுக்க மறுத்தபடியால் அவ்வித உரிமை பெறும் வரையில் உண்ணா விரதம் மேற்கொண்டு நோய்வாய்ப்பட புனாவிலுள்ள ஸெஸ்ஸுன் ஆஸ்பத்திரியில் சிகித்சை நடந்தது. அங்கு சென்றும் உடல் நிலை அதிக கவலைக் கிடமாகியபடியால் ஐந்து நாளை பட்டினிக்குப் பிறகு ஆகஸ்டு 23-ந் தேதி விடுவிக்கப்பட்டார். அப்போது ஒரு தர்ம சங்கட நிலை ஏற்பட்டது. வெளியில் இருந்து ஆர்டினன்ஸ் ஆட்சிக்

கொடுமைகளைப் பார்த்துக்கொண்டு மௌனமா யிருக்க முடியவில்லை. சிறை சென்றாலும் ஹரிஜன இயக்கத்தை நடத்த வசதிகொடுக்க மறுத்து உடல் வருந்திய பிறகு உப யோகமற்ற நிலையில் விடுதலை செய்கிறார்கள். ஆதலால் இதற்குப்பரிகாரமாக ஒரு முடிவு செய்யப்பட்டது. சிறை வாசகாலம் நீதியிருக்கும் வரையில் தாம் நேரே, 3-8-1934 வரையில், சட்டமறுப்பி லீடுபடாமல், ஆனால் அவ்விதம் கிளர்ச்சி செய்கிறவர்கள் அஹிம்சா தர்மவழி தவறாமலிருக் கவேண்டிய உதவி மாத்திரம் செய்வ தென்றும், அவ்விதம் செய்கையில் அரசாங்கத்தார் கைது செய்து ஹரிஜன சேவைக்கும் வசதி கொடுக்க மறுத்தால் சாகும்வரை உண்ணாவிரதம் இருப்ப தென்று முடிவு செய்து விடுதலை யடைந்தாலும் நிறுத்துவதில்லையென்றும் காந்தி தீர்மா னித்து அவ்வாறே அரசாங்கத்திற்குத் தெரியப்படுத்தினர்.

இந்த முடிவால் ஹரிஜன சேவையில் அதிக கவனம் செலுத்தும் பொறுப்பு முதிர்ச்சி யடைந்து விட்டது. இக் காரியத்திற்காக இந்தியா முழுமையும் யாத்திரை செய்வ தாக காந்தி உறுதி கூறியபோதிலும் டிஸம்பா மாதம் குரு வாயூர் வேலை ஏற்பட்டது. கோயில் டிரஸ்டிகளுக்குக் கொடுக்கப்பட்ட 3 மாத கெடு முடிந்த பிறகு ஸ்ரீமான் களப்பனுடன் காந்தியும் சாகும்வரை உண்ணாவிரதம் செய்யவேண்டி வருமாதலால் கோயில்பிரவேசபிரச்னையைப் பற்றி வாக்குரிமை கேட்பதென்று முடிவு செய்து பொன் னணி தாலூகாவில் சோதனை செய்தனர். ஜனங்களில் முக்கால் பாகத்திற்கு மேல் நிச்சயமாகவே தீண்டாதார் கோயில் பிரவேசத்திற்குச் சாதகமாக இருந்தனர். இதற்குள் தீண்டாதார் கோயிற் பிரவேச மசோதா சட்ட சபைமுன் கொண்டு வரப்பட்டபடியால் குருவாயூர் பிரச்னைக்குத் தனித்த வேலை இல்லாமற் போய்விட்டது.

## சட்ட சபை பிரவேசம்

1934-ம் வருஷம் ஒரு முக்கியமான விசேஷ குணம் பொருந்தியது. சட்டமறுப் பியக்கம் நிறுத்தப் பட்டுக் காங்கிரஸின் பெயரால் சட்ட சபைப் பிரவேசம் ஆமோதிக்கப்பட்டது. சட்டமறுப்பு ஜன சமூகப் பொது கிளர்ச்சியாக இருப்பதை நிறுத்தினுல், தனிப் பட்ட சட்ட மறுப்புகளை மாகாணங்களில் நடத்துவ

தாக புறுவில் வாக்களித்த தலைவர்கள் ஒழுங்காக அதை நிறைவேற்றவில்லை. சிறையிலிருந்து வெளிப்பட்டவர்கள் மீண்டும் சிறை செல்லச் சக்தியற்றவரானார்கள். சிறையை விரும்பியவர்களுக்கு இடம் கிடைக்கவில்லை. அரசாங்கத்தார் முறை மாறியது. தடியடிகள் ஏற்பட்டன. விசாரணை சமயத்தில் சப்-ஜெயிலில் ஹிம்ஸை செய்வது, விடுவதும் மீண்டும் கைது செய்து தொல்லைப்படுத்துவதும் இம்மாதிரி முறைகள் அனுஷ்டிக்கப்பட்டன. சிறை தண்டனையால் ஏற்படக்கூடிய ஒய்வு தொண்டர்களுக்கு இல்லாமல் அலுப்படைந்தனர். பூனை எலியைக் கொல்லாமலே பிடித்துக் கவ்வி உதறுவதும் விட்டு விடுவதும், மறுபடி பிடித்து மறுபடி உதறுவதும் போல் தோன்றியது அரசாங்கத்தாரின் செய்கை. இந்த நிலைமைகளைப்பற்றி காந்தி ஏப்ரல் மாதம் கூர்ந்து கவனித்து வந்தார். காங்கிரஸுக்குள் இந்தச் சட்டமறுப்பை விரும்பாமல் சட்டசபை நுழைவையே பெரிதும் வேண்டிய பலர் இச்சமயம் கூடிக் கலந்து யோசித்து டாக்டர் அன்ஸாரியை வசமாக்கிக்கொண்டு 1-4-1934-ல்தலைவர்கள்மகாநாடொன்றை டில்லியில் நடத்தினார்கள். தேசத்தில் ஏற்பட்ட ஊக்கம் குன்றிய நிலையைப் போக்க டாக்டர் அன்சாரி முதலியவர்கள் காங்கிரஸின் பெயரால் இந்தியா சட்டசபைத் தேர்தலுக்கு நிற்கவேண்டுமென்று கருதினார்கள்.

தேசத்தில் காங்கிரஸுக்கு அதிக மதிப்பு இருக்கிறபடியால் அதை மீறிச் செல்கிறவர்களுக்கு வெற்றியேற்படாது என்பது விளங்கியது. இதற்காக மகாத்மா காந்தியை அபிப்பிராயம் கேட்க ஒரு தூதுகோஷ்டி தயார் செய்யப்பட்டது. டாக்டர் அன்ஸாரி இதற்கு முக்கிய கர்த்தா. இவருக்கும் காந்திக்கும் நடந்த கடிதப் போக்குவரவு இங்கு முக்கிய அம்சம். ஏப்ரல் மாதம் 7-ந் தேதி காந்தி ஒரு அறிக்கையை விடுத்துத் தம் கொள்கையை விளக்கினார். இங்கும் அவர் மொழிகளாலேயே கருத்தை சுருக்குவது பொருந்தும். "சட்ட மறுப்பில் ஈடுபட முடியாமலோ அல்லது விரும்பாமலோ இருக்கும் காங்கிரஸ்காரர், சட்ட சபை நுழைவில் நம்பிக்கை வைத்தால், அதற்குள் சென்று தேச மேன்மைக்கு அவர்கள் எது நலமென்று கருதுகிறார்களோ அந்த திட்டங்களை நிறைவேற்றக் கடமைப்பட்டவர்கள். இதற்காக சுயராஜ்யக்

கட்சியைப் புதுப்பிக்கும் யோசனையை வரவேற்கிறேன்." சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்துவதென்று காந்தி மிக நிதானத்துடன் முடிவு செய்தபோது சத்தியாக்கிரகத்தின் தத்துவங்களை ஜனங்கள் ஒழுங்கு தவறி கிரகித்துவிட்டனர் என்று நிச்சயமாக அறிந்தார். "குறிப்பிட்ட சில குறைகளுக்காகவன்றி சுயராஜ்யமடையப் பொதுவாக ஏற்பட்ட சட்டமறுப்பை நிறுத்திவிட விரும்புகிறேன்" என்றார். சிறிதும் பழுதுபடாமல் மிகப் பரிசுத்தமாக சத்தியாக்கிர ஆயுதத்தைக் காப்பாற்றவேண்டியதற்காக ஜனங்கள் தன் மறுப்பு, வறுமையைப் பரிந்து ஏற்றல் என்ற இரண்டிலும் நன்றாகப் பழகவேண்டுமென்றும் அதற்காக நிர்மாண திட்டங்களை நடத்தவேண்டுமென்றும் வேண்டினார். தம் அனுஷ்டானத்தால் இந்த திட்டங்கள் பரவுமாறு தொண்டர்கள் வழிகாட்ட வேண்டும். இவைகள் அறிக்கையிலடங்கியவை. டாக்டர் அன்ஸாரியும் மகாத்மாவின் சம்மதம் கிடைத்த சந்தோஷத்தை அறிக்கையாக வெளியிட்டு, தேசத்தில் அரசியல் ஊக்கத்தை எழுப்பவும் அறிஞர்களிடம் அமைதியற்ற தன்மை நீங்கவும், சட்டசபைக்குள்ளும் வெளியிலும் போராட்டம் அவசியமென்றார். ராஞ்சியில் 1934 மே மாதம் 2, 3 தேதிகளில் கூடிய மகாநாடு டில்லி தீர்மானங்களை ஆமோதித்து சுயராஜ்ய கட்சியை நிர்மாணித்துக் கொண்டது. வெள்ளை யறிக்கையை நிராகரித்தல், தேசிய விருப்பத்தை உருவாக்கக்கூடிய சர்வ கட்சி மகாநாடு கூட்டுவது, என்ற இரண்டு லட்சியங்களை ஆதாரமாகக் கொண்டு தேர்தலுக்கு நிற்கத் தீர்மானம் ஏற்பட்டது. தேச முன்னேற்றத்தைத் தடை செய்ய வல்ல சட்டங்களை ரத்து செய்வது, சீக்கிரத்தில் பூர்ண சுயராஜ்யம் அடைய முயற்சிப்பது, அரசியல் கைதிகளை விடுவிக்க முயற்சி, மற்றும் பல அவசியமான திட்டங்கள் ஆகிய எல்லாம் சுயராஜ்ய கட்சிக் கொள்கையிலடங்கின. இவைகளை ஏற்றுக்கொண்டு பாட்னாவில் மே மாதம் 18, 19 தேதிகளில் காரியக் கமிட்டி கூடி முடிவு செய்தபடியால் சுயராஜ்யக் கட்சி உரம் பெற்றது. 25 காங்கிரஸ்காரர்களுக்கு மேற்படாத ஒரு பார்லிமெண்டரி போர்டு காங்கிரஸ் காரியக் கமிட்டியின் நிர்வாகத்துக்குள் ஏற்பாடு செய்யப்பட்டதும், சட்டமறுப்பியக்கம் நிறுத்தப்பட்டதும் இந்தக் காரியக் கமிட்டிக் கூட்டத்திலேதான். 1925-ம் வருஷம் மாறுதல் வேண்டாக் கட்சியை எதிர்த்து தேசபந்து

வெற்றியடைந்த பாட்னாவில் 1934-ல் மீண்டும் சுயராஜ்யக் கட்சியை அதிக பலத்துடன் புதுப்பித்தனர். சட்ட மறுப்பியக்கத்தை நிறுத்தி காந்தி மாத்திரமே அதைக் கொள்ளலாமென்று வந்த தீர்மானம் பலமாக எதிர்க்கப்பட்டது. ஏராளமாக திருத்தப் பிரேரணைகள் முளைத்தன. இவைகளெல்லாம் காந்தியின் சாந்தமான உறுதிபெற்ற உபந்நியாசத்தின் முன் பறந்தன. சட்டசபை நுழைவை வெறுக்கிறவர்களும் காந்தியின் காங்கிரஸ் கொள்கைகளை ஏற்காத சமதர்ம வாதிகளும் பலமாகத் தாக்கினார்கள்; முடிவில் எவரும் பயன்பெறவில்லை. காந்தியின் உபந்யாசத்தில் அஹிம்ஸா தர்ம தத்துவமும் அனுபவத்தில் அது நடைபெறவேண்டிய வழிகளும் தெளிவாக்கப்பட்டன. 1922-ல் பர்தோலி தீர்மானத்தில் அப்போது ஏற்பட்ட ஹிம்சையைக் கண்டித்து ஜனங்கள் சத்தியத்தை யறியச் செய்ய முடிந்ததென்பதை காந்தி எடுத்துக் காட்டி இப்போது நடந்துவந்த இயக்கத்தில் அவ்வித தீய செய்கை இல்லாவிட்டாலும் எண்ணமும் சொற்களும் தம் நிலை தவறிவிட்டதாகக் கூறினார். "அந்த பர்தோலி தீர்மானத்தை காலஞ்சென்ற ஹகீம் சாகிப்பும் டாக்டர் அன்சாரியும் ஏற்றுக்கொள்வதற்கு அதிக கஷ்டமேற்பட்டது. அவ்விதம் நான் செய்த முடிவால் இயக்கம் மிகக் கேவலமாகத் தோற்று அழியாமல் தப்பியதென்றே கருதுகிறேன். இப்போது அஹிம்சா தர்மம் செய்கையளவில் பூர்த்தியாயினும் எண்ணத்திலும் வார்த்தைகளிலும் அடங்கி நிற்கவில்லை. என்னுடன் மிக நெருங்கிய நண்பர் சிறை விதிகளுக்குக் கட்டுப்பட மறுத்ததாகத் தெரிய வந்தது. இது சத்தியாக்கிரக தர்மமல்ல." "இந்த தீர்மானத்தை எதிர்த்தவர்களில் எவரும் சட்டமறுப்பு நிறுத்தப்பட்டதற்கு வருந்தவில்லை. நான்கூட சட்டமறுப்பை நிறுத்த வேண்டுமென்றே கேட்கிறார்கள். என் உரிமையைக் கட்டுப்படுத்த வேண்டாம். காங்கிரஸ் பெயரால் நான் நடப்பதை ஆட்சேபித்தால் அதில் ஒழுங்கு உண்டு. அவ்வித ஆட்சேபனை ஏற்படுவதை நான் மதிப்பேன். புனா மகாநாட்டில் ஒப்புக்கொள்ளப்பட்ட தனி மனிதர் சட்டமறுப்பும் காங்கிரஸ் பெயரால் ஏற்படவேண்டியது தான். அப்போது எவ்வளவு பேர் வேண்டுமானாலும் சட்டமறுப்பு நடத்தலாம். இப்போதும் அந்த தீர்மானம்—சட்ட மறுப்பு செய்ய நான் ஒருவனே என்ற நிபந்தனையுடன்—

இப்போது வருகிறது.காங்கிரஸ் பெயரால் நான் செய்வதை நீங்கள் தடை செய்யலாம். நான் சட்ட மறுப்பிலீடுபடக் கூடாதென்று என்னைக் கட்டுப்படுத்தக்கூடாது." இந்த மொழிகளால் காந்தியின் சத்தியாக்கிரக தத்துவம் விளங்கு கிறது. தைரியம் மிகுந்த சூரர்களாகிய பட்டாணியர் இந்த இயக்கத்தில் எதிர்பாராத பொறுமையையும் அஹிம்ஸா வீரத்தையும் காட்டியதை காந்தி புகழ்ந்து கூறியதுடன் சிறை செல்வதிலும் அஹிம்ஸா வழியை அப்யசிப்பதிலும் இந்தப் பட்டாணியர்களை நாமெல் லோரும் பின்பற்றினால் சுயராஜ்யம் மிகச் சமீபத்தில் வந்திருக்குமென்று பெருமையுடன் குறிப்பிட்டார். சட்ட சபை நுழைவைப்பற்றிய தீர்மானமும் மகாத்மாஜியால் கொண்டுவரப்பட்டது. அதில் தம் கருத்து சட்டசபை ஆதரவில் செல்லவில்லை யென்பதை அவர் விளக்கிவிட்டார். ஆயினும் அதனிடம் நம்பிக்கை வைப்பவர் காரியக் கமிட்டி யின் கொள்கைப்படி நடக்கவேண்டுமென்பதை வற்புறுத் தினார்.

" கான்பூரில் காங்கிரஸைப் பண்டித மோதிலால் நேரு விடமும் சுயராஜ்ய கட்சியினரிடமும் விட்டேன். பிறகு அவர்கள் சட்டமறுப்பிற்குத் திரும்பினார்கள். அதே மாதிரி இப்போதும் ஏற்படும் என்பவர்களுக்கு ஒரு வார்த்தை. இன்று நிலைமை வேறு நாம் ஒரு முறை போராடிப் பயனுமறிந்துவிட்டோம். ஆயிரக்கணக்காக சிறைகளை நாம் நிரப்பமுடியாது. அதற்காக ஸ்தம்பித்து நின்றுவிடமாட்டோம். 1922-ம் வருஷ நிலையிலிருந்து நெடுந்தூரம் சென்றுவிட்டீர்கள். முன்னைவிட இப்போது சுதந்திர நிலைக்குச் சமீபத்தில் சென்றிருக்கிறீர்கள். ஆதலால் சட்டசபைத் திட்டத்தை அங்கீகரிக்கவேண்டும். சமதர்ம கட்சியினர், பாமர ஜனங்களுடன் கலந்து அவர்க ளிடையே வேலைசெய்ய விரும்பினால் அக்காரியம் சட்ட சபைகளால் முடியாது. பாமர ஜனங்களுக்கு மத்தியில் கலந்து வேலை செய்யவேண்டும். இங்கிலாந்தில் பொது வாழ்க்கையிலீடுபடுகிற தலைவர்களும் சிறந்த பெரியாரும் காமன்ஸ் சபைக்குள் நுழைவதில்லை. மிகச் சிறந்த சக்தி வாய்ந்தவர்கள் வெளியிலேயே தங்கி உதவி செய்வர். அவர் களில் சிலர் தினசரி பத்திரிகைகளைப் படிக்கப் பொழுதில் லாதவராகவும் இருப்பர். சட்டசபை நுழைவிற்கு அனுமதி

யளிக்க, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு உரிமை யுண்டென்பது என் கருத்து" என்று காந்தி தம் கருத்தை விளக்கினர்.

பாட்ன முடிவுகளுக்குப் பிறகு காங்கிரஸின் லட்சியம் ஸ்தானபேத மடைந்தது. சட்டமறுப்பியக்கத்தை மூடி விட்டு சட்டசபை நுழைவு திட்டத்தை மேற்கொண்டனர். ஒரு வொர்க்ஷாப்பில் வேகமாகச் சுழலும் உருளையிலிருந்து பெல்டை இலகுவாகச் சுற்றும் உருளைக்கு மாற்றியது போலிருந்தது. கண்ணிமைப் பொழுதில், சட்டமறுப் பியக்கம் நின்று சட்ட சபைப் பிரவேசம் கைக் கொள்ளப் பட்டது. காந்தி மாத்திரமே சட்டமறுப்பு செய்யலாம், அவருடன் நிற்கப் பலர் தேசத்திலுண்டு என்றாலும் பாட்ன வில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியால் ஏற் பட்ட நிலை அதுதான். பாட்ன கூட்டத்திற்காக நிறுத்தி யிருந்த ஹரிஜன யாத்திரையை காந்தி தொடர்ந்து, உட் காலிலும் பிறகு ஐக்கிய மாகாணங்களிலும் நடத்தினர். அரசியல் வேலைகளில் தாம் கலக்கலாகாதென்று காந்தி குறிப்பிட்ட காலம் குறுகிவந்தது ; ஆகஸ்டு மாதம் 4-ந் தேதி, இயற்கையாக விடுதலையடைய வேண்டிய தேதி, கிட்டியது. அதன் பிறகு அவர் என்ன செய்வர் என் பதைப்பற்றிப் பேச்சுகள் எழுந்தன. இந்திய அரசாங்கத் தாரது தடையை மீறி, எல்லைப்புற மாகாணம் புகுந்து நெருக்கடி உண்டாக்குவரா ? தான் மட்டில் தனியே சட்ட மறுப்பு செய்ய உரிமை வைத்துக்கொண்டதன் கருத்து வேறு என்னவாக இருக்க முடியும் ? ஆனல், இந்தியா சட்ட சபைத் தேர்தல்களுக்கு நிற்கலாமென தேசத்திற்கு இடம் கொடுத்திருக்கிறரே ! தாமே சிறைபுகுந்து தேசத் தில் துக்கமும் குழப்பமும் நிறையுமாறு செய்வரென்று எண்ணவும் தகுமோ ? அது காந்தி குணமல்லவே ! அவர் எது செய்தாலும் செய்யாவிட்டாலும், தேர்தல்களுக்கு அவர் நின்றாலும் நிற்காமல் போனலும், தேசமெங்கும் காங்கிரஸ்காரர் செய்யவேண்டிய வேலை போதுமான அளவு நிறைந்திருந்தது. அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி தவிர மற்ற காங்கிரஸ் ஸ்தாபனங்களின்மீது அரசாங்கத்தார் ஏற்படுத்திய தடைகளை அநேகமாக நீக்கிவிட்டனர். வட மேற்கு எல்லைப்புற மாகாணத்திலும் வங்காளத்திலும் மாத்திரமே தடைகள் நீக்கப்படவில்லை. ஆகவே பல மாகா ணங்களிலும் காங்கிரஸ் இயந்திரத்தைப் புதுப்பித்து

வேலைக்கேற்றவாறு அமைக்க காங்கிரஸ்காரர் கடமைப் பட்டனர். இந்தியா சட்ட சபைத் தேர்தல்கள், ஏக்கங் கொண்டு ஊக்கம் குன்றிய இளைஞருக்கும் பெரியோருக்கும் புத்துயிரளித்தன. தற்காலிக தோல்விகளால் வெற்றி குறைபடாது என்ற உண்மை இவர்களுக்கு விளங்கவில்லை யாதலால் இவர்கள் பயங்கினர். தாங்குவதற்கு வேண்டிய நம்பிக்கையும் தைரியமும் இவர்களுக்கில்லை.

பம்பாயில் ஜூன் மாதம் 12, 13 தேதிகளில் கூடிய காரியக் கமிட்டிக் கூட்டம் நான்கு வகை நிர்மாண திட்டங் களைக் காங்கிரஸ்காரர் கைக்கொள்ளவேண்டும் என்று தீர் மானித்தது. நூல் நூற்றுக் கதர் அபிவிர்த்தி செய்வதாகிய பொருள் நிலை ஒன்று; தீண்டாமை விலக்கு, பல வகுப்பு களுக்குள் ஒற்றுமையை ஸ்தாபித்தல், பூர்ண மதுவிலக்கு இவைகளின் மூலமாக ஏற்படும் சமூகத் தொண்டு இரண்டு; தேசீய கல்விச் சாலைகள், பல வழியிலும் கிராமங் களில் சீர்திருத்தம் செய்து கிராமவாசிகளுக்கு அறிவு பரவச் செய்தல் இவைகளாலாகும் கல்வி இலாகா வேலை மூன்று; உபயோகமுள்ள சிறு கைத்தொழில்களை வளர்த் துத் தொழிலாளர் சங்கங்களும் நிர்மாணித்தலாகிய தொழில் இலாகா நான்கு. இந்த வேலைகளுக்கு மாணுக்கர்களுடைய கூட்டுறவும் விரும்பி யழைக்கப்பட்டது. 1931-ம் வருஷம் ஆகஸ்டு மாதத்திலிருந்து காங்கிரஸின் கொள்கையையும் அமைப்பையும் ஏற்றுக்கொண்டு காங்கிரஸின் அங்க மாகவே ஆகிய செஞ்சட்டை நிலயங்கள்மீதுள்ள தடை யுத்திரவு நீக்கவில்லை யென்று அரசாங்கத்துக்குத் தெரியப் படுத்தினர்கள். ஆயினும் அந்த நிலயங்களின் காரியங்கள் ஆட்சேபகரமா யிருப்பதால் தடை யுத்திரவை நீக்க முடி யாது என்று கவர்ன்மெண்டார் பதிலளித்தனர். இதே மாதிரி ஹிந்துஸ்தான சேவாதளத்தின் மீதிருந்த தடை கள் எல்லா மாகாணங்களிலும் நீக்கப்படவில்லை. பிறகு காங்கிரஸ் லட்சியத்தைவிட மிகவும் குறைந்த அளவே கொண்ட வெள்ளை யறிக்கை, காரியக் கமிட்டியால் கண்டிக் கப்பட்டது. வயது வந்த எல்லோரும் சேர்ந்து, அல்லது அநேகமாக எல்லோரும் சேர்ந்து, தேர்ந்தெடுக்கும் சர்வ கட்சி மகாநாட்டினர் நிர்மாணிக்கும் அரசியல் ஸ்தாபன மொன்றே ஏற்றுக்கொள்ளத் தக்க பரிகாரமென்றும் அவசியமானல், முக்கிய சிறுவகுப்பினர்க்குத் தனியே

தங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து அனுப்பும் உரிமையைக் கொடுக்கலாம் என்றும் ஒரு தீர்மானம் நிறைவேறியது. இந்த சர்வகட்சி மகாநாடு தனக்கு ஏற்பட்ட இதர வேலைகளுடன், சிறுபான்மையான முக்கிய சமூகங்கள் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டிய முறைகளைத் தீர்மானித்து மற்றும் அவர்களுக்கு வேண்டிய பாதுகாப்புகளையும் உண்டாக்கித் தர வேண்டும்.

அடுத்தபடியாக வகுப்புத் தீர்ப்பு வருகிறது. வெள்ளை யறிக்கையே தள்ளத் தக்கது என்றிருப்பதால் அதோடு வகுப்புத் தீர்ப்பும் ஒழிந்துபோம். ஆயினும் தேசத்தில் பல வகுப்புகளுக்குள்ளும் இந்த வகுப்பு முடிவைப்பற்றிக் கூர்மையான கருத்து வேற்றுமைகள் நிரம்பியிருப்பதால் காங்கிரஸின் அபிப்பிராயமும் அதைப் பற்றி எப்படி யிருக்கிறதென்று விளக்கவேண்டும். இந்தியாவிலுள்ள எல்லா சமூகங்களுக்கும் சமமான பிரதிநிதி ஸ்தாபனமாகக் காங்கிரஸ் அமையவேண்டி யிருப்பதால், பலமான கருத்து வேற்றுமைகளிருக்கும் வரையில் வகுப்புத் தீர்ப்பைக் காங்கிரஸ் ஏற்றுக்கொள்ளவும் கூடாது, மறுக்கவும் கூடாது. ஆனால் வகுப்புப் பிரச்னையைப்பற்றிக் காங்கிரஸ் தன் கொள்கையை மீண்டும் தெரியப்படுத்த வேண்டிய தவசியம்.

சுயமான தேசிய தன்மை வாய்ந்த முடிவைத் தவிர வேறொன்றையும் காங்கிரஸ் விவரிக்கக் கூடாது. ஆயினும் தேசியதன்மையினின்று குறைவுபட்டதானாலும், சம்பந்தப்பட்ட எல்லா கட்சியினராலும் ஒப்புக்கொள்ளப்படும் எவ்வித முடிவையும் ஏற்றுக்கொள்வதாகக் காங்கிரஸ் கட்டுப்பட்டிருக்கிறது; அதுபோலவே, அவ்வித கட்சிகளில் எந்த ஒரு கட்சியும் ஒப்புக்கொள்ளாத முடிவைத் தள்ளவும் கட்டுப்படுகிறது. தேசிய மதிப்பை நோக்கும்போது வகுப்புத் தீர்ப்பு சிறிதும் திருப்தி யளிக்காதது; வேறு காரணங்களாலும் பலமான ஆட்சேபனைகளுக்கிடமானது. எப்படியாயினும் ஒன்று மாத்திரம் நிச்சயம். வகுப்புத் தீர்ப்பினால் தீமையுண்டாகாமல் தடுக்க ஒரே வழிதானுண்டு. எல்லா கட்சிகளுக்கும் சம்மதமாகக்கூடிய சாதனங்களையும் வழிகளையும் ஆராய்ச்சி செய்து காணவேண்டும். இப்படிச் செய்யாமல் குடும்ப சம்பந்தமான இவ் விஷயத்திற்காக

பிரிட்டிஷ் அரசாங்கத்தார்களையோ வேறு அந்நிய அதிகாரிகளையோ அழைப்பதல்ல.

காங்கிரஸ் எடுத்துக்கொண்ட இந்த நிலையைப்பற்றிப் பலமான எதிர்க்கட்சி வாதங்கள் தோன்றின. பண்டித மதன் மோஹன மாளவியா கூட இதை அங்கீகரிக்க முடியாதவரானார். வெள்ளை யறிக்கையைப் போல வகுப்புத் தீர்ப்பையும் தள்ளவேண்டுமென்றார். ஹரிஜனங்களுக்கு அதிக ஸ்தானங்களை ஒதுக்கிய புனா ஒப்பந்தத்தையும் வங்காளம் எதிர்த்தது. இவற்றால் செப்டம்பர் மாதம் காங்கிரஸிற்குள் தேசிய கட்சியொன்று முளைத்து இந்தியா சட்ட சபை ஸ்தானங்களுக்கு காங்கிரஸுடன் போட்டிபோட வேறு அபேட்சகர்களையும் நிறுத்தியது. காங்கிரஸிற்குள்ளிருக்கும் முஸ்லீம் தேசியவாதிகளுடைய கருத்தையனுசரிக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டதாலேதான் காரியக் கமிட்டி வகுப்புப் பிரச்னையில் மேலே சொல்லிய முடிவுக்கு வரவேண்டியதாயிற்று. முஸ்லீம்களை அலட்சியம் செய்வதற்கில்லை. இந்த முக்கிய பிரச்னையில் காங்கிரஸின் முடிவு ஏற்படக் காங்கிரஸ், முஸ்லீம்களுடைய உணர்ச்சியை ஒதுக்கிவிட முடியவில்லை. ஆகஸ்டு மாதத்தில் காரியக் கமிட்டிக்குப் பல முக்கிய காரியங்களேற்பட்டன. கதருக்கு எதிராகப் போட்டி போட்டுக்கொண்டு சுதேசிய பிரச்னை அடிக்கடி தலை தூக்கி வந்தது. இதை விளக்கித் தெளிவு படுத்த வல்ல ஒரு தீர்மானத்தை 1934-ம் வருஷம் ஜூலை மாதம் 27-ந் தேதி முதல் 30-ந் தேதி வரையில் காசி நகரில் நடைபெற்ற கமிட்டிக் கூட்டம் நிறைவேற்றியது:—

"சுதேசிய பிரச்னையில் காங்கிரஸின் கொள்கையென்ன என்பதுபற்றிச் சந்தேகங்கள் தோன்றியபடியால், அதைப்பற்றிய காங்கிரஸின் நிலையை மீண்டும் தெளிவான மொழிகளால் உறுதி செய்வது அவசியமாகி விட்டது. சட்ட மறுப்பு கிளர்ச்சி நடைபெற்ற காலத்தில் எவ்விதம் நடந்து வந்த போதிலும் சரி! கையால் நூற்ற நூல், கையால் நெய்த கதர் ஆகிய இவைகளுக்கும் மில்களில் தயாரான ஜவுளிக்கும் காங்கிரஸ் மேடைகளிலும், காங்கிரஸ் பொருட் காட்சிச் சாலைகளிலும் போட்டி கூடவே கூடாது; காங்கிரஸ்காரர்கள் ராட்டின நூலையும் கதர் ஆடையையுமே உபயோகித்து விர்த்தி செய்யும் வழியில் நடப்பார்கள்

என்றே எதிர்பார்க்கப்படுகிறது; மற்ற எந்த ஆடையையும் ஒதுக்கவேண்டிய தவசியம்.

ஜவுளியைத் தவிர மற்ற பொருள்களைப்பற்றி எல்லா காங்கிரஸ் ஸ்தாபனங்களுக்கும் வழி காட்டுவதற்காகக் காரியக் கமிட்டி அடியிற்கண்ட தர்மத்தை ஏற்றுக்கொள்கிறது: "இந்தியாவிற்குள் குடிசைத் தொழில்களாலும் மற்ற சிறு தொழிற்சாலைகளாலும் தயார் செய்யப்பட்டு, அபிவிர்த்தியடைய ஜனங்களுக்குள் பிரசாரம் செய்ய வேண்டிய அவசியத்தை எதிர் பார்த்துக்கொண்டிருக்கும் உபயோகமுள்ள சாமான்களையே காங்கிரஸ் ஸ்தாபனங்கள் கவனித்து அவற்றிற்கே ஆதரவு கொடுக்கவேண்டும். ஆனால் அந்த சாமான்களைச் செய்யும் தொழிற்சாலைகள் வில்லை ஒழுங்குபடுத்தவும் தங்களிடம் வேலை செய்யும் தொழிலாளரது நலம் கூலி முதலியவற்றை நிதானிக்கவும் இந்தக் காங்கிரஸ் ஸ்தாபனங்களின் நிர்வாகத்திற்கு அடங்குகின்றனவா என்று கவனிக்கவும் வேண்டும்."

இந்த தர்மத்தை விளக்குவதால், காங்கிரஸ் இது வரையில் விடாமல் நடத்தி வந்த சுதேசிய கொள்கையினின்று மாறவில்லை. தேசத்தில் சுதேசிய உணர்ச்சியை வளர்ப்பதும், தான் சுதேசிய வஸ்துக்களையே சொந்த உபயோகத்திற்கு வாங்கி உபயோகிப்பதும் அவசியம் தான். மற்று இந்த தர்மத்தின் கருத்து யாது? அரசாங்க உதவியை அடையக்கூடிய நிலையில் உள்ளதும் அடைந்து வருவதுமான பெரிய தொழிற்சாலைகளுக்குக் காங்கிரஸ் ஸ்தாபனங்களின் தொண்டோ அல்லது உதவியோ தேவையில்லை என்பதே.

காங்கிரஸ் உத்தியோக ஸ்தானங்களிலுள்ளவர்கள் ஒழுங்கு முறைக்குள் அடங்கி நிற்க, காங்கிரஸ் காரியக் கமிட்டி பின்வருமாறு அபிப்பிராயப்படுகிறது: "காங்கிரஸ்காரரெல்லோரும் காங்கிரஸின் திட்டங்களிலும் கொள்கைகளிலும் நம்பிக்கையிருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி, அவற்றின்படி நடப்பார்களென்றே எதிர் பார்க்கப்படுகிறது. உத்தியோகம் வகிப்பவரும் நிர்வாக சபை அங்கத்தினரும் தங்கள் கௌரவத்திற்காக உட்படக் கட்டுப்பட்டவர்கள். மேலும் காங்கிரஸ் திட்டத்திற்கும் கொள்கைகளுக்கும் விரோதமாக நடக்கும் அல்லது பிரசாரம்

செய்யும் உத்தியோகஸ்தரும் நிர்வாகம் வகிப்பவரும், 24—6—1929-ல் ஏற்பட்ட அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியின் விதிகளின்படி ஒழுங்கு தவறியவராவர். அதற்கேற்பட்ட சிட்சைக்கு அடங்கவேண்டியவராவர்."

சோஷியலிஸ்டு என்ற சமதர்ம கட்சியினரின் திட்டத்தைப்பற்றி 1934-ம் வருஷம் ஜூன் மாதம் 18-ந் தேதி பின்வரும் தீர்மானம் காரியக் கமிட்டியால் நிறைவேற்றப்பட்டது :—

"பல வேறு கருத்துள்ளவர்கள் தனிப் பிரிவுகள் ஸ்தாபிப்பதைக் காரியக் கமிட்டி வரவேற்கிறது. ஆயினும் சொத்துக்கள் பறிமுதல் செய்வதைப்பற்றியும் வகுப்பு யுத்தம் அவசியமென்றும் தங்கு தடையில்லாமல் பேச்சுகள் தோன்றுவதால், 1931-ம் வருஷம் ஆகஸ்டு மாதம் பம்பாயில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் முடிவு செய்யப்பட்ட கராச்சி தீர்மானம், சில கொள்கைகளை விளக்குகிறதென்றும், சரியான காரணமின்றியும் பரிகாரம் செய்யாமலும் தனிச் சொத்தை பறிமுதல் செய்ய நினைக்கவுமில்லை, வகுப்புப்போரை ஆதரிக்கவுமில்லை யென்றும் காங்கிரஸ்காரருக்கு ஞாபக மூட்டுகிறது. மேலும் பறிமுதல் காரியமும் வகுப்பு யுத்தமும், காங்கிரஸ் கொள்கையாகிய அஹிம்ஸா தர்மத்திற்கு விரோதமென்று காரியக் கமிட்டி கருதுகிறது. ஆயினும் நிலமில்லாத ஏழைகளை வற்றடிக்காமல் தடுக்கும் வழியில் சொந்த சொத்துக்களை அறிவுடனும் நியாயமாகவும் அனுபவிப்பதுடன், முதலாளர் தொழிலாளர்களுக்கிடையில் உற்சாகத்துடன் கூடிய சம்பந்தம் ஏற்பட வேண்டுமென்றும் காங்கிரஸ் யோசிக்கிறதென்பது காரியக் கமிட்டியின் கருத்து."

இந்த தீர்மானம் புதிதாக ஏற்பட்ட "காங்கிரஸ் சமதர்ம கட்சி" யைக் கண்டிப்பதாகுமென்று காரியக் கமிட்டிக்குப் புகார்கள் எட்டின; அக்கட்சியின் திட்டங்களை வெறுப்பதாகு மென்றனர். எந்தக் கட்சியையும் எதன் திட்டங்களையும் எதிர்ப்பது தன் கருத்தல்லவென்றும், தீர்மானத்தில் கண்டபடி தங்கு தடையின்றிப் பேசுகிறவர்களுக்காக ஏற்பட்ட தென்றும் காரியக் கமிட்டியார் தெரிவிக்க விரும்புகிறார்கள். ஸ்ரீஜத் M. S. ஆனேயும் டாக்டர் முகம்மத் ஆலமும் வெவ்வேறு காரணங்களுக்காக

காரியக் கமிட்டியில் தமக்குள்ள ஸ்தானங்களை ராஜிநாமா செய்தனர்.

செப்டம்பர் மாதம் (1934) காங்கிரஸ் சரித்திரத்திலேயே முக்கியமான சம்பவங்கள் நேர்ந்தன. காந்தி காங்கிரஸை விடப்போகிறார் என்று பலமாக வதந்தி உலாவியது. இது வதந்தி மாத்திரமாயில்லை. ஜூலை மாத மத்தியில் தாம் ஏழு நாட்கள் உண்ணாவிரதமிருந்தபோது தம்மை வந்து பார்த்த நண்பரிடம் காந்தி தாராளமாகவே இதைத் தெரிவித்தார். வங்காளம், ஆந்திரா முதலிய மாகாணங்களிலிருந்து பல காரணங்களுக்காக வார்தாவில் காந்தியைச் சந்திக்கச் சென்ற பலரிடமும் அவர் சொல்லியிருக்கிறார். இவ்வளவு பேர்கள் அறிந்த ஒரு செய்தி, பத்திரிகைத் தொழிற் சாமர்த்தியமுள்ளவர் ருசியுடன் தேடி வெளியாக்கும் வரையில், ரகஸ்யமாக நின்றது ஆச்சரியமே. இவ் விஷயத்தைப்பற்றி காந்தி ஓர் அறிக்கையை வெளியிட்டிருக்கிறார். அதில் பல விஷயங்கள் அடங்கியிருக்கின்றன. காங்கிரஸ் அமைப்பையே மாற்றும் யோசனை அதிலடங்கியிருக்கிறது. காந்தி காங்கிரஸினின்று விலகுவதாகத் தீர்மானித்ததற்குப் பலர் பலவிதமாகப் பொருள் கூறினர். நவம்பரில் ஏற்படவிருக்கும் தேர்தல் சமயத்தில் இவர் விலகுவது தகுதியான காரியமல்லவென்று தாராளமாகக் குறை கூறினர் சிலர். நாலணா அங்கத்தினராகக்கூட காந்தி இருக்கப்போவதில்லையென்று எவரும் நினைக்கவில்லை. காங்கிரஸ் ஸ்தாபனத்திற்கு அவர் கொண்டுவரும் திருத்தங்கள் ஏற்றுக்கொள்ளப்பட்டால் அவர் காங்கிரசில் இருக்க விரும்புவார் என்று ஒரு சிலர் கருதினர். அக்டோபர் மாதக் கடைசி வாரம் பம்பாயில் கூடப்போகும் காங்கிரஸ் எல்லா சந்தேகங்களையும் விளக்கிவிடும். காங்கிரஸை விட்டே விலகுவதென்று இவர் முன்னதாகவே தீர்மானித்து விட்டால், ஏன் காங்கிரஸிற்கு இவர் வரவேண்டுமென்று கூடக் கேட்க முன் வந்தவர் சிலருண்டு. வேறு சிலர், தம் வழியில் காங்கிரஸை இவர் திருத்த முயன்ற பிறகு, மாறிய உருவத்தில் அதை ஏற்றுக்கொள்கிறவர் கலங்கி வருந்த, காங்கிரஸை இவர் ஏன் விடவேண்டுமென்று கேட்டனர். இவ்விதம் பல கருத்துக்களும் ஜனங்களது மனதில் தோன்றிய பல அம்சங்களாம். இவ்வாறு எவரும் தீர்மானித்து அபிப்பிராயம் கூறியதாகக் கொள்ளக்கூடாது.

சத்தியசந்தர்களான சில பெரியார்கள் தம் உள்ளுணர்ச்சியால் முடிவு செய்கிறார்கள். சில பக்தர்கள் பிறருடைய தீர்மானங்களை அப்படியே ஏற்றுக்கொள்கிறார்கள். சில அறிஞர் ஆராய்ச்சி செய்து முடிவு செய்கின்றனர். இவ்வாறு பல விதமான குணமுள்ளவர்களும் காந்தியின் அறிக்கையால் கலங்கினார்கள். ஆனால் அவருடைய மகத்தான சக்தியையும், புத்தி பலத்தாலன்றி அந்தர்க்கதமாக எழுந்த தொனியினது லீலா பலத்தின் மூலமாகக் கிடைத்த, மாற்றமுடியாத முடிவையும் எதிர்த்து நிற்க எவரும் துணிவு கொள்ளவில்லை.

வார்த்வாகஞ்சிலிருந்து செப்டம்பர் மாதம் 17-ந் தேதி மகாத்மா காந்தி பின்வரும் சாரமடங்கிய ஓர் அறிக்கையை வெளியிட்டார் :—

"நான் காங்கிரஸிலிருந்து விலகப்போவதாகப் பரவிய வதந்தி உண்மைதான். ஆயினும் சென்ற வாரம் வார்தாவுக்கு, காங்கிரஸ் காரியக் கமிட்டி கூட்டத்திற்கும் பார்லிமெண்டரி போர்டு கூட்டத்திற்கும் வந்திருந்த என் நண்பர்கள் தெரிவித்த காரணங்களுக்காக, காங்கிரஸிலிருந்து விலகுவதானாலும், வரப்போகிற காங்கிரஸ் கூட்டத்திற்குப் பிறகு அவ்விதம் செய்வதாக ஒப்புக்கொண்டேன். காங்கிரஸிலிருந்துகொண்டே அதன் நிர்வாகத்தில் கலந்துகொள்ளாமல் நான் இருக்கலாமென்று பண்டித கோவிந்த வல்லப பண்டும், ஸ்ரீமான் ராபி ஆமத் கித்வாயும் யோசனை செய்தனர். அதை ஸ்ரீமான் வல்லபாய் படேலும், மௌலானா அப்துல் கலாம் அஸாத்தும் பலமாகத் தடுத்தனர். ஸ்ரீமான் வல்லபாய் படேல் மாத்திரம் நான் காங்கிரஸிலிருந்து விலகவேண்டிய காலம் வந்துவிட்டது என்ற என் கருத்தை ஏற்றுக்கொண்டார். எல்லாவற்றையும் யோசித்து அக்டோபர் மாதத்திய காங்கிரஸ் கூட்டம் வரையிலாவது முடிவு செய்ய வேண்டாமென்று தீர்மானித்தேன். காங்கிரஸ் அறிஞர்களில் பெரும்பாலார் என் கருத்துகளையும் வழியையும் கண்டு அலுப்படைந்தார்களென்றும், அவற்றை அடிப்படையாகக் கொண்டு ஏற்படும் திட்டங்கள் அவர்களுக்கு விருப்பத்தை யுண்டுபண்ணவில்லையென்றும், காங்கிரஸ் இயற்கையாக வளர்ச்சி பெறுவதற்கு நான் தடையாக நிற்பதாகவும், தேச ஜனங்களின் பிரதிநிதித்துவம் அமைந்து ஜனநாயகம் வாய்ந்திருக்கவேண்டிய காங்கிரஸ்

என்றால் அதிக்கமடையப்பெற்று பகுத்தறிவைத் தாராள மாக உபயோகிக்காம லிருக்கிறதென்றும் நான் கருதி யிருந்தேன். அது உண்மைதானா என்று அறிய, நான் விலகு வதை ஒத்திப்போடும் காரியம் உபயோகமாகும் என்று நினைத்து அவ்விதம் செய்யத் துணிந்தேன். அதற்காக என் திட்டங்களை வெளிப்படையாக விளக்கிவிடுகிறேன். அவற்றைக்கொண்டு காங்கிரஸ்காரர் ஓட் செய்யட்டும் அநேக காங்கிரஸ் அறிஞர் விரும்பும் வழிகளுக்கு நேர் விரோதமான வழியில் நான் செல்வதாகத் தோன்றுகிறது. என்மீதுள்ள அன்பின் மிகுதியால் அவர்கள் இஷ்டம் போல் செல்ல முடியாதவர்களாகிறார்களென்றும் நினைக்கி றேன். என்னிடம் அவர்கள் செலுத்திய அன்பும் பக்தியும் வேறெந்த தலைவருக்கும் கிடைக்க முடியாது. காங்கிரஸ் முன் நான் கொண்டுவரும் கொள்கைகளை அவர்கள் ஆட் சேபித்த போதிலும் முடிவில் என் சார்பாகவே அவர்கள் நின்றனர். இன்னும் அவர்களை அவ்விதம் கஷ்டப்படுத்தி னால் அவர்கள் தாங்கமாட்டார்கள். அவர்களுடைய பற்று மிகுதி, எனக்கும் அவர்களுக்குமுள்ள அடிப்படையான வேற்றுமைகளை நான் காணமுடியாமற் செய்துவிடாது.

ராட்டினமும் கதரும் எனக்கு எல்லாவற்றையும் விட முதல் ஸ்தானம் பெறவேண்டும். காங்கிரஸ் அறிஞரிடம் நூற்றல் தொழில் அநேகமாக நீங்கிவிட்டது. அதில் அவர் களுக்கு நம்பிக்கையும் போய்விட்டது. என் கட்சியை அவர்கள் ஏற்றுக்கொள்ளுமாறு செய்வதானால் நாலணா சந் தாவை விட்டு தினமும் நூற்க வேண்டும் என்றே சொல் வேன். காங்கிரஸ் அங்கமாக இருக்கவேண்டிய கதர் வேலையை ஜனங்கள் ஒழுங்காக நடத்தாமல் வேஷப்போட நான் காரணமென்று கூறுகிறவருமுண்டு. இந்தக் கதர் திட் டத்தில் நம்பிக்கை யில்லாமல் எனக்காகவே அதை ஏற்றுக் கொண்டனர் என்று நான் அறிந்திருக்கவேண்டும். அப்படி யிருந்தும், உழைக்கும் தொழிலையுடைய லட்சக்கணக்கான ஜனங்கள் சார்பாகவும் பரிசுத்தமான அஹிம்ஸா தர்மத் தோடும் இந்தியா பூர்ண சுதந்திர மடையவேண்டுமானால், இந்த அம்சம் அவசியமென்றே நான் நம்புகிறேன்; இந்த நம்பிக்கை தடித்துக்கொண்டும் வருகிறது. படித்த வகுப் பினரும் வேலையின்றி வருந்தும் அரைப்பட்டினியாளரும் கூட ராட்டினத்தையும் கதரையும் இயற்கையாகக்

கொள்ளத்தக்க காலம் வரவேண்டும். அவ்விதம் செய்யாமல் நம் நாட்டில் மின்சொல்லியவர்கள் தொழிலின்றிச் சுமையாகிவிடுகிறார்கள். மானிட மதிப்பிற்கும் சமத்துவத்திற்கும் சின்னமாக ராட்டினம் அமைகிறது. விவசாயிகளுக்கும் அது தோழமை கொள்கிறது. இவ்வளவு மகிமையுடன் கூடிய ராட்டினத்திடம் பூர்ண நம்பிக்கையுள்ள காங்கிரஸ்காரர். மிகச்சிலரோ லட்சக்கணக்கான சாதாரண ஜனங்களுடன் காங்கிரஸ் சம்பந்தப்பட அவசியமாகிய கதர் திட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்டால் அதைக் கண்டிப்பாக அனுஷ்டிக்கவும் வேண்டும். பெரும்பாலான காங்கிரஸ்காரருக்கு அதில் நம்பிக்கையில்லையென்றால் எப்படி நடைபெறும்?

பார்லிமெண்டரி போர்டைக் கவனிப்போம். ஒத்துழையாமைக் கர்த்தாவாகிய நான், தேசத்தின் தற்கால நிலையில், சாத்விக சட்ட மறுப்பிற்கேற்ற பொதுத் திட்டமில்லாதபோது, காங்கிரஸ் அங்கீகரிக்கும் திட்டங்களை நடத்திவைக்க காங்கிரஸிற்குள் பார்லிமெண்டரி கட்சி தேவையென நான் அறியமுடியும். இதிலும் கூர்மையான அபிப்பிராயபேதம் வந்துகுறுக்கிடுகிறது. பாட்னாவில் 'அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில் நான் கொண்டுவந்த தீர்மானத்தின்பேரில் பலமாக வாதித்தேன். அதனால் என் நண்பர்களுள் பலரும் மனச்சாட்சிப்படி நடக்க கஷ்டப்பட்டனர். ஒருவர் கருத்தை எல்லை மீறியும் அடிக்கடியும், பிறர் வசம் செய்ய முயர்சிப்பது தகாது. என்னை எதிர்ப்பதிலேயே நம்பிக்கை யிழந்தவர்களாகச் சிலர் இருப்பதைக்காண எனக்கு மிக்க துன்பம் ஏற்படுகிறது. மனிதர்களுள் மிக்க ஏழைகளையும் நெருங்கி அவர்களுடன் கலந்து முடிந்தவரையில் அவர்களுக்குச் சமமாகவே ஆகவேண்டுமென்று விரும்புகிற எனக்கு இது தகாத காட்சியே.

சோஷியலிஸ்டு என்ற சமதர்ம கட்சி ஏற்படுவதை வரவேற்றேன். தன்னலமற்றுத் தொண்டு செய்யும் பலர் அதில் உண்டு. அவர்கள் வெளியிட்ட துண்டு பிரசுரங்களிலடங்கிய திட்டத்தில் அடிப்படையான பேதத்தை நான் காண்கிறேன். அவர்கள் தம் கருத்தை வெளியிட நான் ஆட்சேபிக்க மாட்டேனெனபோதிலும், அவர்களும் ஒரு காலத்தில் ஆதிக்கம் பெறக்கூடிய காங்கிரஸில் நான் தங்க

முடியாது. அதில் நின்று எதிர்க்கட்சியாக நிற்பது எனக் கேற்றதல்ல.

தீண்டாமை விலக்கைப்பற்றியும் பலர், அது ஒரு தவ றென்று மாத்திரம் கருதுகிறார்கள். எனக்கோ அது சிறந்த ஒழுக்க சம்பந்தமான மதப்பிரச்னை. சட்ட மறுப்பியக் கத்தை மாற்றி இந்த பிரச்னையை, நான் மேற்கொண்டபடி நடத்தியிரா விட்டால், என் கொள்கைக்கு நான் துரோகம் செய்தவனாவேன்.

அஹிம்ஸா தர்மத்தைப்பற்றி என்னுறுதி நீங்கவில்லை. 14 வருஷ அனுபவங்களுக்குப் பிறகும் கூட பலருக்கு அது ஒரு உபாயமாக மாத்திரமே இருக்கிறது. அவர்கள் அதை ஒரு கொள்கை யாக்கவில்லை. என்னால் அதை ஒழுங்காக விளங்கவைக்க முடியாததே காரணமாகலாம். என் மனதுக்குத் தெரிந்த வரையில் ஒழுங்காக நடந் திருக்கிறேன். ஆயினும் பயனில்லை. சாத்வீக எதிர்ப்பில் இன்னும் அதிக அவநம்பிக்கை ஏற்படுகிறது. 27 வருஷ காலம் அதைப்பற்றி யறிந்து கொள்ள முயன்றும் அனுப வித்துப் பார்த்தும் முற்றுமுணர்ந்தேனென்று சொல்லிக் கொள்ள முடிய வில்லை. வாழ் நாட்களில் சாத்வீக எதிர்ப் பிற்கு சந்தர்ப்பங்கள் மிகக் குறைவு. பெற்றோர்கள், ஆசா ரியர்கள், மற்றுமுள்ள பெரியோர்கள் ஆகிய பலருக்கும் வழுவில் கீழ்ப்படியக் கற்றுக்கொண்ட பிறகே சாத்வீக எதிர்ப்பு கைகூட முடியும். ஆதலால் அந்தக் காரியத்தை நான் ஒருவனே செய்வதென்று ஒடுக்கிக்கொண்டு விட் டேன். அப்போது மாத்திரமே தவறுகளும் விஷமங்களும் நீங்கும். இதைப்பற்றிய தீர்மானங்களில் என் கட்சியால் அவர்களைத் திருப்தி செய்து அவர்களுடைய புத்திக்கு விளங்குமாறு செய்ய முடியவில்லையாயினும் அவர்கள் எனக்காகவே ஓட் செய்தார்கள். அவர்களுக்கு அது கஷ்ட மாயிருந்தது போலவே என் மனதையும் அது வாட்டியது. ஆதலால் அவர்களும் நானும் இக்குறைகளை நீக்கிக்கொள்ள நான் விலக வேண்டும்.

சாத்வீக எதிர்ப்பை நிறுத்துமாறு பாட்னா அறிக்கை யில் சிபார்சு செய்தபோது, அது கோரிய லட்சியத்தை யடையத் தவறியதென்றேன். பூர்ண அஹிம்ஸா தர்மம் நம்மிடம் வெளியாகி யிருந்தால் அது தானே ஜோதியுடன்

விளங்கி அரசாங்கத்தையும் வசீகரம் செய்திருக்கும். சர்க்காரது ஆர்டினன்ஸ்களெல்லாம், நாம் செய்ததாக நம் மீது சுமத்தப்பட்ட நியகாரியங்களால் ஏற்பட்டதல்லவாயினும், அவை நம் சக்தியைப் பிளக்க ஏற்பட்டவை யென்பது நிச்சயம். நாம் அஹிம்சா தர்மம் முதிர்ந்தவராக நடந்து வந்தால் குற்ற மற்றவர்களாகியிருப்போம். பயங்கர இயக்கத்தில் நம்பிக்கை வைப்பவர்கள் அதில் எவ்வளவு சிரத்தை கொள்ளுகிறார்களோ, அதிலும் அதிக சிரத்தை நமக்கு அஹிம்சா தர்மத்தில் உண்டு எனவிளக்கியிருக்கவேண்டும். அதற்கு பதில், அவர்களைப்போல் நம்மிடமும் கொடுமையில் நம்பிக்கை மனதில் இருப்பதாக அவர்கள் நினைக்குமாறு நடந்து கொண்டோம். கொடிய செய்கையில் நம்பிக்கையற்றவரானேனும், அவ்வளவே.

தேசமானது அஹிம்சா தர்மத்தில் நெடுந்தூரம் முன்னேறி யிருக்கிறது உண்மையே; பலர் மிக்க தைரியத்தையும் தன்னலதியாகத்தையும் விளக்கியிருப்பதும் உண்மைதான். நான் சொல்ல வருவதெல்லா மென்ன? மனோவாக்குக்காயங்களிலெல்லாம் கலப்பில்லாத அஹிம்சா தர்மத்துடன் நாம் வெளிப்படவில்லை யென்பதே. கவர்மெண்டாரும் பயங்கர இயக்கவாதிகளும், பூர்ண சுதந்திர முள்பட எல்லா விஷயங்களையும் அடைவதற்குச் சிறந்த கருவி அஹிம்ஸா தர்மம் என்று தெளிவாக அறிய வேண்டும். அவ்வாறு அவர்களுக்குத் தெரியச் செய்வதற்கு வேண்டிய வழிகளையும் சாதனங்களையும் கண்டுபிடிப்பது என் முக்கிய வேலையாகி விட்டது.

இவ்வித சோதனைக்காகவே என் வாழ்க்கை ஏற்பட்டது. அதற்காக நான் இஷ்டப்படி காரியங்களைத் தனியே நடத்த உரிமை வேண்டும். சாத்வீக எதிர்ப்பை ஓர் அங்கமாக உடைய சத்தியாக்கிரகமே வாழ்க்கை முற்றிலும் நிறைந்த விதி என்பது என் தத்துவம். உண்மையில் சத்தியப் பொருளே என் கடவுள்; அவரை அஹிம்ஸா வழியிலே மாத்திரம் நான் தேட முடியும். அவ்விதம் தேடுவதிலேயே உலக சுதந்திரம் உள்ளது. அரசியல் வாழ்க்கையில் நான் நுழைந்தபோது இந்தச் சோதனையை நடத்தவே விரும்பினேன். பரிபூரண சுதந்திரமும் இதில் அடங்கும் என்ற உண்மையைக் காங்கிரஸ்காரர் ஏற்றுக் கொள்ளுமாறு செய்ய முடியவில்லையானால்,

கடவுளின் கருணையால் எப்போதாவது அவர்கள் அறியு மாறு செய்யும் வன்மை எனக்கேற்படும் என்ற நம்பிக்கை யுடன் நான் தனியே வேலை செய்யவேண்டும். மனமொப் பாமல் கட்சியில் சேர்வது பயனை யளிக்காது.

எனக்கும் அவர்களுக்கும் மற்றொரு முக்கிய பேதம் உண்டு; பூர்ண சுயாஜ்ய மென்ற லட்சியத்தைப் பற்றியது அது. பூர்ண சுதந்திரம் என்பதைப்பற்றி எல்லா காங்கிரஸ் காரரும் ஒரேவித கருத்துடையவரல்ல வென்றே நம்பு கிறேன். பூர்ண சுதந்திர நிலையைக் காட்டிலும் பூர்ண சுயராஜ்யம் எவ்வளவோ மடங்கு விசாலமான பொருள் கொண்டதென நான் கருதுகிறேன். ஆனால் பொருள்களை யெல்லாம் விளக்கக் கூடிய தன்மையில் சொற்கள் கிடையாது. ஆயினும் அனுசரிக்க வேண்டிய வழிகளில், ஒத்து வேலை செய்தால் லட்சியத்தை யடையலாம். இதுவே என் நம்பிக்கை.

பல வித கருத்து வேற்றுமைகளால் தற்போதுள்ள காங்கிரஸ் திட்டம் பயனற்றதாகி விட்டது. அங்கத் தினர்கள் அதனிடம் நம்பிக்கையின்றி வாசாகைங்கர்யம் செய்து அனுபவத்தில் அதை அலட்சியம் செய்தனர். எனக்கோ இந்தக் காங்கிரஸ் திட்டத்தைத் தவிர வேறெ திலும் நம்பிக்கை செல்லவில்லை. தீண்டாமை விலக்கு, ஹிந்து முஸ்லீம் ஒற்றுமை, பூர்ண மதுவிலக்கு, ராட்டின நூலிலும் கதரிலும் பரிபூரண நம்பிக்கை; இவைகளே திட் டங்கள். கிராமத் தொழில்களைப் புதுப்பித்தலாகிய சுதே சியம், பொதுவாக ஏழு லட்சம் கிராமங்களிலும் தொண்டு செய்தல் ஆகிய இவைகளே தேசபக்தியுடையவர் செய்யவேண்டிய காரியங்கள். என்னைப் பற்றிய வரையில் நான் எல்லைப்புற மாகாணத்தில் ஒரு கிராமத்தில் வசித்து தொண்டுபுரியவே விருப்பம்கொள்வேன். குதாய் கித்மட் கார்கள் உண்மையில் மனோ வாக்குக் காயங்களால் அஹிம்ஸா தர்மத்தைத் தாங்கி நின்றால், ஹிந்து முஸ்லீம் ஒற்றுமையிடம் அன்பு செலுத்துகிறவர்களானால், அவர்கள் மூலமாக நம் தேசத்திற்கு அதிக அவசியமான இந்த இரண்டும் கை கூடிவிடுமென்பதில் சந்தேகமில்லை. அப் போது ஆப்கன் பூச்சாண்டியால் பயமுண்டாகாது. ஆத லால், அவர்கள் உண்மையில் அஹிம்ஸா தர்ம வழியில் உறுதிபெற்றிருப்பதாகவும், ஹிந்துக்கள் முஸ்லீம்கள்

மற்றுமுள்ள சமூகங்கள் ஆகிய எல்லோருக்குள்ளும் ஐக்கியம் வேண்டுமென அவர்கள் நம்புகிறார்களென்றும் நான் நினைத்திருப்பது சரிதானே என்று சோதித்துப் பார்க்க ஆவல் கொள்வேன். மற்றும் ராட்டின மகிமையை நேரில் அவர்களுக்கு விளக்குவேன்.

காங்கிரஸிற்குள் இருந்தாலும் அல்லது வெளியே சென்றாலும், நான் அதற்குத் தொண்டு செய்வதில் அன்பு கொள்வேன். எவ்வளவு குறைகளை நான் நமக்குள் கண்டாலும், தேசத்தில் சிறந்த பிரதிநிதித்துவத்துடன் கூடி அதிக சக்தி பொருந்தி நிற்பது காங்கிரஸ் ஒன்றுதான். கௌரவம் மிக்க தொண்டையும் தன்னல தியாகத்தையும் இடைவிடாமல் அடைந்திருப்பது காங்கிரஸ்தான். தோன்றிய நாள் முதல் மற்ற ஸ்தாபனங்களைவிட அதிகமான இடையூறுகளைத் தாண்டி வந்திருப்பது அது ஒன்றே. எந்த தேசத்திலேயும் பெருமையடையக் கூடிய அளவு அதிகதியாகத்தைக் காங்கிரஸ் தாங்கி நிற்கிறது. மாசற்ற பரிசுத்த குணம் பொருந்திய ஆண் பெண் பக்தர்கள் இன்றும் அதிகமாகக் காணப்படுவது அந்த ஸ்தாபனத்திலே தான். அதைவிட்டு நான் மனமில்லாமலே செல்ல வேண்டி வரும். அதை விட்டு வெளியில் நின்றால் மாத்திரம், நான் அதற்கும் தேசத்திற்கும் அதிக நலம் செய்ய முடியுமென்று தோன்றினால் அவ்விதம் செய்வேன்.

மேலே சொல்லிய கருத்துக்களடங்கிய தீர்மானங்களை விஷயாலோசனைக் கமிட்டி முன் வைத்து காங்கிரஸின் உணர்ச்சியைச் சோதிக்கப்போகிறேன். "ஒழுங்கும் அமைதியும் பொருந்திய" என்பதற்குப் பதில் "சத்தியமும் அஹிம்ஸையும் பொருந்திய" என்று மாற்றுவது முதல் திருத்தமாகும். நமது லட்சியம் கூடுவதற்கு சத்தியமும் அஹிம்ஸையும் அவசியமென்று காங்கிரஸ் நம்பினால் இதை ஏற்றுக்கொள்ளத் தயங்கக்கூடாது. இரண்டாவது திருத்தம் கதர் சந்தா. காங்கிரஸ் அங்கத்தினர் நான்கு அணா சந்தா செலுத்துவதற்குப் பதில், நான்கடி நீளமுள்ள சுற்றுகளில் 2,000 சுற்று 15 நம்பர்களுக்குக் குறையாத ராட்டின நூலைத் தானே நூற்று மாத சந்தாவாகச் செலுத்தவேண்டும். மிகத் தாழ்ந்த கூலி பெறும் தொழிலாளருக்கும் பிரதிநிதித்துவம் உண்டென்று விளக்க இது ஏற்பட்டது. தினமும் தேசத்திற்காக அரைமணி

உழைப்பையே கேட்பது அது. பலத்திற்கும் சக்திக்கும் வாள் அடையாளமாயமைவதுபோல் ராட்டினம் அல்லது தக்ளியானது அஹிம்ஸை, தொண்டு, வணக்கம் இவற்றின் அடையாளமாக நிற்கிறதென்று காலஞ்சென்ற மௌலானு முகமத் அலி மேடைப் பேச்சுகளில் தெரிவித்திருக்கிறார். தேசிய கொடியில் ராட்டினத்திற்கு இடம் ஏற்பட்டதால் அது ஒவ்வொரு வீட்டிலும் சுற்றவேண்டுமென்றுகிறது. ராட்டினத்திடம் காங்கிரஸுக்கு நம்பிக்கை யில்லாவிட்டால் அதைக் கொடியிலிருந்தே விலக்கவேண்டும். கதரையும் திட்டத்திலிருந்து நீக்கவேண்டும். இந்தக் கதர் நிபந்தனையில் வெட்கமின்றி மோசம் நடத்துவது சகிக்க முடியாத காரியமாகும்.

மூன்றுவது திருத்தம்—விடாமல் ஆறு மாத·மாவது ரிஜிஸ்டரில் அங்கத்தினராகப் பதிவு செய்யப்பட்டவரும் வழக்கமாகக் கதரையே உபயோகிப்பவரும் மாத்திரமே காங்கிரஸ் தேர்தல்களில் ஓட் கொடுக்க வேண்டும். இதை அனுஷ்டானத்திற்குக் கொண்டுவருவது கஷ்டமாயினும் அங்கத்தினர் மனம் வைத்தால் நடைபெறும்.

பிரதிநிதிகளின் தொகையைப்பற்றி ஒரு திருத்தம். ஆறுயிரம் பிரதிநிதிகளுடன் காங்கிரஸ் நடப்பது கஷ்டமாயிருக்கிறதென்பது அநுபவ உண்மை. இவ்வளவு பேர்களும் வருவதில்லை. மேலும் ஒழுங்கான பிரதிநிதித்வ முறையும் இதுவரையில் ஏற்படவில்லை. ஆயிரம் பேர்களுக்கு ஒரு பிரதிநிதி வீதம் மொத்தம் ஆயிரம் பிரதிநிதிகளே தேர்ந்தெடுக்கப்படவேண்டும். இந்த முழுத்தொகையும் கிடைக்க பத்து லட்சம் ஓட்டர்கள் வேண்டும்; அவ்வளவு பேர் காங்கிரஸ் அங்கத்தினராகவேண்டும். பிரதிநிதிகளின் தொகை குறைந்தாலும் காங்கிரஸின் மதிப்பு இதனால் உயரும். காங்கிரஸின் மதிப்பு முழுமையும் தொகையாலும் படாடோபத்தாலுமல்லவென்றும், அது செய்யும் விசேஷ தொண்டுகளாலேற்படுகிறதென்றும் அறிய வேண்டும். தேசிய சக்தியை விளக்கக் கூடிய சிறு தொகையே ஜன நாயக குணத்தைப் பெருமைப் படுத்திவிடும்.

காங்கிரஸ் ஸ்தாபனத்தில் நான் விரும்பும் மாறுதல்களில் சில முக்கியமானவற்றை இங்கே கொடுத்திருக்கி

றேன். இதே மாதிரி மற்றும் பல வரும். இந்த அறிக்கை
யைப் பெருக்காமல் முடிக்கிறேன்.

காங்கிரஸிற்கு வரப்போகும் காங்கிரஸ்காரருள் ஏரா
ளமானவர்கள் மேலே நான் வெளியிட்டுள்ள திருத்தங்களை
யும் விரும்பாதவரா யிருக்கக் கூடுமென்பதே என் நினைப்பு.
அப்படியிருக்கும் காங்கிரஸ் என் வழியில் நடக்க விரும்பி
என் யோசனையைக் கேட்பதனால், இந்த அறிக்கையின்
கருத்துப்படிக்குள்ள திருத்தப் பிரேரணைகளை ஏற்றுக்
கொள்ளவேண்டும். நம் லட்சியத்தை சீக்கிரம் அடைவதற்கு
இவைகள் அவசியமென்றே நான் மதிக்கிறேன். கொள்கை
களும் தீர்மானங்களும் அங்கத்தினர்களால் மனப்பூர்வமாக
அங்கீகரிக்கப்பட்டு அனுபவத்திலும் வந்தாலன்றி, வலுவில்
ஏற்படும் எந்த சங்கமும் வெற்றியுடன் செல்ல முடியாது.
பின்பற்றுகிறவர்கள் சிரத்தையுடன், முணுமுணுப்பின்றி,
அறிவுள்ள முறையில் நடந்துகொண்டாலன்றி, எந்த தலை
வருக்கும் கீர்த்தியுண்டாகாது. ஆதலால் சத்யம் அஹிம்சை
யென்ற இரண்டு சாதனங்களைத் தவிர வேறொன்றும்
கிடையாத தலைவருக்கு, மேலே சொல்லியது அதிக அவசிய
மானது. ஆதலால் என்னால் குறிக்கப்பட்ட முக்கிய விஷ
யங்களை விட்டுக் கொடுக்க இடமில்லை. ஆதலால் காங்கி
ரஸ்காரர் பட்சபாத மின்றி இவற்றின் உபயோகத்திற்கேற்ற
படி மதித்து, என்னையும் மறந்து, அவர்கள் புத்திக்கு நியா
யமாகத் தோன்றுவதையே பின்பற்றுவார்களென்று எதிர்
பார்க்கிறேன்."

சட்ட சபை நுழைவை காந்தி ஏன் ஆமோதித்தா
ரென்று அதிசயிக்கிறவர்களுக்கு இந்த அறிக்கையில் பதில்
நன்றாகக் கொடுபடவில்லை. தம் கூட்டத்திற்குள் ஏற்
படும் கலகத்தை எதிர்ப்பது காந்தியின் குணமல்ல. தாம்
தணிந்து கொடுத்துப் பிறருக்கு இடம் தருவது அவர்
குணம். ஒரு குறிப்பிட்ட வழி நியாயமென ஜனங்களுக்
குத் தோன்றினால், அவர் அதற்கு இடம் கொடுப்பது மாத்
திரமல்ல; அவ்வழியிலேயே அவர்கள் செல்லவேண்டுமென
வற்புறுத்துவார். இதனால் அவர் அவ்வழியை ஆதரித்தார்
என்று சொல்வது தவறு. ஒவ்வொருவரும் தத்தம் மனச்
சான்றின்படி நடக்க உரிமை யுண்டு என்பதை ஒப்புக்
கொண்டு அவர் தம் மனமொப்பும் காரியத்திலிறங்குகிறார்;
அவ்வளவே அதன் கருத்து. காந்தீஜியைக் குறை கூறுகிற

சிலர் அவர் காங்கிரஸை விட்டு நீங்குவதற்கு வருந்துகிறார்கள். அவரது அடக்கியாளும் திறமையை வரவேற்றுத் தம் இஷ்டப்படி அவர் செல்ல உரிமையை மறுக்கினார்கள். அவர் குணம் கொண்டாடப்படுகிறது; அவர் வழி வெறுக்கப்படுகிறது. குணத்தை யொட்டியே வழி அல்லது நடத்தை அமைகிற தென்பது காந்தியின் நிலைமை. அரசியலும் தத்துவமும் வெவ்வேறல்ல.

செப்டம்பர் மாதம் 25-ந் தேதி வார்தாவில் கூடிய காரியக் கமிட்டி கூட்டத்தில் ஜனங்களுடைய சந்தேகங்களை நீக்கும்படி காங்கிரஸ் கொள்கைகள் தெளிவாக்கப்பட்டன. தேர்தல் காலத்தில் காங்கிரஸ் ஸ்தாபனங்கள் தேர்தல் வேலையில் பார்லிமெண்டரி போர்டுக்கு உதவிசெய்யவேண்டிய வழிகளைக் கண்டு தீர்மானம் செய்யப்பட்டது. காங்கிரஸ் கொள்கைக்கு விரோதமாக நிற்கும் அபேட்சகர்களை எந்தக் காங்கிரஸ் சபைகளும் ஆதரிக்கலாகாது. ஸ்ரீமான் ஆனே தோற்றுவித்த புதுக் கட்சியின் வேண்டுகோளைப்பற்றி முடிவு செய்ததும் இக் கூட்டத்தில்தான். வகுப்புப் பிரச்னை சம்பந்தமாக காரியக் கமிட்டியின் முடிவில் ஆட்சேபனையுள்ள அபேட்சகர்கள் தம் மனச் சாட்சிப்படி நடந்துகொள்ள அவர்களுக்கு உரிமையளிக்கலாமாவென்று இக் கூட்டத்தில் ஆலோசிக்கப்பட்டது. காரியக் கமிட்டி தெளிவாக விலக்காத இடங்களில் எவரும் மீறக்கூடாது என்ற முடிவே நிறைவேறியது. மாளவியாஜி இக் கூட்டத்தின் யோசனைக்கு ஒரு திருத்தப் பிரேரணையை ஸ்ரீஜத் ஆனே மூலமாக அனுப்பினார். தேர்தலுக்கு நிற்கும் அபேட்சகருள் ஒரு ஸ்தானத்திற்கு காங்கிரஸ் அபேட்சகரும் தேசிய கட்சி அபேட்சகரும் நின்றால் எக் கட்சிக்கு வெற்றி யேற்படக் கூடுமென்று விசாரித்து மற்ற கட்சியினர் போட்டி போடாமலிருக்கலாம் என்பதே பிரேரணை. இது பல அசௌகர்யங்களை முன்னிட்டு நிறைவேறவில்லையாயினும், பண்டித மாளவியாவும் ஸ்ரீ ஜத் ஆனேயும் நிற்கும் ஸ்தானங்களுக்குக் காங்கிரஸ் போட்டி போடுவதில்லை யென்று முடிவு செய்யப்பட்டது. சிந்து மாகாணத்திலும் கல்கத்தா நகரிலும் போட்டிக்குச் செல்வதில்லை யென்றும் முடிவு செய்தனர்.

1934-ம் வருஷம் அக்டோபர் மாதம் 26, 27, 28 தேதிகளில் நடை பெற்ற பம்பாய் காங்கிரஸ் மூன்றரை

வருஷங்களுக்குப் பிறகு ஏற்பட்ட கூட்டமாகும். தேசத்தில் ஊக்கம் குன்றி ஜனங்கள் சோர்ந்து வழி தெரியாமல் நிற்கும்பொழுது, இது அவர்களுக்கு மனோவேகத்தையும் உற்சாகத்தையும் கொடுக்கவல்லது. காங்கிரஸைப்பற்றிய பேச்சு எங்கும் நிறைந்தது. இதோடுகூட, காந்திஜி அரசியல் துறையிலிருந்து விலகுகிறார் என்ற பேச்சும், காங்கிரஸின் அமைப்பில் விசேஷ மாறுதல் ஏற்படப்போகிறதென்ற வதந்தியும், தேசமெங்கும் தீவிர உணர்ச்சியை எழுப்பிவிட்டன. காங்கிரஸினிடம் புகுந்துள்ள ஆண்மையற்ற நிலையைக் காட்டிலும் எவ்விதமான கிளர்ச்சியும் நிறமென காந்தி நினைத்தார். படைகளின் மனோ நிலையையறிந்து ஊக்கம் குன்றாமல் காத்து வருவதே தளகர்த்தனுடைய கடமையாகவும் இருக்கவேண்டும்; ஊக்கம் குறையும்போது தைரியம் ஊட்டுவதே கடமையாகும். அது போலவே புதிய ஊக்கம் தோன்றும்போது அதை உபயோகிக்கவும் வேண்டும். தம் படைகளின் அன்பை இழக்காமல் அவர்கள் சக்தியை உபயோகிப்பதும், அவர்களுடைய மனம் தளரும்போது வெற்றி பெறக்கூடிய மற்றொரு திட்டத்தைக் காட்டுவதும் தளகர்த்தர்களுக்கு அவசியமாகும். பம்பாய் காங்கிரஸில் நடந்தது இவ்வளவே.

## பம்பாய் காங்கிரஸ்

பம்பாயில் காங்கிரஸிற்கு ஒரு நெருக்கடி ஏற்படப் போவதாக தேசமெங்கும் பேச்சு எழுந்தது. காங்கிரஸிற்கு நெருக்கடி கிடையாது. மனித வாழ்க்கையில் சகஜமாக ஏற்படக்கூடிய பலவித மாறுதல்கள்போல் இதுவும் ஒன்று. 1885-ம் வருஷம் பிறந்த காங்கிரஸ் 1906-ல் மெஜாரிடி உரிமை யடைந்தது. அப்போது கல்கத்தா காங்கிரஸில் தலைமை வகித்த தாதாபாய் நௌரோஜி முதன் முதல் காங்கிரஸின் லட்சியமாக 'சுயராஜ்யம்' என்றபதத்தை உபயோகித்தார். இங்கிலாந்திலிருந்து இதற்காகவே இவர் இந்தியாவிற்கு வந்து, மூன்றும் தடவை காங்கிரஸ் தலைமை வகிப்பதையும், இதற்கு முன் ஏற்பட்ட சுதேசியம், தேசியக்கல்வி, பகிஷ்காரம் என்ற பதங்களுடன் 'வெறுக்கத் தக்க' சுயராஜ்யம் என்ற பதத்தையும் சேர்த்ததைக் கண்டு ஆங்கிலேயர் பொங்கினர்கள். திடீரெனத் தோன்றிய இந்த சுய பிரக்ஞையானது பெரியோர்களுடைய

நிர்வாகத்திற்குள் சிறிதுகாலம் சென்றதுபோல் காணப்பட்டது. 1908-ம் வருஷம் நிதானக் கட்சியார் ' சட்ட வரம்புக்குட்பட்ட ' வழிகளைக் கோலவேண்டுமென விரும்பி, குடியேற்ற நாட்டந்தஸ்தாகிய சுயஆட்சியே லட்சியமாகவும், தேச நிர்வாக ஆட்சியில் இந்தியர்களைப் படிப்படியாக அதிகம் சேர்த்துக் கொள்வதே வழியாகவும் தீர்மானித்துக் கொண்டனர். ஆனால் புதிய காங்கிரஸ் மீண்டும் மகா யுத்தத்தின்போது முளைத்தெழுந்தது. காலஞ்சென்ற கண்ணியம்மிக்க டாக்டர் பெஸண்டம்மையின் மேற்பார்வையில் ஹோம் ரூல் கிளர்ச்சி தோன்றிய காலம் அது. 1920-ம் வருஷத்திலிருந்து 14 வருஷகாலம் தீவிர கொள்கைகளுடன் போராட்டங்களைக் கடந்து வெற்றி தோல்விகளுடன் விளங்கி வந்திருக்கிறது. ஆதலால் சென்ற 48 வருஷங்களின் நிலையை அறிந்து அமைதியுடன் ஆராய்ச்சி செய்து, பலமான போராட்டங்களுக் கிடையில் சேகரம் செய்த அநுபவ அறிவின் பயனாக உண்டாகிய மார்க்கத்தில் காங்கிரஸைச் செலுத்துவதில்—செலுத்த விரும்புவதில்—அதிசயமென்ன? காங்கிரஸ் தன் உருவத்தால் மாறுபட்டு விளங்கினாலும் அரசியல் கொள்கையால் மாறுபடவில்லை.

யுத்தத்தில் வெற்றி ஏற்படும்போது ஆநந்தக் கூத்தாடுவதும் தோல்வி ஏற்படும்போது அதைரியத்தால் நடுக்கம் கொள்வதும் இயற்கை. சட்ட மறுப்பியக்கம் தேசியமாகவும் தனி நபர்களாலும் நடத்தப்பட்டதைக் காங்கிரஸ் நிறுத்திய பிறகு வேறு ஏதேனும் தீவிர உணர்ச்சியை எழுப்ப வல்ல காரியம் தேவையா யிருந்தது. அப்போது பழைய சட்ட சபைகளும், நகர சபைகளும், ஜில்லா போர்டுகளும் நினைவிற்கு வந்தன. இந்த சபைகளைக் கைப்பற்றும் கிளர்ச்சியில் மற்ற கூட்டத்தினரைவிடக் காங்கிரஸ்வாதிகள் அதிக ஊக்கம் காட்டி வேலை செய்தனர். ஆயினும் லஞ்சமும் செல்வாக்குத் துர்விநியோகம் முதலிய தீமைகளும் காங்கிரசுக்குள் ஏற்பட்டதாக தலைமை ஸ்தானத்திற்குப் புகார்கள் வந்து குமர்ந்தன. ஆதலால் இந்த ஒழுங்கீனங்களையும் துன்மார்க்கங்களையும் விலக்குவதற்காகக் காங்கிரஸில் தம்மாலான முழுப்பலத்துடன் முயற்சி செய்வதென்று ஜூலை மாதத்திலேயே காந்தி முடிவு செய்துகொண்டார். ' அது வரையில் வெளியிலிருந்தால்' என்று ஒரு நிபந்தனையையும் காந்தி சேர்த்துக்கொண்டார். காங்கிரஸ் வரையில் சுதந்

திரத்துடனிருப்பதில் இவருக்கு சந்தேக மேற்படக் காரணமென்ன என்று நம்மால் அறியமுடியாது. ஆகஸ்டு மாதம் 4-ந் தேதி கிட்டிவிட்டது; அப்போது இவர் தாமே ஏற்படுத்திக்கொண்ட கட்டை விலக்கிக் கொள்ளலாம். அப்போது அரசியல் துறையில் புகுந்து வேலை செய்யப் பல திட்டங்களை ஸ்தாபித்து வைத்திருக்கலாம். தடையை மீறி எல்லைப்புற மாகாணத்திற்குச் செல்ல விரும்பி, அதனால் கைது செய்யப்படுவதை எதிர்பார்த்திருக்கலாம்; வேறு விதமாக ஏதேனும் சட்ட மறுப்பை யோசித்திருக்கலாம். எது உண்மையோ யாரறிவர்? காங்கிரஸ் கூடுமுன் காந்தி, சிறந்த பார்லிமெண்டரி திறமையுடன், தீய செயல்களை நீக்கிக் காங்கிரஸைப் பரிசுத்தம் செய்யும் நோக்கத்துடன் புதிய திட்டமொன்றைத் தயார் செய்து விட்டார். பிறகு மிக விரைவில் தேசமக்களின் கவனமெல்லாம் இவருடைய திட்டத்திலிடம் சென்றது. பார்லிமெண்டரி போர்டு, சமதர்மம், வகுப்புத் தீர்ப்பு ஆகிய எல்லாம் பிற்பட்டன. இந்த திட்டமே எங்கும் பேச்சு. காந்தியின் முக்கிய கருத்து பின் வருமாறு:—மாகாணப் பிரதிநிதிகள் ஒன்றுகூடித் தங்கள் அனுபவத்தை யெல்லாம் சேர்த்து சோதித்து, அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டத்தில் காங்கிரஸின் திட்டமொன்றைத் தயாரித்துக்கொள்ள வேண்டும். பிறகு தத்தம் மாகாணங்களுக்குச் சென்று அந்த திட்டத்தையே நடத்த வேண்டும். இதுதான் முக்கிய அம்சம். காங்கிரஸ் அங்கத்தினர் தாமே தொழில் செய்வதைக் கண்டிப்பாகக் கைக்கொண்டு அதன் பயனைக் காங்கிரசுக்குக் கொடுக்க வேண்டும். அப்போதுதான் தொண்டு, தியாகம் என்ற இரண்டும் காங்கிரஸின் சின்னங்களாகும். தேர்தல் காலங்களில் பணமும் செல்வாக்கும் மிகுந்தவர் தம் இஷ்டம் போல் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொண்டு துஷ் பிரயோஜனம் செய்வதைத் தடுப்பதற்காக ஒரு யுக்தி செய்யப்பட்டது. ஜாப்தாவில் அங்கத்தினராக ஆறு மாதங்களாவது இருக்கிறவர்கள் மாத்திரமே ஓட் செய்ய உரிமை பெற்றவர்கள் ஆக வேண்டும். காங்கிரஸ் தேர்தல்களைப் பற்றிய நிபந்தனை இது. காங்கிரஸ் தலைவர் தன்னாலேயே தேர்ந்தெடுக்கப்பட்ட மந்திராலோசனை சபைத் தலைவராக இருக்க வேண்டும். வழக்கமாகக் கதர் ஆடையே தரிக்க வேண்டும் என்ற நிபந்தனை அப்படியே இருக்கும். காங்

கிரஸ் கொள்கையானது பல விபரீத பொருள்களுக்கு இடம் கொடுத்து விட்டபடியால், அமைதியான, நியாய முள்ள என்ற சொற்களுக்குப் பதில் சத்தியமான, அஹிம்ஸா தரும வழியுடன் கூடிய என்ற பதங்களை உபயோகித் தால் தான் காங்கிரஸ் சத்திய நெறியில் கட்டுப்பட்டதாகும். காங்கிரஸ் கூடியதற்கு முன்பும் கூட்டம் நடந்த போதும் தேசத்தில் புயற்காற்றாக வாதப் பிரதிவாதங்கள் நடை பெற்றன. எவ்வளவு பலமான குழப்பங்களிலும் காந்தி தம் மன அமைதி கலங்காமலிருந்து பழகியிருப்பவர். இவரைப் போல் பலமாக வேறெவரும் நிற்கமுடியாது. கீழான தந் திரங்களைக் கருதாமல், எப்போதும் தமக்கேற்பட்ட சத்தியம், அஹிம்ஸை என்ற ஒரேவித தந்திரத்தை யுபயோ கித்துத் தோல்வியைக் கூட சிறந்த வெற்றியாக அவர் மாற்றி விடுவார். காங்கிரஸ் நடந்தபோது ஆரம்பத் திலேயே, காங்கிரஸின் அமைப்பை மாற்றும் திட்டங் களைத் தாமே பிரேரேபிக்க நிறுத்திக்கொண்டு, சத்யாக்கிரக சம்பந்தமான திருத்தங்களைக் காரியக் கமிட்டி இஷ்டப்படி செய்துகொள்ள விட்டுவிட்டார். இந்த பிரேரணைகளை யெல் லாம் காரியக் கமிட்டி தக்க மாறுதல்கள் செய்து அங்கீகரித்த பின், காங்கிரஸ் மகாசபையும் அவற்றை அநேகமாக அப்ப டியே நிறைவேற்றியது. இதைக் கண்டு காந்தியே ஆச்சர்ய மடைந்தார். "சத்தியமும் அஹிம்ஸையும் பொருந்திய' என்ற சொற்களைக் கொள்கையில் மாற்றியமைக்க, மாகாணங்களின் கருத்தை யறிவதற்காக அப் பிரச்னை 1936-ம் வருஷ காங் கிரஸ் வரையில் ஒத்திவைக்கப்பட்டது. கைத்தொழில் சந்தா, நிர்வாக ஸ்தானங்களில் இருக்க விரும்புகிறவர் களுக்கு மாத்திரம் ஏற்படவேண்டுமென மாற்றிவிடப் பட்டது. வழக்கமாகக் கதர் தரிக்கவேண்டுமென்ற விதி அப்படியே மாறாமல் நிறைவேறியது. காங்கிரஸ் சபையில் பிரதிநிதி ஸ்தானங்கள் 2000-க்கு மேற்படக்கூடாதென்று தீர்மானம் செய்யப்பட்டது. இவர்களுள் கிராமங்களுக் கும் நகரங்களுக்கும் விதாசாரம் 511 என்றும் 1489 என்றும் பிரிக்கப்பட்டது. காந்தி ஆயிரம் அங்கத் தினர்க்கு ஒரு பிரதிநிதிக்கு மேற்படாமல் தேர்ந்தெடுக்க விரும்பியதை ஐநூறுக்கு ஒரு பிரதிநிதிக்கு மேற்படாமல் என்று மாற்றினார்கள். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி மாத்திரம் ஆயிரம் பிரதிநிதிகளடங்கியதாக அமைய வேண்டும். அங்கத்தினர்களின் தொகையின் பேரில் வீத

மாகப் பிரதிநிதிகளின் தொகை ஏற்படவேண்டுமென்று காந்தி தயார் செய்த திட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதனால், இதற்கு முன் இருந்ததைப்போல், காங்கிரஸ் வெறும் ஆள்கூட்டமாக மாத்திரம் இல்லாமல், தேசத்து உண்மைப் பிரதிநிதிகளாய், அகில இந்திய நிர்வாக சபையையும் மாகாண காங்கிரஸ் கமிட்டிகளையும் தேர்ந்தெடுக்கும் உரிமையைப் பெறுகிறது. இவ்விதம் உருவம் மாறிய காங்கிரஸ், தேசத்திற்குக் காந்தியால் அளிக்கப்பட்ட மிகப் பெரிய வெகுமதி யென்பதில் சந்தேகமில்லை.

காங்கிரஸ் ஏன் தன் உருவை மாற்றிக்கொள்ளவேண்டும்; அதை இப்போது ஏன் செய்யவேண்டும்; காந்தி காங்கிரஸை விட்டு நீங்கும்போது ஏன் செய்யவேண்டும்? இந்தப் பிரச்னைகள் எழுந்தன. சென்ற 14 வருஷகாலமாகக் காங்கிரஸை நடத்திய தலைவராகிய காந்தி, அதனிடம் நமக்கு விளங்கும் குறைகளை எடுத்துக் காட்டக் கடமைப்பட்டுள்ளார். அமைதி ஏற்பட்டிருக்கும் காலத்தில், தன் நிலைமையைப் பரிசோதித்துப் பார்த்துத் தன் வீட்டை ஒழுங்குபடுத்திக்கொள்வதும் பின்னால் நேரக்கூடிய சந்தர்ப்பங்களை எதிர்பார்த்து நிற்பதும் காங்கிரஸின் கடமையாகும்.

காங்கிரசுக்குப் புது உருவம் கொடுத்தல், பார்லிமெண்டரி போர்டின் தீர்மானங்களை உறுதி செய்தல், நிர்மாண திட்டம், வகுப்புத் தீர்ப்பு ஆகிய இவை 1934-ல் மிக முக்கிய சம்பவங்களாயினும், இவற்றினும் அதிக முக்கியமான ஒரு விசேஷ காரியம் அதே வருஷத்தில் நடைபெற்றிருக்கிறது; ஆனால் அது மேலே சொல்லிய விசேஷங்களைப்போல் ஜனங்களின் கவனத்தை அவ்வளவு அதிகமாக இழுத்துவிடவில்லை. அரசியல் துறையினின்று வேறாக, காந்தி காட்டும் வழிப்படி நடக்கவேண்டிய, அகில இந்திய கிராம கைத்தொழிற் சங்கம் இப்போதுதான் நிர்மாணிக்கப்பட்டது. கதர் திட்டத்தின் ஒழுங்கான முடிவே இது. கிராமத்திலும் தேசத்திலும், அந்நியரை அண்டாமலிருக்கும் நிலைமை யுண்டாக்கப் பல கிராமத் தொழில்கள் வேண்டும்; அவற்றைப் பின்னால் உண்டாக்கும் அறிகுறியாகக் கதர்த் தொழில் முன்பு வழிகாட்டியாக ஏற்பட்டது. ஒரு தேசத்தின் நாகரீகம் எப்படி யிருக்கிற

தென்று தெளிவாகக் காட்டும் அடையாளங்களா யுள்ளவை அத்தேசத்து சில்லரைக் கைத்தொழில்களே.

நூதன ஆராய்ச்சிக் கலைகளின் பயன்கள் உலகப் பொது உடைமை; அறிவும் அவ்வாறே எவ்விடத்துக்கும் பொது. ஆனால் குடிசைத் தொழில்களும் சிற்ப கலைகளும் ஒரு தேசத்தின் தனித்த ஜீவ நாடிகளாக விளங்குகின்றன. அவை அடங்கினால் தேசத்து ஜீவன் நீங்கிவிட்டதாகும். மிருகங்களைப்போல் வாழ்க்கை ஏற்படுமேயன்றி, பயிர்ச்சி அற்றுப்போகும். ஆதலால் இறந்தும் இறந்துகொண்டு மிருக்கும் இந்திய கிராமக் கைத்தொழில்களைப் புதுப்பிக்க காந்தி திட்டம்போட்டபோது, உண்மையில் அவர் இந்திய நாகரிகத்தையே உயிர்ப்பிக்கிறவராகிறார். இந்தியப் பொரு ளபிவிர்த்தியும் இந்திய தேசிய கலையபிவிர்த்தியும் இவர் முயற்சியால் ஏற்படும் பயன்களாம். தேசிய கல்விக்காக அகில இந்திய கல்விச் சபை வேண்டுமென்கிறார்கள். ஆனால் காந்தி விரும்புகிற அளவு பெரிய மாறுதல்களுக்குத் தேசம் தயாராயில்லை. கிராமங்களை உயிர்ப்பித்தாலன்றி உண்மை யான தேசிய கல்வியின் மதிப்பு விளங்காது. உலகத்துச் செல்வமெல்லாம் நம்மிடம் வர்த்தக மூலமாக வந்து குவிய வேண்டுமென்று காந்தி வேண்டவில்லை. கிராம ஜனங்களிட முள்ள காய்ந்த ரொட்டிக்கு வெண்ணெய் தடவத்தான் விரும்புகிறார். அகில இந்திய சர்க்கா சங்கமும், கிராமக் கைத்தொழிற் சங்கமும் இதற்காக அவரால் நிர்மாணிக்கப் பட்டன.

காந்தி காங்கிரஸை விட்டு விலகப்போவதாக அவரே தெரிவித்தும் பலர் சந்தேகங்கொண்டனர். ஆனால் எப்போ தும் காந்தி சொல்கிறபடி செய்ய விரும்புகிறவர் என்றும், விரும்புகிறபடி செய்து முடிப்பவரென்றும் சீக்கிரத்தில் விளங்கிவிட்டது. அவரது சொற்களுக்கு எப்போதும உள்ள பொருளேயன்றி, அதிகரித்தாவது குறைத்தாவது அவற்றை கொள்ளக்கூடாது.

காந்தி காங்கிரஸினின்று விலகும்போது, காங்கிர ஸின் பூர்ண அன்புடனும், மீண்டும் காங்கிரசுக்குள் அவர் வரவேண்டுமென்ற அழைப்புடனும், விலகினார். காங்கிரஸ் விரும்புவதை (காந்தி திரும்பும் நிலையை)ப் பெற தன்னைத் தகுதியாக்கிக் கொள்ளவேண்டும். தீமைகளைப் போக்கிக் கொண்டு,காங்கிரஸ் கதர் என்ற சொற்களுக்குப் பரிசுத்தம்,

சிரத்தை, உறுதி என்ற பொருள்கள் தருமாறு செய்ய வேண்டும். இதற்குக் காங்கிரஸிலிருக்கும் அறிஞர் மாதம் 8 மணி நேரம் கையால் அல்லது சரீரத்தினால் காங்கிரசிற்குத் தொண்டு செய்வதவசியம். சமதர்ம வாதிகளைத் தடை செய்ய இது ஏற்பட்டதென்று நினைப்பதும் தவறு. உண்மையில் காங்கிரஸின் லட்சியமே சமதர்மம்தான். சமதர்மவாதி (ஸோஷியலிஸ்டு)கதர் திட்டத்திலும் கிராமக் கைத்தொழிலபிவிர்த்தியிலும் சத்தியம், அஹிம்சை, தினம் செய்யவேண்டிய கடமை ஆகிய இவற்றிலும் நம்பிக்கையிருப்பதாகத் தெரிவித்தால், காங்கிரஸ்காரரும் சமதர்மிகளே; சமதர்மிகளும் காங்கிரஸ்காரரே யாவர். சொத்து முழுமையும் தியாகம் செய்துள்ள காந்தியைவிடச் சிறந்த சமதர்மி எவர்? ஸ்ரீஜத் வல்லபாயும் ராஜேந்திர பாபுவும் கொள்கையில் சமதர்மிகளை விடக் குறைந்தவர்களா? சமதர்ம கொள்கையை காங்கிரஸ்காரரின் தினசரி வாழ்க்கைக்குக் கொண்டுவரவே தொழிற் சந்தா ஏற்பட்டது.

காங்கிரசும் காந்தியும் இனிச் செய்யவேண்டிய வேலைகளைப்பற்றிய சந்தேகங்கள் எழுகின்றன. அரசியல் சம்பந்தம் காந்திக்கு விலகிவிட்டதா? சர்க்கா முதலிய நிர்மாண திட்டங்கள் அரசியல் வேலைகளென்று சததியாக்கிரகி கருதுகிறான். ஆதலால் காந்தி அரசியலை விட்டு நீங்கவில்லை. மேலும் தேசமக்களுக்குக் கூடாதென்று தடுக்கப்பட்ட சாத்விக சட்டமறுப்பு, காந்திக்கு மாத்திரம் காங்கிரஸின் பெயரால் நடத்த அனுமதிக்கப்பட்டிருக்கிறது. இதனால் அரசியல் சம்பந்தம் அவரை விடவில்லையென்றாகிறது. அப்படியானால் காங்கிரசின் வேலையென்ன? நிர்மாணதிட்டங்களைப் பிறருதவி கொண்டும் நடத்தலாம். இவ்விதம் எப்போதும் செய்திருக்கிறது. ஆக்க வேலைகள் ஒரு புற மிருக்க, அழிக்கும் வேலைக்கும் இடமுண்டு. மறுபடியும் சட்டமறுப்பில் நம்பிக்கைத் தீர்மானம் நிறைவேறி யிருப்பதால், தேவையானபோது அதை மீண்டும் ஸ்தாபிக்கலாம். தேசிய விடுதலைக்கு கொடுமையான வழிகளைவிட சட்ட மறுப்பும் அஹிம்ஸா தர்மமுமே மிக மேலான சாதனம் என்று காங்கிரஸ் தீர்மானித்திருக்கிறது. முன்னம் காரியக் கமிட்டி, காந்தி மாத்திரம் செய்ய அனுமதித்ததான சட்டமறுப்பைக் காங்கிரஸ் 1930-ம் வருஷம்

உறுதி செய்தது. உப்பு சத்தியாக்கிரகம் அப்போது தொடங்கியது. சட்ட மறுப்பியக்கமும் மூன்றரை வருஷங்களுக்கு முன் காந்தி ஒருவரால் தொடங்கப்பட்டது போல் பிறகு அவரிடமே வந்து ஒடுங்கியது.

இனி காந்திஜியின் பிரிவு காங்கிரஸை எப்படி பாதிக்கும் என்று ஆராய்வோம். அன்பு மிக்க பிதா குடும்ப நிர்வாகத்தைத் தன் மூத்த குமாரனிடம் விட்டதை உபமானம் கூறமுடியும். பிதா இருந்து நிர்வகித்த வரையில் புத்திரன் யாதொரு காரியத்தையும் தானே செய்வதில்லை. அதுபோல் காந்தியும் தன் நிலையிருப்பதாக உணர்ந்தார். சட்ட மறுப்பியக்கத்தைத் தொடங்கி நிர்வகித்துப் பிறகு நிறுத்திய வரும் அவரே. அவ்வளவு மகத்தான சக்தி விலகியதும் காங்கிரஸ் தானே நிர்வகிக்க முன்வரும். காங்கிரஸ் ஒரு பெரிய பலத்துடன் விளங்க வேண்டுமென்று விரும்பியே காந்தி விலகிக்கொண்டார். தேவையானபோது யோசனை கூறுவதாக வாக்களித்திருக்கிறார். அன்புள்ள பிதா புத்திரனுக்கு வழி காட்டுவதுபோல் இவரும் வழி காட்டப் பின் வாங்கவில்லை. காங்கிரஸ் தலைவர்கள் பொறுப்புடன் வேலை செய்து பழகினால் தான் காங்கிரசுக்கு பலம் வளரும். நீண்ட காலம் காங்கிரஸ் மிதமிஞ்சி காந்தியை நம்பியிருந்தது. தன் இஷ்டப்படி நடக்க விரும்பி இவருடைய ஒத்துழைப்பை. அதற்குக் கேட்டது அவருடைய நிபந்தனைகளுக்கு உட்பட்டால் மாத்திரமே அவருடையஒத்துழைப்பைப் பெறமுடியும். காங்கிரஸ் தன்னைப் பரிசுத்தம் செய்துகொண்டு சிரத்தை மிகுந்த அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளட்டும். அப்போது காந்தி தலைமை வகிக்க முன் வருவார். புதிய காங்கிரசுக்கு அவரே கர்த்தா, அரசியலுக்குள் தேசிய புனருத்தாரண வேலை முழுமையும் சேருமாறு செய்தார். தேசத்திற்கு ஒரு லட்சியம், ஒரு கொடி, ஒரு சிறந்த தலைவரைக் கொடுத்தார். விலகிய பிறகும் தேசத்தின் சிறந்த தொண்டராகவே இருக்கிறார்.

பம்பாய் காங்கிரஸ் வெற்றி பெற அதன் தலைவர் பாபு ராஜேந்திர பிரசாத் முக்கிய கர்த்தாவா யிருந்தார்.

## பம்பாய் காங்கிரஸ்

பம்பாய் காங்கிரஸில் பாபு ராஜேந்திர பிரசாதின் தலைமை உரை சுருக்கமாகவும், உருக்கமாகவும் இருந்தது.

"இந்தியாவில் நடைபெற்ற விடுதலைப் போராட்டத்தின் லட்சியம் சுதந்திரமாகும். அஹிம்சா முறையில் நடத்தப்படும் இப்போராட்டத்தின் மூலம், நாம் பிறரை ஒழித்துவிட்டு தனியே இருக்க விரும்புகிறோம் என்று சொன்னால், அதை ஒருவரும் நம்பமுடியாது. ஒரு தேசம் மற்றொரு தேசத்தையோ அல்லது ஒரு வகுப்பினர் மற்றொரு வகுப்பினரையோ அடக்கி அவர்களைக் கொள்ளையடிக்கும் முறையை ஒழிப்பதே நமது போராட்டத்தின் லட்சியமாகும். இந்த இயக்கம் ஒருவருக்கும் தீங்கிழைக்கும்படி கூறவில்லை. தீங்கிழைப்பவருக்குக்கூட கெடுதல் செய்யக்கூடாதென்று வற்புறுத்தப்படுகிறது. பிறநாடுகளைப் பிடிக்கவோ, அல்லது பிறநாடுகளுக்கு துன்பம் விளைவிக்கவோ நாம் விரும்பவில்லை. நமது விடுதலைப் போராட்டம் பிரிட்டிஷாருக்குக்கூட பீதியை உண்டுபண்ணக் கூடாது. நமது இயக்கம் அதிக சக்தி கொண்டது. நாம் ஒரு முறை தோல்வியுறலாம். இரு முறை தோல்வியுறலாம். ஆனால் முடிவில் நாம் வெற்றியடைவது நிச்சயம்" என்று ஸ்ரீ ராஜேந்திரர் கூறினர்.

1934-ம் வருஷம் மே மாதத்தில் காங்கிரஸ்காரியக் கமிட்டியும், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டியும் நிறைவேற்றிய தீர்மானங்களும், குறிப்பாக, பார்லிமெண்டரி போர்டு நியமனம், அதன் வேலை முறை சம்பந்தமான தீர்மானங்களும் ஒப்புக்கொள்ளப்பட்டன.

அடுத்தபடியாக தேசீய இயக்கத்தில் மக்கள் செய்த தியாகத்தைப் போற்றியும், ஜனங்களுக்குச் சட்டமறுப்பிலுள்ள நம்பிக்கையை வற்புறுத்தியும் ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

பண்டித ஜவஹர்லால் நேருவின் மனைவி ஸ்ரீமதி கமலா நேருவின் தேக அசௌக்கியத்தைக் குறித்துக் கவலை கொள்வதாகவும், அவர் கூடிய சீக்கிரத்தில் குணமடைந்து விடுவார் என்று நம்புவதாகவும் ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

பம்பாய் காங்கிரஸில் கவனிக்கப்பட்ட பல தீர்மானங்களுக்குள் அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம் சம்பந்தமான தீர்மானம்தான் முக்கியமாகும். இத் தீர்மானத்தில் எல்லாரும் அதிக சிரத்தை காட்டலாயினர். இனி நடக்கும் காங்கிரஸ் மகாநாடுகளில் கதர் சுதேசிப்

பொருட்காட்சிகளை நடத்தும் பொறுப்பு வரவேற்புக் கமிட்டியிடமிருந்து அகில இந்திய நூற்போர் சங்கத்திடையும், அகில இந்திய கிராமக் கைத்தொழிற் சங்கத்திடையும், ஒப்படைத்துவிட வேண்டுமென்ற தீர்மானம் ஏற்றுக் கொள்ளப்பட்டது.

காங்கிரஸ் அமைப்பில் சில முக்கியமான மாறுதல்கள் ஏற்படுத்தப்பட்டன. வழக்கமாக கதர் அணிபவர்கள் தான் காங்கிரஸ் கமிட்டிகளில் ஸ்தானம் பெற அபேட்சகர்களாக நிற்கலாம் என்று விதிக்கப்பட்டது. முதன் முதலாக பம்பாயில்தான் அபேட்சகர்களாக நிற்க விரும்புகிறவர்களுக்குத் தொழிற் சந்தா (அதாவது தேக உழைப்பு விதி) ஏற்படுத்தப்பட்டது. மாதம் மாதம் 500 கஜ நூல் நூற்கவேண்டும், அல்லது அதற்குச் சமமாக, மாதம் ஒன்றுக்கு எட்டு மணி நேரம் காங்கிரசுக்கோ அல்லது காங்கிரஸ் சார்பாகவோ தேகப் பிரயாசைப்பட்டு உழைத்திருக்க வேண்டும். இவ் விதிகளைப் பூர்த்தி செய்தவர்கள் தான் நிர்வாக கமிட்டிகளில் ஸ்தானம் பெறக்கூடும் என்று ஏற்படுத்தப்பட்டது.

காந்திஜி காங்கிரஸிலிருந்து விலகுவதை முன்னிட்டு, அவரிடத்தில் தேசம் பூர்ண நம்பிக்கை கொண்டிருப்பதைக் காட்ட ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

அடுத்த காங்கிரஸ் ஐக்கிய மாகாணத்தில் நடத்த வேண்டுமென்று, ஐக்கிய மாகாணத் தலைவர்கள் கேட்டுக் கொள்ள, அவர்களுடைய வேண்டுகோள் ஒப்புக்கொள்ளப் பட்டது.

பம்பாய் காங்கிரஸ் முடிந்தவுடன் தேர்தல்கள் ஆரம்பமாயின. தேர்தலில் தேசம் அதிக ஊக்கத்துடன் கலந்து கொண்டது. விடுதலைப் போராட்டத்தில் சட்டமறுப்பு செய்து, போலீஸ் தடியடிகளைப் பெற்ற தொண்டர்களுக்கு தேர்தல் வேலை ஓர் புதிய உற்சாகத்தை அளித்தது. அவரவர் தங்கள் தங்கள் இஷ்டப்படி மேடைகள் மீதேறிப் பிரசாரம் செய்ய சந்தர்ப்பம் கிடைத்தது. காங்கிரஸ் கட்சிக்கு பலத்த ஆதரவு இருந்தது. ஒரு கிராமம்கூட விட்டுப்போகவில்லை. எல்லா ஊர்களுக்கும் காங்கிரஸ் பிரதிநிதிகள் சென்று தேர்தல் பிரசாரத்தை நடத்தினார்கள். அநேகமாக இந்தியா சட்ட சபையில் எல்லா ஸ்தானங்

களுக்கும் காங்கிரஸ் அபேட்சகர்கள் போட்டி போட்டனர். தேசியக் கட்சியார், காங்கிரஸ் தேசியக் கட்சியென்று சொல்லிக்கொண்டு காங்கிரஸ் அபேட்சகர்களை எதிர்த்தனர். வகுப்புத் தீர்ப்பு சம்பந்தமாக இவர்களுக்கும், காங்கிரஸ் பிரதிநிதிகளுக்கும் வித்தியாசம் உண்டே யல்லாது மற்ற எல்லா விஷயங்களிலும் இவர்களுக்கும், காங்கிரஸ் கட்சிக்கும் வித்தியாசமே கிடையாது. இந்தியாவில் எல்லாரும் தென்னிந்திய வர்த்தகத்தொகுதி தேர்தலில் அதிக கவனம் செலுத்தலானார்கள். மாஜி சட்ட சபைத் தலைவர் சர் ஆர். கே. ஷண்முகம் செட்டியார் இத் தொகுதிக்கு அபேட்சகராக நின்றார். இவருக்கு சென்னை சர்க்கார் களுடைய ஆதரவு பரிபூர்ணமாக இருந்தது. இந்திய சர்க்காரும் வேண்டிய உதவி யளித்தனர். சென்னை சர்க்கார் ஹோம் மெம்பர் மகமது உஸ்மானும், முதல் மந்திரி பொப்பிலி ராஜாவும் சர். ஷண்முகம் செட்டியாருக்கு ஆதரவளிக்க முன் வந்தவர்களில் குறிப்பிடத்தக்கவர்களாவர். மாஜி சட்டசபைத் தலைவருக்குப் போட்டி இருக்கவே கூடாது என்று பிரிட்டனில் இருந்துவரும் சம்பிரதாயத்தை சர். ஷண்முகம் செட்டியார் பல்லவி பாட ஆரம்பித்தார். இத் தேர்தல் பிரசாரத்தில் சர்க்கார் அதிகாரிகள் சிறிதும் தயங்காமல் பங்கெடுத்துக் கொண்டார்கள். இத் தொகுதியில் வாக்காளர்களா யிருப்பவர் எல்லாருமே பணக்காரர்களாகையால் வருமான வரி இலாகா அதிகாரிகளின் வலைக்குட்பட்டவர்கள். ஆகவே வருமான வரி அதிகாரிகள் இத் தேர்தலில் அதிக ஊக்கம் காட்டினார்கள். ஸ்ரீ சாமி வெங்கடாசலம் செட்டியை சர் ஷண்முகம் செட்டிக்குப் போட்டியாக காங்கிரஸ் கட்சி நிறுத்தியது. சர்க்கார் ஆதரவும், அதிகாரிகள் உதவியும், செல்வாக்கும் கொண்ட சர். ஷண்முகம் செட்டியை ஸ்ரீ சாமி வெங்கடாசலம் ஜெயித்தது சாமானிய வெற்றி யாகாது. உண்மையில் இவ் வெற்றி காங்கிரசின் வெற்றியாகும். சர் ஷண்முகம் செட்டியின் தோல்வி சர்க்காருடைய தோல்வியாகும். இது தர்மத்தின் வெற்றி யென்பது மிகையாகாது. ஒட்டாவா ஒப்பந்தத்திற்கும், பிரிட்டனுக்கும் இந்தியா சரியான பதிலளித்து விட்டது. தேசத்தைக் காட்டிக் கொடுத்து, தங்கள் பக்கமாக இருந்து ஒட்டாவா ஒப்பந்தத்தில் கையெழுத்திட்ட சர்.ஷண்முகம் செட்டிக்கு தேசத்தில் ஆதரவு இருக்கிறதா என்று பரிசுீலிக்க சர்க்காரும் விரும்பினார்கள்.

ஆனால் சர். ஷண்முகம் செட்டி தேர்தலில் முறியடிக்கப்பட்டார். இவ் வெற்றி இந்தியா முழுதும் பரவிவிட்டது. இதன் விளைவு மற்ற இடங்களில் நன்கு தெரியலாயின. தென் னிந்தியாவுக்கு மகத்தான வெற்றி கிடைத்துவிட்டது. எதிர்பார்த்த அளவுக்கு அதிகமாகவே வெற்றி யேற்பட்டது. எல்லா ஸ்தானங்களையும் காங்கிரஸ் கைப்பற்றி விட்டது. திவான் பகதூர் ஏ. ராமசாமி முதலியார் போன்றவர்கள் தோல்வியடைந்ததில் ஆச்சரியமில்லை. காங்கிரஸில் பல வருடம் அங்கத்தினரா யிருந்து தலைமை வகித்து, தற் சமயம் விலகி சொந்த ஹோதாவில் நின்ற டாக்டர் வரத ராஜுலு நாயுடு போன்றவர்கள் தோல்வியுற்ற தல்லாமல் ஜாமீன் தொகையையும் பறி கொடுத்தார்கள்.

145 அங்கத்தினர் கொண்ட இந்தியா சட்ட சபையில் காங்கிரஸுக்கு 44 ஸ்தானங்கள் கிடைத்தன. காங் கிரஸின் வெற்றி போற்றத்தக்கதாயினும் 1926-ம் வருஷத் தில் சுயராஜ்யக் கட்சி யடைந்த வெற்றிக்கு இணையாகாது. அசம்பிளித் தலைவர் ஸ்தானத்திற்கு தங்கள் கட்சியிலிருந்து ஓர் அபேட்சகரை நியமிக்க காங்கிரஸ் கட்சி எவ்வளவோ பிரயத்தனம் செய்தது. மௌலானா டி. ஏ. கெ. ஷெர்வாணி யை காங்கிரஸ் கட்சி, தலைவர் ஸ்தானத்திற்கு பிரேரித்தது. ஆனால் சர்க்கார் ஆதரவைப் பூரணமாகப் பெற்ற சர். அப் துர் ரஹிம் வெற்றிபெற்றார். இந்தியா சட்ட சபைக் கூட் டம் ஆரம்பித்த சிலதினங்களுக்குள்ளாக காங்கிரஸ் கட்சிக்கு பலத்த நஷ்டங்கள் ஏற்பட்டன. இந்தியத் தாயின் அருந் தவப் புதல்வரும் சாந்தமூர்த்தியும், ஒப்பற்ற தேசாபிமானியு மான ஸ்ரீ டி. ஏ. கே. ஷெர்வாணிக்கு உட்காதில் ஏற்பட்ட ஓர் கொடியநோய் அவருடைய உயிரை கொண்டுபோயிற்று. சட்ட சபை கூடுவதற்கு முன்னர் உத்தம சிகாமணியாகிய டாக்டர் அபயங்கரும், வங்காள வீரர் ஸ்ரீ ஸஸ்மாலும் இறந்து விட்டனர்.

இருந்தபோதிலும் சிறிதும் தளர்ச்சி யடையாது காங் கிரஸ் கட்சி வேலைசெய்ய ஆரம்பித்தது. இந்தியா சட்ட சபை 1935-ம் வருஷம் ஜனவரி மாதம் 21-ம் தேதி ஆரம்ப மாயிற்று. வெள்ளைக் காகித சீர்திருத்தத்தை நிராகரிப் பதும், அடக்குமுறைச் சட்டங்களை ரத்து செய்வதும், ஓர் ஜனப்பிரதிநிதித்துவ சபை கூட்ட முயற்சிப்பதும் காங்கிரஸ்

கட்சியின் திட்டங்களாகும். இருந்தபோதிலும் காங்கிரஸ் கட்சி மற்ற துறைகளிலும் தங்கள் கவனத்தைச் செலுத்தலாயிற்று. காங்கிரஸின் அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கம் சம்பந்தமாக இந்திய சர்க்கார் மாகாண அதிகாரிகளுக்கும், ஜில்லா கலெக்டர்களுக்கும் அனுப்பிய ரகசிய அறிக்கையைக் கண்டித்து இந்தியா சட்ட சபையில் ஒத்திவைப்புப் பிரேரணை பேசித் தீர்க்கப்பட்டது இந்தியா சட்டசபைக்குப் போட்டியின்றி கல்கத்தா நகர தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஸ்ரீசரத்சந்த்ரபோஸை அசெம்பிளிக்கு வர முடியாமல் தடை செய்து, சிறை பிடித்து வைத்திருப்பதைக் கண்டித்துப் பிரேரிக்கப்பட்ட ஒத்திவைப்புப்பிரேரணையில் சர்க்கார் தோற்கடிக்கப்பட்டனர். 58 பேர் ஜனங்களுக்கு சாதகமாகவும், 54 பேர் சர்க்கார் பக்கமும் ஓட்டு செய்தார்கள். காங்கிரஸ் கட்சித் தலைவர் ஸ்ரீ புலாபாய் ஜெ. தேசாய் பண்டித மோதிலாலுக்கு இணையாக விவாதத்தை நடத்தினார். அடுத்தபடி இந்தியா பிரிட்டன் வர்த்தக ஒப்பந்தம் கண்டனத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டது. காங்கிரஸ் கட்சிக்கு முன்னிலும் அதிக வெற்றி கிடைத்தது. சர்க்கார் செயலை 66 பேர் கண்டித்தார்கள். சர்க்காருக்கு 58 அங்கத்தினர்கள் தான் ஆதரிக்க முன்வந்தார்கள். இந்தியா-பிரிட்டன் வர்த்தக ஒப்பந்தம் முற்றிலும் இந்தியாவுக்கு தீங்கு விளைவிக்கக்கூடியது என்றும், இவ்வொப்பந்தத்திற்கு இந்திய மக்கள் சம்மதிக்கவில்லை யென்றும் ஜனப்பிரதிநிதிகள் திட்டமாகக்கூறி விட்டார்கள்.

பிறகு வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திலுள்ள 'செவ்வங்கிப் படையினர்' என்று சொல்லப்பட்ட 'குதாய் கித்மத்கார் சங்கத்தின்' மீது விதிக்கப்பட்ட தடையை எடுத்துவிட வேண்டுமென்று கொண்டுவரப்பட்ட தீர்மானத்தில் காங்கிரஸுக்கு அபரிமிதமான வெற்றி கிடைத்தது. சர்க்கார் முறையை 74 அங்கத்தினர்கள் கண்டித்தார்கள். சர்க்கார் முறையை ஆதரிக்க 46 அங்கத்தினர்கள் தான் துணிந்தார்கள். சர்க்கார் வரி விதித முறை பலமாகக் கண்டிக்கப்பட்டது. மற்றும் சுமார் 20 அல்லது 25 விஷயங்களில் காங்கிரஸ் கட்சி வெற்றி பெற்றது.

## கூட்டுப் பார்லிமெண்டரி அறிக்கை

அசெம்பிளித் தேர்தல் சமயத்தில் வெளியான வெள்ளைக் காகித சீர்திருத்தச் சிபார்சு இதற்குள்ளாக ஓர் உருக்கொள்ள ஆரம்பித்துவிட்டது. கூட்டுப் பார்லிமெண்டரி அறிக்கை காமன்ஸ் சபையிலும், லார்டு சபையிலும் நிறைவேற்றப்பட்டு விட்டது. இனி இக்கூட்டுப் பார்லிமெண்டரி அறிக்கை சட்டமாக்க வேண்டியது தான் பாக்கி.

இக்கூட்டுப் பார்லிமெண்டரி அறிக்கை இந்தியாவில் ஒவ்வொருமாகாண சட்டசபையிலும் விவாதிக்கப்பட்டது. ஆனால், மாகாண சட்ட சபைகளில் கையாளப்பட்ட முறையைச் சர்க்கார் மத்திய சட்டசபையில் கையாளவில்லை. மாகாண சட்ட சபைகளில் சர்க்கார் அங்கத்தினர்கள் ஓட்டு செய்யாமல் நடுநிலைமை வகித்தனர். மத்திய சட்டசபையிலோவெனில் இவ்விவாதத்தில் சர்க்கார் தாராளமாய் தலையிட்டனர். அத்துடனில்லாது கொண்டுவரப்பட்ட எல்லா திருத்தங்களையும் எதிர்த்து ஓட்டு செய்தார்கள். சர்க்கார் தலையிடாமல் மௌனமாக இருந்திருப்பார்களானல், கூட்டுப் பார்லிமெண்டரி அறிக்கையை ஆதாரமாகக் கொண்டு எவ்வித அரசியல் சீர்திருத்தத்தையும் தொகுக்கக் கூடாதென்று காங்கிரஸ் கட்சியில் பிரேரித்த தீர்மானம் கண்டிப்பாய் வெற்றி பெற்றிருக்கும்.

இருந்தபோதிலும் ஸ்ரீ. எம். ஏ. ஜின்ன பிரேரித்த திருத்தத்தை சட்டசபை ஒப்புக்கொண்டது. ஓட் செய்வதற்காக ஸ்ரீ ஜின்னவின் தீர்மானம் இரண்டு பாகங்களாகப் பிறிக்கப்பட்டது. முதல் பாகம் வகுப்புத் தீர்ப்பை ஏற்றுக் கொள்வதாகும். இந்திய மக்கள் வகுப்புத் தீர்ப்பு சம்பந்தமாக நடு நிலைமை வகிப்பதாக காங்கிரஸ் கட்சி ஸ்ரீ ஜின்ன வின் பிரேரணைக்கு ஓர் திருத்தத்தைப் பிரேரித்தது. இத் திருத்தத்தை 44 காங்கிரஸ் அங்கத்தினர்கள் மட்டும் ஆதரித்தார்கள். மற்றவர்கள் எதிர்த்ததால், இத் திருத்தம் தோல்வியுற்றது. இத்திருத்தம் தோல்வியுற்றபின், காங் கிரஸ் கட்சி அசல் தீர்மானத்திற்கு ஓட்டு செய்யவில்லை. முஸ்லீம் அங்கத்தினர்களும், சர்க்கார் அங்கத்தினர்களும் ஓட்டு செய்ய ஸ்ரீ ஜின்ன தீர்மானத்தின் முதல் பாகம் நிறைவேறியது.

ஸ்ரீ ஜின்னு தீர்மானத்தின் இரண்டாவது பாகமும் மூன்றாவது பாகமும் சேர்ந்தார்போல ஓட்டுக்கு விடப் பட்டன. சாதகமாக 74 பேரும் எதிரிடையாக 54 பேரும் ஓட் செய்தார்கள். ஸ்ரீ ஜின்னுவின் திருத்தங்கள் கூட்டுப் பார்லிமெண்டரி கமிட்டி அறிக்கையை நிராகரித்துவிட்ட தாக சர்க்கார் சட்ட மெம்பர் பகிரங்கமாக சட்ட சபை யிலேயே ஒப்புக்கொண்டுவிட்டார்.

ரயில்வே வரவு செலவு திட்டம் விவாதத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டபோது சர்க்கார் அடைந்த தோல்விகளுக்கு அளவே யில்லை. சர்க்காரின் அந்தரங்க முறைகள் வெட்ட வெளிச்சமாக்கப்பட்டன. சர்க்கார் மனப்பான்மையை ஸ்ரீ புலாபாய் தேசாய் பலமாகக் கண்டித்து, ரயில்வே வரவு செலவு திட்டத்தை எதிர்த்தார். முடிவில் காங்கிரஸ் கட்சி பிரேரணை ஓட்டுக்கு விடப்பட் டது. 75 பேர் சாதகமாகவும் 47 பேர் எதிரிடையாகவும் ஓட் செய்ய காங்கிரஸுக்கு மகத்தான வெற்றி கிடைத்தது. ரயில்வே உத்தியோகங்களை இந்திய மயமாக்க வேண்டு மென்றும், மூன்றாவது வகுப்புப் பிரயாணிகளுக்கு அதிக வசதிகள் அளிக்கவேண்டுமென்றும், விவசாயப் பொருள் களுக்கு ரயில்வே கட்டணம் குறைக்கப்பட வேண்டு மென்றும் பல பிரேரணைகளைக் காங்கிரஸ் கட்சி நிறை வேற்றியது.

1935-ம் வருஷத்தில் காங்கிரஸ் வேலையைக் கவனிப் போம். முதன் முதலாக காங்கிரஸ் காரியக் கமிட்டி கூடியதும், ஸ்ரீ அய்யங்கார், ஆச்சாரிய கித்வானி இருவரு டைய மரணத்திற்கும் அனுதாபம் வெளியிடப்பட்டது. பூர்ண சுதந்திர தினம் இந்தியா முழுதும் அனுஷ்டிக்கப் பட்டது.

## சக்கரவர்த்தி ஜூபிளி

ஜார்ஜ் மன்னர் வெள்ளி ஜூபிளி விழாக் கொண் டாட்டம் ஓர் முக்கிய பிரச்னையாயிற்று. இதைப்பற்றி காங்கிரஸ் காரியக் கமிட்டி ஓர் அறிக்கை வெளியிட்டது. மன்னர் சொந்த விஷயத்தைப் பொறுத்த வரையில் காங் கிரசுக்கு எவ்வித கெட்ட எண்ணமும் இருக்க முடியாது. ஆனால், மன்னர் பெயரால் இந்தியாவில் நடைபெற்று வரும்

ஆட்சி முறை இந்திய மக்களின் அரசியல் அபிவிருத்திக்கும், பொருளாதார அபிவிருத்திக்கும், மற்றும் பல துறைகளிலும் பலத்த தடங்கலாக இருந்து வருகிறதென்பதை மறக்க முடியாது. மன்னர் பெயரைச் சொல்லிக்கொண்டும் அரசாங்கம் தற்பொழுது இந்திய மக்களை ஏழ்மைப்படுத்தும் ஓர் அரசியலை நம் மீது சுமத்தி, இதுவரை அனுபவத்திராத முறையில் நம்மிடை எஞ்சியிருக்கும் சொற்ப பொருளையும் கொள்ளைகொண்டு, நம்மை சாஸ்வதமாக அடிமையாக்க இப் புதிய சீர்திருத்தம் முயலுகிறது. ஆகையால் மன்னர் வெள்ளி விழாக் கொண்டாட்டத்தில் மன்னர் மனதுக்குச் சங்கடங்கள் உண்டுபண்ணக்கூடிய ஆர்பாட்டங்களைச் செய்ய காங்கிரஸ் காரியக் கமிட்டி விரும்பவில்லை. ஆனால் பொது ஜனங்களையும், காங்கிரஸ்காரர்களையும் இக் கொண்டாட்டத்தில் கலந்து கொள்ளாமல் விலகி இருக்கும்படி காங்கிரஸ் காரியக் கமிட்டி சிபார்சு செய்தது.

இந்திய பருத்தி ஆலைகள் சம்பந்தமாக இருந்து வந்த பிரச்னை மிகவும் சிக்கலாக இருந்து வந்தது. அநேக ஆலைச் சொந்தக்காரர்கள் தாங்கள் அளித்த வாக்குறுதிகளைக் கடைபிடித் தொழுகவில்லை. ஆகையால் இனி சுதேசி பருத்தி வஸ்திரங்களுககு அங்கீகாரம் கொடுப்பதில்லை யென்றும், இதுவரை அளிக்கப்பட்டிருந்த அங்கீகாரத்தையெல்லாம் ரத்து செய்துவிட்டதாகவும் காங்கிரஸ் காரியக் கமிட்டி அறிவித்துவிட்டது. எல்லா காங்கிரஸ் அங்கத்தினர்களும், காங்கிரஸ் அனுதாபிகளும், கதர் துணியையேபிரதானமாக ஆதரிக்க வேண்டுமென்று வற்புறுத்தப்பட்டது.

ஸ்திரிதள ஜில்லாக்கள் (கடப்பை, கர்னூல், அனந்தப்பூர், பெல்லாரி) பஞ்சத்தால் தவித்துக்கொண்டிருப்பதை காங்கிரஸ் மகாசபை மறந்துவிடவில்லை. உண்ண உணவின்றி, குடிக்கத் தண்ணீரின்றி, உடுக்க உடையுமின்றி தவிக்கும் மக்களுக்கு உதவியளிக்கும்படி ஆந்திர மாகாண காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ டி. பிரகாசமும், குடியானவர் சங்கத் தலைவர் ஆசிரியர் ஸ்ரீ ரங்காவும் வேண்டுகோள் விடுத்தனர். இதே சமயத்தில் பஞ்சக் கொடுமையை விளக்கி, கஷ்டப்படும் மக்களுக்கு உதவிபுரிய வேண்டிய அவசியத்தை எடுத்துக் காட்டி காங்கிரஸ் தலைவர் பாபு ராஜேந்திர பிரசாத் ஓர் அறிக்கை வெளியிட்டார்.

1935-ம் வருஷம் பிப்ரவரி மாதம் 7-ந் தேதி வியாழக்கிழமையை 'கூட்டுப் பார்லிமெண்டரி அறிக்கைக் கண்டன' தினமாக இந்தியா முழுதும் அனுஷ்டிக்கும்படி காங்கிரஸ் தலைவர் விடுத்த கட்டளைப்படி ஒவ்வொரு பகுதியிலும் கண்டனத் தீர்மானங்கள் நிறைவேற்றப் பட்டன.

வங்காளத்திலும், பீஹாரிலும் காங்கிரஸ்காரர்கள் படும் கஷ்டங்களுக்கு அளவே கிடையாது. மிதுனபுரி ஜில்லாவில் சர்க்கார் அடக்குமுறைத் தாண்டவம் ஓங்கியிருக்கிறது. காங்கிரஸ் கமிட்டிகள் பல சட்ட விரோதமென்று தடைசெய்யப்பட்டிருந்தன. அத் தடைகள் இன்னமும் எடுக்கப்படவில்லை. பல கட்டிடங்களைச் சர்க்கார் தங்கள் ஆதிக்கத்தில் வைத்துக்கொண்டு, காங்கிரஸ் சங்கங்களுக்குத் திருப்பிக் கொடுக்கவில்லை. இராக் காலங்களில் ஒருவரும் வெளியே வரக்கூடாதென்ற உத்திரவு பல இடங்களில் அமலில் இருந்து வருகிறது. 15 வயதுக்கு மேற்பட்டு 30 வயதுக்குட்பட்ட வாலிபர்கள் சைகில்களில் செல்லக்கூடாதென்ற தடையுத்திரவு பிரேரிக்கப்பட்டது. முக்கியமான ரஸ்தாக்கள் வழியே ராணுவ பவனிகள் நடைபெற்றது. பல வீடுகள் சோதனை செய்யப்பட்டன. காங்கிரஸ் வேலையைக் கண்டித்து பல உத்தியோகஸ்தர்களும், சில பிரமுகர்களும் பிரசாரம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள்.

பீஹாரில் அபராதம் செலுத்தாத காங்கிரஸ்காரர்களுடைய சொற்ப சொத்துக்களையும் சர்க்கார் ஜப்தி செய்து ஏலம் போட்டு விற்க ஆரம்பித்தனர். காங்கிரஸ்காரர்களுடைய சொந்தக்காரர் சொத்துக்கும் ஆபத்து ஏற்பட்டுவிட்டது.

## ஹிந்து முஸ்லீம் சமரசப் பேச்சு

பிரிட்டிஷ் பிரதம மந்திரி யளித்த வகுப்புத் தீர்ப்பை ரத்துசெய்து, அதற்குப் பதிலாக ஓர் சமரச திட்டத்தை ஏற்படுத்துவதற்கான முயற்சிகள் 1935-ம் வருஷம் ஜனவரி, பிப்ரவரி மாதங்களில் நடைபெறலாயின. ஹிந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இருந்துவரும் வித்தியாசங்களையும் தகராறுகளையும் ஒழிக்கவும், நாட்டில் வகுப்புச் சண்டைகளைக் குறைக்கவும், விடுதலைப் போராட்டத்தில் ஒன்றுகூடி

வேலை செய்யவும் வேண்டி காங்கிரஸ் தலைவர் பாபு ராஜேந்திர பிரசாதும், அகில இந்திய முஸ்லிம் லீக் தலைவர் ஸ்ரீ எம். ஏ. ஜின்னாவும் கூடி ஆலோசிக்கலானார்கள். 1935-ம் வருஷம் ஜனவரி மாதம் 23-ந் தேதி சமரசப் பேச்சு ஆரம்பமாயிற்று. பிப்ரவரி மாதம் முதல் வாரத்தில் சில நாட்களுக்குப் பிறகு மீண்டும் பிப்ரவரி மாதம் 12-ந் தேதி சமரசப் பேச்சு தொடரப்பட்டது.

பாபு ராஜேந்திர பிரசாதையும், ஸ்ரீ ஜின்னாவையும் பொறுத்த வரையில் இப்பேச்சால் ஓர் சமரச ஒப்பந்தம் ஏற்பட்டுவிட்டது. அவர்களிஷ்டபடி விட்டிருந்தால் காங்கிரசும் முஸ்லிம் லீக்கும் ஒப்புக்கொள்ளக்கூடிய ஓர் சமரசம் ஏற்பட்டிருக்கும். ஆனால் இந்த இரண்டு ஸ்தாபனங்களுக்கும் வெளியேயுள்ளவர்கள் இச் சமரசத்திற்கு உடன்பட மறுத்துவிட்டார்கள். ஆகவே சமரசப்பேச்சு கைவிடப்பட்டது.

இச் சமரசப்பேச்சு சம்பந்தமாக பாபு ராஜேந்திர பிரசாதும் ஸ்ரீ ஜின்னாவும் கீழ்க்கண்ட அறிக்கையை வெளியிட்டிருக்கிறார்கள் :—

"சம்பந்தப்பட்ட எல்லா கட்சிகளையும் திருப்தி செய்ய வகுப்புப் ப்ரச்னையைத் தீர்க்கக்கூடிய ஓர் முறையைக் கண்டுபிடிக்க நாங்கள் உண்மையாக எங்களாலானவரை முயன்றோம். நாங்கள் எவ்வளவு முயன்றும் ஓர் திருப்திகரமான திட்டத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

நமது தேசத்தின் அபிவிருத்திக்கு வகுப்பு ஒற்றுமை அத்தியாவசியமென்பதை நாங்கள் உணருகிறோம். வருங்காலத்திலாவது இம்முயற்சி வெற்றிபெறும் என்று நம்புகிறோம்."

(ஒப்பம்) ராஜேந்திர பிரசாத்.
எம். ஏ. ஜின்னா.

1935-ம் வருஷம் ஆரம்பித்த பிறகும் கூட சர்க்கார் மனப்பான்மையில் சிறிதும் மாறுதல் காணப்படவில்லை. காங்கிரஸ் என்றாலும் சர்க்காருடைய விரோதியென்ற முறையில் சர்க்கார் எண்ணினார்கள். புரட்சி இயக்கம் இன்னமும் நடைபெறுமோ என்ற பீதி சர்க்கார் மனத்தைவிட்டகலவில்லை. வங்காளத்தில் மட்டும் 2700 பேர் விசாரணை

யில் சிறையிலும், கிராமங்களிலும் கட்டுப்படுத்தி வைக்கப்பட்டிருந்தார்கள். அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி காரியாலயத்தைக்கூடச் சர்க்கார் சோதனை போட்டார்கள். சட்டமறுப்பியக்கத்தைக் காங்கிரஸ் ரத்து செய்த பின், சர்க்கார் அடக்குமுறை அதிகரித்ததே யல்லாது சிறிதும் தணியவில்லை. கல்கத்தாவில் நடத்துவதாக நிச்சயிக்கப்பட்டிருந்த அகில இந்திய தொழிலாளர் காங்கிரசை நடைபெற வொட்டாமல் சர்க்கார் தடை செய்துவிட்டார்கள். மன்னர் ஜுபிலி விழாவை எதிர்த்துப் பிரசாரம் செய்ததாகச் சாக்கு சொல்லி, கோமில்லாவில் பல பிரபல முஸ்லிம்களைப் போலிசார் கைது செய்தார்கள். ஸ்தல ஸ்தாபனங்களைக் கைப்பற்ற காங்கிரஸ்காரர்கள் முற்படுவதை சர்க்கார் விரும்பவில்லை.

சர்க்கார் நிர்வாக முறையைக் கவனித்தாலோ ஜனங்களுக் கேற்பட்ட அதிருப்தியைச் சொல்லமுடியாது. இந்தியா சட்ட சபையால் நிராகரிக்கப்பட்ட சர்க்கார் வரவு செலவு திட்ட மசோதாவுக்கு வைசிராய் தமது யதேச்சாதிகாரத்தை பிரயோகித்து சம்மதம் அளித்து விட்டார். இந்த முறையை ஐரோப்பிய அங்கத்தினர்களும், சர்க்கார் தாசர் சர். கோவாஸ்ஜி ஜிஹாங்கீரைப் போன்றவர்களும் பலமாகக் கண்டித்தனர்.

வங்காளத்தில் விசாரணையின்றி சிறைபிடித்து வைக்கப்பட்டிருக்கும் ஆயிரக்கணக்கான மக்களின் சுற்றத்தாருக்கு உதவியளிப்பது அவசியம் என்று ஜப்பல்பூரில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி முடிவு செய்தது. இதை யொட்டி காங்கிரஸ் தலைவர் பொருளுதவி புரியும் தேச மகாஜனங்களுக்கு உருக்கமான ஓர் வேண்டுகோள் விடுத்திருந்தார். 1935-ம் வருஷம் மே மாதம் 19-ம் தேதியை தேசமுழுதும் "வங்காள பந்தோபஸ்துக் கைதிகள் தினமாக" அனுஷ்டிக்கும்படியும், அன்றையதினம் அவரவர் தங்களாலான பொருளுதவி புரியும்படியும் காங்கிரஸ் தலைவர் வேண்டிக்கொண்டிருந்தார். வங்காள சர்க்கார் இதை பலமாகக் கண்டித்த தல்லாது பத்திரிகைகளில் வங்காள பந்தோபஸ்து கைதிகள் தின சம்பந்தமான செய்திகள் பிரசுரம் செய்யக்கூடாதென்று வாய்ப்பூட்டும் போட்டு விட்டார்கள். வங்காளத்திலுள்ள இந்திய பத்திரிகைகள் இவ்வுத்திரவைப் பலமாகக் கண்டித்தன. தங்கள் எதிர்ப்

யைத் தெரிவிக்கும்பொருட்டு மே மாதம் 21-ந் தேதி எல்லா இந்தியப் பத்திரிகைகளும் வேலை நிறுத்தம் செய்தன.

வங்காள சர்க்கார் உத்திரவை காங்கிரஸ் தலைவர் பல மாகக் கண்டித்து நீண்டதோர் அறிக்கையை வெளியிட்டார். விசாரணையில்லாமலும், காலம் குறிப்பிடாமலும் ஆயிரக்கணக்கானவர்களைச் சிறைபிடித்து வைத்திருப்பது அநீதி யென்பதையும், அவர்களை விசாரணை செய்து கோர்ட் தீர்ப்புப்படி நடத்தவேண்டிய கடமை சர்க்காருடைய தென்பதையும், சர்க்கார் தற்சமயம் அனுஷ்டிக்கும் அடக்குமுறையால் புரட்சி யியக்கத்தை வளர்த்து வருகிறார்கள் என்பதை பாபு ராஜேந்திரர் தமது அறிக்கையில் விளக்கினர்.

## எல்லைப்புறத்தில் காங்கிரஸ் வேலை

எல்லைப்புற காந்தி கான் அப்துல் கபார் கான் சிறையில் தேக அசௌக்கியமாக இருந்தார். அவருடைய சகோதரர் டாக்டர் கான் சாஹிப் இந்தியா சட்டசபைக்கு எல்லைப்புற மாகாணத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டார். இதுவரை எல்லைப்புற மாகாணத்திற்குள் பிரவேசிக்கக் கூடாதென்று விதிக்கப்பட்டிருந்த உத்திரவை டாக்டர் கான் சாஹிப் சம்பந்தப்பட்ட வரையில் சர்க்கார் எடுத்து விட்டார்கள். டாக்டர் கான் சாஹிப் இச் சந்தர்ப்பத்தைக் காங்கிரஸ் பிரசாரத்திற்கு உபயோகிக்கலானார். வடமேற்கு எல்லைப்புறத்தில் டாக்டர் கான் சாஹிப் பல நாள் சுற்றுப் பிரயாணம் செய்து எல்லா கிராமங்களுக்கும் விஜயம் செய்தார். மூன்றரை வருடங்களுக்குப் பிறகு திரும்பி வந்த டாக்டர் கான் சாஹிபை ஜனங்கள் மன மகிழ்ச்சியுடன் வரவேற்று உபசாரம் செய்தார்கள். மீண்டும் வடமேற்கு எல்லைப்புற மாகாணத்தில் காங்கிரஸ் கமிட்டிகள் ஸ்தாபிக்கப்படலாயின.

## குவெட்டா பூகம்பம்

சர்க்கார் அடக்குமுறை யொருபுறமும், தரித்திரமும் பஞ்சமும் மற்றொரு புறமும் இந்தியாவைக் கஷ்டப்படுத்திக்கொண்டிருக்கையில் இந்தியாவுக்கு வேறு ஓர் தொல்லையும் ஏற்படலாயிற்று. இயற்கையின் கோபத்திற்கு

யார் என்ன செய்யமுடியும்? பிஹாரில் 1933-ம் வருஷம் ஜனவரி மாதம் 16-ம் தேதி ஓர் கொடிய பூகம்பம் ஏற்பட்டதை நாம் அறிவோம். பிஹார் வாசிகளுக்குப் பூரண உதவி இன்னும் அளிக்கப்பட்டாகவில்லை. அப்படியிருக்கையில் 1935-ம் வருஷம் ஜூன் மாதம் முதல் தேதியன்று குவெட்டாவில், இதுவரை கண்டிராத ஓர் கொடிய பூகம்ப அதிர்ச்சி ஏற்பட்டது. இப்பூகம்பத்தினால் ஏற்பட்ட கஷ்டம் எவ்வளவென்று இன்னமும் மதிப்பிடப் படவில்லை. ஆயிரக்கணக்கான மக்கள் வீட்டிற்குள் தூங்கிக் கொண்டிருந்த வண்ணம் மண்ணில் புதையுண்டு மாண்டனர். ஒரு சிலர் தெய்வாதீனமாய் உயிர்தப்பும் பாக்கியத்தைப் பெற்றனர். குடும்பங்கள் இருந்த இடம் தெரியவில்லை. நேற்று கோடீஸ்வரனாக இருந்தவர்கள் உணவுக்குப் பிச்சை கேட்கும் நிலைமை ஏற்பட்டுவிட்டது. இறந்தவர்களைவிட உயிர் தப்பிப் பிழைத்தவர்கள் நிலைமை அதிகப் பரிதாபகரமாக இருந்தது. கை போனவர்களும், கால் போனவர்களும் உதவியின்றி பாதவித்தனர். மக்கள் அடைந்த கஷ்டத்தை விவரித்தல் முடியாது.

குவெட்டா ஓர் ராணுவ நிலையம். இந்த நகரில் ஜனங்களுக்கு உதவியளிக்கும் முதற் பொறுப்பு சர்க்காருடையதாகும் என்பதை மறுப்பதற்கில்லை. ஆனால் மண்ணில் புதைந்து கிடப்பவர்களை மீட்பதிலும், அடிபட்டு குத்துயிரும் குலை உயிருமாய் கிடப்பவர்களுக்கு வைத்திய உதவியளிப்பதிலும் வெளியிலிருந்து எவரும் பங்கெடுத்துக் கொள்ளக்கூடாதென்று சர்க்கார் தடை விதித்த காரணத்தின் மர்மம் விளங்கவில்லை. காங்கிரஸ்காரர்கள் குவெட்டா சென்று ஜனங்களுக்கு உதவி யளிக்கவேண்டுமென்ற விருப்பத்துடன் சர்க்காரை மன்றாடிக் கேட்டுக்கொண்டார்கள். காங்கிரஸ் பொதுக் காரியதரிசி ஸ்ரீ ஜெயராம்தாஸ் தௌலத்ராம் கராச்சியிலிருந்து குவெட்டாவுக்கு விரைந்து சென்றார். ஆனால் அவரை அதிகாரிகள் குவெட்டா செல்ல முடியாதபடி தடுத்துவிட்டார்கள். குவெட்டாவுக்குள் சென்று உதவிபுரிய காங்கிரஸ் தலைவரும், மகாத்மா காந்தியும் சர்க்காரை வேண்டிக்கொண்டார்கள். ஒரே பிடிவாதமாய் சர்க்கார் அநுமதி மறுத்து விட்டார்கள். குவெட்டா சம்பந்தமாக சர்க்கார் கையாண்ட முறையைக் கவனித்தால் அவர்களுடைய மனத்தில் சந்தேகமும், அவநம்பிக்

கையும் குடிகொண்டிருந்த தென்பது நன்கு விளங்கும். குவெட்டா பூகம்பம் சம்பந்தமாக சர்க்கார் இந்தியா முழுதுமே மிகவும் கண்டிப்பாக இருந்தார்கள்.

## மந்திரிப் பதவி ஏற்கும் பிரச்னே

1935-ம் வருஷத்தின் நடுவில் காங்கிரஸ்காரர்களிடை மற்ெருரு புதிய பிரச்னே கிளம்பியது. இந்தியா சட்ட சபை சென்றவர்களில் பலர் இப்பிரச்னேயில் அதிக ஊக்கமாகக் கலந்து கொள்ளலானுர்கள். புதிய அரசியலில் காங்கிரஸ்காரர்கள் மந்திரிப் பதவி ஏற்பதா, ஏற்பதில்லேயா என்ற பிரச்னே இவர்களிடை பிரமாதமான கவலேயை உண்டுபண்ணிவிடலாயிற்று. இந்திய அரசியல் மசோதா பிரிட்டிஷ் பார்லிமெண்டில் விவாதிக்கப்படுகையில் இப்பிரச்னேயை காங்கிரஸ்காரர்கள் இந்தியாவில் கிளப்பியது வருந்தத்தக்க விஷயம் என்பதை மறுக்க முடியாது. மந்திரிப் பதவியில் மோகம் கொண்டவர்களுடைய மனப்போக்கை ஆதாரமாகக் கொண்டு, புதிய அரசியலே இந்தியாவில் வரவேற்க ஒரு சாரார் தயாராக இருந்து வருகிருர்கள் என்ற நம்பிக்கை பிரிட்டனிலுள்ள அரசியல் வாதிகளிடை ஏற்பட்டது. காங்கிரஸின் போக்கு என்ன என்பது ஏற்கனவே பம்பாய் காங்கிரஸில் வெளியாயிருக்கிறது. அடுத்த காங்கிரஸ் கூடும் வரை இப் பிரச்னேயைப்பற்றி கவனிக்க ஒருவருக்கும் உரிமையோ யோக்கியதையோ கிடையாது. இதை உத்தேசித்து, வார்தாவில் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டி ஓர் தீர்மானம் நிறைவேற்றியது. புதிய அரசியலில் உத்தியோகம் ஏற்பதா, ஏற்பதில்லேயா என்பதைப்பற்றிப் பல காங்கிரஸ் கமிட்டிகள் தங்கள் தங்கள் அபிப்பிராயங்களேத் தீர்மானங்கள் மூலம் வெளியிட்டிருந்தன. இதைப்பற்றி இப்பொழுது முடிவு செய்வது உசிதமற்றதென்றும், இப் பிரச்னேயை அடுத்த காங்கிரஸ் வரை ஒத்தி வைக்கவேண்டுமென்றும், தனிப்பட்டவர் விடுக்கும் அபிப்பிராயம் காங்கிரஸின் அபிப்பிராய மாகாதென்றும் காங்கிரஸ் காரியக் கமிட்டி வெளியிட்டது.

## சமஸ்தானக் குடிகளும் காங்கிரசும்

1938-ம் வருஷ ஆரம்பத்தில் காங்கிரஸ் பார்லிமெண்டரி போர்டு தலைவர் ஸ்ரீ புலாபாய் தேசாய் வக்கீல் என்ற முறையில் இந்திய சமஸ்தானாதிபதிகளுக்கு இந்திய அரசியல் மசோதாவில் இந்திய சமஸ்தானங்களின் நிலைமை சம்பந்தமாக சில அபிப்பிராயங்கள் கொடுத்ததை முன்னிட்டு, இந்திய சமஸ்தானக் குடிகள் சங்கம் அதிக பரபரப்பும் கவலையும் கொள்ள ஆரம்பித்துவிட்டது. இதை முன்னிட்டு ஜூலை மாதத்தில் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி கூட்டப்படவேண்டுமென்று வற்புறுத்தப்பட்டது. சமஸ்தானக் குடிகளுக்கு மூலாதார உரிமை வழங்கப்படாத எந்த அரசியலையும் காங்கிரஸ் ஒப்புக்கொள்ள முடியாதென்றும், ஐக்கிய அரசியலில் சமஸ்தானங்களுக்கும் பிரதிநிதித்துவம் அளிக்கப்படவேண்டுமென்றும் இரண்டாவது வட்ட மேஜை மஹா நாட்டில் மகாத்மாஜி கூறியதை சமஸ்தானப் பிரஜைகள் ஆதாரமாகக் கொண்டு காங்கிரஸின் அபிப்பிராயத்தை விளக்கும்படி கோரினர்.

வார்தாவில் ஜூலை மாதம் 29, 30, 31-ந் தேதிகளில் கூடிய காங்கிரஸ் காரியக் கமிட்டி இப் பிரச்னை சம்பந்தமாக தன் அபிப்பிராயத்தை விளக்கி ஓர் தீர்மானம் நிறைவேற்றியது. அத் தீர்மானத்தின் சுருக்கம் வருமாறு :—

“ சுயராஜ்யமடைய பிரிட்டிஷ் இந்தியக் குடிகளுக்கு எவ்வளவு உரிமை உண்டோ, அவ்வளவு உரிமை சமஸ்தானக் குடிகளுக்கும் உண்டு. அதனால்தான் சமஸ்தானங்களில் ஜனங்களுக்குப் பொறுப்பை அளிக்கும் ஜனநாயக ஆட்சி அளிக்கவேண்டுமென்று காங்கிரஸ் பலமுறை வெளியிட்டிருக்கிறது. தவிர சமஸ்தானக் குடிகளுக்கு மூலாதார உரிமைகளையும், வாக்கு சுதந்தரம், பேச்சு சுதந்தரம் முதலிய உரிமைகளையும் அளிக்கும்படி சமஸ்தான மன்னர்களைக் காங்கிரஸ் பலமுறை வேண்டிக் கொண்டிருக்கிறது. மேலும், சமஸ்தானக் குடிகள், தங்கள் உரிமைகளைப் பெற நடத்தும் நியாயமான போராட்டங்களில் அவர்களுக்கு அனுதாபமும், உதவியும் அளிப்பதாக காங்கிரஸ் உறுதி கூறி யிருக்கிறது. அந்த உறுதிமொழியையே இன்று காங்கிரஸ் கடைப்பிடித் தொழுகத் தயாராக இருக்கிறது. ஆனல், சமஸ்தானங்களுக்குள் கிளர்ச்சி செய்யும்

பொறுப்பு சமஸ்தானக் குடிகளுடையதாகும். புதிய இந்திய அரசியல் சீர்திருத்த மசோதாவைக் காங்கிரஸ் நிராகரித்து விட்டதால், அதில் சமஸ்தானப் பிரச்னை சம்பந்தமாகத் திருத்தங்கள் பிரேரிப்பது காங்கிரஸ் முறைக்கு ஏற்றதல்ல.

சமஸ்தானக் குடிகளைக் காட்டிக் கொடுத்துவிட்டு, சுதேச மன்னர்களுடைய ஆதரவைக் காங்கிரஸ் ஒருநாளும் நாடாது என்பது திண்ணம்."

கடைசியாக காங்கிரஸ் பொன் விழா கொண்டாட்டத்தைப்பற்றி மற்றொரு தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. ஸ்ரீஜத் ராஜேந்திர பிரசாத், டாக்டர் பட்டாபி சீதாராமய்யா, சேத் ஜமன்லால் பஜாஜ், ஸ்ரீ கோவிந்த வல்லப பந்த், ஸ்ரீ ஜெயராம்தாஸ் தௌலத்ராம், ஆச்சாரிய கிருபாலினி ஆகியோர் கொண்ட ஓர் கமிட்டி நியமிக்கப்பட்டது. பொன் விழா கொண்டாட்ட திட்டம் தயார் செய்யும் பொறுப்பு இக் கமிட்டியிடம் ஒப்படைக்கப்பட்டது. காங்கிரஸ் பொன் விழாக் கொண்டாட்டத்தின் ஓர் அம்சமாக காங்கிரஸ் சரித்திரம் என்று ஸ்ரீ பட்டாபி சீதாராமய்யா எழுதிய புத்தகத்தை காங்கிரஸ் தலைவர் மேற்பார்வையிட்டு காங்கிரஸ் கமிட்டியின் செலவில் பிரசுரம் செய்வதாகத் தீர்மானிக்கப்பட்டது. டாக்டர் பட்டாபி சீதாராமய்யா ஆங்கிலத்தில் எழுதிய காங்கிரஸ் சரித்திரத்தை அந்தந்த மாகாண பாஷைகளில் பிரசுரம் செய்ய அனுமதியளித்ததின்பேரில், காந்திஜியின் நூல்கள் பலவற்றையும் பிரசுரம் செய்த பெருமைக்குப் பாத்திரமாகிய "சுதந்திர சங்கு" காரியாலயத்திடம் தமிழ் பதிப்பு ஒப்படைக்கப்பட்டது.

## இந்தியா சட்ட சபை—சிம்லா கூட்டம்

மீண்டும் 1935-ம் வருஷம் செப்டம்பர் மாதத்தில் இந்தியா சட்ட சபை சிம்லாவில் கூடியது. இம் முறை பலரசமான விவாதங்கள் சட்ட சபை நடவடிக்கைகளை பிரதானமாக்கின. ஒரே தினத்தில் பகல் 2 மணிக்குப் பிறகு 5 மணிக்குள்ளாக சர்க்கார் இரண்டு பெரிய தோல்வி படைந்தார்கள். இந்தியாவிலேயே இந்திய ரயில்வே எஞ்சின்களும் மற்ற சாமான்களும் செய்யவேண்டுமென்று ஸ்ரீ சாமி

வெங்கடாசலம் கொண்டுவந்த தீர்மானத்தைச் சர்க்கார் எதிர்த்துத் தோல்வியுற்றனர். எல்லைப்புறத்தில் பிரபாதிகளாக இருக்கும் ஸ்திரிகள்மீதும் குழந்தைகள்மீதும் மித மிஞ்சி குண்டுகள் போடப்படுவதைக் கண்டிக்க டாக்டர் கான் சாஹிப் கொண்டுவந்த பிரேரணைக்குச் சட்ட சபை ஆதரவளித்தது. சிம்லா கூட்டத்தில் சர்க்கார் கிரிமினல் லா திருத்தச் சட்ட மசோதாவைப் பிரேரித்தார்கள். இம் மசோதாவை எவ்விதத்திலும் நிறைவேற்றிவிட வேண்டுமென்று சர்க்கார் பிரயத்தனப்பட்டார்கள். ஆனால் தேசாபிமானிகள் அடங்கிய காங்கிரஸ் கட்சியும், சுயேச்சைக் கட்சியைச் சேர்ந்த சிலரும் இம் மசோதாவைப் பலமாகக் கண்டித்தனர். முடிவில் இம் மசோதா தோற்கடிக்கப் பட்டது. ஆனால் வைசிராய் தமது யதேச்சாதிகாரத்தை உபயோகித்து இம் மசோதாவுக்கு உயிரளித்தார்.

1935-ம் வருஷம் ஜூலை மாதம் 2-ந் தேதி இந்திய அரசியல் சீர்திருத்தச் சட்டம் மன்னர் அங்கீகாரத்தைப் பெற்றுவிட்டது. இந்திய அரசியல் சீர்திருத்த மசோதா சம்பந்தமாக பிரிட்டிஷ் பார்லிமெண்டில் நடைபெற்ற விவாதங்களின் விவரத்தை வளர்க்க நாம் விரும்பவில்லை. ஆனால் காமன்ஸ் சபையில் இந்திய அரசியல் சீர்திருத்தச் சட்டம் சம்பந்தமாக மேஜர் மில்னர் கூறியதை மட்டும் குறிப்பிட வேண்டியதவசியம் என்று கருதுகிறோம்.

இந்தியா சம்பந்தமாக பிரிட்டிஷ் அரசியல்வாதிகள் அநுஷ்டிக்கும் முறையை மேஜர் மில்னர் வெகு அழகாக விளக்கியிருக்கிறார். பிரிட்டிஷ் பிற்போக்காளர்கள் இரண்டு வகுப்பினராகத் தங்களிடை ஓர் பிரிவு ஏற்படுத்திக் கொள்ளுகிறார்கள். ஒரு சாரார் அதிகாரத்தில் இருந்துகொண்டு இந்தியாவுக்குக் கொஞ்சம் சலுகை காட்டலாமா என்று சொல்ல, அதை மற்றொரு கட்சி பலமாகக் கண்டிக்கிறது. உண்மையில் இரு கட்சிகளின் லட்சியமும் இந்தியாவுக்கு ஒன்றுமே கொடுக்கக்கூடாதென்பதே. இருந்தாலும் இந்த லட்சியத்தை வெள்ளை அரசியல் வாதிகள் வெகு சாமர்த்தியமாக அடைகிறார்கள். இந்தியாவுக்குக் கொஞ்சமாவது சீர்திருத்தம் வழங்கவேண்டுமென்று ஓர் கட்சி சொல்லும்; கூடவே கூடாது என்று மற்றொரு கட்சி பலமாக எதிர்க்கும். முதற் கட்சியின் தலைவர்தான் சர். சாமியூல் ஹோர்; பின் கட்சியின் தலைவர் வின்ஸ்டன்

சர்ச்சிலாவர். இவர்களுக்குள் நடைபெறும் விவாதம் எல்லாம் உண்மையென்று இந்தியாவிலுள்ள மிதவாதிகள் நம்பி தங்களுக்கு சாமியூல் ஹோர் கட்சியால் ஏதாவது கிடைத்துவிடுமென்றும், அதை சர்ச்சில் கோஷ்டி எதிர்ப்பதால்தான் கிடைக்கவில்லை யென்றும் நம்புகிறார்கள். காமன்ஸ் சபையில் அதிகாரக் கட்சியும், சர்ச்சில் கோஷ்டியும் பிரமாதமாகச் சண்டைபோட்டுக்கொள்வதைக் கண்டு இந்திய மிதவாதிகள் மயங்கி ஏமாற்ற மடைந்து விடுகின்றனர். ஆனால் உண்மையில் அதிகாரக் கட்சியும், பிற்போக்காளர் கட்சியும் ஒரே லக்ஷியத்தையே கொண்டவர்களாவர் என்பதை இந்திய மிதிவாதிகள் உணருவதில்லை.

இச் சரித்திரத்தை முடிவுக்குக் கொண்டுவரு முன், காங்கிரஸ் தலைவர் பாபு ராஜேந்திரரைப்பற்றிக் குறிப்பிடாம லிருக்க முடியவில்லை. காங்கிரஸின் கடுமையான வேலையை தமது பொறுப்பை முற்றிலும் உணர்ந்தே ராஜேந்திரர் ஏற்றுக்கொண்டார். நல்ல தேக சௌக்கியம் இல்லாதவராக இருந்தும், அவரது சக்தியும் திறமையும் மக்களின் மனத்தைக் கவர்ந்து விட்டன. பாபுஜி இந்தியா முழுதும் ஓர் சுற்றுப் பிரயாணத்தை ஏற்றுக்கொண்டார். பாஞ்சாலம், மஹாராஷ்டிரம், கர்னாடகம், தமிழ் நாடு, ஆந்திர தேசம், கேரள நாடு முதலிய பிரதேசங்களில் சுற்றுப் பிரயாணம் செய்து காங்கிரஸ் பிரசாரத்தை ஊக்கமாக நடத்தினர்.

இந்திய அரசியலை விட்டு காந்திஜி விலகிக் கொண்ட பிறகு காங்கிரஸ் தலைவர் பதவி மிகவும் கடினமாகி விட்டதை யாரும் மறுக்கமுடியாது. காந்திஜி காங்கிரசில் இருந்த வரை எல்லா பொறுப்பையும் அவரே வகித்து வந்ததால், காங்கிரஸ் தலைவர் பதவி அவ்வளவு கஷ்டமானதாகத் தோன்றவில்லை. காங்கிரஸ் இந்த நாட்டில் அரசாங்கத்திற்கு சமானமான ஓர் ஸ்தாபனம் என்பது மிகையாகா தென்றே சொல்லலாம். ஆனால் துரதிர்ஷ்டவசமாக நமது நாட்டில் மட்டும் இவ்வளவு பெரிய ஓர் ஸ்தாபனத்தை அரசாங்கத்தார் தலையெடுக்க முடியாமல் நசுக்க முயன்று வருகிறார்கள். உண்மையையும் அஹிம்சா தர்மத்தையும் அடிப்படையாகக் கொண்ட இந்த உன்னதமான ஸ்தாபனத்தை இந்நாட்டில் அரசாங்கத்தார் மிருக பலத்தால் நசுக்க விரும்புகிறார்கள்.

சென்ற 50 ஆண்டுகளாக காங்கிரஸ் தேச சேவை செய்துவந்திருக்கிறது. இவ் வேலை விசேஷ வெற்றியை அளித்திருக்கிறது. காங்கிரஸ் வெற்றி யளிக்கவில்லை யென்று சிலர் கூறலாம். உலக அரசியலில் சத்தியாக்கிரகப் போராட்டம் ஓர் புதிய சக்தியாகும். இன்னும் இப்போராட்டம் முடிந்துவிடவில்லை. ஆனால் அதற்குள்ளாக இந்த இயக்கம் உலகத்தில் எல்லா நாடுகளையும் திடுக்கிடச் செய்துவிட்டது. இப்புதிய இயக்கத்தின் வேலை முறைகளும், தத்துவங்களும், லக்ஷியங்களும் புதியவை யாகும். இந்த சக்தியை ஆரம்பித்தவர் ஒருவர் தான். அந்த மகானின் ஊக்கத்தினாலும் சக்தியினாலும் இப்புதிய தத்துவம் வளர ஆரம்பித்து இன்று இவ்வளவு சக்தியைப் பெற்றிருக்கிறது. இம் மகான் இந்தியாவில் பிறந்து வளர்ந்த போதிலும், வாழ்நாளின் முக்கிய பருவத்தில் அன்னிய நாடாகிய தென்னாப்பிரிக்காவில் இருந்து கொண்டு இப் புதிய பரீக்ஷையை நடத்தினார்.

சத்தியாக்கிரக இயக்கம் திருப்தியற்றதல்லவா என்றும், காங்கிரஸ் தோல்வியுறவில்லையா என்றும் சிலர் கேட்கிறார்கள். இவற்றை அடுத்த அத்தியாயத்தில் கவனிப்போம்.

---

# அத்தியாயம் 4

## முடிவுரை

சென்ற ஐம்பது வருஷ காலத்தில் நாட்டில் நிகழ்ந்த சம்பவங்களை இதுகாறும் ஆராய்ச்சி செய்தோம். அவ்வித ஆராய்ச்சியில், முற் பாதியைக் காட்டிலும் பிற் பாதிக்கு அதிக இடமளித்து விரிவாகக் கூறினோம். இக் காலத்தில் பிரபலஸ்தர்களான பலர் தேசத்திற்குத் தலைமை வகித்தனர். தாதாபாய் நௌரோஜி மூன்று தடவை தலைமை வகித்துக் காங்கிரஸ் அகராதிக்குள் சுயராஜ்யம் என்ற பதத்தைச் சேர்த்தார். முதல் காங்கிரஸ் அக்கிராசனராக இருந்த டபிள்யூ. ஸி. பானர்ஜி மற்றொரு முறையும் தலைமை வகித்தார். கோடை இடியாகக் கர்ஜிக்கும் சுரேந்திரநாத பானர்ஜியும், பண்டித மதன் மோகன மாளவியா, பண்டித மோதிலால் நேரு, ஸர் வில்லியம் வெட்டர்பர்ன் முதலியவரும் இரண்டு தடவை தலைமை வகித்தனர். ஐம்பத்தொரு தலைவர்களுள் முஸ்லீம் சமூகம் எண்மரைத் தந்தது. தயாப்ஜி, சாயானி, நவாப் சையது முகமது பகதூர், ஹஸன் இமாம், அப்துல் கலாம் அஸாத், ஹகீம் அஜ்மல் கான், முகம்மதலி, டாக்டர் அன்ஸாரி ஆகிய இவர்களே அவர்கள். தாதாபாய் நௌரோஜியும் ஸர் பிரோஸிஷா மேத்தாவும் பார்ஸி வகுப்பைச் சேர்ந்தவர்கள். W. C. பானர்ஜி, ஆனந்த மோஹன் போஸ், ரோமேச சந்திர தத்தர், லால் மோஹன் கோஷ், பூபேந்திர நாத வசு, ஸர். சின்ஹா, அம்பிக சரண முஜும்தார், சித்தரஞ்சன தாஸ் முதலிய பலரை வங்காளம் அளித்திருக்கிறது. பிஷன் நாராயண் தார், மாளவியா, மோதிலால்ஜி, அவர் புத்திரர் ஜவஹர்லால் முதலியவர்கள் ஐக்கிய மாகாணத்தைச் சேர்ந்தவர்கள். தலைவர்களுள் கடைசியாக வந்துள்ள ராஜேந்திர பாபு பீஹாரைச் சேர்ந்தவர். அதே மாகாணம் ஹஸன் இமாமை நமக்குக் கொடுத்து இருக்கிறது. பஞ்சாபிலிருந்து லாலா லஜபதிராயும், ஸி. பி. மதால்காரும் வந்தனர். குஜராத்திலிருந்து காந்தியும் வல்லபாய் பட்டேலும் காங்கிரஸ் தலைவர்கள் ஆயினர். பம்பாயும் பலரை நமக்கு அளித்து இருக்கிறது. ஏற்கெனவே சொல்லப்பட்ட தயாப்ஜி, ஸாயானி இவர்களைத் தவிர மேத்தா, வாசா, கோகலே, சந்தவர்க்கார் முதலியவர்

கள் மேற்கு மாகாணத்தைச் சேர்ந்தவர்கள். சென்னையி லிருந்து அனந்தா சார்லு என்ற ஆந்திரப் பெரியாரும், கேரள புத்திரரான ஸர். ஸி. சங்கரன் நாயரும் காங்கிரஸ் தலைவர்களா யிருந்தனர். தென்னாட்டு மாபெரும் தலைவரான ஸ்ரீமான் ஸி. விஜயராகவாச்சாரியாரும் ஸ்ரீமான் எஸ். சினிவாச அய்யங்காரும் தமிழ் நாட்டி லிருந்து பிரகாசித்தனர். ஸ்ரீமதிகள் பெஸன்டு அம்மை யும் ஸரோஜினி தேவியும் அக்கிராஸன பீடத்தை அலங் கரித்தனர். ஐரோப்பிய ஸமூகமும் ஸ்ரீமான்கள் யூல், வெப், வெட்டர்பர்ன், காட்டன் முதலியவர்களை அளித்து இருக்கிறது. இந்த ஜாப்தாவை நோக்கின் காங்கிரஸ் தேசிய நிலையமாக இருப்பது மாத்திரம் இன்றி அயல் நாட்டிற்கும் சொந்தமென்று தெரிகிறது.

சென்ற பத்து வருஷங்களாக புதிய கருத்துக்கள் பலம் பெற்று எழுந்து அரசியலிலும் நாகரிகப் பயிற்சியிலும் காலங் கடந்த கொள்கைகளை அடக்கி வந்திருக்கின்றன என்னும் உண்மையை எவரும் மறுக்க முடியாது. இந்தியாவில் மட்டும் அல்ல, உலகில் எங்குமே மனித சமூகத்தின் நலத்தைக் கோரும் கலையாக விளங்கும் அரசியல், சமூக பொருள் நிலை சிக்கல்களை அறிந்து தீர்க்கவல்ல விரிவான தன்மையை அடைந்து இருக் கிறது. இதற்குமேல், நாகரிகப் பயிற்சி, சன்மார்க்கம் என்ற கொள்கைகளையும் நாம் சேர்க்கும்பொழுது அரசியலை பத்தொன்பதாம் நூற்றாண்டின் இழிந்த நிலையிலிருந்து வெகு தூரம் உயர்த்திவிட்டோம். சென்ற பதினைந்து பதினாறு வருஷங்களாக இந்தியாவில் தோன்றிய திடமான சன்மார்க்க நிலைகளினால் அரசியலின் மதிப்பு அவ்வாறு ஏறி இருக்கிறது. இவ்வளவு மேலான காரியமும் உலகக் கீர்த்தி பெற்ற புனிதரான மகாத்மா காந்தியின் துணையினால்தான் முடிந்திருக்கிறது.

இவ்வித மகிமை பொருந்திய ஓர் உத்தமரின் துணை யைக்கொண்டு காங்கிரஸ் அரசியலை புனிதமாக்க முயற்சி செய்து இருக்கிறது. தொண்டு புரியும் லக்ஷியம், விரி வான கல்விப் பயிற்சியின் அவசியம், உயர் வகுப்பினர்களுக் குள் சிறந்த தேச பக்தி ஆகிய இவற்றை வளர்த்து கிராமங் களில் தலைமையை ஸ்தாபிக்க முயற்சி செய்து இருக்கிறது. அரசியலை ஒரு மத தர்மமாக ஆக்கி இருக்கிறது என்று

சொல்லலாம். மத தர்மத்திற்கு வெளியில் எந்த பிரச்னையையும் நாம் ஒதுக்க முடியாது. மத தர்மம் என்பது மேலான வாழ்க்கையை, தியாக சக்தியை, தன்னையே அர்ப்பணம் செய்துகொள்ளும் திட்டத்தைப் போதிக்கிறது.

இந்த மனோபாவனையில் நாம் சத்தியம் நியாயம் என்பவற்றைத் தேசிய கட்டிடத்திற்கு முக்கிய ஸாதனங்கள் ஆக்கிறோம். அசத்தியம் சீக்கிரம் வெற்றியைக் கொடுக்கலாம்; வஞ்சகம் விரைவில் பலன் அளிக்கலாம். ஆனால் இந்த வெற்றிகளெல்லாம் மின்னல் போன்றவை; வெற்றி அடைந்தவர்களை மிகச் சாதாரண நிலைக்கு கொண்டுவந்து இருக்கின்றன. ஐரோப்பிய யுத்தம் தோற்றவர்களைவிட ஜெயித்தவர்களுக்கு அதிக பயனை அளிக்கவில்லை. இந்தியாவை ஜெயித்த இங்கிலாந்திற்கும் நீடித்த சுகம் ஏற்படவில்லை. பல வட்டமேஜை மகாநாடுகளை நிர்மாணித்த ராஜதந்திரிகள் கொண்டுள்ள கொள்கை, இந்தியாவை இங்கிலாந்தின் வியாபார ஸ்தலமாக உறுதி செய்துகொடுக்கவில்லை. ஒவ்வொரு அடக்குமுறையும் எதிர்க்கும் சக்தியை உற்பத்தி செய்து சட்டமறுப்பாகவும், புதிதாகத் தோன்றும் இளைஞர்களிடம் பயங்கர உருவங்களாகவும் வெளிப்பட்டு இருக்கின்றன. நாம் ஒத்துழையா திட்டத்தில் வெற்றிபெறவில்லை என்று சொல்லுவது தவறு; ஏனெனில், ஒவ்வொரு தோல்வியும் முடிவில் வெற்றிக்குச் செல்லும் ஓர் படியாகவே நிற்கிறது.

காங்கிரஸின் திட்டத்தை நாம் இவ்விதம்தான் நிர்மானிக்கிறோம். அந்த திட்டம் இரண்டுவித நோக்கம் கொண்டது. ஒருநோக்கத்தால் அரசாங்கத்தை போராட்டத்திற்கு இழுத்த முறையை எந்த நாகரிகமுள்ள அரசாங்கமும் கண்டிக்க முடியாது. மனோ வாக்கு காயங்களால் அஹிம்சையை அனுஷ்டித்தல் அந்தச் சண்டையின் அடிப்படையான தத்துவம். காந்தியே இந்தியாவின் தலைவர். கவர்ன்மெண்டார் அவருடைய சத்தியாக்கிரக தத்துவத்தை அலக்ஷியம் செய்வதாக நடிக்கலாம்; ஆனால் சத்தியமும் அஹிம்சையும் ஜனங்களுடைய அன்பைப்பற்றி இருப்பதை எவர்தான் மறக்க முடியும். ராஜ குடும்பங்கள் அழிக்கப்படும் இந்நாளில், மன்னர் ஆளுகை கவிழ்ந்து போகும் நாளில், ஜனநாயக ஆட்சிகளும் தவிக்கின்ற இந்நாளில், அரசியலில் இதுவரையிலிருந்த கட்சித் திட்டங்க

ளெல்லாம் அடியுடன் நாசமாக்கப்படும் இந்நாளில் அஹிம்சா தர்மத்தைப்பற்றிப் பேசுவது பரிகாசமாகத் தோன்றலாம். ரத்தம் சிந்துவதால் ஏற்படும் வெற்றி, ரத்தம் சிந்துவதையே முற்றிலும் காத்து, அதன் மூலமாகவே அழிகிறது என்பது நமது அநுபவம்.

நிர்மாண திட்டத்தைப்பற்றிய வரையில் காங்கிரஸின் காரியம் மிகச் சுலபமானது. பட்டணங்களிலும் நகரங்களிலும் வசித்து, அந்நிய ஆடைகளை உடுத்து, அந்நிய பாஷைகளைப் பேசி, அந்நிய எஜமானருக்குத் தொண்டு செய்கிறவர்கள் இதை அறியாமலிருக்கலாம். நமது பட்டணங்களில் வசிப்பவர்களைப்பற்றி ஆராய்ந்தால் என்ன விளங்கும்? தம் ஜீவனத்திற்கும், தம் செல்வத்திற்கும், தம் கீர்த்திக்கும் கூட ஆட்சி செலுத்தும் அந்நியருதவியைப் பாதிபேர் நாடுகிறவர்களா யிருக்கிறார்கள். நம் எஜமானர்கள் யார் என்று நாம் அறிய முடியாதவர்களாகிறோ மாதலால் இந்த உண்மை பலருக்குத் தெரியவில்லை. அநேகமாகத் தாழ்ந்த உத்தியோகம் முதல் உயர்ந்த உத்தியோகம் வரையில் எல்லோரும் இந்த நிலையிலுள்ளவர்களே. கிராம வாசிகளில் முக்கால் பங்கு ரெவினியூ அதிகாரிகளிடம் பயப்படுகிறவர்கள்.

ஆதலால் பயத்தைப் போக்கி அஹிம்ஸா தர்மத்தின் மூலமாக தைரிய மூட்டுவதே முதற் காரியமாகும். கதரைப் பற்றிப் பேசும்போது நாம் ஏழைகளுக்குத் தொழில் கொடுப்பதுமன்றி தன் மதிப்பை வளர்க்குமாறும் செய்கிறோம். அடிமைச் சின்னங்களில் ஒன்று நீங்குகிறது. குடிசைத் தொழிலின் மூலமாக ஏற்படும் நாகரிகம் பயிற்சியும் சிறப்பும் பெறுகிறது. ஜனங்கள் சற்று அதிகம் கொடுத்தாவது கதர் வாங்க வேண்டுமென்கிறோம். அதனால் தேசிய தொழிலுக்கு அரசாங்கத்தார் கொடுக்கவேண்டிய, ஆனால் கொடுக்க விரும்பாத உதவி நிதியை ஜனங்கள் வலுவில் செலுத்துகிறவர்களாகிறார்கள். மேலும் சாமான்யமான எளிய வாழ்க்கையை ஜனங்கள் ஏற்றுக்கொள்வதால் ஆழ்ந்த எண்ணங்களை யடைந்து தன்மதிப்பு, தன்னம்பிக்கை, சுய அறிவு முதலிய உயர் குணங்களையும் பெறுகிறார்கள். பொருள் நிலையில் கதரால் அடைவதை சன்மார்க்க நிலையில் மதுவிலக்கால் அடையச் செய்கிறோம். தேசத்திலடங்கிய இரு பெரும்

பகுதியினராகிய ஹிந்து முஸ்லிம்களின் மத தர்மங்களுக்கே மதுபானம் கூடாது. அதையே அடிப்படையாகக்கொண்ட மதுவிலக்குக் கிளர்ச்சியில் தீவிர உணர்ச்சி ஏற்படும்படி திட்டத்தை நடத்தும்போது அரசாங்கத்தார் காங்கிரஸ்மீது பாய்கிறார்கள். தீண்டாமை விலக்கென்ற சமூக சீர்திருத்த திட்டத்தைச் சேர்த்துக் கொள்ளும்போதுகூடக் கஷ்டமில்லாமற் போகவில்லை. பிரதம மந்திரியின் முடிவால் ஹரிஜனங்களுக்குத் தனித் தொகுதி ஏற்படுகிறது. பெருந்தலைவரது உண்ணாவிரதமே—சாகும் வரையில் பட்டினி என்ற தீர்மானமே—அந்த முடிவை மாற்றி ஹிந்து சமூகத்திற்குள் பெரிய ஐக்கியத்தை யுண்டாக்கிவிட்டது. ஹரிஜனங்கள் கோயில் பிரவேசத்திற்கு இருக்கும் தடையை நீக்க முயற்சிப்போமென்றால், ஜனங்களுடைய ஓட்டுகள் சாதகமாகக் கிடைத்தாலும், கவர்ன்மெண்டார் குறுக்கிட்டு முன்னேற்ற மார்க்கத்தில் குறுக்கே நிற்கிறார்கள்.

தேசத்திலிருக்கும் பிரச்னைகள் மிகவும் சிக்கலானவை. பிரித்தாளும் குணமுள்ள அரசாங்கம், நாட்டில் பட்டணங்களும் நகரங்களும் கிராமங்களுக்கு எதிர்நிலையாக அமைந்திருப்பது, உயர் வகுப்பினரும் பாமரரும் நேர்விரோதமான ஸ்தானங்களில் நிற்கும் நிலை, மூலாதாரச் சீர்திருத்தங்களை எதிர்த்து நிற்கும் கட்சிகள், கதர், வகுப்பு ஒற்றுமை முதலியவற்றிற்குத் தடை முதலிய பல நம் முன் நிற்கின்றன. சுயராஜ்யம் ஏற்பட வேண்டுமானால் அது ஆங்கிலம் படித்தவர்களாலும் அறிஞர்கள் நிரம்பிய தொழில்களை நடத்துகிறவர்களாலும் வர்த்தக தனிகராலும் வரமுடியாது. புதிய சக்திகளைத் தோற்றுவிக்க வேண்டும். கிராம ஜனங்களிடம் நேரே தொண்டு செய்யும் பலத்தால் தேசிய உணர்ச்சி பலம் பெறவேண்டும். இந்த நம்பிக்கையை அடைந்தால்போதும்; தேச விடுதலைக்கு காங்கிரஸ் போட்டிருக்கும் திட்டத்தை நிறைவேற்றல் இலகுவானது. இதன் மூலம் உடனே சுயராஜ்ஜியம் சித்திக்காமலிருக்கலாம். ஆயினும் ஜனங்களுக்குச் செய்யும் ஒவ்வொரு தொண்டும் சுயராஜ்ய கட்டடத்தின் அஸ்திவாரத்தையே பலப்படுத்துவதாகும்.

காங்கிரஸ் திட்டத்தை நிறைவேற்றி வைப்பதில் தேசத்தில் புதியதோர் சக்தி பரவி யிருப்பதைப்பற்றி நாம் இப்பொழுது கவனிப்போம். இதன் அடிப்படையான

தத்துவத்தை நாம் ஆராயவேண்டியதும் அவசியம். இந்த தத்துவம் இன்னும் தான் கோரிய பலனை அடையவில்லை. இந்தத் தத்துவம் இன்னும் நடைமுறையில்தானிருந்து வருகின்றது. ஆகவே இந்த தத்துவத்தின் எதிரிகள் இதனைக் கண்டு பரிகசிப்பது சகஜமே; அதுபற்றி நாம் கவலையுற வேண்டியதில்லை. நமது போர் முறையின் இரண்டு ஆயுதங்கள் சாத்விக எதிர்ப்பும், சத்தியாக்கிரகமுமாகும். இவ்விரண்டும் ஒன்றல்ல; இரண்டின் லக்ஷணங்களும் ஒன்றுக்கொன்று மாறுபட்டவை.

காந்திஜி இந்திய ராஜீய வானில் தோன்றிய பிறகே நாம் இவ்விரு சக்திகளைப்பற்றி அதிகமாக அறிய வந்தோமாயினும், அதற்கு முன்பே ஒருவகையான சாத்வீக எதிர்ப்பை நாம் இந்தியாவில் கண்டோம். 1917-ம் வருஷத்தில் ஸ்ரீமதி பெஸண்ட் காவலில் வைக்கப்பட்ட சமயம்; அப்பொழுதுதான் முதன் முதலில் சாத்வீக எதிர்ப்பு சிறிது வேலை செய்தது. காங்கிரஸ் மகாசபை சாத்வீக எதிர்ப்புச் சக்தியுடன் முதன்முதலில் உறவாடியது இக்காலத்தில்தான். இதற்குப் பிறகு மகாத்மாஜி தோன்றினார்; முதன் முதல் ரௌலட் மசோதாக்களை எதிர்த்து காங்கிரஸுக்கு வெளியேயும், பிறகு கிலாபத் அநீதியையும், பஞ்சாப் படுகொலையையும் எதிர்த்து காங்கிரஸுக்குள்ளேயும் சத்தியாக்கிரக இயக்கத்தைத் தோற்றுவித்தார்.

சமீப காலத்தில் ஏற்பட்ட ராஜீய நிகழ்ச்சிகளின் காரணமாக நாட்டில் பூத்தெழுந்த மகோன்னதமான இயக்கம் அவ்வப்பொழுது வெவ்வேறு ரூபங்களும், நாமங்களும் பெற்று விளங்கியது. இயக்கம் சாத்வீக எதிர்ப்பாக இருந்த காலத்தில் அதில் வெறுப்பும், பெருமையும் கலந்திருந்தது; பகைமையும், ஹிம்சையும் கூடச் சேர்ந்திருந்ததெனலாம். பயந்திருந்த ஜனங்கள், ஒடுக்கப்பட்டுக் கிடந்த ஜனங்கள் ஒத்துழையாமை இயக்கத்தில், தங்களை ஆளுபவர்கள் மீது கோபாவேசம் கொண்டு எழுந்ததை நாம் கண்டோம்; மனதில் அடங்கிக் கிடந்த கருத்தைக் கருமத்தில் ஆற்ற ஆற்றல் இல்லாமலிருந்த சமயம் அது. பிறகு இயக்கம் சாத்வீக சட்டமறுப்பாக மாறியது; முதலில் சாத்விகத் தன்மையை மக்கள் பூராவும் அனுஷ்டிக்கவில்லையாயினும் நாளாவட்டத்தில் சாத்வீக உணர்ச்சி அவர்

களது மனதிலேயே வேரூன்றிவிட்டது. இதனின்றும் பிறந்தது சத்தியாக்கிரகம்; சத்தியாக்கிரகப் போரின் அடிப் படையான ஆயுதங்கள் அன்பும், அஹிம்ஸையுமே என்பதை உலகத்தவர்க்கு நாம் அறிவித்தோம்; அஹிம்ஸையின் சக்தி இந்தப் போர் முறையில் இன்னும் அதிகமாக உணரப்பட்டது. தன்னைத் தான் பரித்யாகம் செய்து கொள்வதே இவ்வியக்கத்தின் முக்கிய லக்ஷணமாக விருந் தது. சத்தியாக்கிரகம் என்பது ஓர் ஆன்மார்த்த சக்தி என்பதை இந்திய மக்கள் அறிந்துகொண்டனர். கவர்ன் மெண்டார் இழைத்த ஜலியன்வாலா கொடுமை காரண மாக நாட்டில் சத்தியாக்கிரக இயக்கத்தைத் தோற்று வித்தது எவ்வளவு அவசியமோ அவ்வளவு அவசியம் சௌரி சௌராவில் ஏற்பட்ட படுகொலை காரணமாக அதை நிறுத்திவிட வேண்டியதற்கும் உண்டு என்பதையும் மக்கள் உணர்ந்தனர்.

உலகிலுள்ள சகல உத்தமமான தர்மங்களையும் தன் னுள்ளே அடக்கிக்கொண்டு விளங்குவது சத்தியாக்கிரகம். சத்தியத்தை அஸ்திவாரமாகக் கொண்டது சத்தியா கிரகம்; அஹிம்ஸை அல்லது அன்பைப் போர்த்துக் கொண்டு நிற்பது சத்தியாக்கிரகம். இங்ஙனமாக தேசத்தில் தோன்றிய புதிய எழுச்சிகள் காரணமாக புதிய தத்துவங் கள் வேரூன்றத் தலைப்பட்டன. பகைமையும், பொல்லாங் கும், அச்சமும், கோழைத்தனமும், ஆத்திரமும், கோப மும் மக்கள் மனத்தினின்றும் அகன்று அவற்றிற்குப் பதி லாக அன்பும், தைரியமும், பொறுமையும், சாந்தமும், தியாக உணர்வும், சத்திய சீலமும் சிறந்து விளங்கலாயின. சேவையின் உயர்வும், தொண்டின் மாண்பும் விசேஷித்துப் பிரகாசித்தன. எதிரியை ஜெயிக்கவேண்டுமென்பது நமது கொள்கையல்ல; அவனது மனதை மாற்றவேண்டும், ஹிரு தயத்தைக் கவ்வவேண்டும் என்பதே நமது லட்சியம் என்ற எண்ணம் மகா ஜனங்களின் மனதைப் பற்றிக்கொண்டது. அச்சத்தைத் துச்சமாக எண்ணினால் சாவையும் கட்டி யணைக்கலாம் என்ற தத்துவம் நமக்குப் போதிக்கப்பட்டது. ஆகவே சத்தியத்தை நாடி அலையும் சத்தியாக்கிரக புருஷன் மனிதனுக்கும், துரைத்தனத்திற்கும், சமூகத்திற்கும், வறு மைக்கும், சாவுக்கும் அஞ்சக்கூடாது என்ற தத்துவம் மேலிட்டிருந்தது. எனவே நமது லட்சியத்தை அடையும்

ஓர் சாதனமாக ஒத்துழையா தர்மம் நாட்டில் நிலைத்து விட்டது.

ஒத்துழையா இயக்கத்தின் உட்கருத்து இந்திய சமூகத்திற்குப் புதியதல்ல; "அஹிம்ஸா பரமோ தர்ம:" "லோகா சமஸ்தா சுகினோ பவந்து" என்ற சூத்திரங்களை அடிப்படையாகக் கொண்ட தர்மமே ஒத்துழையாமை. நமது எதிரிகள்மீதும் நாம் அன்பே காட்டவேண்டும் என்பது தத்துவம். கடுமையான பலாத்காரத்துக்கு எதிரே உயர்வான அஹிம்ஸையை அனுஷ்டிப்பதே சத்தியாக்கிரகத்தின் லக்ஷணம். இந்த உணர்ச்சி இந்திய சமூகத்தினிடையே பன்னெடு காலமாக ஊறிக் கிடக்கின்றது. நாம் சத்தியத்தில் நாட்டஞ் செலுத்தி, நமது ஆசைகளையும் பாசங்களையும் விட்டொழித்து, நம்மையே தூய்மைப் படுத்திக்கொண்டால் சேவா உணர்ச்சியும், தன்னலத் தியாக சிந்தனையும், அடக்கமும், அன்பும் தாமே கிளைத்தெழும். கோபத்தை அடக்கி ஆண்டு, சாந்தத்தை வளர்க்கத் தலைப்படுவோமானால் அஹிம்ஸை தானாகவே நமது ஹிருதய கமலத்தில் ஆசனம் பெறும். உபவாசமும், மௌன விரதமும், பிரும்மசர்யமும் இவ்வியக்கத்தின் உயர்வை அடைவதற்கான படிகளாகும். இப்பிரபஞ்சத்தைப் பற்றிக்கொண்டிருக்கும் துன்பங்களைப் போக்கவும், துயரங்களைத் தீர்க்கவும் அஹிம்ஸையால் தான் முடியும் என்பதை மிருக உணர்ச்சியிலும், போர் வெறியிலும் ஆழ்ந்துகிடக்கும் உலகம் இன்று கண்டு கொள்ளாமலில்லை; எனினும் அது மெதுவாக நகருகின்றது.

இங்ஙனமாக உலக உத்தமரான காந்தி, உலகத்தை உய்விக்கவே மேற்கண்ட புதிய கருத்துக்களையும், புதிய தருமங்களையும், புதிய தத்துவங்களையும், புதிய போதனைகளையும், புதிய லட்சியங்களையும், புதிய சக்திகளையும், புதிய எழுச்சிகளையும் தோற்றுவிக்கலானார். அடித்தால் அடிபட்டுக் கொள்ள வேண்டுமே யொழிய திருப்பி அடிக்கக் கூடாது என்பது அவரது தர்மம்; நமது ஆன்றோர்களது தர்மமும் அதுவே. ஆனால் இத்தகைய தர்மங்களை ஒரு தேசத்தின் ராஜீயப் பிரச்னைகளில் புக விட்ட பெருமை மகாத்மாவுக்கே உரியது. ஆனால் அடிக்கும்பொழுது அந்த இடத்தை விட்டு ஓடிவிடும் கோழைத்தனத்திற்கு அவரது தர்மத்தில் இடம் கிடையாது. இந்தியாவின் விடு

தலை மூலமாக மகாத்மாஜி உலகப் பிடைகளையே ஒழித்துப் போட முற்பட்டிருக்கிறார்.

இவ்வளவு வருஷங்களாக நாம் எவ்வாறு நமது விடுதலைக்காக, நமது ஸ்வதந்திரத்திற்காகப்போரிட்டு வந்திருக்கிறோம் என்பதை விரிவாக ஆராய்ந்து விட்டோம். நமது தர்மங்களையும், நமது கடமைகளையும் நாம் தெரிந்து கொண்டு விட்டோம்; தியாகத்தின் மாண்பை அறிந்துளோம்; தீரத்தின் பெருமையைப் புகழ்ந்துளோம்; வீரத்தின் உயர்வைப் போற்றுகின்றோம்; சாந்தத்தைக் கடைப்பிடித்து சத்தியாக்கிரக நெறியில் நின்று உழைப்பதே நமதுவிடுதலைக்கான மார்க்கம் என்பதையும் கண்டுகொண்டிருக்கிறோம். எல்லோருக்கும் சமத்துவம் காட்டப்பட வேண்டுமென்ற உணர்ச்சியில் ஊறிக் கிடக்கின்றோம். 'இவ்வளவு உயரிய தர்மங்களினின்றும் பிறக்கக் கூடிய நவீன் இந்தியா உலகிற்கே ஓர் வழிகாட்டியாக விளங்குமாக. உலகைப் பற்றி நிற்கும் பேரிருளைப் போக்கவல்ல ஜோதி சூரியன் இந்தியாவிலேயே உதயமாகி யிருக்கிறான். இதை அறிந்து உய்யும் மார்க்கத்தில் ஈடுபட வேண்டியது உலகத்தின் கடமை.

இங்ஙனமாக 1885-ம் வருஷத்தில் பம்பாயிலே உற்பத்தியான சிற்றருவி, கடந்த ஐம்பது வருஷங்களாக நாடெங்கும் பாய்ந்து, அருவியினின்றும் சிற்றாறாகவும், சிற்றாறிலிருந்து நதியாகவும், நதியிலிருந்து பெரு நதியாகவும், பெரு நதியிலிருந்து பெரு வெள்ளமாகவும் இன்று பெருக்கெடுத்து நாட்டின் மூலை முடுக்குகளிலெல்லாம் பாய்ந்தோடிக்கொண்டிருக்கிறது. இந்த வீர வெள்ளத்திலேயே இன்று இந்திய மக்கள் திளைத்து நிற்கிறார்கள். அவர்களது வீரமும், சிந்தனையின் தீரமும், திண்மையும், தியாகமும் நிரந்தரம் வாழ்க!

" என்று தணியும் எங்கள் சுதந்திர தாகம்
என்று மடியும் எங்கள் அடிமையில் மோகம்!"

—பாரதியார்.

---




Swathanthara Sangu Press, Triplicane.

# சங்கு நூல்கள்

| | | ரூ. | அ. | பை. |
|---|---|---|---|---|
| **மகாத்மா காந்தி எழுதிய** | | | | |
| *சத்திய சோதனை (முதல் பாகம்)* | ... | 1 | 8 | 0 |
| *சத்திய சோதனை (இரண்டாம் பாகம்)* | ... | 2 | 0 | 0 |
| *இல்லறமும் பிரம்மசரியமும்* | .... | 0 | 6 | 0 |
| *அனாசக்தி யோகம்* | ... | 0 | 4 | 0 |
| *ஆரோக்கிய வழி* | .... | 0 | 4 | 0 |
| *மகா தியாகம்* | ... | 0 | 4 | 0 |
| *நீதி தர்மம்* | .... | 0 | 2 | 0 |
| *கீதா போதனை* | ... | 0 | 2 | 0 |
| *உத்தம வாழ்க்கை* | ... | 0 | 2 | 0 |
| *ஹிந்து தர்மம்* | .... | 0 | 2 | 0 |
| **ரோமேன் ரோலண்டு எழுதிய** | | | | |
| *மகாத்மா காந்தி (புதிய பதிப்பு)* | ... | 0 | 4 | 0 |
| **வில்லியம் தர்ஸ்டன் எழுதிய** | | | | |
| *இல்லற மகா ரகசியம்* | ... | 0 | 4 | 0 |
| **பகநூர்ஜீ கமிட்டி அறிக்கையான** | | | | |
| *இந்தியாவின் கடன் பொறுப்பு* | ... | 0 | 4 | 0 |
| **க. சந்தானம் எழுதிய** | | | | |
| *சத்திய சமாஜம்* | ... | 0 | 4 | 0 |
| **வ. வே. ஸு. அய்யர் எழுதிய** | | | | |
| *மங்கையர்க்கரசியின் காதல் கதைகள்* | ... | 0 | 8 | 0 |
| *குரு கோவிந்த சிங் (சீக்கியர்களின் வீரத் தலைவன்)* | ... | 0 | 4 | 0 |
| **ருஷ்ய ஞானி டால்ஸ்டாய் எழுதிய** | | | | |
| *ஆறடி நிலம்* | ... | 0 | 4 | 0 |
| **மகாதேவ தேசாய் எழுதிய** | | | | |
| *பர்டோலிக் கதை* | ... | 0 | 12 | 0 |

---

சுதந்திரச் சங்கு புத்தகசாலை,
8-C, பைக்ராப்ட்ஸ் ரோடு, திருவல்லிக்கேணி, சென்னை.

# பட்டு உடை

## திருப்தி அளிப்பது

அதன் பார்வையையும், உழைப்பையும் பொறுத்திருக்கிறது.

மைசூர் பட்டு இவ்விரண்டிலும் உங்களுக்கு விசேஷத் திருப்தி அளிப்பதாகும்.

மைசூர் ஜியார்ஜெட்கள், கிரேப்கள், ஸடீன்கள், பட்டு கைக் குட்டைகள் துல்யமான மைசூர் பட்டைக் கொண்டு செய்யப்படுவதாகும். மட்டமான நூல் எதுவும் சேர்க்கப் படவில்லை யென்ற உத்தரவாதத்துடன் கூடியது.

நவீன லண்டன் டிஸைன்களில் கைக் குட்டைகள்.

**கவர்ன்மெண்ட்**

## ஸில்க் வீவிங் பாக்டரி,

**மைசூர்.**

---

நார்தர்ன் ஸர்க்கார்ஸுக்கு விற்பனை ஏஜண்டுகள் :—

**மெஸர்ஸ் எஸ். எம். வாஸிருதீன்**
**அண்டு ஸன்ஸ்,**
**பெஜவாடா.**

# பெண்மணிகள்

## எப்பொழுதும்

## உயர்ந்த சாமான்களையே

## விரும்புகிறார்கள்.




சாமான்களைத் தேர்ந்தெடுப்பதிலும் ஆடவர்களைவிட மகளிர்களே சமர்த்தர்களாய் விளங்குகிறார்கள். பட்டணங் காயமென்றால் அவர்களுக்குத் தெரியும். போலி மட்டக் காயங்களைக் கொடுத்து அவர்களை ஏமாற்றுவது அவ்வளவு சுலபமல்ல. இனிய ருசியும், இன்பமான வாசனையும் பாக்கெட்டுகளில் அடக்கஞ்செய்த எல். ஜி. பெருங்காயத்தில்தான் உண்டு என்பது அவர்கள் அறியாததல்ல. எல். ஜி. என்று சொன்னாலே அவர்கள் முகத்தில் ஓர் புன்முறுவல் அரும்பித்தோன்றும். பின்னும் எல். ஜி. பாக்கெட்டொன்றைக் கண்டாலோ, மட்டற்ற மகிழ்ச்சி கொள்ளும் மாண்பு அவர்களிடம் அமைந்திருக்கிறது. எல். ஜி. தான் எல். ஜி. அதற்கு ஒப்பும் உயர்வும் இல்லை.

## லால்ஜி கோதூ & கம்பெனி,

பிரபல பெருங்காய வியாபாரிகள்,

**பம்பாய் — சென்னை — கும்பகோணம்.**